# THE KURAL OF TIRUVALLUVAR

WITH THE COMMENTARY OF

## PARIMELAZAGAR

AND

A SIMPLE AND CLEAR PADAVURAY.

---

TO WHICH IS ADDED

**AN ENGLISH TRANSLATION OF THE TEXT**

BY


THE REV. J. LAZARUS, B.A.,

*Author of a Tamil Grammar, an English Translation of the Nannul, &c.*






Madras:

PRINTED AND PUBLISHED BY
W. PUSHPARATHA CHETTIAR,
K. R. Press:
289, THUMBOO CHETTY STREET.

---

1885.

கடவுட்டுணை.

தெய்வப்புலமைத்

திருவள்ளுவநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

தமிழ் வேதமாகிய

# திருக்குறள் மூலமும்,

பரிமேலழகர்செய்த

## இலக்கணவுரையும்,

திருமயிலை

முருகேசமுதலியாரவர்களால்

பலபிரதிருபங்களைக்கொண்டு

பரிசோதிப்பித்து,

இவற்றோடு

தெளிபொருள்விளக்கப் பதவுரையும்
ஆங்கிலேய மொழிபெயர்ப்புஞ் சேர்த்து

ஊ. புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சென்னபட்டணம்:

1885.

# PREFACE.

The want of a neat and accurate edition of the greatest ethical classic of South India has for a long time been felt by all lovers of the Tamil Language and its literature. To meet this want, the Publisher now offers to the public a new edition of the Kural, embracing the learned commentary of Parimelazagar which is indispensable to a correct understanding of Tiruvalluvar's meaning, as well as a Padavuray in clear and simple language, and an English Version of the Text.

The English Translation of the first 63 Chapters has been compiled from various sources, but for the original rendering of the remaining 70 Chapters which is the first English Version ever attempted by any student of the Kural, and for a careful revision of the whole, the Publisher is indebted to the Rev. John Lazarus, B.A., a Tamil scholar and grammarian of no mean repute. It is hoped that the Translation will be found both faithful to the original and useful to all students of the Kural, whether Foreign or Native.

As regards the Kural itself, it stands on its own merits. The purity of its Tamil, the richness of its diction, the lofty tone of its morality, the theistic and unsectarian nature of its theology, the endless variety of topics discussed in its 133 Chapters, and the profound esteem in which it is held by all classes of Tamil speaking Hindus, are too well known to need praise or comment on the part of the Publisher.

Like other Tamil classics, the Kural treats of three of the four great themes on which all Hindu authors are to dwell in their treatises, *viz.*, Virtue, Wealth, Pleasure and Heaven. Tiruvalluvar has wisely left the last subject untouched. Under the other heads, however, he treats of almost every subject that is worthy of a poet and moralist, or a statesman and philosopher. No subject, however noble

or trivial it may be, seems to escape the fertility of his pen. It is a sort of *multum in parvo* encyclopœdia of ethical rules and discourses, couched in the most concise, elegant and pregnant language.

The Work derives its name from the KURAL metre in which it is composed and consists of two lines, the first being a tetrameter and the second trimeter. This metre is a species of the well-known Venba—one of the two metres in which most of the Tamil classics are composed, the other being the Viruttam. Instead of making the first foot of the first verse rhyme with that of the second (verse), which is the usual rule, the poet often makes it rhyme with the last foot of the first verse—an improvement which adds a new beauty to the distich.

In conclusion, the Publisher begs to apologise for the somewhat tarnished colour of the paper in about half the book. This is owing to the long time the Work has taken to get through the Press. He, however, hopes to offer a far more satisfactory get-up in a second Edition of the Work.

W. P.

# LIFE OF TIRUVALLUVAR.

TIRUVALLUVAR deservedly ranks foremost among the poets and moralists of India, for he has had no superior or equal in either character. He appears to have lived during the life time of OOGRAVAZHUTHI PANDIAN at Madura in whose reign the last Madura College (கடைச்சங்கம்) existed. All accounts concur in representing him as the offspring of a Brahman and a Pariah brought up woman. He is said to have been brought up by a *Vellalan* at Mailapur, near Madras, the *Vellalan's* wife having found the babe exposed in an *Iluppei* grove in her neighbourhood. We are told that while yet a youth, he had acquired so great a reputation for learning and sanctity that MARGASAGAYAN, a wealthy farmer who lived at Kaveripakam, in remuneration for services rendered to him, did not disdain to bestow on him the hand of his only daughter named VASUKI; and besides, the highest personages in the place felt a pride in the enjoyment of his friendship. He, however, appears to have pursued a quiet and unobtrusive sort of life, working at the loom for subsistence until he was prevailed upon by his friends to take up the gauntlet against the professors of the Madura College, who had arrogantly defied all other men of learning in the country and claimed all literary honors for themselves. In order to humble the pride of the professors, he wrote an ethical poem, under the title of KURAL (குறள்), and repairing to the College asked them to review it as judges of poetical composition. The professors at first scorned the idea of a strange poet offering himself as their competitor but afterwards when he drew them into a contest and completely vanquished them, they proposed that should the Sankappalakai, their divine seat on the tank of Pottamarei (பொற்றாமரை), give a place for his KURAL, they would gladly accept the work. This being agreed upon the book was placed on it. The divine seat is said to have contracted itself to the size of the book, and threw the professors into the water. Upon this they not only approved his work and gave him the desired seat, but also conferred on him several honorary titles, such as, *Deivappulavar* (தெய்வப்புலவர்) the divine poet, *Mudarpavalar* (முதற்பாவலர்) the first of poets, *Perunavalar* (பெருநாவலர்) the great poet, etc. Nothing further is known of TIRUVALLUVAR

which can be relied upon, excepting that some time after his return to Mailapur, he was visited with a severe domestic calamity by the death of his wife to whom he was tenderly attached and it so deeply affected his mind that secluding himself from society, he devoted the remainder of his life to religious contemplation. It is said that on the decease of his wife, he ejaculated extempore the following verse:

அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்றவறாத பாவாய்—யடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழூஉம் பேதையேபோதியோ
வென்றூங்குமென்க ணிரா.

*When I have lost a woman who excelled in the knowledge of housewifery, who is beloved, who never transgressed my word, who chafed my limbs and never slumbering until I slept, arose before I awoke; Alas! Alas! How can my eyes again know sleep.*

The time of his death is uncertain; but when he died his body was according to his express desire exposed in the open air outside the town to be devoured by crows.

It is difficult to judge from the tenor of his KURAL to what sect he belonged, for he has entirely avoided in the work every thing that savours of sectarianism in order to harmonize the suffrages of all the sects.

Independent of the KURAL, we have no other composition of TIRUVALLUVAR. The physiological work, entitled GNANAVETTIYAN (ஞானவெட்டியான்), which is commonly ascribed to him, appears to have been written by some person long after his time; for the author, though he assumes the title of TIRUVALLUVAR and speaks in his character in the body of the work, yet betrays his disguise in one of the introductory stanzas, thus:

அகமகிழுமம்பிகைப் பெண்ணருளினாலே
யவனிதனில்ஞானவெட்டியருள யானும்
திகழ்திருவள்ளுவனையனுரைத்தவேத
நிரஞ்சனமாநிலவுபொழிரவிகாப்பாமே.

*Invoking the spotless one whom the holy VALLUVA has revealed in his incomparable Veda as clear as the light of the sun and moon, and by the grace of the damsel Ambigai (Parvati), who delights the heart, I shall compose the Gnana Vettiyan.*

# திருக்குறள்

## பாலியலதிகார அடைவு.

## CONTENTS.

### I. அறத்துப்பால்.—On Virtue.

CHAPTER. CONTENTS. PAGE.



## II. பொருட்பால்.—On Property.

## CONTENTS.



## III. காமத்துப்பால்.—ON LOVE.

CHAPTER. CONTENTS. PAGE.

கடவுள் துணை.

# திருவள்ளுவர் குறள்.

## மூலமும் உரையும்.

---

## அறத்துப்பால்.

---

### உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமி லின்பத் தழிவில் வீடும் நெறி யறிந் தெய்துதற்குரிய மாந்தர்க் குறுதியென உயர்ந்தோரா னெடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம் பொரு ளின்பம் வீடென் பன. அவற்றுள் வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத் தாதலின் துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்ல திலக்கண வகையான் கூறப்படாமையி னூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமே யாம். அவற்றுள் அறமாவது மநுமுதலிய நூல்களில் விதித்தன செய் தலும் விலக்கியன வொழிதலுமாம். அஃதாவ தொழுக்கம் வழக்குத் தண் டமென மூன்றுவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவ தந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின் றவற்றிற் கோதிய அறங்களில் வழுவா தொழுகுதல். வழக்காவ தொரு பொருளைத் தனித்தனியே யெனதெனதென் றிருப்பார், அதுகாரணமாகத் தம்முண் மாறுபட் டப்பொருண்மேற் செல்வது. அது கடன் கோடன் முதலிய பதினெட்டுப் பதத்ததாம். தண்டமாவ தவ்வொழுக்கநெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்தற்பொருட் டொப்பநாடி யதற்குத்தக வொறுத்தல். இவற்றுள் வழக்குந் தண்டமு முலகநெறி நிறு த்தற் பயத்தவாய தல்ல தொழுக்கம்போல மக்களுயிர்க் குறுதி பயத்தற் சிறப்பில வாகலானும், அவைதாம் நூலானேயன்றி யுணர்வு மிகுதியானுந் தேயவியற்கையானு மறியப்படுதலானும் அவற்றையொழித் தீண்டுத்தெய் வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய வொழுக்கமேயறமென எடுத் துக்கொள்ளப்பட்டது. அதுதான் நால்வகை நிலைமைத்தாய் வருணந் தோறும் வேறுபாடுடைமையிற் சிறுபான்மையாகிய சிறப்பியல்புகளொ ழித் தெல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்பு பற்றி இல்லறந் துறவறமென இருவகை நிலையாற் கூறப்பட்டது. அவ ற்றுள் இல்லறமாவ தில்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்க ணின் றதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடுஞ் செய்யப்படுவதாகலின், அதனைமுதற்கட் கூறுவான் தொடங்கி எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.

---

# பா யி ர ம்.

## முதல்அதிகாரம்:—கடவுள்வாழ்த்து.

அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட் கேற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த் தேற்புடைக்கடவுளை யெனஅறிக. என்னை? சத்துவமுதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட் கவற்றான் மூவராகிய முதற்கடவுளோ டியைபுண்டாகலான், அம்மூன்றுபொருளையுங் கூறலுற்றார்க் கம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், இவ்வாழ்த் தம்மூவர்க்கும் பொதுப் படக் கூறினாரென வுணர்க.

க. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

**(பரிமேலழகருரை.)** என்பது,—அகரமாகிய முதலையுடைய எழுத்துக ளெல்லாம்; அதுபோல, ஆதிபகவனாகிய முதலையுடைத்துலகு, என்றவாறு.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையான வியல்பாற் பிறத்தலானும், ஆதி பகவற்குத் தலைமை செயற்கை யுணர்வானன்றி இயற்கை யுணர்வான் முற்று முணர்தலானுங் கொள்க. தமிழெழுத்துக்கேயன்றி வடவெழுத் துக்கு முதலாதனோக்கி எழுத்தெல்லா மென்றார். ஆதிபகவனென்னு மிரு பெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென்ற தீண்டுயிர் கண்மே னின்றது. காணப்பட்ட வுலகாற் காணப்படாத கடவுட் குண் மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே என வுலகின்மேல் வைத் துக் கூறினார்; கூறினாரேனும் உலகிற்கு முத லாதிபகவ னென்பது கருத்தா கக் கொள்க. ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற் கடவுள துண்மை கூறப்பட்டது.

(தெளிபொருள்விளக்கப்பதவுரை.)—எழுத்து எல்லாம் - எழுத்துகளெல்லாம், அகரம் முதல-அகரமாகிய முதலையுடை யன; (அதுபோல) உலகு - உலகமானது, ஆதி பகவன் முதற் று - ஆதி பகவனாகிய முதலையுடையது.

**1.** As all letters have the letter A for their first, so the world has the eternal God for its first.

---

உ. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

(பரி-ரை.) எ-து,—எல்லா நூல்களையுங் கற்றவர்க் கக்கல்வி யறிவா னாயபயன் யாது, மெய்யுணர்வினை யுடையவனது நல்ல தாள்களைத்தொழா ராயின், எ-று.

எவனென்னும் வினாப்பெயர் என்னென்றாய் ஈண் டின்மை குறித்து நின்றது, கொல் லென்ப தசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் நற்றா ளென்றார். ஆகம அறிவிற்குப் பயன் அவன்றாளைத் தொழுது பிறவி யறுத்த லென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வால் அறிவன்-மெய்யறிவை உடைய கடவுளது, நல் தாள் - நல்ல பாதங்களை, தொழார் எனின் - வணங்கார் ஆயின், கற்றதனால் (நூல்களைக் கற்றவர்க்கு) அக்கல்வியால், ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனம், என் - யாது.

2. What profit have those derived from learning, who worship not the good feet of Him who is possessed of pure knowledge?

---

௩. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(பரி-ரை.) எ-து,—மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப் பட்ட அடிகளைச் சேர்ந்தார் எல்லாவுலகிற்கு மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார், எ-று.

அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவொடு விரைந்து சேறலின் ஏகினானென இறந்தகாலத்தாற் கூறினார். என்னை? "வாராக்காலத்து நிகழுங்காலத்து, மோராங்கு வரூஉம் வினைச் சொற்கிளவி, யிறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள வென்மனார் புலவர்." என்பதோத் தாகலின். இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர் பெயர்பற்றிப் பிறிது கடவுட் கேற்றுவாரு முளர். சேர்தல்-இடைவிடாது நினைத்தல்.

(தெ-ப-ரை.)—மலர்மிசை - (அன்பரது நெஞ்சமாகிய) தாமரைமலரில், ஏகினான் - சென்ற கடவுளது, மாண்அடி - பெருமை பொருந்திய பாதங்களை, சேர்ந்தார் - (இடைவிடாது) சிந்தித்தவர், நிலமிசை - (எல்லா உலகங்களுக்கு) மேலாகிய முத்தியுலகத்தில், நீடுவாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்.

3. They who are united to the glorious feet of Him who occupies swiftly the flower *of the mind*, shall flourish in the highest of worlds (heaven).

---

௪. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

(பரி-ரை.) எ-து,—ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாவதன் அடியைச் சேர்ந்தார்க் கெக்காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா, எ-று.

பிறவித்துன்பங்க ளாவன,—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றிவருவனவும், தெய்வத்தைப்பற்றிவருவனவும் என மூவகையான் வருந்துன்பங்கள். அடிசேர்ந்தார்க் கவ்விரண்டும் இன்மையின், அவை காரணமாக வருமூவகைத் துன்பங்களும் இலவாயின.

(தெ-ப-ரை.)—வேண்டுதல்-விருப்பும், வேண்டாமை-வெறுப்பும், இலான் - இல்லாத கடவுளது, அடி - பாதங்களை, சேர்ந்

தார்க்கு - இடைவிடாது சிந்திப்பவர்க்கு, யாண்டும் - எக்காலத்தும், இடும்பை - பிறவித்துன்பங்கள், இல - உண்டாவனவல்ல.

4. To those who meditate the feet of Him who is void of desire or aversion, evil shall never come.

௫. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(பரி-ரை.) எ-து,—மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை யென்னும் இரண்டு வினையும் உளவாகா, இறைவனது மெய்ம்மைசேர்ந்த புகழை விரும்பினாரிடத்து, எ-று.

இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை இருளென்றும், நல்வினையும் பிறத்தற் கேதுவாகலான் இருவினையுஞ் சேரா என்றுங் கூறினார். இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின் அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது. புரிதல் - எப்பொழுதுஞ் சொல்லுதல்.

(தெ-ப-ரை.)—இறைவன் - கடவுளது, பொருள்சேர் - மெய்ம்மை சேர்ந்த, புகழ் - கீர்த்தியை, புரிந்தார்மாட்டு - விரும்பினவரிடத்து, இருள்சேர் - மயக்கத்தைப்பற்றிவருகின்ற, இருவினையும் - (நல்வினை தீவினையென்னும்) இரண்டுவினைகளும், சேரா - உண்டாகாவாம்.

5. The two-fold deeds that spring from darkness shall not adhere to those who delight in the true praise of God.

௬. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(பரி-ரை.) எ-து,—மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பொறிகளைவழியாக வுடைய ஐந் தவாவினையும் அறுத்தானது மெய்யான வொழுக்கநெறியின்கண் வழுவாதுநின்றார் பிறப்பின்றி யெக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார். எ-று.

புலன்கள் ஐந்தாகலான் அவற்றின்கட் செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று. ஒழுக்கநெறி ஐந் தவித்தானாற் சொல்லப்பட்டமையின் ஆண்டை ஆறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது "கபிலரது பாட்டு" என்பது போல. இவைநான்கு பாட்டாலும் இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் அவனெறி நிற்றலுஞ்செய்தார் வீடுபெறுவரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பொறிவாயில் - ஐம்பொறிகளை வழிகளாக வுடைய, ஐந்து - ஐந்தாசைகளையும், அவித்தான் - அறுத்தவனது, பொய்தீர் - மெய்ம்மையாகிய, ஒழுக்கநெறி - ஒழுக்க வழியில், நின்றார் - (வழுவாது) நின்றவர், நீடு வாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்.

6. Those shall long prosper who abide in the faultless way of Him who has destroyed the five desires of the senses.

எ. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

(பரி - ரை.) எ - து,—ஒருவாற்றானுந் தனக்கு நிக ரில்லாதவனது தாளைச்சேர்ந்தார்க் கல்லது, மனத்தின்கண் நிகழுந் துன்பங்களை நீக்குத லுண்டாகாது. எ-று.

"உறற்பால தீண்டாவிடுத லரிது" என்றாற்போல ஈண் டருமை இன்மைமேல் நின்றது. தாள்சேராதார் பிறவிக்கேதுவாய காம வெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்தவற்றான் வருந்துன்பங்களுள் அழுந்துவ ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—தனக்கு—, உவமை இல்லாதான் - (ஒருவிதத்தினாலும்) ஒப்பில்லாத கடவுளது, தாள் - அடிகளை, சேர்ந்தார்க்கு - இடைவிடாது சிந்தித்தவர்க்கு, அல்லால்-அல்லாமல், மனம் கவலை-நெஞ்சிலே தோன்றுகின்ற துன்பங்களை, மாற்றல்-நீக்குதல், அரிது-கூடாது.

**7.** Anxiety of mind cannot be removed, except from those who are united to the feet of Him who is incomparable.

அ. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

(பரி - ரை.) எ-து,—அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச்சேர்ந்தார்க்கல்லது அதனிற் பிறவாகியகடல்களை நீந்தல் அரிது, எ-று.

அறம் பொருள் இன்பம் என உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் பிற எனப்பட்டன. பல வேறுவகைப்பட்ட அறங்களெல்லாவற்றையுந் தனக்கு வடிவாக உடையவனாகலின் அறவாழியந்தண னென்றார். அறவாழி யென்பதனைத் தருமச்சக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென உரைப்பாருமுளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுளே அழுந்துவாராகலின் நீந்த லரிதென்றார். இஃதேகதேச வுருவகம்.

(தெ-ப-ரை.)—அறம் ஆழி அந்தணன் - தருமக்கடலாகிய கடவுளது, தாள் - அடியாகிய (மரக்கலத்தை), சேர்ந்தார்க்கு அல்லால்-சேர்ந்தவர்க்கு அல்லாமல், பிறஆழி - (அதனின்) வேறாகிய கடல்களை, நீந்தல் - கடத்தல், அரிது - கூடாது.

**8.** None can swim the sea of vice, but those who are united to the feet of that gracious Being who is a sea of virtue.

கூ. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(பரி-ரை.) எ-து,—தத்தமக் கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள்போலப் பயன்படுத லுடையவல்ல, எண்வகைப்பட்ட குணங்களை யுடையானது தாளை வணங்காத தலைகள், எ-று.

எண்குணங்களாவன,—தன் வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி

னீங்குதல், பேரரு ளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி லின்ப முடைமை, என இவை. இவ்வாறு சைவாகமத்திற் கூறப்பட்டது. அணிமாவை முதலாக வுடையன எனவும், கடையிலா அறிவை முதலாக வுடையன எனவும் உரைப்பாருமுளர். காணாத கண்முதலியனபோல வணங்காத தலைகள் பயனில எனத் தலைமேல் வைத்துக் கூறினாரேனும், இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில வென்பதூஉங்கொள்க. இவை மூன்றுபாட்டானும் அவனை நினைத்தலும் வாழ்த்தலுஞ் செய்யாவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கோள் இல் - (தத்தமக்கேற்ற புலன்களை) கொள்ளுகையில்லாத, பொறியின் - பொறிகள்போல, எண் குணத்தான்-எண்வகைப்பட்ட குணங்களை யுடையவனது, தாளை - அடிகளை, வணங்காத்தலை - தொழாத தலைகள், குணமிலவே - பயன்படுதே லில்லாதனவேயாம்.

9. The head that worships not the feet of Him who is possessed of eight attributes, is as useless as a sense without the power of sensation.

---

௧0. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

(பரி-ரை.) எ-து,—இறைவ னடியென்னும் புணையைச் சேர்ந்தார் பிறவியாகிய பெரிய கடலை நீந்துவர்; அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுளழுந்துவர், எ-று.

காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கட லென்றார். சேர்ந்தாரென்பது சொல்லெச்சம். உலகியல்பை நினையாது இறைவ னடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், இவ்வாறன்றி மாறிநினைப்பார்க் கஃ தருமையும் ஆகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.

(தெ-ப-ரை.)—இறைவன் - தலைவனது, அடி - பாதமாகிய (மரக்கலத்தைச் சேர்ந்தவர்), பிறவிப் பெருங்கடல்-பிறவியாகிய பெரிய கடலை, நீந்துவர் - கடப்பார்; சேராதார் - (அதனைச்) சேராதவர், நீந்தார் - கடக்கமாட்டார்.

10. None can swim the great sea of births, but those who are united to the feet of God.

---

## உ-ம். அதி—வான்சிறப்பு.

---

அஃதாவது அக்கடவுள தாணையான் உலகமும் அதற் குறுதியாகிய அறம்பொரு ளின்பங்களும் நடத்தற் கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(பரி-ரை.) எ-து,—மழை யிடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலான், அம்மழைதான் உலகத்திற் கமிழ்தமென் றுணரும் பான்மை யுடைத்து, எ-று.

நிற்ப என்பது நின்றெனத் திரிந்து நின்றது. உலகமென்றது ஈண்டுயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது பிறப்பிடையறுமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப்பட்டு வருதல். அமிழ்தம் உண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை அமிழ்தமென்றுணர்க என்றார்.

(தெ-ப-ரை.)—வான் - மழையானது, நின்று - (நடுவே நீங்காது) நிற்க, உலகம் - உயிர்களானவை, வழங்கிவருதலான்-நிலைபெற்று வருகையினால், தான்-(அம்மழை) தான், அமிழ்தம்என்று-(உயிர்களுக்கு) அமிர்த மென்று, உணரல் பாற்று - அறியப்படுந் தன்மையை யுடையது.

11. By the continnance of rain the world is preserved in existence; it is therefore worthy to be called ambrosia.

---

௨. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(பரி-ரை.) எ-து,—உண்பார்க்கு நல்ல வுணவுகளை யுளவாக்கி அவற்றை யுண்கின்றார்க்குத் தானுமுணவாய் நிற்பதூஉ மழை, எ-று.

தானும் உணவாதலாவது தண்ணீரா யுண்ணப்படுதல். சிறப்புடைய வுயர்திணைமேல் வைத்துக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃதொக்கும். இவ்வா றுயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கிவருதலுடையவாயின என்பதாம்.

(தெ-ப-ரை)—துப்பார்க்கு - உண்பவர்க்கு, துப்பாய - நன்மையாகிய, துப்பாக்கி - உணவுகளை உண்டாக்கி, துப்பார்க்கு-(அவ்வுணவுகளை) உண்பவருக்கு, துப்பாயதும் - (தானும்) உணவாய்நிற்பதும், மழை—.

12. Rain produces good food, and is itself food.

---

௩. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

(பரி-ரை.) எ-து,—மழை வேண்டுங் காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின், கடலாற் சூழப்பட்ட அகன்ற வுலகத்தின்கண் நிலைபெற் றுயிர்களை வருத்தும் பசி, எ-று.

கடலுடைத் தாயினும் அதனாற் பயனில்லை யென்பார், விரிநீர்விய னுலகத்தென்றார். உணவின்மையின் பசியான் உயிர்க ளிறக்கும் என்பதாம்.

(தெ-ப-ரை.)—விண் - மழையானது, நின்று - (பெய்ய வேண்டுங் காலத்தில்) பெய்யாமல், பொய்ப்பின் - பொய்க்குமாயின், விரிநீர் - கடலாற் சூழப்பட்ட, வியன் உலகத்துள்-பரந்தஉலகத்தில், பசி—, நின்று-நிலைபெற்று, உடற்றும் - (உயிர்களை) வருத்தும்.

13. If the cloud, withholding rain, deceive (our hopes) hunger will long distress the sea-girt spacious world.

---

௪. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

(பரி-ளா.) எ-து,—உழவர் ஏரா னுழுதலைச் செய்யார் மழையென்னும் வருவாய் தன்பயன் குன்றின், எ-று.

குன்றியக்காலென்பது குறைந்து நின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறியவாறு.

(தெ-ப-ளா.)—புயல் என்னும் - மழை என்கின்ற, வாரி - வருவாய், வளம் குன்றியக்கால் - (தன்) பயன் குறையுமாயின், உழவர் - பயிர்செய் மாந்தர், ஏரின்-ஏரினால், உழார் - உழுதலைச் செய்யார்.

**14.** If the abundance of wealth-imparting rain diminish, the labour of the plough must cease.

---

௫. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(பரி-ளா.) எ-து,—பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாதுநின்று கெடுப்பதூஉம், அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப்பெய்து முன்கெடுத்தாற்போல எடுப்பதூஉம் இவை யெல்லாம் வல்லது மழை, எ-று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஆங் கென்பது மறுதலைத்தொழிலுவமத்தின்கண் வந்த உவமச்சொல். கேடும் ஆக்கமும் எய்துதற் குரியார் மக்களாதலின் கெட்டார்க் கென்றார். எல்லாமென்றது அம்மக்கண் முயற்சி வேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல்கள்தாம் பலவாதல் நோக்கி, வல்ல தென்பது அவாய்நிலையான் வந்தது. மழையின தாற்றல் கூறியவாறு.

(தெ-ப-ளா.)—கெடுப்பதும் - (பெய்யாது நின்று) கெடுப்பதும், கெட்டார்க்கு - (அவ்வாறு) கெட்டவர்க்கு, சார்வாய் - துணையாய்ப் (பெய்து), மற்று ஆங்கே - முன்கெடுத்ததுபோலவே, எடுப்பதும் - எடுப்பதும், எல்லாம் - (இவை) எல்லாம் (வல்லது), மழை—.

**15.** Rain by its absence ruins men; and by its existence restores them to fortune.

---

௬. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(பரி-ளா.) எ-து,—மேகத்திற் றுளிவீழிற் காண்ப தல்லது, வீழாதாயின் அப்பொழுதே பசும் புல்லினது தலையையுங் காண்டலரிது. எ-று.

விசும்பு - ஆகுபெயர். மற்று - வினை மாற்றின்கண் வந்தது. இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஓரறி வுயிரும் இல்லை யென்பதாம்.

(தெ-ப-ளா.)—விசும்பின் - மேகத்தினின்றும், துளி - துளிகள், வீழின் அல்லால் - வீழிற்காண்பதல்லது, மற்று ஆங்கே-

விழாதாயின் அப்பொழுதே, பசும்புல் தலை - பசும்புல்லினது தலையையும், காண்பது அரிது - காணுதல் கூடாது.

16. If no drop falls from the clouds, not even the green blade of grass will be seen.

எ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(பரி - ரை.) எ-து,—அளவில்லாத கடலுந் தன்னியல்பு குறையும். மேகந்தான் அதனைக்குறைத் ததன்கட் பெய்யாது விடுமாயின், எ-று.

உம்மை சிறப்பும்மை. தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும் மணிமுதலிய படாமையுமாம். ஈண்டுக் குறைத்தலென்றது முகத்தலை; அது "கடல் குறைபடுத்தநீர்" "கடல் குறைபடவெறிந்து" என்பதனானும் அறிக. மழைக்கு முதலாய கடற்கு மழைவேண்டும் என்பதாம். இவை யேழுபாட்டானும் உலக நடத்தற் கேதுவாதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எழிலிதான் - மேகந்தான், தடிந்து - அதனைக் குறைத்து, நல்காதாகிவிடின் - அதனிடத்துப் பெய்யாதாகிவிடின், நெடுங்கடலும் - பெரிய கடலும், தன் நீர்மை-தன்னியல்பு, குன்றும் - குறையும்.

17. Even the wealth of the wide sea will be diminished, if the cloud that has drawn (its waters) up gives them not back again (in rain.)

அ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

(பரி-ரை.) எ-து,—தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவும் பூசையும் நடவாது. மழைபெய்யாதாயின், எ-று.

நைமித்தியத்தோடு கூடிய நித்திய மென்றார் ஆகலின், செல்லாதென்றார். நித்தியத்திற் றாழ்வு தீரச் செய்வது நைமித்திய மாதலின் அதனை முற் கூறினார். உம்மை சிறப்பும்மை.

(தெ-ப-ரை.)—வானம் - மழை, வறக்குமேல் - பெய்யாதாயின், வானோர்க்கும் - தேவர்களுக்கும், ஈண்டு - இவ்வுலகத்தில், சிறப்பொடு - திருவிழாவுடனே, பூசனை-நித்தியபூசை, செல்லாது - நடவாது.

18. If the heaven dry up, neither *yearly* festivals, nor daily worship will be offered in this world, to the Celestials.

கூ. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(பரி-ரை.) எ-து,—அகன்ற வுலகின்கண் தானமுந் தவமுமாய இரண்டறமும் உளவாகா, மழை பெய்யாதாயின், எ-று.

தானமாவது தறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க் குவகையோடுங் கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழிப்போகாமல் நிற்றற்

பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும் பான்மை பற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன.

(தெ-ப-ரை.)—வானம் - மழை, வழங்காதெனின் - பெய்யாதாயின், வியன் உலகம் - பெரிய உலகத்தில், தானம் தவம் இரண்டும் - தானமும் தவமும் ஆகிய இரண்டும், தங்கா - உண்டாகாவாம்.

**19.** If rain fall not, penance and alms-deeds will not dwell within this spacious world.

---

௨0. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(பரி-ரை.) எ-து,—எவ்வகை மேம்பாட் டார்க்கும் நீரை யின்றி உலகியல் அமையாதாயின், அந்நீர் இடையறா தொழுகும் ஒழுக்கமும் வானை யின்றி அமையாது. எ-று.

பொரு ளின்பங்களை உலகிய லென்றார், அவை இம்மைக்கண்ணவாகலின். இடையறா தொழுகல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாதல். நீரின் றமையா துலகென்பது எல்லாரானுந் தெளியப் படுதலின், அதுபோல வொழுக்கமும் வானின் றமையாமை தெளியப்படுமென்பார், நீரின் றமையா துலகெனி னென்றார். இதனை நீரையின்றியமையா துலகாயின் எத்திறத்தார்க்கு மழையை யின்றி யொழுக்க நிரம்பாதென வுரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானும் அறம் பொரு ளின்பங்கள் நடத்தற் கேதுவாதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—யார் யார்க்கும்-எவ்வகை மேம்பாட்டோர்க்கும், நீர் – நீரை, இன்றி - இல்லாமல், உலகு - உலகியலானது, அமையாது எனின் - பொருந்தாதாயின், ஒழுக்கு - (அந்நீரினது நடுவே நீங்காத) ஒழுக்கமும், வான்–மழையை, இன்றி - இல்லாமல், அமையாது - பொருந்தாது.

**20.** *If it be said that* the duties of life-cannot be discharged by any person without water *so* without rain there cannot be the flowing *of water*.

---

## ௩-ம். அதி—நீத்தார்பெருமை.

அஃதாவது முற்றத் துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வற முதற்பொருள்களை உலகிற் குள்ளவா றுணர்த்துவார் அவர் ஆகலின், இது வான் சிறப்பின்பின் வைக்கப் பட்டது.

௧. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(பரி - ரை.) எ-து,—தமக்குரிய வொழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிதென விரும்பும் நூல்களது துணிவு, எ-று.

தமக்குரிய வொழுக்கத்தின் கண்ணே நின்று துறத்தலாவது,—தத்தம் வருணத்திற்கும் நிலைமைக்கும் உரிய வொழுக்கங்களை வழுவாதொழுக அறம் வளரும், அறம்வளரப் பாவந்தேயும், பாவந்தேய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன் மாலைய வாய இம்மை மறுமை யின்பங்களின் உவர்ப்பும் பிறவித் துன்பங்களுந் தோன்றும், அவைதோன்ற வீட்டின்கண் ஆசை யுண்டாம், அஃதுண்டா கப் பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற் குக் காரணமாகிய யோகமுயற்சியுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்துபுறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும் ஆகலான், இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்துவிடுதலெனக் கொள்க. பனுவலெனப் பொதுப்படக் கூறிய அதனான், ஒன்றையொன் றொவ்வாதசமய நூல்க ளெல்லா வற்றிற்கும் இஃதொத்த துணிவென்பது பெற்றாம். செய்தாரது துணிவு பனுவல் மேலேற்றப் பட்டது.

(தெ-ப-ரை.)—பனுவல் - நூல்களது, துணிவு - நிச்சயமானது, ஒழுக்கத்து - (தமக்குரிய) ஒழுக்கத்தில் நின்று, நீத்தார் - துறந்தவரது, பெருமை - மகிமையை, விழுப்பத்து - மேலான பல பொருள்களுள்ளும், வேண்டும் - (இதுவேமேலானதென்று) விரும்பும்.

**21.** The end and aim of all treatise is to extol beyond all other excellence, the greatness of those who, while abiding in the rule of conduct *peculiar to their state*, have abandoned all desire.

---

௨. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
இறந்தாரை யெண்ணிக் கொண்டற்று.

(பரி-ரை.) எ-து,—இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையை இவ்வளவென் றெண்ணாற்கூறி அறியலுறின், அளவு படாமையான், இவ்வுலகத்துப் பிறந் திறந்தாரை யெண்ணி யித்துணையரென அறிய லுற்றாற் போலும், எ-று.

முடியா தென்பதாம். கொண்டா லென்னும் வினையெச்சங்கொண் டெனத் திரிந்து நின்றது.

(தெ-ப-ரை.)—துறந்தார் - (அகங்கார மமகாரங்களை) விட்டவரது, பெருமை - மகிமையை, துணைக்கூறின் (எண்ணிக்கையினால் சொல்லி) அறியப்புகுந்தால், (அளவுபடாமையால்) வையத்து - இவ்வுலகத்தில், இறந்தாரை - (பிறந்து) இறந்தவரை, எண்ணிக்கொண்டற்று-எண்ணி (இத்தனைபேர்களென்று) அறியப் புகுந்தாற்போலும்.

**22.** To describe the measure of the greatness of those who have forsaken *the two-fold desires*, is like counting the dead.

---

௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(பரி-ரை.) எ-து,—பிறப்பு வீடென்னும் இரண்டினது துன்பவின்பக்கூறுபாடுகளை ஆராய்ந் தறிந்து, அப்பிறப்பறுத்தற்கு இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே உலகின்க ணுயர்ந்தது, எ-று.

"தெரி மாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல இருமை யென்பதீண் டெண்ணின்க ணின்றது. பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது. இதனால் திகிரியுருட்டி உலகமுழுதாண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது. இவைமூன்று பாட்டானும் நீத்தாரது பெருமையே எல்லாப் பெருமையினு மிக்கதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இருமை - (பிறப்புவீடென்னும்) இரண்டனது, வகை - (துன்பவின்பக்) கூறுபாடுகளை, தெரிந்து - ஆராய்ந்து, (அப்பிறப்பை நீக்குதற்கு) ஈண்டு - இப்பிறப்பில், அறம்-துறவறத்தை, பூண்டார் - கொண்டவரது, பெருமை-மகிமையே, உலகு - உலகத்தில், பிறங்கிற்று - உயர்ந்தது.

**23.** The greatness of those who have discovered the properties of both states of being, and renounced the world, shines-forth on earth (beyond all others.)

---

௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(பரி-ரை.) எ-து,—திண்மை யென்னுந்தோட்டியாற் பொறிகளாகிய யானை யைந்தனையும் தத்தம் புலன்கண்மேற் செல்லாமற்காப்பான் எல்லா நிலத்தினு மிக்கதென்று சொல்லப்பட்ட வீட்டுநிலத்திற் கோர்வித்தாம், எ-று.

இஃது தேகதேசவுருவகம். திண்மை யீண்டறிவின்மேற்று. அந்நிலத்திற்சென்று முளைத்தலின் வித்தென்றார்; ஈண்டுப் பிறந்திறந்து வருமகன் அல்ல னென்பதாம்.

(தெ-ப-ரை.)—உரன் என்னும் தோட்டியான் - அறிவென்னும் அங்குசத்தால், ஓர் ஐந்தும் - (பொறிகளாகிய யானைகள்) ஐந்தையும், காப்பான் – (தன்தன் புலன்களின்மேல் செல்லாமல்) காப்பவன், வரன் என்னும் வைப்புக்கு - (எல்லா நிலங்களினும்) மேலானதென்று சொல்லப்படுகிற மோக்ஷ நிலத்துக்கு, ஓர் வித்து – ஒருவித்தாவான்.

**24.** He who guides his five senses by the hook of wisdom, will be a seed in the world of (heaven.)

---

௫. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

(பரி-ரை.) எ-து,—புலன்களிற் செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினனது வலிக்கு அகன்ற வானத் துள்ளா ரிறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று, எ-று.

ஐந்து மென்னு முற்றும்மையும் ஆற்றற்கென்னு நான்கனுருபுஞ் செய்புள்விகாரத்தாற் றொக்கன. தான் ஐந்தவியாது சாபமெய்திநின்று அவித்தானது ஆற்ற லுணர்த்தினன் ஆதலின், இந்திரனேசாலுங்கரி யென்றார்.

(தெ-ப-ரை.)—ஐந்து அவித்தான் - (புலன்களிற் செல்லுகின்ற) ஐந்தாசைகளையு மொழித்தவனது, ஆற்றல்-வல்லமைக்கு, அகல் விசும்பு உளார்-அகன்ற பொன்னுலகத்துள்ள தேவர்க்கு, கோமான் - தலைவனாகிய, இந்திரனே - தேவேந்திரனே, சாலும் கரி-போதுமான சாக்ஷியாம்.

25. Indra, the king of the inhabitants of the spacious heaven, is himself a sufficient proof of the strength of him who has subdued his five senses.

---

௬. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்க லாதார்.

(பரி-ரை.) எ-து,—ஒத்த பிறப்பினராய மக்களுட் செய்தற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர், அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்ய மாட்டாதார் சிறியர், எ-று.

செயற் கெளியவாவன மனம் வேண்டியவாறே அதனைப்பொறிவழிகளாற் புலன்களிற் செலுத்தலும் வெஃகுதலும் வெகுளலு முதலாயின. செயற் கரியவாவன இயம நியமமுதலாய எண்வகை யோக வுறுப்புக்கள். நீரிற் பலகால் மூழ்கல் முதலாய நாலிருவழக்கிற் றாபதபக்க மென்பாருமுளர். அவை நியமத்துள்ளேயடங்கலின், நீத்தாரது பெருமைக் கேலாமை யறிக.

(தெ-ப-ரை.)—பெரியர் - (ஒத்தபிறப்பினராகிய மனிதர்களிலே) பெரியோர், செயற்கு அரிய - செய்தற் கரியவைகளை, செய்வர்—; சிறியர் - சிறியோர், செயற்கு அரிய - அச்செய்தற்கரியவைகளை, செய்க லாதார் - செய்யமாட்டாதார்.

26. The great will do those things which is difficult to be done; but the mean cannot do them.

---

௭. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

(பரி-ரை.) எ-து,—சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமுமென்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறு பாட்டையும் ஆராய்வான் அறிவின் கண்ணதே உலகம், எ-று.

அவற்றின் கூறுபாடாவன பூதங்கட்கு முதலாகிய அவைதாமைந்தும், அவற்றின்கட் டோன்றிய அப்பூதங்களைந்தும், அவற்றின்கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும், கருமேந்திரியங்களைந்தும், ஆக விருபதுமாம். வகை தெரிவான் கட்டெனவுடம்பொடு புணர்த்ததனால் தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றாம்; தத்துவ மிருபத்தைந்தனையுந் தெரித

லாவது மூலப்பகுதியொன்றிற் றோன்றிய தன்மையிற் பகுதியே யாவ தல்லது விகுதியாகா தெனவும், அதன்கட் டோன்றிய மானும் அதன்கட் டோன்றிய அகங்காரமும் அதன்கட் டோன்றிய தன்மாத்திரைகளு மாகிய ஏழுந் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும், தங்கட்டோன்று வனவற்றை நோக்கப் பகுதியாதலு முடைய வெனவும், அவற்றின்கட் டோன்றிய மனமும் ஞானேந்திரி யங்களும் கருமேந்திரி யங்களும் பூதங் களுமாகிய பதினாறும் தங்கட் டோன்றுவன வின்மையின் விகுதியே யாவ தல்லது பகுதியாகா வெனவும், புருடன் தானொன்றிற் றோன்றாமையானுந் தன்கட் டோன்றுவன வின்மையானும் இரண்டும் அல்லனெனவுஞ் சாங்கிய நூலு ளோதியவாற்றா னாராய்தல். இவ்விருபத்தைந்து மல்லதுலகெனப் பிறிதொன் றில்லையென வுலகின துண்மையறிதலின், அவனறிவின் கண் ணதாயிற்று. இவை நான்குபாட்டானும் பெருமைக் கேது ஐந்தவித்தலும் யோகப் பயிற்சியுந் தத்துவ வுணர்வுமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகு-உலகமானது, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்-சுவையும் ஒளியும் பரிசமும் ஓசையும் நாற்றமும், என்ற-என்றுசொல்லப்பட்ட, ஐந்தின்-பஞ்ச தன்மாத்திரைகளது, வகை-கூறுபாட்டை, தெரிவான்கட்டே-ஆராய்பவ னறிவினிடத்ததே.

27. The world is within *the knowledge* of him who knows the properties of taste, sight, touch, hearing, and smell.

---

௮. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(பரி-ரை.) எ-து,—நிறைந்த மொழியினை யுடைய துறந்தாரது பெரு மையை நிலவுலகத்தின்கண் அவராணையாகச் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும். எ-று.

நிறைமொழி யென்பது அருளிற் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடு மொழி. காட்டுதல் பயனா லுணர்த்துதல்.

(தெ-ப-ரை.)—நிறைமொழி - (பயன்) நிறைந்த சொல்லை யுடைய, மாந்தர் - முனிவரது, பெருமை - மகிமையை, நிலத்து- பூலோகத்தில், மறைமொழி - (அவராணையாகச்சொல்லிய) மந் திரங்களே, காட்டிவிடும் - (பிரத்தியக்ஷமாகக்) காட்டிவிடும்.

28. The hidden words of the men whose words are full of effect, will shew their greatuess to the world.

---

௯. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(பரி-ரை.) எ-து,—துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற் குணங்க ளாகிய குன்றின் முடிவின்கணின்ற முனிவரது வெகுளி தானுள்ள அளவு கணமேயாயினும் வெகுளப்பட்டாராற் றடுத்தலரிது, எ-று.

சலியாமையும் பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக வுருவகஞ் செய்தார். குணம் சாதி யொருமை. அறுதியாய் வருகின்றவாறுபற்றி ஓரோ

வழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கும் ஆகலிற் கணமேயு மென்றும், நிறைமொழிமாந்தராகலிற் காத்த லரிதென்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் அவராணை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—குணம் என்னும் குன்று - (துறவு மெய்யறிவு ஆசையில்லாமை முதலான) நற்குணங்களாகிய மலையின் மேல், ஏறிநின்றார்-ஏறிநின்றமுனிவரது, வெகுளி-கோபமானது, கணமேயும் - (தானுள்ள அளவு) கணப்பொழுதே ஆயினும், காத்தல் - (கோபிக்கப் பட்டவராலே) தடுத்தல், அரிது-அரிதாம்.

**29.** The anger of those who have ascended the mountain of goodness, though it continue but for a moment, cannot be resisted.

---

௩0. அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(பரி-ரை.) எ-து,—எல்லா வுயிர்கண் மேலுஞ் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான், அந்தணரென்று சொல்லப் படுவார் துறவறத்தி னின்றார். எ-று.

பூணுதல் விரதமாகக் கோடல். அந்தண ரென்ப தழகிய தட்பத்தை யுடையாரென ஏதுப் பெயராகலின், அஃதவ் வருளுடையார்மே லன்றிச் செல்லாதென்பது கருத்து. அவ்வா றாணையுடைய ராயினும் உயிர்கண்மாட் டருளுடைய ரென்ப திதனாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எவ்வுயிர்க்கும் - எல்லா வுயிர்களின்மேலும், செந்தண்மை - செவ்வையானஅருளை, பூண்டு-விரதமாகக் கொண்டு, ஒழுகலான் - நடக்கையினால், அந்தணரென்போர் - அந்தணரென்று சொல்லப்படுவோர், அறவோர் - துறவறத்தி னின்றவர்.

**30.** The virtuous are truly called Anthanar, because in their conduct towards all creatures they are clothed in kindness.

---

## ௪-ம். அதி—அறன்வலியுறுத்தல்.

அஃதாவது அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப் பொருளும் இன்பமும் போலாது, அறன் இம்மை மறுமை வீடென்னு மூன்றனையும் பயத்தலான், அவற்றின் வலியுடைத் தென்பது கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானேவிளங்கும். "சிறப்புடை மரபிற்பொருளு மின்பமு மறத்துவழிப்படூஉந் தோற்றம்போல", என்றார் பிறரும்.

௧. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—வீடுபேற்றையுந்தரும்; துறக்க முதலிய செல்வத்தையுந்தரும்; ஆதலான், உயிர்கட் கறத்தின்மிக்க ஆக்கம் யாது. எ-று.

எல்லாப் பேற்றினுஞ் சிறந்தமையின் வீடு சிறப்பெனப் பட்டது. ஆக்கந்தருவதனை ஆக்கமென்றார்; ஆக்கம் - மேன்மேலுயர்தல். ஈண் டியொன்

றது மக்களுயிரை. சிறப்புஞ் செல்வமும் எய்துதற்குரிய ததுவேயாகலின், இதனான் அறத்தின் மிக்க வுறுதி யில்லை யென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சிறப்பு – மோக்ஷத்தையும், ஈனும் - கொடுக்கும், செல்வமும் – (சுவர்க்கமுதலாகிய) செல்வத்தையும், ஈனும்-கொடுக்கும்; (ஆதலால்) உயிர்க்கு - (மனிதர்) உயிர்க்கு, அறத்தின் ஊங்கு - தருமத்தின்மேற்பட்ட, ஆக்கம் - பெருக்கத்தைத் தருவது, எவன் - யாது.

31. Virtue will confer heaven and wealth; what greater source of happiness can man possess?

---

௨. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கறஞ்செய்தலின் மேற்பட்ட வாக்கமு மில்லை; அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை. எ-று.

அறத்தினூஉங் காக்கமு மில்லையெனமேற் சொல்லிய வதனையே அநுவதித்தார். அதனாற் கேடுவருதல் கூறுதற் பயனோக்கி, இதனாலதுசெய்யாத வழிக் கேடுவருதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.) — (ஒருவனுக்கு) அறத்தின் ஊங்கு-தருமஞ் (செய்தலின்) மேற்பட்ட, ஆக்கமும்-பெருக்கத்தைத் தருவதும், இல்லை - இலது; அதனை - அத்தருமத்தை, மறத்தலின் ஊங்கு-(மயக்கத்தால்) மறந்து விடுதலின்மேற்பட்ட, கேடு - கேட்டைத் தருவதும், இல்லை - இலது.

32. There can be no greater source of good than (the practice of) virtue; there can be no greater source of evil than the forgetfulness of it.

---

௩. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(பரி-ரை.) எ-து,—தத்தமக் கியலுந் திறத்தான் அறமாகிய நல்வினையை யொழியாதே அஃதெய்து மிடத்தானெல்லாஞ் செய்க. எ-று.

இயலுந் திறமாவது இல்லறம் பொருளளவிற் கேற்பவும், துறவறம் யாக்கை நிலைக்கேற்பவுஞ் செய்தல். ஓவாமை யிடைவிடாமை. எய்து மிடமாவன மனம் வாக்குக் காய மென்பன. அவற்றாற்செய்யும் அறங்களாவன முறையே நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலுமென இவை. இதனான் அறஞ் செய்யுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒல்லும் வகையான் – (தமக்குத் தமக்குக்) கூடும்வகையால், அறவினை-தருமமாகிய நல்வினையை, ஓவாதே-இடைவிடாமல், செல்லும் வாய்எல்லாம் – (அது) செல்லுமிடங் களினெல்லாம், செயல் - செய்யக்கடவர்.

33. As much as possible, in every way, incessantly practice virtue.

---

௪. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற.

(பரி-ரை.) எ-து,—அவ்வாற்றான் அறஞ்செய்வான் தன்மனத்தின்கட் குற்றமுடையன் அல்லனாக; அவ்வளவே அற னாவது; அஃதொழிந்த சொல்லும் வேடமும் அறனெனப் படா, ஆர வார நீர்மைய, எ-று.

குற்றம் தீயனசிந்தித்தல். பிறரறிதல் வேண்டிச் செய்கின்றன ஆகலின், ஆகுலநீர வென்றார். மனத்து மாசுடையனாயவழி அதன் வழியவாகிய மொழி மெய்களாற் செய்வன பயனில வென்பதூஉம் பெறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மனத்துக்கண் - (அப்படி அறஞ்செய்பவன் தனது) நெஞ்சினிடத்து, மாசு இலன் ஆதல்-குற்றமில்லாதவனாக்கடவன்; அறன் - தருமமாவது, அனைத்து-அவ்வளவே; பிற-அது ஒழிந்தசொல்லும் வேடமும், ஆகுலநீர - (அறமெனப்படுவனவல்ல;) ஆரவார குணத்தை யுடையனவாம்.

**34.** Let him who does virtuous deeds be of spotless mind; to that extent is virtue; all else is vain show.

---

௫. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

(பரி-ரை.) எ-து,—பிற ராக்கம் பொறாமையும், புலன்கண்மேற்செல்கின்ற அவாவும், அவையேதுவாகப் பிறர்பால்வரும் வெகுளியும், அதுபற்றி வருங்கடுஞ் சொல்லுமாகிய இக் நான்கினையுங்கடிந் திடையறாது நடந்த தறமாவது, எ-று.

இதனான் இவற்றோடு விரவி யியன்ற தறமெனப் படாதென்பதூஉங் கொள்க. இவை இரண்டு பாட்டானும் அறத்தின தியல்பு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அழுக்காறு – (பிறருயர்ச்சி) பொறாமையும், அவா - (ஐம்புல) ஆசையும், வெகுளி - (அவை காரணமாகப் பிறர்மேல்உண்டாகிற) கோபமும், இன்னாச்சொல் (அதுபற்றி வருகிற) கடுஞ்சொல்லும், இ நான்கும்-ஆகியவிந்நான்கினையும், இழுக்கா – கடிந்து, இயன்றது - (ஒழிவில்லாமல்) நடந்தது, அறம் - அறமாவது.

**35.** That conduct is virtue which is free from these four things, *viz.*, envy, desire, anger, and bitter speech.

---

௬. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(பரி-ரை.) எ-து,—யாம் இது பொழுதிளையமாகலின் இறக்குநான்று செய்துமெனக் கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க; அவ்வாறுசெய்த அறம் இவ்வுடம்பினின்று முயிர்போங் காலத் ததற் கழிவில்லாத துணையாம், எ-று.

மற்றென்ப தசைநிலை. பொன்றாத் துணையென்றார், செய்த வுடம்பழியவு முயிரோ டொன்றி யேனை யுடம்பினுஞ் சேறலின். இதனான் இவ்வியல் பிற்றாகிய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்க வென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—(நாம் இப்போது இளமைப்பருவ முடையோம் ஆகலின்) அன்று - இறக்குநாளில், அறிவாம் என்னாது - செய்வோமென்று நினையாமல், அறம் - தருமத்தை, செய்க- (தினந்தோறும்) செய்யக்கடவர்; அது-அப்படிச் செய்யப்பட்ட தருமமானது, பொன்றுங்கால்-உடம்பினின்று முயிர் போங்காலத்து, பொன்றாத்துணை - (அவ்வுயிர்க்கு) அழியாத துணையாம்.

**36.** Defer not virtue to another day; receive her now; and at the dying hour she will be your undying friend.

---

எ. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

(பரி-ரை.) எ-து,—அறத்தின் பயனிதுவென்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா; சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக்காட்சி யளவை தன்னானே யுணரப்படும், எ-று.

பயனை ஆறென்றார், பின்னதாகலின். எனவென்னும் எச்சத்தாற் சொல்லாகிய ஆகம அளவையும், பொறுத்தானோ டூர்ந்தானிடை யென்றதனாற் காட்சி அளவையும் பெற்றாம். உணரப்படு மென்பது சொல்லெச்சம். இதனாற்பொன்றாத் துணையாதல் தெளிவிக்கப்பட்டது.

(தெ-ப-ரை)—அறத்து ஆறு - தருமத்தின்பயன், இதுவென-இதுவென்று, (ஆகம வளவையால் அறிவிக்க) வேண்டா-வேண்டியதில்லை; சிவிகை - தண்டிகையை, பொறுத்தானோடு - சுமப்பவனோடு, ஊர்ந்தானிடை - செலுத்துவோனிடத்துக் (காட்சி யளவையினாலேயே அறியப்படும்.)

**37.** The fruit of virtue need not be described in books; it may be inferred from seeing the bearer of a palankeen and the rider therein.

---

அ. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(பரி-ரை.) எ-து,—செய்யாது கழியு நாளுளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின், அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும் வழியை வாராம லடைக்குங் கல்லாம், எ-று.

ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகை வினையு முள்ள துணையும் உயிர் யாக்கையோடும் கூடிநின் றவ்வினைகள திருவகைப் பயனையு நுகருமாகலான், அந்நாண்முழுவதும் வாழ்நா ளெனப்பட்டது. குற்றங்கள் ஐந்தாவன அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன. இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேச மென்ப. வினையிரண்டாவன நல்வினை தீவினையென்

பன. பயனிரண்டாவன இன்பந்துன்பமென்பன. இதனான் அறம் வீடு பயக்குமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவன்—, வீழ்நாள் - (செய்யாமற்) கழியு நாள், படாமை - உண்டாகாமல், நன்று - தருமத்தை, ஆற்றின்-செய்வானாயின், அஃது—அச்செய்கையானது, வாழ்நாள் - (அவன் சரீரத்தோடுகூடி) வாழுநாளது, வழி - (வரும்) வழியை, அடைக்கும் கல்-(வராமல்) அடைக்குங்கல்லாம்.

**38.** If one allows no day to pass without some good being done, his conduct will be a stone to block up the passage to other births.

---

௩௯. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(பரி-ரை.) எ-து,—இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது; அதனோடு பொருந்தாது வருவன வெல்லாம் இன்பமாயினுந் துன்பத்திடத்த; அதுவேயுமன்றிப் புகழு முடைய வல்ல, எ-று.

ஆனுருபு ஈண் டுடனிகழ்ச்சிக்கண் வந்தது. "தூங்குகையா னோங்கு நடைய" என் புழிப்போல, இன்பம் காமநுகர்ச்சி. அஃதாவது காமத்துப் பாலின் முதற்கட் சொல்லுவது. இன்பத்துப் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தான் வரும் பிறனில் விழைவுமுதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றும் ஆயினும் பின்துன்பமாய் விளைதலின் புறத்தவென்றார். அறத்தோடு வாராதனபுகழும் இல எனவே, வருவது புகழுமுடைத்து என்பது பெற்றும். இதனான் அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும் எய்துவர் என்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறத்தான் - இல்லறத்தோடு பொருந்தி, வருவதே - வருமின்பமே, இன்பம் - இன்பமாகும்; மற்று எல்லாம் - அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம் (இன்பமாயினும்), புறத்த-துன்பத்துட் சேர்வனவாம்; (அதுவுமல்லாமல்) புகழும்-புகழையும், இல - உடையனவல்ல.

**39.** That pleasure which flows from domestic virtue is pleasure; all else is not pleasure, and it is without praise.

---

௪0. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குச் செய்தற் பான்மையது நல்வினையே; ஒழிதற் பான்மையது தீவினையே, எ-று.

ஒருமென்பன இரண்டும் அசை. தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது. பழிக்கப் படுவதனைப் பழியென்றார். இதனாற்செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, செயல்பாலது-செய்தலாகிய தன்மையையுடையது, அறனே - நல்வினையே;

உயல்பாலது - ஒழிதலாகிய தன்மையையுடையது, பழி (ஏ)- தீவினையே.

**40·** That is virtue which each ought to do, and that is vice which each should shun.

---

## இ ல் ல ற வி ய ல்

## ரு-ம். அதி—இல்வாழ்க்கை.

அஃதாவது இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. இன்னிலை அற ஞ்செய்தற் குரிய இருவகை நிலையுள் முதலாதலின், இஃதறன்வலி யுறுத் தலின் பின் வைக்கப்பட்டது.

**க. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு**
**நல்லாற்றி னின்ற துணை.**

(பரி-ரை.) எ-து,—இல்லறத்தோடு கூடி வாழ்வானென்று சொல்லப் படுவான் அற வியல்பினையுடைய ஏனை மூவர்க்கும் அவர்செல்லும் நல்லொ ழுக்கநெறிக்கண் ணிலைபெற்ற துணையாம், எ-று.

இல்லென்ப தாகுபெயர். என்பானெனச் செயப்படுபொருள் வினை முதல்போலக் கூறப்பட்டது. ஏனைய மூவராவார், ஆசாரிய னிடத்தி னின் றோதலும் விரதங் காத்தலுமாகிய பிரமசரிய ஒழுக்கத்தானும், இல்லை விட்டுத் தீயொடு வனத்தின்கட்சென்று மனையாள் வழிபடத் தவஞ் செய்யு ம் ஒழுக்கத்தானும், முற்றத் துறந்தயோக வொழுக்கத்தானும் என இவர். இவருள் முன்னை யிருவரையும் பிறர்மத மேற்கொண்டு கூறினர். இவ ரிவ் வொழுக்க நெறிகளை முடியச் செல்லுமளவும் அச்செலவிற்குப் பசிநோய் குளிர்முதலியவற்றான் இடையூறுவராமல் உண்டியும் மருந்தும் உறையுளு முதலிய உதவி அவ்வவ நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான், நல்லாற் றினின்ற துணையென்றார்.

(தெ-ப-ரை.)—இல்வாழ்வான் என்பான் - இல்லறத்தோடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவோன், இயல்பு உடைய- (துறவறத்) தன்மையையுடைய, மூவர்க்கும் - (மற்றை) மூவர்க் கும், நல் ஆற்றில் - (அவாது) நல் (ஒழுக்க) வழிகளில், நின்ற - நிலைபெற்ற, துணை - துணையாவான்.

**41.** He will be called a (true) householder, who is a firm support to the virtuous of the three orders in their good path.

---

**௨. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு**
**மில்வாழ்வா னென்பான் றுணை.**

(பரி - ரை.) எ-து,—களைக ணவரால் துறக்கப் பட்டார்க்கும் நல் கூர்ந்தார்க்கும் ஒருவரு மின்றித் தன்பால்வந் திறந்தார்க்கும் இல்வாழ் வானென்று சொல்லப் படுவான் துணை, எ-று.

துறந்தார்க்குப் பாவம் ஒழிய அவர் களைகணாய்நின்று வேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க் குணவுமுதலிய கொடுத்தலானும், இறந்

தார்க்கு நீர்க்கடன்முதலிய செய்து நல்லுலகின்கட் செலுத்தலானும் துணை யென்றார். இவை யிரண்டுபாட்டானும் இன்னிலை யெல்லா வுபகாரத்திற்கும் உரித்தாதல் கூறப்பட்டது.

(தெ-ப-னா.)—துறந்தார்க்கும் - (ஆதார மானவராலே) விடப்பட்டோர்க்கும், துவ்வாதவர்க்கும் - வறுமைப்பட்டவர்க்கும், இறந்தார்க்கும் - (ஒருவருமில்லாமல் வந்து) இறந்தவர்க்கும், இல்வாழ்வான் என்பான் - இல்வாழ்வானென்று சொல்லப் படுவோனே, துணை - துணையாவன்.

**42**. He will be said to flourish in domestic virtue who aids the forsaken, the poor, and the dead.

---

௩. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

(பரி-னா.) எ-து,—பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென் றுசொல்லப்பட்ட ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற் செய் தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம், எ-று.

பிதிரராவரர் படைப்புக் காலத் தயன்றற் படைக்கப் பட்டதோர் கட வுட்சாதி, அவர்க்கிடந் தென்றிசை யாகலின் தென்புலத்தா ரென்றார். தெய்வமென்பது சாதி யொருமை. விருந்தென்பது புதுமை. அஃது நீண்டாகு பெயராய்ப் புதியராய் வந்தார்மேல் நின்றது. அவர் இருவகையர், பண் டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாரு மென. ஒக்கல் - சுற்றம். எல்லா அறங்களும் தானுளனாய் நின்று செய் யவேண்டுதலின் தன்னை யோம்பலும் அறனாயிற்று. என்ற என்பது விகார மாயிற்று. ஆங்கு அசை. ஐவகையும் அறஞ்செய்தற் கிடனாகலின் ஐம்புல மென்றார். அரசனுக் கிறைப்பொருள் ஆறி லொன்றாயிற்று இவ்வைம்புலத் திற்கும் ஐந்து கூறுவேண்டுதலான் என்ப தறிக.

(தெ-ப-னா.)—தென்புலத்தார் - பிதிரரும், தெய்வம்-தேவரும், விருந்து - அதிதியரும், ஒக்கல் - சுற்றத்தாரும், தான்-தானும், என்ற - என்றுசொல்லப்பட்ட, ஐம்புலத்து - ஐந்திடத்துஞ் செயப்படுகின்ற, ஆறு - (அற) வழியை, ஓம்பல்-வழுவாமற்செய்தல், தலை - (இல்வாழ்வானுக்குச்) சிறப்புடையஅறமாம்.

**43**. The chief (duty of the householder) is to preserve the five-fold rule (of conduct) towards the manes, the Gods, his guests, his relations, and himself.

---

௪. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(பரி-னா.) எ-து,—பொருள் செய்யுங்காற் பாவத்திற் கஞ்சி ஈட்டி, அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினர்க்கும் தென்புலத்தார் முத லிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவ னில்வாழ்க்கை உடைத்தாயின்,அவன்வழி யுலகத் தெஞ்ஞான்றும் நிற்றல்அல்லது இறத்தலில்லை,எ-று.

பாவத்தான் வந்த பிறன்பொருளைப் பகுத்துண்ணின், அறம் பொரு ளுடையார் மேலும், பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சும் ஆகலின் பழியஞ்சி யென்றார். வாழ்வான துடைமை வாழ்க்கைமே லேற்றப் பட்டது.

(தெ-ப-ரை.)—(பொருள் சம்பாதிக்கும்போது) பழி-பாவ த்துக்கு, அஞ்சி - பயப்பட்டுச் (சம்பாதித்து), பாத்து - (அப் பொருளை முன்சொல்லப்பட்ட பதின்மர்களுக்கும்) பங்கிட்டு, ஊண் - (தான்) உண்ணுதலை, வாழ்க்கை - (ஒருவனது) இல்வா ழ்க்கையானது, உடைத்து ஆயின் - உடையதானால், வழி - (அவ னது) சந்ததியானது, எஞ்சல் - குறைதல், எஞ்ஞான்றும் - எந் நாளும், இல் - இல்லை.

**44.** His descendants shall never fail who, living in the domestic state, fears vice (in the acquisition of property) and shares his food (with others.)

---

௫. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் இல்வாழ்க்கை தன்துணைவிமேற் செய்யத் தகும் அன்பினையும் பிறர்க்குப் பகுத்துண்ட லாகிய அறத்தினையும் உடை த்தாயின், அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம், எ-று.

நிரனிறை இல்லாட்கும் கணவற்கும் நெஞ்சொன் றாகாதவழி இல் லறங் கடைபோகாமையின் அன்புடைமை பண்பாயிற்று. அறனுடைமை பய னாயிற்று. இவை மூன்று பாட்டானும் இன்னிலையி னின்றான் அறஞ்செய்யு மாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இல்வாழ்க்கை - (ஒருவனது) இல்வாழ்க் கையானது, அன்பும் - (தன்மனையாளிடத்துச் செய்யத்தகும்) அன்பினையும், அறனும் - (பிறர்க்குப் பகுத்துண்ணுதலாகிய) அறத்தினையும், உடைத்தாயின் - உடையதானால், அது - அவ் வுடைமையானது, (அவ்வில்வாழ்க்கைக்கு), பண்பும்-குணமும், பயனும் - பிரயோசனமும் ஆம்.

**45.** If the married life possess love and virtue, these will be both its duty and reward.

---

௬. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செ லுத்துவனாயின், அவன் அதற்குப் புறமாகிய நெறியிற்போய்ப் பெறும்பயன் யாது, எ-று.

அறத்தாறென்பது பழிஅஞ்சிப் பகுத்துண்டலும் அன்புடைமையு மெ ன மேற்சொல்லிய ஆறு. புறத்தாறு இல்லை விட்டுவனத்துச்செல்லுநிலை. அந் நிலையின் இது பயனுடைத் தென்பார் போஒய்ப் பெறுவ தெவனென்றார்.

(தெ-ப-னா.)—(ஒருவன்) இல் வாழ்க்கை - இல் வாழ்க்கையை, அறத்து ஆற்றின் - தருமத்தின்வழியில், ஆற்றின் - செலுத்துவானாயின், புறத்து ஆற்றில் - (அவன் அதற்குப்) புறமாகிய வழியிலே, போய் - சென்று, பெறுவது - பெறும்பயன், எவன்-யாது.

**46.** What will he who lives virtuously in the domestic state gain by going into the other, (ascetic.) state?

---

எ. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(பரி-னா.) எ-து,—இல்வாழ்க்கைக்க ணின்று அதற்குரிய இயல்போடு கூடிவாழ்பவ னென்று சொல்லப் படுவான் புலன்களை விட முயல்வா ரெல்லாருள்ளு மிக்கவன், எ-று.

முற்றத் துறந்தவர் விட்டமையின், முயல்வா ரென்றது மூன்றுநிலையினின்றாரை; அந்நிலைதான் பலவகைப்படுதலின் எல்லா ருள்ளுமெனவும் முயலாதுவைத்துப் பயனெய்துதலின் தலையெனவுங் கூறினார்.

(தெ-ப-னா.)—இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையிலேநின்று, இயல்பினான் - (அதற்குரிய) இயல்போடுகூடி, வாழ்பவன் என்பான் - வாழ்பவனென்று சொல்லப்படுவோன், முயல்வாருள் எல்லாம் - (ஐம்புலன்களைவிட) முயற்சிசெய்வா ரெல்லாருள்ளும், தலை - மேற்பட்டவனாவான்.

**47.** Among all those who labor (for future happiness) he is greatest who lives well in the household state.

---

அ. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(பரி-னா.) எ-து,—தவஞ் செய்வாரையுந் தத்த நெறியின்கண் ஒழுகப்பண்ணித் தானுந் தன்னறத்திற் றவறாத இல்வாழ்க்கை அத்தவஞ்செய்வார் நிலையினும் பொறையுடைத்து, எ-று.

பசி முதலிய இடையூறு நீக்கலின் ஆற்றினொழுக்கி யென்றார். நோற்பா ரென்பதாகுபெயர். நோற்பார் நிலைக்கு அவர் தம்மையுற்ற நோயல்லது இல்வாழ்வார் நிலைபோற் பிறரையுற்ற நோயும் பொறுத்தல் இன்மையின் நோற்பாரி னோன்மை யுடைத்தென்றார்.

(தெ-ப-னா.)—(தவஞ்செய்வோரையும்) ஆற்றின்-(தமது) வழியில், ஒழுக்கி - நடத்தி, அறன் - (தானுந்தன்) அறத்தினின்றும், இழுக்கா - தவறாத, இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, நோற்பாரின் - அத்தவஞ் செய்வாரது நிலையினும், நோன்மை- பொறுமையை, உடைத்து - உடையதாம்.

**48.** The householder who, not swerving from virtue, helps the ascetic in his way, endures more than those who endure penance.

---

சுகூ. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

(பரி-ரை.) எ து,—இருவகை யறத்தினும் நூல்களான் அற னென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட தில்வாழ்க்கையே; ஏனைத் துறவறமோ எனின் அதுவும் பிறனாற் பழிக்கப் படுவதில்லையாயின் அவ் வில்வாழ்க்கையோ டொருதன்மைத்தாக நன்று, எ-று.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் பிரிக்கப்பட்டது துறவற மாகலின், அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அதன்மேனின்றது. பிறன் பழிப்பதென்றது கூடா வொழுக்கத்தை. துறவறம் மனத்தையும் பொறிகளையும் ஒறுத்தடக்கவல்ல அருமை யுடைத்தாய வழியே. அவற்றை ஒறுக்கவேண்டாது ஐம்புல இன்பங்க ளாரத்துய்க்கு மேன்மை யுடைய இல்வாழ்க்கை யோடு அறமென வொருங்கெண்ணப் படுவதென்றவா றாயிற்று. இவை நான்குபாட்டானும் இன்னிலையே பயனுடைத்தென இதன் சிறப்புக் கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—(இருவகை யறங்களுள்) அறன் எனப்பட்டது - (நூல்களால்) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது, இல்வாழ்க்கையே—, (மற்றைத் துறவறமோவென்றால்) அஃதும் - அதுவும், பிறன்பழிப்பது - பிறனாற் பழிக்கப்படுவதை, இல் ஆயின் - உடைத்தாகாம லிருந்தால், நன்று - (அவ் வில்வாழ்க்கையோடு ஒரு தன்மையதாக) நன்றாம்.

**49**. The marriage-state is truly called virtue. The other state is also good, if others do not reproach it.

---

ருO. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(பரி-ரை.) எ-து,—இல்லறத்தோடு கூடிவாழு மியல்பினால் வையத்தின்கண் வாழ்பவன் வையத்தானே எனினும் வானின்கண் உறையும் தேவருளொருவனாக வைத்து நன்கு மதிக்கப்படும், எ-று.

பின்தேவனாய் அவ்வறப்பய னுகர்த லொரு தலையாகலின், தெய்வத்துள் வைக்கப்படும் என்றார். இதனான் இன்னிலையது மறுமைப்பயன் கூறப்பட்டது. இம்மைப்பயன் புகழ், அதனையிறுதிக்கட் கூறுப.

(தெ-ப-ரை.)—வாழ்வு ஆங்கு - இல்லறத்தோடு கூடி வாழு மியல்பினால், வையத்துள் - மண்ணுலகத்துள், வாழ்பவன்—, (மண்ணுலகத்தானேயாயினும்), வான் உறையும் - விண்ணுலகத்திலிருக்கின்ற, தெய்வத்துள் - தேவருள், வைக்கப்படும் - (ஒருவனாக) வைத்து மதிக்கப்படுவான்.

**50**. He who on earth has lived in the conjugal state as he should live, will be placed among the gods who dwell in heaven.

---

## ௬-ம். அதி—வாழ்க்கைத்துணைநலம்.

அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(பரி-ரை.) எ-து,—மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை யுடையளாய்த் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையையுடையாள் அதற்குத்துணை, எ-று.

நற்குணங்களாவன—துறந்தார்ப்பேணலும், விருந்தயர்தலும், வறியார் மாட்டருளுடைமையு முதலாயின. நற்செய்கைகளாவன—வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலு முதலாயின. வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது—முதலையறிந் ததற்கியைய வழித்தல். இதனான் இவ்விரண்டுநன்மையுஞ் சிறந்தனவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மனைத்தக்க - இல்லறத்துக்குத்தக்க, மாண்பு உடையள் ஆகி - நற்குண நற்செய்கைகளை யுடையவளாகி, தன்கொண்டான் - தன்னைக்கொண்டவனது, வளம் தக்காள் வாழ்க்கை - வரவுக்குத்தகுந்த வாழ்க்கையையுடையவள், துணை - (அவ்வில்லறத்துக்குத்) துணையாவாள்.

**51.** She who has the excellence of home virtues, and can expend within the means of her husband, is a help in the domestic state.

---

உ. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

(பரி-ரை.) எ-து,—மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவன் இல்லாளிடத் தில்லையாயின், அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமைத்தாயினும் அஃதுடைத்தன்று, எ-று.

இல்லையென்றார், பயன்படாமையின்.

(தெ-ப-ரை.)—மனைமாட்சி - இல்லறத்துக்குத்தகுந்த நற்குணநற்செய்கைகள், இல்லாள்கண் - (ஒருவனது) மனையாளிடத்து, இல் ஆயின் - இல்லை ஆயின், வாழ்க்கை - அவ்வில்வாழ்க்கையானது, எனைமாட்சித்து ஆயினும் - (செல்வத்தால்) எவ்வளவு பெருமையை உடையதாயினும், இல் - அப்பெருமையை உடையதன்று.

**52.** If the wife be devoid of domestic excellence, whatever (other) greatness be possessed, the conjugal state, is nothing.

---

௩. இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கில்லாள் நற்குண நற்செய்கையள் ஆயி னக்கால் இல்லாதது யாது? அவள் அன்ன ளல்லாக்கால் உள்ளது யாது? எ-று.

மாண்பெனக் குணத்தின்பெயர் குணியின்மே னின்றது. இவை யிர ண்டு பாட்டானும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாளது மாட்சியே பிறவல்ல என்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—(ஒருவனுக்கு) இல்லவள் - மனையாள், மா ண்பு ஆனால் - நற்குண நற்செய்கை யுள்ளவளாயிருந்தால், இல் லது - இல்லாதபொருள், என் - யாது? இல்லவள் - அம் மனை யாள், மாணாக்கடை - அப்படிப்பட்டவ ளாகாதிருந்தால், உள்ள து - உள்ளபொருள், என் - யாது?

**53.** If his wife be eminent (in virtue) what does (that man) *not* possess? If she be devoid of it, what *does* (he) possess?

---

ச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனெய்தும் பொருள்களுள் இல்லாளின் மேம் பட்ட பொருள்கள் யாவையுள? அவண்மாட்டுக் கற்பென்னுங் கலங்கா நிலைமை யுண்டாகப் பெறின், எ-று.

கற்புடையாள்போல அறமுதலிய மூன்றற்கும் ஏதுவாவன பிறவின் மையின் யாவுளவென்றார். இதனாற் கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கற்பு என்னும் திண்மை-கற்பென்னுங் கலங் காநிலைமை, உண்டு ஆக பெறின் - உண்டா யிருக்கப்பெற்றால், பெண்ணின்-மனையாளினும், பெருந்தக்க - உயர்வாகிய பொருள் கள், யா - எவை, உள - இருக்கின்றன.

**54.** What is more excellent than a wife, if she possess the stability of chastity?

---

ரு. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

(பரி-ரை.) எ-து,—பிறதெய்வந் தொழாது தன் தெய்வமாகிய கொழு நனைத் தொழாநின்று துயிலெழுவாள் பெய்யென்றுசொல்ல மழை பெய் யும், எ-று.

தெய்வந் தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங் காலத்தாகலின், தொழுதெழுவாளென்றார். தொழாநின் றென்பது தொழுதெனத்திரிந்து நின்றது. தெய்வந்தா னேவல்செய்யு மென்பதாம். இதனாற் கற்புடையவ ளது ஆற்றல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தெய்வம் - (பிற) தெய்வத்தை, தொழாள்- வணங்காளாகி, கொழுநன் - (தன்தெய்வமாகிய) கணவனை, தொ ழுது - வணங்காநின்று, எழுவாள் - (நித்திரைவிட்டு) எழுந்

திருப்பவள், பெய் என - பெய்யென்றுசொல்ல, மழை - மழை யானது, பெய்யும்—.

**55**. If she, who does not worship God, but who rising worships her husband, say, "let it rain," it will rain.

---

சு. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(பரி-உரை.) எ-து,—கற்பினின்றும் வழுவாமற் றன்னைக்காத்து, தன்னைக் கொண்டவனையும் உண்டிமுதலியவற்றாற் பேணி, இருவர்மாட்டு நன்மை யமைந்த புகழ் நீங்காமற் காத்து, மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடி யுடையாளே பெண்ணாவாள், எ-று.

தன்மாட்டுப் புகழாவது வாழூர் கற்பாற் றன்னைப்புகழ்வது. சோர்வு - மறவி. இதனாற் றற்புகழ்தற் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தன்காத்து - (கற்பினின்றும் வழுவாமல்) தன்னைக் காப்பாற்றிக்கொண்டு, தன்கொண்டான்பேணி - தன்னைக்கொண்டவனையும் (உண்டிமுதலானவற்றால்) உபசரித்து, தகைசான்ற - (தம்மிருவரிடத்தும்) நன்மையமைந்த, சொற்காத்து - புகழை (நீங்காமற்) காப்பாற்றி, சோர்விலாள் - (முன்சொல்லப்பட்ட) நற்குண நற்செய்கைகளிலும் (மறவி) இல்லாதவளே, பெண் - பெண்ணாவாள்.

**56**. She is a wife who unweariedly guards herself, takes care of her husband, and preserves an unsullied fame.

---

எ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(பரி - உரை.) எ-து,—மகளிரைத் தலைவர் சிறையாற்காக்குங் காவலென்ன பயனைச்செய்யும்? அவர் தமது நிறையாற் காக்குங் காவலே தலையாய காவல், எ-று.

சிறை—மதிலும் வாயில் காவலு முதலாயின. நிறை—நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல். காவல் இரண்டினும் நிறைக்காவ லில்வழி யேனைச் சிறைக்காவலாற் பயனில்லை யென்பார், நிறைகாக்குங் காப்பேதலை யென்றார். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் றற்காத்தற்சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மகளிர் - பெண்களை, சிறை - காவலினாலே, காக்கும் - (தலைவர்) காக்கும், காப்பு - காவலானது, எவன் செய்யும் - என்ன பிரயோசனத்தைச்செய்யும், நிறை - கற்பென்னும் குணத்தினால், காக்கும் - (அப்பெண்கள்) காக்கும், காப்பே - காவலே, தலை - முதன்மையான காவல்.

**57**. What avails the guard of a prison? The chief guard of a woman is her chastity.

---

௮. பெற்றாற்பெறிற்பெறுவர் பெண்டிர்ப் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

(பரி-ரை.) எ-து,—பெண்டிர் தம்மை யெய்தியகணவனை வழிபடுதல் பெறுவுராயின், புத்தேளிர் வாழும் உலகின்கண் அவராற் பெருஞ் சிறப்பினைப்பெறுவர், எ-று.

வழிபடுதலென்பது சொல்லெச்சம். இதனாற் றற்கொண்டாற் பேணியமகளிர் புத்தேளிராற் பேணப்படுவரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பெண்டிர் - மனைவியர், பெற்றான் - (தம்மைக்) கொண்டகணவனை, பெறின் - (பூசித்தல்) பெறுவராயின், புத்தேளிர் - தேவர், வாழும் - வாழ்தற்கிடமாகிய, உலகு-உலகத்தில், பெருஞ்சிறப்பு - (அவரால் செய்யப்படும்) பெரியசிறப்பினை, பெறுவர்—.

**58.** If women shew reverence to their husbands, they will obtain great excellence in the world where the gods flourish.

---

௯. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

(பரி-ரை.) எ-து,—புகழை விரும்பிய இல்லாளை யில்லாதார்க் கில்லை, தம்மை யிகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்கவேறுபோ னடக்கும் பெருமிதநடை, எ-று.

புரிந்தவென்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற் றொக்கது. பெருமித முடையானுக்குச் சிங்கவேறு நடையா னுவமமாகலின், ஏறுபோலென்றார். இதனாற் றகைசான்ற சொற்காவாவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—புகழ் - கீர்த்தியை, புரிந்த - விரும்பிய, இல்-மனையாளை, இலோர்க்கு - இல்லாதவர்க்கு, இகழ்வார்முன்-(தம்மை) யிகழ்ந்துபேசும் பகைவர்முன், ஏறுபோல் - ஆண்சிங்கம் போலும், பீடுநடை - பெருமிதநடை, இல்லை-இலது.

**59.** The man whose wife seeks not the praise (of chastity) cannot walk with lion-like stately step, before those who revile him.

---

௰. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல னன்மக்கட் பேறு.

(பரி-ரை.) எ-து,—ஒருவர்க்கு நன்மையென்று சொல்லுவர் அறிந்தோர் மனையாளது நற்குணநற்செய்கைகளை; அவை தமக்கு நல்ல அணிகலமென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை, எ-று.

அறிந்தோரென்பது எஞ்சிநின்றது. மற்று - அசைநிலை. இதனால் வாழ்க்கைத்துணைக் காவதோர் அணிநலங்கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

(தெ-ப-ரை.)—மனை - மனையாளது, மாட்சி - நற்குணநற்செய்கைகளை, மங்கலம் - (ஒருவனுக்கு) நன்மை(யாம்,) என்ப-

என்றுசொல்லுவார்; நன்மக்கள்பேறு - நல்லபுதல்வரைப் பெறு தலை, அதன் - அவற்றிற்கு, நல் கலன் - நல்ல ஆபரணம், (என் ப) - என்று சொல்லுவார்.

**60.** The excellence of a wife is the good of her husband; and good children are the jewels of that goodness.

## எ-ம். அதி—புதல்வரைப்பெறுதல்.

அஃதாவது இருபிறப்பாளர் மூவரானும், இயல்பாக இறுக்கப்படுவதாகிய கடன்மூன்றனுள் முனிவர் கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியா னும், தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப் படாமையின், அக்கடனிறுத்தற்பொருட்டு நன்மக்களைப்பெறுதல். அதிகா ரமுறைமை மேலே பெறப்பட்டது.

க. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற

(பரி-ரை.) எ-து,—ஒருவன் பெறும் பேறுகளுள் அறிய வேண்டுவன அறிதற்குரிய மக்களைப்பெறுதல் அல்லது பிறபேறுகளை யாமதிப்பதில்லை, எ-று.

அறிவதென்பது அறிதலைச்செய்வதென அத்தொழின்மே னின்றது. காரணமாகிய உரிமை காரியமாகிய அறிதலைப்பயந்தே விடுமாதலான், அத் துணிவுபற்றி அறிந்தவென இறந்தகாலத்தாற் கூறினர். அறிவறிந்த என்ற வதனன் மக்களென்னும்பெயர் பெண் ணொழித்துநின்றது. இதனாற் புதல் வர்ப்பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பெறும் அவற்றுள் - (ஒருவன்) பெறும் பே றுகளுள், அறிவுஅறிந்த - அறியவேண்டுமவைகளை அறிதற்குரிய, மக்கள் பேறு அல்லது-புதல்வரைப் பெறுதலைஅல்லது, பிற-மற் றைப்பேறுகளை, யாம் – நாம், அறிவது இல்லை - மதிப்பதில்லை.

**61.** Among all the benefits that may be acquired, we know no greater benefit than the acquisition of intelligent children.

உ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(பரி-ரை.) எ-து,—வினைவயத்தாற் பிறக்கும் பிறப் பேழின்கண்ணும் ஒருவனைத் துன்பங்கள் சென்றடையா, பிறராற் பழிக்கப்படாத நற்குணங் களையுடைய புதல்வரைப் பெறுவனாயின், எ-று.

அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப் பெறுவனாயின் என்றவாறாயிற்று. பிறப்பேழாவன "ஊர்வ பதினொன்று மொன்பது மானுட, நீர்பறவை நாற்காலோர் பப் பத்தாஞ் - சீரிய, பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த, வந்தமில்சீர்த் தாவரநா லைந்து." தந்தைதாயர்தீவினை தேய்தற்பொருட் டவரைநோக்

இப் புதல்வர்செய்யுந் தானதருமங்கட் கவர் நற்குணங் காரணமாகலின், பண்பென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மேனின்றது.

(தெ-ப-ரை.)—பழிபிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத, பண்பு உடைய - நற்குணங்களையுடைய, மக்கள்பெறின் - புதல்வரைப் பெறுவானாயின், எழுபிறப்பும் - (வினைவசத்தினால் உண்டாகிற) எழுவகைப்பட்ட பிறப்பிலும், தீயவை - துன்பங்கள், தீண்டா - அடையாவாம்.

**62.** The evils of the seven births shall not touch those who obtain children of a good disposition, free from vice.

---

௬. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்.

(பரி - ரை.) எ-து,—தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர்; அப்புதல்வர் செய்தபொருள் தம்மைநோக்கி அவர் செய்யு நல்வினையானே தம்பால்வரும் ஆதலான், எ-று.

தந்தம் வினையென்புழித் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை "முருகனது குறிஞ்சிநிலம்" என் புழிப்போல, உரிமைப்பொருட்கண்வந்தது. பொருள்செய்தமக்களைப் பொருளென உபசரித்தார். இவை யிரண்டுபாட்டானும் நன்மக்களைப் பெற்றார் பெறு மறுமைப்பயன் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—தம்மக்கள் - தம்முடைய புதல்வரை, தம்பொருள் - தம்முடைய பொருள்கள், என்ப - என்று சொல்லுவார், (அறிந்தோர்); அவர்பொருள் - அப்புதல்வர் சம்பாதித்த பொருள்கள், தம்தம் வினையான் - தம்மைக்குறித்து அவர்செய்யும் நல்வினையினாலே, வரும் - (தம்மிடத்து) உண்டாகும், (ஆதலால்.)

**63.** Men will call their sons their wealth, because it flows to them through the deeds which they (sons) perform on their behalf.

---

௪. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

(பரி - ரை.) எ-து,—சுவையான் அமிழ்தத்தினு மிகவினிமை யுடைத்து, தம்மக்களது சிறுகையான் அளாவப்பட்ட சோறு, எ-று.

சிறுகையான் அளாவலாவது "இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து, நெய்யுடையடிசின் மெய்பட விதிர்த்தல்."

(தெ-ப-ரை.)—தம்மக்கள் - தம்முடையமக்களது, சிறுகை- சிறியகைகளால், அளாவிய - அளையப்பட்ட, கூழ் - சோறானது, அமிழ்தினும் - (சுவையினால்மிகுந்த) அமிர்தத்தினும், ஆற்றஇனிது - மிகவும் இனிமையையுடையதாம்.

**64.** The rice in which the little hand of their children has dabbled will be far sweeter (to the parent) than ambrosia.

---

௫. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல்; செவிக்கின்பமாவது அவரது சொல்லைக்கேட்டல், எ-று.

மற்று-வினைமாற்று. மக்களது மழலைச் சொல்லேஅன்றி அவர் கற்றறிவுடையராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாகலின், பொதுப்படச் சொல்லென்றார். தீண்டல் கேட்டலென்னுங் காரணப் பெயர்கள் ஈண்டுக் காரியங்களின்மே னின்றன.

(தெ-ப-ரை.)—உடற்கு (ஒருவனது) உடம்புக்கு, இன்பம்-இன்பமாவது, மக்கள் - மக்களது, மெய் - உடம்பை, தீண்டல் - தொடுதல்; செவிக்கு - (அவனது) காதுக்கு, இன்பம் - இன்பமாவது, அவர் - அவரது, சொல் - சொற்களை, கேட்டல் - கேட்குதல்.

**65.** The touch of children give pleasure to the body and the hearing of their words, pleasure to the ear.

---

௬. குழலினிது யாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

(பரி-ரை.) எ-து,—குழலிசை யினிது யாழிசையினி தென்று சொல்லுவர், தம்புதல்வருடைய குதலைச்சொற்களைக் கேளாதவர், எ-று.

குழல் யாழ் என்பன ஆகுபெயர். கேட்டவர் அவற்றினு மழலைச்சொல் இனி தென்பரென்பது குறிப்பெச்சம். இனிமைமிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்புவகையானுங் கூறியவாறு. இவை மூன்றுபாட்டானும் இம்மைப் பயன்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.) தம்மக்கள் - தம்முடைய புதல்வரது, மழலைச் சொல் - குதலைச்சொற்களை, கேளாதவர்-கேளாதவர்கள், குழல்-புள்ளாங் குழலினிசை, இனிது - இன்பந்தருவது, யாழ் - வீணை யினிசை, இனிது - இன்பந்தருவது, என்ப - என்றுசொல்லுவர்.

**66.** "The pipe is sweet, the lute is sweet," say those who have not heard the prattle of their own children.

---

எ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

(பரி-ரை.) எ-து,—தந்தை புதல்வனுக்குச் செய்யு நன்மையாவது கற்றோர் அவையத்தின்கண் அவரினு மிக்கிருக்குமாறு கல்வியுடையனாக்குதல், எ-று.

பொருளுடைய னாக்குதன் முதலியன துன்பம் பயத்தலின், நன்மையாகாவென்பது கருத்து. இதனாற் றந்தை கடன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தந்தை - தகப்பனானவன், மகற்கு - புதல்வனுக்கு, ஆற்றும்-செய்யத்தகும், நன்றி - நன்மையாவது,

அவையத்து-(கற்றவரது) சபையில், முந்தி இருப்ப-(அவரினும்) மேற்பட்டிருக்க, செயல்-(கல்வியை யுடையவன்) ஆக்குதலாம்.

**67.** The benefit which a father should confer on his son is to give him precedence in the assembly of the learned.

---

அ. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

(பரி-மா.) எ-து,—தம்மக்களது அறிவுடைமை பெரியநிலத்து மன்னுகின்றவுயிர்கட்கெல்லாந் தம்மினும் இனிதாம், எ-று.

ஈண்டறிவென்றது இயல்பாகிய அறிவோடு கூடிய கல்வியறிவு. மன்னுயிரென்றது ஈண்டறிவுடையார்மே னின்றது; அறிவுடைமைகண் டின்புறுதற்குரியவர் அவராகலின். இதனாற் றந்தையினும் அவையத்தார் உவப்பரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ஙா.)—தம்மக்கள் - தம்மக்களது, அறிவு உடைமை - அறிவுடையரா யிருக்கையானது, மாநிலத்து - பெரியநிலத்தில், மன் - நிலைபெற்ற, உயிர்க்கு எல்லாம் - மக்களுயிர்க் கெல்லாம், தம்மின் - தமக் கின்பந்தருவதினும், இனிது - இனிதாயிருக்கும்.

**68.** That their children should possess knowledge is more pleasing to all men of this great earth than to themselves.

---

௯. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(பரி-மா.) எ-து,—தான் பெற்றபொழுதை மகிழ்ச்சியினு மிகமகிழும், தன்மகனைக் கல்விகேள்விகளால் நிறைந்தானென் றறிவுடையார் சொல்லக்கேட்டதாய், எ-று.

கவானின்கட்கண்ட பொது வுவகையினும் சால்புடைய னெனக்கேட்ட சிறப்புவகை பெரிதாகலின் பெரிதுவக்கு மெனவும், பெண்ணியல்பாற் றானாக அறியாமையின் கேட்டதா யெனவுங் கூறினார். அறிவுடையாரென்பது வருவிக்கப்பட்டது, சான்றோ னென்றற் குரியவர் அவராகலின். தாயுவகைக் களவையின்மையின் அஃ திதனாற் பிரித்துக் கூறப்பட்டது.

(தெ-ப-ஙா.)—தன் மகனை - தன் புதல்வனை, சான்றோன் என - (கல்விகேள்விகளினால்) நிறைந்தோனென்று (அறிவுடையோர்) சொல்ல, கேட்ட தாய் - (அதனைக்) கேட்ட தாயானவள், ஈன்றபொழுதின் - பெற்றகாலத்தினும், பெரிது உவக்கும் - மிக மகிழ்வாள்.

**69.** The mother who hears her son called "a wise man" will rejoice more than she did at his birth.

---

௭௰. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

(பரி-ரை.) எ-து,—கல்வியுடைய னாக்கிய தந்தைக்கு மகன் செய்யுங் கைம்மாறாவது தன்னறிவும் ஒழுக்கமுங் கண்டார் இவன்றந்தை இவனைப் பெறுதற் கென்ன தவஞ்செய்தான்கொல்லோ என்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல், எ-று.

சொல்லென்பது நிகழ்த்துதலாகிய தன்காரணந் தோன்ற நின்றது. நிகழ்த்துதல் - அங்ஙனஞ் சொல்ல ஒழுகுதல். இதனாற் புதல்வன் கடன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தந்தைக்கு - (தன்னைக் கல்வி யுடையவனாக்கிய) தகப்பனுக்கு, மகன்-புதல்வன், ஆற்றும் - செய்யும், உதவி-எதிர் நன்றியானது, (தன்னறிவையும் ஒழுக்கத்தையும் கண்டவர்) இவன்-இவனது, தந்தை - தகப்பன், (இவனைப் பெறுதற்கு) என் - என்னதவத்தை, நோற்றான்கொல் - செய்தானோ, என்னும் - என்கிற, சொல் - சொல்லை, (உண்டாக்குதலாம்.)

**70**. (So to act) that it may be said "by what great penance did his father beget him," is the benefit which a son should render to his father.

---

## அ-ம். அதி—அன்புடைமை.

அஃதாவது அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரு முதலிய தொடர்புடையார்கட் காதல் உடையனாதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண்மேல் அருள்பிறத்தலுமஅன்பின்பயனாதலின் இது வேண்டப்பட்டது. வாழ்க்கைத் துணைமேல் அன்பில்வழி இல்லறம் இனிது நடவாமை, "அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந்தொல்லோர் சிறப்பின, விருந்தெதிர் கோடலுமிழந்த வென்னை" என்பதனானும், அதனாலருள் பிறத்தல், "அருளென்னு மன்பீன்குழவி" என்பதனானும் அறிக.

க. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

(பரி-ரை.) எ-து,—அன்பிற்கும் பிறரறியாம லடைத்துவைக்குந் தாழுளதோ? தம்மா லன்புசெய்யப் பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார் கண்பொழிகின்ற புல்லியகண்ணீரே உண்ணின்ற அன்பினையெல்லாரும் அறியத்தூற்றும் ஆதலான், எ-று.

உம்மை சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை கண்ணீர்மேலேற்றப்பட்டது. காட்சியளவைக் கெய்தாதாயினும் அனுமான அளவையான் வெளிப்படு மென்பதாம். இதனால் அன்பினதுண்மை உணர்த்தப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஆர்வலர் - அன்புடையாரது, புல்கண் நீர்-புல்லிய கண்ணீரே, பூசல்தரும் - (அன்பை யாவரும் அறியத்) தூற்றும்; (ஆதலால்), அன்பிற்கும் - அன்பினுக்கும், அடைக்

கும் - (பிறர் அறியாமல்) அடைத்துவைக்கும், தாழ் - தாழ்ப்பாள், உண்டோ - உளதோ.

**71.** Is there any fastening that can shut in love? Tears of the affectionate will publish the love that is within.

---

௨. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

(பரி - ரை.) எ - து,—அன்பிலாதார் பிறர்க்குப் பயன்படாமையின் எல்லாப் பொருளானும் தமக்கேஉரியர்; அன்புடையார் அவற்றானே அன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர், எ-று.

ஆனுருபுகளும் பிரிநிலை ஏகாரமும் விகாரத்தாற் றொக்கன. என்பு-ஆகுபெயர். என்புமுரியராதல் தன்னகம் புக்க குறுநடைப்புறவின் றகுதி கண் டஞ்சித் துலைபுக்கோன் முதலாயினோர்கட் காண்க.

(தெ-ப-ரை.) அன்பு இலார் - (உயிர்களிடத்து) அன்பு இல்லாதார், (பிறர்க்குப்பயன்படாமையால்) எல்லாம் – எல்லாப்பொருள்களாலும், தமக்கு - தமக்கே, உரியர் - உரியவராவார்; அன்பு உடையார்–அன்புடையவர், (அவைகளாலே மாத்திரமல்லாமல்) என்பும் - (தம்) உடம்பாலும், பிறர்க்கு-மற்றவர்களுக்கு, உரியர்- உரியவராவார்.

**72.** Those who are destitute of love appropriate all they have to themselves; but those who possess love consider even their bones to belong to others.

---

௩. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(பரி-ரை.) எ-து,—பெறுதற்கரிய மக்களுயிர்க் குடம்போ டுண்டாகிய தொடர்ச்சியினை அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர், எ-று.

பிறப்பின தருமை பிறந்த வுயிர்கண்மேல் ஏற்றப்பட்டது. இயைந்த வென்ப துபசார வழக்கு. வழக்கு-ஆகுபெயர். உடம்போ டியைந்தல்லது அன்புசெய்ய லாகாமையின், அது செய்தற் பொருட் டித்தொடர்ச்சி யுளதாயிற்றென்பதாம். ஆகவே, இத்தொடர்ச்சிக்குப்பயன் அன்புடைமை யென்றாயிற்று.

(தெ-ப-ரை.) ஆர் உயிர்க்கு - பெறுதற்கரிய மனிதருயிர்க்கு, என்போடு-உடம்போடு, இயைந்த - உண்டாகிய, தொடர்பு-சம்பந்தத்தை, அன்போடு - அன்புடன், இயைந்த - பொருந்துதற்கு வந்த, வழக்கு - வழியின்பயனாகும், என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர்.

**73.** They say that the union of soul and body in man is the fruit of the union of love and virtue (in a former birth).

---

௪. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குத் தொடர்புடையார்மாட்டுச் செய்த அன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்ப முடைமையைத்தரும்; அவ்வி ருப்ப முடைமைதான் இவற்குப் பகையும் நொதுமலும் இல்லையாய் யாவரு நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத்தரும், எ-று.

உடைமை-உடையனுந் தன்மை. யாவரு நண்பாதல் எல்லாப் பொரு ளுமெய்துதற் கேதுவாகலின், அதனைநாடாச் சிறப்பென்றார்.

(தெ-ப-ரை.)—அன்பு - (மனைவிமக்கள் முதலியோரிடத் துச்செய்யும்) அன்பானது, ஆர்வம் உடைமை - (பிறரிடத்தே) ஆசையையுடையனு யிருக்கையை, ஈனும்-(ஒருவனுக்குத்) தரும்; அது - அவ்விருக்கையானது, நண்புஎன்னும் - (இவனுக்கு யா வரும்) நட்பினரென்று சொல்லப்படுகிற, நாடாச்சிறப்பு - அள விறந்தசிறப்பை, ஈனும்-தரும்.

**74.** Love begets desire: and that (desire) begets the immeasurable excellence of friendship.

---

௫. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(பரி-ரை.) எ-து,—அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெ றியின்பயனென்று சொல்லுவர் அறிந்தோர், இவ்வுலகத்து இல்வாழ்க்கைக் கணின்று இன்பநுகர்ந்து அதன்மேற் றுறக்கத்துச் சென்றெய்தும் பேரின் பத்தினை, எ-று.

வழக்கு-ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும் மக்க ளோடும் ஒக்கலோடுங்கூடி யின்புற்றார் தாஞ்செய்த வேள்வித்தொழிலாற் றேவராய் ஆண்டும் இன்புறுவராகலின், இன்புற்றா ரெய்துஞ் சிறப்பென் றார். தவத்தாற் றுன்புற் றெய்துந் துறக்க இன்பத்தினை ஈண்டும் இன்புற் றெய்துதல் அன்பானேஅன்றி இல்லையென்பதாம்.

(தெ-ப-ரை.)—வையகத்து-இவ்வுலகத்தில், இன்பு உற்றார்-(இல்வாழ்க்கையில்) இன்பத்தை அனுபவித்தவராகி, எய்தும் - (பின்பு விண்ணுலகத்திற்சென்று) அடையும், சிறப்பு - பேரின்ப த்தை, அன்பு - அன்பை, உற்று - உடையராகி, அமர்ந்த-(இல் லறத்தோடு) பொருந்திய, வழக்கு - வழியின்பயன், என்ப-என் றுசொல்லுவர் (அறிந்தோர்.)

**75.** They say that the felicity which those who, after enjoying the pleasure (of the conjugal state) in this world, obtain in heaven is the result of their domestic state imbued with love.

---

௬. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

(பரி-ரை.) எ-து,—அன்பு துணையாவது அறத்திற்கே யென்று சொல் லுவர் சிலரறியார்; ஏனைமறத்திற்கும் அவ்வன்பே துணையாவது, எ-று.

ஒருவன்செய்த பகைமைபற்றி உள்ளத்து மறநிகழ்ந்துழி அவனை நட பாகக்கருதி அவன்மே லன்புசெய்ய அதுநீங்குமாகலின், மறத்தை நீக் குதற்குந் துணையாமென்பார், மறத்திற்கு மஃதே துணையென்றார், "துன் பத்திற்கியாரோ துணையாவார்" என்புழிப்போல. இவை ஐந்துபாட்டானும் அன்பினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ஸா.)—அறியார் - அறியாதவர் (சிலர்), அன்பு-அன் பானது, அறத்திற்கு-தருமத்துக்கு, சார்பு-துணையாவது, என்ப-என்றுசொல்லுவார்; மறத்திற்கும் - பாவத்தை நீக்குதற்கும், அஃதே - அவ்வன்பே, துணை - துணையாவது.

**76.** The ignorant say that love is an ally to virtue only, but it is also a help to get out of vice.

---

எ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

(பரி-ஸா.) எ-து,—என்பில்லாத வுடம்பை வெயில்காய்ந்தாற் போல க்காயும், அன்பில்லாத வுயிரை அறக்கடவுள், எ-று.

என்பில தென்பதனான் உடம்பென்பதூஉம், அன்பில தென்பதனான் உயிரென்பதூஉம் பெற்றாம். வெறுப்பின்றி எங்கும் ஒரு தன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற் கெடு மென்பதாம். அதனைக் காயுமென வெயி லறங்களின்மே லேற்றினார், அவ ற்றிற்கும் அவ்வியல் புண்மையின். இவ்வாறு "அல்லவை செய்தார்க் கறங் கூற்றம்" எனப் பிறருங் கூறினார்.

(தெ-ப-ஸா.)—என்பு இலதனை-எலும்பில்லாத வுடம்பை, வெயில்போல-வெயில் (சுடுதல்) போல, அன்பு இலதனை - அன் பில்லாத வுயிரை, அறம் - அறக்கடவுள், காயும் - சுடுவான்.

**77.** Virtue will burn up the soul which is without love, even as the sun burns up the creature which is without bone, *i. e.* worms.

---

அ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

(பரி-ஸா.) எ-து,—மனத்தின்கண் அன்பில்லாத வுயிர் இல்லறத்தோடு கூடிவாழ்தல் வன்பாலின்கண் வற்றலாகியமரந் தளிர்த்தாற்போலும், எ-று.

கூடா தென்பதாம். வன்பால்-வன்னிலம், வற்றலென்பது பால்விளங் கா அஃறிணைப் படர்க்கைப்பெயர்.

(தெ-ப-ஸா.)—அன்பு அகத்து இல்லா உயிர் - மனதி லன் பில்லாத வுயிரானது, வாழ்க்கை - (இல்லறத்தோடுகூடி) வாழ்த லானது, வல் பாற் கண் - கடினமாகிய நிலத்தில், வற்றல்மரம்-உலர்ந்த மரமானது, தளிர்த்து அற்று - தளிர்த்தாற்போலும்.

**78.** The domestic state of that man whose mind is without love, is like the flourishing of a withered tree upon the parched desert.

---

௯. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—யாக்கை யகத்தின்கணின்று இல்லறத்திற் குறுப் பாகிய அன்புடையர் அல்லாதார்க்கு ஏனைப் புறத்தின்கணின்று உறுப்பாவன எல்லாம் அவ்வறஞ் செய்தற்கண் என்னவுதவியைச் செய்யும், எ-று.

புறத்துறுப்பாவன—இடனும் பொருளும் ஏவல்செய்வாரு முதலாயின. துணையோடு கூடாதவழி அவற்றாற் பயனின்மையின், எவன் செய்யுமென்றார். உறுப்புப்போறலின் உறுப்பெனப் பட்டன. யாக்கையிற் கண் முதலிய வுறுப்புக்களெல்லாம் என்னபயனைச்செய்யும் மனத்தின்கண் உறுப்பாகிய அன்பில்லாதார்க்கென்று உரைப்பாருமுளர். அதற்கில்லறத்தோடியாதும் இயையாமை அறிக.

(தெ-ப-ரை.)—யாக்கை அகத்து - உடம்பி னகத்திலேநின்று, உறுப்பு - (இல்லறத்துக்கு) அங்கமாகிய, அன்பு இலவர்க்கு- அன்பில்லாதவர்க்கு, புறத்து - மற்றைப் புறத்திலேநின்று, உறுப்பு எல்லாம் - அங்கமாவனவெல்லாம், எவன் - (அவ்வறஞ்செய்தலிலே) என்னவுதவியை, செய்யும்—.

79. Of what avail are all the external members (of the body) to those who are destitute of love, the internal member.

௮0. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(பரி-ரை.) எ-து,—அன்புமுதலாக அதன்வழிநின்ற வுடம்பே உயிர்நின்ற வுடம்பாவது; அவ்வன்பில்லாதார்க் குளவான வுடம்புகள் என்பினைத் தோலாற் போர்த்தனவாம், உயிர்நின்றனவாகா, எ-று.

இல்லறம் பயவாமையின் அன்னவாயின. இவை நான்குபாட்டானும் அன்பில் வழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அன்பின்வழியது - அன்புமுதலாக அதன் வழிநின்ற உடம்பே, உயிர்நிலை-உயிர்நின்ற வுடம்பாகும்; அஃது இலார்க்கு - அவ்வன்பில்லாதார்க்குள்ள, உடம்பு - உடம்புகளானவை, என்பு - எலும்பை, தோல்-தோலினால், போர்த்த-போர்க்கப்பட்டனவாம் [உயிர்நின்றவுடம்பாகா.]

80. That body alone which is inspired with love, contains a living soul: if void of it, (the body) is bone overlaid with skin.

## ௯-ம். அதி—விருந்தோம்பல்.

அஃதாவது இருவகை விருந்தினரையும் புறந்தருதல். தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டுங் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன ஆகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கீத லன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறாகாத அன்புடை யிருவர்கூடி அல்லது செய்யப்படாமையின், இஃதன்புடைமையின் பின்வைக்கப்பட்டது.

௧. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(பரி-ரை.) எ-து,—மனைவியோடும் வனத்திற்செல்லாது இல்லின்கணிருந்து பொருள்களைப் போற்றிவாழுஞ் செய்கையெல்லாம் விருந்தினரைப்பேணி அவர்க் குபகாரஞ் செய்தற்பொருட்டு, எ-று.

எனவே, வேளாண்மைசெய்யாவழி இல்லின்கணிருத்தலும் பொருள் செய்தலுங் காரணமாக வருந் துன்பச் செய்கைகட்கெல்லாம் பயனில்லை என்பதாம்.

(தெ-ப-ரை.)—(மனைவியோடுங் காட்டினிடத்தே செல்லாமல்) இல் - இல்லினிடத்தே, இருந்து—, ஓம்பி-(பொருள்களைக்) காப்பாற்றி, வாழ்வது எல்லாம்-வாழுஞ் செய்கையெல்லாம், விருந்து - விருந்தினரை, ஓம்பி - உபசரித்து, வேளாண்மை – உபகாரத்தை, செய்தல் பொருட்டு - (அவருக்குச்) செய்தற் பொருட்டாம்.

**81**. The whole design of living in the domestic state and laying up (property) is (to be able) to exercise the benevolence of hospitality.

---

உ. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(பரி-ரை.) எ-து,—உண்ணப்படும் பொருள் அமிர்தமே யெனினும் தன்னைநோக்கி வந்த விருந்து தன் இல்லின் புறத்ததாகத் தானே உண்டல் விரும்புதன் முறைமை உடைத்தன்று, எ-று.

சாவாமருந்து-சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந்தின்றியே ஒருகாற் றானுண்டலைச் சாவா மருந்தென்பார் உளராயினும் அதனை ஒழிக வென் றுரைப்பினும் அமையும். இவையிரண்டுபாட்டானும் விருந்தோம்பலின் சிறப்புக்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—(உண்ணப்படும்பொருள்) சாவாமருந்து எனினும் - அமிர்தமாயினும், விருந்து - (தன்னை நோக்கிவந்த) விருந்தினர், புறத்தது ஆக – (தன்வீட்டின்) புறத்திருக்க, தான் உண்டல்-தானே யுண்ணுதல், வேண்டல் பாற்று அன்று-விரும்பப்படு முறைமையை யுடையதன்றாம்.

**82**. It is not fit that one should wish his guests to be outside (his house) even though he were eating the food of immortality.

---

ங. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(பரி-ரை.) எ-து,—தன்னைநோக்கி வந்தவிருந்தை நாடோறும் புறந்தருவானது இல்வாழ்க்கை நல்குரவான் வருந்திக் கெடுதலில்லை, எ-று.

நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற்பொருள் தொலையாது மேன்மேற் கிளைக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—வரு விருந்து - (தன்னைநோக்கி) வந்தவிருந்தை, வைகலும் - நாள்தோறும், ஓம்புவான் – உபசரிப்பவனது,

வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, பருவந்து - (வறுமையால்) வருந்தி, பாழ் படுதல் இன்று - கெடுதலை யடைவதில்லை.

**83**. The domestic life of the man that daily entertains the guests who come to him, shall not be laid waste by poverty.

---

அ. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

(பரி - னா.) எ-து,—திருமகள் மனமகிழ்ந்து வாழாநிற்கும், முகம் இனியனாய்த் தக்கவிருந்தினரைப் பேணுவானது இல்லின்கண், எ-று.

மனமகிழ்தற்குக் காரணம் தன்செல்வம் நல்வழிப்படுதல். தகுதி ஞானவொழுக்கங்களான் உயர்தல். பொருளிளைத்தற்குக் காரணங் கூறியவாறு.

(தெ-ப-னா.)—முகன் அமர்ந்து - முகம் இனியனாய், நல்விருந்து-தருந்த விருந்தினரை, ஓம்புவான்-காப்பவனது, இல்-வீட்டில், செய்யாள் - திருமகள், அகன் அமர்ந்து - மனமகிழ்ந்து, உறையும் – வாழ்ந்துகொண்டிருப்பாள்.

**84**. Lakshmi with joyous mind shall dwell in the house of that man who with cheerful countenance entertains the good as guests.

---

ரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

(பரி-னா.) எ-து,—முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்கு வித்திடுதலும் வேண்டுமோ, வேண்டா, எ-று.

கொல்லென்பது அசைநிலை. தானே விளையுமென்பது குறிப்பெச்சம். இவைமூன்றுபாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கண் எய்தும் பயன் கூறப்பட்டது.

(தெ-ப-னா.)—விருந்தோம்பி - (முன்னே) விருந்தினரையுண்பித்து, மிச்சில் - மிகுதியை, மிசைவான் - (பின்) உண்பவனது, புலம் – விளைநிலத்துக்கு, வித்தும் - விதையும், இடல்-இடுதலும், வேண்டுங்கொல் - வேண்டுமோ.

**85**. Is it necessary to sow the field of the man who having feasted his guests eats what may remain?

---

சு. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு.

(பரி-னா.) எ-து,—தன்கட்சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக்கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ணஇருப்பான் மறுபிறப்பிற் றேவனாய் வானினுள்ளார்க்கு நல்விருந்தாம், எ-று.

வருவிருந்தென்பது இடவழுவமைதி. நல்விருந்து-எய்தாவிருந்து. இதனான் மறுமைக்கணெய்தும்பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செல்விருந்து - (தன்னிடத்தே) வந்தவிருந்தை, ஓம்பி - உபசரித்து, வருவிருந்து - (பின்) வரும்விருந்தை, பார்த்து - எதிர்நோக்கி, இருப்பான் - (தான் அதனோடுண்ண) இருப்பவன், (மறுபிறப்பிலே தேவனாய்), வானத்தவர்க்கு-வானிலுள்ளவருக்கு, நல்விருந்து - நல்லவிருந்தாவான்.

86. He who, having entertained the guests that have come, looks out for others who may yet come, will be a welcome guest to the inhabitants of heaven.

---

எ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

(பரி-ரை.) எ-து,—விருந்தோம்பலாகிய வேள்வியின்பயன் இன்னவளவிற்றென்பதோ ரளவுடைத்தன்று; அதற்கு அவ்விருந்தின் றகுதியளவே அளவு, எ-று.

* ஐம்பெருவேள்வியி னொன்றாகலின் வேள்வியென்றும், பொருளளவு "தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" ஆகலின், இனைத்துணைத்தென்ப தொன்றில்லையென்றுங் கூறினார். இதனான் இருமையும் பயத்தற்குக் காரணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வேள்விப்பயன் - (விருந்தினரையுபசரித்தலாகிய) வேள்வியினதுபயன், இனைத்துணைத்து என்பது-இன்ன அளவினையுடையதென்பதாகிய, ஒன்று இல்லை-ஓரளவினையுடையதன்று; விருந்தின்-அவ்விருந்தினது, துணை - (தகுதி) அளவே, துணை - (அதற்கு) அளவாம்.

87. The advantages of benevolence cannot be measured: the measure (of the virtue) of the guests (entertained) is the only measure.

---

அ. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

(பரி-ரை.) எ-து,—நிலையாப்பொருளை வருந்திக்காத்துப் பின் அதனையிழந்து இதுபொழுது யாம் பற்றுக்கோடில மாயினேம் என்றிரங்குவர் அப்பொருளான் விருந்தினரையோம்பி வேள்விப்பயனையெய்தும் பொறியிலாதார், எ-று.

"ஈட்டிய வொண்பொருளைக், காத்தலு மாங்கே கடுந்துன்பம்" ஆகலின், பரிந்தோம்பியென்றார். வேள்வி - ஆகுபெயர்.

(தெ-ப-ரை.)—விருந்து - விருந்தினரை, ஓம்பி - (நிலையாப் பொருளைக்கொண்டு) உபசரித்து, வேள்வி - அவ்வேள்விப்பயனை, தலைப்படாதார் – அடையும் அறிவிலாதவர், பரிந்து ஓம்பி – (அப்பொருளை) வருந்திக்காத்து, (பின்பு அதனையிழந்து) பற்று அற்

* ஐம்பெருவேள்வி—பிரமயாகம்=வேதமோதுதல; தேவயாகம்=ஓமம்வளத்தல்; மானுடயாகம்=விருந்தோம்பல்; பிதிர்யாகம்=நீர்க்கடனாற்றல், பூதயாகம்=பலியீதல்.

றேம் - (இப்போது) பற்றுக்கோ டில்லாதவராயினேம், என்பர்- என்றிரங்குவார்.

**88.** Those who have taken no part in the benevolence of hospitality shall (at length lament) saying, "we have laboured and laid up wealth and are now without support.

கூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடைமை மடவார்க ணுண்டு.

(பரி-ரை.) எ-து,—உடைமைக்காலத்து இன்மையாவது விருந்தோம்பலை இகழும் பேதைமை; அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது பேதையார் மாட்டேயுளதாம், எ-று.

உடைமை - பொருளுடையனாந்தன்மை. பொருளாற்கொள்ளும் பயனை இழப்பித்து உடைமையை இன்மையாக்கலின், மடமையை இன்மையாக உபசரித்தார். பேதைமையான் விருந்தோம்பலை யிகழின், பொருள் நின்றவழியும் அதனாற் பயனில்லையென்பதாம். இவையிரண்டுபாட்டானும் விருந்தோம்பாவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உடைமையுள்-(பொருள்) உடையராயிருக்குங்காலத்து, இன்மை - வறுமையாவது, விருந்தோம்பல் - விருந்தினரை யுபசரித்தலை, ஓம்பா - இகழும், மடமை - பேதைமையாகும்; (அது அறிந்தோரிடத் திராது) மடவார்கண் - அறிவிலாதவரிடத்து, உண்டு - உளது.

**89.** That stupidity which exercises no hospitality is poverty in the midst of wealth. It is the property of the stupid.

௯௰. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(பரி-ரை.) எ-து,—அனிச்சப்பூ மோந்துழியன்றிக் குழையாது; விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர், எ-று.

அனிச்சம் - ஆகுபெயர். சேய்மைக்கட்கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள், முதலாய இன்முகம் இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீண்டியவழி அல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியரென்பதாம். இதனான் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அனிச்சம் - அனிச்சப்பூவானது, மோப்ப- மோந்தவிடத்தே, குழையும் - வாடும்; விருந்து - விருந்ினரானவர், முகம் திரிந்து - முகம் வேறுபட்டு, நோக்க - பார்க்க, குழையும் - வாடுவர்.

**90.** As the Anicham flower fades in smelling, so fades the guest when the face is turned away.

## க0-ம். அதி—இனியவைகூறல்.

அஃதாவது மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல். இதுவும், விருந்தோம்புவார்க்கு இன்றியமையா தாகலின், விருந்தோம்பலின்பின் வைக்கப்பட்டது.

க. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(பரி-ரை.) எ-து,—இன்சொலாவன அன்போடு கலந்து வஞ்சனையிலவா யிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார்வாயிற் சொற்கள், எ-று.

ஆல்-அசைநிலை. அன்போடுகலத்தல் - அன்புடைமையைவெளிப்படுத்தல். படிறின்மை-வாய்மை. மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கெல்லாஞ் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், செம்பொருளெனப்பட்டது. இலவாஞ் சொல்லெனா இயையும். வாயென வேண்டாது கூறினர், தீயசொற்பயிலா என்ப தறிவித்தற்கு. இதனுன் இன்சொற்கிலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.) இன்சொல் - இனிய சொற்களாவன, ஈரம் அளைஇ - அன்போடு கலந்து, படிறு இலஆம் - வஞ்சனை யில்லனவாயிருக்கின்ற, செம்பொருள் - அறத்தினை, கண்டார் - அறிந்தவரது, வாய்ச்சொல் - வாய்ச்சொற்களாகும்.

**91.** Sweet words are those which, imbued with love and free from deceit, flow from the mouth of the virtuous.

---

உ. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய தொருபொருளைக் கொடுத்தலினும் நன்று, கண்டபொழுதே முகம்இனியனாய் அதனோடு இனியசொல்லையு முடையனாகப் பெறின், எ-று.

இன்முகத்தோடுகூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத்த தன்றித் தன்வயத்ததாயினும், அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாக இன்மையின், அதனினும் அரிதென்னுங்கருத்தான், இன்சொலனாகப் பெறி னென்றார்.

(தெ-ப-ரை.)—முகன் அமர்ந்து - (கண்டபொழுதே) முகமலர்ந்து, இன்சொலன் ஆக-(அதனோடு) இன்சொல்லையும் உடையவனாக, பெறின் - பெற்றால், (அது), அகன் அமர்ந்து - மனமகிழ்ந்து, ஈதலின் - (ஒருவனுக்கு வேண்டியதொருபொருளைக்) கொடுத்தலினும், நன்றே - நல்லதேயாம்.

**92.** Sweet speech with a cheerful countenance is better than a gift made with a joyous mind.

---

ங. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தா
னின்சொ லினதே யறம்.

(பரி-ரை.) எ-து,—கண்டபொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கி, பின் நண்ணியவழி மனத்துடனாகிய இனியசொற்களைச் சொல்லுதலின்கண்ணதே அறம், எ-று.

நோக்கியென்னும் வினையெச்சம் இன்சொலென அடையடுத்து நின்ற முதனிலைத் தொழிற்பெயர் கொண்டது. ஈதலின்கண்ணதுஅன் றென்ற வாறு. இவையிரண்டுபாட்டானும் இன்முகத்தோடு கூடியஇன்சொல் முன்னரோ பிணித்துக்கோடலின், விருந்தோம்புதற்கட் சிறந்ததென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறம்-தருமமானது, முகத்தான் அமர்ந்து-(கண்டபோதே) முகத்தால் விரும்பி, இனிது நோக்கி-இனிதாகப்பார்த்து, (பின்சேர்ந்தவிடத்து) அகத்தான் ஆம் - மனத்துடனாகிய, இன்சொலினதே - இனிய சொற்களைச் சொல்லுதலினிடத்ததே.

93. Sweet speech, flowing from the heart, (uttered) with a cheerful countenance and sweet look, is true virtue.

---

௪. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லை யுடையார்க்குத் துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லையாம், எ-று.

நாமுதலியபொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமை உடைமையின், துவ்வாமையென்றார். யார்மாட்டும் இன்புறூஉ மின்சொலவர்க்குப் பகையும் நொதுமலு மின்றி உள்ளது நண்பேயாம், ஆகவே, அவர் எல்லாச்செல்வமும் எய்துவரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—யார்மாட்டும்-எல்லாரிடத்தும், இன்பு உறும் - இன்பத்தை மிகுவிக்கும், இன்சொலவர்க்கு - இனிய சொற்களை யுடையவர்க்கு, துன்பு உறும் - துன்பத்தை மிகுவிக்கும், துவ்வாமை - வறுமையானது, இல்லாகும் - இல்லை.

94. Sorrow-increasing poverty shall not come upon those who use towards all, pleasure-increasing sweetness of speech.

---

௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கணியாவது தன்னாற் றொழப்படுவார்கண் தாழ்ச்சியுடையனாய் எல்லார்கண்ணும் இனியசொல்லையும் உடையனாதல்; இவையிரண்டுமன்றி மெய்க்கணியும் பிறவணிகள் அணியாகா, எ-று.

இன்சொலனாதற் கினமாகலின், பணிவுடைமையும் உடன்கூறினார். மற்று-அசைநிலை. வேற்றுமையுடைமையாற் பிறவெனவும், இவைபோலப் பேரழகுசெய்யாமையின் அல்லவெனவுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, அணி - ஆபரணமாவது, பணிவு உடையன் - (பெரியோரிடத்தே) வணக்கமுடையவனாகி, இன்சொலன் ஆதல்-(எல்லாரிடத்தும்) இனிய சொல்லை

யுடையவனுயிருக்கையாம்; பிற – (இவ்விரண்டு மல்லாமல் உடம்பில்அணியும்) மற்றை ஆபரணங்கள், அல்ல – ஆபரணங்களாகா.

**95.** Humility and sweetness of speech are the ornaments of a man; all others are not (ornaments).

---

௬. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(பரி-ரை.) எ-து,—பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ்சொற்களை மனத்தான் ஆராய்ந்து இனியவாக ஒருவன் சொல்லுமாயின், அவனுக்குப் பாவங்கள் தேய அறம் வளரும், எ-று.

தேய்தல் - தன்பகையாகிய அறம் வளர்தலின் தனக்குநிலையின்றி மெலிதல். "தவத்தின்முன் னில்லாதாம் பாவம்" என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலுங் கடியவாகச்சொல்லின், அறனாகாதென்பதாம். இதனான் மறுமைப்பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நல்லவை - (பொருளினாலே பிறர்க்கு) நன்மையைத் தருஞ்சொற்களை, நாடி - (மனத்தால்) ஆராய்ந்து, இனிய - இனிமை யுள்ளனவாக, சொலின்—(ஒருவன்) சொல்லுவானாயின், (அவனுக்கு) அல்லவை - பாவங்கள், தேய - குறைய, அறம் – தருமமானது, பெருகும் – வளரும்.

**96.** If a man, while seeking to speak usefully, speaks also sweetly, his sins will diminish and his virtue increase.

---

௭. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையும் உண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும், பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப்பண்பி னீங்காத சொல், எ-று.

நீதி-உலகத்தோடு பொருந்துதல். பண்பென்பது ஈண்டதிகாரத்தான் இனிமை மேனின்றது. தலைப்பிரிதல் ஒருசொன்னீர்மைத்து.

(தெ-ப-ரை.)—பயன் ஈன்று - (பொருளினாலே பிறருக்கு) நன்மையைக்கொடுத்து, பண்பின் – இனிமைக் குணத்தினின்றும், தலைப்பிரியா – நீங்காத, சொல் - சொற்களானவை, (ஒருவனுக்கு), நயன் ஈன்று – (இம்மைக்கு) நீதியையும் உண்டாக்கி, நன்றிபயக்கும் - (மறுமைக்கு) அறத்தையும் தரும்.

**97.** That speech which, while imparting benefits ceases not to please, will yield righteousness (for this world) and merit (for the next world).

---

௮. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(பரி-ரை.) எ-து,—பொருளாற் பிறர்க்கு நோய்செய்யாத இனிய சொல், ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும், எ-று.

மறுமையின்பம் பெரிதாகலின், முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவது உலகம் தன்வயத்ததாகலான் நல்லனஎய்தி இன்புறுதல். இவை யிரண்டுபாட்டானும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது.

(தெ-ப-ரை)—சிறுமையுள் நீங்கிய - (பொருளினாலே பிறர்க்குத்) துன்பஞ்செய்வதில் நீங்கிய, இன்சொல் - இனியசொற்களானவை, (ஒருவனுக்கு), மறுமையும் இம்மையும் - வருபிறப்பிலும் இப்பிறப்பிலும், இன்பம் - இன்பத்தை, தரும் - கொடுக்கும்.

**98.** **Sweet speech, free from harm to others, will give pleasure both in this world and in the next.**

---

௯. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(பரி-ரை.) எ-து,—பிறர் கூறிய இன்சொல் தனக்கின்பம் பயத்தலை அநுபவித் தறிகின்றவன், அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்வது என்னபயன் கருதி, எ-று.

இனிதென்றது வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொற் பிறர்க்கும் இன்னாதாகலின், அது கூறலாகாதென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—இன்சொல் - (பிறருடைய) இனியசொற்களானவை, இனிது ஈன்றல் - (தனக்கு) இன்பந்தருதலை, காண்பான் - அநுபவித்தறிகின்றவன், (அதுநிற்க), வல்சொல்-கடுஞ்சொற்களை, வழங்குவது - (பிறரிடத்தே) சொல்லுவது, எவன்கொலோ-யாது பயன்குறித்தோ.

**99.** **Why does he use harsh words, who sees the pleasure which sweet speech yields?**

---

௧0. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(பரி-ரை.) எ-து,—அறம் பயக்கும் இனிய சொற்களும் தனக்குளவாயிருக்க அவற்றைக் கூறாது, பாவம் பயக்கும் இன்னாதசொற்களை ஒருவன் கூறுதல், இனிய கனிகளும் தன்கைக்கண் உளவாயிருக்க அவற்றைநுகராது இன்னாதகாய்களை நுகர்ந்ததனோடொக்கும், எ-று.

கூறலென்பதனாற் சொற்களென்பது பெற்றும். பொருளை விசேடித்து நின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ்சென்றன. இனிய கனிகளென்றது சுவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை. இன்னாத காய்களென்றது காஞ்சிரங்காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற்சொல்லுதல் முடிவிற்றனக்கே யின்னாதென்பதாம், இவையிரண்டுபாட்டானும் இன்னாதகூறலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இனிய - (அறமுண்டாகும்) இன்சொற்களும், உளஆக - (தன்னிடத்தே) உண்டாயிருக்க, (அவற்றைச் சொல்லாமல்), இன்னாத - (பாவமுண்டாகும்) கடுஞ்சொற்களை, கூறல் - (ஒருவன்) சொல்லுதல், கனி - (இனிய) கனிகளும், இருப்ப - (தன்னிடத்தே) உண்டாயிருக்க, (அவற்றைத் தின்னாமல்), காய்-(இனிமையில்லாத) காய்களை, கவர்ந்ததுஅற்று-தின்பதனோடொக்கும்.

**100.** To say disagreeable things when agreeable are at hand, is like eating unripe fruit when there is ripe.

---

## கக-ம். அதி—செய்ந்நன்றியறிதல்.

அஃதாவது தனக்குப் பிறர்செய்த நன்மையை மறவாமை. இனியவைகூறி இல்லறம்வழுவாதார்க்கு உய்தியில் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின், அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு, இஃதினியவை கூறலின்பின் வைக்கப்பட்டது.

க. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

(பரி-ரை.) எ-து,—தனக்கு முன்னொருதவிசெய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்தவுதவிக்கு, மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஒத்தலரிது, எ-று.

கைம்மாறுகளெல்லாம் காரணமுடையஆகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற்றாவாயின. செய்யாமைச் செய்தவுதவியென்று பாடமோதி, மறுத்துதவமாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவியென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—செய்யாமல் - (தனக்குமுன்னொருதவியும்) செய்யாதிருக்க, செய்த - (ஒருவன்பிறனுக்குச்) செய்த, உதவிக்கு—, வையகமும் - மண்ணுலகத்தையும், வானகமும் - விண்ணுலகத்தையும், (ஈடாகக்கொடுத்தாலும்), ஆற்றல்அரிது-ஒத்தல் அரிது.

**101.** (The gift of) heaven and earth is not an equivalent for a benefit which is conferred where none had been received.

---

உ. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கிறுதிவந்த எல்லைக்கண் ஒருவன் செய்த உபகாரம், தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினு மிகப்பெரிது, எ-று.

அக்காலநோக்குவதல்லது பொருணோக்க லாகாதென்பதாம். காலத்தினாலென்பது வேற்றுமை மயக்கம்.

(தெ-ப-ஸா.)—காலத்தினால் - (ஒருவனுக்கு) ஆபத்துவந்த காலத்தில், செய்த - (ஒருவன்) செய்த, நன்றி-உபகாரம், சிறிது எனினும்-(தன்னைநோக்கச்) சிறிதாயிருந்ததாயினும், (அக்கால த்தைநோக்க) ஞாலத்தின் - நில உலகத்தினும், மாணப்பெரிது-மிகப்பெரிதாம்.

**102.** A favour conferred in the time of need, though it be small (in itself,) is (in value) much larger than the world.

---

ங. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

(பரி-ஸா.) எ-து,—இவர்க் கிதுசெய்தால் இன்னது பயக்குமென்று ஆராய்தல் இலராய்ச் செய்தவுதவியாகிய ஈரமுடைமையை ஆராயின், அத னன்மை கடலினும் பெரிதாம், எ-று.

இவை மூன்றுபாட்டானும் முறையே காரணமின்றிச் செய்ததூஉம் காலத்தினாற் செய்ததூஉம், பயன்றூக்காராய்ச் செய்ததூஉம் அளவிலவா தல் கூறப்பட்டது.

(தெ-ப-ஸா.)—பயன் - பயனை, தூக்கார் - ஆராய்தல் இல ராய், செய்த—,உதவி-உதவியாகிய, நயன்-நயத்தை, தூக்கின்-ஆராயின், நன்மை - (அதன்) நன்மையானது, கடலின் - கடலி னும், பெரிது—.

**103.** If we weigh the excellence of a benefit which is conferred without weighing the return, it is larger than the sea.

---

ச. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

(பரி-ஸா.) எ-து,—தமக்குத் தினையளவிற்றாய உபகாரத்தை ஒருவன் செய்தானாயினும், அதனை அவ்வளவிற்றாகக் கருதாது பனையளவிற்றாகக் கருதுவர் அக்கருத்தின் பயன் தெரிவார், எ-று.

தினை பனையென்பன சிறுமைபெருமைகட்குக் காட்டுவன சில அளவை. அக்கருத்தின்பயனாவது அங்ஙனங் கருதுவார்க்கு வரும் பயன்.

(தெ-ப-ஸா.)—தினைத்துணைநன்றி - (தமக்குத்) தினையளவ தாகிய உபகாரத்தை, செயினும் - (ஒருவன்) செய்தானாயினும், (அதனை அவ்வளவதாகநினையாமல்), பனைத்துணைஆக - பனையள வதாக, கொள்வர் - நினைப்பார், பயன் - (அந்நினைப்பின்) பயனை, தெரிவார் - அறிபவர்.

**104.** Though the benefit conferred be as small as a millet seed, those who know its advantage will consider it as large as a palmyra fruit.

---

இ' உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(பரி - ரை.) எ - து,—கைம்மாறான உதவி காரணத்தானும் பொரு ளானுங் காலத்தானும் ஆகிய மூவகையானும் முன்செய்த உதவி யளவிற் றன்று; அதனைச் செய்வித்துக்கொண்டவர்தம் அமைதி யளவிற்று, எ-று.

சால்பு எவ்வளவு பெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதாமென் பார், சால்பின் வரைத்தென்றார். இவை யிரண்டுபாட்டானும் மூன்று மல் லாத உதவிமாத்திரமும் அறிவார்க்குச் செய்தவழிப் பெரிதாமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உதவி - எதிர்செய்யும் உதவியானது, உத விவரைத்து அன்று - (முன்செய்த) உதவியளவினதன்று, உத வி செயப்பட்டார்-அவ்வுதவி செய்யப்பெற்றுக்கொண்டவரது, சால்பின்வரைத்து - தகுதியளவினதாம்.

**105.** The benefit itself is not the measure of the benefit; the worth of those who have received it is its measure.

---

சு. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

(பரி-ரை.) எ-து,—துன்பக்காலத்துத் தனக்குப் பற்றுக்கோடாயினா ரது நட்பை விடாதொழிக; அறிவொழுக்கங்களிற் குற்றமற்றாரது கேண் மையை மறவாதொழிக, எ-று.

கேண்மை-கேளாந்தன்மை. இம்மைக் குறுதிகூறுவார் மறுமைக் குறு தியும் உடன்கூறினார்.

(தெ-ப-ரை.)—துன்பத்துள் - துன்பம்வந்த காலத்தில், துப் புஆயார் - (தனக்கு) உதவியானவரது, நட்பு - சிநேகத்தை, துற வற்க - விடாதிருக்கக்கடவன்; மாசு அற்றார் - (அறிவொழுக்கங் களில்) குற்றமற்றவரது, கேண்மை - உறவாந்தன்மையை, மறவ ற்க - மறவாதிருக்கக்கடவன்.

**106.** Forsake not the friendship of those who have been your staff in adversity. Forget not the benevolence of the blameless.

---

எ. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(பரி-ரை.) எ-து,—தங்கண் எய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை, எழுமையினையுடைய தம்மெழுவகைப்பிறப்பினும் நினைப்பர் நல் லோர், எ-று.

எழுமையென்றது வினைப்பயன்தொடரும் ஏழுபிறப்பினை; அது வினை யாபதியுட்கண்டது. எழுவகைப்பிறப்பு மேலே உரைத்தாம். விரைவுதோ ன்றத் துடைத்தவரென்றார். நினைத்தலாவது துன்பந்துடைத்தலான் அவர் மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறுந் தொடர்ந்து அன்புடையராதல். இவை யிரண்டுபாட்டானும் நன்றி செய்தாரது நட்பு விடலாகாதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தங்கண்-தம்மிடத்து (உண்டாகிய), விழுமம்-துன்பத்தை, துடைத்தவர்-நீக்கினவரது, நட்பு-சிநேகத்தை, எழுமை - (வினைப்பயன்தொடரும்) எழுமையினையுடைய, எழுபிறப்பும் - (தம்) எழுவகைப்பிறப்பினும், உள்ளுவர் - (நல்லோர்) நினைப்பார்.

**107.** (The wise) will remember throughout their seven-fold births the love of those who have wiped away their affliction.

---

அ. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் முன்செய்த நன்மையை மறப்பது ஒருவற்கு அறனன்று; அவன் செய்த தீமையைச் செய்தபொழுதே மறப்பது அறன், எ-று.

இரண்டும் ஒருவனாற்செய்யப்பட்ட வழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு.

(தெ-ப-ரை.)—நன்றி - (ஒருவன்முன்செய்த) நன்மையை, மறப்பது - மறந்துவிடுதல், நன்றுஅன்று - (ஒருவனுக்கு) அறனல்ல; நன்றுஅல்லது - (அவன்செய்த) தீமையை, அன்றே-செய்தபொழுதே, மறப்பது-மறந்துவிடுதல், நன்று-அறமாம்.

**108.** It is not good to forget a benefit: it is good to forget an injury in the very moment (in which it is inflicted.)

---

கூ. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

(பரி-ரை.) எ-து, — தமக்கு முன்னொரு நன்மை செய்தவர் பின் கொன்றாலொத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும், அவையெல்லாம் அவர்செய்த நன்மையொன்றனையும் நினைக்க இல்லையாம், எ-று.

தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப்படுதலின், அவ்வொன்றுமே அவற்றையெல்லாங் கெடுக்குமென்பதாம். இதனான் நன்றல்லது அன்றே மறக்குந்திறங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(தமக்கு முன்னொரு நன்மை செய்தவர்) கொன்றுஅன்ன - (பின்) கொன்றாற்போலும், இன்னா-வெறுக்கப்படுமவைகளை, செயினும் - செய்தாராயினும், அவர்செய்த-அவர்கள்செய்த, ஒன்றுநன்று-அந்நன்மையொன்றையும், உள்ள-நினைக்க, கெடும் - (அவையெல்லாம்) இல்லையாம்.

**109.** Though one inflict an injury great as murder, it will perish before the thought of a single benefit (formerly) conferred.

---

கO. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(பரி-ரை.) எ-து,—பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தில் நீங்கும் வாயில் உண்டாம்; ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃதில்லை, எ-று.

பெரிய அறங்களைச் சிதைத்தலாவது—ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த் தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல். இதனாற் செய்ந்நன்றிகோறலின் கொடுமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எ நன்றி-எந்த அறங்களை [பெரியவறங்களை யென்றபடி], கொன்றார்க்கும் - கெடுத்தவர்க்கும், உய்வு-பாவத்தில் நீங்கும்வழி, உண்டாம் - உளதாம்; செய்நன்றி - (ஒருவன்) செய்த வுபகாரத்தை, கொன்றமகற்கு - கெடுத்த மனிதனுக்கு, உய்வு-அப்பாவத்தில்நீங்கும்வழி, இல்லை - இலது.

**110**. He who has killed every virtue may yet escape: there is no escape for him who has killed a benefit.

---

## க௨-ம். அதி—நடுவுநிலைமை.

அஃதாவது பகை நொதுமல் நண்பென்னும் மூன்றுபகுதியினும் அறத்தின்வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை. இது, நன்றிசெய்தார்மாட்டு அந்நன்றியினை நினைத்தவழிச் சிதையும்அன்றே, அவ்விடத்துஞ் சிதையலாகாதென்றற்கு, செய்ந்நன்றியறிதலின்பின் வைக்கப்பட்டது.

க. தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓரறமுமே நன்று, பகை நொதுமல் நண்பென்னும் பகுதிதோறும் தன்முறைமையை விடாதொழுகப்பெறின், எ-று.

தகுதியுடையதனைத் தகுதியென்றார். "ஊரானோர் தேவகுலம்" என்பது போலப் பகுதியானென்புழி ஆனுருபு தோறுமென்பதன் பொருட்டாய் நின்றது. பெறினென்பது அவ்வொழுக்கத் தருமைதோன்ற நின்றது. இதனான் நடுவுநிலைமையது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பகுதியால் - (பகைவர் அயலார் சிநேகர் என்னும்) பிரிவுதோறும், பாற்பட்டு - (தன்) முறைமையை விடாது, ஒழுகப்பெறின் - நடக்கப்பெற்றால், தகுதிஎன ஒன்றே-நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓரறமே, நன்று-நலமுடையது.

**111**. That equity which consists in acting with equal regard to each of (the three) divisions of men [enemies, strangers and friends] is a pre-eminent virtue.

---

உ. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

(பரி-ரை.) எ-து,—நடுவுநிலைமையை உடையவனது செல்வம் பிறர் செல்வம்போல் அழிவின்றி அவன் வழியினுள்ளார்க்கும் வலியாதலை உடைத்து, எ-று.

விகாரத்தாற்றொக்க எச்சவும்மையான், இறக்குந்துணையும் அவன்ற னக்கும் ஏமாப்புடைத்தென்பது பெற்றாம். அறத்தோடு வருதலின், அன்னதாயிற்று. தான் இறந்துழி எஞ்சிநிற்பதாகலின், எச்சமென்றார்.

(தெ-ப-ரை.)—செப்பம் உடையவன் - நடுவுநிலைமையை புடையவனது, ஆக்கம் - செல்வமானது, சிதைவுஇன்றி - (பிறர் செல்வம்போல்) அழிதலின்றி, எச்சத்திற்கும் - (அவன்) சந்ததி யார்க்கும், ஏமாப்பு - உறுதியாதலை, உடைத்து-உடையதாம்.

112. The wealth of the man of rectitude will not perish, but will bring happiness also to his posterity.

---

ந. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

(பரி-ரை.) எ-து,—தீங்கன்றி நன்மையே பயந்ததாயினும், நடுவு நிற்றலை ஒழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே ஒழிய விடுக, எ-று.

நன்மைபயவாமையின், நன்றே தரினு மென்றார். இகத்தலா னென்பது இகந்தெனத் திரிந்துநின்றது. இவையிரண்டுபாட்டானும் முறையே நடுவுநிலைமையான் வந்த செல்வம் நன்மை பயத்தலும், ஏனைச்செல்வம் தீமை பயத்தலுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—நன்றேதரினும் - (தீங்கன்றி) நன்மையேதரி னும், நடுவு இகந்து-நடுவுநிலைமைநீங்கலால், ஆம் - உண்டாகின்ற, ஆக்கத்தை - செல்வத்தை, அன்றே - அப்போதே, ஒழியவிடல்- விடக்கடவன்.

113. Forsake in the very moment (of acquisition) that gain which though it should bring advantage is without equity.

---

ச. தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

(பரி-ரை.) எ-து,—இவர் நடுவுநிலைமையுடையர் இவர் நடுவுநிலைமை இலரென்னும் விசேடம், அவரவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும், எ-று.

தக்கார்க்கு எச்சமுண்டாதலும் தகவிலார்கரு இல்லையாதலும் ஒருதலையாகலின், இருதிறத்தாரையும் அறிதற்கு அவை குறியாயின. இதனால் தக்காரையுந் தகவிலாரையும் அறியுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தக்கார் - (இவர்) நடுவுநிலைமையை யுடையவர், தகவு இலர்-(இவர்) நடுவுநிலைமையையில்லாதவர், என்பது-

என்னும் விசேஷம், அவர்அவர் – அவரவருடைய, எச்சத் தால்-நல்லபுதல்வராது இருப்பினாலும் இல்லாமையாலும், காணப் படும் – அறியப்படும்.

**114.** The worthy and unworthy may be known by the existence or otherwise of good offsprings.

---

௫. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(பரி - ரை.) எ-து,—தீவினையாற்கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தன ; அவ்வாற்றையறிந்து அவை காரணமாக மனத்தினகட் கோடாமையே அறிவான் அமைந்தார்க்கு அழ காவது, எ-று.

அவை காரணமாகக் கோடுதலாவது—அவை இப்பொழுது வருவன வாகக் கருதிக் கேடுவாராமையைக்குறித்தும், பெருக்கம் வருதலைக்குறித் தும் ஒருதலைக்கணிற்றல். அவற்றிற்குக் காரணம் பழவினையே கோடுத லன்று என உண்மையுணர்ந்து நடுவுநிற்றல் சால்பினை அழகுசெய்தலின், சான்றோர்க் கணியென்றார்.

(தெ - ப - ரை.)—கேடும் – (தீவினையினாலே) கெடுதலும், பெருக்கமும்-(நல்வினையினாலே)பெருகுதலும், இல்அல்ல-(யாவ ருக்கும்) இல்லாதவையல்ல [முன்னமே அமைந்து கிடந்தன வென்றபடி]; (அவ்வழியை அறிந்து) நெஞ்சத்து – மனதிலே, கோடாமை - (அவைகாரணமாகச்) சாய்தலில்லாமையே, சான் றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோர்க்கு, அணி–அழகாம்.

**115.** Loss and gain come not without cause : it is the ornament of the wise to preserve evenness of mind (under both).

---

௬. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்.

(பரி - ரை.) எ - து,—ஒருவன் தன்னெஞ்சம் நடுவுநிற்றலை ஒழிந்து நடுவல்லவற்றைச் செய்ய நினைக்குமாயின், அந்நினைவை யான் கெடக்கட வேனென்றுணரும் உற்பாதமாக அறிக, எ-று.

நினைத்தலும் செய்தலோடொக்குமாகலின், செயினென்றார்.

(தெ-ப-ரை.)—தன்நெஞ்சம்-(ஒருவன்)தனதுமனம்,நடுவு- நடுவுநிலைமையிலிருந்து, ஒரீஇ-நீங்கி, அல்ல-பக்ஷபாதங்களை, செ யின்-செய்ய நினைக்குமாயின், (அந்நினைவை) யான்-நான், கெடு வல்-கெடக்கடவேன், என்பது-என்றுணருமுற்பாதமாக, அறிக- அறியக்கடவன்.

**116.** Let him whose mind departing from equity commits sin well consider thus within himself," I shall perish."

---

எ. கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(பரி-ரை.) எ-து,—நடுவாக நின்று அறத்தின்கண்ணே தங்கினவனது வறுமையை, வறுமையென்று கருதார் உயர்ந்தோர், எ-று.

கெடுவென்பது—முதனிலைத்தொழிற்பெயர். செல்வமென்று கொள்ளுவரென்பது குறிப்பெச்சம். இவை மூன்றுபாட்டானும் முறையே கேடும் பெருக்கமுங் கோடுதலான் வாரா என்பதூஉம், கோடுதல் கேட்டிற் கேதுவாம் என்பதூஉம், கோடாதவன்தாழ்வு கேடன்றென்பதூஉம், கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—உலகம் - உயர்ந்தோர், நடுஆக - நடுவாக (நின்று), நன்றிக்கண்-அறத்தின்கண்ணே, தங்கியான் - தங்கினவனது, தாழ்வு-வறுமையை, கெடுஆக - வறுமையாக, வையாது-வையார் [நினையாரென்றபடி.]

**117.** The great will not regard as poverty the low estate of that man who dwells in the virtue of equity.

---

அ. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(பரி-ரை.) எ-து,—முன்னே தான் சமனாக நின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல, இலக்கணங்களான் அமைந்து ஒருபக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம், எ-று.

உவமைஅடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக்கண்ணும், கூட்டிச் சான்றோர் சீர்தூக்கலாவது தடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறுணர்தலாகவும், ஒருபாற்கோடாமையாவது அவ்வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பென்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக்கூறுதலாகவும், உரைக்க. இலக்கணங்களான் அமைதல் இருவழியும் ஏற்பனகொள்க.

(தெ-ப-ரை.)—சமன்செய்து-(முன்னேதன்னைச்) சமனாகச் செய்து, சீர்தூக்கும் - (பின்னே தன்னிடத்து வைக்கப்பட்ட பாரத்தை) அளவுசெய்வதாகிய, கோல்போல்-துலாக்கோல்போல, அமைந்து-(இலக்கணங்களாலே) நிறைந்து, ஒருபால்-ஒருபக்கத்திலே, கோடாமை-சாயாமையானது, சான்றோர்க்கு-(அறிவால்) நிறைந்தோருக்கு, அணி-அழகாம்.

**118.** To incline to neither side, but to rest impartial as the even fixed scale is the ornament of the wise.

---

கூ. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

(பரி-ரை.) எ-து,—நடுவுநிலைமையாவது சொல்லின்கட் கோடுதலில்லாததாம், அஃதன்னதாவது மனத்தின்கட் கோட்டமின்மையைத் திண்ணிதாகப் பெறின், எ-று.

சொல் - ஊழான் அறுத்துச் சொல்லுஞ்சொல். காரணம்பற்றி ஒருபாற்கோடாத மனத்தோடு கூடுமாயின், அறங்கிடந்தவாறு சொல்லுதல் நடுவுநிலைமையாம் எனவே, அதனோடு கூடாதாயின் அவ்வாறுசொல்லுதல் நடுவுநிலைமை அன்றென்பது பெறப்பட்டது.

(தெ - ப - ரை.)—செப்பம் - நடுவுநிலைமையாவது, சொல் - சொல்லி னிடத்தே, கோட்டம் இல்லது - கோணுத லில்லாததாகும், (அது அப்படியாவது), உள் - மனத்தினிடத்தே, கோட்டம் இன்மை - கோணுத லில்லாமையை, ஒருதலையா - உறுதியாக, பெறின் - பெற்றால்.

**119.** Freedom from obliquity of speech is rectitude, if there be (corresponding) freedom from bias of mind.

---

௧௦. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

(பரி-ரை.) எ-து,—பிறர்பொருளையும் தம்பொருள்போலப் பேணிச் செய்யின், வாணிகஞ்செய்வார்க்கு நன்றாய வாணிகமாம். எ-று.

பிறவுந் தமபோற் செய்தலாவது - கொள்வது மிகையும் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச் செய்தல். இப்பாட்டுமூன்றனுள், முன்னைய இரண்டும் அவையத்தாரை நோக்கின, ஏனையது வாணிகரைநோக்கிற்று, அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச்சிறந்தமையின்.

(தெ-ப-ரை.)—பிறவும் - பிறர்பொருளையும், தமபோல் - தம் பொருள்போல, பேணி - காத்து, செயின் - செய்வாராயின், (அச் செய்கையானது) வாணிகஞ் செய்வார்க்கு - வர்த்தகஞ் செய் வோர்க்கு, வாணிகம் - நல்ல வாணிகமாம்.

**120.** The true merchandize of merchants is to guard and do by the things of others as they do by their own.

---

## ௧௩-ம். அதி—அடக்கமுடைமை.

---

அஃதாவது மெய், மொழி, மனங்கள் தீநெறிக்கட்செல்லாது அடங்குதலுடையனாதல். அஃது ஏதிலார்குற்றம்போற் றன்குற்றமுங் காணும் நடுவுநிலைமை யுடையாற்காதலின், இது நடுவுநிலைமையின் பின் வைக்கப் பட்டது.

௧. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனை அடக்கமாகியஅறம் பின்தேவருலகத் துய்க்கும்; அடங்காமையாகிய பாவம் தங்குதற்கரிய இருளின்கட்செலுத் தும், எ-று.

இருளென்பது ஓர்நரகவிசேடம். "எல்லாம் பொருளிற் பிறந்துவிடும்" என்றாற்போல உய்த்துவிடுமென்பது ஒருசொல்லாய் நின்றது.

(தெ-ப-ரை.)—அடக்கம் - (ஒருவனை) அடக்கமாகிய அற மானது, அமாருள் - தேவ ருலகத்தில், உய்க்கும் - கொண்டு போய்விடும், அடங்காமை - அடங்காமையாகிய பாவமானது, ஆர் இருள்-பொறுத்தற்கரிய நரகத்தில், உய்த்துவிடும்-செலுத் திவிடும்.

**121.** Self-control will place (a man) among the Gods; the want of it will drive (him) into the thickest darkness (of hell).

---

உ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க்
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை; ஆகலான், அவ்வடக்கத்தை உறுதிப்பொருளாகக்கொண்டு அழியாமற்கா க்க, எ-று.

உயிரென்பது சாதியொருமை. அஃது ஈண்டு மக்களுயிர்மேனின்றது, அறிந்தடங்கிப் பயன்கொள்வது அதுவேயாகலின்.

(தெ-ப-ரை.)—அடக்கத்தை - அடங்கியிருத்தலை, பொருள் ஆக-(உறுதிப்) பொருளாக, காக்க-காக்கக்கடவன், உயிர்க்கு—, அதனின்ஊங்கு - அதனின்மேற்பட்ட, ஆக்கம் - செல்வமானது, இல் - இல்லை, (ஆதலால்.)

**122.** Let self-control be guarded as a treasure; there is no greater source of good for man than that.

---

ந. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—அடங்குதலே நமக்கு அறிவாவதென்று அறிந்து நெறியானே ஒருவன் அடங்கப்பெறின், அவ்வடக்கம் நல்லோரான் அறியப் பட்டு அவனுக்கு விழுப்பத்தைக் கொடுக்கும், எ-று.

இல்வாழ்வானுக்கு அடங்குநெறியாவது மெய்ம்முதன் மூன்றும் தன் வயத்தவாதல்.

(தெ-ப-ரை.)—அறிவு அறிந்து-(அடங்குதலேநமக்கு) அறி வாவதென்று அறிந்து, ஆற்றின்-நல்லவழியால், அடங்கப்பெறின்- (ஒருவன்) அடங்கப்பெறுவானானால், செறிவு-அவ்வடக்கமானது, அறிந்து - (உயர்ந்தோரால்) அறியப்பட்டு, சீர்மை - மேம்பாட் டை, பயக்கும் - (அவனுக்குத்) தரும்.

**123.** Knowing that self-control is knowledge, if a man should control himself, in the prescribed course, such self-control will bring him distinction among the wise.

---

ச. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

(பரி-ை.) எ-து,—இல்வாழ்க்கையாகிய தன்னெறியின்வேறுபடாது நின்று அடங்கினவனது உயர்ச்சி மலையினுயர்ச்சியினும் மிகப்பெரிது,எ-று.

திரியாதடங்குதல் - பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். மலை-ஆகுபெயர்.

(தெ-ப-ை.)—நிலையின் - (இல்வாழ்க்கையாகிய தன்) வழியில், திரியாது - வேறுபடாது (நின்று), அடங்கியான் - அடங்கினவனது, தோற்றம்-உயர்ச்சியானது, மலையினும் - மலைஉயர்ச்சியினும், மாணப்பெரிது-மிகப்பெரிதாம்.

**124.** More lofty than a mountain will be the greatness of that man who without swerving from his domestic state controls himself.

---

ரு. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(பரி-ை.) எ-து,—பெருமிதம் இன்றி அடங்குதல் எல்லார்க்கும் ஒப்பநன்றேயெனினும், அவ்வெல்லாருள்ளும் செல்வமுடையார்க்கே வேறொருசெல்வமாஞ் சிறப்பினை உடைத்து, எ-று.

பெருமிதத்தினைச் செய்யுங்கல்வியுங் குடிப்பிறப்பும் உடையார் அஃதின்றி அவைதம்மானே அடங்கியவழி அவ்வடக்கம் சிறந்து காட்டாதாகலின், செல்வர்க்கே செல்வந் தகைத்தென்றார். செல்வத்தகைத்தென்பது மெலிந்துநின்றது. பொதுவென்பாரையும் உடம்பட்டுச் சிறப்பாதல் கூறியவாறு. இவையைந்துபாட்டானும் பொதுவகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—பணிதல் - (பெருமைப்பாடில்லாது) அடங்குதல், எல்லார்க்கும்-யாவருக்கும், நன்றுஆம்-(பொதுப்பட)நன்றாகும், (ஆயினும்), அவருள்ளும் - அவ்வெல்லாருள்ளும், செல்வர்க்கே-செல்வர்களுக்கே, செல்வம் தகைத்து-வேறொரு செல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்.

**12.5** Humility is good in all; but especially in the rich it is (the excellence of) a higher riches.

---

சு. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

(பரி-ை.) எ-து,—ஆமைபோல ஒருவன் ஒருபிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்கவல்லனாயின், அவ்வன்மை அவனுக்கு எழுபிறப்பின்கண்ணும் அரணாதலை உடைத்து, எ-று.

ஆமை ஐந்துறுப்பினையும் இடர்புகுதாமல அடக்குமாறுபோல, இவனும் ஐம்பொறிகளையும் பாவம்புகுதாமல் அடக்கவேண்டுமென்பார், ஆமை

போலென்றார். ஒருமைக்கட்செய்த வினையின்பயன் எழுமையுந் தொடருமென்பது இதனான்அறிக. இதனான் மெய்யடக்கங்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருமையுள் - (ஒருவன்) ஒருபிறப்பின் கண்ணே, ஆமைபோல் – ஆமைபோல, ஐந்து - ஐம்பொறிகளையும், அடக்கல் ஆற்றின் - அடக்க வல்லவனாகில், (அவ்வல்லமை அவனுக்கு), எழுமையும் - எழுபிறப்பின்கண்ணும், ஏமாப்பு உடைத்து-காவலாதலையுடையது.

**126.** Should one throughout a single birth, like a tortoise keep in his five senses, the fruit of it will prove a safe-guard to him throughout the seven fold births.

---

எ. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(பரி-ரை.) எ-து,—தம்மாற் காக்கப்படுவன எல்லாவற்றையும் காக்க மாட்டாராயினும் நாவொன்றனையுங்காக்க; அதனைக்காவாராயின் சொற்குற்றத்தின்கட்பட்டுத் தாமே துன்புறுவர், எ-று.

யாவென்பது—அஃறிணைப்பன்மைவினாப்பெயர். அஃது ஈண்டு எஞ்சாமை உணரநின்றது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. சொற்குற்றம்-சொல்லின்கட்டோன்றுங்குற்றம். அல்லாப்பர், செம்மாப்பர், என்பனபோலச் சோகாப்பவென்பது ஒருசொல்.

(தெ - ப - ரை.) — யா - (காக்கவேண்டுவன) யாவையும், காவார் ஆயினும்–காக்கமாட்டாராயினும், நா-நாவொன்றையும், காக்க - காக்கக்கடவர்; காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின், சொல்லிழுக்குப்பட்டு – சொற்குற்றத்திலே அகப்பட்டு, சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார்.

**127.** Whatever besides you leave unguarded, guard your tongue; otherwise errors of speech and the consequent misery will ensue.

---

அ. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

(பரி-ரை.) எ-து,—தீயவாகிய சொற்களின்பொருள்களாற் பிறர்க்குவருந்துன்பம் ஒன்றாயினும் ஒருவன்பக்கல் உண்டாவதாயின், அவனுக்குப் பிறவறங்களான் உண்டான நன்மை தீதாய்விடும், எ-று.

தீயசொல்லாவன—தீங்குபயக்கும் பொய், குறளை, கடுஞ்சொல்லென்பன. ஒருவன் நல்லவாகச்சொல்லுஞ் சொற்களின்கண்ணே ஒன்றாயினும் தீச்சொற்படும் பொருளினது பயன் பிறர்க்குண்டாவதாயின் என்றுரைப்பாரும் உளர்.

(தெ-ப-ரை.)—தீச்சொல்-தீயசொற்களது,பொருள்பயன்-பொருள்களாலே (பிறருக்கு வரும்) பயனானது, ஒன்று ஆனும்-ஒன்றாயினும், உண்டாயின் - (ஒருவ னிடத்திலே) உண்டாவ

தாயின், நன்று-(அவனுக்குப்பிறவறங்களாலுண்டாகிய) நன்மை யானது, ஆகாதாகிவிடும்-தீதாய்விடும்.

**128.** If a man's speech be productive of a single evil, all the good by him will be turned into evil.

---

கூ. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனை ஒருவன் தீயினாற் சுட்டபுண் மெய்க்கட் கிடப்பினும் மனத்தின்கண் அப்பொழுதேஆறும்; அவ்வாறன்றி வெவ்வுரை யுடையநாவினாற் சுட்டவடு அதன்கண்ணும் எஞ்ஞான்றும் ஆறாது, எ-று.

ஆறிப்போதலால் தீயினாற்சுட்டதனைப் புண்ணென்றும், ஆறாதுகிடத் தலால் நாவினாற்சுட்டதனை வடுவென்றுங்கூறினார். தீயும் வெவ்வுரையுஞ் சுடுதற்றொழிலான் ஒக்குமாயினும், ஆறாமையாற் றீயினும் வெவ்வுரைகொ டிதென்பது போதரலின், இது குறிப்பான்வந்த வேற்றுமையலங்காரம். இவைமூன்றுபாட்டானும் மொழியடக்கங்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தீயினால் - (ஒருவனை யொருவன்) நெருப் பால், சுட்ட புண்-சுட்டபுண்ணானது, (உடம்பினிடத்தே யிருந் தாலும்), உள்-மனத்தினிடத்தே, ஆறும்-(அப்போதே) ஆறும், (அப்படியல்லாமல்) நாவினால் - (தீயசொற்களையுடைய) நாவி னாலே,சுட்டவடு-சுட்டவடுவானது, ஆறாது - (அம்மனத்தினிடத் தும் எப்போதும்) ஆறாது.

**129.** The wound which has been burnt in by fire may heal, but a wound burnt in by the tongue will never heal.

---

கo. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(பரி-ரை.) எ-து,—மனத்தின்கண் வெகுளிதோன்றாமற் காத்துக் கல் வி உடையனாய் அடங்குதலை வல்லவனது செவ்வியை, அறக்கடவுள் பாரா நிற்கும், அவனையடையும் நெறியின்கட் சென்று, எ-று.

அடங்குதல்—மனம் புறத்துப் பரவாது அறத்தின்கண்ணே நிற்றல். செவ்வி—தன்குறைகூறுதற்கேற்ற மன மொழி முகங்கள் இனியனாங் கா லம். இப்பெற்றியானை அறந் தானே சென்றடையும் என்பதாம். இதனான் மனவடக்கங்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கதம் - கோபத்தை, காத்து - (மனத்திலே தோன்றாமல்) காத்து, கற்று - கல்வியுடையவனாகி, அடங்கல்- அடங்குதலை, ஆற்றுவான் - செய்பவனது, செவ்வி - சமயத்தை, அறம் - அறக்கடவுளானவன், ஆற்றில் – (அவனைச்சேரும்) வழி யில், நுழைந்து-புகுந்து, பார்க்கும்-பாராநிற்பான்.

**130.** Virtue, seeking for an opportunity, will come into the path of that man who, possessed of learning and self control, guards himself against anger.

---

## கச-ம். அதி—ஒழுக்கமுடைமை.

அஃதாவது தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினையுடையராதல். இது, மெய்ம்முதலிய அடங்கினார்க்கல்லது முடியாதாகலின், அடக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

(பரி-ரை.) எ-து,—ஒழுக்கம் எல்லார்க்குஞ் சிறப்பினைத் தருதலான், அவ்வொழுக்கம் உயிரினும் பாதுகாக்கப்படும், எ-று.

உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பந்தருதலின், பொதுப்படக்கூறினார். சுட்டு வருவிக்கப்பட்டது, அதனால் அங்ஙனம் விழுப்பந்தருவதாயது ஒழுக்கமென்பது பெற்றாம். உயிர் எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போல விழுப்பந் தாராமையின், உயிரினுமோம்பப்படுமென்றார்.

(தெ-ப-ரை.)—ஒழுக்கம்-ஆசாரமானது, விழுப்பம் - (எல்லாருக்கும்) சிறப்பை, தரலான் - கொடுத்தலால், ஒழுக்கம்-அவ்வாசாரம், உயிரினும் - உயிரைப்பார்க்கினும் (அதிக மேன்மையாக), ஓம்பப்படும்-பாதுகாக்கப்படும்.

**131.** Propriety of conduct leads to eminence, it should therefore be preserved more carefully than life.

---

உ. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

(பரி-ரை.) எ-து,—ஒழுக்கத்தினை ஒன்றானும் அழிவுபடாமற்பேணி வருந்தியுங்காக்க; அறங்கள்பலவற்றையும் ஆராய்ந்து இவற்றுள் இருமைக்குந்துணையாவது யாதென்று மனத்தை ஒருக்கித் தேர்ந்தாலும் துணையாய் முடிவது அவ்வொழுக்கமேயாகலான், எ-று.

பரிந்துமென்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. இவையிரண்டுபாட்டானும் ஒழுக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தெரிந்து - (பலவறங்களையும்) ஆராய்ந்து, (இவற்றுள் இருமைக்குந் துணையாவது எதுவென்று) ஓம்பி-(மனத்தை) அடக்கி, தேரினும்-அறிந்தாலும், துணை-துணையாய் முடிவது, அஃதே-அவ்வாசாரமே; (ஆதலால்.) ஒழுக்கம்-ஆசாரத்தை, ஓம்பி-(ஒன்றாலும்அழிவுபடாமற்) காத்து, பரிந்து-வருந்தியும், காக்க - காவல்செய்யக்கடவன்.

**132.** Let propriety of conduct be laboriously preserved and guarded; though one know and practise and excel in many virtues, *that* will be an eminent aid.

---

௩. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

(பரி-ரை.) எ-து,—எல்லார்க்கும் தத்தம்வருணத்திற்கேற்ற ஒழுக்கம் உடைமை குலனுடைமையாம்; அவ்வொழுக்கத்திற்றவறுதல் அவ்வருணத்திற்றாழ்ந்த வருணமாய்விடும், எ-று.

பிறந்த வருணத்துள் இழிந்தகுலத்தாராயினும் ஒழுக்கம் உடையராக உயர்குலத்தராவர்ஆகலின் குடிமையாமென்றும், உயர்ந்த வருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத்திற்றவறத் தாழ்ந்த வருணத்தராவர் ஆகலின் இழிந்த பிறப்பாய் விடுமென்றுங் கூறினார். உள்வழிப்படுங் குணத்தினும் இல்வழிப்படுங்குற்றம் பெரிதென்றவாறு. பயன் இடையீடின்றி எய்துதலின், அவ்வினைவுபற்றி அவ்வேதுவாகிய வினைகளே பயனாக வோதப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒழுக்கம் உடைமை – (எல்லார்க்கும் தத்தம் வருணத்துக்கு ஏற்ற) ஆசாரமுடைமையானது, குடிமை - குலமுடைமையாம்; இழுக்கம் – (அவ்வாசாரத்தினின்றும்) தவறுதலானது, இழிந்தபிறப்பாய்விடும்-தாழ்ந்த வருணமாய்விடும்.

**133.** Propriety of conduct is true greatness of birth, and impropriety will sink into a mean birth.

---

௪. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—கற்ற வேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங் கெடாமையின் பின்னும் அஃதோதிக்கொளலாம் ; அந்தணனது உயர்ந்த வருணம் தன்னொழுக்கங் குன்றக் கெடும், எ-று.

மறந்தவழி இழிகுலத்தனும் ஆகலின், மறக்கலாகாதென்னுங் கருத்தான், மறப்பினுமென்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின், இஃது ஏனையவருணங்கட்குங் கொள்ளப்படும்.

(தெ-ப-ரை.)—ஓத்து - (கற்ற) வேதத்தை, மறப்பினும்-மறந்தானாயினும், கொளல்ஆகும் - (வருணங் கெடாமையினாலே பின்னும்) ஓதிக்கொள்ளலாம்; பார்ப்பான் - பிராமணனது, பிறப்பு - உயர்ந்தவருணமானது, ஒழுக்கம்குன்ற - (தன்) ஆசாரங் குறைய, கெடும் – கெட்டுப்போம்.

**134.** A Brahman though he should forget the Vedas may recover it by reading; but if he fail in propriety of conduct even his high birth will be destroyed.

---

௫. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

(பரி - ரை.) எ-து,—அழுக்கா றுடையான்மாட்டு ஆக்கமில்லாதாற் போல, ஒழுக்கமில்லாதவன்மாட்டும் உயர்ச்சி யில்லை, எ-று.

உவமையான் ஒழுக்கமில்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சியில்லையெ ன்பது பெற்றும்; என்னை? "கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமும்" நல் கூர்தலின். உயர்வு-உயர்குலமாதல்.

(தெ-ப-ரை.)—அழுக்காறு உடையான்கண் - பொறாமை யுடையவனிடத்தே, ஆக்கம்போன்று-செல்வமில்லாமைபோல, ஒழுக்கம் இலான்கண் - ஆசார மில்லாதவனிடத்தே, உயர்வு- உயர்ச்சியானது, இல்லை - இலது.

**135.** Just as the envious man will be without wealth, so will the man destitute of propriety of conduct be without greatness.

---

சு. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

(பரி-ரை.) எ-து,—செய்தற்கருமைநோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார் மனவலியுடையார்; அவ்விழுக்கத்தால் தமக்கிழிகுலமாகிய குற்றம் உண் டாம் ஆற்றை அறிந்து, எ-று.

ஒழுக்கத்திற்சுருக்கம் அதனையுடையார்மே லேற்றப்பட்டது. கொண் ட விரதம் விடாமைபற்றி, உரவோரென்றார்.

(தெ-ப-ரை.)—இழுக்கத்தின் - (ஆசாரத்தினின்றும்) தவ றுதலால், ஏதம் - (இழிகுலம் ஆதலாகிய) குற்றம், படுபாக்கு- உண்டாதலை, அறிந்து-தெரிந்து, உரவோர் - மனவலியை யுடை யோர், ஒழுக்கத்தின் - ஆசாரத்தில், ஒல்கார் - சுருங்கார்.

**136.** Those firm in mind will not slacken in their observance of the proprieties of life, knowing, as they do, the misery that flows from the transgression from them.

---

எ. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

(பரி-ரை.) எ-து,—எல்லாரும் ஒழுக்கத்தானே மேம்பாட்டையெய் துவர்; அதனின்றிழுக்குதலானே தாம் எய்துதற்குரித்தல்லாத பழியை யெய்துவர், எ-று.

பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம்பற்றி உலகம் அடுக்குமென்றுகொள்ளும்ஆகலின், எய்தாப்பழியெய்துவரென்றார். இவை யைந்து பாட்டானும் ஒழுக்கம் உள்வழிப்படுங் குணமும் இல்வழிப்படுங் குற்றமும் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒழுக்கத்தின் - (எல்லாரும்) ஆசாரத்தி னால், மேன்மை - மேம்பாட்டை, எய்துவர் - அடைவார்; இழுக் கத்தின் - (அதிலிருந்து) தவறுதலாலே, எய்தாப்பழி - (தாம்) அடைதற்கு உரித்தல்லாதபழியை, எய்துவர்-அடைவார்.

**137.** From propriety of conduct men obtain greatness; from impropriety comes insufferable disgrace.

---

அ. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்
கென்று மிடும்பை தரும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு நல்லவொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும், எ-று.

நன்றிக்கு வித்தாகுமென்றதனால் தீயொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும், இடும்பைதருமென்றதனால் நல்லொழுக்கம் இன்பந்தருதலும் பெற்றாம், ஒன்றுநின்றே ஏனையதை முடிக்குமாகலின். இதனாற் பின்விளைவு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நல்ஒழுக்கம் - (ஒருவனுக்கு) நல்ல ஆசாரமானது, நன்றிக்கு-அறத்துக்கு, வித்து ஆகும்-காரணமாய் (இருமைகளிலும்) இன்பத்தைத்தரும், தீஒழுக்கம்-தீய ஆசாரமானது, (பாவத்திற்குக் காரணமாய்), என்றும்-இருமைகளிலும், இடும்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

138. Propriety of conduct is the seed of virtue; and impropriety will ever cause sorrow.

---

கூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(பரி-ரை.) எ-து,—மறந்துந் தீயசொற்களைத் தம்வாயாற் சொல்லுந் தொழில்கள் ஒழுக்கமுடையவர்க்கு முடியா, எ-று.

தீயசொற்களாவன—பிறர்க்குத்தீங்கு பயக்கும் பொய்முதலியனவும், வருணத்திற்கு உரியஅல்லனவுமாம். அவற்றது பன்மையால் சொல்லுதற்றொழில் பலவாயின. சொல்- சாதியொருமை. சொல்லெனவே அமைந்திருக்க வாயாலென வேண்டாது கூறினார், நல்ல சொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு. இதனை வடநூலார் தாற்பரியமென்ப.

(தெ-ப-ரை.) வழுக்கியும் - மறந்தும், தீய-தீயசொற்களை, வாயால்சொலல் - தம்வாயினாற் சொல்லுதல், ஒழுக்கம் உடையவர்க்கு-ஆசாரமுடையவர்க்கு, ஒல்லா-முடியாவாம்.

139. Those who study propriety of conduct will not speak evil even forgetfully.

---

கO. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(பரி-ரை.) எ-து,—உலகத்தோடு பொருந்த வொழுகுதலைக் கல்லாதார் பலநூல்களையுங் கற்றாராயினும், அறிவிலாதார், எ-று.

உலகத்தோடு பொருந்த வொழுகுதலாவது—உயர்ந்தோர் பலரும் ஒழுகிய ஆற்றான் ஒழுகுதல். அறநூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதன வொழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு வருதலான் அவையும் அடங்க உலகத்தோ டொட்ட என்றும், கல்விக்குப் பயன் அறி

வும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமும் ஆகலின் அவ்வொழுகுதலைக் கல்லா தார் பலகற்றும் அறிவிலாதாரென்றுங் கூறினர். ஒழுகுதலைக் கற்றலாவது அடிப்படுதல். இவை யிரண்டுபாட்டானும் சொல்லானுஞ் செயலானும் வரும் ஒழுக்கங்களெல்லாம் ஒருவாற்றாற் றொகுத்துக் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—உலகத்தோடு - உயர்ந்தோரோடு, ஒட்ட- பொருந்த, ஒழுகல் – நடத்தலை, கல்லார் - அறியாதார், பல – பலநூல்களையும், கற்றும் – கற்றாராயினும், அறிவிலாதார் - அறி வில்லாதாராவர்.

**140.** Those who know not how to act agreeably to the world, though they have learnt many things, are still ignorant.

---

## கரு-ம். அதி—பிறனில்விழையாமை.

அஃதாவது காம மயக்கத்தால் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது, ஒழுக்கமுடையார் மாட்டே நிகழ்வதாகலின், ஒழுக்கமுடைமை யின்பின் வைக்கப்பட்டது.

க. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
அறம்பொருள் கண்டார்க ணில்.

(பரி-ரை.) எ-து,—பிறனுக்குப்பொருளாந் தன்மையுடையாளைக் காத லித்தொழுகுகின்ற அறியாமை, ஞாலத்தின்கண் அறநூலையும் பொருணூலை யும் ஆராய்ந்தறிந்தார்மாட் டில்லை, எ-று.

பிறன்பொருள் - பிறனுடைமை. அறம் பொருளென்பன ஆகுபெயர். செவ்வெண்ணின்தொகை தொக்குநின்றது. இன்பம் ஒன்றையே நோக் கும் இன்ப நூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் பரரதிதமென்று கூறு வராகலின், அறம் பொருள் கண்டார்கணில்லென்றார்; எனவே, அப்பே தைமையுடையார்மாட்டு அறமும் பொருளும் இல்லையென்பது பெறப் பட்டது.

(தெ – ப - ரை.)—பிறன் - பிறனுக்கு, பொருளாள்-உடை மையாந் தன்மையவளை, பெட்டு - இச்சித்து, ஒழுகும் - நடக் கின்ற, பேதைமை - அறியாமையானது, ஞாலத்து - பூமியின் கண், அறம் - அறநூலையும், பொருள் - பொருள்நூலையும், கண் டார்கண் – ஆராய்ந்தறிந்தவரிடத்தே, இல் – இல்லை.

**141.** The folly of desiring her who is the property of another will not be found in those who know (the attributes of) virtue and (the rights of) property.

---

உ. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

(பரி-ரை.) எ-து,—காமங் காரணமாகப் பாவத்தின்கண் நின்றொல் லாருள்ளும் பிறனில்லாளைக் காதலித்து அவன் வாயிற்கட்சென்று நின் றார்போலப் பேதையாரில்லை, எ-று.

அறத்தினீக்கப்பட்டமையின், அறன்கடையென்றார். அறன்கடைநின்ற பெண்வழிச்செல்வாரும், வரைவின் மகளிரோடும் இழிகுல மகளிரோடுங் கூடி இன்ப நுகர்வாரும்போல, அறமும் பொருளும் இழத்தலே யன்றிப் பிறன்கடை நின்றார் அச்சத்தால் தாங்கருதிய இன்பமும் இழக்கின்றாராக லின், பேதையாரில்லென்றார்; எனவே, இன்பமும் இல்லையென்பது பெறப் பட்டது.

(தெ-ப-ரை.)—அறன்கடை - (காமங்காரணமாகப்) பாவத் தில், நின்றாருள் எல்லாம்-நின்றவரெல்லாருள்ளும், பிறன்கடை- பிறனது வாயிலினிடத்தே, நின்றாரின் - (அவன் மனையாளையிச் சித்து) நின்றவர்போல, பேதையார் - மூடர், இல் - இலர்.

**142.** Among all those who stand on the outside of virtue, there are no greater fools than those who stand outside their neighbour's door.

---

௩. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
தீமை புரிந்தொழுகு வார்.

(பரி-ரை.) எ-து,—தம்மை ஐயுறாதார் இல்லாள்கண்ணே பாவஞ்செய் தலை விரும்பி ஒழுகுவார் உயிருடையரேனும், இறந்தாரேயாவர், எ-று.

அறம் பொருளின்பங்களாகிய பயன் உயிரெய்தாமையின், விளிந்தா ரின் வேறல்லரென்றும், அவர் தீமை புரிந்தொழுகுவது இல்லுடையவரது தெளிவுபற்றியாகலின் தெளிந்தாரில்லென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—மன்ற - நிச்சயமாக, தெளிந்தார் - (தம்மை நல்லவரென்று) தெளிந்தவரது, இல் - மனையாளிடத்தே, தீமை- பாவஞ்செய்தலை, புரிந்து - விரும்பி, ஒழுகுவார் - நடப்பவர், (உயிருடையவராயிருந்தாலும்) விளிந்தாரின் - செத்தவரில் நின் றும், வேறல்லர் - வேறாகார்.

**143.** Certainly they are no better than dead men who desire evil towards the wife of those who undoubtingly confide in them.

---

௪. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

(பரி-ரை.) எ-து,—எத்துணைப்பெருமைஉடையராயினும் ஒருவர்க்கு யாதாய் முடியும், காமமயக்கத்தால் தினையளவுந்தம்பிழையை ஓராது பிற னுடைய இல்லின்கட்புகுதல், எ-று.

இந்திரன்போல எல்லாப்பெருமையும் இழந்து சிறுமையெய்தல் நோ க்கி, என்னாமென்றார். "என்னீ ரறியாதீர் போல விவைகூறி—னின்னீர வல்ல நெடுந்தகாய்" என்புழிப்போல உயர்த்தற்கட் பன்மை யொருமை மயங்கிற்று. தேரான் பிறனென்பதனைத் தம்மை ஐயுறாத பிறனென்று ரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—தினைத்துணையும் - (காமமயக்கத்தினாலே), தினையளவும் [சிறிதாயினுமென்றபடி], தேரான் - (தம்பிழை

யை) நினையாமல், பிறன்இல் - பிறனுடைய மனையாளிடத்தே, புகல் - செல்லுதல், எனைத்துணையர் ஆயினும்-எவ்வளவு பெருமையை யுடையவராயிருக்கினும், என்னாம் - (அவருக்கு) யாதாய் முடியும்.

**144**· However great one may be what does it avail if without at all considering his guilt he goes unto the wife of another.

---

ரு. எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

(பரி-ரை.) எ-து,—எய்துதல் எளிதென்று கருதிப் பின்விளைவு கருதாது பிறனில்லின்கண் இறப்பான், மாய்தலின்றி எஞ்ஞான்றும் நிலைநிற்குங் குடிப்பழியினையெய்தும், எ-று.

இல்லின்கண் இறத்தல் - இல்லாள்கண் நெறிகடந்து சேறல்.

(தெ-ப-ரை.)—எளிதுஎன - (இவளைச்சேர்தல்) எளிதென்று நினைத்து, இல் - (பிறன்) மனைவியிடத்தே, இறப்பான்-செல்லுவோன், விளியாது-அழியாமல், எஞ்ஞான்றும் - எக்காலமும், நிற்கும்-நிலைநிற்பதாகிய, பழி - (குடிப்) பழியை, எய்தும்-அடைவான்.

**145**. He who thinks lightly of going unto the wife of another acquires guilt that will abide with him imperishably and for ever.

---

சு. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

(பரி-ரை.) எ-து,—பிறன் இல்லாள்கண் நெறிகடந்து செல்வானிடத்துப் பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும் நீங்காவாம், எ-று.

எனவே, இருமையும்இழத்தல் பெற்றாம். இவையாறுபாட்டானும் பிறனில்விழைவான்கட் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இல் - (பிறன்) மனைவியினிடத்தே, இறப்பான்கண் - செல்லுவோனிடத்து, பகை பாவம் அச்சம் பழிஎன நான்கும் - பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்னும் இந்நான்கு குற்றங்களும், இகவாஆம் - (ஒருபோதும்) நீங்காவாம்.

**146**. Hatred, sin, fear, disgrace; these four will never leave him who goes in to his neighbour's wife.

---

எ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

(பரி-ரை.) எ-து,—அறனுகிய இயல்போடுகூடி இல்வாழ்வானென்று சொல்லப்படுவான், பிறனுக்குரிமை பூண்டு அவனுடைய இயல்பின்கண்ணே நிற்பாளது பெண்தன்மையை விரும்பாதவன், எ-று.

ஆனுருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண்வந்தது. இல்லறஞ் செய்வானெனப்படுவான் அவனே யென்பதாம்.

(தெ-ப-ரை.)—அறன் இயலான் - அறமாகிய இயல்போடு கூடி, இல்வாழ்வான் என்பான் - இல்வாழ்வானென்று சொல்லப் படுவான், பிறன்இயலாள் - பிறனுடைய வியல்பிலே (அவனுக்கு உரிமைபூண்டு) நிற்பவளது, பெண்மை - பெண்தன்மையை, நயவாதவன் - விரும்பாதவன்.

**147.** He who desires not the womanhood of her who should walk according to the will of another will be praised as a virtuous householder.

---

அ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(பரி-ரை.) எ-து,—பிறன்மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண் தகைமை சால்புடையார்க்கு அறனுமாம், நிரம்பிய வொழுக்கமுமாம், எ-று.

புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கருமையின், அதனையடக்கிய ஆண்மையைப் பேராண் மையென்றார். ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். செய்தற்கரிய அறனும் ஒழுக்கமும் இதனைச் செய்யாமையே பயக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—பிறன்மனை-பிறனதுமனையாளை, நோக்காத-உட்கொள்ளாத, பேர்ஆண்மை - பெரிய ஆண்தன்மையானது, சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோர்க்கு, அறன் ஒன்றோ - தருமமாவதொன்றோ, ஆன்றவொழுக்கு - நிறைந்தவொழுக்கமுமாம்.

**148.** That noble manliness which looks not at the wife of another is the virtue and dignity of the great.

---

கூ. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

(பரி-ரை.) எ-து,—அச்சந் தருங் கடலாற் சூழப்பட்ட உலகத்து எல்லாநன்மைகளும் எய்துதற்குரியார் யாவரெனின், பிறனொருவனுக்கு உரிமையாகியாளுடைய தோளைச் சேராதார், எ-று.

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப்படாமையின், நாம நீரென்றார். நலத்திற்கென்பது நலக்கெனக் குறைந்து நின்றது. உரிச்சொல்லீறு திரிந்து நின்றது. இருமையினும் நன்மையெய்துவ ரென்பதாம்.

(தெ - ப - ரை.)—நாமநீர் - அச்சந்தருங் கடலாற் சூழப் பட்ட, வைப்பில்-பூமியில், நலத்திற்கு-(எல்லா) நன்மைகளையும் பெறுதற்கு, உரியார் - உரிமையையுடையார், யார்எனின்-யாவர்

எனின், பிறற்கு - பிறனுக்கு, உரியாள் - உரிமையானவளது, தோள் - தோள்களை, தோயாதார் - சேராதவர்.

**149.** Is it asked, "who are those who shall obtain good in this world surrounded by the terror-producing sea?" Those who touch not the shoulder of her who belongs to another.

---

கம. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் அறத்தைத் தனக்குரித்தாகச் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும், அவனுக்குப் பிறனெல்லைக்கணிற்பாளது பெண்மையை விரும்பாமையுண்டாயின், அது நன்று, எ-று.

இக்குணமே மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். இவைநான்கு பாட்டாலும் பிறனில் விழையாதான்கட் குணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறன் - (ஒருவன்) அறத்தை, வரையான்- (தனக்கு உரியதாகக்) கொள்ளாதவனாகி, அல்ல - பாவங்களை, செயினும் - செய்தாலும், (அவனுக்குப்) பிறன்வரையாள் - பிறனெல்லையிலே நிற்பவளது, பெண்மை-பெண்மையை, நயவாமை- விரும்பாமை (உண்டாயின்), நன்று - (அது) நல்லது.

**150.** Though a man perform no virtuous deeds and commit (every) vice, it will be well if he desire not the womanhood of her who is within the limit (of the house) of another.

---

## கசு-ம். அதி—பொறையுடைமை.

அஃதாவது காரணம்பற்றியாதல் மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட்செய்யாது பொறுத்தலையுடையராதல். நெறியினீங்கிய செய்தாரையும் பொறுக்கவேண்டு மென்றற்கு, இது பிறனில்விழையாமையின்பின் வைக்கப்பட்டது.

க. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை.

(பரி-ரை.) எ-து,—தன்னை அகழ்வாரை வீழாமற்றாங்கும் நிலம்போல, தம்மை அவமதிப்பாரைப் பொறுத்தல் தலையாயஅறம், எ-று.

இகழ்தல்—மிகையாயின செய்தலும் சொல்லுதலும்.

(தெ-ப-ரை.)—அகழ்வாரை-(தன்னைத்) தோண்டுவோரை, தாங்கும் - (வீழாமற்) சுமக்கின்ற, நிலம்போல - பூமிபோல, தம்மை-தங்களை, இகழ்வார் - நிந்திப்பவரை, பொறுத்தல்-பொறுத்திருத்தல், தலை - முதன்மையாகிய அறமாம்.

**151.** To bear with those who revile us just as the earth bears up those who dig it, is the first of virtues.

---

உ. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(பரி-ரை.) எ-து,—பொறை நன்றாகலால், தாமொறுத்தற்கு இயன்ற காலத்தும் பிறர் செய்த மிகையைப் பொறுக்க; அதனை உட்கொள்ளாது அப்பொழுதே மறத்தல் பெறின், அப்பொறையினும் நன்று, எ-று.

மிகையென்றது மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலும் உட்கொள்ளப்படுதலின், மறத்தலே அதனினும் நன்றென்றார்.

(தெ-ப-ரை)—இறப்பினை - (ஒருவன்செய்த) மிகையை, என்றும்-தன்னலொறுத்தற்குக் கூடியகாலத்திலேயும், பொறுத்தல் - பொறுக்கக்கடவன்; மறத்தல் - (அதனைநினையாமல் அப்பொழுதே) மறத்தல் (பெறின்), அதனினும் - அப்பொறுமையினும், நன்று - மிகநல்லது.

**152.** Bear with reproach even when you can retaliate; but to forget it will be still better than that.

---

ங. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு வறுமையுள் வைத்து வறுமையாவது விருந்தினரை யேற்றுக்கொள்ளாது நீக்குதல்; அதுபோல, வன்மையுள் வைத்து வன்மையாவது அறிவின்மையான் மிகைசெய்தாரைப் பொறுத்தல், எ-று.

இஃது எடுத்துக்காட்டுவமை. அறனல்லாத விருந்தொரால் பொருளுடைமை ஆகாத வாறுபோல, மடவார்ப்பொறையும் மென்மைஆகாதே வன்மையாமென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—இன்மையுள்இன்மை - (ஒருவனுக்கு) வறுமையுள் வறுமையாவது, விருந்துஒரால் - விருந்தினரை (ஏற்றுக்கொள்ளாமல்) நீக்குதலாம்; (அதுபோல) வன்மையுள்வன்மை- வல்லமையுள் வல்லமையாவது, மடவார்-அறியாமையினலேதீங்கு செய்தவரை, பொறை - பொறுத்தல்.

**153.** To neglect hospitality is poverty of poverty. To bear with the ignorant is might of might.

---

ச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் சால்புடைமை தன்கணின்று நீங்காமையை வேண்டுவனாயின், அவனாற் பொறையுடைமை தன்கண் அழியாமற் காத்தொழுகப்படும், எ-று.

பொறையுடையாற்கல்லது சால்பில்லையென்பதாயிற்று. இவைநான்குபாட்டானும் பொறையுடைமையது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நிறைஉடைமை - (ஒருவன்) நிறைவையுடையனயிருக்கை, நீங்காமை - (தன்னைவிட்டு) நீங்காமையை, வேண

டின் - வேண்டுவானாயின், (அவனால்) பொறைஉடைமை - பொறுமையுடையனா யிருக்கை, போற்றி - அழியாமற் காத்து, ஒழுகப்படும் - நடக்கப்படும்.

**154.** If you desire that greatness should never leave you preserve in your conduct the exercise of patience.

---

ரு. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

(பரி-ரை.) எ - து,—பிறன் தமக்குத் தீங்குசெய்தவழிப் பொறாது அவனை ஒறுத்தாரை அறிவுடையார் ஒருபொருளாக மனத்துக்கொள்ளார்; அதனைப் பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து கொள்வர், எ-று.

ஒறுத்தவர் தாமும் அத்தீங்கு செய்தவனோ டொத்தலின், ஒன்றாக வையாரொன்றார். பொதிந்துவைத்தல்-சால்புடைமைபற்றி இடைவிடாது நினைத்தல்.

(தெ-ப-ரை.)—ஒறுத்தாரை- (பிறன்தமக்குத் தீங்குசெய்தவிடத்துப் பொறாமல் அவனைத்) தண்டித்தவரை, ஒன்றுஆக-(அறிவுடையோர் ஒருபொருளாக, வையார் - மனத்துட்கொள்ளார்; பொறுத்தாரை-(அதனைப்) பொறுத்தவரை, பொன்போல்-பொன்னைப்போல், பொதிந்து - இடைவிடாது, வைப்பர்-மனத்துட்கொள்வார்.

**155.** (The wise) will not at all esteem the resentful. They will esteem the patient just as the gold which they lay up with care.

---

சு. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

(பரி-ரை.) எ-து,—தமக்குத் தீங்கு செய்தவனை ஒறுத்தார்க்கு உண்டாவது அவ்வொருநாளையின்பமே; அதனைப் பொறுத்தார்க்கு உலகம் அழியுமளவும் புகழுண்டாம், எ-று.

ஒருநாளையின்பம்—அந்நாளொன்றினும் கருதியது முடித்தேமெனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், ஏற்புடை உலகென்னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒறுத்தார்க்கு-(தமக்குத்தீங்குசெய்தவனைத்) தண்டித்தவர்க்கு (உண்டாவது), ஒருநாளை இன்பம்-அவ்வொரு நாளையின்பமே; பொறுத்தார்க்கு - (அதனைப்) பொறுத்தவர்க்கு, பொன்றும்துணையும்-(உலகம்) அழியுமளவும், புகழ்-புகழ் (உண்டாம்.)

**156.** The pleasure of the resentful continues for a day. The praise of the patient will continue until (the final destruction of) the world.

---

எ. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—செய்யத்தகாத கொடியவற்றைத் தன்கட்பிறர் செய்தாராயினும், அவர்க்கு அதனால் வருந்துன்பத்திற்கு நொந்து தான் அறனல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் ஒருவனுக்கு நன்று, எ-று.

உம்மை சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது - "உம்மை—யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொல்" என்றுபரிதல்.

(தெ-ப-ரை.)—திறன் அல்ல - செய்யத்தகாத கொடியவைகளை, தன் - தன்னிடத்து, பிறர்-மற்றவர், செய்யினும்-செய்தாலும், நோ - (அவருக்கு அதனால்வருவதாகிய) துன்பத்துக்காக, நொந்து - வருந்தி, அறன் அல்ல - அறமல்லாதசெயல்களை, செய்யாமை - செய்யாதிருத்தல், நன்று - (ஒருவனுக்கு) நல்லதாம்.

157. Though others inflict injuries on you, yet compassionating the evil (that will come upon them) it will be well not to do them any thing contrary to virtue.

---

அ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

(பரி-ரை.) எ-து,—மனச்செருக்கால் தங்கண் தீயவற்றைச் செய்தாரைத் தாம் தம்முடைய பொறையான் வென்றுவிடுக, எ-று.

தாமும் அவர்கண் தீயவற்றைச் செய்து தோலாது பொறையான் அவரின் மேம்பட்டு வெல்கவென்பதாம். இவைநான்குபாட்டானும் பிறர் செய்தன பொறுத்தல் சொல்லப்பட்டது.

(தெ-ப-ரை.)—மிகுதியால்-மனச்செருக்கினாலே, மிக்கவை-(தம்மிடத்துத்) தீயவைகளை, செய்தாரை - செய்தவரை, தாம்-தாங்கள், தம் தகுதியால் - தமதுபொறுமையினாலே, வென்றுவிடல் - வென்றுவிடக்கடவர்.

158. Let a man by patience overcome those who through pride commit excesses.

---

கூ. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

(பரி-ரை.) எ-து,—இல்வாழ்க்கைக்கண் நின்றேயும் துறந்தார்போலத் தூய்மையுடையார், நெறியைக்கடந்தார்வாய் இன்னாச்சொல்லைப் பொறுப்பவர், எ-று.

தூய்மை - மனமாசின்மை. வாயென வேண்டாது கூறினர், தீயசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் இழிபு முடித்தற்கு.

(தெ-ப-ரை.)—இறந்தார் - (நல்வழியைக்) கடந்தவரது, வாய் - வாயிலுண்டாகும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை, நோற்கிற்பவர் - பொறுப்பவர், துறந்தாரின் - (இல்

வாழ்க்கையிலே யிருந்தும்) துறந்தார்போல, தூய்மை - பரிசுத்த குணத்தை, உடையர் - உடையவராவார்.

**159.** Those who bear with the uncourteous speech of the insolent are as pure as the ascetics.

---

கo. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

(பரி - ரை.) எ-து,—விரதங்களான் ஊணைத்தவிர்ந்து உற்ற நோயைப் பொறுப்பார் எல்லாரினும் பெரியர்; அவர் பெரியராவது தம்மைப் பிறர் சொல்லும் இன்னாதசொல்லைப் பொறுப்பாரிற்பின், எ-று.

பிறர் - அறிவிலாதார். நோலாமைக்கேதுவாகிய இருவகைப்பற்றொடு நின்றே நோற்றலின், இன்னாச்சொ னோற்பாரிற்பின்னென்றார். இவையிரண்டுபாட்டானும் பிறர்மிகைக்கச்சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உண்ணாது - (விரதங்களினாலே) உணவை விட்டு, நோற்பார்-(தம்மைஅடைந்தநோயைப்) பொறுப்பவர், பெரியர் - (எல்லாரினும்) பெரியவராவார்; (அவர் பெரியவராவது) பிறர் - மற்றவர், சொல்லும் - (தம்மைச்) சொல்லும், இன்னாச்சொல்-வெறுக்கப்படுஞ்சொற்களை, நோற்பாரின்பின் - பொறுப்பவரிற்பின்.

**160.** Those who endure abstinence from food are great, next to those who endure the uncourteous speech of others.

---

## கள-ம். அதி—அழுக்காறாமை.

---

இதனுள் அழுக்காறென்பது ஒருசொல். அதற்குப் பொருள் மேலே உரைத்தாம். அச்சொல் பின்அழுக்காற்றைச் செய்யாமையென்னும் பொருள்பட எதிர்மறை ஆகாரமும் மகரஐகாரவிகுதியும் பெற்று அழுக்காறாமையென நின்றது. இப்பொறாமையும் பொறைக்கு மறுதலையாகலின், இதனை விலக்குதற்கு இது பொறையுடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தன்னெஞ்சத்தின்கண் அழுக்காறென்னுங் குற்றமில்லாத இயல்பினைத் தனக்கோதிய ஒழுக்கநெறியாகக் கொள்க, எ-று.

இயல்பு - அறிவோடுகூடிய தன்மை. அத்தன்மையும் நன்மைபயத்தலின், ஒழுக்கநெறிபோல உயிரினுமோம்புக என்பதாம்.

(தெ - ப - ரை.)—ஒருவன்தன்நெஞ்சத்து - ஒருவன்தன் மனத்தின்கண், அழுக்காறு - பொறாமையாகிய குற்றம், இலாத- இல்லாத, இயல்பு - தன்மையை, ஒழுக்கு - (தனக்குச் சொல்

லப்பட்ட) ஒழுக்கத்தினது, ஆறு ஆக-வழியாக, கொள்க-கொள்ளக்கடவன்.

**161.** Let a man esteem that disposition which is free from envy in the same manner as propriety of conduct,

---

உ. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

(பரி-ரை.) எ - து,—யாவர்மாட்டும் அழுக்காற்றினின்று நீங்குதலை ஒருவன் பெறுமாயின், மற்றவன் பெறுஞ்சீரியபேறுகளுள் அப்பேற்றினை ஒப்பதில்லை, எ-று.

அழுக்காறு பகைவர் மாட்டும் ஒழியற்பாற்றென்பார், யார்மாட்டும் என்றார். அன்மை - வேறுதல். இவையிரண்டுபாட்டானும் அழுக்காறின்மையது குணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—யார்மாட்டும் - யாவரிடத்தும், அழுக்காற்றின் - பொறாமையில்நின்றும், அன்மை - வேறுதலை, பெறின்-(ஒருவன்) பெறுவானாயின், விழுப்பேற்றின்-(மற்றவன்பெறும்) மேலானபேறுகளுள், அஃது - அப்பேற்றினை, ஒப்பது - ஒத்தபேறு, இல்லை - இலது.

**162.** Amongst all attainable excellencies there is none equal to that of being free from envy towards others.

---

௩. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

(பரி-ரை) எ-து,—மறுமைக்கும் இம்மைக்கும் அறமும் செல்வமும் ஆகிய உறுப்புகளைத் தனக்கு வேண்டாதானென்று சொல்லப்படுவான் பிறன் செல்வங்கண்ட வழி அதற்கு உவுவாது அழுக்காற்றைச் செய்வான், எ-று.

அழுக்கறுத்த லெனினும் அழுக்காறெனினும் ஒக்கும். அழுக்காறு செய்யின் தனக்கே ஏதமாம் என்பதாம்.

(தெ-ப-ரை.)—அறன் - (மறுமைக்கு) அறத்தையும், ஆக்கம் - (இம்மைக்குச்) செல்வத்தையும், வேண்டாதான்என்பான்-(தனக்கு) விரும்பாதவனென்று சொல்லப்படுவோன், பிறன் - பிறனது, ஆக்கம்-செல்வத்தை, பேணாது - (கண்டவிடத்து) மகிழாமல், அழுக்கறுப்பான் - பொறாமைப்படுவான்.

**163.** Of him who instead of rejoicing in the wealth of others envies it it will be said " he neither desires virtue nor wealth."

---

௪. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

(பரி -ரை.) எ-து,—அழுக்காறு ஏதுவாக அறனல்லவற்றைச் செய்யார் அறிவுடையார், அத்தீநெறியால் தமக்கிருமையினுந் துன்பம் வருதலை அறிந்து, எ-று.

அறனல்லவையாவன—செல்வம், கல்வி முதலியன உடையார்கண் தீங்கு நினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம்.

(தெ-ப-ரை.)—இழுக்குஆற்றின் - (பொறாமைப்படுவதாகிய) தீயவழியால், ஏதம்-துன்பம், படுபாக்கு-உண்டாதலை, அறிந்து-தெரிந்து, அழுக்காற்றின் - (அறிவுடையோர்) பொறாமையால், அல்லவை-அறம்அல்லாதவைகளை, செய்யார்-செய்யார்கள்.

**164.** **(The wise) knowing the misery that comes from transgression will not through envy commit unrighteous deeds.**

---

௫. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

(பரி - ரை.) எ-து,—அழுக்காறு பகைவரை ஒழிந்துங் கேடு பயப்பதொன்றாகலின், அவ்வழுக்காறுடையார்க்குப் பகைவர் வேண்டா, கேடுபயத்தற்கு அதுதானே அமையும், எ-று.

அதுவேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது.

(தெ-ப-ரை.)—அழுக்காறு - பொறாமையானது, ஒன்னார்-பகைவரினின்று, வழுக்கியும்-ஒழிந்திருந்தும், கேடுஈன்பது-கேட்டைத்தருவது, (ஆதலால்) உடையார்க்கு - (அப்பொறாமையை) உடையவர்க்கு, (கேட்டைத்தருதற்குப் பகைவர் வேண்டுவதில்லை) அது - அப்பொறாமையே, சாலும் - போதும்.

**165.** **To those who cherish envy *that* is enough. Though free from enemies that [envy] will bring destruction.**

---

௬. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் பிறர்க்குக் கொடுப்பதன்கண் அழுக்காறுறைச்செய்வானது சுற்றம் உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதுமின்றிக் கெடும், எ-று.

கொடுப்பதன்கண் அழுக்கறுத்தலாவது - கொடுக்கப்படும் பொருள்களைப் பற்றிப் பொறாமைசெய்தல். சுற்றங்கெடுமெனவே, அவன் கேடு சொல்லாமையே பெறப்பட்டது. பிறர்பேறு பொறாமை தன்பேற்றையே அன்றித் தன்சுற்றத்தின் பேற்றினையும் இழப்பிக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—கொடுப்பது - (ஒருவனால்) பிறர்க்குக்கொடுக்கப்படும் பொருளைக்குறித்து; அழுக்கறுப்பான் – பொறாமைப்படுமவனது, சுற்றம் - உறவானது, உடுப்பதும் - உடுக்கும் உடை

-யும், உண்பதும்-உண்ணும்உணவும், இன்றி-இல்லாமல், கெடும்-அழியும்.

166. He who is envious at a gift (made to another) will with his relations utterly perish destitute of food and raiment.

---

எ. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
 டவ்வையைக் காட்டி விடும்.

(பரி-ரை.) எ-து,—பிறராக்கங் கண்டவழிப் பொறாமையுடையானைத் திருமகள் தானும் பொறாது தன்தவ்வைக்குக் காட்டி நீங்கும், எ-று.

தவ்வை-மூத்தவள், தவ்வையைக்காட்டியென்பது "அறிவுடையந்தண னவனைக் காட்டென்றானே" என்பதுபோல உருபுமயக்கம். மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையனாயினானை யென்றுரைப்பாரும் உளர்.

(தெ-ப-ரை.)—அழுக்காறு உடையானை - (பிறர்செல்வங் கண்டவிடத்தே) பொறாமையுடையவனை, செய்யவள்-திருமகள், அவ்வித்து - (தானும்) பொறாமைப்பட்டு, தவ்வையை - (தன்) தமக்கைக்கு, காட்டி விடும் - காட்டிக்கொடுத்து நீங்குவாள்.

167. Lakshmi envying (the prosperity) of the envious man will depart and introduce him to her sister.

---

அ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
 தீயுழி யுய்த்து விடும்.

(பரி-ரை.) எ-து,—அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி தன்னை உடையானை இம்மைக்கண் செல்வத்தைக்கெடுத்து, மறுமைக் கண் நரகத்திற் செலுத்திவிடும், எ-று.

பண்பிற்குப் பண்பி இல்லையேனும், தன்னையாக்கினானை இருமையுங் கெடுத்தற் கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் பாவியென்றார், கொடியானைப் பாவியென்னும் வழக்குண்மையின். இவையாறுபாட்டானும் அழுக்காறுடைமையது குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அழுக்காறுஎன ஒருபாவி-பொறாமையென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவியானவன், திருச்செற்று-(தன்னையுடையவனை இம்மையில் அவனது) செல்வத்தைக்கெடுத்து, தீஉழி உய்த்துவிடும் - (மறுமையில்) நரகத்திற் செலுத்திவிடுவான்.

168. Envy will destroy (a man's) wealth (in this world) and drive him into the pit of fire (in the world to come.)

---

கூ. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
 கேடு நினைக்கப் படும்.

(பரி-ரை.) எ-து,—கோட்டத்தினைப் பொருந்திய மனத்தையுடையவனது ஆக்கமும் ஏனைச் செம்மையுடையவனது கேடும் உளவாயின், அவை ஆராயப்படும், எ-று.

கோட்டம்-ஈண்டு அழுக்காறு. உளவாமினென்பது எஞ்சிநின்றது. ஆக்கக்கேடுகள் கோட்டமுஞ் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையரால் இதற்கேதுவாகிய பழவினையாதென்று ஆராயப்படுதலின், நினைக்கப்படுமென்றார்: "இம்மைச் செய்தன யானறி நல்வினை—யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்—திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" எனநினைக்கப்பட்ட வாறறிக.

(தெ-ப-ரை.)—அவ்விய நெஞ்சத்தான்-பொறாமையுள்ள மனத்தையுடையவனது, ஆக்கமும் - செல்வமும், செவ்வியான்-பொறாமையில்லாத மனத்தையுடையவனது, கேடும் - வறுமையும், (உண்டானால்) நினைக்கப்படும்-(அவை) ஆராயப்படும்.

**169.** The wealth of a man of envious mind and the poverty of the righteous will be pondered.

---

கo. அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதிலார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(பரி-ரை.) எ-து,—அழுக்காற்றைச்செய்து பெரியராயினாரும் இல்லை; அச்செயலிலாதார் பெருக்கத்தினீங்கினாரும் இல்லை, எ-று.

இவை யிரண்டோட்டானும் கேடும் ஆக்கமும் வருதற்கேது ஒருங்கு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அழுக்கற்று - பொறாமைப்பட்டு, அகன்றாரும்-பெருகினவரும், இல்லை - இலர்; அஃது இலார்-அச்செயலில்லாதவருள், பெருக்கத்தின் - பெருக்கத்திலிருந்து, தீர்ந்தாரும் - நீங்கினவரும், இல் - இலர்.

**170.** Never have the envious become great: never have those who are free from it been without greatness.

---

## கஅ-ம். அதி—வெஃகாமை.

அஃதாவது பிறர்க்குரிய பொருளை வெளவக்கருதாமை. பிறருடைமை கண்டவழிப் பொறாமையே அன்றி அதனைத் தான் வெளவக்கருதுதலும் குற்றமென்றற்கு, இஃது அழுக்காறாமையின்பின் வைக்கப்பட்டது.

க. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

(பரி-ரை.) எ-து,—பிறர்க்குரியன கோடல் நமக்கு அறன்அன்றென்னும் நடுவுநிலைமை இன்றி அவர் நன்பொருளை ஒருவன் வெஃகுமாயின், அவ்வெஃகுதல் அவன்குடியைக் கெடச்செய்து, பலகுற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும், எ-று.

குடியை வளரச்செய்து பலநன்மையும் பயக்கும் இயல்புபற்றி, வெஃகினென்பார், நன்பொருள் வெஃகினென்றார். பொன்றவென்பது பொன்றியெனத் திரிந்துநின்றது; செய்தென்பது சொல்லெச்சம்.

(தெ-ப-ரை.)—நடுவுஇன்றி - (பிறர்க்குரிய பொருளைக்கொள்ளுதல் நமக்கு அறமல்லவென்னும்) நடுவுநிலைமை யில்லாமல், நல்பொருள் - (அவரது) நல்லபொருளை, வெஃகின் - (அபகரித்தற்கு) விரும்பின், (அவ்விருப்பு) குடிபொன்றி - (அவன்) குடியைக்கெடுத்து, குற்றமும்-பலகுற்றங்களையும், ஆங்கே-அப்போதே, தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்.

**171.** If a man departing from equity covet the property (of others), at that very time will his family be destroyed and guilt be incurred.

---

உ. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

(பரி-ரை.) எ-து,—பிறர்பொருளை வெளவினால் தமக்கு வரும் பயனை விரும்பி, அது வெளவுதற்குப் பழியின்கண்ணே படுஞ்செயல்களைச் செய்யார், நடுவுநிலைமையன்மையை அஞ்சுபவர், எ-று.

நடுவு-ஒருவன்பொருட்குப் பிறன் உரியன் அல்லனென்னும் நடுவு.

(தெ-ப-ரை.)—நடுவு இன்மை - (ஒருவன் பொருளுக்கு பிறன் உரியவன் அல்லனென்னும்) நடுவுநிலையல்லாமைக்கு, நாணுபவர் - அஞ்சுவோர், (பிறர்பொருளை அபகரிப்பதினாலே), படுபயன் - (தமக்கு) வரும்பயனை, வெஃகி - விரும்பி, பழிப்படுவ- பழியினிடத்தே பொருந்துஞ்செயல்களை, செய்யார் - செய்யார்கள்.

**172.** Those who blush at the want of equity will not commit disgraceful acts through desire of the profit that may be gained.

---

ங. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

(பரி-ரை.) எ-து,—பிறர்பால் வெளவிய பொருளால் தாம் எய்தும் நிலையில்லாத இன்பத்தை விரும்பி, அவர்மாட்டு அறனல்லாத செயல்களைச் செய்யார், அறத்தான் வரும் நிலையுடைய இன்பத்தைக் காதலிப்பவர், எ-று.

பாவத்தான் வருதலின் அப்பொழுதே அழியுமென்பார், சிற்றின்பமென்றார். மற்றையின்பமென்பது மற்றின்பமென நின்றது.

(தெ-ப-ரை.)—மற்றை இன்பம்-நிலையுடைய பேரின்பத்தை, வேண்டுபவர்,- இச்சிப்பவர், சிறு இன்பம் - (பிறரிடத்தே அபகரிக்கப்பட்ட பொருளினாலே தாம் அடைவதாகிய நிலையில்லாத) அற்பவின்பத்தை, வெஃகி-விரும்பி, அறன்அல்ல - அறமல்லாத செயல்களை, செய்யார் - (அவரிடத்தே) செய்யார்கள்.

**173.** Those who desire the higher pleasures (of heaven) will not act unjustly through desire of the trifling joy (in this life).

---

ச. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(பரி-ரை.) எ-து,—யாம் வறிய மென்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை விரும்புதல்செய்யார், ஐம்புலன்களையும் வென்ற குற்றமில்லாத காட்சியினையுடையார், எ-று.

வெல்லுதல்-பாவநெறிக்கட் செல்ல விடாமை. புலம்வென்ற புன்மையில் காட்சியவர்க்கு வறுமையின்மையின், வெஃகுதலும் இல்லையாயிற்று. புன்மையில் காட்சி-பொருள்களைத் திரிபின்றியுணர்தல்.

(தெ-ப-ரை.)—புலம்வென்ற - ஐம்புலன்களையும் வென்ற, புன்மையில் - குற்றமில்லாத, காட்சியவர் - அறிவையுடையவர், இலம் என்று-வறியோம் என்று நினைத்து, வெஃகுதல்செய்யார்- (அதுதீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை) விரும்புதல் செய்யார்.

**174.** The wise who have conquered their senses and are free from crime, will not covet (the things of others), with the thought "we are destitute."

---

ரு. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்

(பரி-ரை.) எ-து,—நுண்ணிதாய் எல்லாநூல்களினும் சென்ற தம்மறிவு என்னபயத்ததாம், பொருளைவிரும்பி யாவர்மாட்டும் அறிவோடு படாத செயல்களை அறிவுடையார் செய்வராயின், எ-று.

யார்மாட்டும் வெறிய செய்தலாவது தக்கார்மாட்டும் தகாதார்மாட்டும் இழிந்தனவும் கடியனவும் முதலியன செய்தல். அறிவிற்குப் பயன் அவை செய்யாமையாகலின், அறிவென்னுமென்றார்.

(தெ-ப-ரை.)—வெஃகி - (பொருளை) விரும்பி, யார் மாட்டும் - யாவரிடத்தும், வெறிய - அறிவோடு பொருந்தாத செயல்களை, செயின்-(அறிவுடையோர்) செய்வார்ஆயின், அஃகி-நுட்பமானதாகி, அகன்ற - (எல்லா நூல்களிலும் சென்று) விரிந்த, அறிவு-அறிவானது, என்னும் - என்னபயனை யுடையதாம்.

**175.** What is the advantage of extensive and accurate knowledge if a man through covetousness act senselessly towards all.

---

சு. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—அருளாகிய அறத்தைவிரும்பி அதற்குவழியாகிய இல்லறத்தின்கண் நின்றவன் பிறர் பொருளை அவாவி அதனை வருவிக்குங் குற்ற நெறிகளை எண்ணக் கெடும், எ-று.

இல்லறநெறியால் அறிவு முதிர்ந்தழியல்லது துறக்கப்படாமையின், அதனைத் துறவறத்திற்கு ஆறென்றார். கெடுதல் - இரண்டறமுஞ் சேர விழத்தல். சூழ்ந்த துணையானே கெடுமெனவே, செய்தாற்கெடுதல் சொல்லாமையே பெறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அருள்வெஃகி - அருளாகிய அறத்தைவிரு ம்பி, ஆற்றின்கண் - (இல்லறமாகிய) அதன்வழியிலே, நின்றான்-தங்கினவன், பொருள்வெஃகி - (பிறர்)பொருளைவிரும்பி, பொல்லாத - (அதனைவருவிக்கும்) குற்றவழிகளை, சூழ - எண்ண, கெடும் - கெடுவான்.

**176.** If he, who through desire of the virtue of kindness abides in the domestic state, *i. e.* the path in which it may be obtained, covet (the property of others) and think of evil methods (to obtain it), he will perish.

---

எ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

(பரி-ரை.) எ-து,—பிறர்பொருளை அவாவிக்கொண்டு அதனாலாகின்ற ஆக்கத்தை விரும்பாதொழிக, பின் அனுபவிக்குங்கால் அவ்வாக்கத்தின் பயன் நன்றாதலில்லை ஆகலான், எ-று.

விளையென்பது முதனிலைத்தொழிற்பெயர். இவையேழுபாட்டானும் வெஃகுதலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வெஃகி - (பிறர்பொருளை) விரும்பிக்கொண்டு, ஆம் - (அதனால்) உண்டாகின்ற, ஆக்கம்-பெருக்கத்தை, வேண்டற்க - வேண்டாதிருக்கக்கடவன், விளைவயின் - (பின்) அனுபவிக்கப்படும்போது, பயன் - (அப்பெருக்கத்தின்) பயன், மாண்டற்கு அரிது ஆம்-நன்றாகுதலில்லை, (ஆதலால்).

**177.** Desire not the gain of covetousness. In the enjoyment of its fruits there is no glory.

---

அ. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(பரி-ரை.) எ-து,—சுருங்கல் மாலைத்தாகிய செல்வத்திற்குச் சுருங்காமைக்காரணம் யாதென்று ஒருவன்ஆராயின், அது பிறன்வேண்டுங் கைப்பொருளைத் தான் வேண்டாமையாம், எ-று.

அஃகாமை - ஆகுபெயர். வெஃகாதான் செல்வம் அஃகாதென்பதாயிற்று.

(தெ-ப-ரை.)—செல்வத்திற்கு - (குறைந்துபோந் தன்மையையுடைய) செல்வத்துக்கு, அஃகாமை - குறையாதிருத்தற்குக் காரணம், யாது எனின் - எதுவென்று (ஒருவன்) ஆராயின், (அது) பிறன்-மற்றையான், வேண்டும்-விரும்பும், கைப்பொருள்-கைப்பொருளை, வெஃகாமை - (தான்) வேண்டாமையாம்.

**178.** If it is weighed "what is the indestructibility of wealth," it is freedom from covetousness.

---

கூ. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

(பரி-ரை.) எ-து,—இஃது அறனென்றறிந்து பிறர்பொருளை விரும் பாத அறிவுடையாரைத் திருமகள் தான் அடைதற்காங் கூற்றினை அறிந்து அக்கூற்றானே சென்றடையும், எ-று.

அடைதற்காங்கூறு—காலமும், இடனும், செவ்வியும் முதலாயின. இவை யிரண்டுபாட்டானும் வெஃகாமையின் குணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறன்அறிந்து - (இது) அறனென்றறிந்து, வெஃகா - (பிறர்பொருளை) விரும்பாத, அறிவுடையார் - அறிவுடையாரை, திரு - திருமகள், திறன்அறிந்து - (தான் சேர்தற்காம்) திறத்தைஅறிந்து, ஆங்கே - அத்திறத்தினாலே, சேரும்-சேர்வாள்.

**179.** Lakshmi knowing the manner (in which she may approach) will immediately come to those wise men who, knowing that it is virtue, covet not the property of others.

---

கOஂ. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு

(பரி-ரை.) எ-து,—பின் விளைவதறியாது ஒருவன் பிறன்பொருளை வௌவக்கருதின், அக்கருத்து அவனுக்கு இறுதியைப் பயக்கும் ; அப்பொருளை வேண்டாமையென்னுஞ் செல்வம் வெற்றியைப் பயக்கும், எ-று.

பகையும் பாவமும் பெருக்கலின் இறலீனுமென்றும், அப்பொருளை வேண்டி உழல்வோர்யாவரையுங் கீழ்ப்படுத்தலின் விறலீனுமென்றுங் கூறினார். செருக்கு - ஆகுபெயர். இதனால் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—எண்ணாது - (ஒருவன்) (பின்விளைவதை) எண்ணாமல், வெஃகின் - (பிறன்பொருளை) விரும்புவானாயின், (அவ்விருப்பம்) இறல்-அழிவை, ஈனும் - (அவனுக்குத்) தரும், வேண்டாமைஎன்னும்செருக்கு - (அப்பொருளை) விரும்பாமை யென்னுஞ் செல்வமானது, விறல் - வெற்றியை, ஈனும் - தரும்.

**180.** To covet (the wealth of another) regardless of consequences will bring destruction. That greatness (of mind) which covets not will give victory.

---

## ககூ-ம். அதி—புறங்கூறாமை.

---

அஃதாவது காணாதவழிப் பிறரை இகழ்ந்துரையாமை. மொழிக்குற்றம் மனக்குற்றம் அடியாக வருதலான், இஃது அழுக்காறாமை வெஃகாமைகளின்பின் வைக்கப்பட்டது.

க. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும், பிறனைப் புறங்கூறுனென்று உலகத்தாரால் சொல்லப்படுதல் நன்று, எ-று.

புறங்கூறாமை அக்குற்றங்களான் இழிக்கபபடாது மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். இதனுல் அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவன் அறம் கூறான்-ஒருவன் அறனென்றுசொல்லுவதுஞ் செய்யானுகி, அல்ல - அறன்அல்லாதவைகளை [பாவங்களை], செயினும் - செய்தாலும், புறங்கூறான் - (பிறனைக் காணுதவிடத்தே) இகழ்ந்துபேசான், என்றல் - என்று (உலகத்தோராலே) சொல்லப்படுதல், இனிது - நல்லது.

**181.** Though one do not even speak of virtue and live in sin, it will be well if it be said of him "he does not backbite."

---

உ. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

(பரி-ரை.) எ-து,—அறனென்பது ஒன்றில்லையென அழித்துச்சொல்லி அதன்மேற் பாவங்களைச்செய்தலினும் தீமையுடைத்து. ஒருவனைக் காணுதவழி இகழ்ந்துரையால் அழித்துச்சொல்லிக் கண்டவழி அவனோடு பொய்த்துநகுதல், எ-று.

உறழ்ச்சி நிரனிறைவகையாற் கொள்க. அழித்தல்-ஒளியைக்கோறல்.

(தெ-ப-ரை.)—புறன்அழீஇ - ஒருவனைக் காணுதவிடத் திகழ்ந்துபேசி, பொய்த்துநகை - (கண்டவிடத்தவனோடு) பொய்த்து மகிழ்தல், அறன்அழீஇ - அறனென்பதொன்றில்லையென அழித்துப்பேசி, அல்லவைசெய்தலின் (அதன்மேல்) பாவங்களைச்செய்தலினும், தீதே - தீமையுடையதே.

**182.** To smile deceitfully (in another's presence) after having reviled him to his destruction (behind his back) is a greater evil than the commission of (every other) sin and the destruction of (every) virtue.

---

௩. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

(பரி - ரை.) எ-து.—பிறனைக் காணுதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கினியனுகப் பொய்த்து ஒருவன் உயிர் வாழ்தலின், அது செய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும், எ-று.

பின்புறங்கூறிப் பொய்த்தலொழிதலின், சாதல் ஆக்கந்தருமென்றார். ஆக்கம் - அஃதொழிந்தார் மறுமைக்கண் எய்தும் பயன். அறம்-ஆகுபெயர். தருமென்பது இடவழுவமைதி.

(தெ - ப - ரை.)—புறங்கூறி - பிறனைக்காணுதவிடத்தே இகழ்ந்துபேசி, பொய்த்து-கண்டவிடத்தே அவனைப் புகழ்ந்து, உயிர்

வாழ்தலின் - (ஒருவன்) உயிர்வாழ்தலினும், சாதல் - (அதுசெய்யாமல்) உயிர்விடுதல், (அவனுக்கு) அறங்கூறும் - தருமநூல்களினாலே சொல்லப்பட்ட, ஆக்கம் தரும்-பயனைத்தரும்.

**183.** Death rather than life will confer upon the deceitful back-biter the profit which (the treatises on) virtue point out.

---

ச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் எதிரேநின்று கண்ணோட்டமறச் சொன்னானாயினும், அவனெதிர் இன்றிப் பின்வருங்குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லாதொழிக, எ-று.

பின்-ஆகுபெயர். சொல்வான்தொழில் சொன்மே லேற்றப்பட்டது. இவை மூன்றுபாட்டானும் புறங்கூற்றினது கொடுமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கண்நின்று - (ஒருவனை) எதிரே நின்று, கண் அற-தாட்சிணியமில்லாமல், சொல்லினும்-சொன்னாலும், முன் இன்று - (அவன்) எதிரேஇல்லாமல், பின் நோக்காச்சொல்-பின் வருங் குற்றத்தை நோக்காத சொல்லை, சொல்லற்க - சொல்லாதிருக்கக்கடவன்.

**184.** Though you speak without kindness before another's face, speak not in his absence words which regard not the evil subsequently resulting from it.

---

ரு. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

(பரி-ரை.) எ-து,—புறஞ்சொல்லுவான் ஒருவன் அறனை நன்றென்று சொல்லினும், அது தன் மனத்தானுய்ச் சொல்லுகின்றானல்ல னென்பது அவன் புறஞ்சொல்லுதற்குக் காரணமான மனப்புன்மையானே அறியப்படும், எ-று.

மனந்தீதாகலின், அச்சொற்கொள்ளப்படாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—(புறங்கூறுவோனொருவன் அறம் நன்றென்று வாயினாலேசொல்லினும்) அறஞ்சொல்லும் - அறத்தை அப்படிச்சொல்லுதற்கு ஏற்ற, நெஞ்சத்தான் அன்மை - மனத்தையுடையவ னல்லாதவனாயிருக்கையானது, புறஞ்சொல்லும்-அப்புறங்கூறுதற்குக்காரணமாகிய, புன்மையால் - (மனப்) புன்மையாலே, காணப்படும் - (அறிவுடையோரால்) அறியப்படும்.

**185.** The emptiness of that man's mind who (merely) praises virtue will be seen from the meanness of reviling another behind his back.

---

சு. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

(பரி-ரை.) எ-து,—பிறனொருவன் பழியை அவன்புறத்துக் கூறும வன், தன்பழி பலவற்றுள்ளும் உளையுந்திறமுடையவற்றைத் தெரிந்து அவனாற் கூறப்படும், எ-று.

புறத்தென்பது அதிகாரத்தாற்பெற்றாம். இது வருகின்றவற்றிற்கும் ஒக்கும். திறன்-ஆகுபெயர். தன்னைப் புறங்கூறியவாறு கேட்டான் அக்கூறியாற்கு அவ்வளவன்றி அவனிறந்து பட்டு உளையுந்திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரே கூறுமாகலின், திறன்றெரிந்து கூறப்படுமென்றார்.

(தெ-ப-ரை.)—பிறன்பழி - பிறனொருவனதுபழியை, கூறுவான் - (அவனைக்காணாதவிடத்தே) சொல்லுவோன், தன் பழியுள்ளும்-தனது (பல) பழிகளுள்ளும், திறன் - (வருந்தும்) விதமுடையவைகளை, தெரிந்து-ஆராய்ந்து, கூறப்படும் – (அவனாலே) சொல்லப்படுவான்.

**186.** The character of the faults of that man who publishes abroad the faults of others will be sought out and published.

---

எ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பா நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்.

(பரி-ரை.) எ-து,—தம்மை விட்டு நீங்கும்ஆற்றாற் புறங்கூறித் தங்கேளிரையும் பிரியப்பண்ணுவர், கூடி மகிழுமாறு இனியசொற்களைச் சொல்லி அயலாரோடு நட்பாடலை அறியாதார், எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கேளிரையும் பிரிப்பரென்றகருத்தான், அயலாரோடுமென்பது வருவித்துரைக்கப்பட்டது. அறிதல் - தமக்குறுதியென்றறிதல். "கடியுமிடந்தேற்றான் சோர்ந்தனன்கை" என்புழிப் போலத் தேற்றாமை தன்வினையாய் நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—நகச்சொல்லி – (கூடி) மகிழும்படி (இனிய சொற்களைச்) சொல்லி, நட்புஆடல் – (அயலாரோடு) சிநேகஞ் செய்தலை, தேற்றாதவர் - (தமக்குஉறுதியென்று) அறியாதவர், பகச்சொல்லி – (தம்மைவிட்டு) நீங்கும்படி புறங்கூறி, கேளிர்-(தமது) சுற்றத்தாரையும், பிரிப்பர்-பிரியப்பண்ணுவர்.

**187.** Those who know not to live in friendship with amusing conversation will by back-biting estrange even their relatives.

---

அ. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு.

(பரி-ரை.) எ-து,— தம்மொடு செறிந்தாரது குற்றத்தையும் அவர் புறத்துத் தூற்றும் இயல்பினையுடையார், அயலார்மாட்டுச் செய்வது யாது கொல்லோ! எ-று.

தூற்றுதல் - பலரும் அறியப் பரப்புதல். அதனிற் கொடியது பிறி தொன்று காணாமையின், என்னைகொலென்றார். செய்வதென்பது சொல் லெச்சம். என்னர்கொலென்று பாடமோதி, எவ்வியல்பினராவரொன் றுரைப்பாருமுளர்.

(தெ - ப - ரை.)—துன்னியார் - (தம்மோடு) நெருங்கினவ ரது, குற்றமும் - குற்றத்தையும், தூற்றும் - (அவரைக் காணாத விடத்தே) பரப்புகின்ற, மரபினார் - இயல்பை யுடையவர், ஏதி லார்மாட்டு - அயலாரிடத்து, என்னைகொல் - யாதுதான் செய் யார்.

188. What will those not do to strangers whose nature leads them to publish abroad the faults of their intimate friends?

---

௧௯. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(பரி - ரை.) எ-து,—பிறர் நீங்கினவளவு பார்த்து அவர்பழித்துரை யை உரைப்பானது உடற்பாரத்தை, நிலம் இக்கொடியது பொறுத்தலே எனக் கறமாவதெனக் கருதிப் பொறுக்கின்றதுபோலும், எ-று.

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கரி தென்னுங் கருத்தால், அறனோக்கியாற்றுங்கொ லென்றார். இவை ஐந்து பாட்டானும் புறங்கூறுவார்க் கெய்துங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—புறன்நோக்கி - பிறர் நீங்கினஇடம்பார்த்து, புல்சொல் - (அவரது) பழிப்புச்சொல்லை, உரைப்பான் - சொல் லுவோனது, பொறை - (உடற்) பாரத்தை, வையம் - பூமியா னது, அறன்நோக்கி - (இக்கொடியதைச் சுமத்தலே எனக்கு) அறமாவதென்று நினைத்து, ஆற்றுங்கொல் - சுமக்கின்றதுபோ லும்.

189. The world through charity supports the weight of those who reproach others observing their absence.

---

௧௦. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(பரி - ரை.) எ-து,—ஏதிலாரைப் புறங்கூறுவார் அதற்கு அவர்குற் றங்காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தங்குற்றத்தையுங் காணவல்லரா யின்,அவர் நிலைபேறுடைய வுயிர்க்கு வருவதொரு துன்பமுண்டோ, எ-று.

நடுவுநின்று ஒப்பக்காண்ட லருமைநோக்கிக் காண்கிற்பினென்றும், கண்டவழியொழிதலிற் பாவம் இன்றாம், ஆகவே வரும் பிறவிகளினுந் துன் பம் இல்லை யென்பது நோக்கி உயிர்க்குத் தீதுண்டோ வென்றுங் கூறினார். இதனாற் புறங்கூற்றொழிதற்கு உபாயங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஏதிலார்குற்றம்போல் - அயலாரது குற்றத்தைக்காண்பதுபோல், தங்குற்றம் - (அப்புறங்கூறுதலாகிய) தமது குற்றத்தையும், காண்கிற்பின் - காணமாட்டுவாராயின், மன்னும்உயிர்க்கு - (அவரது) நிலைபெற்ற உயிர்க்கு, தீது - (வருவதொரு) துன்பம், உண்டோ - இல்லை.

**190.** If they observed their own faults as they observe the faults of others, would any evil happen to men ?

---

## உ0-ம். அதி—பயனிலசொல்லாமை.

அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என வாக்கின்கண் நிகழும் பாவநான்கனுள், பொய் துறந்தார்க்கல்லது ஒருதலையாகக் கடியலாகாமையின், அஃதொழித்து, இல்வாழ்வாராற் கடியப்படும் ஏனைமூன்றனுள், கடுஞ்சொல் இனியவைகூறலானும், குறளை புறங்கூறாமையானும், விலக்கி, நின்ற பயனில்சொல் இதனான் விலக்குகின்றாராகலின், இது புறங்கூறாமையின்பின் வைக்கப்பட்டது.

க. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

(பரி-ரை.) எ - து,—அறிவுடையார் பலருங் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுவான் எல்லாரானும் இகழப்படும், எ-று.

அறிவுடையார் பலரும் வெறுப்பவே ஒழிந்தாரானும் இகழப்படுதலின், எல்லாரு மெள்ளப்படுமென்றார். மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது.

(தெ-ப-ரை.)—பல்லார் - (அறிவுடையோர்) பலரும், முனிய-(கேட்டு)வெறுக்க, பயன்இல - பயனில்லாத சொற்களை, சொல்லுவான்-சொல்லுவோன், எல்லாரும்-எல்லாராலும், எள்ளப்படும் - இகழப்படுவான்.

**191.** He who to the disgust of many speaks useless things will be despised by all.

---

உ. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

(பரி-ரை.) எ-து,—பயனிலவாகிய சொற்களை அறிவுடையார் பலர்முன்பே ஒருவன் சொல்லுதல் விருப்பமிலவாகிய செயல்களைத் தன்னட்டார்மாட்டுச் செய்தலினும் தீது, எ-று.

விருப்பமில - வெறுப்பன. இச்சொல் அச்செயலினும் மிகவிகழற்பாடு பயக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—பல்லார்முன் - (அறிவுடையோர்) பலர் முன்னே, பயன்இல - பயனில்லாதசொற்களை, சொல்லல்-(ஒருவன்) சொல்லுதலானது, நட்டார்கண் - (தன்) சிநேகரிடத்து, நயன் இல - விருப்பமில்லாத செயல்களை, செய்தலின்-செய்தலினும், தீது - தீயது.

**192.** To speak useless things in the presence of many is a greater evil than to do unkind things towards friends.

---

௩. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

(பரி-ரை.) எ-து,—பயனிலவாகிய பொருள்களை ஒருவன் விரித்துரைக்கு முரைதானே இவன் நீதியிலனென்பதனை உரைக்கும், எ-று.

உரையால் இவன் நயனிலனென்பதறியலாமென்பார், அதனை உரைமேலேற்றி உரைசொல்லுமென்றார்.

(தெ-ப-ரை.)—பயன்இல-பயனில்லாத பொருள்களை, பாரித்து - விரித்து, உரைக்கும்உரை - (ஒருவன்) சொல்லும் சொல்லானது, நயன்இலன்என்பது - (இவன்) நீதியில்லாதவனென்பதனை, சொல்லும் - அறிவிக்கும்.

**193.** That conversation in which a man utters forth useless things will say of him " he is without virtue."

---

௪. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

(பரி-ரை.) எ-து,—பயனொடுபடாத பண்பில் சொற்களை ஒருவன் பலரிடைச் சொல்லுமாயின், அவை அவர்மாட்டு நீதியோடுபடாவாய், அவனை நற்குணங்களி னீக்கும், எ-று.

பண்பு—இனிமையும் மெய்ம்மையும் முதலாய சொற்குணங்கள். சொல்லுமாயி னென்பதும், அவர்மாட்டென்பதும், எச்சமாக வருவிக்கப்பட்டன.

(தெ-ப-ரை)—பயன்சாரா - பயனோடு பொருந்தாத, பண்பில்சொல் - குணமில்லாத சொற்களை, பல்லார்அகத்து - பலரிடத்தே, (ஒருவன் சொல்லுவானாயின் அவை அவரிடத்தே) நயன்சாரா - நீதியோடு பொருந்தாதவையாகி, நன்மையின் - நற்குணங்களி லிருந்து, நீக்கும் - (அவனை) நீக்கும்.

**194.** The words devoid of profit or pleasure which a man speaks will, being inconsistent with virtue, remove him from goodness.

---

௫. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(பரி-மா.) எ - து,—பயனிலவாகிய சொற்களை இனிய நீர்மையுடையார் சொல்லுவராயின், அவரது விழுப்பமும் அதனால் வரும் நன்குமதிக்கற்பாடும் உடனே நீங்கும், எ-று.

நீர்மை-நீரின்றன்மை. சொலினென்பது சொல்லாமையைவிளக்கிற்று.

(தெ-ப-மா.)—பயன்இல - பயனில்லாதசொற்களை, நீர்மை உடையார் - குணத்தன்மையையுடையவர், சொலின் - சொல்லுவாராயின், சீர்மை - (அவரது) மேம்பாடானது, சிறப்பொடு- (அதனால் வரும்) நன்குமதிக்கப்படுதலுடனே, நீங்கும் - (அவரிடத்திருந்து) நீங்கும்.

**195.** If the good speak vain words their eminence and excellence will leave them.

---

சுு. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

(பரி-மா.) எ-து,—பயனில்லாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லுவானை மகனென்று சொல்லற்க; மக்களுட் பதரென்று சொல்லுக, எ-று.

அல் விகுதி வியங்கோள், முன் எதிர்மறையினும், பின் உடம்பாட்டினும் வந்தது. அறிவென்னும் உள்ளீடின்மையின், மக்கட்பதடியென்றார். இவை ஆறுபாட்டானும் பயனில்லாதசொற்களைச் சொல்லுதலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-மா.)—பயன்இல்சொல் - பயனில்லாதசொற்களை, பாராட்டுவானை - (பலதரமும்) சொல்லுவோனை, மகன்எனல் - மனிதனென்றுசொல்லாதே, மக்கள்பதடிஎனல் - மனிதருக்குள்ளே பதரென்று சொல்லக்கடவாய்.

**196.** Call not him a man who parades forth his empty words. Call him the chaff of men.

---

எ. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

(பரி-மா.) எ-து,—நீதியோடு படாதசொற்களைச் சான்றோர் சொன்னாராயினும், அஃதமையும்; அவர் பயனிலவற்றைச் சொல்லாமைபெறின், அது நன்று, எ-று.

சொல்லினுமெனவே, சொல்லாமை பெறப்பட்டது. நயனிலவற்றினும் பயனில தீயவென்பதாம்.

(தெ-ப-மா.)—சான்றோர் - அறிவுடையோர், நயன்இல - நீதியோடு பொருந்தாதசொற்களை, சொல்லினும் - சொன்னாலும், சொல்லுக - சொல்லக்கடவர்; பயன்இல - பயனில்லாத சொற்களை, சொல்லாமை - சொல்லாமை (பெறின்), நன்று - (அது) நன்று.

**197.** Let the wise if they will, speak things without excellence; it will be well for them not to speak useless things.

---

அ. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

(பரி - ரை.) எ-து,—அறிதற்கரிய பயன்களை ஆராயவல்ல அறிவினையு டையார் மிக்க பயனுடையவல்லாத சொற்களைச் சொல்லார், எ-று.

அறிதற்கரிய பயன்களாவன—வீடுபேறும், மேற்கதிச்செலவும் முத லாயின. பெரும்பயனில்லாதவெனவே, பயன் சிறிதுடையனவும் ஒழிக் கப்பட்டன.

(தெ-ப-ரை.)—அரு பயன்-அறிதற்கரிய பயன்களை, ஆயும்-ஆராயவல்ல, அறிவினார்-அறிவையுடையார், பெரு பயன் இல் லாதசொல் - மிகுந்த பயனில்லாதசொற்களை, சொல்லார்-சொல் லார்கள்.

198. The wise who seek after rare pleasures will not speak words that have not much weight in them.

---

கூ. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

(பரி - ரை.) எ-து,—பயனில் நீங்கிய சொற்களை மறந்துஞ்சொல்லார், மயக்கத்தில் நீங்கிய தூய அறிவினையுடையார், எ-று.

தூயவறிவு - மெய்யறிவு. மருடீர்ந்தவென்னும் பெயரெச்சம் காட்சிய வரென்னுங் குறிப்புப்பெயர்கொண்டது. இவைமூன்றுபாட்டானும் பய னிலசொல்லாமையின் குணங்கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—மருள்தீர்ந்த - மயக்கத்தில்நீங்கிய, மாசு அறு-குற்றமற்ற [பரிசுத்தமாகியவென்றபடி], காட்சியவர்-அறி வினையுடையோர், பொருள்தீர்ந்த – பயனில்நீங்கிய சொற்களை, பொச்சாந்தும் - மறந்தும், சொல்லார் - சொல்லார்கள்.

199. Those wise men who are without faults and are freed from ignorance will not even forgetfully speak things that profit not.

---

௨0. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

(பரி - ரை.) எ - து,—சொற்களிற்பயனுடைய சொற்களைச் சொல் லுக; சொற்களிற்பயனில்லாத சொற்களைச் சொல்லாதொழிக, எ-று.

சொல்லிலென்பது இருவழியும் மிகையாயினும், சொற்பொருட்பின் வரு நிலையென்னும் அணிநோக்கிவந்தது, "வைகலும் வைகல் வரக்கண் டும்" என்பதுபோல, இதனாற் சொல்லப்படுவனவும் படாதனவும் நியமிக் கப்பட்டன.

(தெ-ப-ரை.)—சொல்லில் – சொற்களிலே, பயன் உடைய-பிரயோசனமுடைய சொற்களை, சொல்லுக – சொல்லக்கடவர்;

சொல்லில் - சொற்களிலே, பயன்இலாச்சொல்-பிரயோசனமில்லாதசொற்களை, சொல்லற்க - சொல்லாதிருக்கக்கடவர்.

**200.** Speak what is useful, and speak not useless words.

---

## உக-ம். அதி—தீவினையச்சம்.

அஃதாவது பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனன் மெய்யின்கண் நிகழும் பாவங்களெல்லாந் தொகுத்து விலக்குகின்ற தாகலின், இது பயனில சொல்லாமையின் பின் வைக்கப்பட்டது.

க. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(பரி-ரை.) எ - து,— தீவினையென்று சொல்லப்படும் மயக்கத்தை முன்செய்த தீவினையுடையார் அஞ்சார்; அஃதிலராகிய சீரியார் அஞ்சுவர், எ-று.

தீவினையென்னுஞ் செருக்கெனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. மேற்றொட்டுச் செய்து கைவந்தமையான் அஞ்சாரென்றும், செய்தறியாமையான் அஞ்சுவரென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—தீவினை என்னும் செருக்கு - தீவினையென்று சொல்லப்படுமயக்கத்தை, தீவினையார் - (முன்செய்த) தீவினையுடையோர், அஞ்சார்-பயப்படார்; விழுமியார் - (அதுஇல்லாத) மேலோர், அஞ்சுவர் - பயப்படுவர்.

**201.** Those who have experience of evil deeds will not fear, but the excellent will fear the pride of sin.

---

உ. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

(பரி-ரை.) எ-து,—தனக்கின்பம் பயத்தலைக் கருதிச் செய்யுந் தீவினைகள் பின் அஃதொழிந்துத் துன்பமே பயத்தலான், அத்தன்மையவாகிய தீவினைகளை ஒருவனற் றீயினுமஞ்சப்படும், எ-று.

பிறிதொருகாலத்தும் பிறிதொருதேயத்தும் பிறிதோருடம்பினுஞ் சென்று சுடுதல் தீக்கின்மையின், தீயினுமஞ்சப்படுவதாயிற்று.

(தெ - ப-ரை.)—தீயவை - (இன்பத்தின் பொருட்டுச்செய்யும்) தீவினைகள், தீய - (பின்பு) துன்பங்களை, பயத்தலால் - தருதலால், தீயவை - (அப்படிப்பட்ட) தீவினைகள், தீயினும் - தீயினும் அதிகமாக, அஞ்சப்படும் - (ஒருவனல்) அஞ்சப்படும்.

**202**. Because evil produces evil, therefore should evil be feared more than fire.

---

கூ. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(பரி-ரை.) எ-து,—தமக்குறுதி நாடும் அறிவுகளெல்லாவற்றுள்ளும் தலையாய அறிவென்று சொல்லுவர் நல்லோர், தம்மைச் செறுவார்மாட் டும் தீவினைகளைச் செய்யாது விடுதலை, எ-று.

விழ்தற்குக் காரணமாகிய அறிவை விடுதலென்றும், செயத்தக்குழி யுஞ் செய்யாதொழியவே தமக்குத் துன்பம் வாராதென உய்த்துணர்த லின், அதனை அறிவினுளெல்லாந் தலையென்றுங் கூறினர். செய்யாது என் பது கடைக்குறைந்து நின்றது. இவை மூன்றுபாட்டானும் தீவினைக் கஞ்ச வேண்டுமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செறுவார்க்கும் - (தம்மை) வருத்துவோ ரிடத்தும், தீய - தீவினைகளை, செய்யாவிடல் - செய்யாமல் விடு தலை, அறிவினுள் எல்லாம் – (தமக்கு நன்மை ஆராயப்பட்ட) அறிவுகளெல்லாவற்றிலும், தலை - முதன்மையாகிய அறிவாகும், என்ப - என்றுசொல்லுவர் (நல்லோர்).

**203.** To do no evil even to enemies will be called the chief of all virtues.

---

ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாதொழிக; எண்ணுவனாயின், தனக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும், எ-று.

கேடென்பன ஆகுபெயர். சூழ்கின்றபொழுதே தானும் உடன்சூழ்த லின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது பெறப்பட்டது. அறக்கடவு ளெண்ணுதலாவது அவன்கெடத் தான் நீங்க நினைத்தல். தீவினை யெண்ணலும் ஆகாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—பிறன் - (ஒருவன்) பிறனுக்கு, கேடு - கேட் டைத்தரும்வினையை, மறந்தும்-மறந்தாகிலும், சூழற்க-எண்ணா திருக்கக்கடவன்; சூழின் - எண்ணுவானாயின், சூழ்ந்தவன் - அவ் வெண்ணினவனுக்கு, கேடு - கேட்டைத்தரும்வினையை, அறம்- அறக்கடவுள், சூழும் – எண்ணும்.

**204.** Even through forgetfulness meditate not the ruin of another. Virtue will meditate the ruin of him who thus meditates.

---

ரு. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

(பரி-ரை.) எ-து,—யான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட் டுப் பிறர்க்குத் தீவினைகளை ஒருவன் செய்யாதொழிக; செய்வனாயின் பெயர்த்தும் வறியனாம், எ-று.

அத்தீவினையாற் பிறவிதோறும் இலனுமென்பதாம். அன்-விகுதி முன் தனித்தன்மையினும், பின் படர்க்கையொருமையினும் வந்தது. தனித் தன்மை "உளனு வென்னுயிரையுண்டு" என்பதனானுமறிக. மற்று - அசை நிலை. இலமென்று பாட மோதுவாரு முளர். பொருளான் வறியனெனக் கருதித் தீயவை செய்யற்க ; செய்யின், அப்பொருளானேயன்றி நற்குண நற்செய்கைகளானும் வறியனுமென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ை.)—இலன்என்று - (யான்) வறுமையை யுடையேனென்று நினைத்து, தீயவை - (அது தீர்தற்பொருட்டுத்) தீவினைகளை, செய்யற்க - (ஒருவன் பிறர்க்குச்) செய்யாதிருக்கக் கடவன், செய்யின் - செய்வானாயின், பெயர்த்து - பின்னும், இலன் ஆகும் - வறுமையை யுடையவனாவான்.

**205.** Commit not evil, saying, "I am poor:" if you do, you will become poorer still.

---

சு. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

(பரி-ை.) எ-து,—துன்பஞ்செய்யுங் கூற்றவாகிய பாவங்கள் தன்னைப் பின்வந்து வருத்துதலை வேண்டாதவன், தீமைக்கூற்றவாகிய வினைகளைத் தான் பிறர்மாட்டுச் செய்யாதொழிக, எ-று.

செய்யின், அப்பாவங்கள் அடுதல் ஒருதலையென்பதாம்.

(தெ-ப-ை.)—நோய்ப்பால - துன்பஞ்செய்யும் பகுதியை யுடைய பாவங்கள், தன்னைஅடல்வேண்டாதான்-தன்னைப் (பின் வந்து) வருத்துதலை விரும்பாதவன், தீப்பால - தீமையாகிய பகுதியையுடைய வினைகளை, தான் பிறர்கண்-தான் பிறரிடத்தே, செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன்.

**206.** Let him not do evil to others who desires not that sorrows should pursue him.

---

எ. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

(பரி-ை.) எ-து,—எத்துணைப் பெரியபகை யுடையாரும் அதனை ஒருவாற்றாற் றப்புவர் ; அவ்வாறன்றித் தீவினையாகிய பகை நீங்காது புக்குழிப் புக்குக் கொல்லும், எ-று.

"வீயா - துடம்பொடு நின்ற வுயிரு மில்லை" என்புழியும் வீயாமை நீங்காமைக்கண்வந்தது.

(தெ-ப-ை.)—எனைப்பகைஉற்றாரும் - எவ்வளவு பெரிய பகையையுடையவரும், உய்வர் - (அதனைஒருவழியினால்) தப்புவார்; (அப்படியல்லாமல்) வினைப்பகை - தீவினையாகிய பகையா

னது, வீயாது - நீங்காமல், பின்சென்று-பின்தொடர்ந்து, அடும்-கொல்லும்.

**207.** 'However great be the enmity men have incurred they may still live. The enmity of sin will incessantly pursue and kill.

அ. தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

(பரி-ரை.) எ-து,—பிறர்க்குத் தீவினைகளைச்செய்தார் தாங்கெடுதல் எத்தன்மைத்தெனின், ஒருவன்நிழல் நெடிதாகப்போயும் அவன்றன்னை விடாது வந்து அடியின்கண் தங்கிய தன்மைத்து, எ-று.

இவ்வுவமையைத் தன்காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப் பற்றி நின்று, அது வந்துழி உருப்பதாய தீவினையைச் செய்தார் பின் அதனாற் கெடுதற்கு உவமையாக்கி உரைப்பாருமுளர். அஃது உரை அன் றென்பதற்கு அடியுறைந்த நிழல் தன்னை வீய்ந்தற் றென்னாது வீயாதடி யுறைந்தற்றென்ற பாடமே கரியாயிற்று. மேல் வீயாது பின்சென்றடு மென்றார், ஈண்டு அதனை உவமையான் விளக்கினார்.

(தெ-ப-ரை.)—தீயவை - தீவினைகளை, செய்தார் - (பிறருக்குச்) செய்தவர், கெடுதல் - (தாம்) கெடுதல், (எத்தன்மைத் தென்றால்) நிழல் - (ஒருவனது) நிழலானது, (நெடுந்தூரம்போயினும்), தன்னை - அவனை, வீயாது-விடாது வந்து, அடி - அடியிடத்தே, உறைந்தது அற்று - தங்கியதன்மைத்து.

**208.** Destruction will dwell at the heels of those who commit evil even as their shadow that leaves them not.

கூ. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந் துன்னற்க தீவினைப் பால்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன், தன்னைத்தான் காதல் செய்தல் உடைய னாயின், தீவினையாகிய பகுதி எத்துணையுஞ் சிறிதொன்றாயினும் பிறர்மாட்டுச் செய்யா தொழிக, எ-று.

நல்வினை, தீவினையென வினைப்பகுதி இரண்டாகலின், தீவினைப்பா லென்றார். பிறர்மாட்டுச்செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத்தல் விளக்கினாராகலின், தன்னைத்தான் காதலனாயினென்றார். இவையாறு பாட்டானும் பிறர்க்குத் தீவினைசெய்யின் தாங்கெடுவரென்பது கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—தன்னைதான் காதலன் ஆயின் - (ஒருவன்) தன்னைத்தான் விரும்புதலுடையவனானால், தீவினைப்பால் - தீவினையாகிய பிரிவினுள், எனைத்து ஒன்றும் - எவ்வளவு சிறிய தொன்றை யாயினும், துன்னற்க - (பிறரிடத்தே) செய்யாதிருக்கக்கடவன்.

**209.** If a man love himself, let him not commit any sin however small.

கo. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் செந்நெறிக்கட் செல்லாது கொடுநெறிக் கட்சென்று பிறர்மாட்டுத் தீவினைகளைச் செய்யானாயின், அவனை அரிதாகிய கேட்டையுடைய னென்பதறிக, எ-று.

அருமை—இன்மை. அருங்கேடனென்பதனை "சென்று சேர் கல்லாப் புள்ள புள்ளி லென்றாழ் வியன்குளம்" என்பதுபோலக்கொள்க. ஓடி என்னும் வினையெச்சம் செய்யானென்னும் எதிர்மறைவினையுட் செய்தலோடு முடிந்தது. இதனால் தீவினைசெய்யாதவன் கேடிலனென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மருங்குஓடி - (ஒருவன்) நல்ல வழியிற் போகாமல் கெட்ட வழியிற்போய், தீவினை - தீவினைகளை, செய்யான்எனின் - (பிறரிடத்தே) செய்யானாயின், அருங்கேடன் என்பது - (அவன்) கேட்டை அருமையாக வுடையவ னென்பதை [கேட்டை யுடையவ னல்லன் என்றபடி], அறிக-அறியக்கடவர்.

**210.** Know ye that he is freed from destruction who commits no evil, going to neither side of the right path.

---

## உஉ-ம். அதி—ஒப்புரவறிதல்.

அஃதாவது உலகநடையினை யறிந்து செய்தல். உலக நடை வேத நடைபோல அறநூல்களுள் கூறப்படுவதன்றித் தாமேஅறிந்து செய்யுந்தன்மைத்தாகலின், ஒப்புரவறிதலென்றார். மேல் மன மொழி மெய்களால் தவிரத்தகுவன கூறினர், இனிச்செய்யத் தகுவனவற்றுள் எஞ்சிநின்றன கூறுகின்றாராகலின், இது தீவினையச்சத்தின்பின் வைக்கப்பட்டது.

க. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

(பரி-ரை.) எ-து,—தமக்கு நீர் உதவுகின்ற மேகங்களினிடத்து உயிர்கள் என்னகைம்மாறு செய்யாநின்றன. ஆகலான், அம்மேகங்கள்போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்குவனஅல்ல, எ-று.

என்னாற்றுமென்ற வினா யாதும் ஆற்றா என்பது தோன்ற நிற்றலின், அது வருவித்துரைக்கப்படும். தவிருந்தன்மைய அல்ல என்பது கடப்பாடென்னும் பெயரானே பெறப்பட்டது. செய்வாரது வேண்டாமையைச் செய்யப்படுவன மேலேற்றினர்.

(தெ-ப-ரை.)—உலகு - உயிர்களானவை, மாரிமாட்டு- (தமக்கு நீருதவுகின்ற) மேகங்களிடத்து, என் - என்னபிரதியுபகாரத்தை, ஆற்றும் - செய்துவருகின்றன [ஒன்றும் செய்கின்றனவில்லையென்றபடி;] (ஆதலால்) கடப்பாடு - (அம்மேகங்கள் போல்வார்செய்யும்) உபகாரங்களும், கைம்மாறு-பிரதியுபகாரங்களை, வேண்டா - விரும்புவனஅல்ல.

**211.** Benevolence seeks not a return. What does the world give back to the clouds?

---

உ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(பரி - வை.) எ-து,—தகுதியை யுடையார்க்காயின் முயறலைச்செய்து ஈட்டிய பொருள் முழுதும் ஒப்புரவுசெய்தற் பயத்தவாம், எ-று.

பிறர்க்குதவாதார் போலத் தாமே உண்டற்பொருட்டும் வைத்திழத் தற்பொருட்டும் அன்றென்ப தாயிற்று.

(தெ-ப-வை.)—தக்கார்க்கு - தகுதி யுடையவர்க்கு ஆயின், தாள் ஆற்றி-முயற்சி செய்து, தந்த-சம்பாதிக்கப்பட்ட, பொருள் எல்லாம் - பொருள் முழுவதும், வேளாண்மை - உபகாரத்தை, செய்தல் பொருட்டு - செய்தலாகிய பயனுடையனவாம்.

**212.** All the wealth acquired with perseverance by the worthy is for the exercise of benevolence.

---

ஙு. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

(பரி-வை.) எ-து,—தேவருலகத்தும் இவ்வுலகத்தும் ஒப்புரவுபோல நல்லன பிறசெயல்களைப் பெறுதலரிது, எ-று.

ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லாரும் ஒருதன்மைய ராதலின், புத்தே ளுலகத்து அரிதாயிற்று; யாவர்க்கும் ஒப்பது இதுபோற் பிறிதொன்று இன்மையின், இவ்வுலகத்து அரிதாயிற்று. பெறற்கரிதென்று பாடமோதிப் பெறுதற்குக் காரண மரிதென் றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட் டானும் ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-வை.)—புத்தேள் உலகத்தும் - தேவருலகத்திலும், ஈண்டும் - இவ்வுலகத்திலும், ஒப்புரவின்-உபகாரம்போல, நல்ல- நல்லவையாகிய, பிற-வேறுசெயல்களை, பெறல்-பெறுதல், அரிது- அரிதாம்.

**213.** It is difficult to obtain another good equal to benevolence either in this world or in that of the gods.

---

ச. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

(பரி-வை.) எ-து,—உயிரோடு கூடி வாழ்வானுவான் உலக நடையினை அறிந்து செய்வான்; அஃதறிந்து செய்யாதவன் உயிருடையவனே ஆயினும், செத்தாருள் ஒருவனுகக் கருதப்படும், எ-று.

உயிரின் அறிவுஞ் செயலுங் காணுமையின், செத்தாருள் வைக்கப்படு மென்றார். இதனால் உலகநடைவழு வேதநடைவழுப்போலத் தீர்திறன் உடைத்தன்றென்பது கூறப்பட்டது.

(தெ-ப-வை.)—ஒத்தது அறிவான் - உலகநடையை அறிந்து செய்பவன், உயிர்வாழ்வான் - உயிரோடுகூடி வாழ்பவனுவான்,

மற்றையான் - அதனை அறிந்துசெய்யாதவன், (உயிருடையவனு யிருந்தாலும்) செத்தாருள் - இறந்தவர்களில், வைக்கப்படும் - (ஒருவனாக) வைக்கப்படுவான் [நினைக்கப்படுவா னென்றபடி.]

**214.** He truly lives who knows (and discharges) the proper duties (of benevolence.) He who knows them not will be reckoned among the dead.

---

ரு. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

(பரி-ளா.) எ-து,—உலகநடையை விரும்பிச்செய்யும் பெரிய அறிவினையுடையவனது செல்வம், ஊரின்வாழ்வார் தண்ணீருண்ணுங் குளம் நீர்நிறைந்தாற்போலும், எ-று.

நிறைதலென்னும் இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மே லேற்றப்பட்டது. பாழ்போகாது நெடிதுநின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவு மென்பதாம்.

(தெ-ப-ளா.)—உலகு - உலகநடையை, அவாம் - விரும்பிச்செய்யும், பேர்அறிவு ஆளன்-பெரிய அறிவினையுடையவனது, திரு - செல்வம், ஊருணி - ஊரில் வாழ்வார் நீருண்ணுங் குளமானது, நீர்நிறைந்தது அற்று - நீரினால் நிறைந்ததுபோலும்.

**215.** The wealth of that man of eminent knowledge who desires to exercise benevolence approved of by the world, is like the full waters of a city tank.

---

சு. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

(பரி-ளா.) எ-து,—செல்வம் ஒப்புரவுசெய்வான் கண்ணே படுமாயின், அது பயன்படுமரம் ஊர்நடுவே பழுத்தாற்போலும், எ-று.

உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின், அதனையே நய னென்றார்; எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுக்குமென்பதாம்.

(தெ-ப-ளா.)—செல்வம் - செல்வமானது, நயன் உடையான்கண் - உபகாரஞ்செய்பவனிடத்தே, படின் - உண்டாகுமானால் (அவ்வுண்டாதல்), ஊர்உள் - ஊர்நடுவே, மரம் - மரத்தினிடத்தே, பயன் - பழமரானது, பழுத்தது அற்று - பழுத்தாற்போலும்.

**216.** The wealth of a man (possessed of the virtue) of benevolence is like the ripening of a fruitful tree in the midst of a town.

---

எ. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்,

(பரி-ரை.) எ-து,—செல்வம் ஒப்புரவுசெய்யும் பெரியதகைமையை யுடையான்கண்ணே படுமாயின், அஃது எல்லாவுறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் தப்பாத மரத்தை ஒக்கும், எ-று.

தப்புதலாவது கோடற்கு அரிய இடங்களில் நின்றுதல், மறைந்து நின்றுதல், காலத்தான் வேறுபட்டாதல் பயன்படாமை. தன்குறைநோக்காது எல்லார் வருத்தமுந் தீர்க்குமென்பதாம். இவை மூன்றுபாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—செல்வம் - செல்வமானது, பெருந்தகையான்கண் - (உபகாரஞ்செய்யும்) பெரியதகைமையை யுடையவனிடத்தே, படின்-உண்டாகுமானால், (அச்செல்வமானது) மருந்தாகி - (சமூலமும் வியாதிகளுக்கு) மருந்தாய், தப்பா-தப்பாத, மரத்துஅற்று - மரத்தைஒக்கும்.

**217.** If wealth be in the possession of a man who has the great excellence (of benevolence), it is like a tree which as a medicine is an infallible cure for disease.

---

அ. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(பரி-ரை.) எ-து,—செல்வம் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தளரார், தாம்செய்யத் தகுவனவற்றை அறிந்த இயற்கை அறிவுடையார், எ-று.

பிறவெல்லாம் ஒழியினும், இஃதொழியாரென்பதாம்.

(தெ - ப - ரை.)—கடன் - (தாம்செய்யத்தகுவனவாகிய) முறைமைகளை, அறி-அறிந்த, காட்சியவர்-இயற்கை யறிவையுடையவர், இடன் இல் பருவத்தும் - செல்வஞ்சுருங்கியகாலத்திலும், ஒப்புரவிற்கு - உபகாரஞ்செய்வதற்கு, ஒல்கார் - தளரார்.

**218.** The wise who know what is *duty* will not scant their benevolence, even when they are without wealth.

---

௯. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

(பரி-ரை.) எ-து,—ஒப்புரவு செய்தலையுடையான் நல்கூர்ந்தானாதலாவது, தவிராது செய்யும்நீர்மையையுடைய அவ்வொப்புரவுகளைச் செய்யப்பெறாது வருந்துகின்ற இயல்பாம், எ-று.

தான் நுகர்வன நுகரப்பெறாமை அன்றென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் வறுமையான் ஒப்புரவொழிதற் பாற்று அன்றென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நயன் உடையான் - உபகாரஞ் செய்தலையுடையவன், நல்கூர்ந்தான் ஆதல்-வறுமைப்பட்டவனாகுதலாவது,

செய்யும் - (ஒழியாமற்) செய்யும், நீர - தன்மையை யுடைய அவ்வுபகாரங்களை, செய்யாது - செய்யப்பெறாமல், அமைகலா ஆறு - வருந்துகின்ற இயல்பாம்.

**219.** The proverty of a benevolent man, is nothing but his inability to exercise the same.

---

கO. ஒப்புரவி னால்வரும் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

(பரி-ரை.) எ-து,—ஒப்புரவுசெய்தலான் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமென்பா ருளராயின், அக்கேடு தன்னை விற்றாயினுங் கொள்ளுந் தகுதி யையுடைத்து, எ-று.

தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொருபொருள் இல்லையன்றே இஃதாயின் அதுவுஞ் செய்யப்படுமென்றது, புகழ்பயத்தல்நோக்கி. இதனால் ஒப்புரவினாற் செவ்வது கேடுஅன்றென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒப்புரவினால் - உபகாரஞ் செய்தலினாலே, கேடுவரும்எனின் - (ஒருவனுக்குப்பொருட்) கேடுவருமென்பவருண்டாயின், அஃது-அக்கேடானது, ஒருவன் விற்று - ஒருவன் (தன்னை) விற்றாயினும், கோள்தக்கதுஉடைத்து - வாங்குந்தகுதியை யுடையதாம்.

**220** If it be said that loss will result from benevolence, such loss is worth being procured even by the sale of one's self.

---

## உங - ம் அதி—ஈகை.

அஃதாவது வறியராய் ஏற்றார்க்கு மாற்றாதுகொடுத்தல். இது மறுமை நோக்கியதாகலின், இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப் பட்டது.

க. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(பரி-ரை.) எ-து,—ஒருபொருளும் இல்லாதார்க்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது, அஃதொழிந்த எல்லாக்கொடையும் குறியெதிர்ப்பை கொடுக்கும் நீர்மையையுடைத்து, எ-று.

ஒழிந்த கொடைகளாவன வறியர் அல்லாதார்க்கு ஒருபயனோக்கிக் கொடுப்பன. குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்துவாங்கி அவ்வாங்கிய வாறே எதிர்கொடுப்பது. நீரது என்புழி அதுவென்பது பகுதிப்பொருள் விகுதி. பின்னுந் தன்பால் வருதலின், குறியெதிர்ப்பை கொடுக்கு நீர துடைத்தென்றார். இதனான் ஈகைய திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வறியார்க்கு - ஒருபொருளு மில்லாதவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றை, ஈவதே-கொடுத்

தலே, ஈகை - (பிறர்க்குக்) கொடுத்தலாகும், மற்று எல்லாம்- (அதுநீங்கலாகிய) எல்லாக்கொடையும், குறிஎதிர்ப்பை-குறிக்கப் பட்ட பின்வரும்பயனோடுகூடிய, நீரது-தன்மையை, உடைத்து- உடையதாம்.

**221.** To give to the destitute is true charity. All other gifts have the nature of (what is done for) a measured return.

---

உ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

(பரி-ரை.) எ-து,—ஏற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறியென்பார் உளரா யினும், அது தீது ; ஈந்தார்க்கு அவ்வுலகெய்துதல் இல்லையென்பார் உளரா யினும் ஈதலே நன்று, எ-று.

எனினுமென்பது இருவழியும் அங்ஙனங் கூறுவார் இன்மை விளக்கி நின்றது. பிரிநிலை ஏகாரத்தால் பிறவறங்களின் ஈதல் சிறந்ததென்பது பெற்றும். நல்லது கூறுவார் தீயதும் உடன்கூறினர்.

(தெ - ப - ரை.)—கொளல் - இரத்தல், நல்ஆறுஎனினும்- (மேலுலகத்துக்கு) நல்லவழி யென்பவர் உளராயினும், தீது- (அது) தீயது; மேல் உலகம்-(கொடுத்தவர்க்கு) அம்மேலுலகத் தை (அடைதல்), இல்எனினும்-இல்லையென்பவர் உளராயினும், ஈதலே - கொடுத்தலே, நன்று - நலமுடையது.

**222** To beg is evil, even though it were said that it is a good path (to heaven.) To give is good, even though it were said that those who do so cannot obtain heaven.

---

௩. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

(பரி-ரை.) எ-து,—யான் வறியனென்று இரப்பான் சொல்லும் இளி வரவைத் தான் பிறர்கட்சொல்லாமையும், அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்றாது ஈதலும் இவை யிரண்டும் உளவாவன குடிப்பிறந்தான் கண்ணே, எ-று.

மேல் தீதென்றது ஒழிதற்கும், நன்றென்றது செய்தற்கும் உரியவனை உணர்த்தியவாறு. இனி இலனென்னு மெவ்வமுரையாமை யீதலென்ப தற்கு அவ்விளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தலெனவும், அதனைப் பின்னும் பிறனொருவன்பாற் சென்று அவனுரையாவகையாற் கொடுத்தலெனவும், யான் இதுபொழுது பொருளுடையேன்அல்லேனெனக் கரப்பார்சொல்லும் இளிவரவைச்சொல் லாது கொடுத்தலெனவும், உரைப்பாருமுளர். அவர் ஈதலென்பதனைப் பொருட்பன்மைபற்றிவந்த பன்மையாகவுரைப்பர்.

(தெ-ப-ரை.)—இலன் என்னும் - (யான்) வறியேனென்று (இரப்பவன்) சொல்லும், எவ்வம் - இழிவை, உரையாமை -

(பிறரிடத்தே) சொல்லாமையும், (அதனைத் தன்னிடத்தே சொன்னவர்க்கு) ஈதல் - (இல்லையென்னுமற்) கொடுத்தலும், (ஆகிய இரண்டும்), குலனுடையான்கண்ணே - நல்லகுடியிற் பிறந்தவனிடத்தே, உள - உண்டு.

**223.** (Even in a low state) not to adopt the mean expedient of saying "I have nothing," but to give, is the characteristic of the man of noble birth.

---

ச. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

(பரி - ரை.) எ-து,—இரத்தலேயன்றி இரக்கப்படுதலும் இனிதன்று, ஒருபொருளையிரந்தவர் அது பெற்றதனால் இனிதாகிய அவர்முகங்காணுமளவும், எ-று.

எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. இரக்கப்படுதல் - இரப்பார்க்கு ஈவலென்றிருத்தல். அதனை இன்னாதென்றது "எல்லா—மிரப்பார்க்கொன் றீயாமை" கூடுங்கொல்லோ என்னும் அச்சநோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல்வேண்டுமென்பது பெறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இரந்தவர் - (ஒருபொருளை) யாசித்தவர், இன்முகம் - (அதுபெற்றதனால்) இனிதாகிய (அவர்) முகத்தை, காணும் அளவு - பார்க்குமளவும், இரக்கப்படுதல் - (இரத்தலே அன்றி) இரக்கப்படுதலும், இன்னாது - இனிதாகாது.

**224.** To see men begging from us is disagreeable, until we see their pleasant countenance.

---

ரு. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

(பரி-ரை.) எ-து,—தவத்தான் வலியார்க்கு வலியாவது, தம்மைஉற்ற பசியைப் பொறுத்தல்; அவ்வலிதான் அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியை ஈகையான் ஒழிப்பாரது வலிக்குப்பின், எ-று.

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதார் ஆற்றலின் தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பார் ஆற்றல் நன்றென்பதாம்.

(தெ - ப-ரை.)—ஆற்றுவார் - (தவத்தால்) வல்லவ ராவோருக்கு, ஆற்றல் - வல்லமையாவது, பசிஆற்றல்-(தம்மை அடைந்த) பசியைப்பொறுத்தலாம்; (அவ்வல்லமைதான்), அப்பசியை- அப்படிபொறுத்தற்கரியபசியை, மாற்றுவார் - (கொடையினாலே) நீக்குவோரது, ஆற்றலின்பின் - வல்லமைக்குப் பிற்பட்டது.

**225.** The power of those who perform penance is the power of enduring hunger. It is inferior to the power of those who remove the hunger (of others.)

---

௬. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(பரி-ரை.) எ-து,—வறியாரது மிக்க பசியை அறனோக்கித் தீர்க்க, பொருள்பெற்றா னொருவன் அதனைத் தனக்கு உதவ வைக்கும் இடம் அவ் வற மாகலான், எ-று.

எல்லாநன்மைகளும் அழிய வருதலின், அழி பசியென்றார். அறனோக் கியென்பது எஞ்சிநின்றது. அற்றாரழிபசி தீர்த்த பொருள் பின்தனக்கே வந்து உதவுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—அற்றார் - வறியவரது, அழிபசி - மிகுந்த பசியை, தீர்த்தல் - (அறனோக்கித்) தீர்க்கக்கடவன், அஃது - அவ்வறம், ஒருவன் - (பொருள்பெற்றான்) ஒருவன், வைப்புழி - (அப்பொருளைத்தனக்குதவ) வைக்குமிடம், (ஆதலால்).

**226.** The removal of the killing hunger of the poor is the place for one to lay up his wealth.

---

௭. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(பரி-ரை.) எ—து,—எஞ்ஞான்றும் பகுத்துண்டல் பயின்றவனைப் பசி யென்று சொல்லப்படுந் தீயநோய் தீண்டுதல் இல்லை, எ-று.

இவ்வுடம்பினின்று ஞானவொழுக்கங்களை அழித்து, அதனால் வரும் உடம்புகட்கும் துன்பஞ்செய்தலின், தீப்பிணியெனப்பட்டது. தனக்கு மருத்துவன் தானாகலின், பசிப்பிணி நணுகாதென்பதாம். இவையாறுபாட் டாலும் ஈதலின்சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பாத்து - (எந்நாளும்) பகுத்து, ஊண் - உண்ணுதல், மரீஇயவனை - பழகியவனை, பசிஎன்னும் - பசியென ப்படும், தீப்பிணி - தீயநோய், தீண்டல்அரிது - தீண்டுதலில்லை.

**227.** The fiery disease of hunger shall never touch him who habitually distributes his food to others.

---

௮. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(பரி-ரை.) எ-து,—தாமுடையபொருளை ஈயாதுவைத்துப் பின் இழந்துபோம் அருளிலாதார், வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் உவத்தலான் அருளுடையார் எய்தும் இன்பத்தினைக் கண்டறியார் கொல்லோ, எ-று.

உவக்குமென்பது காரணத்தின்கண் வந்த பெயரெச்சம்; அஃது இன் பமென்னுங் காரியப்பெயர் கொண்டது. அறிந்தாராயின், தாமும் அவ் வின்பத்தை எய்துவதல்லது வைத்திழவாரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—தாம் உடைமை-தங்களுக்குள்ள பொருளை, வைத்து - (கொடாது) வைத்து, இழக்கும் (பின்னை) - இழந்து விடும், வன்கணவர்-அருளிலாதவர், ஈந்து - (வறியவர்க்கு வேண

டிய பொருள்களை) கொடுத்து, உவக்கும் - (அவர் மகிழ்தலினால் அருளுடையார்) அடையும், இன்பம் - மகிழ்ச்சியை, அறியார் கொல்-கண்டறியாரோ.

**228.** Do the hard-eyed who lay up and lose their possessions not know the happiness which springs from the pleasure of giving?

---

௯. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(பரி - மா.) எ - து,—பொருட்குறை நிரப்பவேண்டி வறியார்க்கு ஈயாது தாமே தனித்துண்டல், ஒருவர்க்குப் பிறர்பாற்சென்று இரத்தலி னும் இன்னாது ஒருதலையாக, எ-று.

பொருட்குறை நிரப்பலாவது ஒரோ எண்களைக்குறித்து அத்துணை ஈட்டுதுமென ஈட்டத்தையே மேற்கொண்டு இவறிக் கூட்டுதல். தனித் தல் - பிறரையொழித்தல். இரத்தற்குள்ளது அப்பொழுதை யிளிவரவே, பின் நல்குரவில்லை. தமியருண்டற்கு அவை யிரண்டு முளவாம் ஆகலின், இரத்தலி னின்னாதென்றார். நிரப்பிய வென்பதற்குத் தேடிய வுணவுகளை யென்றுரைப்பாருமுளர்.

(தெ-ப-மா.)—நிரப்பிய - (பொருளின்குறைவை) நிறைக்க (வேண்டி), தாமே-தாங்களே, தமியர் - (இரந்தவர்க்குக்கொடா மல்) தனித்தவராகி, உணல் - உண்ணுதலானது, மன்ற - (ஒரு வருக்கு) நிச்சயமாக, இரத்தலின் - (பிறரிடத்தேபோய்) இரத் தலினும், இன்னாது - துன்பஞ்செய்வதாம்.

**229.** Solitary and unshared eating for the sake of filling up one's own riches is certainly much more unpleasant than begging.

---

௩0. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

(பரி-மா.) எ-து,—ஒருவற்குச் சாதல்போல இன்னாதது ஒன்றில்லை; அத்தன்மைத்தாகிய சாதலும், வறியார்க்கொன்றீதல் முடியாதவழி இனிது, எ-று.

பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான், இனிதென்றார். இவை மூன்றுபாட்டானும் ஈயாமையின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-மா.)—சாதலின் - (ஒருவனுக்கு) இறத்தல்போல, இன்னாதது - துன்பஞ் செய்வதொன்று, இல்லை - இலது; அது வும் - அப்படிப்பட்ட இறத்தலும், ஈதல் - (வறியவர்க்குக்) கொடு த்தல், இயையாக்கடை - முடியாதவிடத்து, இனிது - இன்பஞ் செய்வதாம்.

**230.** Nothing is more unpleasant than death: yet even that is pleasant where charity cannot be exercised.

---

## உசு-ம். அதி—புகழ்.

அஃதாவது இல்வாழ்க்கைமுதல் ஈகையீறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி. இது, பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன் பின்வைக்கப்பட்டது.

க. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—வறியார்க்கீக; அதனாற்புகழுண்டாகவாழ்க, அப்புகழல்லது மக்களுயிர்க்குப் பயன் பிறிதொன்றில்லை ஆகலான், எ-று.

இசைபடவாழ்தற்குக் கல்வி, ஆண்மை, முதலிய பிற காரணங்களும் உளவேனும், "உணவின் பிண்ட முண்டி முதற்று" ஆகலின், ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாக ஈதலென்றார். உயிர்க்கென்பது, பொதுப்படக் கூறினாரேனும் விலங்குயிர்கட் கேலாமையின், மக்களுயிர்மேனின்றது.

(தெ-ப-ரை.)—ஈதல்-(வறியவருக்குக்) கொடுக்கக்கடவர்; இசைபட - (அதனாற்) புகழுண்டாக, வாழ்தல் - வாழக்கடவர்; அதுஅல்லது—அப்புகழல்லாமல், உயிர்க்கு - (மக்கள்) உயிர்க்கு, ஊதியம் இல்லை - வேறுபயன் இல்லை, (ஆதலால்).

**231.** Give to the poor and live with praise. There is no greater profit to man than that.

---

உ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

(பரி-ரை.) எ - து,—உலகத்து ஒன்றுரைப்பார் உரைப்பனவெல்லாம் வறுமையான் இரப்பார்க்கு அவர் வேண்டியதொன்றை ஈவார்கண் நிற்கும் புகழாம், எ-று.

புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும். அவற்றுள், உரைப்பாருரைப்பவையென எல்லார்க்கும் உரிய வழக்கினையே எடுத்தா ராயினும், இனம்பற்றிப் புலவர்க்கே உரிய செய்யுளுங் கொள்ளப்படும்; படவே, பாடுவார் பாடுவனவெல்லாம் புகழாமென்பதூஉம் பெற்றாம். ஈதற்காரணஞ் சிறந்தமை இதனுள்ளுங்காண்க. இதனைப் பிறர்மேலும் நிற்குமென்பார்தா மெல்லாஞ் சொல்லுக. புகழ் ஈவார் மேனிற்குமென் றுரைப்பாருமுளர். அது புகழது சிறப்புநோக்காமையறிக.

(தெ-ப-ரை.)—உரைப்பார்-(உலகத்திலே ஒன்றைச்) சொல்பவரால், உரைப்பவைஎல்லாம் - சொல்லப்படுமவைகளெல்லாம், இரப்பார்க்கு - (வறுமையால்) இரப்பவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றை, ஈவார்மேல் - கொடுப்பவரிடத்தே, நிற்கும் புகழ் - நிலைபெற்ற கீர்த்தியாம்.

**232.** Whatsoever is spoken in the world will abide as praise upon that man who gives alms to the poor.

---

௩. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

(பரி-ரை.) எ - து,—தனக்கு இணையின்றாக வோங்கிய புகழல்லது உலகத்து இறவாதுநிற்பது பிறிதொன்றில்லை, எ-று.

இணையின்றாக வோங்குதலாவது கொடுத்தற்கரிய உயிர் உறுப்புப்பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால் தன்னொடொப்பதின்றித் தானே உயர்தல். அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவதென்பதாம். இனி ஒன்றாவென்பதற்கு ஒரு வார்த்தையாகச் சொல்லினெனவும், ஒருதலையாகப் பொன்றாதுநிற்பதெனவும் உரைப்பாருமுளர். இவைமூன்றுபாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஒன்றா ஆக - தனக்கு இணையில்லையாக, உயர்ந்த-ஓங்கிய, புகழ்அல்லால் - கீர்த்தியல்லாமல், உலகத்து- உலகத்தில், பொன்றாது - அழியாமல், நிற்பது - நிலைப்பது, ஒன்று-வேறொன்று, இல் - இல்லை.

**233.** There is nothing that stands forth in the world imperishable, except fame, exalted in solitary greatness.

---

௪. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் நிலவெல்லைக்கண்ணே பொன்றாது நிற்கும புகழைச் செய்யுமாயின், புத்தேளுலகம் அவனையல்லது தன்னை யெய்திநின்ற ஞானிகளைப்பேணாது, எ-று.

புகழுடம்பான் இவ்வுலகும் புத்தேளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கேயெய்தாமையின், புலவரைப்போற்றாதென்றார். அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல் "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வானவூர்தி, யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து" எனப் பிறராலுஞ் சொல்லப்பட்டது.

(தெ - ப - ரை.)—நிலவரை - (ஒருவன்) பூமியின்எல்லையில், நீள்புகழ் - அழியாது நிற்கும்புகழை, ஆற்றின் - செய்வானாயின், புத்தேள்உலகு - தெய்வலோகமானது (அவனையல்லாமல்), புலவரை - (தன்னைஅடைந்திருக்கிற) ஞானிகளை, போற்றாது - பேணாது.

**234.** If one has acquired extensive fame within the limits of this earth, the world of the Gods will no longer praise those sages who have attained that world.

---

௫. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

(பரி-ரை.) எ - து,—புகழுடம்பிற்கு ஆக்கமாகும் கேடும் புகழுடம்பு உளதாகும் சாக்காடும் சதுரப்பாடுடையார்க் கல்லது இல்லை, எ-று.

நந்தென்னும் தொழிற்பெயர் விகாரத்தால் நத்தென்றாய், பின் அம் எனனும் பகுதிப்பொருள் விகுதிபெற்று, நத்தமென்றாயிற்று. போலென்

பது ஈண்டு உரையசை. ஆகுமென்பதனை முன்னுங்கூட்டி, அரிதென்பதனைத் தனித்தனி கூட்டி உரைக்க. ஆக்கமாகுங்கேடாவது புகழுடம்பு செல்வ மெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல். உளதாகுஞ்சாக்காடாவது புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல். நிலையாதனவற்றால் நிலையின எய்துவார் வித்தகராகலின், வித்தகர்க்கல்லாலரிதென்றார். இவை யிரண்டுபாட்டா னும் புகழுடையார் எய்தும் மேன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வித்தகர்க்குஅல்லால் - திறமையை உடைய வர்க்கு அல்லாமல், (மற்றவர்க்கு) நத்தம் ஆகும் - (புகழுடம் பிற்குப்) பெருக்கமாகும், கேடும் - வறுமையும், அரிது – இல்லை; உளதுஆகும் – (அப்புகழுடம்பு) நிலைபெறுவதாகும், சாக்காடும் - மரணமும், (அரிது - இல்லை.)

**235.** Prosperity to the body of fame, resulting in poverty to the body of flesh, and the stability to the former arising from the death of the latter, are achievable only by the wise.

---

சு. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கேதுவாகிய குணத் தோடு பிறக்க; அக்குணம் இல்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங் காய்ப்பிறத்தல் நன்று, எ-று.

புகழ்—ஈண்டு ஆகுபெயர். அஃதிலாரென்றமையின் மக்களாயென்ப தூஉம், மக்களாய்ப் பிறவாமையென்ற அருத்தாபத்தியான் விலங்காய்ப் பிறத்தலென்பதூஉம், பெற்றாம். இகழ்வார் இன்மையின், நன்றென்றார்.

(தெ-ப-ரை.)—தோன்றின் - (மனிதராய்ப்) பிறந்தால், புக ழொடு – புகழுக்கு ஏதுவாகியகுணத்தோடு, தோன்றுக - பிறக் கக்கடவர், அஃதுஇலார் – அக்குணமில்லாதவர், தோன்றலின்- (மனிதராய்ப்) பிறத்தலினும், தோன்றாமை - பிறவாமையானது [விலங்காய்ப்பிறத்தலென்றபடி], நன்று - நலமுடையது.

**236.** If you are born (in this world), be born with qualities conducive to fame. For those who are destitute of them it will be better not to be born.

---

எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

(பரி-ரை.) எ-து,—தமக்குப் புகழுண்டாக வாழமாட்டாதார் அதுபற் றிப் பிறர் இகழ்ந்தவழி இவ்விகழ்ச்சி நம் மாட்டாமையான் வந்ததென்று தம்மை நோவாதே தம்மை யிகழ்வாரை நோவது என் கருதி, எ-று.

புகழ்பட வாழலாயிருக்க அதுமாட்டாத குற்றம்பற்றிப் பிறரிகழ்தல் ஒருதலையாகலின், இகழ்வாரையென்றார்.

(தெ-ப-ரை.)—புகழ்பட - (தமக்குப்) புகழுண்டாக, வாழா தார் – வாழமாட்டாதவர், (அதுபற்றிப்பிறரிகழ்ந்தவிடத்தே) தம் நோவார் - (இவ்விகழ்ச்சி நமதுமாட்டாமையால் வந்ததென்று)

தம்மைநோவாதவராகி, தம்மை - தங்களை, இகழ்வாரை - நிந்திப்பவரை, நோவது - வெறுப்பது, எவன் - யாது.

**237.** Why do those who cannot live with praise, grieve those who despise them, instead of grieving themselves for their own inability.

---

அ. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

(பரி-ரை.) எ-து,—புகழென்னும் எச்சம் பெறலாயிருக்க அது பெறாதொழிவராயின், வையகத்தோர்க்கெல்லாம் அதுதானே வசையென்று சொல்லுவர் நல்லோர், எ-று.

எச்சமென்றார், செய்தவரிறந்துபோகத் தான் இறவாது நிற்றலின். இகழப்படுதற்குப் பிறிதொருகுற்றம் வேண்டாவென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—இசைஎன்னும் எச்சம் – புகழென்னும் எச்சத்தை (பெறவேண்டியிருக்க), பெறாவிடின் – (அதனைப்) பெறாதுவிடுவாராயின், வையத்தார்க்கு எல்லாம் – பூமியிலுள்ளார்க்கெல்லாம், வசை - (அதுதானே) வசையாகும், என்ப - என்று சொல்லுவர் (நல்லோர்).

**238.** Not to beget fame will be esteemed a disgrace by the wise in this world.

---

௯. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

(பரி-ரை.) எ-து,—புகழில்லாத வுடம்பைச் சுமந்த நிலம் பழிப்பில்லாத வளப்பத்தையுடைய விளையுள் குன்றும், எ-று.

உயிருண்டாயினும் அதனாற்பயன் கொள்ளாமையின் யாக்கையெனவும், அது நிலத்திற்குப் பொறையாகலின் பொறுத்த வெனவுங்கூறினார். விளையுள் குன்றுதற்கேது பாவயாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு. குன்றுமென இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேனின்றது. இவை நான்குபாட்டானும் புகழில்லாதாரது தாழ்வு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இசைஇலா - புகழில்லாத, யாக்கை - உடம்பை, பொறுத்த - சுமந்த, நிலம் - நிலத்தில், வசைஇலா-பழிப்பில்லாத, வள் பயன் - வளப்பத்தையுடைய விளைவு, குன்றும்–குறையும்.

**239.** The ground which supports a body without fame will diminish in its rich produce.

---

௪௦. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

(பரி-ரை.) எ-து,—தம்மாட்டு வசையுண்டாகாமல் வாழ்வாரே உயிர் வாழ்வாராவார்; புகழுண்டாகாமல் வாழ்வாரே இறந்தாராவார், எ-று.

வசை ஒழிதலாவது இசையென்னும் எச்சம் பெறுதலாயினமையின், இசை ஒழிதலாவது வசைபெறுதலாயிற்று; மேல் இசையிலாயாக்கை யென்றதனை விளக்கியவாறு. இதனால் இவ்விரண்டும் உடன் கூறப்பட்டன. மறுமைப்பயன் வானுறையுந்தெய்வத்துள் வைக்கப்படுமென மேலேகூறப் பட்டது; படவே, இல்லறத்திற்கு இவ்வுலகிற்புகழும், தேவருலகிற்போக மும் பயனென்பது பெற்றாம். இனி மனுமுதலிய அறநூல்களால் பொது வாகக் கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற் றுள்ளே அடங்கும்: அஃதறிந்து அடக்கிக்கொள்க; யாம் உரைப்பிற் பெருகும்.

(தெ - ப-ரை.)—வசைஒழிய - (தம்மிடத்து) நிந்தையுண் டாகாமல் [புகழுண்டாகவென்றபடி], வாழ்வாரேவாழ்வார் - வாழ் பவரே (உயிர்) வாழ்வோராவார், இசைஒழிய-புகழுண்டாகாமல் [நிந்தையுண்டாக வென்றபடி], வாழ்வாரே - வாழ்பவரே, வாழா தவர் - இறந்தோராவார்.

**240.** Those live who live without disgrace. Those who live without fame live not.

இல்லறவியல் முற்றிற்று.

---

# துறவறவியல்.

இனி முறையானே துறவறங்கூறிய தொடங்கினார். துறவறமாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அது தான், வினைமாசுதீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டு அவ ராற்காக்கப்படும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழி உதிப்ப தாய ஞானமுமென இருவகைப்படும். அவற்றுள் விரதங்களாவன—இன்ன அறஞ் செய்வலெனவும், இன்னபாவம் ஒழிவலெனவும், தம்மாற்றலுக்கு ஏற்ப வரைந்துகொள்வன. அவைதாம், வரம்பிலவாகலின் பெருகுமென் றஞ்சி, அவை தம்முள்ளே பலவற்றையும் அகப்படுத்து நிற்குஞ் சிறப் புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான் தொடங்கி, முதற்கண் அரு ளுடைமை கூறுகின்றார்.

---

## உரு-ம். அதி—அருளுடைமை.

அஃதாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண் மேலும் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமைபோல, இது துறவ றத்திற்குச் சிறந்தமையின் முற்கூறப்பட்டது.

க. அருட்செல்வஞ்செல்வத்துட் செல்வம்பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

(பரி-ரை.) எ - து,—செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக் கப்பட்ட செல்வமாவது அருளான் வருஞ்செல்வம், அஃதொழிந்த பொரு ளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார்கண்ணும் உளவாம் ஆகலான், எ-று.

அருளான் வருஞ் செல்வமாவது உயிர்களை ஓம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணே அல்லது இல்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம், ஏனை நீசர்கண்ணு முளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பில வென்பதாம்.

(தெ-ப-ரை.)—பொருள்செல்வம் - பொருளால்வருஞ் செல்வங்கள், பூரியார்கண்ணும் - இழிந்தவரிடத்தும், உள-இருக்கின்றன (ஆதலால்), செல்வத்துள் - செல்வங்கள் பலவற்றுள்ளும், செல்வம் - (ஆராய்ந்து எடுக்கப்பட்ட) செல்வமாவது, அருள்செல்வம் - அருளால்வருஞ் செல்வமாம்.

**241.** The wealth of kindness is wealth of wealth, in as much as the wealth of property is possessed even by the basest of men.

---

உ. நல்லாற்ரு ணுடி யருளாள்க பல்லாற்ருற்
றேரினு மஃதே துணை.

(பரி-ரை.) எ-து,—அளவைகளானும் பொருந்துமாற்றானும் நன்ருன நெறியிலே நின்று, நமக்குத் துணையாம் அறம் யாதென்று ஆராய்ந்து, அருளுடையராக; ஒன்றையொன்றெவ்வாத சமயநெறிகள் எல்லாவற்ருனும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறிதில்லை, எ-று.

அளவைகளாவன பொறிகளாற் காணுங்காட்சியும், குறிகளான் உய்த்துணரும் அனுமானமும், கருத்தாமொழியாகிய ஆகமமும் என மூன்று. ஒப்புப்பற்றி உணரும் உவமையும், இங்ஙனம் அன்ருயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தியும், உண்மைக்குமாருய இன்மையும் என, இவற்றையுங் கூட்டி ஆறென்பாருமுளர். இவையும் ஒருவாற்ருன் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்றென்றலே கருத்து. பொருந்துமாருவது இது கூடும் இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது: இதனை வடநூலார் யுத்தியென்ப. ஆற்ருனென்பது வேற்றுமைமயக்கம். ஒன்றையொன்றெவ்வாமையாவது மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும் தம்முள் மாறுகோடல்; அன்னவாயினும் அருள் துணை யென்றற்கண் ஒக்குமென்பதாம். உயிரை விட்டு நீங்காது இருமையினும் உதவலின், துணையென்ருர். இவை யிரண்டுபாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நல்ஆற்ருல் - நல்ல வழியிலே நின்று, நாடி - (அளவைகளாலும் யுத்தியாலும் நமக்குத்துணையாகும் அறம்யாதென்று) ஆராய்ந்து, அருள்ஆள்க - அருளுடையராகக் கடவர்; பல்ஆற்ருல் - (ஒன்றுக்கு ஒன்று ஒத்திராத) பலசமயவழிகளால், தேரினும் - ஆராய்ந்தாலும், துணை - துணையாவது, அஃதே - அவ்வருளே [வேறொன்றில்லையென்றபடி.]

**242.** (Stand) in the good path, consider, and be kind. Even considering according to the conflicting tenets of the different sects, kindness will be your best aid, (in the acquisition of heavenly bliss).

---

௩. அருள்சேர்ந்த நெஞ்சினுர்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னு வுலகம் புகல்.

(பரி - ரை.) எ-து,—இருள் செறிந்த துன்பவுலகத்துட்சென்று புகுதல் அருள்செறிந்த நெஞ்சினையுடையார்க்கில்லை, எ-று.

இருள்செறிந்த துன்பவுலகமென்றது திணிந்த இருளை யுடைத்தாய்த் தன்கட்புக்கார்க்குத் துன்பஞ்செய்வதோர் நரகத்தை, அது கீழுலகத்துள் ஓரிடமாகலின், உலகமெனப்பட்டது.

(தெ - ப - ரை.)—இருள்சேர்ந்த - இருள்தங்கிய, இன்னா உலகம் - துன்பவுலகத்தில், புகல் - (போய்ப்) புகுதல், அருள் சேர்ந்த - அருள்தங்கிய, நெஞ்சினார்க்கு - மனத்தை யுடையவர்க்கு, இல்லை - இல்லை.

**243.** They will never enter the world of darkness and wretchedness, whose minds are the abode of kindness.

---

௪. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(பரி-ரை.) எ-து,—நிலைபேறுடைய உயிர்களைப்பேணி அவற்றின்கண் அருளுடைய ஞவானுக்குத் தன்னுயிர் அஞ்சுதற்கேதுவாகிய தீவினைகள் உளவாகா என்று சொல்லுவர் அறிந்தோர், எ-று.

உயிர்களெல்லாம் நித்தமாகலின் மன்னுயிரென்றார். அஞ்சுதல்—துன்ப நோக்கி அஞ்சுதல். அன்ன அறத்தினோன் கொலைமுதலிய பாவங்கள் செய்யானெனவே, மறுமைக்கண் நரகம் புகாமைக்கேது கூறியவாறாயிற்று.

(தெ-ப-ரை.)—மன்உயிர்-நிலைபேறுடைய உயிர்களை, ஓம்பி-காப்பாற்றி, அருள்ஆள்வாற்கு - (அவைகளிடத்தே) அருளுடையனாயிருப்பவனுக்கு, தன்உயிர் - தனதுயிர், அஞ்சும் - அஞ்சுதற்கு ஏதுவாகிய, வினை - பாவங்களானவை, இல் - உண்டாகா, என்ப - என்றுசொல்லுவர் (அறிந்தோர்).

**244.** (The wise) say that the evils, which his soul would dread, will never come upon the man who exercises kindness and protects the the life (of other creatures).

---

௫. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(பரி - ரை.) எ-து,—அருளுடையார்க்கு இம்மையினும் ஒரு துன்பம் உண்டாகாது; அதற்குக்காற்று இயங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று, எ-று.

சான்றுவார் - தாங்கண்டு தேறிய பொருளைக்காணாதார்க்குத் தேற்றுதற்கு உரியவர். அருளாள்வார்க்கு அல்லல் உண்டாக ஒருகாலத்தும் ஓரிடத்தும் ஒருவருங்கண்டறிவார் இன்மையின், இன்மைமுகத்தான் ஞாலத்தார் யாவருஞ் சான்றென்பார், வளிவழங்கு மல்லன் மாஞாலங் கரியென்றார்: எனவே, இம்மைக்கணென்பது பெற்றாம். ஞாலம் - ஆகுபெயர். இவை மூன்றுபாட்டானும் அத்துணையுடையார்க்கு இருமையினும் துன்பமில்லாமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அருள் ஆள்வார்க்கு - அருளுடையவருக்கு, அல்லல் - (இம்மையிலும்) ஒருதுன்பம், இல்லை - உண்டாகாது, (அதற்கு), வளிவழங்கும் - காற்றுலாவுகின்ற, மல்லல் - வளப்பத்தையுடைய, மா-பெரிய, ஞாலம் - பூமியில் வாழ்வோர், கரி-சாக்ஷியாவார்.

**245.** This great rich earth over which the wind blows, is a witness that sorrow never comes upon the kind-hearted.

---

சு. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

(பரி-ரை.) எ-து,—உயிர்கண்மாட்டுச்செய்யப்படும் அருளைத்தவிர்ந்து, தவிரப்படுங்கொடுமைகளைச் செய்தொழுகுவாரை முன்னும் உறுதிப்பொருளைச் செய்யாது தாம் துன்புறுகின்றமையை மறந்தவரென்று சொல்லுவர் நல்லோர், எ-று.

உறுதிப்பொருள் - அறம். துன்புறுதல் - பிறவித்துன்ப மூன்றனையும் அனுபவித்தல். மறந்திலராயின், அவ்வாறொழுகாரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—அருள்நீங்கி - (உயிர்களிடத்துச் செய்ய வேண்டும்) அருளைவிட்டு, அல்லவை-விடவேண்டுங் கொடுமைகளை, செய்து ஒழுகுவார் - செய்துநடப்பாரை, பொருள்நீங்கி- (முன்பிறப்பிலேயும்) உறுதிப்பொருளைத் தேடாமல், பொச்சாந்தார் - (தாம்துன்பப்படுகின்றமையை) மறந்தவர், என்ப - என்று சொல்லுவர், (நல்லோர்).

**246.** (The wise) say that those who neglect kindness and practise cruelties, neglected virtue (in their former birth), and forgot (the sorrows which they must suffer).

---

எ. அருளிலார்க் கவ்வுலக மில்லைப் பொருளிலார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு.

(பரி-ரை.) எ-து,—உயிர்கண்மேல் அருளில்லாதார்க்கு வீட்டுலகத்தின்பம் இல்லை, பொருளில்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் இல்லையாயினாற்போல, எ-று.

அவ்வுலகம் இவ்வுலகம் என்பன ஆகுபெயர். இவ்வுலகத் தின்பங்கட்குப் பொருள் காரணமானாற்போல, அவ்வுலகத் தின்பங்கட்கு அருள் காரணமென்பதாயிற்று.

(தெ-ப-ரை.)—பொருள் இலார்க்கு-பொருளில்லாதவர்க்கு, இவ்வுலகம் - இவ்வுலகத்தின்பம், இல்லாகியாங்கு - இல்லாமை போல, அருள் இலார்க்கு - (உயிர்களின்மேல்) அருளில்லாதவர்க்கு, அவ்வுலகம் - அவ்வுலகத்தின்பம், இல்லை-இலது.

**247.** As this world is not for those who are without wealth, so that world is not for those who are without kindness.

---

அ. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

(பரி-ரை.) எ-து,—ஊழான் வறியராயினார் அது நீங்கிப் பின் ஒரு காலத்துச் செல்வத்தாற்பொலிவர்; அவ்வாறன்றி, அருளிலாதார் பாவம் அறுமையின் அழிந்தாரே, பின்னொருகாலத்தும் ஆதலில்லை, எ-று.

மற்று - வினைமாற்றின்கண்வந்தது. மேற்பொருளின்மையோடு ஒருவாற்றான் ஒப்புமை கூறினாராகலின், அது மறுத்து, பிறவாற்றான் அதனினுங் கொடிதென்பது கூறியவாறு.

(தெ-ப-ரை.)—பொருள் அற்றார்-(ஊழினாலே) பொருளில்லாதவர், ஒருகால் - ஒருகாலத்தில், பூப்பர் - செல்வமுடையவராவார்; அருள் அற்றார் - அருளில்லாதவர், அற்றார் - (பாவம் நீங்காமையால்) அழிந்தவரே; மற்று - பின்னொருகாலத்திலும், ஆதல் அரிது - ஆகுதலில்லை.

**248.** Those who are without wealth may, at some future time, become prosperous; those who are destitute of kindness are utterly destitute; for them there is no change.

---

கூ. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

(பரி-ரை.) எ-து,—உயிர்கண்மாட்டு அருள்செய்யாதவன் செய்யும் அறத்தை ஆராயின், ஞானமில்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளை உணர்ந்தாற்போலும், எ-று.

மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற் சொல்லும்பொருள். நிலைபெற்ற ஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளை உணர்ந்தால், அதனைத் தன் ஞானம் இன்மையால் தானே அழித்துவிடும். அதுபோல, அருளாதான் இடையே அறஞ்செய்தால் அதனைத் தன்னருளாமையால் தானே அழித்துவிடுமென்பதாயிற்று; ஆகவே, பிறவறங்கட்கெல்லாம் அருளுடைமை மூலமென்பது பெற்றாம். இவை நான்குபாட்டானும் அத்துணை யிலாதார்க்கு வருங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அருளாதான் - (உயிர்களிடத்தே) அருள் செய்யாதவன், செய்யும் - செய்கின்ற, அறம் - அறத்தை, தேரின் - ஆராயின், தெருளாதான் - ஞானமில்லாதவன், மெய்ப்பொருள்-மெய்ந்நூலிற் சொல்லப்பட்டபொருளை, கண்டு அற்று - (ஒருகால்) கண்டதுபோலும்.

**249.** If you consider, the virtue of him who is without kindness is like the perception of the true being by him who is without wisdom.

---

கo. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

(பரி-ரை.) எ-து,—தன்னின்வலியார் தன்னை நலிய வரும்பொழுது அவர் முன் தானஞ்சிநிற்கும் நிலையினை நினைக்க, அருளில்லாதவன் தன்னின் எளியார்மேல் தான் நலியச்செல்லும்பொழுது, எ-று.

மெலியாரெனச் சிறப்புடைய உயர்திணைமேற் கூறினாராயினும், ஏனை அஃறிணையுங் கொள்ளப்படும். அதனை நினைக்கவே, இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமாமென்றறிந்து, அதன்மேல் அருளுடையனு மென்பது கருத்து. இதனால் அருள் பிறத்தற்கு உபாயங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—தன்னின் மெலியார்மேல் - (அருளில்லாதவன்) தன்னின் எளியார்மேல், தான் செல்லும் இடத்து - தான் (வருத்துதற்குப்) போம்போது, வலியார் - (தன்னின்) வலியவர், முன் - ( தன்னை வருத்துதற்கு வரும்போது அவர் ) முன், தன்னை - (அஞ்சிநிற்கும்) தனது நிலையை, நினைக்க-நினைக்கக்கடவன்.

**250.** When a man is about to rush upon those who are weaker than himself, let him remember how he has stood (trembling) before those who are stronger than himself.

---

## உகூ-ம். அதி—புலான்மறுத்தல்.

அஃதாவது ஊனுண்டலை ஒழிதல். கொலைப்பாவத்தைப் பின்னும் உளதாக்கலின் அதற்குக் காரணமாதலையும், முன்னும் அதனான் வருதலின் அதன்காரியமாதலையும், ஒருங்குடைத்தாய ஊனுண்டல் அருளுடையார்க்கு இயைவதன்றாகலின், அதனை விலக்குதற்கு, இஃது அருளுடைமையின் பின் வைக்கப்பட்டது.

க. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

(பரி - ரை.) எ - து,—தன்னுடம்பை வீக்குதற்பொருட்டுத் தான் பிறிதோருயிரின் உடம்பைத் தின்பவன் எவ்வகையான் நடத்தும் அருளினை, எ-று.

பயனிலாத ஊன் பெருக்கலைப் பயனெனக்கருதி இக்கொடுமை செய்வானே அறிவிலாத கொடியோன் என்றவாறாயிற்று. எங்ஙன மாளுமரு ளென்பது, ஆளானென்பது பயப்பநின்ற இகழ்ச்சிக்குறிப்பு.

(தெ-ப-ரை.)—தன்னூன் - தன்னுடம்பை, பெருக்கற்கு - வளர்த்தற்பொருட்டு, தான் பிறிது ஊன் - தான் மற்றோருயிரினுடம்பை, உண்பான் - தின்பவன், எங்ஙனம் - எவ்வகையால், அருள் - அருளை, ஆளும் - ஆள்வான்.

**251.** How can he be possessed of kindness, who to increase his own flesh, eats the flesh of other creatures.

---

உ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(பரி-மே.) எ-து,—பொருளாற் பயன்கோடல் அதனைப் பாதுகாவா தார்க்கில்லை, அதுபோல, அருளாற் பயன்கோடல் ஊன்றின்பார்க்கில்லை, எ-று.

பொருட்பயன் இழத்தற்குக் காரணம் காவாமை போல, அருட்பயன் இழத்தற்கு ஊன் தினல் காரணமென்பதாயிற்று. ஊன் தின்றாராயினும் உயிர்கட்கு ஒரு தீங்கு நினையாதார்க்கு அருளாடற்கு இழுக்கில்லை யென்பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவை யிரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-மை.)—பொருள்ஆட்சி-பொருளாற் பயன்கொள்ளுதல், போற்றாதார்க்கு இல்லை - (அதனைக்) காப்பாற்றாதவருக்கில்லை, ஆங்கு - அதுபோல, அருள் ஆட்சி - அருளாற் பயன் கொள்ளுதல், ஊன்தின்பவர்க்கு இல்லை-புலால்உண்பவர்க்கில்லை.

252. As those possess no property who do not take care of it, so those possess no kindness who feed on flesh.

ந. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

(பரி-மே.) எ-து,—கொலைக்கருவியைத் தங்கையில் கொண்டவர் மனம் அதனாற் செய்யுங் கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்காதவாறுபோல, பிறிதோருயிரின் உடலைச் சுவைபட வுண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவதல்லது அருளை நோக்காது, எ-று.

சுவைபடவுண்டல்-காயங்களான் இனிய சுவைத்தாக்கி யுண்டல். இதனால் ஊன் தின்றார் மனம் தீங்கு நினைத்தல் உவம அளவையாற் சாதித்து மேலது வலியுறுத்தப்பட்டது.

(தெ-ப-மை.)—ஒன்றன் - பிறிதோருயிரினது, உடல் - உடலை, சுவைஉண்டார் - சுவைபடவுண்டவரது, மனம்-மனமானது, படைகொண்டார் - கொலைக்கருவியைத் (தங்கையிலே) கொண்டவரது, நெஞ்சம்போல் - மனம்போல, நன்று ஊக்காது- (கொலையைநோக்குவதல்லது) அருளைநோக்காது.

253. Like the (murderous) mind of him who carries a weapon (in his hand), the mind of him who feasts with pleasure on the body of another (creature), has no regard for goodness.

ச. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

(பரி-மே.) எ-து,—அருள் யாதெனின், கொல்லாமை; அருளல்லது யாதெனிற் கோறல்; ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத்தின்கை பாவம், எ-று.

உபசாரவழக்கால் கொல்லாமை, கோறலாகிய காரியங்களை அருள் அல்லதெனக் காரணங்களாக்கியும், ஊன் தின்கையாகிய காரணத்தைப் பாவமெனக் காரியமாக்கியுங் கூறினர். அருளல்லது-கொடுமை. சிறப்புப் பற்றி அறமும் பொருளெனப்படுதலின், பாவம் பொருளல்லதெனப்பட்டது. கோறலென முன்னின்றமையின், அவ்வூனென்றார். இனி இதனை இவ்வாறன்றி அருளல்லதென்பதனை ஒன்றாக்கி, கொல்லாமை கோறலென்பதற்குக் கொல்லாமையென்னும் விரதத்தை அழித்த லென்றுரைப்பாரும் உளர்.

(தெ-ப-ரை.)—அருள் - அருளானது, யாதுஎனின் - எது வென்றால், கொல்லாமை - கொல்லாதிருத்தல்; அல்லது - அவ் வருளல்லாதது, யாது எனின்-எதுவென்றால், கோறல்-கொல்லு தல்; (ஆதலால்), அவ்வூன்-அக்கொல்லுதலால்வந்தவூனை, தினல்-தின்னுதல், பொருள் அல்லது-அறனல்லாததாம் [பாவமாம்].

254. If it be asked what is kindness and what its opposite, the answer would be preservation and destruction of life; and therefore it is not right to feed on the flesh (obtained by taking away life.)

---

ரு. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

(பரி-ரை.) எ-து,—ஒருசாருயிர் உடம்பின்கண்ணே நிற்றல் ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது; ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனையுண்ணுமாயின், அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ்தற்கு அங்காவாது, எ-று.

உண்ணப்படும் விலங்குகள் அதனால் தேய்ந்து சிலவாக, ஏனைய பலவாய் வருதலின், உண்ணாமையுள்ள துயிர்நிலையென்றார். உண்ணிலென்பது உண்ணவெனத் திரிந்து நின்றது. ஊனுண்டவன் அப்பாவத்தான் நெடுங்காலம் நிரயத்துள் அழுந்துமென்பதாம். கொலைப்பாவம் கொன்றார் மேல் நிற்றலின் பின் ஊனுண்பார்க்குப் பாவமில்லை யென்பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உயிர் - (சிலவகை) உயிர்கள், நிலை - (உடம்புகளிலே) நிற்கை, ஊன் - ஊனை, உண்ணாமைஉள்ளது - உண்ணாமையென்னும் அறத்தினிடத்தது, (ஆதலால்), உண்ண-(அந்நிலைகுலைய ஒருவன் அதனை) உண்பானாயின், அளறு - (அவனை விழுங்கிய) நரகமானது, அண்ணாத்தல்செய்யாது - (பின்உமிழ் தற்கு) வாய்திறவாது.

255. Not to eat flesh contributes to the continuance of life; therefore if a man eat flesh, hell will not open its mouth (to let him escape out, after he has once fallen in).

---

சு. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(பரி-ரை.) எ-து,—பேதைமை காரணமாக அல்லது ஊன் தின்கை காரணமாக உலகங்கொல்லாதாயின், பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை, எ-று.

உலகென்பது ஈண்டு உயிர்ப்பன்மைமேனின்றது. பின்நிகழும் தின்கை முன்நிகழும் கொலைக்குக் காரணம் ஆகாமையின், தின்பார்க்குக் காரணத்தான் வரும் பாவம் இல்லையென்ற வாதியை நோக்கி, அருத்தாபத்தி அளவையாற் காரணமாதல் சாதித்தலின், இதனான் மேலது வலியுறுத்தப்பட்டது.

(தெ-ப-ரை.)—தினல்பொருட்டால் - தின்னுதல் காரணமாக, உலகு-உலகத்தார், கொல்லாது எனின் - கொலைசெய்யாராயின், விலைப்பொருட்டால்-விலைப்பொருள் காரணமாக, ஊன் தருவார் - ஊனைவிற்பவர், யாரும் - எவரும், இல் - இலர்.

**256.** If the world does not destroy life for the purpose of eating, then no one would sell flesh for the sake of money.

---

எ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—புலாலாவது பிறிதோருடம்பின் புண்; அது தூய்து அன்மை அறிவாரைப் பெறின், அதனை உண்ணாதொழியல் வேண்டும், எ-று.

அஃதென்னல் வேண்டும் ஆய்தம் விகாரத்தாற் றொக்கது. அம்மெய்ம்மை உணராமையின், அதனை உண்கின்றா ரென்பதாம். பொருந்தும் ஆற்றானும் புலாலுண்டல் இழிந்ததென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—புலால் - புலாலானது, பிறிது ஒன்றன்-வேறோருடம்பினது, புண்-புண்ணாகும்; அது-அப்புலால்(அசுத்தமாயிருக்கையை), உணர்வார்-அறிவோரை, பெறின்-பெற்றால், உண்ணாமைவேண்டும்-(அப்புலாலை) உண்ணாதொழியவேண்டும்.

**257.** If men should come to know that flesh is nothing but the unclaen ulcer of a body, let them abstain from eating it.

---

அ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(பரி-ரை.) எ-து,—மயக்கமாகிய குற்றத்தினீங்கிய அறிவினையுடையார் ஒருயிரினீங்கிவந்த ஊனை உண்ணார், எ-று.

தலைப்பிரிவென்பது ஒருசொல். பிணமென ஊனின்மெய்ம்மை தாமே உணர்தலின், உண்ணாரென்றார்.

(தெ-ப-ரை)—செயிரின் - (மயக்கமாகிய) குற்றத்தினின்றும், தலைப்பிரிந்த - நீங்கிய, காட்சியார் - அறிவினை யுடையார்,

உயிரின் - ஓருயிரினின்றும், தலைப்பிரிந்த - நீங்கிவந்த, ஊன் - ஊனை, உண்ணார்-தின்னார்.

**258.** The wise, who have freed themselves from mental delusion, will not eat the flesh which has been severed from an animal.

---

௬௯. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம்வேள்வி வேட்டலினும், ஒரு விலங்கின் உயிரைப்போக்கி அது நின்ற ஊனை உண்ணாமை நன்று, எ-று.

அவ்வேள்விகளான் வரும் பயனினும், இவ்விரதத்தான் வரும் பயனே பெரிதென்பதாம்.

(தெ-ப-ரை.)—அவி - (நெய்முதலாகிய) அவிகளை, சொரிந்து - (தீயில்) பெய்து, ஆயிரம்வேட்டலின் - ஆயிரம்யாகஞ் செய்தலினும், ஒன்றன் - ஒருவிலங்கினது, உயிர் - உயிரை, செகுத்து-போக்கி, உண்ணாமை - (அவ்வுயிர்நின்றவூனை) உண்ணாமை, நன்று-நல்லது.

**259.** Not to kill and eat (the flesh of) an animal, is better than the pouring forth of ghee &c. in a thousand sacrifices.

---

௬0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

(பரி - ரை.) எ-து,—ஒருயிரையுங் கொல்லாதவனுமாய்ப் புலாலையும் உண்ணாதவனை எல்லாவுயிருங் கைகுவித்துத் தொழும், எ-று.

இவ்விரண்டறமும் ஒருங்குடையார்க்கல்லது ஒன்றேயுடையார்க்கு அதனாற் பயனில்லையாகலின், கொல்லாமையும் உடன்கூறினார். இப்பேரருள் உடையான் மறுமைக்கண்தேவரின் மிக்கானுமென அப்பயனது பெருமை கூறியவாறு. இவைமூன்றுபாட்டானும் ஊனுண்ணாமையதுஉயர்ச்சி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கொல்லான் - (ஒருயிரையுங்) கொல்லாதவனுமாய், புலாலைமறுத்தானை - புலாலையுமுண்ணாதவனை, எல்லாவுயிரும்—எல்லாவுயிர்களும், கைகூப்பி-கைகுவித்து, தொழும் - வணங்கும்.

**260.** All creatures will join their hands together, and worship him who has never taken away life, nor eaten flesh.

---

## உ௭ - ம். அதி—தவம்.

அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களை யோம்புதல். புலான்மறுத்து உயிர்கண்மேல் அருண் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான் மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௧. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

(பரி-ரை.) எ-து,—தவத்தின்வடிவு உண்டிசுருக்கல் முதலியவற்றால் தம்முயிர்க்கு வருந்துன்பங்களைப் பொறுத்தலும் தாம் பிறவுயிர்கட்குத் துன்பஞ்செய்யாமையும் ஆகிய அவ்வளவிற்று, எ-று.

மற்றுள்ளனவெல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின், அற்றேயெனத் தேற்றேகாரங் கொடுத்தார். தவத்திற்கு உருஅற்றே என்பது "யானையது கோடுகூரிதென்பதனை யானைக்குக் கோடு கூரிது" என்றாற்போல ஆறுவதன் பொருட்கண் நான்காவது வந்த மயக்கம். இதனால் தவத்தது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தவத்திற்கு - தவத்தினுக்கு, உரு - வடிவமானது, உற்றநோய் - (உண்டிசுருக்குதல் முதலானவைகளால் தம்முயிர்க்கு) வரும்துன்பங்களை, நோன்றல் - பொறுத்தலும், உயிர்க்கு-பிறவுயிர்க்கு, உறுகண்செய்யாமை - (தாம்) துன்பஞ் செய்யாமையும் ஆகிய, அற்றே - அவ்வளவினதே.

**261.** The nature of religious discipline consists, in the endurance (by the ascetic) of the sufferings which it brings on himself, and in abstaining from giving pain to others.

---

௨. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(பரி-ரை.) எ-து,—பயனையன்றித் தவந்தானும் உண்டாவது முற்றவமுடையார்க்கே; ஆகலான், அத்தவத்தை அம்முற்றவமில்லாதார் முயல்வது பயனின் முயற்சியாம், எ-று.

பரிசயத்தால் அறிவும் ஆற்றலும் உடையராய் முடிவுபோக்கலின் தவமுடையார்க் காகுமென்றும், அஃதிலாதார்க்கு அவையின்மையின் முடிவுபோகாமையின் அவமாமென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—தவமும் - (பயனையல்லாமல்) தவம் உண்டாவதும், தவம் உடையார்க்கு ஆகும் - (முன்னைத்) தவத்தை உடையவர்க்கே ஆகும், (ஆதலால்) அதனை - அத்தவத்தை,

அஃது இலார் - அம்முன்னைத்தவமில்லாதவர், மேற்கொள்வது-செய்யத்தொடங்குவது, அவம் – வீணும்.

**262.** Austerities can only be borne, and their benefits enjoyed, by those who have practised them (in a former birth); it will be useless for those who have not done so, to attempt to practise them (now.)

---

ங. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

(பரி-ரை.) எ - து—இல்லறத்தையே பற்றி நிற்பார் துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை விரும்பித் தாந் தவஞ்செய்தலை மறந்தார்போலும், எ-று.

துப்புரவு - அனுபவிக்கப்படுவன. வேண்டிய வேண்டியாங் கெய்தற் பயத்ததாகலின் யாவராலுஞ் செய்யப்படுவதாய தவத்தைத் தாஞ்செய் யுந் தானத்தின்மேல் விருப்பமிகுதியான் மறந்தார்போலு மெனவே, தானத் திற் றவம் மிக்கதென்பது பெற்றும்.

(தெ-ப-ரை.)—மற்றையவர்கள் – இல்லறத்தையே பற்றி நிற்பவர்கள், துறந்தார்க்கு - (இருவகைப்பற்றும்) விட்டவர்க்கு, துப்புரவு - உண்டியும் மருந்தும் இருப்பிடமும், வேண்டி-(உதவுதலை) விரும்பி, தவம் - (தாம்) தவஞ்செய்தலை, மறந்தார்கொல்-மறந்தார்போலும்.

**262.** Is it to provide food &c. for the ascetics who have abandoned (the desire of earthly possessions) that other persons have forgotten (to practise) austerity?

---

ச. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

(பரி-ரை.) எ-து,—தம்மறத்திற்குப் பகையாய் அழிவுசெய்தாரைக் கெடுத்தலும் அதனை உவந்தாரை உயர்த்தலும் ஆகிய இவ்விரண்டையும் தவஞ்செய்வார் நினைப்பராயின், அவர் தவவலியான் அவை அவர்க்குளவாம், எ-று.

முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமை யின், தவத்திற்கேற்றி யுரைக்கப்பட்டது. எண்ணினென்றதனுன், அவர்க்கு அவையெண்ணுமை இயல்பென்பது பெற்றும். ஒன்னர் பெரியராயினும் உவந்தார் சிறியராயினும், கேடும் ஆக்கமும் நினைந்த துணையானே வந்து நிற்குமெனத் தவஞ்செய்வார்மேலிட்டுத் தவத்தினது ஆற்றல் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—ஒன்னர் - (தமது அறத்துக்கு இடையூறு செய்த) பகைவரை, தெறலும்-கெடச்செய்தலையும், உவந்தாரை-(அதனை) விரும்பினவரை, ஆக்கலும் - உயரச்செய்தலையும், எண்ணின் - (தவஞ்செய்வோர்) நினைப்பாராயின், தவத்தான் - (அவ

ரது) தவவலிமையினால், வரும் – (அவை அவருக்கு) உண் டாகும்.

**262.** If (the ascetic) desire the destruction of his enemies, or the aggrandizement of his friends, it will be effected by (the power) of his austerities.

---

ரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(பரி-ரை.) எ-து,—முயன்றால் மறுமைக்கண்தாம் வேண்டிய பயன் கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால், செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும், எ-று.

ஈண்டென்பதனான் மறுமைக்கணென்பது பெற்றாம். மேற்கதி, வீடு பேறுகள் தவத்தானன்றி எய்தப்படா வென்பதாம். இவை நான்குபாட் டானும் தவத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வேண்டிய - (முயன்றால்) பெறவேண்டிய பயன்களை, வேண்டி ஆங்கு – வேண்டியபடியே, எய்தலால்-(மறு மையிலேதாம்) பெறலாம் ஆதலால், செய்தவம் - செய்யத் தகு வதாகிய தவமானது, ஈண்டு-இம்மையில், முயலப்படும் - (அறி வுடையோராலே) செய்யப்படும்.

**265.** Religious discipline is practised in this world, because it secures the attainment of whatever one may wish to enjoy (in the world to come.)

---

சு. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(பரி-ரை.) எ-து,—தங்கருமஞ் செய்வாராவார் துறந்து தவத்தைச் செய்வார்; அவரையொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின் கண் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார், எ-று.

அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின்வேறாய உடற்கு வருத் தம் வருமென் றொழியாது தவத்தினைச்செய்ய, பிறப்புப் பிணி மூப்பு இறப் புக்களான் அநாதியாகத் துன்பமெய்திவருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடு பெறுமாகலின், தவஞ்செய்வாரைத் தங்கருமஞ் செய்வாரொன்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின்பொருட்டுப் பலபிறவியுந் துன்புறத் தக்க பாவஞ்செய்துகோடலின், அல்லாதாரை அவஞ்செய்வாரொன்றும், கூறினார். மற்று—வினைமாற்றின்கண்வந்தது.

(தெ-ப-ரை.)—தவம்செய்வார்-தவஞ்செய்பவர், தம் கருமம் செய்வார் – தமதுகருமத்தைச் செய்பவராவார், மற்றுஅல்லார் – மற்றைப் பொருளின்பங்களைச்செய்வார், ஆசையுள்பட்டு - (அவை களின்) ஆசையாகிய வலையில் அகப்பட்டு, அவம்செய்வார்-(தமக் குக்) கேடுசெய்பவ ராவார்.

**266.** Those discharge their duty who perform austerities; all others accomplish their own destruction, through the entanglement of the desire (of riches and sensual pleasure).

---

அஃது இலார் - அம்முன்னைத்தவமில்லாதவர், மேற்கொள்வது- செய்யத்தொடங்குவது, அவம் – வீணும்.

**262.** Austerities can only be borne, and their benefits enjoyed, by those who have practised them (in a former birth); it will be useless for those who have not done so, to attempt to practise them (now.)

---

௩. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

(பரி-ரை.) எ - து—இல்லறத்தையே பற்றி நிற்பார் துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை விரும்பித் தாந் தவஞ்செய்தலை மறந்தார்போலும், எ-று.

துப்புரவு - அனுபவிக்கப்படுவன. வேண்டிய வேண்டியாங் கெய்தற் பயத்ததாகலின் யாவராலுஞ் செய்யப்படுவதாய தவத்தைத் தாஞ்செய் யுந் தானத்தின்மேல் விருப்பமிகுதியான் மறந்தார்போலு மெனவே, தானத் திற் றவம் மிக்கதென்பது பெற்றும்.

(தெ-ப-ரை.)—மற்றையவர்கள் – இல்லறத்தையே பற்றி நிற்பவர்கள், துறந்தார்க்கு - (இருவகைப்பற்றும்) விட்டவர்க்கு, துப்புரவு - உண்டியும் மருந்தும் இருப்பிடமும், வேண்டி-(உதவு தலை) விரும்பி, தவம் - (தாம்) தவஞ்செய்தலை, மறந்தார்கொல்- மறந்தார்போலும்.

**262.** Is it to provide food &c. for the ascetics who have abandoned (the desire of earthly possessions) that other persons have forgotten (to practise) austerity?

---

௪. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

(பரி-ரை.) எ-து,—தம்மறத்திற்குப் பகையாய் அழிவுசெய்தாரைக் கெடுத்தலும் அதனை உவந்தாரை உயர்த்தலும் ஆகிய இவ்விரண்டையும் தவஞ்செய்வார் நினைப்பாராயின், அவர் தவவலியான் அவை அவர்க்குளவாம், எ-று.

முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமை யின், தவத்திற்கேற்றி யுரைக்கப்பட்டது. எண்ணினென்றதனன், அவர்க்கு அவையெண்ணுமை இயல்பென்பது பெற்றும். ஒன்னார் பெரியராயினும் உவந்தார் சிறியராயினும், கேடும் ஆக்கமும் நினைந்த துணையானே வந்து நிற்குமெனத் தவஞ்செய்வார்மேலிட்டுத் தவத்தினது ஆற்றல் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—ஒன்னார் - (தமது அறத்துக்கு இடையூறு செய்த) பகைவரை, தெறலும்–கெடச்செய்தலையும், உவந்தாரை- (அதனை) விரும்பினவரை, ஆக்கலும் - உயரச்செய்தலையும், எண் ணின் - (தவஞ்செய்வோர்) நினைப்பாராயின், தவத்தான் - (அவ

ரது) தவவலிமையினால், வரும் - (அவை அவருக்கு) உண்டாகும்.

**262.** If (the ascetic) desire the destruction of his enemies, or the aggrandizement of his friends, it will be effected by (the power) of his austerities.

---

௫. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(பரி-கா.) எ-து,—முயன்றால் மறுமைக்கண்தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால், செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப்படும், எ-று.

ஈண்டென்பதனான் மறுமைக்கணென்பது பெற்றாம். மேற்கதி, வீடு பேறுகள் தவத்தானன்றி எய்தப்படா வென்பதாம். இவை நான்குபாட்டாலும் தவத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - கா.)—வேண்டிய - (முயன்றால்) பெறவேண்டிய பயன்களை, வேண்டி ஆங்கு - வேண்டியபடியே, எய்தலால்-(மறுமையிலேதாம்) பெறலாம் ஆதலால், செய்தவம் - செய்யத் தகுவதாகிய தவமானது, ஈண்டு-இம்மையில், முயலப்படும் - (அறிவுடையோராலே) செய்யப்படும்.

**265.** Religious discipline is practised in this world, because it secures the attainment of whatever one may wish to enjoy (in the world to come.)

---

௬. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(பரி-கா.) எ-து,—தங்கருமஞ் செய்வாராவார் துறந்து தவத்தைச் செய்வார்; அவரையொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின் கண் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார், எ-று.

அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின்வேறாய உடற்கு வருத்தம் வருமென் றொழியாது தவத்தினைச்செய்ய, பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பமெய்திவருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடு பெறுமாகலின், தவஞ்செய்வாரைத் தங்கருமஞ் செய்வாரொன்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின்பொருட்டுப் பலபிறவியுந் துன்புறத் தக்க பாவஞ்செய்துகோடலின், அல்லாதாரை அவஞ்செய்வாரொன்றும், கூறினர். மற்று—வினைமாற்றின்கண்வந்தது.

(தெ-ப-கா.)—தவம்செய்வார்-தவஞ்செய்பவர், தம் கருமம் செய்வார் - தமதுகருமத்தைச் செய்பவராவார், மற்றுஅல்லார் - மற்றைப் பொருளின்பங்களைச்செய்வார், ஆசையுள்பட்டு - (அவைகளின்) ஆசையாகிய வலையில் அகப்பட்டு, அவம்செய்வார்-(தமக்குக்) கேடுசெய்பவ ராவார்.

**266.** Those discharge their duty who perform austerities; all others accomplish their own destruction, through the entanglement of the desire (of riches and sensual pleasure).

---

எ. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—தீயின்கணிடும் பொன்னுக்கு அது சுடச்சுடத் தன்னொடு கலந்த குற்றநீங்கி ஒளி மிகுமாறுபோல, தவஞ்செய்யவல்லார்க்கு அதனான் வருந்துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாவநீங்கி ஞானமிகும், எ-று.

சுடச்சுடரும் பொன்போலென்று ராயினும், கருத்துநோக்கி இவ்வா றுரைக்கப்பட்டது. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின் ஒளியென்றார்.

(தெ-ப-ரை.)—சுடச்சுடரும் - (புடத்தீயானது) சுடச்சுட ஒளிவிடும், பொன்போல்-பொன்னைப்போல, நோற்கிற்பவர்க்கு - தவஞ்செய்ய வல்லவர்க்கு, துன்பம் - (அதனால் வரும்) துன்பம், சுடச்சுட-வருத்த வருத்த, ஒளிவிடும்-ஞானஒளிமிகும்.

**267.** Just as gold is purified as heated in the fire, will those shine, who have endured the buriung of pain (in frequent austerities.)

---

அ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(பரி-ரை.) எ-து,—தன்னுயிரைத் தான் தனக்குரித்தாகப் பெற்றவனைப் பெறாதனவாகிய மன்னுயிர்களெல்லாந் தொழும், எ-று.

தனக்குரித்தாதல்—தவமாகிய தன்கருமஞ்செய்தல். அதனினூங்குப் பெறுதற்கரியது இன்மையின், பெற்றானையென்றார். அது பெறாதனவென் றது ஆசையுட்பட்டு அவஞ்செய்யு முயிர்களை. சாபமும் அருளுமாகிய இரண்டாற்றலு முடைமையின், தொழுமென்றார்.

(தெ-ப-ரை.)—தன்உயிர் - தனதுஉயிரை, தான்அற - தனக்கு உரித்தாக, பெற்றானை - பெற்றவனை, ஏனைய-அது பெறா தவையாகிய, மன்உயிர்எல்லாம் - நிலைபேறுடைய உயிர்களெல் லாம், தொழும்-கைகூப்பி வணங்கும்.

**268.** All other creatures will worship him who has attained the control of his own soul.

---

கூ. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம். தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப்பட்டார்க்கு, எ-று.

சிறப்பும்மை அது கூடாமை விளக்கிற்று; மன்னுயிரெல்லாந் தொழு தலேயன்றி இதுவுங் கைகூடுமென எச்சவும்மையாக வுரைப்பினும் அமை யும். ஆற்றல்—சாபவருள்கள். இவைநான்குபாட்டானும் தவஞ்செய்வா ரது உயர்ச்சி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நோற்றலின் - தவஞ்செய்தலால், ஆற்றல்- (வருவதாகிய) வல்லமையில், தலைப்பட்டவர்க்கு - மேற்பட்

டவர்க்கு, கூற்றம்-யமனை, குதித்தலும் - கடத்தலும், கைகூடும்- உண்டாகும்.

**269.** Those who have attained the power which religious discipline confers, will be able also to pass the limit of Yama, (the God of death.)

---

கo. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(பரி-ரை.) எ - து,—உலகத்துச் செல்வர்கள் சிலராக நல்கூர்வார் பலராதற்குக் காரணம் யாதெனின், அது தவஞ்செய்வார் சிலராக அது செய்யாதார் பலராதல், எ-று.

செல்வம் நல்குரவென்பன—ஈண்டு அறிவினது உண்மை யின்மைகளை யுங் குறித்து நின்றன. என்னை? "நுண்ணுணர் வின்மை வறுமை யஃது டைமை—பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" என்றாராகலின். நோற்பார் சிலரெனக் காரணங் கூறினமையான், காரியம் வருவித்துரைக்கப்பட்டது. தவஞ்செய்யாதார்க்கு இம்மையின்பமும் இல்லையென இதனால் அவரது தாழ்வு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இலர் - (உலகத்திற்செல்வர் சிலராக) வறியவர், பலர்ஆகிய காரணம் - பலராதற்குக்காரணம் (யாதென்றால்), (அது) நோற்பார் - தவஞ்செய்வோர், சிலர் - சிலராக, நோலாதவர் - தவஞ்செய்யாதவர், பலர் - பலராதல்ஆம்.

**270.** Because there are few who practise austerity and many who do not, there are many destitute and few rich in this world.

---

## உஅ-ம். அதி—கூடாவொழுக்கம்.

---

அஃதாவது தாம் விட்ட காமவின்பத்தை உரனின்மையின் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு, இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

க. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

(பரி-ரை.) எ-து,—வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது மறைந்த வொழுக்கத்தை, உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்களைந்துங் கண்டு, தம்முள்ளே நகும், எ-று.

காமம் தன்கண்ணே தோன்றி நலியாநிற்கவும் அதனது இன்மை கூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் வஞ்சமனமென்றும், அந்நலிவு பொறுக்கமாட்டாதொழுகுங் களவொழுக்கத்தைப் படிற்றொழுக்கமென்றும், உலகத்துக் களவுடையார் பிறரறியாமற் செய்வனவற்றிற்கு ஐம்பெரும்பூதங்கள் சான்றாகலின், அவ்வொழுக்கத்தையும் அவன் மறைக்கின்ற ஆற்றையு

மறிந்து அவனறியாமற் றம்முள்ளே நகுதலின், அகத்தேநகுமென்றுங் கூறினர். செய்தகுற்றம் மறையாதாகலின், அவ்வொழுக்கம் ஆகாதென்பது கருத்து.

(தெ - ப - ை.)—வஞ்சமனத்தான் - வஞ்சனைபொருந்திய மனத்தை யுடையவனது, படிறு ஒழுக்கம்-மறைந்த ஒழுக்கத்தை, பூதங்களைந்தும் - (உடம்பாய் அவனோடு கலந்துநிற்கின்ற) பஞ்ச பூதங்களும் (கண்டு), அகத்தே - (தம்) உள்ளே, நகும்-சிரிக்கும்.

**271.** The five elements (of his body) will laugh within him, at the feigned conduct of the deceitful minded man.

---

உ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

(பரி - ை.) எ-து,—ஒருவனுக்கு வான்போ லுயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும், தான் குற்றமென் றறிந்த அதன்கண்ணே தன்னெஞ்சு தாழுமாயின், எ-று.

வானுயர்தோற்றமென்பது "வான்றோய்குடி" என்றாற்போல இலக்கணைவழக்கு. அறியாது செய்த குற்றமல்லது அறிந்துவைத்துச் செய்த குற்றங் கழுவப்படாமையின், நெஞ்சு குற்றத்த தாயேவிடும்; விடவே, நின்ற வேடமாத்திரத்திற்குப் புறத்தாரை வெருட்டுதலே யல்லது வேறு பயனில்லை யென்பதாம்.

(தெ-ப-ை.)—தான் அறி-தான் அறிந்த, குற்றம் - குற்றத்திலே, தன்நெஞ்சம் - தன்மனம், படின் - தாழுமாயின், (ஒருவனுக்கு) வான்உயர் - வான்போலுயர்ந்த, தோற்றம் - தவவேடமானது, எவன்செய்யும் - என்ன பயனைச் செய்யும்.

**272.** What avails an appearance (of sanctity) high as heaven, if his mind suffers (the indulgence) of conscious sin.

---

ங. வலியி லிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(பரி - ை.) எ - து,—மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையார் வேடத்தைக்கொண்டு தான் அதன் வழிப்படுதல் பசுக்காவலர் கடியாமல் புலியின்தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற்போலும். எ-று.

இல்பொருளுவமை. வலியினிலைமையானென்ற அடையாளும், மேய்க்தற்றென்னுந் தொழிலுவமையாலும், வல்லுருவத்தோடு மனவழிப் படுதலென்பது பெற்றாம். காவலர் கடியாமை—புலி புல்தின்னா தென்பதனாலும், அச்சத்தானு மாம்; ஆகவே, வல்லுருவங் கோடற்குப் பயன் அன்னகாரணங்களான் உலகத்தார் அயிராமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லானையுந் துறந்து வலியுமின்றிப் பிறர் அயிராத வல்லுருவமுங்கொண்டு நின்

நவன் மனவழிப்படுதலாவது தன் மனமோடியவழியே ஓடி மறைந்து பிற ர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ்வாறுதல், பெற்றம் தனக்குரிய புல்லை விட்டுப் பிறர்க்குரிய பைங்கூழை மேய்ந்தாற்போலுமென்ற உவமையான், அறிக.

(தெ-ப-ரை.)—வலிஇல் - (மனத்தை அடக்கும்) வல்லமை இல்லாத, நிலைமையான் —இயல்புடையவன், வல்உருவம் – அவ் வல்லமையை யுடையவரது தவவேடத்தைக்கொண்டு (மனம் போனவழி போகுதல்), பெற்றம் – பசுவானது, (காவற்காரர் துரத்தா திருக்கும்படி) புலியின்தோல் - புலியினது தோலை, போர்த்து-போர்த்துக்கொண்டு, மேய்ந்தஅற்று-பயிரைமேய்ந் ததையொக்கும்.

**273.** The assumed appearance of power, by a man who has no power (to restrain his senses and perform austerity), is like a cow feeding on grass covered with a tiger's skin.

---

ச. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(பரி-ரை.) எ-து,—அவ்வலியினிலைமையான் தவவேடத்தின்கண்ணே மறைந்துநின்று தவமல்லவற்றைச் செய்தல் வேட்டுவன் புதலின்கண்ணே மறைந்துநின்று புட்களைப் பிணித்தாற்போலும், எ-று.

தவம்-ஆகுபெயர். தவமல்லவற்றைச் செய்தலாவது பிறர்க்குரிய மகளி ரைத் தன்வயத்தாக்குதல். இதுவும் இத்தொழிலுவமையான்அறிக.

(தெ - ப - ரை.)—தவம் - (அவ்வல்லமையில்லாத நிலைமை யான்) தவவேடத்தில், மறைந்து-மறைந்திருந்து, அல்லவைசெய் தல்-தவமல்லாதவைகளைச்செய்தல், வேட்டுவன்-வேடன், புதல்-புதலிலே, மறைந்து - ஒளித்திருந்து, புள்-பறவைகளை, சிமிழ்த் தது அற்று-பிடித்ததுபோலும்.

**274.** He who hides himself under the mask of an ascetic and commits sins, is like a sportsman who conceals himself in the thicket to catch birds.

---

ரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

(பரி-ரை.) எ - து,—தம்மைப் பிறர் நன்கு மதிந்தற்பொருட்டு யாம் பற்றற்றேமென்று சொல்வாரது மறைந்தவொழுக்கம் அப்பொழுது இனி துபோலத் தோன்றுமாயினும், பின் என்செய்தேம் என்செய்தேமென்று தாமேயிரங்கும்வகை, அவர்க்குப் பலதுன்பங்களையுங் கொடுக்கும், எ-று.

சொல்லளவல்லது பற்றறுமையின், பற்றற்றே மென்பாரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய இன்பத்தின்பொருட்டுப் பெரிதாய் நெடுங்கால நிற்பதாய பாவத்தைச் செய்வார் அதன்விளைவின்கண் அந்தோ

வினையே யென்றழுங்குவராகலின், எற்றெற்றென்றுங்கூறினார். இவை யைந்துபாட்டானும் கூடாவொழுக்கத்தின் இழுக்கம் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பற்று அற்றேம்என்பார் - (பிறர்தம்மைநன்கு மதித்தற்பொருட்டு) பற்றற்றோமென்று சொல்லுவாரது, படிறு ஒழுக்கம் - மறைந்தவொழுக்கமானது, (அப்பொழுது இனிது போல் தோன்றுமாயினும்) எற்றுஎற்றுஎன்று - (பின்) என் செய்தோம் என்செய்தோமென்று (தாமேஇரங்கும்படி), ஏதம் பலவும்-பலதுன்பங்களையும், தரும் - (அவருக்குக்) கொடுக்கும்.

**275.** The false conduct of those who say they have renounced all desire, will one day bring them sorrows that will make them cry out, "Oh! what have we done, what have we done."

---

சு. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

(பரி-ரை.) எ-து,—நெஞ்சாற் பற்றறுது வைத்து பற்றற்றார்போன்று தானஞ்செய்வாரை வஞ்சித்து வாழுமவர்போல வன்கண்மையையுடையார் உலகத்தில்லை, எ-று.

தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம் மறுமைக்கண்தேவராதற் பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்னது ஈதுமென்று அறியாது ஈந்தாரை அதுகொண்டு இழிபிறப்பினராக்குதல். அவர் இழிபிறப்பினராதல் "அடங் கலர்க் கீந்த தானப்பயத்தினாலலறு மூர்நீர்த்—தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி—யுடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்—மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே." என்பதனா னறிக. தமக்கு ஆவன செய்தார்க்கு ஆகாதன விளைத்தலின், வன்கணாரில் லென்றார்.

(தெ-ப-ரை.)—நெஞ்சின் - மனத்தினால், துறவார் - (பற்றுக்களை) விடாராகி, துறந்தார்போல் - துறந்தவர்போல, வஞ்சித்து - (தானஞ்செய்வாரை) வஞ்சித்து, வாழ்வாரின்-வாழுமவர் போல், வன்கணார் - இரக்கமில்லாதவர், இல் - இலர்.

**276.** Amongst living men there are none so hard-hearted as those, who without forsaking (desire) in their heart, falsely take the appearance of those who have forsaken (it).

---

எ. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(பரி-ரை.) எ-து,—குன்றியின்புறம்போல வேடத்தாற் செம்மையுடையராயினும் அதன்மூக்குப்போல மனம் இருண்டிருப்பாரை உடைத்து உலகம், எ-று.

குன்றி - ஆகுபெயர். செம்மை கருமையென்பன பொருளின்கண் நிறத்தைவிட்டுச் செப்பத்தினும் அறியாமையினுஞ் சென்றனவாயினும், பண்பால் ஒத்தலின், இவை பண்புவமை: "கூழின் மலிமனம் போன் றிருளாநின்ற கோகிலமே" என்பதுமது.

(தெ - ப - ரை.)—புறம் - மேலே, குன்றி - குன்றிமணி யானது, கண்டுஅனையர்எனும் - காணப்படுதல்போற் காணப்படு கிறசெம்மையை யுடையவராயினும், அகம் - உள்ளே, குன்றி மூக்கின் - அக்குன்றிமணியின்மூக்குப்போல், கரியார் - கறுத்திருப் பவரை, உடைத்து - (உலகம்) உடையது.

**277.** (The world) contains persons whose outside appears (as fair) as the (red) berry of the Abrus, but whose inside is as black as the nose of that berry.

---

அ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(பரி-ரை.) எ-து,—மாசு தம்மனத்தின்கண்ணதாகப் பிறர்க்குத் தவத் தான் மாட்சிமையுடையராய் நீரின்மூழ்கிக்காட்டி, தாம் அதன்கண்ணே மறைந்து செல்லும் மாந்தர் உலகத்துப் பலர், எ-று.

மாசு - காம வெகுளி மயக்கங்கள். அவை போகதற்கன்றி மாண்டா ரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், அத்தொழிலை அவர் மறைதற்கு இடனாக்கினார். இனி மாண்டார் நீராடியென்பதற்கு மாட்சிமைப்பட்டா ரது நீர்மையையுடையராயென் றுரைப்பாருமுளர். இவைமூன்றுபாட்டா னும் அவ்வொழுக்க முடையாரது குற்றமும் அவரையறிந்து நீக்கல்வேண் டுமென்பதும் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—மாசு-அழுக்கானது, மனத்தது ஆக - (தம்) மனத்திலுள்ளதாக, மாண்டார் - (பிறர்க்குத் தவத்தால்) மாட்சி மையுடையவராக, நீர் ஆடி - நீரிலேமுழுகிக் (காட்டி), மறைந்து- (தாம் அதனிடத்தே) மறைந்து, ஒழுகும் - நடக்கும், மாந்தர்- மனிதர், பலர் - (உலகத்தில்) பலர்.

**278.** There are many men of masked conduct, who perform their ablutions, and (make a show) of greatness, while their mind is defiled (with guilt.)

---

கூ. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

(பரி-ரை.) எ-து,—அம்பு வடிவாற்செவ்விதாயினும், செயலாற்கொ டிது; யாழ் கோட்டால் வளைந்ததாயினும், செயலாற்செவ்விது; அவ்வ கையே தவஞ்செய்வோரையுங் கொடியர் செவ்வியரென்பது, வடிவாற் கொள்ளாது, அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்துகொள்க, எ-று.

கணைக்குச்செயல் கொலை. யாழுக்குச்செயல் இசையாலின்பம் பயத் தல். அவ்வகையே செயல் பாவமாயிற் கொடியரெனவும், அறமாயிற் செவ்வியரெனவுங் கொள்கவென்பதாம். இதனான் அவரையறியுமாறு கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—கணை-அம்பானது, (வடிவினாலே செவ்விதா யிருந்தாலும்) கொடிது - (செயலினாலே) கொடியதாயிருக்கின்

றது, யாழ் - வீணையானது, கோடு - (வடிவினாலே) வளைவினதா யிருந்தாலும், செவ்விது - (செயலினாலே) செவ்விதாயிருக்கின் றது, ஆங்கு - அவ்வகையே, அன்ன - தவஞ்செய்வார் கொடியர் செவ்வியராயிருக்கைகளை, (அவரதுவடிவினாலே கொள்ளாமல்), வினைபடுபாலால் - (அவரது) செயல்பட்ட பகுப்பினாலே, கொளல் - அறிந்துகொள்ளக்கடவர்.

**279.** As, in its use, the arrow is crooked, and the curved lute is straight, so by their deeds, (and not by their appearance) let (the uprightness or crookedness of) men be estimated.

---

கO. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

(பரி - ரை.) எ-து,—தவஞ்செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலுஞ் சடையாக்கலுமாகிய வேடமும் வேண்டா, உயர்ந்தோர் தவத்திற்காகா தென்று குற்றங்கூறிய ஒழுக்கத்தைக் கடிந்துவிடின், எ-று.

பறித்தலும் மழித்தலுள் அடங்கும். மழித்தலென்பதே தலைமயிரை உணர்த்தலின், அது கூறாராயினார். இதனாற் கூடாவொழுக்க மில்லா தார்க்கு வேடமும் வேண்டாவென அவரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகம் - உயர்ந்தோரால், பழித்தது - (தவத் திற்குஆகாதென்று) குற்றஞ்சொல்லப்பட்ட ஒழுக்கத்தை, ஒழித் துவிடின் - நீக்கிவிடுவாராயின், மழித்தலும் - (தவஞ்செய்வோ ர்க்குத்தலைமயிரை) முண்டிதஞ்செய்தலும், நீட்டலும் - (அத னைச்) சடையாக்கலும் (அல்லதுவளர்த்தலும்), வேண்டா-வேண் டுவனஅல்ல.

**280.** There is no need of a shaven crown, nor of tangled hair, if a man abstain from those deeds which the wise have condemned.

---

## உகூ-ம். அதி—கள்ளாமை.

அஃதாவது பிறருடைமையாயிருப்ப தியாதொருபொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாமை. கருதலும் செய்தலோடொத்தலின், கள்ளாமையென்றார். இல்வாழ்வார்க்காயின் தமரோடு விளையாட்டு வகை யால் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை அங்ஙனங் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்காயின் அதனைக் கருதியவழியும் பெரி யதோ ரிழுக்காம் ஆகலின், இது துறவறமாயிற்று. புறத்துப்போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர்மனம் அஃ தொழிந்து புறத்தே போந்து பஃறலைப்பட்டு உடம்பின் பொருட்டுப் பொ ருளை நோக்குதலேயன்றி, அதுதன்னையும் வஞ்சித்துக்கொள்ளக் கருதுதல் அவர்க்குப் பெரியதோ ரிழுக்காதல் அறிக. இவ்வாறு வாய்மை முதற் கொல்லாமையீறாய நான்கதிகாரத்திற்கு மொக்கும். பொருள்பற்றி நிக ழுங் குற்றத்தை விலக்குகின்றதாகலின், இது காமம்பற்றி நிகழ்வதாய கூடா வொழுக்கத்தின்பின் வைக்கப்பட்டது.

௧. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன் றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(பரி-ரை.) எ - து,—வீட்டினையிகழாது விரும்புவான் இவனென்று தவத்தோரான் நன்குமதிக்கப்படுவோன் யாதொருபொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாவகை தன்னெஞ்சினைக்காக்க, எ-று.

எள்ளாதென்னும் எதிர்மறைவினையெச்சம் எள்ளாமையெனத் திரிந்து நின்றது. வீட்டினை யிகழ்தலாவது காட்சியே அளவையாவதென்றும், நிலம், நீர், தீ, வளியெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தாற் றோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட் டழியுமென்றும், இறந்தவுயிர் பின் பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப்படுவதென் றுஞ் சொல்லும் உலோகாயதமுதலிய மயக்கநூல்களைத் தெளிந்து, அவற் றிற்கேற்ப ஒழுகுதல். ஞானத்திற்கேதுவாய மெய்ந்நூற்பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனைவஞ்சித்துக் கொள்ளின், அதுவுங் களவா மாகலின், எனைத்தொன்றுமென்றார். நெஞ்சு கள்ளாமற் காக்கவெனவே, துறந்தார்க்கு விலக்கப்பட்ட கள்ளுதல் கள்ளக்கருதுதலென்பது பெற்றாம்.

(தெ-ப-ரை.)—எள்ளாமை - (முத்தியை) இகழாமல், வேண் டுவான்என்பான் - விரும்புவோன் இவனென்று (தவத்தோரா லே) நன்குமதிக்கப்படுவோன், எனைத்துஒன்றும் - யாதொரு பொருளையும், கள்ளாமை - பிறரைவஞ்சித்துக்கொள்ள நினையா தபடி, தன்நெஞ்சு - தனதுநெஞ்சை, காக்க - காக்கக்கடவன்.

**281.** Let him, who desires not to be despised, keep his mind from (the desire of) defrauding another of the smallest thing.

---

௨. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

(பரி-ரை.) எ-து,—குற்றங்களைத் தன்னெஞ்சாற் கருதுதலும் துறந் தார்க்குப் பாவம்; ஆதலால், பிறனொருவன்பொருளை அவன் அறியா வகையால் வஞ்சித்துக்கொள்வேமென்று கருதற்க, எ-று.

உள்ளத்தாலென வேண்டாது கூறினார், அவருள்ளம் ஏனையாருள்ளம் போலாது சிறப்புடைத்தென்பது முடித்தற்கு. உள்ளலுமென்பது இழிவு சிறப்பும்மை. அல் விகுதி வியங்கோளெதிர்மறைக்கண் வந்தது. இவை யிரண்டுபாட்டானும் இந்நடைக்குக் களவாவது இதுவென்பதூஉம் அது கடியப்படுவ தென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—உள்ளத்தால்-(குற்றங்களைத்தமது) நெஞ்சி னாலே, உள்ளலும் - நினைத்தலும், தீதே - (துறந்தார்க்குப்) பாவ மேயாம் (ஆதலால்), பிறன்பொருளை-பிறனது பொருளை, கள்ளத் தால் - அவனறியாதவகையினால், கள்வேம் - வஞ்சித்துக்கொள் வோம், எனல் - என்று நினையாதிருக்கக்கடவர்.

**282.** Even the thought (of sin) is sin; think not then of craftily stealing the property of another.

---

௩. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—களவினாலுளதாகிய பொருள் வளர்வதுபோலத் தோன்றித் தன்னெல்லையைக் கடந்துகெடும், எ-று.

ஆக்கத்திற்கேதுவாகலின், ஆக்கமெனப்பட்டது. எல்லையைக்கடந்து கெடுதலாவது தான் போங்காற் பாவத்தையும் பழியையும் நிறுத்திச் செய்தஅறத்தையும் உடன்கொண்டுபோதல். அளவறிந்தென்று பாடமோதி அவர் பயன்கொள்ளு மளவறிந்து அவ்வளவிற்கு உதவாது கெடுமென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—களவினால் - (பிறரை) வஞ்சித்தலால், ஆகிய- உண்டாகிய, ஆக்கம் - பொருளானது, ஆவதுபோல - வளர்வது போலே (தோன்றி), அளவுஇறந்து - (தனது) எல்லையைக் கடந்து, கெடும் - அழியும்.

**283.** The property, which is acquired by fraud, will entirely perish, even while it seems to increase.

---

௪. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(பரி-ரை.) எ-து,—பிறர்பொருளை வஞ்சித்துக் கோடற்கண்ணே மிக்க வேட்கை அப்பொழுது இனிதுபோலத் தோன்றித் தான் பயன் கொடுக்கும்பொழுது தொலையாத இடும்பையைக் கொடுக்கும், எ-று.

கன்றுதலான் எஞ்ஞான்றும் அக்களவையே பயில்வித்து அதனாற் பாவமும் பழியும் பயந்தேவிடுதலின், வீயாவிழுமந்தருமென்றார். இவை யிரண்டுபாட்டானும் அது கடியப்படுதற்குக் காரணங்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களவின்கண் - (பிறர்பொருளை) வஞ்சித்துக் கொள்ளுதலிலே, கன்றிய-மிகுந்த, காதல் - ஆசையானது, (அப்போது இனிதுபோல் தோன்றி), விளைவின்கண் - தான்பயனைக்கொடுக்கும்போது, வீயாவிழுமம் - தொலையாத துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

**284.** The eager desire of defrauding others will, when it brings forth its fruit, produce undying sorrow.

---

௫. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(பரி-ரை.) எ-து,—அருளினது உயர்ச்சியையறிந்து அதன்மேல் அன்புடையராய் ஒழுகுதல் பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கருதி அவரது சோர்வு பார்ப்பார்மாட்டு உண்டாகாது, எ-று.

தமக்குரிய பொருளையும் அதனது குற்றம் நோக்கித் துறந்து போந்தவர் பின் பிறர்க்குரிய பொருளை நன்குமதித்து அதனை வஞ்சித்துக்கோடற்கு அவரது சோர்வுபார்க்கும் மருட்சியரானால், அவர்மாட்டு, உயிர்

கன்மே லருள்செய்தல் நமக்குறுதியென்றறிந்து அவ்வருளின் வழுவாதொ முகுக் தெருட்சி கூடாதென்பதாம்.

(தெ-ப-ஶா.)—அருள் - அருளினது உயர்ச்சியை, கருதி- அறிந்து, அன்புடையர்ஆதல் - (அதன்மேல்) அன்புடையராய் நடத்தல், பொருள் - (பிறர்) பொருளை, கருதி - (வஞ்சித்துக்கொள்ள) நினைத்து, பொச்சாப்பு - (அவரது) சோர்வை, பார்ப்பார்கண் - பார்ப்போரிடத்து, இல் - உண்டாகாது.

235. The study of kindness, and the exercise of benevolence is not with those who watch for another's forgetfulness, through desire of his property.

---

௬. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

(பரி-ஶா.) எ-து,—உயிர் முதலியவற்றை அளத்தலாகிய நெறியின்க ணின்று அதற்கேற்ப ஒழுகமாட்டார் களவின்கண்ணே மிக்க வேட்கை யையுடையார், எ-று.

உயிர்முதலியவற்றை அளத்தலாவது காட்சி முதலாகச் சொல்லப் பட்ட அளவைகளான் உயிர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வருகின்ற நல்வினை தீவினைக்கு உற்றவினைவுகளையும், அவற்றான் அது நாற்கதியுட் பிறந் திறந்து வருதலையும், அதுசெய்யாமல் அவற்றைக் கெடுத்தற்குபாயமா கிய யோக ஞானங்களையும், அவற்றான் அஃதெய்தும் வீட்டினையும், அளந்து உள்ளவாறறிதல். இதனை ஆருகதர் தருமத்தியானமென்ப. அதற்கேற்ப ஒழுகுதலாவது அவ்வளக்கப்பட்டனவற்றுள் தீயனவற்றினீங்கி நல்லன வற்றின்வழி நிற்றல்.

(தெ - ப - ஶா.)—களவின்கண் - களவினிடத்தே, கன்றிய- மிகுந்த, காதலவர் - ஆசையையுடையவர், அளவின்கண்நின்று- (உயிர்முதலானவைகளை) அளவுசெய்தலாகிய வழியில் நின்று, ஒழுகல்ஆற்றார் - (அதற்கு ஏற்க) நடக்கமாட்டார்.

286. They cannot walk steadfastly, according to rule, who eagerly desire to defraud others.

---

௭. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

(பரி-ஶா.) எ - து,—களவென்று சொல்லப்படுகின்ற இருண்டஅறி வினையுடையராதல் உயிர் முதலியவற்றை அளத்தலென்னும் பெருமையை விரும்பினார்க்கண் இல்லை, எ-று.

இருள் - மயக்கம். காரியத்தைக் காரணமாகவுபசரித்துக் களவென் னுங் காரறிவாண்மையென்றும், காரணத்தைக் காரியமாக்கி அளவென் னுமாற்றலென்றுங் கூறினார். களவுந்துறவும் இருளுமொளியும்போலத் தம்முண்மாறுகலின், ஒருங்கு நில்லாவென்பது இவை மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—களவுஎன்னும் - களவென்று சொல்லப் படும், கார் - இருண்ட, அறிவுஆண்மை - அறிவினை யுடையரா யிருக்கை, அளவு என்னும் - (உயிர்முதலானவைகளை) அளத்த லென்று சொல்லப்படும், ஆற்றல்-பெருமையை, புரிந்தார்கண்- விரும்பினவரிடத்து, இல் - இல்லை.

**287.** That black knowledge which is called fraud, is not in those who desire that greatness which is called rectitude.

---

அ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

**(பரி-ரை.)** எ-து,—அவ்வளத்தலையே பயின்றவர் நெஞ்சத்து அறம் நிலைபெற்றாற்போல நிலைபெறும், களவையே பயின்றவர் நெஞ்சத்து வஞ் சனை, எ-று.

உயிர்முதலியவற்றை அளந்தறிந்தார்க்குத் துறவறஞ்சலியாது நிற்கு மென்பது அவ்வுவமையாற்பெற்றாம். களவோடு மாறின்றி நிற்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களவுஅறிந்தார்-களவை அறிந்தவரது, நெஞ் சில்-மனத்தில், கரவு - வஞ்சனையானது, அளவறிந்தார்-அவ்வளத் தலை அறிந்தவரது, நெஞ்சத்து – நெஞ்சில், அறம்போல - அறம் நிலை பெறுவதுபோல, நிற்கும் - நிலைபெறும்.

**288.** Deceit dwells in the mind of those who are conversant with fraud, even as virtue in the minds of those who are conversant with rectitude.

---

கூ. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

**(பரி-ரை.)** எ-து,—அவ்வளவல்லாத தீயநினைவுகளை நினைத்து அப்பொ ழுதே கெடுவர், களவல்லாத பிறவற்றை அறியாதவர், எ-று.

தீயநினைவுகளாவன பொருளுடையாரை வஞ்சிக்குமாறும், அவ்வஞ் சனையால் அது கொள்ளுமாறும், கொண்டவதனால் தாம் புலன்களை நுகரு மாறும் முதலாயின. நினைத்தலுஞ் செய்தலாகலிற் செய்தென்றும், அஃது உள்ள வறங்களைப் போக்கிக் கரந்த சொற்செயல்களைப் புகுவித்து அப் பொழுதே கெடுக்குமாகலின் ஆங்கே வீவரென்றுங் கூறினார். மற்றைய வாவன துறந்தார்க்கு உணவாக வோதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும், இல் வாழ்வார் செய்யுந் தானங்களுமாம். தேற்றாமை- அவற்றையே நுகர்ந்து அவ்வளவால் நிறைந்திருத்தலை அறியாமை. இதனாற் கள்வார் கெடுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களவுஅல்ல - களவல்லாத, மற்றைய-மற்ற வைகளை, தேற்றாதவர் - அறியாதவர் [களவொன்றையே அறிந்

தவொன்றபடி], அளவுஅல்ல - அவ்வளவல்லாத தீயநினைவுகளை, செய்து - நினைத்து, ஆங்கே - அப்போதே, வீவர் - கெடுவார்.

**289.** Those, who are acquainted with nothing but fraud, will perish in the very commission of transgression.

---

௰. களவார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

(பரி-ரை.) எ - து,—களவினைப் பயில்வார்கருத் தம்மின் வேறல்லாத உடம்புந் தவறும்; அது செய்யாதார்க்கு நெடுஞ்சேணதாகிய புத்தே ளுலகுந் தவறாது, எ-று.

உயிர் நிற்றற்கிடனாகலின், உயிர்நிலையெனப்பட்டது. சிறப்பும்மைகள் இரண்டும் விகாரத்தாற்றொக்கன. இம்மையினும் அரசனால் ஒறுக்கப்படுதலின் உயிர்நிலையுந் தள்ளுமென்றும், மறுமையினுந் தேவராதல் கூடுதலின் புத்தே ளுலகுந் தள்ளாதென்றுங் கூறினார். "மற்றது—தள்ளினுந் தள்ளாமை நீர்த்து" என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாதலறிக. இதற்குப் பிறவாறுரைப்பாருமுளர். இதனால் இருவர்பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கள்வார்க்கு - களவிலே பழகுவோர்க்கு, உயிர்நிலை - (தம்மின்வேறல்லாத) உடம்பும், தள்ளும் - தவறும்; கள்ளார்க்கு - களவிலேபழகாதவர்க்கு, புத்தேள்உலகு - (நெடுந்தூரமாகிய) தேவருலகமும், தள்ளாது - தவறாது.

**290.** Even their body will fail the fraudulent; but even the world of the gods will not fail those who are free from fraud.

---

## ௩௰-ம். அதி—வாய்மை.

அஃதாவது மெய்யினது தன்மை. பெரும்பான்மையுங் காமமும் பொருளும் பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், இது கூடாவொழுக்கங் கள்ளாமைகளின்பின் வைக்கப்பட்டது.

௧. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

(பரி - ரை.) எ-து,—மெய்ம்மையென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், அது பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாதசொற்களைச் சொல்லுதல், எ-று.

தீமை யாதொன்றும் இலாதவென இயையும். எனப்படுவதென்பது "ஊரெனப்படுவ துறையூர்" என்றாற்போல நின்றது. இதனான் நிகழ்ந்தது கூறலென்பது நீக்கப்பட்டது. அதுதானும், தீங்கு பயவாதாயின் மெய்ம்மையாம், பயப்பிற் பொய்ம்மையாமென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—வாய்மைஎனப்படுவது - மெய்ம்மையென்று சிறப்பித்துச்சொல்லப்படுவது, யாதுஎனின் - யாதென்று வினவினால் (அது பிறிதோருயிர்க்கு), யாதுஒன்றும் - சிறிதாயி

னும், தீமைஇலாத - தீமையைத்தராத சொற்களை, சொலல் - சொல்லுதல்.

**291.** Truth is the speaking of such words as are free from the least degree of evil (to others.)

---

உ. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

(பரி-டை.) எ-து,—பிறர்க்குக் குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்குமாயின், பொய்ம்மைச்சொற்களும் மெய்ம்மைச்சொற்களின் பாலவாம், எ-று.

குற்றந்தீர்ந்த நன்மை அறம்; அதனைப்பயத்தலாவது கேடாதல் சாக்காடாதல் எய்த நின்றதோருயிர் அச்சொற்களின் பொய்ம்மையானே அதனினீங்கி இன்புறுதல். நிகழாதது கூறலும், நன்மை பயவாதாயின்பொய்ம்மையாம், பயப்பின் மெய்ம்மையாமென்பது கருத்து. இவை யிரண்டுபாட்டானும் தீங்கு பயவாத நிகழ்ந்ததுகூறலும் நன்மை பயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மையென்வும், நன்மை பயவாத நிகழாதது கூறலும் தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மையெனவும், அவற்றது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-டை.)—பொய்ம்மையும் - பொய்ம்மைச் சொற்களும், புரைதீர்ந்த - குற்றத்தினின்றுநீங்கிய, நன்மை - நன்மையை, பயக்கும்எனின் - (பிறருக்குத்) தருமாயின், வாய்மையிடத்த - மெய்ம்மைச்சொற்களி னிடத்தனவாம்.

**292.** Even falsehood has the nature of truth, if it confer a benefit that is free from fault.

---

௩. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(பரி-டை.) எ-து,—ஒருவன் தன்னெஞ்சறிவதொன்றனைப் பிறர் அறிந்திலரென்று பொய்யாதொழிக; பொய்த்தானாயின், அதனை அறிந்த தன்னெஞ்சே அப்பாவத்திற்குக் கரியாய் நின்று, தன்னை அதன் பயனாய துன்பத்தை யெய்துவிக்கும், எ-று.

நெஞ்சு கரியாதல் "கண்டவ ரில்லென வுலகத்துள் உணராதார்—தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளு—ணெஞ்சறிந்த கொடியவை மறைப்பவுமறையாவா—நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்" என்பதனானு மறிக. பொய் மறையாமையின், அது கூறலாகாதென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-டை.)—தன்நெஞ்சு - (ஒருவன்) தனதுநெஞ்சினாலே, அறிவது - அறியப்படுவதொன்றை, பொய்யற்க - (பிறர் அறிந்திலரொன்று) பொய்யாதொழியக்கடவன்; பொய்த்தபின்- பொய்த்தானாயின், தன்நெஞ்சே-(அதனைஅறிந்த)தனதுநெஞ்சே,

தன்னை - (அப்பாவத்துக்குச் சர்க்ஷியாய்நின்று) தன்னை, சுடும்-வருத்தும் [அதன்பயனாகிய துன்பத்தை அடைவிக்கும்.]

**29.3** Let not a man knowingly tell a lie; for after he has told the lie, his mind will burn him (with the memory of his guilt.)

ச. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தன்னுள்ளத்திற்கேற்பப் பொய்கூறாது ஒழுகுவனாயின், அவன் உயர்ந்தோருள்ளத்தின்க ணெல்லாம் உளனாம், எ-று.

உள்ளத்தாலென்பது வேற்றுமை மயக்கம். பொய் கூறாதொழுகுதலாவது - மெய் கூறியொழுகுதல். அவனது அறத்தின தருமைநோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பரென்பதாம். இதனான் இம்மைப் பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உள்ளத்தால் - (ஒருவன்) தன் மனதுக்கேற்ப, பொய்யாது - பொய்பேசாமல், ஒழுகின் - நடப்பானாயின், (அவன்), உலகத்தார் - உயர்ந்தோரது, உள்ளத்துள் எல்லாம்-மனங்களிலெல்லாம், உளன் - இருப்பான்.

**294.** He who, in his conduct, preserves a mind free from deceit, will dwell in the minds of all men.

ரு. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தன்மனத்தோடு பொருந்த வாய்மையைச் சொல்வானாயின், அவன் தவமுந் தானமும் ஒருங்கு செய்வாரினுஞ் சிறப்புடையன், எ-று.

மனத்தோடு பொருந்துதல்-மனத்திற்கேறுதல். புறமாகிய மெய்யாற் செய்யு மவற்றினும் அகமாகிய மனமொழிகளாற் செய்யுமது பயனுடைத்தென்பதாம்.

(தெ-ப-ரை.)—மனத்தொடு - (ஒருவன்) தன் மனத்தோடுபொருந்த, வாய்மை - உண்மையை, மொழியின் - சொல்லுவானாயின், (அவன்), தவத்தொடு - தவத்துடனே, தானம்-தானத்தை, செய்வாரின் - (ஒருமிக்கச்) செய்வாரினும், தலை-சிறப்புடையவனாவான்.

**295.** He, who speaks truth with all his heart, is superior to those who make gifts and practise austerities.

சா. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு இம்மைக்குப் பொய்யாமையை ஒத்த புகழ்க்காரணமில்லை; மறுமைக்கு மெய் வருந்தாமல் அவனுக்கு எல்லா அறங்களையுந் தானே கொடுக்கும், எ-று.

புகழ்—ஈண்டு ஆகுபெயர். இல்லறத்திற்குப் பொருள்கூட்டல் முதலியவற்றானும், துறவறத்திற்கு உண்ணாமை முதலியவற்றானும் வருந்தல் வேண்டுமென்றே, அவ்வருத்தங்கள் புகுதாமல் அவ்விருவகைப்பயனையுந் தானே தருமென்பார், எய்யாமை யெல்லாவறமுந் தருமென்றார்.

**(தெ-ப-ரை.)—பொய்யாமைஅன்ன - (ஒருவனுக்கு) பொய்பேசாமைக்கு ஒப்பாகிய, புகழ்-புகழ்க்காரணம், இல்லை - (இம்மைக்கு) இல்லை, (அது அவனுக்கு), எய்யாமை - (உடம்பு) வருந்தாமல், எல்லாஅறமும் - எல்லாவறங்களையும், தரும்-(மறுமைக்குந்தானே) கொடுக்கும்.**

**296.** There is no praise like the praise of never uttering a falsehood: without causing any suffering, it will lead to every virtue.

---

எ. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(பரி - ரை.) எ - து,—ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்ய வல்லனாயின், அவன் பிறவறங்களைச் செய்யாமையே செய்யாமையே நன்று, எ-று.

அடுக்கிரண்டனுள் முதலது இடைவிடாமை மேற்று, ஏனையது துணிவின்மேற்று. பலவறங்களையும் மேற்கொண்டு செய்தற்கருமையால் சில தவறிற் குற்றப்படுதலின், அவையெல்லாவற்றின் பயனையுந் தானே தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நன்றென்பார், செய்யாமை செய்யாமை நன்றென்றார். இதனை இவ்வாறன்றிப் பொய்யாமையைப் பொய்யாமற்செய்யிற் பிறவறஞ்செய்கை நன்றெனப் பொழிப்பாக்கிப் பொய்கூறிற் பிறவறஞ்செய்கை நன்றாகாதென்பது அதனாற் போந்த பொருளாக்கி உரைப்பாருமுளர். பிறவறங்களெல்லாந் தரும் பயனைத் தானே தரும் ஆற்றலுடைத்தென மறுமைப்பயனது மிகுதி இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது.

**(தெ - ப - ரை.)—பொய்யாமைபொய்யாமை - (ஒருவன்) பொய்பேசாமையையே பொய்பேசாமையையே, ஆற்றின்-செய்யவல்லவனாயின், அறம்பிற - பிறவறங்களை, செய்யாமை செய்யாமை - (அவன்) செய்யாமையே செய்யாமையே, நன்று-நல்லது.**

**297.** If a man has the power to abstain from falsehood, it will be well with him, even though he practise no other virtue.

---

அ. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

(பரி - ரை.) எ - து,—ஒருவனுக்கு உடம்பு தூய்தாந்தன்மை நீரானே யுண்டாம்; அதுபோல மனந்தூய்தாந்தன்மை வாய்மையானுண்டாம், எ-று.

காணப்படுவது உள்ளதாகலின், உண்டாமென்றுரைக்கப்பட்டது. உடம்பு தூய்தாதல் - வாலாமை நீங்குதல். மனந்தூய்தாதல் - மெய்யுணர்தல். புறந்தூய்மைக்கு நீரல்லது காரணமில்லாதாற்போல, அகந்தூய்மைக்கு

வாய்மையல்லது காரணமில்லை யென்றவாறாயிற்று. இதனானே துறந்தார்க்கு இரண்டுதூய்மையும் வேண்டுமென்பதூஉம் பெறலாம்.

(தெ-ப-ஸா.)—புறம் - (ஒருவனுக்கு) உடம்பு, தூய்மை-பரிசுத்தமாந்தன்மை, நீரான்-நீரினால், அமையும் - உண்டாகும், (அதுபோல), அகம் - மனது, தூய்மை - பரிசுத்தமாந்தன்மை, வாய்மையான் - உண்மையால், காணப்படும் - உண்டாகும்.

**298.** Purity of body is produced by water and purity of mind by truthfulness.

---

௯. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(பரி - ஸா.) எ-து,—புறத்திருள்கடியும் உலகத்தார் விளக்குகள் எல்லாம் விளக்காகா; துறவான் அமைந்தார்க்கு விளக்காவது மனத்திருள் கடியும் பொய்யாமையாகிய விளக்கே விளக்காவது, எ-று.

உலகத்தார் விளக்காவன ஞாயிறு, திங்கள், தீயென்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின், பொய்யாவிளக்கே விளக்கென்றார். அவ்விருளாவது அறியாமை. பொய்யாத விளக்கென்பது குறைந்து நின்றது; பொய்கூறாமையாகிய விளக்கென்றவாறு. இனி இதற்குக் கல்வி முதலியவற்றான் வரும் விளக்கமெல்லாம் விளக்கமல்ல, அமைந்தார்க்கு விளக்கமாவது பொய்யாமையான் வரும் விளக்கமே விளக்கமென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ஸா.)—சான்றோர்க்கு - (துறவினாலே) நிறைந்தோருக்கு, எல்லாவிளக்கும் - (புறத்திருளை நீக்குகிற உலகத்தோரது) விளக்குகளெல்லாம்), விளக்குஅல்ல - விளக்குகளாவனவல்ல, பொய்யாவிளக்கே - (அகத்திருளைநீக்குகிற) பொய்யாமையாகிய விளக்கே, விளக்கு - விளக்காம்.

**299.** All lamps of nature are not lamps; the lamp of truth is the lamp of the wise.

---

௩0. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

(பரி - ஸா.) எ - து,—யாம் மெய்ந்நூல்களாகக் கண்ட நூல்களுள் யாதொரு தன்மையானும் வாய்மையின் மிக்கனவாகச் சொல்லப்பட்ட பிறவறங்க ளில்லை எ-று.

மெய்யுணர்த்துவனவற்றை மெய்யென்றார். அவையாவன தங்கண் மயக்கம் இன்மையின் பொருள்களை யுள்ளவா றுணரவல்லராய்க் காமவெகுளிகள் இன்மையின் அவற்றையுணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய், இறைவர் அருளான் உலகத்தார் உறுதி யெய்துதற்பொருட்டுக் கூறிய ஆகமங்கள். அவையெல்லாவற்றினும் இஃதொப்ப முடிந்ததென்பதாம். இவை மூன்றுபாட்டானும் இவ்வறத்தினது தலைமை கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—யாம் - எம்மால், மெய்ஆக - மெய்ந்நூல்களாக, கண்டவற்றுள் - காணப்பட்ட நூல்களுள், எனைத்துஒன்றும் - யாதொருதன்மையாலும், வாய்மையின் - உண்மையின், நல்ல - மேற்பட்டவையாகிய, பிற - பிறவறங்கள், இல்லை-இல.

**300.** Amidst all that we have seen (described) as real (excellence,) there is nothing so good as truthfulness.

---

15-XII-50
1-2A-63

## ௩க-ம். அதி—வெகுளாமை.

அஃதாவது சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவன்மாட் டுளதாயவிடத்தும் அதனைச் செய்யாமை. இது பொய்ம்மைபற்றி நிகழ்வதாய வெகுளியை விலக்கலின், வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

க. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

(பரி-ரை.) எ-து,—தன் சினம் பலிக்குமிடத்து அதனை யெழாமற் றடுப்பானே அருளாற் றடுப்பானுவான்; ஏனைப்பலியாதவிடத்து அதனைத் தடுத்தாலென் தடாதொழிந்தாலென்! எ-று.

செல்லிடம் அல்லிடமென்றது தவத்தாற் றன்னின் மெலியாரையும் வலியாரையும். வலியார்மேற் காவாவழியும் அதனான் அவர்க்கு வருவதோர் தீங்கின்மையிற் காத்தவழியும் அறனில்லை யென்பார், காக்கினென் காவாக்காலென் னென்றார். இதனான் வெகுளாமைக் கிடங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சினம் - (தன்) கோபத்தை, செல்இடத்து-(அது)பலிக்குமிடத்து, காப்பான்-(உண்டாகாமல்)தடுப்பவனே, காப்பான் - (அருளினாலே) தடுப்பவனுவான்; அல்இடத்து - மற்றைப்பலியாதவிடத்து, காக்கின் - (அதனைத்) தடுத்தால், என்-என்ன, காவாக்கால் - தடுக்காவிட்டால், என் - என்ன.

**301.** He restrains his anger who restrains it when it can injure; when it cannot injure, what does it matter whether he restrain it, or not?

---

உ. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் வெகுளி தன்னின் வலியார்மே லெழின் தனக்கே தீதாம்; மற்றை யெளியார்மே லெழினும் அதனிற்றீயன பிற இல்லை, எ-று.

செல்லாவிடத்துச் சினம் பயப்பது இம்மைக்கண் அவரான் வரும் ஏதமே, ஏனையது இம்மைக்கட்பழியும் மறுமைக்கட்பாவமும் பயத்தலின், அதனிற் றீயன பிறவில்லை யென்றார். ஓரிடத்தும் ஆகாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—சினம் - (ஒருவனது) கோபமானது, செல்லாஇடத்து-தன்னின் வலியவர்மேல் (உண்டாயின்), தீது-(தனக்

கே) தீதாம்; செல்இடத்தும்-தன்னினெளியவர்மேல் (உண்டாயினும்), அதனின் - அக்கோபத்தினும், தீயபிற - தீமை யுடையவை வேறே, இல் - இல்லை.

**302.** Anger is bad, even when it cannot injure; when it can injure, there is no greater evil.

---

௩. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

(பரி-ளா.) எ-து,—யாவர்மாட்டும் வெகுளியை ஒழிக, ஒருவற்குத் தீயனவெல்லா முளவாதல் அதனான் வரும் ஆகலான், எ-று.

வலியார், ஒப்பார், எளியாரென்னும் மூவர் மாட்டும் ஆகாமையின் யார்மாட்டு மென்றும், மனத்தாற் றுறந்தார்க்கு ஆகாதனவாகிய தீச்சிந்தைக ளெல்லாவற்றையும் பிறப்பித்தலின் தீயபிறந்த லிதனான் வருமென்றுங் கூறினர்.

(தெ - ப - ரை.)—யார்மாட்டும் - யாவரிடத்திலும், வெகுளியை - கோபத்தை, மறத்தல்-மறக்கக்கடவர், (ஒருவருக்கு), தீய-தீமையுடையவையெல்லாம், பிறத்தல் - உண்டாகுதல், அதனான் வரும்-அக்கோபத்தினாலேவரும், (ஆதலால்).

**303.** Forget anger towards every one, as fountains of evil spring from it.

---

௪. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

(பரி-ளா.) எ-து,—துறந்தார்க்கு அருளான் உளவாய முகத்தின்கண் நகையையும் மனத்தின்கண் உவகையையுங் கொன்றுகொண்டு எழுகின்ற சினமே அல்லது அதனிற் பிறவாய பகைகளும் உளவோ இல்லை, எ-று.

துறவாற் புறப்பகை யிலராயினும் உட்பகையாய் நின்று அருண்முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித்துன்பமும் எய்துவித்தலான், அவர்கட்குச் சினத்தின்மிக்க பகையில்லையாயிற்று. இவை மூன்றுபாட்டானும் வெகுளியது தீங்கு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நகையும் - (துறந்தோர்க்கு அருளினாலே உண்டாகிய முகத்தினிடத்து) மலர்ச்சியையும், உவகையும் - (மனத்தினிடத்து) மகிழ்ச்சியையும், கொல்லும் - கெடுத்து எழுகின்ற, சினத்தின் - கோபத்தின், பிற - வேறாகிய, பகையும்-பகைகளும், உளவோ - உண்டோ [இல்லை].

**304.** Is there a greater enemy than anger, which kills both laughter and joy?

---

௫. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

(பரி-ரை.) எ-து,—தன்னைத்தான் துன்பமெய்தாமற் காக்க நினைத்தா னாயின், தன்மனத்துச் சினம் வாராமற்காக்க; காவானாயின், அச்சினந் தன்னையே கெடுக்குங் கடுந்துன்பங்களை யெய்துவிக்கும், எ-று.

"வேண்டிய வேண்டியாங்கெய்தற்"பயத்ததாய தவத்தைப் பிறர்மேற் சாபம் விடுதற்காக இழந்து அத்தவத்துன்பத்தோடு பழைய பிறவித்துன்ப மும் ஒருங்கெய்துதலின், தன்னையே கொல்லுமென்றார். "கொல்லச்சுரப்ப தாங்கீழ்" என்புழிப்போலக் கொலைச்சொல் ஈண்டுத் துன்பமிகுதி யுணர்த்தி நின்றது.

(தெ-ப-ரை.)—தன்னைதான் காக்கின் - (துன்பம் அடையா மல்)தன்னைத்தான்காக்கநினைத்தானாகில், சினம்-(தன்மனத்திலே) கோபம் (வாராமல்), காக்க - காக்கக்கடவன்; காவாக்கால்-காவா னாயின், சினம் - அக்கோபமானது, தன்னையே-அவனையே, கொல் லும் - கெடுக்குங் கடுந்துன்பங்களை அடைவிக்கும்.

**305.** If a man would guard himself, let him guard against anger; if he do not guard it, anger will kill him.

---

சு. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

(பரி-ரை.) எ-து,—சினமென்னும் நெருப்புத் தனக்கு இடமானவரை யேயன்றி அவர்க்கு இனமாகிய ஏமப்புணையையுஞ் சுடும், எ-று.

சேர்ந்தாரைக்கொல்லியென்பது ஏதுப்பெயர்; தான் சேர்ந்த விடத் தைக் கொல்லுந்தொழிலது என்றவாறு. சேர்ந்தாரையென உயர்திணைப் பன்மைமேல் வைத்து ஏனைநான்குபாலும் தங்கருத்தோடு கூடிய பொரு ளாற்றலாற்கொண்டார்; ஈண்டு உருவகஞ்செய்கின்றது துறந்தார் சினத் தையேயாகலின். சினமென்னு நெருப்பென்ற விதப்பு, உலகத்து நெருப்புச் சுடுவது தான்சேர்ந்த விடத்தையே இந்நெருப்புச் சேராத விடத்தையுஞ் சுடுமென்னும் வேற்றுமை தோன்ற,நின்றது. ஈண்டு இனமென்றது முற்றத் துறந்து தவஞானங்களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதி மொழிகளை இனியவாகச் சொல்லுவாரை. உருவகநோக்கிச் சுடுமென்னுந் தொழில் கொடுத்தாராயினும், அகற்றுமென்பது பொருளாகக்கொள்க. ஏமப்புணை- ஏமத்தை யுபதேசிக்கும் புணை. இனமென்னும் ஏமப்புணையென்ற ஏகதேச வுருவகத்தாற் பிறவிக்கடலுள் அழுந்தாமல் வீடென்னுங் கரையேற்றுகின்ற வென வருவித்துரைக்க. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. தன்னையும் வீழ்த்து எடுப்பாரையும் அகற்றுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—சினம்என்னும்-கோபமாகிய, சேர்ந்தாரைக் கொல்லி - நெருப்பானது, (தனக்கு இடமானவரை மாத்திரமல் லாமல்), இனம்என்னும் - (அவருக்கு) இனமாகிய, ஏமம்-இதோ பதேசஞ்செய்கிற, புணையை - மரக்கலத்தையும், சுடும்.

**306.** The fire of anger will burn up even the pleasant raft of friendship.

---

௭. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(பரி-ரை.) எ-து,—சினத்தைத் தன்னாற்றல் உணர்த்துவதோர் குண மென்று தன்கட்கொண்டவன் அவ்வாற்றலிழத்தல், நிலத்தின்கண் அறைந் தவன்கை அந்நிலத்தை யுறுதல் தப்பாதவாறு போலத் தப்பாது, எ-று.

வைசேடிகர் பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப்பொரு ளென்றாற்போல, ஈண்டுக் குணம் பொருளெனப்பட்டது. பிழையாதவற்றென்பது குறைந்து நின்றது. இவை மூன்றுபாட்டானும் வெகுண்டார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சினத்தை - கோபத்தை, பொருள்என்று - (தனது வல்லமையைக்காட்டுகிற) ஒருகுணமென்று, கொண்டவன் - (தன்னிடத்தே) கொண்டவனது, கேடு - அவ்வல்லமை யிழப்பு, நிலத்து - பூமியினிடத்து, அறைந்தான் - அறைந்தவ னது, கை - கையானது, பிழையாததுஅற்று - (அந்நிலத்திலே படுதல்) தப்பாதவிதம்போல் தப்பாது.

**307.** Destruction will come upon him who regards anger as a good thing, as surely as the hand of him who strikes the ground will not fail.

---

௮. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—பலசுடரை உடைத்தாய பேரெரிவந்து தோய்ந் தால் ஒத்த இன்னாதவற்றை ஒருவன் செய்தானாயினும், அவனை வெகு ளாமை ஒருவற்குக் கூடுமாயின், அது நன்று, எ-று.

இன்னாமையின் மிகுதி தோன்ற இணரெரியென்றும், அதனை மேன்மே லுஞ்செய்தல் தோன்ற இன்னாவென்றும், அச்செயல் முனிவரையும் வெ குள்விக்குமென்பது தோன்றப் புணரினென்றுங் கூறினார். இதனான் வெகு ளாமையது நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இணர் - பலசுடர்களையுடைய, எரி - பெரு நெருப்பானது, தோய்வு அன்ன - (வந்து) தழுவினாற்போலும், இன்னா - துன்பந்தருமவைகளை, செயினும் - (ஒருவன்) செய்தா னாயினும், வெகுளாமை - (அவன்மேல்) கோபஞ் செய்யாமை, புணரின் - கூடுமாயின், நன்று - (அது) நன்று.

**308.** Though one commit things against you as painful (to bear) as if a bundle of fire had been thrust upon you, it will be well, to refrain, if possible, from anger.

---

௯. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

(பரி-ரை.) எ-து,—தவஞ்செய்யுமவன், தன்மனத்தால் வெகுளியை ஒருகாலும் நினையானாயின், தான்கருதிய பேறெல்லாம் ஒருங்கே பெறும், எ-று.

உள்ளத்தாலெண வேண்டாது கூறியவதனன், அருளுடை உள்ளமென்பது முடிந்தது. அதனன் உள்ளாமையாவது அவ்வருளாகிய பகையை வளர்த்து அதனன் முற்றக் கடிதல். இம்மை மறுமை வீடென்பன வேறு வேறு திறத்தனவாயினும், அவையெல்லாம் இவ்வொன்றனே யெய்து மென்பார், உள்ளிய வெல்லாமுடனெய்து மென்றார். இதனன் வெகுளா தார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உள்ளத்தால் - (தவஞ்செய்வோன்) தன் மனத்தால், வெகுளி - கோபத்தை, உள்ளான்எனின் - (ஒருபோதும்) நினையானாயின், உள்ளியஎல்லாம் - நினைக்கப்பட்டபேறெல்லாம், உடன் - ஒருமிக்க, எய்தும் - பெறுவான்.

**309.** If a man never indulges anger in his heart, he will at once obtain whatever he has thought of.

---

௩0. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(பரி-ரை.) எ-து,—சினத்தின்கண்ணே மிக்கார், உயிருடையராயினும், செத்தாரோடொப்பர்; சினத்தைத் துறந்தார், சாதற்றன்மையராயினும், அதனையொழிந்தா ரளவினர், எ-று.

மிக்க சினத்தை உடையார்க்கு ஞானமெய்துதற் குரிய உயிர் நின்றதாயினும் கலக்கத்தான் அஃதெய்தாமை ஒருதலையாகலின், அவரை இறந்தாரனையரென்றும், சினத்தை விட்டார்க்குச் சாக்காடெய்துதற்குரிய யாக்கை நின்றதாயினும், ஞானத்தான வீடுபெறுதல் ஒருதலையாகலின், அவரை வீடுபெற்றாரோ டொப்பரென்றுங் கூறினர். இதனன் அவ்விருவர் பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இறந்தார்-(கோபத்தில்) மிகுந்தவர், (உயிருடையவரா யிருக்கினும்), இறந்தார் அனையர்-செத்தாரோடு ஒப்பாவார்; சினத்தை - அக்கோபத்தை, துறந்தார்-ஒழித்தவர், (சாகுந்தன்மையை யுடையவரா யிருக்கினும்) துறந்தார்துணை-அச்சாவை யொழிந்தாரோடு ஒப்பாவார்.

**310.** Those, who give way to excessive anger, are no better than dead men; but those, who are freed from it, are equal to those who are freed (from death).

---

## ௩௨-ம். அதி—இன்னாசெய்யாமை.

அஃதாவது தனக்கு ஒருபயனேக்கியாதல், செற்றம்பற்றியாதல், சோர்வானுதல் ஒருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னாசெய்தல் வெகுளியொழியவும் நிகழுமென்பது அறிவித்தற்கு, இது வெகுளாமையின்பின் வைக்கப்பட்டது.

க. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(பரி-ரை.) எ-து,—யோகமாகிய சிறப்புத் தரும் அணிமா முதலிய செல்வங்களைப் பிறர்க்கின்னா செய்து பெறலாமாயினும், அதனைச் செய்யாமை ஆகமங்கள் கூறியவாற்றான் மனந்தூயாரது துணிவு, எ-று.

உம்மை பெருமைமேற்று. சிறப்புடையதனைச் சிறப்பென்றும், அதன் பயிற்சியான் வாயுவை வென்றெய்தப்படுதலின் எட்டுச் சித்திகளையுஞ் சிறப்பீனுஞ் செல்வமென்றும், காமம், வெகுளி, மயக்கமென்னுங் குற்றங்கள் அற்றமையான் மாசற்றாரென்றுங் கூறினர். இதனால் தமக்கொரு பயனோக்கிச் செய்தல் விலக்கப்பட்டது.

(தெ-ப-ரை.)—சிறப்பு - யோகமாகிய சிறப்பினால், ஈனும்-தரப்படுவனவாகிய, செல்வம்-அணிமாமுதலாகிய செல்வங்களை, பெறினும்-பெறலாமாயினும், பிறர்க்கு-மற்றவர்களுக்கு, இன்னா-துன்பந்தருமவைகளை, செய்யாமை - செய்யாதிருத்தல், மாசு அற்றார் - (ஆகம வழியினால்) குற்றமற்றோர் (யாவருக்கும்), கோள் - துணிவாம்.

**311.** It is the determination of the spotless not to cause sorrow to others, although they could (by so causing) obtain the wealth which confers greatness.

---

௨. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(பரி-ரை.) எ-து,—தம்மேற்செற்றங்கொண்டு ஒருவன் இன்னாதவற்றைச் செய்தவிடத்தும், மீண்டு தாம் அவனுக்கின்னாதவற்றைச் செய்யாமையும் அவரது துணிவு, எ-று.

இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவ்வின்னாதவற்றை உட்கொள்ளாதுவிடுதல் செயற்பாலதென்பதாம்.

(தெ-ப-ரை.)—கறுத்து - ஒருவன் (தம்மேல்) வைரங்கொண்டு, இன்னா-துன்பந்தருமவைகளை, செய்த அக்கண்ணும்-செய்தவிடத்தும், மறுத்து - மீண்டு, இன்னா - அத்துன்பந்தருமவைகளை, செய்யாமை - (தாம்) செய்யாமையும், மாசுஅற்றார்-அக்குற்றமற்றவரது, கோள் - துணிவு.

**312.** It is the determination of the spotless not to do evil, even in return, to those who have cherished enmity and done them evil.

---

௩. செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

(பரி-ரை.) எ-து,—தான் முன்போரின்னாமை செயயாதிருக்கத் தன்மேற் செற்றங்கொண்டவர்க்கும் இன்னாதவற்றைத் துறந்தவன் செய்யுமாயின், அச்செயல் அவனுக்குக் கடக்கமுடியாத இடும்பையைக் கொடுக்கும், எ-று.

அவ்விடும்பையாவது தவமிழந்து பழியும் பாவமும் எய்துதல்.

(தெ-ப-ரை.)—செய்யாமல் - (தான்முன்பு துன்பந்தருவ தொன்றைச்) செய்யாதிருக்க, செற்றார்க்கும் (தன்மேலே) வைர ங்கொண்டவர்க்கும், இன்னாத - துன்பந்தருமவைகளை, செய்த பின் - (துறந்தவன்) செய்தானாயின் பின்பு, (அச்செயலானது), உய்யா - கடக்கமுடியாத, விழுமம் - துன்பத்தை, தரும் - (அவ னுக்குக்) கொடுக்கும்.

**313.** If an ascetic inflict suffering even on those who hate him, when he has not done them any evil, it will afterwards give him irretrievable sorrow.

---

ச. இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

(பரி-ரை.) எ-து,—தமக்கின்னாதவற்றைச் செய்தாரைத் துறந்தோர் ஒறுத்தலாவது, அவர்தாமே நாணுமாறு அவர்க்கு இனிய வுவகைகளைச் செய்து அவ்விரண்டனையும் மறத்தல், எ-று.

மறவாவழிப் பின்னும் வந்து கிளைக்குமாகலின், மறக்கற்பால வாயின. அவரை வெல்லுமுபாயங் கூறியவாறு. இவை மூன்றுபாட்டானுஞ் செற்றம் பற்றிச் செய்தல் விலக்கப்பட்டது.

(தெ-ப-ரை.)—இன்னாசெய்தாரை - (தமக்கு) துன்பந்தரு மவைகளைச் செய்தவரை, ஒறுத்தல் - (துறந்தோர்) தண்டித்தலா வது, அவர்நாண-அவர் (தாமே) நாணும்படி, நல்நயம்செய்து- (அவருக்கு) இனிமையான மகிழ்ச்சிகளைச்செய்து, விடல்-(அவ் விரண்டையும்) மறத்தலாம்.

**314.** The (proper) punishment to those who have done evil (to you), is to put them to shame by showing them kindness, in return and to forget both the evil and the good done on both sides.

---

ரு. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

(பரி-ரை.) எ-து,—துறந்தார்க்கு உயிர்முதலியவற்றை உள்ளவாறு அறிந்த அறிவினான் ஆவதொரு பயனுண்டோ, பிறிதோருயிர்க்கு வரும் இன்னாதவற்றைத் தம்முயிர்க்கு வந்தனபோலக் குறிக்கொண்டு காவாவிடத்து, எ-று.

குறிக்கொண்டு காத்தலாவது நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல், உண்டல் முதலிய தந்தொழில்களானும், பிறவாற்றானும், உயிர்களுறுவன வற்றை முன்னேயறிந்து உறாமற் காத்தல். இது பெரும்பான்மையும் அஃறிணைக்கண் நுண்ணிய வுடம்புடையவற்றைப் பற்றி வருதலின் பொதுப்பட ப் பிறிதினோயென்றும், மறப்பான் அது துன்புறினும் நமக்கின்னாசெய் தலாமென் றறிந்து காத்தல்வேண்டு மாகலின், அது செய்யாவழி அறிவாற் பயனில்லை யென்றுங் கூறினார். இதனாற் சோர்வாற்செய்தல் விலக்கப் பட்டது.

(தெ-ப-ரை.)—பிறிதின் - வேறோருயிர்க்குவந்த, நோய்-துன்பந்தருமவைகளை, தம்நோய்போல் - தமக்குவந்த துன்பந்தருமவைபோல, போற்றாக்கடை - (குறிக்கொண்டு) காப்பாற்றாதவிடத்து, அறிவினான் - (துறந்தார்க் குயிர் முதலியவற்றை உள்ளபடிஅறிந்த) அறிவினால், ஆகுவது-ஆகுமொருபயன், உண்டோ - இல்லை.

**315.** What benefit has he derived from his knowledge, who does not endeavour to keep off pain from another as much as from himself?

---

௬. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்

(பரி-ரை.) எ-து,—இவை மக்கட்கு இன்னாதனவென அநுமானத்தால் தானறிந்தவற்றைப் பிறன்மாட்டுச் செய்தலை மேவாமை துறந்தவனுக்கு வேண்டும், எ-று.

இன்பதுன்பங்கள் உயிர்க்குணமாகலின், அவை காட்சியளவையான் அறியப்படாமை யறிக. அறமும் பாவமும் உளவாவது மன முளனாயவழியாகலான், உணர்ந்தவையென்றார்.

(தெ-ப-ரை.)—இன்னாஎன - (இவைமனிதருக்குத்) துன்பந்தருமவையென்று, தான்உணர்ந்தவை - (அநுமானபிரமாணத்தினால்) தானறிந்தவைகளை, பிறன்கண் - பிறனிடத்து, செயல் - செய்தலை, துன்னாமை - பொருந்தாமை, வேண்டும் - (துறந்தவனுக்குத்) தகுதி.

**316.** Let not a man consent to do those things to another which he knows will cause sorrow.

---

௭. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

(பரி-ரை.) எ-து,—மனத்தோடு உளவாகின்ற இன்னாத செயல்களை எக்காலத்தும் யாவர்க்குஞ் சிறிதாயினுஞ் செய்யாமைதலையாயஅறம், எ-று.

ஈண்டு மனத்தா னாகாதவழிப் பாவமில்லையென்பது பெற்றாம். ஆற்றலுண்டாய காலத்தும் ஆகாமையின் எஞ்ஞான்றுமென்றும், எளியார்க்கும் ஆகாமையின் யார்க்குமென்றும், செயல் சிறிதாயினும் பாவம் பெரிதாகலின் எனைத்தென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—மனத்தான்ஆம்-மனத்தோடு உண்டாகின்ற, மாணா - துன்பந்தருமவைகளை, எஞ்ஞான்றும் - யாதொருகாலத்திலும், யார்க்கும் - யாவரொருவர்க்கும், எனைத்துஆனும் - எவ்வளவு சிறிதாயினும், செய்யாமை - செய்யாதிருத்தல், தலை-முதன்மையான அறம்.

**317.** It is the chief of all virtues not knowingly to do any person evil, even in the lowest degree, and at any time.

---

உ. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(பரி-ரை.) எ - து,—உண்பதனைப் பசித்தவுயிர்கட்குப் பகுத்துக்கொடுத்து உண்டு ஐவகை யுயிர்களையும் ஓம்புதல் அறநூலுடையார் துறந்தார்க்குத் தொகுத்த அறங்களெல்லாவற்றினுந் தலையாய அறம், எ-று.

பல்லுயிரும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஓம்புதல் சோர்ந்துங்கொலை வாராமற் குறிக்கொண்டு காத்தல். அதற்குப் பகுத்துண்டல் இன்றியமையாவுறுப்பாகலின், அச்சிறப்புத்தோன்ற, அதனை இறந்தகால வினையெச்சத்தாற் கூறினார். எல்லாநூல்களினும் நல்லனவெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கியல்பாகலின், ஈண்டும் பொதுப்பட நூலோரென்றும், அவரெல்லார்க்கும் ஒப்பமுடிதலான் இது தலையாய அறமென்றுங்கூறினார்.

(தெ-ப-ரை.)—பகுத்து-(உண்ணப்பட்டதைப் பசித்த உயிர்களுக்குப்) பங்கிட்டுக்கொடுத்து, உண்டு - (தானும்) உண்டு, பல்லுயிர் - ஐவகைஉயிர்களையும், ஓம்புதல்-காப்பாற்றல், நூலோர்-அறநூலுடையோரால், தொகுத்தவற்றுள்எல்லாம் - (துறந்தவர்க்குத்) தொகுத்துவைக்கப்பட்ட அறங்களெல்லாவற்றினும், தலை - முதன்மையானஅறமாம்.

**322**. The chief of all (the virtues) which authors have summed up, is the of partaking of food that has been shared with others, and the preservation of the manifold life of other creatures.

---

௩. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—நூலோர் தொகுத்த அறங்களுள் தன்னோடிணையொப்பதின்றித் தானேயாக நல்லது கொல்லாமை; அஃதொழிந்தால் பொய்யாமை அதன்பின்னேநிற்க நன்று, எ-று.

நூலோர் தொகுத்த அறங்களென்பது அதிகாரத்தான் வந்தது. அதிகாரம் கொல்லாமையாயினும், மேற் "பொய்யாமைபொய்யாமை யாற்றி" னெனவும், "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை"யெனவுங் கூறினாராகலின், இரண்டறத்துள்ளும் யாது சிறந்ததென்று ஐயநிகழுமன்றே, அது நிகழாமைப்பொருட்டு, ஈண்டு அதன்பின்சாரப் பொய்யாமை நன்றென்றார், முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின். அதனைப் பின்சார நன்றென்றது, நன்மை பயக்கும் வழிப் பொய்யும் மெய்யாயும், தீமை பயக்கும் வழி மெய்யும் பொய்யாயும் இதனைப் பற்ற அது திரிந்துவருதலானெனவுணர்க. இவைமூன்றுபாட்டானும் இவ்வறத்தினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒன்றுஆக - (நூலோராலே தொகுக்கப்பட்ட அறங்களுள் தன்னோடு இணைப்பது இல்லாமல்) தானேயாக, கொல்லாமை - கொலைசெய்யாமை, நல்லது—; (அது

நீங்கினால்) பொய்யாமை - பொய்பேசாதிருத்தல், பின்சார - (அதன்)பின்னேநிற்க, நன்று - நல்லது.

**323**. Not to destroy life is an incomparably (great) good; next to it in goodness ranks freedom from falsehood.

---

௪. *நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்*
*கொல்லாமை சூழு நெறி.*

(பரி-கா.) எ - து,—மேற்கதி வீடு பேறுகட்கு நல்ல நெறியென்று சொல்லப்படுவது யாதென்று வினவின், அஃது யாதோருயிரையுங் கொல்லாமையாகிய அறத்தினைக்காக்கக் கருதும் நெறி, எ-று.

யாதொன்றுமென்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல்-வழுவாமற் காத்தல். இதனால் இவ்வறத்தினையுடையதே நன்னெறி யென்பது கூறப்பட்டது.

(தெ-ப-கா.)—நல்ஆறு எனப்படுவது - (மேற்கதியும் முத்தியும் பெறுதற்கு) நல்லவழியென்று சொல்லப்படுவது, யாது எனின் - எதுவென்றால், (அது) யாதுஒன்றும் - யாதோருயிரையும், கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தினை, சூழும் - (காக்க) நினைக்கும், நெறி - வழியாம்.

**324**. Good path is that which considers how it may avoid killing any creature.

---

௫. *நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்*
*கொல்லாமை சூழ்வான் றலை.*

(பரி-கா.) எ-து,—பிறப்புநின்ற நிலையை அஞ்சிப் பிறவாமைப்பொருட்டு மனை வாழ்க்கையைத் துறந்தார் எல்லாருள்ளும் கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் உயர்ந்தவன், எ-று.

பிறப்பு நின்ற நிலையாவது இயங்குவ நிற்பவென்னும் இருவகைப் பிறப்பினும் இன்பமென்பது ஒன்றின்றி உள்ளனவெல்லாந் துன்பமேயாய நிலைமை. துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபாட்டாற் பலவாம் ஆகலின், நீத்தாருளெல்லா மென்றார். இதனான் இவ்வறம் மறவாதவன் உயர்ச்சி கூறப்பட்டது.

(தெ - ப - கா.)—நிலை - (பிறப்புநின்ற) நிலைக்கு, அஞ்சி-பயந்து, நீத்தாருள்எல்லாம் - (பிறவாமைப்பொருட்டு) மனை வாழ்க்கையைத் துறந்தவரெல்லாருள்ளும், கொலை - கொலைப் பாவத்திற்கு, அஞ்சி-பயந்து,கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தை, சூழ்வான்-மறவாதவன், தலை - உயர்ந்தோன்.

**325**. Of all those who, fearing the permanence of earthly births, have abandoned desire, he is the chief who, fearing (the guilt of) murder, considers how he may avoid the destruction of life.

---

௬. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்
செல்லா துயிருண்ணுங் கூற்று. [மேற்

(பரி-ரை.) எ-து,—கொல்லாமையை விரதமாக மேற்கொண்டொழு குவானது வாழ்நாளின்மேல் உயிருண்ணுங் கூற்றுச் செல்லாது, எ-று.

மிகப்பெரிய அறஞ்செய்தாரும் மிகப்பெரிய பாவஞ்செய்தாரும் முறை யானன்றி இம்மைதன்னுள்ளே அவற்றின்பயன் அனுபவிப்பரென்னும் அற நூற் றுணிபுபற்றி, இப்பேரறஞ் செய்தான்தானுங் கொல்லப்படான், படா னுகவே, அடியிற் கட்டியவாழ்நாள் இடையூறின்றி யெய்துமென்பார், வாழ்நாண்மேற் கூற்றுச்செல்லாதென்றார்: செல்லாதாகவே, காலநீட் டிக்கும், நீட்டித்தால் ஞானம் பிறந்து உயிர் வீடுபெறு மென்பது கருத்து. இதனுன் அவர்க்கு வரு நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உயிர்உண்ணும்கூற்று – உயிரைக்கொண்டு போம் யமனுனவன், கொல்லாமை - கொலைசெய்யாமை யாகிய விரதத்தை, மேற்கொண்டு—, ஒழுகுவான்-நடப்பவனது, வாழ் நாள்மேல் – ஆயுளின்மேல், செல்லாது – செல்லான்.

**326.** Yama, the destroyer of life, will not attack the life of him, who acts under the determination of never destroying life.

---

எ. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(பரி-ரை.) எ - து,—அது செய்யாவழித் தன்னுயிர் உடம்பினீங்கிப் போமாயினும், தான் பிறிதோ ரின்னுயிரை அதனுடம்பினீக்குந் தொழிலைச் செய்யற்க, எ-று.

தன்னை அது கொல்லினுந் தான் அதனைக் கொல்லற்கவென்றது, பாவம் கொலையுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி. இனித் தன்னுயிர் நீப்பினுமென்பதற்குச் சாந்தியாகச் செய்யாதவழித் தன் னுயிர் போமாயினுமென் றுரைப்பாருமுளர்; பிறர் செய்தலுமாகாமை யின், அஃதுரையன்மை யறிக.

(தெ-ப-ரை.)—தான்—, பிறிது-வேறொன்றனது, இன்னு யிர் - இனிதாகியவுயிரை, நீக்கும் - (அதனுடம்பிலிருந்து) நீக்கு தலாகிய, வினை - தொழிலை, தன்னுயிர் - (அதுசெய்யாவிடத்து) தனது உயிரானது, நீப்பினும் - (உடம்பைவிட்டு) நீங்கிப்போ மாயினும், செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன்.

**327.** Let no one do that which would destroy the life of another, although he should by so doing, lose his own life.

---

அ. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(பரி-ரை.) எ-து,—தேவர்பொருட்டு வேள்விக்கண்கொன்றால் இன்ப மிகுஞ்செல்வம் பெரிதாமென்று இல்வாழ்வார்க்குக் கூறப்பட்டதாயினும், துறவானமைந்தார்க்கு ஒருயிரைக் கொல்லவருஞ் செல்வங்கடை, எ-று.

இன்பமிகுஞ் செல்வமாவது தாமுந்தேவராய்த் துறக்கத்துச் சென றெய்துஞ் செல்வம். அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கேதுவாக லானும், வீடாகிய ஈறிலின்பம் எய்துவார்க்குக் கடையெனப்பட்டது. துறக்கமெய்துவார்க்கு ஆமாயினும் வீடெய்துவார்க்கு ஆகாதென்றமை யின்,விதி விலக்குகள் தம்முண் மலையாமை விளக்கியவாறாயிற்று. இஃது இல்லறம் அன்மைக்குக் காரணம். இவையிரண்டுபாட்டானுங் கொலையது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நன்று ஆகும் - (யாகத்திலேகொன்றால்) இன்பமிகுவதாகிய, ஆக்கம் - செல்வமானது, பெரிது - பெரிதா கும், எனினும்-என்றுசொல்லப்பட்டதாயினும், சான்றோர்க்கு-(துறவினாலே) நிறைந்தோர்க்கு, கொன்று - (ஒருயிரைக்) கொ ன்று, ஆகும் - (அதனால்) உண்டாவதாகிய, ஆக்கம் - செல்வ மானது, கடை - இழிந்ததாம்.

**328.** The advandage which might flow from destroying life in sacrifice, is dishonourable to the wise (who renounced tho world), even although it should be said to be productive of a great good.

---

௩௨௯. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

(பரி - ரை.) எ-து,—கொலைத்தொழிலை உடையராகிய மாந்தர், அத் தொழிலின் கீழ்மையை அறியுநெஞ்சத்த ரல்லராயினும், அறிவார் நெஞ்சத் துப் புலைத்தொழிலினர், எ-று.

கொலைவினையரென்றதனான், வேள்விக்கண் கொலையன்மை யறிக. புலவினையரென்றது தொழிலாற் புலையரென்றவாறு. இம்மைக்கட் கீழ்மை யெய்துவ ரென்பதாம்.

(தெ - ப - ரை.)—கொலைவினையர் ஆகிய - கொலைத்தொழிலை யுடையவராகிய, மாக்கள்-மனிதர், (அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினராயிருந்தாலும்), புன்மைதெரிவார் அகத்து - அவ்விழிவை அறிவோரது நெஞ்சில், புலைவினையர்-இழிதொழில ராய்த் தோன்றுவர்.

**329.** Men who destroy life are base men, in the estimation of those who know the nature of such meanness.

---

௩௩0. உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(பரி-ரை.) எ-று,—நோக்கலாகா நோயுடம்புடனே வறுமை கூர்ந்த இழிதொழில் வாழ்க்கையினையுடையாரை இவர் முற்பிறப்பின்கண் உயிர் களை அவை நின்றவுடம்பினின்று நீக்கினவரென்று சொல்லுவர் வினைவிளை வுகளை யறிந்தோர், எ-று.

செல்லாவாழ்க்கை தீவாழ்க்கையெனக்கூட்டுக. செயிருடம்பினராதல் "அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்—துக்கத் தொழுநோ யெழு

பவே" என்பதனு மறிக. மறுமைக்கண் இவையு மெய்துவ ரென்பதாம். இவையிரண்டு பாட்டானுங் கொல்வார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

அருளுடைமைமுதல் கொல்லாமையீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களும் அடங்கும்; அஃதறிந்து அடக்கிக் கொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

(தெ-ப-ரை.)—செயிர்உடம்பின் - (பார்க்கக்கூடாத) நோயுடம்புடனே, செல்லாத்தீவாழ்க்கையவர் - வறுமையோடு கூடிய இழிதொழில் வாழ்க்கை யுடையவரை; உயிர் - (இவர் முற்பிறப்பிலே) உயிர்களை, உடம்பின் - (அவைநின்ற) உடம்புகளிலிருந்து, நீக்கியார் - நீக்கினவர், என்பர் - என்று (வினைவிளைவுகளை அறிந்தோர்) சொல்லுவார்.

**330**. (The wise) will say that men of diseased bodies, who live in degradation and in poverty, are those who separated the life from the body of animals (in a former birth).

---

22-XII-58
31-X-63

## ஞானம்.

இனி அவற்றின்பயனாகிய ஞானங்கூறிய தொடங்கினர். ஞானமாவது வீடுபயக்குமுணர்வு. அது நிலையாமைமுதல் அவாவறுத்த லிறுதியாக நான்கதிகாரத்து ளடக்கப்பட்டது.

---

## ௩௪-ம். அதி—நிலையாமை.

அவற்றுள் நிலையாமையாவது தோற்றமுடையன யாவும் நிலையுத லிலவாந்தன்மை. மயங்கியவழிப் பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி மெய் யுணர்ந்தவழிக் கயிற்றில்அரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும், நிலை வேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந்திறக்கு மென்பாரும், ஒருவாற்றான் வேறுபடுதலும் ஒருவாற்றான் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கேயுடைய வென்பாருமெனப் பொருட்பெற்றி கூறுவார் பலதிறத்தராவர்; அவர் எல்லார்க்கும் அவற்றது நிலையாமை உடம்பாடாகலின், ஈண்டு அதனையே கூறுகின்றார். இஃதுணர்ந்துழி யல்லது பொருள்களிற் பற்றுவிடாதாகலின், இது முன் வைக்கப்பட்டது.

க. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(பரி-ரை.) எ - து,—நிலையுதல் இலவாகிய பொருள்களை நிலையுதலுடையவென்று கருதுகின்ற புல்லிய அறிவினையுடையராதல் துறந்தார்க் கிழிபு, எ-று.

தோற்றமுடையவற்றைக் கேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற் கேதுவாகலின், அது வீடெய்துவார்க் கிழுக்கென்பது இதனாற்கூறப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச்செய்வது சிற்றின்பத்திற்கேதுவாகிய

செல்வத்தின்கண்ணும் அதனையநுபவிக்கும் யாக்கையின்கண்ணும் ஆகலின், வருகின்ற பாட்டுக்களான் அவற்றது நிலையாமையை விதந்து கூறுப.

(தெ-ப-ரை.)—நில்லாதவற்றை - நிலையில்லாதவைகளை, நிலையினஎன்று - நிலையுடையவையென்று, உணரும்-நினைக்கின்ற, புல்லறிவுஆண்மை - அற்பபுத்தியை யுடையவராயிருக்கை, கடை - (துறந்தார்க்கு) இழிவு.

**331.** That ignorance which considers those things to be stable which are not so, is dishonourable (to the wise).

---

௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் மாட்டுப் பெரியசெல்வம் வருதல் கூத்தாடுதல் செய்கின்ற அரங்கின்கட் காண்போர்குழாம் வந்தாற்போலும்; அதனது போகலும் அக்கூத்தாட்டு முடிந்தவழி அக்குழாம் போயினாற்போலும், எ-று.

பெருஞ்செல்வமெனவே, துறக்கச்செல்வமும் அடங்கிற்று. போக்குமென்ற எச்சவும்மையான், வருதலென்பது பெற்றாம். அக்குழாங் கூத்தாட்டுக் காரணமாக அரங்கின்கட் பஃறிறத்தாற் றானேவந்து, அக்காரணம் போயவழித் தானும் போமாறுபோல, செல்வமும் ஒருவனல்வினை காரணமாக அவன்மாட்டுப் பஃறிறத்தாற்றானே வந்து, அக்காரணம் போயவழித் தானும் போமென்றதாயிற்று.

(தெ-ப-ரை.)—பெருஞ்செல்வம் - (ஒருவனிடத்து) பெரியசெல்வம்வருதல், கூத்தாட்டு - கூத்தாடுதல்செய்கின்ற, அவை - சபையினிடத்தே, குழாத்துஅற்று - (காண்போர்) கூட்டம் வருதல்போலும், போக்கும் - (அச்செல்வம்) போகுதலும், அது - அக்கூட்டமானது, விளிந்தது அற்று - (அக்கூத்தாட்டு முடிந்தவிடத்து) போகுதல்போலும்.

**332.** The acquisition of wealth is like the gathering together of an assembly for a theatre; its expenditure is like the breaking up of that assembly.

---

௩. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

(பரி-ரை.) எ-து,—நில்லாத இயல்பினையுடைத்துச் செல்வம்; அதனைப் பெற்றால், அதனாற் செய்யப்படும் அறங்களை அப்பெற்றபொழுதே செய்க, எ-று.

அல்காவென்பது திரிந்துநின்றது. ஊழுள்வழியல்லது துறந்தாராற் பெறப்படாமையின் அது பெற்றாலென்றும், அஃதில்வழி நில்லாமையின் ஆங்கேயென்றுங் கூறினார். அதனாற்செய்யப்படும் அறங்களாவன;—பயனோக்காது செய்யுங் கடவுட்பூசையும், தானமும், முதலாயின. அவை

ஞானவேதுவாய் வீடுபயத்தலின், அவற்றை அற்குபவென்றும் செய்கவென் றுங்கூறினர். இவையிரண்டுபாட்டானும் செல்வநிலையாமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செல்வம் - செல்வமானது, அற்கா - நிலை யாத, இயல்பிற்று - இயல்பையுடையதாகும்; அதுபெற்றால்-அச் செல்வத்தைப்பெற்றால், அற்குப - (அதனாலேசெய்யப்படும்) அற ங்களை, ஆங்கே - பெற்றபொழுதே, செயல் - செய்யக்கடவன்.

**333.** Wealth is perishable; let those who obtain it immediately practise those (virtues) which are imperishable.

---

ச. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—நாளென்று அறுக்கப்படுவதொரு காலவரையறை போலத் தன்னைக் காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளினது வாயது உயிர், அஃதுணர்வாரைப் பெறின், எ-று.

காலமென்னும் அருவப்பொருள் உலகியல் நடாத்தற்பொருட்டு ஆதித் தன் முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபடாமையின் நாளென வொன்றுபோலென்றும், அது தன்னை வாளென்று உணரமாட்டாதார் நமக்குப் பொழுது போகாநின்ற தென்று இன்புறுமாறு நாளாய் மயக்கலின் காட்டியென்றும், இடை விடாது ஈர்தலான் வாளின் வாயதென்றும், அஃதீர்கின்றமையை உணர் வார் அரியராகலின் உணர்வார்ப்பெறி னென்றுங் கூறினர். உயிரென்னுஞ் சாதியொருமைப்பெயர் ஈண்டு உடம்பின்மே னின்றது, ஈரப்படுவது அதுவேயாகலின். வாளென்பது ஆகுபெயர். இனி இதனை நாளென்ப தொரு பொருள்போலத் தோன்றி உயிரை யீர்வதொரு வாளாமென் றுரைப்பாருமுளர்: எனவென்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும், ஒன்றுபோற்காட்டி யென்பதற்கு ஓர் பொருட்சிறப் பின்மையானும், அது வென்பது குற்றிய லுகர மன்மையானும், அஃதுரையன்மை யறிக.

(தெ-ப-ரை.)—உயிர் - உயிரானது, நாள்என - நாளென்று அளவுசெய்யப்படுவதாகிய, ஒன்றுபோல்-ஒருகாலவளவு போல், காட்டி - (தன்னைக்) காட்டி, ஈரும் - அறுத்துச் செல்லுகின்ற, வாளது-வாளினது வாயினிடத்தது, உணர்வார்ப்பெறின்-(அது) அறிவாரைப்பெறின்.

**334.** Time, which shows itself (to the ignorant) as if it were something (real), is in the estimation of the wise (only) a saw which cuts down life.

---

ரு. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

(பரி-ரை.) எ-து,—உரையாடாவண்ணம் நாவையடக்கி விக்குள் எழு வதற்குமுன்னே வீட்டிற்கேதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும், எ-று.

மேனோக்கிவருதல் ஒருதலையாகலானும், வந்துழிச் செய்தலேயன்றிச் சொல்லலு மாகாமையானும் வாராமுனென்றும், அதுதான் இன்னபொ

டுது வருமென்பது இன்மையின் மேற்சென்றென்றுங் கூறினர். மேற்சே றல் - மண்டுதல். நல்வினை செய்யுமாற்றின்மேல் வைத்து நிலையாமை கூறியவாறு.

(தெ-ப-ரை.)—நாச்செற்று - (பேசாதிருக்கும்படி) நாவை அடக்கி, விக்குள் - விக்கலானது, மேல்வாராமுன் - எழுவதற்கு முன்னே, நல்வினை - (மோக்ஷத்துக்கு ஏதுவாகிய) அறமானது, மேற்சென்று - விரைந்து, செய்யப்படும்-செய்யத்தகும்.

**335.** Let virtuous deeds be done quickly, before the hiccup comes, making the tongue silent.

---

௬. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் நெருநலுளனாயினன் அவனே இன்றில்லை யாயினனென்று சொல்லும் நிலையாமை மிகுதியுடைத்து இவ்வுலகம், எ-று.

ஈண்டு உண்மை பிறத்தலையும், இன்மை இறத்தலையும் உணர்த்தி நின் றன. அவை பெண்பாற்கும் உளவாயினும், சிறப்புப்பற்றி ஆண்பாலையே கூறினர். இந்நிலையாமையே உலகின் மிக்கதென்பதாம்.

(தெ-ப-ரை.)—இவ்வுலகு-இந்த வுலகமானது, ஒருவன்—, நெருநல்-நேற்று, உளன்-உளனாயினன் [பிறந்தவ னென்றபடி]; இன்று - (அவனே) இன்றைக்கு, இல்லை - இலனாயினன் [இறந்தா னென்றபடி], என்னும் பெருமை - என்று சொல்லும் (நிலை யாமையின்) மிகுதியை, உடைத்து - உடையதாயிருக்கின்றது.

**336.** This world possesses the greatness that one who yesterday was is not to-day.

---

௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

(பரி-ரை.) எ-து,—ஒருபொழுதளவும் தம்முடம்பும் உயிரும் இயைந் திருத்தலைத் தெளியமாட்டார், மாட்டாதுவைத்தும், கோடியளவுமன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினையாநிற்பர் அறிவிலாதார், எ-று.

இழிவுசிறப்பும்மையாற் பொழுதென்பது ஈண்டுக் கணத்தின்மே னின்றது. காரணமாகிய வினையினளவே வாழ்தற்கும் அளவாகலின், அஃ தறியப்படாத தாயிற்று. பலவாய நினைவுகளாவன பொறிகளான் நுகரப் படும் இன்பங்கள் தமக்குரியவாமாறும், அதற்குப் பொருள் துணைக்காரண மாமாறும், அது தம்முயற்சிகளான் வருமாறும், அவற்றைத் தாமுயலு மாறும், அவற்றிற்கு வருமிடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், நீக்கி அப்பொருள் கடைக்கூட்டுமாறும், அதனைப் பிறர்கொள்ளாமற் காக்கு மாறும், அதனான் நட்டாரை யாக்குமாறும், நள்ளாரை யழிக்குமாறும், தாம் அவ்வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலாரது இயல்பின் மேல் வைத்து நிலையாமை கூறியவாறு. இனிக் கருதுப வென்பதனை அஃறி ணைப் பன்மைப்பெயராக்கி உரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—ஒருபொழுதும் - (அறிவில்லாதவர்) ஒரு பொழுதளவும், வாழ்வது - தம்முடம்பும் உயிரும்கூடி யிருக்கையை, அறியார் - அறியமாட்டார், (மாட்டாதிருந்தும்) கோடியும் அல்ல - கோடியளவுமன்றி, பல - (அதனிலும்) பலவாகிய நினைவுகளை, கருதுப - நினையாநிற்பர்.

**337.** Innumerable are the thoughts which occupy the mind of (the unwise), who know not that they shall live another moment.

---

அ. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்பொ டுயிரிடை நட்பு.

(பரி-ரை.) எ-து,—முன் தனியாத முட்டை தனித்துக் கிடப்ப அதனுளிருந்த புள்ளுப் பருவம்வந்துழிப் பறந்துபோய தன்மைத்து உடம்பிற்கும் உயிர்க்கு முளதாய நட்பு, எ-று.

தனித்தொழிய வென்றதனன், முன் தனியாமை பெற்றும், அஃதாவது கருவுந்தானும் ஒன்றாய்ப்பிறந்து வேறாந்துணையும் அதற்கு ஆதாரமாய் நிற்றல்; அதனால் அஃது உடம்பிற் குவமையாயிற்று; அதனுள் வேற்றுமையின்றிநின்றே பின் புகாமற்போகலின், புள் உயிர்க்குவமையாயிற்று. முட்டையுட்பிறப்பன பிறவுமுளவேனும், புள்ளையே கூறினர், பறந்துபோதற்றொழிலான் உயிரோ டொப்புமை யெய்துவது அதுவேயாகலின். நட்பென்றது ஈண்டுக் குறிப்புமொழியாய் நட்பின்றிப்போத லுணர்த்திநின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முண் மாறாகலின், வினைவயத்தாற் கூடியதல்லது நட்பிலவென்ப தறிக. இனிக்குடம்பை யென்பதற்குக் கூடென்று உரைப்பாருமுளர்: அது புள்ளுடன்தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுதலுடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை யறிக.

(தெ-ப-ரை.)—உடம்போடு - உடம்புடனே, உயிரிடை - உயிருக்கு உண்டாகிய, நட்பு - சினேகமானது, குடம்பை-(முன்னே தனியாதிருந்த)முட்டை யானது, தனித்து ஒழிய - தனித்துக்கிடக்க, புள்-(அதனுளிருந்த) பறவை, பறந்தது அற்று - (பருவம்வந்தவிடத்து) பறந்துபோந் தன்மையை யுடையதாகும்.

**338.** The love of the soul to the body is like (the love of) a bird to its egg which it flies away from and leaves empty.

---

௯. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குச் சாக்காடு வருதல் உறக்கம் வருதலோ டொக்கும்; அதன்பின் பிறப்பு வருதல் உறங்கி விழித்தல் வருதலோ டொக்கும், எ-று.

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருகின்றாற்போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின்

மாறிமாறி வருமென்பது கருத்து. நிலையாமையே நிலைபெற்றவாறு அறி வித்தற்குப் பிறப்பும் உடன்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சாக்காடு - (ஒருவனுக்கு) மரணம் வருதல், உறங்குவது போலும் - தூக்கம் வருதல்போலும்; பிறப்பு - (அத ன்பின்னே) பிறப்புவருதல், உறங்கி விழிப்பதுபோலும் - தூங்கி விழித்தல் வருதல்போலும்.

**339**. Death is like sleep; birth is like awaking from it.

---

௪0. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

(பரி-ரை) எ-து,—வாதமுதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒது க்கிருந்தே போந்த உயிர்க்கு எஞ்ஞான்றும் இருப்பதோரில் இதுகாறும் அமைந்ததில்லை போலும், எ-று.

அந்நோய்கள் இருக்க அமைந்த ஞான்று இருந்தும், வெகுண்ட ஞான் று போயும், ஒருடம்பினும் நிலைபெறாது வருதலால், துச்சிலிருந்தவென்றார். பின் புறப்படாது புக்கேவிடுமில் அமைந்ததாயின், பிறர் இற்களுள் ஒதுக்கி ரா தென்பதாம்; ஆகவே, உயிரோடு கூடிநிற்பதோ ருடம்பும் இல்லையென் பது பெறப்பட்டது. இவை யேழுபாட்டானும், முறையே யாக்கைகட்கு வரைந்த நாள் கழிகின்றவாறும், கழிந்தால் உளதாம் நிலைமையும், அவை ஒரோவழிப் பிறந்த அளவிலே இறத்தலும், ஒரு கணமாயினும் நிற்குமென் பது தெளியப்படாமையும், உயிர் நீங்கியவழிக் கிடக்குமாறும், அவற்றிற்கு இறப்பும் பிறப்பும் மாறிமாறி வருமாறும், அவைதாம் உயிர்க்குரிய அன்மை யுமென்று, இவ்வாற்றால் யாக்கை நிலையாமை கூறியவாறு கண்டுகொள்க.

(தெ-ப-ரை.)—உடம்பினுள் - (வாதமுதலானவைகளது வீடுகளாகிய) உடம்புகளுள், துச்சில் இருந்த - ஒதுக்குக்குடி யிருந்து வந்த, உயிர்க்கு - உயிர்களுக்கு, புக்கில் - என்றைக்கும் இருப்பதாகிய ஒருவீடானது, அமைந்ததுஇன்றுகொல் - (இது வரையில்) அமைந்ததில்லைபோலும்.

**340**. It seems as if the soul, which takes a temporary shelter in a body, had not attained a home.

---

## ௩௫-ம். அதி—துறவு.

அஃதாவதுபுறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின் கண்ணும் உளதாய பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி, விடுதல். அதி கார முறைமையும் இதனானே விளங்கும்.

௧. யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் யாதொருபொருளின் யாதொருபொரு ளின் நீங்கினான் அவன் அப்பொருளால் அப்பொருளால் துன்பமெய்துதல் இலன், எ-று.

அடுக்குகள் பன்மை குறித்துநின்றன. நீங்குதல் - துறத்தல். ஈண்டுத் துன்பமென்றது இம்மைக்கண் அவற்றைத் தேடுதலானும், காத்தலானும், இழத்தலானும் வருவனவும், மறுமைக்கண் பாவத்தான் வருவனவும் ஆய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப்பொருளையும் ஒருங்கே விடுதல் தலை, அஃதன்றி ஒரோவொன்றாக விடினும் அவற்றான் வருந் துன்பம் இலனாமென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—யாதனின்யாதனின் - (ஒருவன்) யாதொரு பொருளின்யாதொருபொருளின், நீங்கியான்-நீங்கினன், அதனின் அதனின்-(அவன்) அப்பொருளினாலே அப்பொருளினாலே, நோதல் - துன்பம் அனுபவித்தலை, இலன் - உடையவனாகான்.

**341**. Whatever thing a man has renounced, by that thing, he cannot suffer pain.

---

௨. வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

(பரி-ரை.) எ-து,—எல்லாப்பொருள்களையுந் துறத்தலால் ஒருவர்க்கு இம்மைக்கண்ணே உளவாம் முறைமையையுடைய இன்பங்கள் பல; அவ்வின்பங்களை வேண்டின், அவற்றைக் காலம் பெறத் துறக்க, எ-று.

அவ்வின்பங்களாவன—அப்பொருள்கள் காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும், அவை நன்னெறிக்கட்சேறலானும் வருவன. இளமைக்கண்துறந்தான் அவற்றை நெடுங்காலம் எய்துமாகலின், உண்டாகத் துறக்கவென்றார். இன்பங்களென்பதும் காலமென்பதும் வருவிக்கப்பட்டன. இம்மைக்கண்துன்பங்கள் இலவாதலேயன்றி இன்பங்கள் உளவாதலும் உண்டென்பதாம்.

(தெ-ப-ரை.)—துறந்தபின் - (எல்லாப்பொருள்களையும்) துறந்தபின், ஈண்டு - (ஒருவனுக்கு) இப்பிறப்பிலே, இயற்பால- உண்டாகும் முறைமையையுடைய இன்பங்கள், பல - பலவாம், வேண்டின் - (அவ்வின்பங்களை) வேண்டினால், உண்டாக-(காலம்) உண்டாக, துறக்க - (அப்பொருள்களைத்) துறக்கக்கடவன்.

**342**. After a man has renounced (all things), there will still be many things in this world (which he may enjoy); if he should desire them, let him, while it is time, abandon (the world).

---

௩. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

(பரி-ரை.) எ-து,—வீடெய்துவார்க்குச் செவி முதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசை முதலிய ஐம்புலன்களையுங் கெடுத்தல்வேண்டும்; கெடுக்குங்கால், அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் ஒருங்கே விடுதல்வேண்டும், எ-று.

புலமென்றதுஅவற்றை நுகர்தலை. அது மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானும் அன்றி வாராத பொருள்கண்மேல் அல்லது வீட்டு நெறியா

ஙிய யோகஞானங்களிற் செலுத்தாமையின், அதனை அடல்வேண்டு மென் றும், அஃது அப்பொருள்கண்மேற்செல்லின் அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின், வேண்டியவெல்லா மொ ருங்கு விடல்வேண்டு மென்றுங் கூறினர்.

(தெ - ப - ரை.)—ஐந்தன் - (முத்தியை அடைவோர்க்கு) செவி முதலாகிய ஐம்பொறிகளுக்குரிய, புலத்தை - ஓசை முத லாகிய ஐம்புலன்களையும், அடல்வேண்டும்-கெடுத்தல்வேண்டும், வேண்டிய எல்லாம் - (கெடுக்கும்போது) அப்புலன்களை அனுப வித்தற்பொருட்டுத்) தாம்படைத்த பொருள்களையெல்லாம், ஒரு ங்கு - ஒருமிக்க, விடல்வேண்டும் - விட்டுவிடல்வேண்டும்.

**343.** Let the five senses be destroyed; and at the same time, let every thing be abandoned that (the ascetic) has (formerly) desired.

---

௪. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

(பரி-ரை.) எ-து,—பற்றப்படுவதொரு பொருளும் இல்லாமை தவஞ் செய்வார்க்கு இயல்பாம்; அஃதன்றி, ஒன்றாயினும் உடைமை அத்தவத்தை ப்போக்குதலான், மீண்டும் மயங்குதற்கேதுவாம், எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நோன்பென்பதூஉம், மய லென்பதூஉம் ஆகுபெயர். பெயர்த்தலான் என்பது திரிந்துநின்றது. நோன் பைப் பெயர்த்தலானென வேற்றுமைப்படுத்திக் கூட்டுக. எல்லாப் பொ ருள்களையும் விட்டு ஒருபொருளை விடாதவழியும், அது சார்பாக விட்டன வெல்லாம் மீண்டுவந்து தவத்திற் கிடையீடாய் மனக்கலக்கஞ் செய்யு மென்பது கருத்து. இவை நான்குபாட்டானும் ஏனதென்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நோன்பிற்கு-தவஞ்செய்வோர்க்கு, ஒன்று- (பற்றப்படுவது) ஒருபொருளும், இன்மை - இல்லாதிருக்கை, இயல்பு ஆகும் - இயல்பாம்; உடைமை - (ஒன்றாயினும்) உடை மை, பெயர்த்து - (அத்தவத்தைப்) போக்குதலால், மற்றும் - மறுபடியும், மயல் ஆகும் - மயக்கத்துக்கு ஏதுவாகும்.

**344.** To be altogether destitute is the proper condition of those who perform austerities; if they possess anything, it will change (their resolution) and bring them back to their confused state.

---

௫. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

(பரி - ரை.) எ-து,—பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு அதற்குக் கருவியாகிய உடம்பும் மிகையாம்; ஆனபின், அதற்கு மேலே இயைபில்லன வுஞ் சில தொடர்ப்பாடு உளவாகல் என்னும், எ-று.

உடம்பென்ற பொதுமையான், உருவுடம்பும், அருவுடம்புங் கொள் ளப்படும். அவற்றுள், அருவுடம்பாவதுபத்துவகை இந்திரியவுணர்வோடும்

ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோடுங் கூடிய மனம்; இது நுண்ணுடம் பெனவும்படும். இதன்கட்பற்று நிலையாமை உணர்ந்த துணை யான் விடாமையின், விடுதற் குபாயம் முன்னர்க்கூறுப. இவ்வுடம்புகளால் துன்பம் இடையறாது வருதலை உணர்ந்து, இவற்றான் ஆய கட்டினை இறைப் பொழுதும் பொறாது வீட்டின் கண்ணே விரைதலின், உடம்புமிகை யென் றார். இன்பதுன்பங்களான் உயிரோடு ஒற்றுமையெய்துதலின், இவ்வுடம் புகளும் யானெனப்படும். இதனான் அகப்பற்றுவிடுதல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு - பிறவியை நீக்குமுயற்சியை மேற்கொண்டவருக்கு, உடம்பும் - (அதற்கு உதவியாகிய)உடம்பும், மிகை-அதிகமாம்; (ஆனபின்), மற்றும்- அதற்குமேலும், தொடர்ப்பாடு - (சம்பந்தமில்லாதவையுஞ் சில பொருள்கள்) பற்றப்படுதல், எவன் - என்னாகும்.

**345.** What means the addition of other things to those who are attempting to cut off (future) births, when even their body is too much (for them).

---

௬. யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(பரி - ரை.) எ-து,—தானல்லாத உடம்பை யானென்றும் தன்னோ டியைபில்லாத பொருளை எனதென்றுங் கருதி, அவற்றின்கட் பற்றுச்செய் தற் கேதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான் வானோர்க்கும் எய்தற்கரிய வீட்டுலகத்தை யெய்தும், எ-று.

மயக்கம்-அறியாமை. அதனைக் கெடுத்தலாவது தேசிகர்பாற் பெற்ற உறுதிமொழிகளானும், யோகப்பயிற்சியானும், அவை யானெனது அன்மை தெளிந்து, அவற்றின்கட்பற்றை விடுதல். சிறப்பும்மை விகாரத்தாற் றொக் கது. இதனான் இவ்விருவகைப்பற்றினையும் விட்டார்க்கே வீடுளதென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—யான்எனதுஎன்னும் - (தானல்லாதவுடம் பை) யானென்றும் (தன்னோடு சம்பந்தமில்லாத பொருளை) என தென்றும் நினைத்து அவைகளிலே பற்றுச்செய்தற்கு ஏதுவாகிய, செருக்கு - மயக்கத்தை, அறுப்பான்-கெடுப்பவன், வானோர்க்கு- தேவர்க்கும், உயர்ந்த - அடைதற்கரிதாகிய, உலகம் - முத்தியுல கத்தில், புகும் - செல்லுவான்.

**346.** He who destroys the pride which says "I," "mine," will enter a world which is difficult even to the Gods to attain.

---

எ. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—இருவகைப்பற்றினையும் இறுகப் பற்றி விடாதா ரைப் பிறவித் துன்பங்கள் இறுகப் பற்றி விடா, எ-று.

இறுகப்பற்றுதல் - காதல்கூர்தல். விடாதவர்க்கென்பதுவேற்றுமை மயக்கம். இதனால் இவை விடாதார்க்கு வீடில்லையென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பற்றினை - (இருவகைப்) பற்றுக்களையும், பற்றி - இறுகப்பற்றி, விடாதவர்க்கு - விடாதவரை, இடும்பைகள்-துன்பங்கள், பற்றி - இறுகப்பற்றி, விடா-விட்டு நீங்காவாம்.

**347.** Sorrows will never let go their hold of those who give not up their hold of desire.

---

அ. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(பரி-ரை.) எ-து,—முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; அங்ஙனந் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார், எ-று.

முற்றத்துறத்தலாவது பொருள்களையும், இருவகை உடம்பினையும் உவர்த்துப்பற்றற விடுதல். அங்ஙனந் துறவாமையாவதுஅவற்றுள் யாதானுமொன்றின்கட் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றித் தலைப்பட்டாரென்றும், பொய்ந்நெறிகண்டே பிறப்புவலையு ளகப்படுதலின், மயங்கியென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை)—தீரத்துறந்தார் - முழுதுந்துறந்தவர், தலைப்பட்டார் - (முத்தியை) அடைந்தவராவார், மற்றையவர் - அப்படித் துறவாதவர், மயங்கி-மருண்டு, வலைப்பட்டார் - (பிறப்பாகிய) வலையில் அகப்பட்டவராவார்.

**348.** Those who have entirely renounced (all things and all desire) have obtained (absorption into God); all others wander in confusion, entangled in the net of (many) births.

---

௯. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் இருவகைப்பற்றும் அற்றபொழுதே, அப்பற்றறுதி அவன்பிறப்பையறுக்கும்; அவையறாதபொழுது அவற்றாற் பிறந்திறந்துவருகின்ற நிலையாமை காணப்படும், எ-று.

காரணமற்றபொழுதே காரியமும் அற்றதா முறைமைபற்றி, பற்றற்ற கண்ணே யென்றார்; "அற்றது பற்றெனி லுற்றது வீடு" என்பதூஉம் அதுபற்றிவந்தது. இவை யிரண்டுபாட்டானும் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—பற்று அற்ற கண்ணே - (ஒருவன் இருவகைப்) பற்றுக்களையும் அற்றபொழுதே, பிறப்பு - (அப்பற்றறுதியானது அவனது) பிறவியை, அறுக்கும் - ஒழிக்கும், மற்று - அவை அறாதபொழுது, நிலையாமை - (அவற்றாற்பிறந்தும் இறந்தும் வருகிற) நிலையாமையானது, காணப்படும் - அறியப்படும்.

**349.** At the moment in which desire has been abandoned, (other) births will be cut off; when that has not been done, instability will be seen.

---

௩௦. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(பரி-ரை.) எ-து,—எல்லாப்பொருளையும் பற்றிநின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டுநெறியை இதுவே நன்னெறியென்று மனத்துக்கொள்க; கொண்டு, அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற்செய்க, விடாது வந்த பற்றுவிடுதற்கு, எ-று.

கடவுள் வாழ்த்திற் கேற்ப ஈண்டும் பொதுவகையாற் பற்றற்றானென்றார். பற்றற்றான் பற்றென்புழி ஆறாவது செய்யுட்கிழமைக்கண் வந்தது. ஆண்டுப் பற்றென்றது பற்றப்படுவதனை. அதன்கண் உபாயமென்றது தியானசமாதிகளை. விடாதுவந்த பற்றென்றது அநாதியாய்வரும் உடம்பிற்பற்றினை. அப்பற்று விடுதற்கு உபாயம் இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பற்று - (விடாதுவந்த) பற்று, விடற்கு - விடுதற்கு, பற்றுஅற்றான் - (எல்லாப்பொருளையும் பற்றிநின்றே) பற்றற்ற கடவுளாற் சொல்லப்பட்ட, பற்றினை - முத்திநெறியை, பற்றுக-(இஃதே நன்னெறியென்று) மனத்துட் கொள்ளக் கடவர், அப்பற்றை - அதனிடத் துபாயத்தை, பற்றுக - மனத் தாற் செய்யக்கடவர்.

**350.** Desire the desire of him who is without desire; in order to renounce desire, desire *that* desire.

---

## ௩௬-ம். அதி—மெய்யுணர்தல்.

அஃதாவது பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும், விபரீத ஐயங்களான் அன்றி உண்மையா னுணர்தல். இதனை வடநூலார் தத்துவ ஞானமென்ப. இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி உளதாவதாகலின், அக்காரணவொற்றுமைபற்றித் துறவின்பின் வைக்கப்பட்டது.

க. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

(பரி-ரை.) எ-து,—மெய்ப்பொருளல்லவற்றை மெய்ப்பொருளென் றுணரும் விபரீதவுணர்வானே உளதாம் இன்பமில்லாத பிறப்பு, எ-று.

அவ்விபரீதவுணர்வாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையவுஞ்சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத்துணிதல்: குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும், இவ்வாறே ஒன்றனைப்பிறிதொன்றாகத்துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சையென்பன ஒருபொருட்கிளவி. நரகர், விலங்கு, மக்கள், தேவரென்னும் நால்வகைப் பிறப்பினுமுள்ளது,

துன்பமேயாகலின், மாணாப்பிறப்பென்றார். இதனாற் பிறப்புத் துன்பமென் பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சையென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—பொருள்அல்லவற்றை-மெய்ப்பொருள்க ளல்லாதவைகளை, பொருள்என்று - மெய்ப்பொருள்களென்று, உணரும் - அறிகின்ற, மருளான்-விபரீதஞானத்தினால், மாணாப் பிறப்பு - மாட்சிமைப்படாதபிறவி [இன்பமில்லாத பிறவியென்ற படி], ஆம் - உண்டாகும்.

**351.** Inglorious births are produced by the confusion (of mind) which considers those things to be real which are not real.

---

உ. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—அவிச்சையினீங்கி மெய்யுணர்வினை உடையராயி னார்க்கு அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும், எ-று.

இருள் - நரகம், அஃது ஆகுபெயராய்க் காரணத்தின்மேனின்றது; நீங்கியெனத் தொடைநோக்கி மெலிந்துநின்றது; நீங்கவென்பதன் திரி பெனினும் அமையும். மருணீங்கியென்னும் வினையெச்சம் காட்சியவொன் றங் குறிப்புவினைப்பெயர் கொண்டது. மாசறுகாட்சியென்றது கேவல வுணர்வினை. இதனால் வீடாவது நிரதிசய இன்பமென்பதூஉம், அதற்கு நிமித்தகாரணம் கேவலப்பொருளென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—மருள் நீங்கி - அவ்விபரீத ஞானத்திலிரு ந்து நீங்கி, மாசு அறு - குற்றமற்ற, காட்சியவர்க்கு - மெய்யறி வையுடையவராயினவர்க்கு, (அம்மெய்யறிவானது) இருள்-பிற வியை, நீங்கி - நீங்கச்செய்து, இன்பம் - முத்தியை, பயக்கும்-. கொடுக்கும்.

**352.** A clear, undimmed vision of things will deliver its possessors from the darkness of future births, and confer the felicity (of heaven).

---

௩. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

(பரி-ரை.) எ-து,—ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந்தார்க்கு எய்தி நின்ற நிலவுலகத்தினும் எய்தக்கடவதாய வீட்டுலகம் நணித்தாத லு டைத்து, எ-று.

ஐயமாவது - பலதலையாயவுணர்வு. அஃதாவதுமறுபிறப்பும், இருவி னைப் பயனும், கடவுளும் உளவோ இலவோவென ஒன்றிற்றுணிவு பிற வாது நிற்றல்; பேய்த்தேரோ புனலோ கயிறோ அரவோவெனத் துணி யாது நிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர்மதங் களைந்து தம்மதநிறுத்தல் எல்லாச் சமயநூல்கட்கும் இயல்பாகலின், அவை கூறுகின்ற பொருள்க ளுள் யாது மெய்யென நிகழும் ஐயத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம் மனுபவத்தானீக்கி மெய்யுணர்வாராகலின், அவரை ஐயத்தினீங்கித்தெளிந்

தாமொன்றும், அவர்க்கு அவ்வனுபவ வுணர்வு அடிப்பட்டு வரவரப் பண்டை உலகியலுணர்வு தூர்ந்துவருமாகலின், அதனைப் பயன்மேலிட்டு வையத்தின் வானநணியதுடைத்தென்றுங் கூறினர்; கூறவே, ஐயவுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப்பட்டது.

(தெ-ப-வை.)—ஐயத்தினீங்கி - சந்தேகத்திலிருந்து நீங்கி, தெளிந்தார்க்கு - மெய்ப்பொருளை உணர்ந்தவர்க்கு, வையத்தின்- (அடைந்துநின்ற) நிலவுலகத்தினும், வானம் - (அடையக் கடவதாகிய) வீட்டுலகம், நணியது - அடைந்ததாதலே, உடைத்து- உடையதாம்.

**353.** Heaven is nearer than earth to those men of purified minds who are freed from doubt.

---

௪. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(பரி-வை.) எ-து,—செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகியவுணர்வு அவற்றைவிட்டுத் தம்வயத்ததாய வழியும், அதனாற் பயனில்லையேயாம் மெய்யினை யுணர்தலில்லாதார்க்கு, எ-று.

ஐந்தாகியவுணர்வு மனம் அஃதெய்துதலாவது மடங்கி ஒருதலைப்பட்டுத் தாரணைக்கண் நிற்றல். அங்ஙனநின்றவழியும் வீடு பயவாமையின், பயமின்றென்றார். சிறப்பும்மை எய்துதற்கருமை விளக்கிநின்றது. இவையிரண்டுபாட்டானும் மெய்யுணர் வுடையார்க்கே வீடுளதென மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-வை.)—மெய்யுணர்வு இல்லாதவர்க்கு - மெய்யை அறித லில்லாதவர்க்கு, ஐந்து உணர்வு - (ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் இவ்வைந்து புலன்களிலும் செல்லுதலால்) ஐந்தாகிய உணர்வு, எய்தியக்கண்ணும் - (அப்புலன்களைவிட்டுத்) தமக்கு வசப்பட்டவிடத்தும், பயன் - (அதனாலே)பிரயோசனம், இன்று- இல்லை.

**354.** Even those who have all the knowledge which can be attained by the five senses, will derive no benefit from it, if they are without a knowledge of the true nature of things.

---

௫. எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(பரி-வை.) எ-து,—யாதொருபொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும் அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்கணின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது, எ-று.

பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்றவுண்மையைக் காண்பதென்றவாறாயிற்று. அஃதாவது—கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சொலிரும்பொறை

என்றவழி அரசனென்பதோர் சாதியும், சேரமானென்பதொரு குடியும், வேழநோக்கினையுடையானென்பதோர் வடிவும், சேயென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதோர் சிறப்புப்பெயரும், ஒரு பொருளின்கட் கற்பனையாகலின், அவ்வாறுணராது நிலமுதல் உயிரீறாகிய தத்துவங்களின் தொகுதியெனவுணர்ந்து, அவற்றை நிலமுதலாகத்தத்தங் காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டுசென்றாற் காரணகாரியங்கள் இரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம். எப்பொருளென்ற பொதுமையான் இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறேயுணரப்படும். இதனான் மெய்யுணர்வினது இலக்கணங்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எப்பொருள் - யாதொருபொருள், எத்தன்மைத்து ஆயினும் - யாதோரியல்புடையதாய்த் தோன்றினும், (அத்தோன்றிய விதத்தைக் கண்டு விடாமல்), அப்பொருள் - (தோன்றிய) அப்பொருளிடத்திருந்தும், மெய்ப்பொருள் - மெய்யாகிய பொருளை, காண்பது - அறிவது, அறிவு-மெய்யறிவாம்.

**355.** (True) knowledge is the perception concerning every thing of whatever kind, that *that* thing is the true thing.

---

௬. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(பரி-ரை.) எ-து,—இம்மக்கட் பிறப்பின்கண்ணே உபதேசமொழிகளை அநுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனான் மெய்ப்பொருளை யுணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியையெய்துவர், எ-று.

கற்றென்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், ஈண்டென்றதனால் வீடுபேற்றிற்குரிய மக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்றாம். ஈண்டுவாராநெறி வீட்டுநெறி: வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று:—அவை கேள்வி, விமரிசம், பாவனையென்பன. அவற்றுள்கேள்வி இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஈண்டு - இம்மையிலே, கற்று - (உபதேசத்தை ஞானசாரியரிடத்தே) கேட்டு, மெய்ப்பொருள் - (அதனால்) உண்மைப்பொருளை, கண்டார் - உணர்ந்தவர், மற்று ஈண்டு - திரும்பி இப்பிறப்பினிடத்து, வாராநெறி - வாராதவழியை, தலைப்படுவர் - அடைவார்.

**356.** They, who in this birth have learned to know the true being, enter the road which returns not into this world.

---

௭. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(பரி-ரை.) எ-து,—அங்ஙனங்கேட்ட உபதேசமொழிப்பொருளை ஒருவனுள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானுந் தெளிய ஆராய்ந்து, அதனான் முதற்பொருளையுணருமாயின் அவனுக்கு மாறிப் பிறப்புளதாக நினைக்கவேண்டா, எ-று.

ஒருதலையாவோர்த்தென இயையும். அளவைகளும் பொருந்துமாறும் மேலே உரைத்தாம். இதனால் விமரிசங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—உள்ளம் - (அப்படிகேட்கப்பட்ட உபதேசப்பொருளை ஒருவனது) உள்ளமானது, ஒருதலையாக - நிச்சயப்பட, ஓர்ந்து - (பிரமாணங்களாலும் யுத்தியினாலும்) ஆராய்ந்து, உள்ளது - (அதனால்) முதற்பொருளை, உணரின் - அறியுமாயின், பிறப்பு - (அவனுக்குப்) பிறவியுள்ளதாக, பேர்த்து - மாறி, உள்ளவேண்டா - நினைக்கவேண்டுவதில்லை.

**357.** Let it not be thought that there is another birth for him whose mind having thoroughly considered (all it has been taught), has known the true being.

---

அ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(பரி-ரை.) எ-து,—பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சை கெட வீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்வியபொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது, எ-று.

பிறப்பென்னும் பேதைமையெனவும், சிறப்பென்னுஞ் செம்பொருளெனவும், காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக்குற்றங்களுள் அவிச்சை ஏனையநான்கிற்குங் காரணமாத லுடைமையின், அச்சிறப்புப் பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக் கூறினார். எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாகலான், வீடு சிறப்பெனப்பட்டது. தோற்றக்கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த், தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல்பற்றி, அதனைச் செம்பொருளென்றார். மேல் மெய்ப்பொருளெனவும், உள்ளதெனவுங், கூறியதூஉம் இதுபற்றியெனவுணர்க. அதனைக் காண்கையாவது, உயிர் தன்னவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல். இதனைச் சமாதியெனவுஞ் சுக்கிலத்தியானமெனவுங்கூறுப. உயிர் உடம்பினீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது, அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லா ஆகமங்கட்குந்துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளையே பாவித்தல்வேண்டுதலான், அதனை முன்னே பயிறலாய இதனின் மிக்கவுபாயமில்லையென்பதறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பிறப்புஎன்னும் - பிறவிக்கு முதற்காரணமெனப்படுகிற, பேதைமை - அஞ்ஞானமானது, நீங்க - கெட, சிறப்பென்னும் - மோக்ஷத்துக்கு நிமித்தகாரண மெனப்படுகிற, செம்பொருள் - செவ்வியபொருளை, காண்பது - அறிவது, அறிவு - (ஒருவனுக்கு) மெய்யறிவாம்.

**358.** True knowledge consists in the removal of ignorance, which is (the cause of) births, and the perception of the true being who is (the bestower of) heaven.

---

௯. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் எல்லாப்பொருட்குஞ் சார்பாய அச் செம்பொருளை யுணர்ந்து இருவகைப்பற்றும் அற ஒழுகவல்லனாயின் அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர் வொழுக்கங்களை அழித்துப் பின்சாரமாட்டா, எ-று.

ஆகுபெயராற் சாருமிடத்தையும் சார்வனவற்றையுஞ் சார்பென்றார். ஈண்டொழுக்கமென்றது யோகநெறி யொழுகுதலை. அஃது இயமம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனவொருக்கம், தாரணை, தியானம், சமாதியென எண்வகைப்படும். அவற்றின் பரப்பெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும்; யோகநூல்களுட்காண்க. மற்றுச்சார்தராவெனஇயையும். சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவிறந்தீட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அநுபவித்தனவும் பிறந்த வுடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப் பின்னு மநுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன. அவை விளக்கின் முன்னிருள்போல் ஞானயோகங்களின் முன்னர்க் கெடுதலான், அழித்துச் சார்தராவென்றார். இதனை ஆருகதர் உவர்ப்பென்ப. பிறப்பிற்குக்காரணமாகலான், நல்வினைப் பயனும் நோயெனப்பட்டது. மேல்மூன்றுபாயத்தானும் பரம்பொருளை உணரப் பிறப்பறுமென்றார். அஃது அறும் வழிக்கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யுமென்னுங் கடாவை யாசங்கித்து அவை ஞான யோகங்களின் முதிர்ச்சி யுடைய வுயிரைச் சாரமாட்டாமையானும் வேறு சார்பின்மையானுங் கெட்டுவிடுமென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சார்பு - (ஒருவன்) எல்லாப்பொருள்களுக்கும்) சார்பாகிய அச்செம்பொருளை, உணர்ந்து - அறிந்து, சார்பு - இருவகைப்பற்றுக்களும், கெட - கெடும்படி, ஒழுகின்-நடக்கவல்லவனாயின், சார்தரும் - (முன் அவனைச்) சேர்தற்குரியவையாய்நின்ற, நோய் - துன்பங்கள், அழித்து - (அவ்வுணர்வையும் ஒழுக்கத்தையும்) கெடுத்து, மற்றுசார்தரா - பின்சேரமாட்டாவாம்.

**359.** He, who so lives as to know him who is the support of all things and abandon all desire, will be freed from the evils which would otherwise cleave to him and destroy (his efforts after absorption).

---

௬0. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

(பரி - ரை.) எ - து,—ஞானயோகங்களின் முதிர்ச்சி யுடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சையென்னும் இக்குற்றங்கண் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலான், அவற்றின் காரியமாய வினைப்பயன்கள் உளவாகா, எ-று.

அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிதுவேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கட் செல்

லும் கோபமுமென வடநூலார் குற்றமைந்தென்றார்; இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவுதல் ஆசைக்கண்ணு மடங்குத லான், மூன்றென்றார். இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இக்குற் றங்கள் மூன்றுங் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போலு மாகலின், அம் மிகுதி தோன்ற இவை மூன்றனுநாமங் கெடவென்றார். இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கெடவென்பது எச்சத்திரிபு. நோயென்பது சாதி யொருமை. காரணமாய அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இரு வினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவதுன்பங்களு மில்லையென் பது இதனாற்கூறப்பட்டது. முன்கிடந்ததுன்பங்களும் மேல்வரக்கடவதுன் பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனாகலின், இவை யிரண்டுபாட்டும் இவ் வதிகாரத்த வாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்த வுடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம்.

**(தெ - ப - ரை.)—காமம்வெகுளிமயக்கம் - (ஞானயோகங் களின் முதிர்ச்சி யுடையவர்க்கு) விருப்பு வெறுப்பு அஞ்ஞா னம் எனப்படுகிற, இவைமூன்றன்-இக்குற்றம்மூன்றனது, நாமம்- பெயரும், கெட - கெடுதலால், நோய் - (அவைகளின் காரியங்க ளாகிய) வினைப்பயன்கள், கெடும் - உண்டாதலில்லை.**

**360.** If the very names of these three things, desire, anger, and confusion of mind, be destroyed, then will also perish the evils (which flow from them).

## ௩௭-ம். அதி—அவாவறுத்தல்.

அஃதாவது முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுவு நின்ற உடம்பும் அது கொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேத னைபற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினைவும் அவிச்சையெனப் பிற விக்கு வித்தாமாகலின், அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(பரி - ரை.) எ - து,—எல்லாவுயிர்கட்கும் எக்காலத்துங் கெடாது வருகின்ற பிறப்பினை விளைக்கும் வித்து அவாவென்று சொல்லுவர் நூலோர், எ-று.

உடம்பு நீங்கிப்போங்காலத்து அடுத்த வினையும், அது காட்டுங்கதி நிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லுமாகலான், அதனைப் பிறப்பீனும் வித்தென்றும், கதிவயத்தானுள தாய அவ்வுயிர்வேறுபாட்டினும் அவை தன்மை திரியும் உற்சர்ப்பிணி அவ சர்ப்பிணி யென்னுங்கால வேறுபாட்டினும், அது வித்தாதல் வேறுபடா மையின் எல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுமென்றும், இஃது எல்லாச்சமயங்

சட்கும் ஒத்தலான் என்பவென்றுங்கூறினர். இதனற் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எல்லா வுயிர்க்கும் - உயிர்களுக்கெல்லாம், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், தவா - கெடாதுவருகின்ற, பிறப்பு - பிறவியை, ஈனும் - விளைப்பதாகிய, வித்து - காரணம், அவா - ஆசையாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவார்.

**361**. (The wise) say that the seed, which produces unceasing births, at all times, to all creatures, is desire.

---

௨. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

**(பரி-ரை.)** *எ-து,—பிறப்புத்துன்பமாதல் அறிந்தவன் ஒன்றை வேண்டின் பிறவாமையை வேண்டும்; அப்பிறவாமை தான் ஒருபொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானேயுண்டாம், எ-று.*

*அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற்றுன்பமுற்று வருகின்றமையை உணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின்கண்ணேயாகலின் பிறவாமையை வேண்டுமென்றும், ஈண்டைச்சிற்றின்பங்கருதி ஒருபொருளை அவாவின் அது பிறப்பீனும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின், அது வேண்டாமை வேண்டவருமென்றுங்கூறினர். பிறவாமையின் சிறப்புக்கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமையின், மற்று வினைமாற்றின்கண் வந்தது.*

(தெ-ப-ரை.)—வேண்டுங்கால் - (பிறப்புத் துன்பமாயிருக்கையை அறிந்தவன் ஒன்றை) வேண்டினல், பிறவாமை - பிறவாதிருக்கையை, வேண்டும் - விரும்பும்; அது - அப்பிறவாமையானது, வேண்டாமை - (தான் ஒருபொருளையும்)விரும்பாமையை, வேண்ட - விரும்ப, வரும் - (அவனுக்குத்) தானே உண்டாம்.

**362**. If any thing be desired, freedom from births should be desired; that (freedom from births) will be attained by desiring to be without desire.

---

௩. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

**(பரி-ரை.)** *எ-து,—ஒருபொருளையும் அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின்கண் இல்லை; இனி அவ்வளவேஅன்று, கேட்கப்படுகின்ற துறக்கத்தின்கண்ணும் அதனை ஒப்பதில்லை, எ-று.*

*மக்கள்செல்வமும் தேவர்செல்வமும் மேன்மேல்நோக்கக் கீழாதலுடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை விழுச்செல்வமென்றும், அதற்கு இரண்டுலகினும் ஒப்பதில்லையென்றுங்கூறினர். ஆகமஅளவை போலாது காட்சியளவை எல்லாரானுந் தெளியப்படுதலின், மக்கள்செல்*

வம் வகுத்து முற்கூறப்பட்டது. பிறவாமைக்கு வழியாமெனவும், விழுச் செல்வமாமெனவும், வேண்டாமையின் சிறப்பு இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வேண்டாமைஅன்ன - (ஒருபொருளையும்) விரும்பாமைபோலும், விழுச்செல்வம் - மேலாகிய செல்வமானது, ஈண்டு - (காணப்படுகிற) இவ்வுலகத்தில், இல்லை-இலது, (அவ்வளவேயன்றி), ஆண்டும் - (கேட்கப்படுகிற) அவ்வுலகத்தினும், அஃது ஒப்பது - அதுபோல்வது, இல் - இல்லை.

**363.** There is in this world no excellence equal to freedon from desire; and even in that world, there is nothing like it.

---

௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(பரி - ரை.) எ-து,—ஒருவர்க்கு வீடென்று சொல்லப் படுவது அவா வில்லாமை; அவ்வவாவில்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாம், எ-று.

வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாகலின், அதனைத் தூய்மையென்றும், காரணத்தைக் காரியமாக உபசரித்துத் தூய்மையென் பதவா வின்மையென்றும், மெய்ம்மையையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மையென்றுங் கூறினர். மற்று மேலையதுபோல வினைமாற்றின்கண் வந்தது. வேண்டுதல் - இடைவிடாது பாவித்தல். அவாவறுத்தல் வீட்டிற் குப் பரம்பரையானன்றி நேரேயேதுவென்பதூஉம் அது வரும்வழியும் இதனாற் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—தூய்மைஎன்பது - (ஒருவர்க்கு) முத்தியென்று சொல்லப்படுவது, அவாஇன்மை - ஆசையில்லாமையாம்; அது - அவ்வாசையில்லாமை, வாய்மை - மெய்ம்மையாகிய கடவுளை, வேண்ட - விரும்ப, வரும் - தானேயுண்டாம்.

**364.** Purity (of mind) consists in freedom from desire; and that (freedom from desire) is the fruit of the love of truth.

---

ரு. அற்றவ ரென்பா ரவாவற்றா மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(பரி-ரை.) எ-து,—பிறவி அற்றவரென்று சொல்லப்படுவார் அதற்கு நேரேயேதுவாகிய அவா அற்றவர்கள்; பிற ஏதுக்களற்று அஃதொன்றும் அறாதவர்கள், அவற்றாற் சிலதுன்பங்க ளற்றதல்லது, அவர்போற் பிறவி அற்றிலர், எ-று.

இதனால் அவாவறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும் எதிர்மறைமுகத்தானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அற்றவர்என்பார் - (பிறவி) அற்றவரென்று சொல்லப்படுமவர், அவாஅற்றார் - (அதற்குநேரே ஏதுவாகிய)

ஆசை அற்றவர்; மற்றையார் - பிற ஏதுக்கள் அற்று அதுவொன்றும் அறாதவர், அற்று ஆக அற்றதுஇலர் - (அவ்வேதுக்களாலே சில துன்பங்கள் அற்றவரல்லாமல்) அவர்போற் பிறவியற்றிலர்.

365. They are said to be free (from future birth) who are freed from desire; all others (who, whatever else they may be free from, are not freed from desire) are not thus free.

---

௬. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(பரி-ரை.) எ-து,—மெய்யுணர்தல்ஈறாகிய காரணங்களெல்லாம்எய்தி அவற்றான் வீடெய்தற்பாலனாய ஒருவனை மறவிவழியாற் புகுந்து பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக் கெடுக்க வல்லது அவா; ஆகலான் அவ்வவாவை அஞ்சிக்காப்பதே துறவறமாவது, எ-று.

ஓருமென்பன அசைநிலை. அநாதியாய்ப் போந்த அவா, ஓரோவழி வாய்மை வேண்டலையொழிந்து பராக்காற் காவானாயின், அஃதிடமாக அவனறியாமற்புகுந்து, பழையஇயற்கையாய் நின்று பிறப்பினையுண்டாக்குதலான், அதனைவஞ்சிப்பதென்றார். காத்தலாவது வாய்மை வேண்டலை இடைவிடாது பயின்று அதுசெய்யாமற் பரிகரித்தல். இதனால் அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறமென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒருவனை-(துறந்த) ஒருவனை, வஞ்சிப்பது-பின்னும் பிறவியிலே தள்ளிக்கெடுக்கவல்லது, அவா - ஆசையாம் (ஆகலால்), அஞ்சுவது-(அவ்வவாவை)அஞ்சிக்காப்பதே, அறன்-துறவறமாம்.

366. It is the chief duty of (an ascetic) to watch against desire with (jealous) fear; for it has power to deceive (and destroy) him.

---

௭. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் அவாவினையஞ்சித் துவரக்கெடுக்கவல்லனாயின், அவனுக்குக் கெடாமைக்கேதுவாகிய வினை தான் விரும்புநெறியானே உண்டாம், எ-று.

கெடாமை - பிறவித்துன்பங்களான் அழியாமை. அதற்கேதுவாகிய வினையென்றது - மேற்சொல்லிய துறவறங்களை. வினை - சாதியொருமை. தான் விரும்புநெறி - மெய்வருந்தாநெறி. அவாவினை முற்ற அறுத்தானுக்கு வேறறஞ்செய்யவேண்டா, செய்தனவெல்லாம் அறமாமென்பது கருத்து. இதனால் அவாவறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அவாவினை - (ஒருவன்) ஆசையை, ஆற்ற அறுப்பின் - முழுதுமறுத்தால், [வஞ்சித்தும் வாராமற்கெடுக்க வல்லவனாயினென்றபடி], (அவனுக்கு) தவாவினை - கெடாமை

க்கு ஏதுவாகியசெயல், தான்வேண்டும்ஆற்றால் - தான்விரும்பும் வழியினால், வரும் - உண்டாகும்.

**367,** If a man thoroughly cut off all desire, the deeds, which confer immortality, will come to him, in the path in which he seeks them.

---

அ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

(பரி-ரை.) எ-து,—அவாவில்லாதார்க்கு வரக்கடவதொரு துன்பமும் இல்லை; ஒருவற்குப் பிறகாரணங்களெல்லாம் இன்றி அஃதொன்றும் உண்டாயின், அதனானே எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும், எ-று.

உடம்பு முகந்துநின்ற துன்பம் முன்பே செய்துகொண்டதாகலின், ஈண்டுத்துன்பமென்றது, இதுபொழுது அவாவாற் செய்துகொள்வன வற்றை. தவாதுமேன்மேல் வருமென்றதனான், மூவகைத் துன்பங்களு மென்பது பெற்றாம். இதனால் அவாவே துன்பத்திற்குக் காரணமென் பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அவாஇல்லார்க்கு - ஆசையில்லாதவர்க்கு, துன்பம் - (வரக்கடவது) ஒருதுன்பம், இல்லாகும் - இல்லையாகும்; (ஒருவனுக்குப் பிறகாரணங்களெல்லாம் இல்லாதிருந்தும்), அஃதுஉண்டேல்-அவ்வொன்றுமாத்திரம் உண்டாயின், தவாது- (அதனால் எல்லாத்துன்பங்களும்) முடிவில்லாமல்; மேல் மேல்- மேலுமேலும், வரும் - உண்டாகும்.

**368.** There is no sorrow to those who are without desire; but where *that* is, (sorrow) will incessantly come, more and more.

---

கூ. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(பரி-ரை.) எ-து,—அவாவென்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவற்குக்கெடுமாயின், அவன் வீடு பெற்றவழியே அன்றி உடம்போடு நின்றவழியும் இன்பம் இடையறாது, எ-று.

துன்பத்துட்டுன்பம் - ஏனைத்துன்பங்களெல்லாம் இன்பமாக வருந் துன்பம். வினைவின்கண்ணே அன்றித் தோற்றத்தின்கண்ணுந் துன்பமாகலின், இவ்வாறு கூறப்பட்டது. காரணத்தைக் காரியமாக உபசரித்து அவாவென்னுந் துன்பத்துட்டுன்பமென்றும், அது கெட்டார்க்கு மனந்தடுமாறாது நிரம்பி நிற்றலான் ஈண்டுமின்பமிடையறாதென்றுங் கூறினார். இனி ஈண்டு மென்பதற்குப் பெருகுமென் றுரைப்பாருமுளர். இதனால் அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்பொடு நின்றே எய்துவரொன்பது கூறப் பட்டது.

(தெ-ப-ரை.) அவாஎன்னும் - ஆசைஎன்று சொல்லப்படு கிற, துன்பத்துள் துன்பம் - துன்பங்களுள்ளே மிகுந்ததுன்பமா

னது, கெடின் - (ஒருவனுக்குக்) கெடுமாயின், (அவன்முத்தி பெற்றவிட்டத்தேயல்லாமல்) ஈண்டும் - இங்கேயும் [உடம்போடு கூடிநின்றவிடத்தும் என்றபடி], இன்பம் - சுகம், இடையறாது - நடுவே நீங்காது.

**369.** Even while in this body, joy will never depart (from the mind, in which) desire, that sorrow of sorrows, has been destroyed.

---

௩௭0. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
 பேரா வியற்கை தரும்.

(பரி-ரை.) எ - து,—ஒருகாலும் நிரம்பாத இயல்பினையுடைய அவா வினை ஒருவன் நீக்குமாயின், அந்நீப்பு அவனுக்கு அப்பொழுதே எஞ்ஞான்றும் ஒருநிலைமையனும் இயல்பைக் கொடுக்கும், எ-று.

நிரம்பாமையாவது தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின் வேண்டாதனவாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல். அவ்வளர்ச்சிக்கு அளவின்மையின், நீத்தலே தக்கதென்பது கருத்து. களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பு இறப்புகளும் முதலாயினவின்றி உயிர் நிரதிசய வின்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் பேராவியற்கை யென்றும், அஃது அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலையாகலின், அந்நிலையே தருமென்றுங் கூறினார்.

"நன்றாஞானங் கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாநீத்
 தொன்றாய்க்கிடந்த வரும்பெரும்பா ழுலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து
 சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றா
 லன்றேயப்போ தேவீடு மதுவேவீடு வீடாமே."

என்பதும் இக்கருத்தேபற்றி வந்தது. இந்நிலைமையுடையவனை வடநூலார் சீவன்முத்தனென்ப. இதனால் வீடாவது இதுவென்பதூஉம் அஃது அவா வறுத்தார்க்கு அப்பொழுதே உளதாமென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஆராஇயற்கை - (ஒருபோதும்) நிரம்பாத இயல்பையுடைய, அவா - ஆசையை, நீப்பின் - (ஒருவன்) விடுவானாயின், (அவ்விடுகை) அந்நிலையே - (அவனுக்கு) அப்போதே, பேராஇயற்கை - எப்போதும் ஒரு நிலைமையனாந்தன்மையை, தரும் - கொடுக்கும்.

**370.** The removal of desire, whose nature it is never to be satisfied, will immediately confer a nature that can never be changed.

துறவறவியல் முற்றிற்று.

---

இவ்வாற்றான் இம்மை மறுமை வீடென்னுமூன்றனையும் பயத்தற் சிறப்புடைத்தாய அறங்கூறினார்; இனிப் பொருளும் இன்பமுங் கூறுவார், அவற்றின்முதற்காரணமாகிய ஊழின்வலி கூறுகின்றார்.

## ௩௮-ம். அதி—ஊழ்.

அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற் கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதியென்பன ஒருபொருட்கிளவி. இது பொருளின்பங்கள் இரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும் மேற்கூறிய அறத்தோ டியைபுடைமையானும், அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

க. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(பரி-ரை.) எ-து,—ஒருவற்குக் கைப்பொருளாதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சிஉண்டாம்; அஃதழிதற்குக் காரணமாகிய ஊழான் மடி உண்டாம், எ-று.

ஆகூழ் போகூழென்னும் வினைத்தொகைகள் எதிர்காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. அசைவு மடி, பொருளின் ஆக்க அழிவுகட்குத் துணைக்காரணமாய முயற்சி மடிகளையுந் தானே தோன்றுவிக்குமென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—கைப்பொருள் - (ஒருவனுக்கு) கையிற் கிடைத்தபொருள், ஆகு ஊழால் - ஆகுதற்குக் காரணமாகிய ஊழினாலே, அசைவு இன்மை-முயற்சியானது, தோன்றும்-உண்டாகும்; போகு ஊழால் - போகுதற்குக் காரணமாகிய ஊழினாலே, மடி - சோம்பலானது, தோன்றும் - உண்டாகும்.

**371.** Perseverance comes from a prosperous fate, and idleness from an adverse fate.

---

உ. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும் கைப்பொருளிழத்தற் கேதுவாகிய ஊழ்வந்து உற்றவிடத்து, அஃது அதனைப் பேதையாக்கும்; இனி அவனறிவு சுருங்கி இருப்பினும் கைப்பொருளாதற் கேதுவாகிய ஊழ்வந்து உற்றவிடத்து அஃது அதனை விரிக்கும், எ-று.

கைப்பொருளென்பது அதிகாரத்தான் வந்தது. இழவூழ் ஆகலூழென்பன இரண்டும் வேற்றுமைத்தொகை. உற்றக்கடையென்பது முன்னுங் கூட்டப்பட்டது. இயற்கையானாய அறிவையும் வேறுபடுக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—அறிவு - (ஒருவனுக்கு) எல்லாவறிவும் (உண்டாயிருந்தாலும்), இழவு - (கைப்பொருளை) இழத்தற்குக் காரணமாகிய, ஊழ் - பழவினை, உற்றக்கடை - பொருந்திய விடத்து, பேதைப்படுக்கும் - (அதனை) அறியாமையாக்கும், ஆகல் - (அவனறிவு சுருங்கியிருந்தாலும் கைப்பொருள்) ஆகுதற்குக் கார

ணமாகிய, ஊழ்-விதி, உற்றக்கடை-பொருந்தியவிடத்து, அகற்றும் - (அதனை) விசாலப்படுத்தும்.

372. An adverse fate produces folly, and a prosperous fate produces enlarged knowledge.

---

௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

(பரி-மே.) எ-து,—பேதைப்படுக்கும் ஊழுடையான் ஒருவன் நுண்ணியபொருள்களை உணர்த்தும் நூல்பலவற்றையுங் கற்றானாயினும், அவனுக்குப் பின்னுந் தன்னூழானாகிய பேதைமையுணர்வே மேற்படும், எ-று.

பொருளின்நுண்மை நூலின்மே லேற்றப்பட்டது. மேற்படுதல்-கல்வியறிவைப் பின்னிரங்குதற்காக்கிச் செயலுக்குத் தான்முற்படுதல். "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா—வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்" என்பதுமது. செயற்கையானாய அறிவையுங் கீழ்ப்படுத்து மென்பதாம்.

(தெ - ப - மை.)—நுண்ணிய - (அறியாமை யாக்குவதாகிய ஊழுடையவனொருவன்) நுட்பமான பொருள்களையுடைய, நூல் பல-பலநூல்களையும், கற்பினும்-கற்றானாயினும், மற்றும் - (அவனுக்கு) பின்னும், தன்உண்மை - தனது ஊழினாலாகிய அறிவே, மிகும் - மேற்படும்.

373. Although (a man) may study the most polished treatises, the knowledge which fate has decreed to him will still prevail.

---

௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

(பரி - மே.) எ-து,—உலகத்து ஊழினான் ஆயஇயற்கை இரண்டுகூறு; ஆதலான், செல்வமுடையராதலும் வேறு, அறிவுடையராதலும் வேறு, எ-று.

செல்வத்தினைப் படைத்தலுங் காத்தலும் பயன்கோடலும் அறிவுடையார்க் கல்லது இயலாஅன்றே, அவ்வாறன்றி அறிவுடையார் வறியராகவும் ஏனையார் செல்வராகவுங் காண்டலான், அறிவுடையராதற்காம்ஊழ் செல்வமுடையராதற் காகாது, செல்வமுடையராதற் காகும்ஊழ் அறிவுடையராதற் காகாதென்றதாயிற்று. ஆகவே, செல்வஞ்செய்யுங்கால் அறிவாகிய துணைக்காரணமும் வேண்டாவென்பது பெற்றாம்.

(தெ-ப-மை.)—உலகத்து - உலகத்தில், இயற்கை - (ஊழினாலாகிய) இயற்கையானது, இருவேறு-இரண்டுகூறா யிருக்கின்றது (ஆதலால்), திருவேறு - செல்வமுடையவராதலும் வேறு; தெள்ளியராதலும் வேறு - அறிவுடையவராதலும் வேறு.

374. There are (through fate) two different natures in the world, hence the difference (observable in men) in (their acquisition of) wealth, and in their attainment of knowledge.

---

ரு. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(பரி - ரை.) எ - து,—செல்வத்தைஆக்குதற்கு நல்லவையெல்லாந் தீயவாய் அழிக்கும்; அதுவேயன்றித் தீயவைதாமும் நல்லவாய் ஆக்கும் ஊழ்வயத்தான், எ-று.

நல்லவை தீயவையென்பன காலமும், இடனும், கருவியும், தொழிலும் முதலாயவற்றை. ஊழானென்பது அதிகாரத்தாற்பெற்றும். அழிக்கும் ஊழுற்றவழிக் காலமுதலிய நல்லவாயினும் அழியும், ஆக்கும் ஊழுற்ற வழி அவை தீயவாயினும் ஆகுமென்பதாயிற்று. ஆகவே, காலமுதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுக்குமென்பது பெற்றும்.

(தெ-ப-ரை.)—செல்வம் - செல்வத்தை, செயற்கு - உண்டாக்குதற்கு, நல்லவை எல்லாம் - நற்கருமங்களெல்லாம், தீய ஆம் - தீயவையாய்அழிக்கும், (அதுமாத்திரமல்லாமல்) தீயவும்- தீயவைதாமும், நல்லஆம் - நல்லவையாய் ஆக்கும், (ஊழ்வசத்தால்).

**375.** In the acquisition of property, every thing favourable becomes unfavourable, and (on the other hand) every thing unfavourable becomes favourable, (through the power of fate.)

---

சு. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

(பரி - ரை.) எ - து,—தமக்கூழல்லாத பொருள்கள் வருந்திக்காப்பினும், தம்மிடத்து நில்லாவாம்; ஊழால்தமவாயபொருள்கள், புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும், தம்மைவிட்டுப் போகா, எ-று.

பொருள்களின்நிலையும் போக்கும் ஊழினன்ஆவதல்லது காப்பிகழ்ச்சிகளான்ஆகா வென்பதாம். இவை ஆறுபாட்டானும் பொருட்குக்காரணமாய ஊழின்வலி கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பால் - ஊழினாலே, அல்ல - தம்முடையவை யாகாதபொருள்கள், பரியினும் - வருந்திக் காப்பாற்றினாலும், ஆகாஆம் - (தம்மிடத்து) நில்லாமற்போகும், தம - தம்முடையவையாகிய பொருள்கள், உய்த்து - (புறத்தே) கொண்டுபோய், சொரியினும் - பெய்துவிட்டாலும், போகா - (தம்மைவிட்டுப்) போகாவாம்.

**376.** Whatever is not conferred by fate cannot be preserved although it be guarded with most painful care; and that, which fate has made his, cannot be lost, although one should even take it and throw it away.

---

எ. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(பரி - ரை.) எ - து,—ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத்தார்க்கும் தெய்வம் வகுத்தவகையான் அல்லது நுகர்தலுண்டாகாது, எ-று.

ஓருயிர் செய்தவினையின் பயன் பிறிதோருயிரின்கட் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின், வகுத்தானென்றார். "இசைத்தலு முரிய வேறிடத் தான." என்பதனான் உயர்திணையாயிற்று. படையாதார்க்கே அன்றிப் படைத்தார்க்கு மென்றமையான், உம்மை எச்சவும்மை. வேறு முயற்சிகளாற் பொருள்களைப் படைத்தலல்லது நுகர்தலாகாது, அதற்கு ஊழ் வேண்டுமென்பதாயிற்று.

(தெ - ப - ரை)—கோடி - (அனுபவிக்கப்படும்பொருள்கள்) கோடியை, தொகுத்தார்க்கும் - வருந்திச்சேர்த்தவர்க்கும், வகுத்தான் - தெய்வத்தினால், வகுத்த-வகுக்கப்பட்ட, வகைஅல்லால்-வகையாலல்லது, துய்த்தல் – அனுபவித்தல், அரிது - உண்டாகாது.

**377.** Even those who gather together millions will only enjoy them, as it has been determined by the disposer (of all things).

---

அ. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
ஊட்டா கழியு மெனின்.

(பரி-ரை.) எ-து,—வறுமையான்நுகர்ச்சியில்லாதார் துறக்குங் கருத்துடையராவர், ஊழ்கள் உறுதற்பாலவாய துன்பங்களை உறுவியாதொழியுமாயின், எ-று.

துறப்பாரென்பது ஆசீற்றெதிர்காலமுற்றுச்சொல். தம்மால் விடப்படுவன தாமே விடப்பெற்றுவைத்துங் கருத்து வேறுபாட்டாற் றுன்பமுறுகின்றது ஊழின்வலியானென்பது எஞ்சிநிற்றலின், மன் ஒழியிசைக் கண்வந்தது.

(தெ-ப-ரை.)—உறல்பால - (ஊழ்கள்) அடையும் பகுதியவாகிய துன்பங்களை, ஊட்டா-அடைவிக்காமல், கழியும்எனின்-நீங்குமாயின், துப்புரவுஇல்லார் - (வறுமையால்) அனுபவிக்கப்படும்பொருளில்லாதார், துறப்பார்-துறக்குங் கருத்துடையராவர்.

**378.** The destitute will renounce desire (and become ascetics), if (fate) do not make them suffer the hindrances to which they are liable, and they pass away.

---

கூ. நன்றுங்கா னல்லவாக் காண்பவ ரன்றுங்கா
லல்லற் படுவ தெவன்.

(பரி - ரை.) எ - து,—நல்வினை விளையுங்கால் அதன் விளைவாய இன்பங்களைத் துடைக்குந்திறன் காடாது இவை நல்லவென்று இயைந்தனுபவிப்பார் ஏனைத்தீவினை விளையுங்கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வா றனுபவியாது துடைக்குந்திறன் காடி அல்லலுழப்பது என்கருதி? எ-று.

தாமே முன்செய்து கொண்டமையானும், ஊட்டாது கழியாமையானும், இரண்டும் இயைந்தனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந்தனுபவித்து ஏனையதற்கு அது செய்யாது வருந்துதல் அறிவன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் இன்பதுன்பங்கட்குக் காரணமாய ஊழின் வலி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நன்று - நல்வினை, ஆம்கால் - இன்பங்களைக் கொடுக்கும்போது, நல்லஆக – (அவ்வின்பங்களை நீக்கும் விதந் தேடாமல் இவை) நல்லவையென்றிசைந்து, காண்பவர்-அனுபவிப்பவர், அன்று – மற்றைத்தீவினை, ஆம்கால் - துன்பங்களைக் கொடுக்கும்போது, அல்லற்படுவது - (அத்துன்பங்களையும் அப்படி அனுபவியாமல் நீக்கும் விதந்தேடித்) துன்பப் படுவது, எவன் – யாது?

**379.** How is that those, who are pleased with good fortune, trouble themselves when evil comes, (since both are equally the decree of fate)?

---

கo. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(பரி-ரை.) எ-து,—தன்னை விலக்குதற்பொருட்டுத் தனக்கு மறுதலையாவதோ ருபாயத்தைச் சூழினும், தான் அவ்வுபாயமேயாயாவும் பிறிதொன்றானும் வழியாக வந்து அச்சூழ்ச்சியின் முற்பட்டு நிற்கும்; அதனால் ஊழ்போல மிக்கவலியுடையன யாவையுள? எ-று.

பெருவலி—ஆகுபெயர். சூழ்தல் - பலருடனும் பழுதற எண்ணுதல். செய்தற்கே அன்றிச் சூழ்தற்கும் அவதி கொடாதென்றமையின், உம்மை எச்சவும்மை. எல்லாம் வழியாக வருதலுடைமையின், ஊழே வலியதென்பதாம். இதனான் அவ்விருவகைஊழின் வலியும் பொதுவாகக்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மற்றுஒன்று – (தன்னைவிலக்குதற்பொருட்டுத்) தனக்குப்பகையாகிய ஒருபாயத்தை, சூழினும் – ஆராய்ந்தாலும், தான் - அவ்வூழ், முந்துறும் – (அவ்வுபாயத்தையாவது மற்றொன்றையாவது வழியாகக்கொண்டு வந்து அவ்வாராய்ச்சிக்கு) முற்பட்டுநிற்கும், ஊழின் - (அதனால்) ஊழ்போல், பெருவலி - மிகுந்த வலிமையுடையவை, யா-எவை, உள - இருக்கின்றன?

**380.** What is stronger than fate? If we think of an expedient (to avert it), it will itself be with us before (the thought).

அறத்துப்பால் முற்றிற்று.

---

# பொருட்பால்.

## அரசியல்.

இனி இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவானெடுத்துக்கொண்டார். அது தன் றுணைக்காரணமாய அரசனீதி கூறவே அடங்கும். அரசனீதியாவது காவலைநடாத்துமுறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூவகைப்படுத்து, மலர்தலையுலகிற்குயிரெனச்சிறந்த அரசனதியல்பு இருபத்தைந்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

### ௩௯-ம். அதி—இறைமாட்சி.

அஃதாவது அவன்றன் நற்குண நற்செய்கைகள். உலகபாலர் உருவாய் நின்று உலகங்காத்தலின், இறையென்றார்; "திருவுடைமன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார்.

௧. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

(பரி - ரை.) எ-து,—படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணுமென்று சொல்லப்பட்ட ஆறங்கங்களையும் உடையவன் அரசருள் ஏறு போல்வான், எ-று.

ஈண்டுக் குடியென்றது அதனையுடைய நாட்டினை. கூழென்றது அதற்கேதுவாய பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்பதே முறையாயினும், ஈண்டுச் செய்யுள்நோக்கிப் பிறழ வைத்தார். ஆறுமுடையா னென்றதனால், அவற்றுள் ஒன்று இல்வழியும் அரசனீதி செல்லாதென்பது பெற்றாம்; வடநூலார் இவற்றிற்கு அங்கமெனப் பெயர் கொடுத்ததூஉம் அது நோக்கி. ஏறென்பது உபசாரவழக்கு. இதனால் அரசற்கங்கமாவன இவையென்பதூஉம் இவை முற்றும் உடைமையே அவன் வெற்றிக்கேது வென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—படை - சேனையும், குடி - நாடும், கூழ் - பொருளும், அமைச்சு - மந்திரியும், நட்பு - நட்பும், அரண் - அரணும், (என்றுசொல்லப்படுகிற) ஆறும் - ஆறங்கங்களையும், உடையான் - உடையவன், அரசருள்ஏறு - மன்னருள் ஆண்சிங்கம் போல்வானவான்.

**381.** He who possesses these six things, an army, a people, wealth, ministers, friends, and a fortress, is a lion among kings.

உ. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

(பரி-ரை.) எ-து,—அரசனுக்கியல்பாவது திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமுமென்னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல், எ-று.

ஊக்கம்-வினைசெய்தற்கண் மனவெழுச்சி. இவற்றுள் அறிவு ஆறங்கத்திற்கும் உரித்து, ஈகை படைக்குரித்து, ஏனைய வினைக்குரிய. உயிர்க்குணங்களுள் ஒன்றுதோன்ற ஏனையஅடங்கிவரும், அவற்றுள் இவையடங்கின், அரசற்குக் கெடுவன பலவாமாகலின், இவை எப்பொழுதுந்தோன்றி நிற்றல் இயல்பாகவேண்டுமென்பார், எஞ்சாமை வேந்தற்கியல்பென்றார்.

(தெ-ப-ரை.)—வேந்தற்கு - அரசனுக்கு, இயல்பு - இயல்பாவது, அஞ்சாமை - உறுதியும், ஈகை-கொடையும், அறிவு-விவேகமும், ஊக்கம் - மனவெழுச்சியும், இந்நான்கும் - இந்த நான்கு குணங்களும், எஞ்சாமை - நடுவே நீங்காது நிற்றலாம்,

**382.** Never to fail in these four things, fearlessness, liberality, wisdom, and energy, is the kingly character.

---

ந. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

(பரி-ரை.) எ-து,—நிலத்தினையாளுந் திருவுடையாற்கு அக்காரியங்களில் விரைவுடைமையும் அவையறிதற்கேற்ற கல்வியுடைமையும் ஆண்மையுடைமையுமாகிய இம்மூன்றுகுணமும் ஒருகாலும் நீங்கா, எ-று.

கல்வியது கூறுபாடு முன்னர்க்கூறப்படும். ஆண்மையாவது ஒன்றனையும் பாராது கடிதிற்செய்வதாகலின், அஃது ஈண்டு உபசாரவழக்காற் துணிவெனப்பட்டது. உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. இவற்றுட்கல்வி ஆறங்கத்திற்கும் உரித்து, ஏனைய வினைக்குரிய. நீங்காவென்பதற்கு மேலெஞ்சாமைக் குரைத்தாங்குரைக்க.

(தெ-ப-ரை.)—நிலன் ஆள்பவற்கு - நிலத்தினை ஆளுந் திருவினை யுடையவனுக்கு, தூங்காமை (உடைமை)- அக்காரியங்களிலே விரைவுடைமையும், கல்வி (உடைமை) - (அவைகளை அறிதற்கு ஏற்ற) கல்வி யுடைமையும், துணிவு உடைமை-ஆண்மையுடைமையும்ஆகிய, இம்மூன்றும் - இம்மூன்றுகுணங்களும், நீங்கா - (ஒருபோதும்) நீங்காவாம்.

**383.** These three things, viz vigilance, learning, and bravery, should never be wanting in the ruler of a country.

---

ச. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(பரி-ரை.) எ-து,—தனக்கோதிய அறத்தின் வழுவாதொழுகி அறன் அல்லவை தன்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினை யுடையான் அரசன், எ-று.

அவ்வறமாவது ஓதல், வேட்டல், ஈதலென்னும் பொதுத்தொழிலினும், படைக்கலம்பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறந்தெறுதலென்னுஞ்சிறப்புத்தொழிலினும், வழுவாது நிற்றல். "மாண்ட—வறநெறி முதற்றே யரசின் கொற்றம்" என்பதனால் இவ்வறம் பொருட்குக் காரணமாதலறிக. அல்லவை கொலை, களவு முதலாயின. குற்றமாய மானத்தினீக்குதற்கு மறனிழுக்காமானமென்றார்; அஃதாவது "வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா—னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்—மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியா—னறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன்." எனவும் "அழியுநர் புறக்கொடை யயில்வே லோச்சான்" எனவுஞ்சொல்லப்படுவது. அரசு - அரசனது தன்மை; அஃது உபசாரவழக்கால் அவன்றன்மே னின்றது.

(தெ-ப-ரை.)—அறன் - (தனக்குச்சொல்லப்பட்ட) அறத்திலிருந்து, இழுக்காது - தவறாதுநடந்து, அல்லவை - அறமல்லாதவைகளை [பாவங்களை], நீக்கி - (தனதுநாட்டிலும்) உண்டாகாமல்கடிந்து, மறன் - வீரத்திலிருந்து, இழுக்கா - தவறாத, மானம் - மானத்தை, உடையது - உடையவன், அரசு - அரசனாவான்.

384. He is a king who, with manly modesty, swerves not from virtue, and refrains from vice.

---

௫. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(பரி - ரை.) எ-து,—தனக்குப் பொருள்கள் வரும்வழிகளை மேன்மேலுளவாக்கலும், அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித்தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பிறர்கொள்ளாமற் காத்தலும், காத்தவற்றை அறம்பொருளின்பங்களின்பொருட்டு விடுத்தலும் வல்லவனே அரசன், எ-று.

ஈட்டல், காத்தல், வகுத்தலென்றவற்றிற்கேற்ப இயற்றலென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன மணி, பொன், நெல் முதலாயின. அவை வரும் வழிகளாவன பகைவரையழித்தலும், திறைகோடலும், தன்னாடு தலையளித்தலும் முதலாயின. பிறரென்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினர். கடவுளர், அந்தணர், வறியோரென்றிவர்க்கும் புகழிற்குங் கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை, குதிரை, படை, நாடு, அரணென்றிவற்றிற்கும் பகையொடுகூடலிற் பிரிக்கப்படுவார்க்கும் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படுவார்க்குங் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும், மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்களான் நுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவுங்கொள்க. இயற்றன்முதலிய தவறாமற்செய்தல்அரிதாகலின், வல்லதென்றார். இவை நான்குபாட்டானும் மாட்சியே கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இயற்றலும் - (தனக்குப்பொருள்கள் வரும் வழிகளை மேலுமேலும்) உண்டாக்கலும், ஈட்டலும் - (அப்படி

வந்தவைகளை) ஓரிடத்தேசேர்த்தலும், காத்தலும் - (சேர்க்கப்பட்டவைகளைப் பிறர்கொள்ளாமல்) காத்தலும், காத்த-காக்கப்பட்டவைகளை, வகுத்தலும் - (அறம் பொரு ளின்பங்களின் பொருட்டுச்) செலவுசெய்தலும், வல்லது - வல்லவன், அரசு - அரசனுவான்.

**385.** He is a king who is able to acquire (wealth), to lay it up, to guard, and to distribute it.

---

௬. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

(பரி - ரை.) எ - து,—முறைவேண்டினர்க்குங் குறைவேண்டினர்க்குங் காண்டற்கெளியனாய் யாவர்மாட்டுங் கடுஞ்சொல்ல னல்லனுமாயின் அம்மன்னனது நிலத்தை எல்லாநிலங்களினும் உயர்த்துக்கூறும் உலகம், எ-று.

முறைவேண்டினர் - வலியரான் நலிவெய்தினர். குறைவேண்டினர் - வறுமையுற்றிரந்தார். காண்டற்கெளிமையாவது பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல். கடுஞ்சொல் - கேள்வியினும் வினையினுங் கடியவாய சொல். நிலத்தை மீக்கூறுமெனவே, மன்னனை மீக்கூறுதல் சொல்லவேண்டாவாயிற்று. மீக்கூறுதல் இவன் காக்கின்ற நாடு பசி பிணி பகை முதலிய இன்றி யாவர்க்கும் பேரின்பந் தருதலின், தேவருலகினும் நன்றென்றல். உலகமென்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

(தெ - ப - ரை.)—மன்னன் - அரசன், காட்சிக்குஎளியன் - (வழக்கறிவிப்பவர்க்கும் குறை யிரப்பவர்க்கும்) காணுதற்கு எளியவனாகி, கடுஞ்சொல்லன் அல்லனேல் - (யாவரிடத்தும்) கடிய சொல்லினன் அல்லாதவனுமாயிருந்தால், நிலம் - (அவனது) நிலத்தை, மீக்கூறும் - (உலகம் எல்லாநிலங்களினும்) உயர்த்திச்சொல்லும்.

**386.** The whole world will exalt the country of the king who is easy of access, and who is free from harsh langvage.

---

எ. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.

(பரி-ரை.) எ - து,—இனியசொல்லுடனே ஈதலைச்செய்து அளிக்க வல்ல அரசனுக்கு இவ்வுலகந் தன்புகழோடு மேவித் தான் கருதிய அளவிற்றாம், எ-று.

இன்சொல் - கேள்வியினும் வினையினும் இனியவாய சொல். ஈதல் - வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல். அளித்தல் - தன்பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமற்காத்தல். இவை அரியவாகலின் வல்லாற்கென்றும், அவன் மண்முழுதும் ஆளுமாகலின் இவ்வுலகென்றுங் கூறினர். கருதியஅளவிற்றாதல் - கருதியபொருளெல்லாஞ் சுரத்தல்.

(தெ - ப - ரை.)—இன்சொலால் - இனியசொல்லுடனே, ஈந்து - கொடுத்து, அளிக்க - காக்க, வல்லாற்கு - வல்ல அரசனுக்கு, இவ்வுலகு - இவ்வுலகமானது, தன்சொலால் - தன் புகழோடுபொருந்தி, தான் கண்ட அனைத்து - தான்நினைத்த அளவினதாகும்.

**387.** The world will praise and submit itself to the mind of the king who is able to give with affability, and to protect all who come to him.

---

௮. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(பரி-ரை.) எ-து,—தான் முறைசெய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யும் அரசன் பிறப்பான் மகனேயாயினும், செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும், எ-று.

முறை - அறநூலும் நீதிநூலுஞ் சொல்லும் நெறி. பிறரென்றது மேற்சொல்லியாரை. வேறுவைத்தல்-மக்களிற்பிரித்து உயர்த்துவைத்தல்.

(தெ-ப-ரை.)—முறை செய்து - (தான்) நீதிசெலுத்தி, காப்பாற்றும் - (பிறர்வருந்தாமல்) காத்தலுஞ்செய்யும், மன்னவன் - அரசன், (பிறப்பால்மனிதனேயாயினும்), மக்கட்கு - மனிதர்களுக்கு, இறைஎன்று - (செயலினாலே) கடவுளென்று, வைக்கப்படும்-வைக்கப்படுவன்.

**388.** That king, will be esteemed a God among men, who performs his own duties, and protects (his subjects).

---

௯. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(பரி-ரை.) எ-து,—இடிக்குந் துணையாயினர் சொற்களைத் தன்செவி பொறாதாகவும் விளைவுநோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது குடை நிழற்கண்ணே தங்கும் உலகம், எ-று.

செவிகைப்ப வென்றதற்கேற்ப இடிக்குந்துணையென்பது வருவிக்கப்பட்டது. நாவின்புலத்தைச் செவிமேலேற்றிக் கைப்பவென்றார். பண்புடைமை - விசேடவுணர்வினனாதல். அறநீதிகளிற் றவறாமையின், மண்முழுதுந் தானேயாளுமென்பதாம்.

(தெ - ப - ரை.)—சொல் - (கண்டித்துப் புத்திசொல்லுந் துணையாயினவரது) சொற்களை, செவிகைப்ப - (தன்) செவி பொறாதாகவும், பொறுக்கும் - (அவைகளின்பயனைக்குறித்துப்) பொறுக்கும், பண்புஉடை-குணமுடைய, வேந்தன் - அரசனது, கவிகைக்கீழ் - குடைநிழலின்கீழே, உலகு - உலகமானது, தங்கும்—.

**389.** The whole world will dwell under the umbrella of the king, who can bear words that embitter the ear.

---

௧0. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

(பரி - ளா.) எ - து,—வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும், யாவர்மாட்டுந் தலையளி செய்தலும், முறைசெய்தலும், தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய இந்நான்கு செயலையும் உடையவன் வேந்தர்க் கெல்லாம் விளக்காம், எ-று.

தலையளி - முகமலர்ந்தினியகூறல். செவ்விய கோல்போறலின், செங்கோலெனப் பட்டது. குடியோம்பலென எடுத்துக் கூறினமையால், தளர்ச்சி பெற்றும்: அஃதாவது ஆறிலொன்றாய பொருடன்னையும் வறுமைநீங்கிய வழிக்கொள்ளல் வேண்டின் அவவாறுகோடலும், இழத்தல் வேண்டின் இழத்தலுமாம். சாதிமுழுதும் விளக்கலின், விளக்கென்றார். ஒளி—ஆகுபெயர். இவையைந்துபாட்டானும் மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன.

(தெ - ப - ளா.)—கொடை - (வேண்டுவோர்க்கு வேண்டுமவைகளைக்) கொடுத்தலும், அளி - (யாவரிடத்தும்) முகமலர்ந்து இன்சொற்சொல்லுதலும், செங்கோல் - முறைசெய்தலும், குடியோம்பல் - (தளர்ந்த) குடிகளைக்காத்தலும் (ஆகிய), நான்கும்— இந்நான்கு செயல்களையும், உடையான் - உடையவன், வேந்தர்க்கு - அரசர்க்கெல்லாம், ஒளிஆம் - விளக்காம்.

**390.** He is the light of kings who has these four things, beneficence, benevolence, rectitude, and care for his people.

---

## ௪0 - ம். அதி—கல்வி.

அஃதாவது அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவை யாவன அறநூலும், நீதிநூலும், யானை, குதிரை, தேர், படைக்கலமென்றிவற்றி னூல்களும் முதலாயின. அரசன் அறிவுடைய னாயக்கால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதனோக்கி, இஃதரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதி பயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்றார். மேல் தூங்காமை கல்வியெனத் தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃதிறைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

௧. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

(பரி-ளா.) எ - து,—ஒருவன் கற்கப்படுநூல்களைப் பழுதறக் கற்க; அங்ஙனங்கற்றால் அக்கல்விக்குத்தக அவைசொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்க, எ-று.

கற்பவை யென்றதனான், அறம்பொருள்இன்பம் வீடென்னும் உறுதிப் பொருளுணர்த்துவன அன்றிப் பிறபொரு ளுணர்த்துவன சின்னாட்பல் பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகாவென்பது பெற்றும், கசடறக்கற்றலாவது

விபரீத ஐயங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல். நிற்றலாவது இல்வாழ்வுழிக் "கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்—தருமமுந் தக்கார்க்கே செய்" தலினும், துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும், வழுவாமை. சிறப்புடைமகற்காயிற் கற்றல்வேண்டு மென்பதூஉம், அவனாற் கற்கப்படுநூல்களும், அவற்றைக் கற்குமாறும், கற்றதனாற் பயனும் இதனாற் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—கற்பவை - (ஒருவன்), கற்கப்படு நூல்களை, கசடு அற - பழுதற, கற்க - கற்கக்கடவன்; கற்ற பின் - (அப்படி) கற்றபின்பு, அதற்கு - அக்கல்விக்கு, தக - தகுதியாக, நிற்க - (அவைகளால் சொல்லப்பட்ட வழியில்) நிற்கக்கடவன்.

**391.** Let a man learn thoroughly whatever he my learn; and let his conduct be worthy of his learning.

---

௨. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—அறியாதார் எண்ணென்று சொல்லுவனவும் மற்றையெழுத்தென்று சொல்லுவனவும் ஆகிய கலைகள் இரண்டனையும் அறிந்தார் சிறப்புடை உயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர், எ-று.

எண்ணென்பது கணிதம்: அது கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும்; அவை ஏரம்பமுதலிய நூல்களுட்காண்க. எழுத்தெனவே, அதனோடொற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ்விருதிறமும், அறமுதற்பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின், கண்ணெனப்பட்டன. அவை கருவியாதல் "ஆதிமுதலொழிய வல்லா தனவெண்ணி, னீதிவழுவா நிலைமையவான்—மாதே, யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின், றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு." "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடு பெறும்." இவற்றானறிக. என்பவென்பவற்றுள், முன்னைய இரண்டும் அஃறிணைப் பன்மைப் பெயர்; பின்னது உயர்திணைப் பன்மை வினை. அறியாதார் அறிந்தாரென்பன வருவிக்கப்பட்டன. சிறப்புடையுயிரென்றது மக்களுயிருள்ளும் உணர்வு மிகுதியுடையதனை. இதனாற் கற்கப்படுநூல்கட்குக் கருவியாவனவும் அவற்றது இன்றியமையாமையுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—எண்என்ப - (அறியாதவராலே) எண்ணென்று சொல்லப்படுவனவும், ஏனை எழுத்து என்ப-மற்றையெழுத்தென்று சொல்லப்படுவனவும் ஆகிய, இவ்விரண்டும் - இக்கலைகளிரண்டையும், வாழும் உயிர்க்கு-வாழ்தற்குரிய மனிதர்க்கு, கண்-கண்களாகும், என்ப-என்றுசொல்லுவர், (அறிந்தோர்).

**392.** Letters and numbers are the two eyes of man.

---

௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(பரி-ரை.) எ - து,—கண்ணுடையரென்று உயர்த்துச் சொல்லப்படு வார் கற்றவரே; மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டுபுண்ணு டையர், [கண்ணிலர்] எ-று.

தேயம் இடையிட்டவற்றையுங் காலம் இடையிட்டவற்றையுங் காணும் ஞானக்கண்ணுடைமையின் கற்றாரைக் கண்ணுடையரென்றும், அஃதின்றி நோய் முதலியவற்றான் துன்பஞ்செய்யும் ஊனக்கண்ணே உடைமையிற் கல்லாதவரைப் புண்ணுடைய ரென்றுங் கூறினர். மேற்கண்ணன்மை யுணரநின்ற ஊனக்கண்ணின் மெய்ம்மை கூறியவாற்றான், பொருணூல் களையுங் கருவிநூல்களையுங் கற்றாரது உயர்வும் கல்லாதாரது இழிவும் இத னாற் றொகுத்துக் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—கற்றோர் - கற்றவர், கண் உடையர்-கண் களையுடையவர், என்பவர் - என்று உயர்த்திச் சொல்லப்படுவேர்; கல்லாதவர் - கற்காதவர், முகத்து - முகத்தினிடத்து, இரண்டு புண்ணுடையர்-இரண்டுபுண்களையுடையவராவர், [கண்ணிலார்.]

**393.** The learned are said to have eyes, but the unlearned have (merely) two sores in their face.

---

௪. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(பரி - ரை.) எ-து,—யாவரையும் அவர் உவக்குமாறு தலைப்பெய்து இனி இவரை யாம் எங்ஙனங் கூடுதுமென நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்து கற்றறிந்தாரது தொழில், எ-று.

தாம் நல்வழியொழுகல் பிறர்க்குறுதி கூறலென்பன இரண்டுந் தொ ழிலென ஒன்றா யடங்குதலின், அத்தன்மைத்தென்றார். அத்தன்மை - அப் பயனைத்தருந்தன்மை. நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு மதுரமும் உறுதியுமாய கூற்றுகள் நிகழ் வெதிர்வுகளின் இன்பம் பயத்தலானும், கற்றார்மாட்டு எல்லாரும் அன்புடையராவ ரென்பதாம். இதனாற் கற்றா ருயர்வு வகுத்துக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—புலவர் - கற்றறிந்தவரது, தொழில் - செ யல், உவப்ப - (யாவரும்) மகிழும்படி, தலைக்கூடி - (அவரைச்) சேர்ந்து, உள்ள - (இனி இவரை நாம் எப்போது காண்போமெ ன்று) நினைக்கும்படி, பிரிதல் - நீங்குதலாகிய, அனைத்து - அத்த ன்மையை யுடையதாம்.

**394.** It is the part of the learned to give joy to those whom they meet, and on leaving, to make them think (Oh! when shall we meet them again).

---

௫. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(பரி - ரை.) எ - து,—பிற்றைநிலைமுனியாது கற்றல் நன்றாதலான், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறுபோலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்றுநின்றுங் கற்றார் தலையாயினார்; அந்நிலைக்கு நாணிக் கல்லாதவர் எஞ்ஞான்றும் இழிந்தாரேயாவர், எ-று.

உடையார் இல்லாரென்பன உலகவழக்கு. ஏக்கறுதல் - ஆசையாற் றாழ்தல். கடையரென்றதனான் அதன் மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது. பொய்யாயமானம் நோக்கி மெய்யாய கல்வியிழந்தார் பின்னொரு ஞான்றும் அறிவுடையராகாமையின், கடையரேயென்றார். இதனாற் கற்றாரது உயர்வுங் கல்லாதாரது இழிவுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—உடையார்முன் - செல்வர்முன்னே, இல்லார்போல் - வறியவர்போல், ஏக்கற்றும் - (தம்மாசிரியர்முன்) ஏக்கற்றுநின்றும், கற்றார் - கற்றவர்கள், (உயர்ந்தவராவார்); கல்லாதவர் - (அந்நிலைக்குநாணிக்) கற்காதவர், கடையரே - (எப்போதும்) இழிந்தவரே யாவர்.

**395.** The unlearned are inferior to the learned, before whom they stand begging, as the destitute before the wealthy.

---

சு. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

(பரி - ரை.) எ - து,—மணலின்கட்கேணி தோண்டிய அளவிற்றாக ஊறும்; அதுபோல மக்கட் கறிவு கற்ற அளவிற்றாக ஊறும், எ-று.

ஈண்டுக் கேணியென்றது அதன்கண் நீரை. அளவிற்றாகவென்றது அதனளவுஞ்செல்ல வென்றவாறு. சிறிதுகற்றதுணையான் அமையாது மேன்மேற் கற்றல்வேண்டு மென்பதாம். இஃது ஊழ் மாறுகொள்ளா வழியாகலின், மேலுண்மையறிவே மிகுமென்றதனோடு மலையாமையறிக.

(தெ-ப-ரை.)—மணல் - மணலினிடத்தே, கேணி - கேணியானது, தொட்ட அனைத்து-தோண்டிய அளவினதாக, ஊறும்-சுரக்கும்; (அதுபோல்), அறிவு - (மனிதருக்கு) அறிவானது, கற்ற அனைத்து - கற்ற அளவினதாக, ஊறும் - சுரக்கும்.

**396.** Water will flow from a well in the sand in proportion to the depth to which it is dug, and knowledge will flow from a man in proportion to his learning.

---

எ. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(பரி - ரை.) எ - து,—கற்றவனுக்குத் தன்னாடுந் தன்னூருமேயன்றி யாதானுமொருநாடும் நாடாம், யாதானுமோரூரும் ஊராம்; இங்ஙனமாயின் ஒருவன் தானிறக்குமளவுங் கல்லாது கழிகின்றது என்கருதி,எ-று.

உயிரோடுசேறலிற் சாந்துணையுமென்றார். பிறர்நாடுகளும் ஊர்களுந் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற் கேது

வாகலின் கல்விபோலச் சிறந்தது பிறிதில்லை, அதனையே எப்பொழுதுஞ் செய்கவென்பதாம்.

(தெ-ப-ரை.)—யாது ஆனும் - (கற்றவனுக்குத் தன்னுடும் ஊருமேயல்லாமல்) யாதாயினுமொருநாடும், நாடு ஆம் - தன்னுடாம், (யாதுஆனும்) - யாதாயினு மோரூரும், ஊர் ஆம் - தன்னூராம்; (அப்படியிருக்க ஒருவன்), சாந்துணையும் - இறக்குமளவும், கல்லாத ஆறு - கல்லாமற்கழிகின்றது, என் - யாது?

**397.** How is it that any one can remain without learning, even to his death, when (to the learned man) every country is his own (country) and every town his own (town)?

---

அ. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குத் தானொரு பிறப்பின்கண்கற்ற கல்வி எழுபிறப்பினுஞ் சென்று உதவுதலையுடைத்து, எ-று.

வினைகள்போல உயிரின்கட்கிடந்து அது புக்குழிப் புகுமாகலின், எழுமையு மேமாப் புடைத்தென்றார். எழுமை மேலே கூறப்பட்டது. உதவுதல் - நன்னெறிக்கண் உய்த்தல்.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு-ஒருவனுக்கு, தான்—, ஒருமைக்கண் - ஒருபிறப்பில், கற்றகல்வி - கற்றகல்வியானது, எழுமையும் - ஏழுபிறப்புகளிலும், ஏமாப்பு - போய் உதவுதலை, உடைத்து - உடையதாகும்.

**398.** The learning, which a man has acquired in one birth, will yield him pleasure during seven births.

---

கூ. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(பரி-ரை.) எ-து,—தாமின்புறுதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகமின்புறுதலால் அச்சிறப்பு நோக்கிக் கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர், எ-று.

தாம் இன்புறுதலாவது நிகழ்வின்கட் சொற்பொருள்களின் சுவை நுகர்வானும், புகழ் பொருள் பூசை பெறுதலானும், எதிர்வின்கண் அறம் வீடு பயத்தலானும், அதனான் இடையறாத இன்பமெய்துதல். உலகின்புறுதலாவது இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதன வெல்லாம் அறியப்பெற்றேமென்றும், யாண்டு பலவாக நரையிலமாயினேமென்றும் உவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தலென்றிவற்றாற் றுன்புறுதலும் பலரையும் பகையாக்கலும் உடைத்தென அறிந்து அதனைக் காமுறாமையிற் கற்றறிந்தாரென்றும், கரும்பு அயிறற்குக் கூலிபோலத் தாமின்புறுதற்கு உலகின்புறுதல் பிறவாற்றான் இன்மையின் அதனையே காமுறுவரென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—தாம் - தாங்கள், இன்புஉறுவது - இன்பமடைதற்கு ஏதுவாகிய கல்விக்கு, உலகு - உலகமானது, இன்பு

உற - இன்பமடைய, கண்டு - (அச்சிறப்பு) நோக்கி, கற்றுஅறிந்தார் - (நூல்களைக்) கற்றறிந்தவர்கள், காமுறுவர் - (பின்னும் அதனையே) விரும்புவார்.

399. The learned will long (for more learning), when they see that while it gives pleasure to themselves, the world also derives pleasure from it.

---

கo. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வமாவது கல்வி; அஃதொழிந்த மணியும் பொன்னுமுதலாயின செல்வமல்ல, எ-று.

அழிவின்மையாவது தாயத்தார், கள்வர், வலியர், அரசரென் றிவராற்கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை-தக்கார்கண்ணே நிற்றல். மணி பொன் முதலியவற்றிற்கு இவ்விரண்டும் இன்மையின், அவற்றை மாடல்லவென்றார். இவையைந்து பாட்டானுங் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, கேடு இல் - அழிவில்லாத, விழுச்செல்வம் - சிறப்பாகிய செல்வமாவது, கல்வி - வித்தையாகும், மற்றை யவை - அது நீங்கலாகிய மணியும் பொன்னும் முதலான செல்வம், மாடுஅல்ல - செல்வமல்ல.

400. Learning is the true imperishable riches; all other things are not riches.

---

## சக - ம். அதி—கல்லாமை.

அஃதாவது கற்றலைச்செய்யாமை; என்றது அதனின் ஆய இழிபினை. கல்விச்சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறியதுணையான் முற்றுப்பெறாமை நோக்கி, எதிர்மறை முகத்தானுங் கூறுகின்றதாகலின், இது கல்வியின் பின் வைக்கப்பட்டது.

க. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(பரி-ரை.) எ - து,—அரங்கினை யிழையாது வட்டாடினாற் போலும் தான் நிரம்புதற் கேதுவாகிய நூல்களைக்கல்லாது ஒருவன் அவையின்கண் ஒன்றனைச் சொல்லுதல், எ-று.

அரங்கு - வகுத்ததானம். வட்டாடல் - உண்டையுருட்டல். இவை "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்—கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டாடும்" என்பதனானறிக. நிரம்புதல் அறியவேண்டுவன வெல்லாமறிதல். கோட்டி யென்பது ஈண்டாகுபெயர். "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங் கோட்டி" என்புழிப்போல. சொல்லும் பொருளும் தெறிப்படாவென்பதாம்.

(தெ - ப - ரை.)—நிரம்பிய - (தான்) நிரம்புதற்கு ஏதுவாகிய, நூல் - நூல்களை, இன்றி - இல்லாமல், கோட்டி கொளல் - (ஒருவன்) சபையின்கண் ஒன்றைச்சொல்லுதல், அரங்கு - வகுக்குமிடம், இன்றி - இல்லாமல், வட்டுஆடியற்று - உண்டையுருட்டியதுபோலும்.

**401.** To speak in an assembly (of the learned) without fullness of knowledge, is like playing at chess (on a board) without squares.

---

உ. கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

(பரி - ரை.) எ-து,—கல்வியில்லாதா னொருவன் அவையின்கண் ஒன்றுசொல்லுதலை அவாவுதல் இயல்பாகவே முலையிரண்டும் இல்லாதா ளொருத்தி பெண்மையை அவாவினாற் போலும், எ-று.

இனைத்தென அறிந்த சினையாகலின், தொகையொடு முற்றும்மை கொடுத்தார். சிறிதும் இல்லாதா ளென்பதாம். அவாவியவழிக் கடைபோகாது, போகினும் நகை விளைக்கு மென்பதாயிற்று.

(தெ-ப-ரை.)—கல்லாதான் - கல்வியில்லாதவ னொருவன், சொல் - (சபையினிடத்து ஒன்று) சொல்லுதலை, காமுறுதல்- வேண்டுதல், முலைஇரண்டும் - இரண்டுமுலைகளும், இல்லாதாள்- இல்லாதவளொருத்தி, பெண்-பெண்மையை, காமுற்றதுஅற்று- வேண்டுவதுபோலும்.

**402.** The desire of the unlearned to speak (in an assembly), is like a woman without breasts desiring (the enjoyment of) woman-hood.

---

௩. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(பரி - ரை.) எ - து,—கல்லாதாரும் மிகநல்லராவர் தாமே தம்மையறிந்து கற்றார் அவையின்கண் ஒன்றனையுஞ் சொல்லாதிருத்தல் கூடுமாயின், எ-று.

உம்மை இழிவுசிறப்பும்மை. தம்மைத்தாம் அறியாமையின் அது கூடாதென்பார் பெறினென்றும், கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத்தாமையானும், பின் கல்வியை விரும்புவராகலானும் நனிநல்லரென்றுங் கூறினர். இவை மூன்றுபாட்டானுங் கல்லாதார் அவைக்கட் சொல்லுதற் குரியரன்மை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கற்றார்முன் - (தாமே தம்மை அறிந்து) கற்றோர் சபையின்கண், சொல்லாதிருக்க - (யாதொன்றையும்) பேசாதிருக்க, பெறின் - பெறுவராயின், கல்லாதவரும் - கற்றிலாதவரும், நனிநல்லர் - மிகவும் நல்லவராவார்.

**403.** The unlearned also are very excellent men, if they know how to keep silence before the learned.

---

௪. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(பரி-மை.) எ-து,—கல்லாதவனது ஒண்மை ஒரோவழி மிக நன்றா யிருப்பினும் அறிவுடையார் அதனை ஒண்மையாகக் கொள்ளார், எ-று.

ஒண்மை - அறிவுடைமை. அது நன்றாகாது; ஆயிற்றாயினும் நீர்மே லெழுத்துப் போல்வதோர் விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடை யார் அதனை மதியாரென்பதாம்.

(தெ-ப-மை.)—கல்லாதான் - கற்காதவனது, ஒட்பம் - அறி வுடைமையானது, கழியநன்று ஆயினும் - (ஒரோவிடத்தே) மிக நன்றாயிருப்பினும், அறிவுடையார் - அறிவுடையவர், கொள் ளார் - (அதனை அறிவுடைமையாகக்) கொள்ளார்.

**404.** Although the natural knowledge of an unlearned man may be very good, the wise will not accept for true knowledge.

---

௫. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

(பரி-மை.) எ-து,—நூல்களைக் கல்லாதவொருவன் யான் அறிவுடை யேனெனத் தன்னை மதிக்கும் மதிப்பு அவற்றைக் கற்றவன் கண்டு உரை யாடக் கெடும், எ-று.

கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. யாதானுமோர் வார்த்தை சொல்லுந்துணையுமே நிற்பது, சொல்லியவழி வழுப்படுதலின், அழிந்து விடுமென்பதாம். இவை யிரண்டு பாட்டானுங் கல்லாதாரது இயற்கையறி வின் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - மை.)—கல்லாஒருவன் - (நூல்களைக்) கற்காத வொருவன், தகைமை-(அறிவுடையேனென்று தன்னைமதிக்கும்) மதிப்பானது, தலைப்பெய்து - (அவைகளைக்கற்றவன்) கண்டு, சொ ல்லாட - பேச, சோர்வுபடும் - கெடும்.

**405.** The self-conceit of an unlearned man will fade away, as soon as he speaks in an assembly (of the learned).

---

௬. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(பரி-மை.) எ-து,—கல்லாதவர் காணப்படுதலான் இலரல்லர் உள ரென்று சிலர்சொல்லு மளவினராதல் அன்றித் தமக்கும் பிறர்க்கும் பயன் படாமையால் விளையாத களர்நிலத்தோ டொப்பர், எ-று.

களர் தானும் பேணற்பா டழிந்து உயிர்கட்கும் உணவுமுதலிய உத வாததுபோலத் தாமும் நன்கு மதிக்கற்பாடழிந்து பிறர்க்கும் அறிவு முத லிய உதவா ரென்பதாம். இதனாற் கல்லாதாரது பயன்படாமை கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—கல்லாதவர் - கற்றிலாதவர், (காணப்பட்டுக் கொண்டிருக்கையால்), உளர்என்னும் - உள்ளவரென்று (சிலராலே) சொல்லப்படும், மாத்திரையர் அல்லால் - அளவினராதல் அல்லாமல், (தமக்கும் பிறர்க்கும்பயன்படாமையால்), பயவாகளர் அனையர் - விளையாத களர்நிலத்தோடு ஒப்பாவார்.

**406.** The unlearned are like worthless barren land: all that can be said of them is, that they exist.

---

எ. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.

(பரி-ரை.) எ-து,—நுண்ணிதாய் மாட்சிமைப் பட்டுப் பலநூல்களினுஞ்சென்ற அறி விலாதவனுடைய எழுச்சியும் அழகும் சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும் போலும், எ-று.

அறிவிற்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிற்காண்டலும் மறவாமையும் முதலாயின. பாவை ஆகுபெயர். "உருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலுமரிது" ஆகலான் எழினலங்களும் ஓர்பயனேயெனினும், நூலறி வில்வழிச் சிறப்பில வென்பதாம். இதனான் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நுண் - நுட்பமாகி, மாண் - மாட்சிமைப் பட்டு, நுழை - (பலநூல்களினும்) சென்ற, புலம் - அறிவை, இல்லான் - இல்லாதவனது, எழில் - எழுச்சியும், நலம் - அழகும், மண் - சுண்ணச்சாந்தினாலே, மாண் - மாட்சிமைப்பட, புனை - அலங்கரிக்கப்பட்ட, பாவைஅற்று - பாவையினது எழுச்சியும் அழகும்போலும்.

**407.** The beauty and goodness of one who is destitute of knowledge gained by the study of great and exquisite works, is like (the beauty and goodness) of a painted earthen doll.

---

அ. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

(பரி-ரை.) எ-து,—கற்றார்மாட்டுநின்ற வறுமையினும் இன்னாது கல்லாதார்மாட்டு நின்ற செல்வம், எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தத்தநிலையின் அன்றி மாறி நிற்றலான் தாமிடுக்கட்படுதலும் உலகிற்குத் துன்பஞ் செய்தலும் இரண்டற்கும் ஒக்குமாயினும், திருக் கல்லாரைக்கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலான், வறுமையினுந் திரு இன்னாதென்றார். இதனால் அவர் திருவின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கல்லார்கண் - கல்லாதவரிடத்து, பட்ட - உண்டாகிய, திரு - செல்வமானது, நல்லார்கண் - கற்றவரிடத்து,

பட்ட - உண்டாகிய, வறுமையின் - தரித்திரத்தினும், இன்றுதே - துன்பஞ் செய்வதேயாகும்.

**408.** Wealth, gained by the unlearned, will give more sorrow than the poverty which may come upon the learned.

---

கூ. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்ரு ரனைத்திலர் பாடு.

(பரி-ரை.) எ-து,—கல்லாதார் உயர்ந்த சாதிக்கட் பிறந்தார் ஆயினும் தாழ்ந்தசாதிக்கட் பிறந்தவைத்துங் கற்ருரது பெருமை அளவிற்ருய பெருமை யிலர், எ-று.

உடலோடொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லுங் கல்வியுயர்ச்சி சிறப்புடைத் தென்பதாம். இதனுல் அவர் சாதியுயர்ச்சியாற் பயனின்மை கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—கல்லாதார் - கற்றிலாதவர், மேற்பிறந்தார் ஆயினும் - உயர்ந்தசாதியிற் பிறந்தா ராயினும், கீழ்ப்பிறந்தும்- தாழ்ந்தசாதியிற் பிறந்திருந்தும், கற்ருர்அனைத்து - கற்றவரது பெருமையளவினதாகிய, பாடு - பெருமையை, இலர் - உடையவ ராகார்.

**409.** The unlearned, though born in a high caste, are not equal in dignity to the learned, though they may have been born in a low caste.

---

சo. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்ருரோ டேனை யவர்.

(பரி-ரை.) எ-து,—விலங்கோடு நோக்க மக்கள் எத்துணை நன்மையுடையர் அத்துணைத்தீமையுடையர் விளங்கியநூலைக் கற்ருரோடு நோக்கக் கல்லாதவர், எ-று.

இலங்கு நூலென்பது சாதியொருமைப்பெயர். விளங்குதல்-மேம்படுதல். விலங்கின் மக்கட் கேற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்ருர் கண்ணேயாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்தபிறப்பினரல்லரென்பதாம். மயக்கநிரனிறை. இதனுல் அவர் மக்கட்பிறப்பாற் பயனெய்தாமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இலங்குநூல் - விளங்கியநூலை, கற்ருரோடு- கற்றவருடன், ஏனையவர் - கல்லாதவர், விலங்கொடு - மிருகங்களுடன், மக்கள் அனையர் - மனிதரை ஒப்பாவர்.

**410.** As beasts by the side of men, so are other men by the side of those who are learned in celebrated works.

---

## சஉ-ம். அதி—கேள்வி.

அஃதாவது கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல். கற்றவழி அதனின் ஆய அறிவை வலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனை உண்டாக்குதலானும், இது கல்வி கல்லாமைகளின்பின் வைக்கப்பட்டது.

க. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

(பரி - ரை.) எ-து,—ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவி யான் வருஞ்செல்வம். அச்செல்வம் பிறசெல்வங்க ளெல்லாவற்றினுந் தலை யாகலான், எ-று.

செவியான் வருஞ்செல்வம் - கேள்வியான் எல்லாப்பொருளையு மறி தல். பிறசெல்வங்கள் பொருளான் வருவன ; அவை நிலையா ஆகலானும், துன்பவிளைவின ஆகலானும், இது தலையாயிற்று. அவற்றை ஒழித்து இத னையே செய்கவென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—செல்வத்துள் செல்வம் - (ஒருவனுக்குச்) சிறப்புடைய செல்வமாவது, செவிச் செல்வம்-செவியால்வருஞ் செல்வமாம், அச்செல்வம் - அந்தச் செவிச்செல்வமானது, செ ல்வத்துள்எல்லாம் – பிறசெல்வங்களெல்லாவற்றினும், தலை-தலை மையாம் (ஆதலால்).

**411.** Wealth (gained) by the ear is wealth of wealth; that wealth is the chief of all wealth.

---

உ. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(பரி-ரை.) எ-து,—செவிக்குணவாகிய கேள்வி யில்லாத பொழுது வயிற்றுக்குஞ் சிறிதுணவு இடப்படும், எ-று.

சுவைமிகுதியும் பிற்பயத்தலும் உடைய கேள்வியுள்ளபொழுது வெ றுக்கப்படுதலான் இல்லாத போழ்தென்றும், பெரிதாயவழித் தேடற்றுன் பமேயன்றி நோயுங் காமமும் பெருகுதலாற் சிறிதென்றும், அதுதானும் பின்னிருந்து கேட்டற் பொருட்டாகலான் ஈயப்படுமென்றுங் கூறினர். ஈதல் வயிற்றது இழிவுதோன்றநின்றது. இவையிரண்டு பாட்டானும் கேள் வியது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செவிக்கு - காதுக்கு, உணவு - உணவாகிய கேள்வியானது, இல்லாதபோழ்து - இல்லாதகாலத்து, வயிற்றுக் கும் - வயிற்றினுக்கும், சிறிது - சிறிதுணவு, ஈயப்படும் - இடப் படும்.

**412.** When there is no food for the ear, give a little also to the stomach.

---

ங. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து.

(பரி - ரை.) எ-து,—செவியுணவாகிய கேள்வியினையுடையார் நிலத் தின்கண்ணராயினும், அவியுணவினையுடைய தேவரோடொப்பர், எ-று.

செவியுணவு - செவியானுண்ணுமுணவு. அவ்வழிக்கண்வந்த இன்சா ரியையது னகரம் வலிந்து நின்றது. அவியாகியவுணவு தேவர்க்கு வேண்

வித்தீயிற்கொடுப்பன. அறிவான் நிறைந்தமையான் ஆன்றோரொன்றும், துன் பமறியாமையாற் றேவரோ டொப்பரொன்றுங் கூறினர். இதனால் அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செவிஉணவின்-செவியுணவாகிய, கேள்வி-கேள்வியை, உடையார் - உடையவர், நிலத்து - பூமியிலிருக்கி னும், அவிஉணவின் - அவியாகிய வுணவினையுடைய, ஆன்றோரொடு - தேவரோடு, ஒப்பர் - ஒப்பாவார்.

**413.** Those who in this world enjoy instruction which is the food of the ear, are equal to the Gods, who enjoy the food of the sacrifices.

---

ச. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

(பரி-ரை.) எ-து,—உறுதி நூல்களைத்தான் கற்றிலனாயினும், அவற் றின்பொருள்களைக் கற்றறிந்தார் சொல்லக்கேட்க. அக்கேள்வி ஒருவனுக் குத் தளர்ச்சிவந்துழிப் பற்றுக் கோடாந் துணையாகலான், எ-று.

உம்மை கற்கவேண்டுமென்பதுபட நின்றது. தளர்ச்சி-வறுமையான் ஆதல் அறிவின்மையான் ஆதல் இடுக்கட்பட்டுழி மனந்தளர்தல். அதனைக் கேள்வியின் ஆய அறிவுநீக்குமாகலின், ஊற்றாந்துணையென்றார். ஊன்றெ ன்று மாகுபெயரின் னகரம் திரிந்து நின்றது.

(தெ - ப - ரை.)—கற்றிலன் ஆயினும் - (உறுதிநூல்களைத் தான்) கல்லானாயினும், கேட்க - (அவைகளின் பொருள்களைக் கற்றார்சொல்லக்)கேட்கக்கடவன்; அஃது - அக்கேள்வியானது, ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒற்கத்தின் - தளர்ச்சிவந்தவிடத்து, ஊன்றுஆம்துணை - பற்றுக்கோடாந்துணையாம், (ஆதலால்).

**414.** Although a man be without learning, let him listen (to the teaching of the learned); that will be to him a staff in adversity.

---

ரு. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்

(பரி - ரை.) எ - து,—வழுக்குதலையுடைய சேற்றுநிலத்து இயங்கு வார்க்கு ஊன்றுகோல்போலுதவும் காவற்சாகாடு கைப்பார்க்கு ஒழுக்க முடையார் வாயிற்சொற்கள், எ-று.

அவாய்நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப் பட்டது. ஊற்றுகிய கோல்போ லுதவுதல்-தளர்ந்துழி அதனை நீக்குதல். கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின், அவர்வாய்ச் சொற் கேட்கப்படாதென்பது தோன்ற ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் லென்றார். வாயென்பது தீச்சொ லறியாமையாகிய சிறப்புணர நின்றது. அவற்றைக் கேட்கவென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—ஒழுக்கம் உடையார் - (அரசனுக்கு) நன்ன டைக்கையுடையவரது, வாய்ச்சொல் - வாயிற்பிறக்குஞ்சொல்,

இழுக்கல் உடையுழி - வழுக்குதலையுடைய சேற்றுநிலத்தில், ஊன்றுகோல் அற்றே - ஊன்றுகோலைபோ லுதவும்.

**415.** The words of the good are like a staff in a slippery place.

---

சு. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் சிறிதாயினும் உறுதிப் பொருள்களைக் கேட்க, அக்கேள்வி அத்துணையாயினும் நிறைந்த பெருமையைத் தரும் ஆகலான், எ-று.

எனைத்து அனைத்து என்பன கேட்கும் பொருண்மேலுங் காலத்தின் மேலும் நின்றன. அக்கேள்வி மழைத்துளிபோல வந்தீண்டி எல்லா அறிவு களையும் உளவாக்கலின், சிறிதென்று இகழற்கவென்பதாம்.

(தெ-ப-ரை.)—நல்லவை - (ஒருவன்) உறுதிப் பொருள் களில், எனைத்துஆனும் - எவ்வளவு சிறிதாயினும், கேட்க-கேட் கக்கடவன்; (அக்கேள்வியானது) அனைத்துஆனும் - அவ்வளவி னாலும், ஆன்றபெருமை - நிறைந்தபெருமையை, தரும்-கொடுக் கும் (ஆதலால்).

**416.** Let a man listen, never so little, to good (instruction), even that will bring him great dignity.

---

எ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

(பரி-ரை.) எ-து,—பிறழ வுணர்ந்தவழியும், தமக்குப் பேதைமை பயக்குஞ் சொற்களைச் சொல்லார். பொருள்களைத் தாமும் நுண்ணிதாக ஆராய்ந்தறிந்து அதன்மேலும் ஈண்டிய கேள்வியினையுடையார், எ-று.

பிழைப்பவென்பது திரிந்துநின்றது. பேதைமை—ஆகுபெயர். ஈண் டுதல் - பலவாற்றான் வந்து நிறைதல். பொருள்களின் மெய்ம்மையைத் தாமும் அறிந்து அறிந்தாரோடு ஒப்பிப்பதுஞ் செய்தார் தாமதகுணத்தான் மயங்கினராயினும், அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். இவைநான்கு பாட்டானுங் கேட்டார்க்கு வரு நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இழைத்துஉணர்ந்து - (பொருள்களை) நுட் பமாக ஆராய்ந்தறிந்து, ஈண்டிய - (அதன்மேலும்) நிறைந்த, கேள்வியவர் - கேள்வியையுடையவர், பிழைத்து உணர்ந்தும்- பிழைபட அறிந்தவிடத்தும், பேதைமை - (தமக்கு) அறியாமை யைத்தருஞ் சொற்களை, சொல்லார் - சொல்லமாட்டார்.

**417.** Not even when they have imperfectly understood (a matter), will those men speak foolishly, who have profoundly studied, and diligently listened (to instruction).

---

அ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

(பரி-ரை.) எ-து,—தம்புலமாய ஓசைமாத்திரத்தைக் கேட்குமாயி னுஞ் செவிடாந் தன்மையவேயாம், கேள்வியால் தொளைக்கப்படாத செவி கள், எ-று.

ஏகாரம் தேற்றத்தின்கண்வந்தது. ஓசைமாத்திரத்தான் உறுதியெய் தாமையின் கேளாத் தகையவென்றும், மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலிற் கேள்வியைக் கருவியாக்கியுங் கூறினர். பழை யதொளை தொளை அன்றென்பதாம்.

(தெ-ப-ரை.)—கேள்வியால் - கேள்விகளால், தோட்கப் படாத - தொளைக்கப்படாத, செவி - காதுகள், கேட்பினும் - (தமக்குரிய ஓசையைக்) கேட்குமாயினும், கேளாத்தகையவே - செவிடாந் தன்மையினவேயாம்.

418. The ear which has not been bored by instruction, although it hears, is deaf.

---

கூ. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

(பரி-ரை.) எ-து,—நுண்ணிதாகிய கேள்வியுடையர் அல்லாதார் பணிந்த மொழியினையுடையராதல் கூடாது, எ-று.

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமே லேற்றப்பட் டது. வாய் ஆகுபெயர். பணிந்தமொழி பணிவைப் புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர்வின்மையாற் றம்மைவியந்து கூறுவரென்பதாம். அல் லாரென்பதூஉம் பாடம்.

(தெ-ப-ரை.)—நுணங்கிய - நுட்பமாகிய, கேள்வியர்அல் லார் - கேள்வியை யுடையவரல்லாதவர், வணங்கிய - வணக்கத் தைக்காட்டுகிற, வாயினர்ஆதல் - சொல்லையுடையவராகுதல், அரிது - கூடாது.

419. It is a rare thing to find modesty,—a reverend mouth—with those who have not received choice instruction.

---

சο. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(பரி-ரை.) எ-து,—செவியான் நுகரப் படுஞ்சுவைகளை உணராத வாயுணர்வினையுடைய மாந்தர் சாவினும் வாழினும் உலகிற்கு வருவ தென்னை, எ-று.

செவியான் நுகரப்படுஞ் சுவைகளாவன சொற்சுவையும், பொருட்சு வையும்: அவற்றுள் சொற்சுவை குணம், அலங்காரமென இருவகைத்து. பொருட்சுவை காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு வியப்பு, சாந்தமென ஒன்பதுவகைத்து. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற்

பெருகும். வாயுணர்வென்பது இடைப்பதங்கள் தொக்குநின்ற மூன்றும் வேற்றுமைத்தொகை: அது வாயான்றுகரப்படுஞ் சுவைகளையுணரும் உணர் வெனவிரியும். அவை கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பென ஆறும். செத்தாலிழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதும் இன் மையின், இரண்டும் ஒக்குமென்பதாம். வாயுணவினென்று பாடமோது வாருமுளர். இவை மூன்றுபாட்டானுங் கேளாதவழிப் படுங்குற்றங் கூறப் பட்டது.

(தெ - ப - ை.)—செவியின்சுவை - காதுகளால் அறியப் படுஞ் சுவைகளை, உணரா - அறியாத, வாய்உணர்வின் - வாயால் உண்ணப்பட்டபொருளின் சுவையை அறியும் அறிவினையுடைய, மாக்கள் - மனிதர், அவியினும் - இறந்தாலும், வாழினும்-வாழ்ந் தாலும், என் - (உலகத்துக்குவருவது) யாது.

**420.** What does it matter whether those men live or die, who can judge of tastes by the mouth, and not by the ear?

---

## ௪௨ - ம். அதி—அறிவுடைமை.

அஃதாவது கல்வி கேள்விகளின் ஆய அறிவோடு உண்மை அறிவுடைய னுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
உள்ளழிக்க லாகா அரண்.

(பரி-ை.) எ-து,—அரசர்க்கு அறிவென்பது இறுதிவாராமற் காக் குங் கருவியாம்; அதுவேயும் அன்றிப் பகைவர்க்கு அழிக்கலாகாத உள்ளர ணுமாம், எ-று.

காத்தல் - முன்னறிந்து பரிகரித்தல். உள்ளரண் - உள்ளாய அரண்; உள்புக்கழிக்கலாகா அரணென்றுமாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—அறிவு - (அரசர்க்கு) அறிவென்பது, அற்றம்- முடிவுவாராமல், காக்கும் - பாதுகாக்கும், கருவி - படையாம்; (அதுவல்லாமல்) செறுவார்க்கும்-பகைவர்க்கும், அழிக்கல்ஆகா- அழிக்கக்கூடாத, உள் - உள்ளாகிய, அரண் - காவலிடமுமாம்.

**421.** Wisdom is a weapon to ward off destruction; it is an inner fortress which enemies cannot destroy.

---

உ. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(பரி - ை.) எ - து,—மனத்தை அது சென்ற புலத்தின்கட்செல்ல விடாது அப்புலத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து தீயதனில் நீக்கி நல் லதன்கட் செலுத்துவது அறிவு, எ-று.

வினைக்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றமெனப் புலம் ஐந்தாயினும், ஒருகாலத்து ஒன்றின்கண்

அல்லது செல்லாமையின், இடத்தானென்றார். விடாதென்பது கடைக் குறைந்து நின்றது. குதிரையை நிலமறிந்துசெலுத்தும் வாதுவன்போல வேறுக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவென்றார், அஃது உயிர்க்குணமாகலின்.

(தெ-ப-ரை.)—சென்றஇடத்தால் - (மனத்தை அது) போனவிஷயத்தில், செலவிடாது-போகவிடாமல், (அவ்விஷயங் களி னன்மைதீமைகளை ஆராய்ந்து), தீது-தீயதிலிருந்து, ஒரீஇ- நீக்கி, நன்றின்பால் - நல்லதனிடத்து, உய்ப்பது - போகவிடு வது, அறிவு - அறிவாம்.

**422.** Not to permit the mind to go where it lists, to keep it from evil, and to employ it in good, this is wisdom.

---

௩. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

(பரி-ரை.) எ-து,—யாதொருபொருளை யாவர் யாவர் சொல்லக்கேட் பினும் அப்பொருளின் மெய்யாய பயனைக் காணவல்லது அறிவு, எ-று,

குணங்கள்மூன்றும் மாறி மாறி வருதல் யாவர்க்கும் உண்மையின், உயர்ந்தபொருள் இழிந்தார்வாயினும், இழிந்தபொருள் உயர்ந்தார்வாயி னும், உறுதிப்பொருள் பகைவர்வாயினும், கெடுபொருள் நட்டார்வாயி னும் ஒரோவழிக் கேட்கப்படுதலான், எப்பொருள் யார்யார்வாய்க் கேட் பினுமென்றார். அடுக்குப் பன்மைபற்றி வந்தது. வாயென்பது அவர் அப் பொருளின்கட் பயிலாமை யுணர்த்திநின்றது. மெய்யாதல் - நிலைபெறு தல். சொல்வாரது இயல்பு நோக்காது அப்பொருளின் பயனைநோக்கிக் கொள் ளுதல் ஒழிதல் செய்வதறிவென்பதாம்.

(தெ-ப-ரை.)—எப்பொருள் - யாதொருபொருளை, யார் யார்வாய் - எவரெவர்வாயில், கேட்பினும் - கேட்டாலும், அப் பொருள் - அப்பொருளினது, மெய்ப்பொருள் - மெய்யாகிய பயனை, காண்பது - காணவல்லது, அறிவு - அறிவாம்.

**423.** To discern the truth in every thing, by whomsoever spoken, is wisdom.

---

௪. எண்பொருளவாகச் செலச்சொல்லித் தான் பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

(பரி-ரை.) எ-து,—தான் சொல்லுஞ்சொற்களை அரிய பொருளவா யினும் கேட்பார்க்கு எளிய பொருளவாமாறு மனங்கொளச் சொல்லிப் பிறர்வாய்க்கேட்குஞ் சொற்களின் நுண்ணியபொருள் காணஅரிதாயி னும் அதனைக் காணவல்லது அறிவு, எ-று.

உடையவன்தொழில் அறிவின்மேலேற்றப்பட்டது. சொல்லுவன வழு வின்றி இனிது விளங்கச் சொல்லுகவென்பார் சொன்மேல் வைத்தும், கேட்பன வழுவினும் இனிது விளங்காவாயினும் பயனைக் கொண்டொழி கவென்பார் பொருண்மேல்வைத்துங் கூறினார்.

(தெ-ப-னா.)—எண்பொருளஆக-(கேட்பவர்க்கு) எளிய பொருளினவாக, செல-மனங்கொள்ள, சொல்லி—, தான் பிறர்வாய்-தான் பிறர்வாயில் (கேட்கப்படுஞ் சொற்களில்), நுண்பொருள்-(காணுதற்கரிய) நுட்பமாகிய பொருளேயும், காண்பது-காணவல்லது, அறிவு-அறிவாம்.

**424.** To speak so as that the meaning may easily enter the mind of the hearer, and to discern the subtlest thought which may lie hidden in the words of others, this is wisdom.

---

௫. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(பரி-னா.) எ-து,—உலகத்தை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்; அந்நட்பின்கண் முன்மலர்தலும் பின் கூம்புதலுமின்றி ஒருநிலையனவது அறிவாம், எ-று.

தழீஇயது இல்லதுஎன்பன அவ்வத் தொழின்மேனின்றன. உலகமென்பது ஈண்டுயர்ந்தோரை. அவரோடு கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூபோல ஒருநிலையே நட்பாயினன் எல்லா இன்பமும் எய்துமாகலின், அதனே அறிவென்றார். காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன. இதனைச் செல்வத்தின் மலர்தலும் நல்குரவிற் கூம்பலுமில்லதென்று உரைப்பாருமுளர்.

(தெ-ப-னா.)—உலகம்-(ஒருவனுக்கு) உயர்ந்தோரை, தழீஇயது-நட்பாக்குவது, ஒட்பம்-அறிவுடைமையாம்; மலர்தலும்-(முன்னே) விரிதலும், கூம்பலும்-(பின்னே) குவிதலும், இல்லது-(அந்நட்பினிடத்தே) இல்லாதது, அறிவு-அறிவாம்.

**425.** To secure the friendship of the great is true wisdom; it is (also) wisdom to keep (that friendship unchanged, and) not opening and closing (like the lotus-flower).

---

௬. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(பரி-னா.) எ-து,—உலகம் யாதொருவாற்றான் ஒழுகுவதாயிற்று அவ்வுலகத்தோடு மேவித் தானும் அவ்வாற்றானொழுகுவது அரசனுக்கறிவு, எ-று.

உலகத்தையெல்லாம் யான் நியமித்தலான் என்னை நியமிப்பாரில்லையெனக் கருதித் தானினைத்தவாறே ஒழுகிற் பாவமும் பழியுமாம் ஆகலான், அவ்வாறொழுகுதல் அறிவன்றென விலக்கியவாறாயிற்று. இவையைந்துபாட்டானும் அதனது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-னா.)—உலகம்-உலகமானது, எவ்வது-எவ்விதத்தினால், உறைவது-நடப்பதாயிருக்கின்றது, உலகத்தோடு-

அவ்வுலகத்துடன் பொருந்தி, அவ்வது - அவ்விதத்தால், உறைவது - (தானும்) நடப்பது, அறிவு - (அரசனுக்கு) அறிவாம்.

**426.** To live as the world lives, is wisdom.

---

எ. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

(பரி-ரை.) எ-து,—அறிவுடையராவார் வரக்கடவதனை முன்னறிய வல்லார்; அறிவிலராவார் அதனை முன்னறியமாட்டாதார், எ-று.

முன்னறிதல் முன்னேயெண்ணியறிதல். அஃது தறிகல்லாமையாவது வந்தாலறிதல். இனி ஆவதறிவாரென்பதற்குத் தமக்கு நன்மையறிவாரென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—ஆவது - வரக்கடவதை, அறிவார் - (முன்னே) அறியவல்லவர், அறிவுடையார் - அறிவையுடையவராவார்; அஃது - அவ்வரக்கடவதை, அறிகல்லாதவர் - (முன்னே) அறியமாட்டாதவர், அறிவிலார் — அறிவில்லாதவராவார்.

**427.** The wise are these who know beforehand what will happen; those who do not know this are the unwise.

---

அ. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

(பரி - ரை.) எ-து,—அஞ்சப்படுவதனை அஞ்சாமை பேதைமையாம்; அவ்வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார்தொழிலாம், எ-று.

பாவமும் பழியுங் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதிபற்றி அஞ்சுவதென்றார். அஞ்சாமை-எண்ணாது செய்துநிற்றல். அஞ்சுதல் - எண்ணித் தவிர்தல். அது காரியமன்றென்று இகழப்படாதென்பார் அறிவார் தொழிலென்றார். அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டஞ்சவேண்டுமிடங் கூறியவாறு. இவை யிரண்டுபாட்டானும் அதனையுடையாரது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அஞ்சுவது - அஞ்சத்தகுவதற்கு, அஞ்சாமை - அஞ்சாதிருத்தல், பேதைமை - அறிவின்மையாம்; அஞ்சுவது - அஞ்சத்தகுவதற்கு, அஞ்சல் - பயப்படுதல், அறிவார்தொழில் - அறிவுடையார்தொழிலாம்.

**428.** Not to fear what ought to be feared, is folly; it is the work of the wise to fear what should be feared.

---

கூ. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(பரி - ரை.) எ - து,—வரக்கடவ தாகியவதனை முன்னறிந்து காக்க வல்ல அறிவினை யுடையார்க்கு அவர் நடுங்க வருவதொரு துன்பமு மில்லை, எ-று.

நோயென வருகின்றமையின், வாளா எதிரதாவென்றார். இதனாற் காக்கலாங் காலம் உணர்த்தப்பட்டது. காத்தல் அதன்காரணத்தை விலக்குதல். அவர்க்குத் துன்பமின்மை இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எதிரது ஆக - (பின்வரக்கடவதை) முன்னதாக அறிந்து, காக்கும் - காக்கவல்ல, அறிவினார்க்கு - அறிவுடையார்க்கு, அதிர - (அவர்) நடுங்கும்படி, வருவது ஓர்நோய்-வருவதாகிய ஒருதுன்பமும், இல்லை - இலது.

**429.** No terrifying calamity will happen to the wise, who (foresee) and guard against coming evils.

---

௪0. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

(பரி-ரை.) எ-து,—அறிவுடையார் பிறிதொன்றும் இலராயினும் எல்லாமுடையராவர்; அறிவிலாதார் எல்லாமுடையராயினும் ஒன்றும் இலராவர். எ-று.

செல்வங்களெல்லாம் அறிவாற்படைக்கவுங் காக்கவும்படுதலின் அஃதுடையாரை எல்லா முடையரென்றும், அவையெல்லாம் முன்னேயமைந்து கிடப்பினும் அழியாமற் காத்தற்குந் தெய்வத்தானழிந்தழிப் படைத்தற்குங் கருவியுடையரன்மையின் அஃதில்லாதாரை என்னுடையரேனுமிலரென்றுங் கூறினார். என்னுமென்புழி உம்மை விகாரத்தாற்றொக்கது. இதனான் அவரது உடைமையும் ஏனையாரது இன்மையுங்கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—அறிவு உடையார் - அறிவுடையவர், எல்லாம் உடையார்-(வேறொன்றும் இல்லாதவராயிருந்தாலும்) எல்லாமுடையவராவார்; அறிவிலார் - அறிவில்லாதவர், என் உடையர்ஏனும் - எல்லாமுடையவராயிருந்தாலும், இலர்-(ஒன்றும்) இல்லாதவராவார்.

**430.** Those who possess wisdom, pessess every thing; those who have not wisdom, whatever they may possoss, have nothing.

---

## ச௪ - ம் அதி—குற்றங்கடிதல்.

அஃதாவது காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெனப்பட்ட குற்றங்களாறனையும் அரசன் தன்கண் நிகழாமற் கடிதல் இவற்றை வடநூலார் பகைவர்க்கமென்ப. இவைகுற்றமென் றறிதலும் கடிதலும் அறிவுடையார்க்கல்லது கூடாமையின், அதன்பின் வைக்கப்பட்டது.

க. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

(பரி-ரை.) எ-து,—மதமும் வெகுளியுங் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம் மேம்பாட்டு நீர்மையினையுடைத்து, எ-று.

மதம் செல்வக்களிப்பு. சிறியோர் செயலாகலின், அளவிறந்தகாமஞ் சிறுமையெனப்பட்டது. இவை நீதியல்லன செய்வித்தலான், இவற்றைக் கடிந்தார்செல்வம் நல்வழிப்பாடும் நிலைபேறும் உடைமையின், மதிப்புடைத்தென்பதாம். மிகுதிபற்றி இவை முற்கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—செருக்கும் - மதமும், சினமும் - குரோதமும், சிறுமையும் - காமமும் ஆகிய (குற்றங்களை), இல்லார்-இல்லாத அரசரது, பெருக்கம் - செல்வமானது, பெருமிதநீர்த்து - மேம்பாட்டுக் குணத்தை யுடையதாம்.

**431.** Truly great is the excellence of those (kings) who are free from pride, anger, and lust.

---

உ. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு.

(பரி-ரை.) எ-து,—வேண்டும்வழிப் பொருள்கொடாமையும் நன்மையினீங்கிய மானமும் அளவிறந்த வுவகையும் அரசனுக்குக் குற்றம். எ-று.

மாட்சியான மானத்தினீக்குதற்கு மாண்பிறந்த மானமென்றார்: அஃதாவது அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாயென்றிவரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தேவிடுதலும் முதலாயின. அளவிறந்த வுவகையாவது கழிகண்ணோட்டம். பிறருஞ் சினனேகாமங் கழிகண்ணோட்ட மென்றிவற்றை யறந்தருதிகிரிக்கு வழியடையாகுந் தீதென்றார். இவை யிரண்டுபாட்டானுங் குற்றங்களாவன இவையென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இவறலும் - உலோபகுணமும், மாண்பு இறந்தமானமும் - நன்மையில் நீங்கியமானமும், மாணா உவகையும்—அளவிறந்தமகிழ்ச்சியும், இறைக்கு - அரசனுக்கு, ஏதம் - குற்றங்களாம்.

**432.** Avarice, undignified pride, and low pleasures, are faults in a king.

---

ௗ. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(பரி-ரை.) எ-து,—பழியையஞ்சுவார்தங்கண் தினையளவாங் குற்றம் வந்ததாயினும் அதனை அவ்வளவாக அன்றிப் பனையினளவாகக் கொள்வர், எ-று.

குற்றம்—சாதிப்பெயர். தமக்கேலாமையிற் சிறிதென்று பொறார் பெரிதாகக்கொண்டு வருந்திப் பின் அது வாராமற் காப்பரென்பதாம்.

(தெ - ப - ரை.)—பழிநாணுவார் - பழிக்கு அஞ்சுவோர், தினைத்துணைஆம் குற்றம் - தினையளவாகிய சிறிய குற்றமானது, வரினும் - (தம்மிடத்து) வந்ததாயினும், பனைத்துணை ஆக - (அதனை அவ்வளவாக நினையாமல்) பனையினளவு பெரிதாக, கொள்வர் - எண்ணுவார்.

433. Those who fear guilt, if they commit a fault small as a millet seed, will consider it to be as large as a palmyra tree.

---

ச. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

(பரி - ரை.) எ - து,—தனக்கிறுதி பயக்கும் பகை குற்றமே, ஆக லான், அக்குற்றம் தன்கண்வாராமையே பயனாகக் கொண்டு காக்கவேண் டும், எ-று.

இவைபற்றியல்லது பகைவர் அற்றந்தாராமையின் இவையே பகை யாவனவென்னும் வடநூலார் மதம் பற்றிக் குற்றமேயற்றந்தரூஉம் பகை யென்றும், இவற்றது இன்மையே குணங்களது உண்மையாகக் கொண் டென்பார் பொருளாகவென்றுங் கூறினர். குற்றமேகாக்கவென்பது "அரு ம்பண்பினாற் றீமைகாக்க" என்பதுபோல நின்றது.

(தெ-ப-ரை.)—அற்றம் - முடிவை, தரும்பகை-(தனக்குத்) தரும்பகை—, குற்றமே—,(ஆதலால்)குற்றமே-அக்குற்றம்(தன் னிடத்து வாராமையையே), பொருள் ஆக - பயனாகக் கொண்டு, காக்க – காக்கவேண்டும்.

434. Guard against faults as a matter (of great consequence; for) faults are a deadly enemy.

---

ரு. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—குற்றம் வரக்கடவதாகின்ற முற்காலத்திலே அத னைக் காவாத அரசன் வாழ்க்கை அது வந்தால் எரிமுகத்துநின்ற வைக் குவைபோல அழிந்துவிடும், எ-று.

குற்றமென்பது அதிகாரத்தான் வந்தது. முன்னரென்றதனீற்றது பகுதிப்பொருள்விகுதி. வருமென்னும் பெயரெச்சம் முன்னரென்னுங் காலப்பெயர்கொண்டது ; அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றஞ்சிறிதாயினும் அதனாற் பெரியசெல்வம் அழிந்தேவிடுமென்பது உவ மையாற் பெற்றாம்.

(தெ-ப-ரை.)—வரும் முன்னர் - (குற்றம்) வரும்முன்னே தானே, காவாதான் - (அதனைவாராமல்) காவாத அரசனது, வாழ்க்கை - வாழ்வானது, (அதுவந்தால்) எரிமுன்னர் - தீமுன் நின்ற, வைத்தூறுபோல - வைக்கோலின் கூட்டம்போல, கெ டும் – அழிந்துபோம்.

435. The prosperity of him who does not timely guard against faults, will perish like straw before fire.

---

சு. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

(பரி-ரை.) எ-து,—முன்னர்த் தன்குற்றத்தைக் கண்டு கடிந்து பின்னர்ப் பிறர்குற்றங் காணவல்லனாயின் அரசனுக்கு ஆகக்கடவ குற்றம் யாது, எ-று.

அரசனுக்குத் தன்குற்றங் கடியாவழியே பிறர்குற்றங்கடிதல் குற்றமாம். அதுகடிந்தவழி முறைசெய்தலாமென்பார், என்குற்றமாகு மென்றார்: எனவே, தன்குற்றங் கடிந்தவனே முறைசெய்தற் குரியவனென்பதாயிற்று. இவை நான்குபாட்டானும் அவற்றது கடிதற்பாடு பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(தெ - ப - ரை.)—தன்குற்றம் - தனதுகுற்றத்தை, நீக்கி - (முன்னேகண்டு) பரிகரித்து, பிறர்குற்றம் - (பின்பு) பிறரதுகுற்றத்தை, காண்கிற்பின் - ஆராய வல்லனாயின், இறைக்கு - அரசனுக்கு, ஆகும்குற்றம் - ஆகக்கடவதாகிய குற்றம், என் - யாது.

**436.** What fault will remain in the king who has put away his own evils, and looks after the evils of others.

---

எ. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

(பரி - ரை.) எ - து,—பொருளாற் றனக்குச் செய்துகொள்ளப்படுமவற்றைச் செய்து கொள்ளாது அதன்கட் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம் பின் உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும், எ-று.

செயற்பாலவாவன அறம் பொரு ளின்பங்கள். பொருளாற் பொருள் செய்தலாவது பெருக்குதல்; அது "பொன்னி னாகும் பொருபடை யப்படை—தன்னி னாகுந் தரணி தரணியிற்—பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொரு—டுன்னுங் காலைத் துன்னாதன வில்லையே" என்பதனானறிக. அறஞ்செய்யாமையானும் பொருள் பெருக்காமையானும் உயற்பாலதன்றியென்றும், இன்பப் பயன்கொள்ளாமையிற் கெடுமென்றுங் கூறினார். உயற்பாலதின்றியென்று பாடமோதுவாருமுளர்.

(தெ - ப - ரை.)—செயல்பால - (பொருளினாலேதனக்குச்) செய்துகொள்ள வேண்டியவற்றை, செய்யாது - செய்துகொள்ளாமல், இவறியான் - (அதனிடத்து) உலோபஞ் செய்தவனது, செல்வம் - செல்வமானது, உயல்பாலதுஅன்றி - பின்புள்ளதாகும் பகுப்பினதன்றி, கெடும் - (வீணே) கெடும்.

**437.** The wealth of the avaricious man, who does not expend it for the purposes for which he ought to expend it, will waste away and not continue.

---

அ. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

(பரி-ரை.) எ-து,—பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச் செய்யுமுள்ளமாகிய உலோபத்தினது தன்மை குற்றத்தன்மைக ளெல்லாவற்றுள்ளும் வைத்து எண்ணப்படுவதொன்றன்று, மிக்கது, எ-று.

இவறலது தன்மையாவது குணங்களெல்லாம் ஒருங்குளவாயினும் அவற்றைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்படவல்ல வியல்பு. ஒழிந்தன அது மாட்டாமையின், எற்றுள்ளு மெண்ணப்படுவ தொன்றன்றென்றார். எவற்றுள்ளுமென்பது இடைக்குறைந்து நின்றது. இவை யிரண்டுபாட்டானும் உலோபத்தின் தீமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பற்றுஉள்ளம்என்னும் - (பொருளைவிடவேண்டியவிடத்து விடாது) பற்றுகின்ற வுள்ளமாகிய, இவறன்மை-உலோபத்தினதுகுணமானது, எற்றுள்ளும் - எல்லாக் குற்றங்களுள்ளும், எண்ணப்படுவது ஒன்று அன்று - (வைத்து)எண்ணப்படுவதொருகுற்றமன்று [மிகப்பெரியது.]

**438.** Griping avarice is not to be reckoned as one among other faults; (it stands alone—greater than all.)

---

கூ. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(பரி - ரை.) எ - து,—தான் இறப்ப வுயர்ந்தஞான்றும் மதத்தாற் றன்னை நன்குமதியாதொழிக; தனக்கு நன்மை பயவா வினைகளை மானத்தால் விரும்பாதொழிக, எ-று.

தன்னைவியந்துழி இடமுங் காலமும் வலியும் அறியப்படாமையானும், அறனும் பொருளும் இகழப்படுதலானும், எஞ்ஞான்றும் வியவற்கவென்றும், கருதியது முடித்தேவிடுவலென்று அறம் பொருளின்பங்கள் பயவா வினைகளை நயப்பின் அவற்றாற் பாவமும் பழியுங் கேடும் வருமாகலின், அவற்றை நயவற்கவென்றுங் கூறினார். இதனான் மதமானங்களின் தீமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எஞ்ஞான்றும் - எக்காலத்திலும் [தான் மிகவும் உயர்ந்தகாலத்திலு மென்றபடி], தன்னை வியவற்க - (மதத்தினலே) தன்னை நன்குமதியாதிருக்கக்கடவன்; நன்றி - நன்மையை, பயவா - (தனக்குத்) தராத, வினை - தொழில்களை, நயவற்க - (மானத்தால்) விரும்பாதிருக்கக்கடவன்.

**439.** Let no (one) praise himself, at any time; and let him not desire to do useless things.

---

சO. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார்நூல்.

(பரி-ரை.) எ - து,—தான் காதலித்த பொருள்களை அவர் அக்காதலறியாமல் அனுபவிக்க வல்லனாயின் பகைவர் தன்னை வஞ்சித்தற் கெண்ணும் எண்ணம் பழுதாம், எ-று.

அறிந்தவழி அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பராகலின், அறியா மலுய்த்தால் வாயிலின்மையின் வஞ்சிக்கப்படானென்பதாம். காமம், வெகுளி, உவகையென்பன முற்றக்கடியுங் குற்றம் அன்மையின், இதனாற் பெரும்பான்மைத்தாகிய காமம் நுகருமாறுகூறி, ஏனைச்சிறுபான்மை அவற்றிற்குப் பொதுவகை விலக்கினையே கொண்டொழிந்தார்.

(தெ - ப - ரை.)—காதல - (தான்) விரும்பியபொருள்களை, காதல் - அவ்விருப்பத்தை, அறியாமை - (பிறர்) அறியாதபடி, உய்க்கிற்பின் - அனுபவிக்க வல்லவனாயின், ஏதிலார் - பகைவர், நூல் - (தன்னைவஞ்சித்தற்கு எண்ணும்) எண்ணமானது, ஏதிலபழுதாம்.

**440.** If (a king) enjoys privately the things which he desires, the designs of his enemies will be useless.

---

## சுரு-ம். அதி—பெரியாரைத்துணைக்கோடல்.

அஃதாவது மூவிருகுற்றமும் முறைமையிற் கடிதலிற் காவற்சாகாடு உகைத்தற்குரியனாய அரசன் தீநெறிவிலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கோடல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். பேரறிவுடையராவார் அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத்தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர்.

க. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

(பரி-ரை.) எ-து,—அறத்தது நுண்மையை அறிந்து தன்னின் மூத்த அறிவுடையாரது கேண்மையை அரசன் அதனது அருமையை ஓர்ந்து கொள்ளுந் திறமறிந்து கொள்க, எ-று.

அறம் நுண்மை நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறியவேண்டுதலின், அறனறிந்தென்றார். மூத்தல் - அறிவானும் சீலத்தானும் காலத்தானும் முதிர்தல். அறிவுடையார்-நீதியையும் உலகியலையும் அறிதலையுடையார். திறனறிதலாவது நன்குமதித்தல், உயரச்செய்தல் - அவர்வரைநிற்றலென்பன முதலாக அவர் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்தல்.

(தெ-ப-ரை.)—அறன்அறிந்து - அறத்தினது நுட்பத்தை அறிந்து, மூத்த - (தன்னைப்பார்க்கிலும்) முதிர்ந்த, அறிவுடையார்-அறிவுடையவரது, கேண்மை-நட்பை, தேர்ந்து - (அதனது அருமையைத்) தெரிந்து, திறன்அறிந்து - (கொள்ளும்) வகையறிந்து, கொளல் - (அரசன்) கொள்ளக்கடவன்.

**441.** Let (a king) ponder well its value, and secure the friendship of men of virtue and of mature knowledge.

---

உ. உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(பரி-ரை.) எ-து,—தெய்வத்தானுக மக்களானுகத் தனக்கு வந்த துன்பங்களை நீக்குமாறறிந்து நீக்கிப் பின் அப்பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்கவல்ல தன்மையினையுடையாரை அரசன் அவர் உவப்பன செய்து துணையாகக்கொள்க, எ-று.

தெய்வத்தான்வருந் துன்பங்களாவன மழையின தின்மைமிகுதிகளானும், காற்றுத் தீப்பிணியென் றிவற்றானும், வருவன. அவை கடவுளையுந் தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் சாந்திகளான் நீக்கப்படும். மக்களான்வருந் துன்பங்களாவன பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வாரென் றிவர்களான் வருவன. அவை சாம பேத தான தண்டங்களாகிய நால்வகை உபாயத்துள் ஏற்றதனுல் நீக்கப்படும். முற்காத்தலாவது தெய்வத்தான் வருவனவற்றை உற்பாதங்களானறிந்து, அச்சாந்திகளாற்காத்தலும், மக்களான் வருவனவற்றை அவர்குணம், இங்கிதம், ஆகாரம், செயலென்பனவற்றான் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாற் காத்தலுமாம் : ஆகவே, புரோகிதனையும் அமைச்சனையுங் கூறியவாறாயிற்று. இங்கிதம்-குறிப்பான் நிகழும் உறுப்பின்தொழில். ஆகாரம் - குறிப்பின்றி நிகழும் வேறுபாடு. உவப்பன-நன்குமதித்தன்முதலியன. இவையிரண்டு பாட்டானும் பெரியாரது இலக்கணமும், அவரைத் துணையாகக் கோடல் வேண்டுமென்பதூஉம், கொள்ளுமாறுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—உற்ற - (தெய்வத்தாலாவது மனிதராலாவது தனக்கு) வந்த, நோய்-துன்பங்களை, நீக்கி - (நீக்கும் விதம் அறிந்து) நீக்கி, உறாமை-(பின்பவை) வாராதபடி, முன்காக்கும்-முன்னறிந்து காக்கவல்ல, பெற்றியார் - தன்மையுடையவரை, பேணி - (அரசன்) அவர்மகிழத்தக்கவைகளைச் செய்து, கொளல்-துணையாகக் கொள்ளக்கடவன்.

442. Let (a king) procure and kindly care for men who can overcome difficulties when they occur, and guard against them before they happen.

---

௩. அரியவற் றுள்ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(பரி-ரை.) எ-து,—அப்பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து தமக்குச் சிறந்தாராகக் கொள்ளுதல் அரசர்க்கு அரிய பேறுகள் எல்லாவற்றுள்ளும் அரிது, எ-று.

உலகத்து அரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப்பேறு சிறந்ததென்றது, இதனுல் அவையெல்லாம் உளவாதனேக்கி.

(தெ-ப-ரை.)—பெரியாரை - அந்தக்குணமுடையவர்களை, பேணி - அவர் மகிழத்தக்கவைகளைச்செய்து, தமர் ஆக - தமக்

குச் சிறந்தவராக, கொளல் - கொள்ளுதல், அரியவற்றுள் எல்லாம் - (அரசர்க்கு) அரியபேறுகள் எல்லாவற்றுள்ளும், அரிதே - அரியதே.

**443.** To cherish great men and make them his own, is the most difficult of all difficult things.

---

ச. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(பரி-உரை.) எ-து,—அறிவு முதலியவற்றால் தம்மின் மிக்கார் தமக்குச் சிறந்தாராகத் தாம் அவர்வழி நின்றொழுகுதல் அரசர்க்கு எல்லா வலியுடைமையினுந் தலை, எ-று.

பொருள், படை, அரண்களான் ஆய வலியினும் இத்துணைவலி சிறந்ததென்றது, இவர் அவற்றானீக்கப்படாத தெய்வத்துன்ப முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின்.

(தெ-ப-உரை.)—தம்மில்பெரியார் - (அறிவுமுதலியவற்றால்) தம்மிலுயர்ந்தோர், தமர் ஆக-தமக்குச்சிறந்தவராகக்கருதி, ஒழுகுதல் - (தாம் அவர்வழியில்நின்று) நடத்தல், வன்மையுள் எல்லாம் - (அரசர்க்கு) எல்லாவலியுடைமைகளிலும், தலை - தலைமையாகிய வலிமையாம்.

**444.** So to act as to make those men, his own, who are greater than himself, is of all powers the highest.

---

ரு. சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(பரி-உரை.) எ-து,—தன்பாரம் அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு நடத்தலான், அரசன் அத்தன்மையராய அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க, எ-று.

இரண்டாவது விகாரத்தாற் றொக்கது. தானே சூழவல்லனாயினும் அளவிறந்த தொழில்களான் ஆகுலமெய்தும் அரசன்பாரம் அதுவே தொழிலாய அமைச்சரான் அல்லது இனிது நடவாமைபற்றி, அவரைக் கண்ணாகக் கூறினார். ஆராய்தல் - அமைச்சியலுட்சொல்லப்படும் இலக்கணத்தினையென்பதனை யாராய்தல். இவை மூன்றுபாட்டானும் பெரியாரைத் துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-உரை.)—சூழ்வார் - மந்திரிகளை, கண் ஆக - கண்ணாகக்கொண்டு, ஒழுகலால் - (தன்பாரம்) நடத்தலால், மன்னவன் - அரசன், சூழ்வாரை - (அத்தன்மையாகிய) மந்திரிகளை, சூழ்ந்து - ஆராய்ந்து, கொளல் - (தனக்குத்துணையாகக்) கொள்ளக்கடவன்.

**445**. As a king must use his ministers as eyes (in managing his kingdom), let him well examine their character and qualifications before he engages them.

---

சு. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(பரி-ரை.) எ - து,—தக்காராகிய இனத்தை உடையனாய்த் தானும் அறிந்தொழுகவல்ல அரசனைப் பகைவர் செய்யக் கிடந்ததொரு துன்பமும் இல்லை, எ-று.

தக்கார் - அறிவொழுக்கங்களால் தகுதியுடையார். ஒழுகுதல்-அறநீதிகளின் நெறிவழுவாமல் நடத்தல். வஞ்சித்தல், கூடினாரைப்பிரித்தல், வேறு பகைவிளைத்தலென் றிவற்றானும், வலியானும், பகைவர் செய்யுந் துன்பங்கள் பலதிறத்த வாயினும், தானுமறிந்து அறிவார்சொல்லுங் கொண்டொழுகுவான்கண் அவற்றுள் ஒன்றும் வாராதென்பார், செற்றார் செயக்கிடந்ததில்லென்றார்.

(தெ - ப - ரை.)—தக்கார்இனத்தன்ஆய் - பெரியோராகிய இனத்தையுடையனாகி, தான்ஒழுக - தானும் (அறிந்து) நடக்க, வல்லானை - வல்லஅரசனை, செற்றார்-பகைவர், செயக்கிடந்தது- செய்யக்கிடந்த ஒருதுன்பமும், இல் - இல்லை.

**446**. There will be nothing left for enemies to do, against him who has the power of acting (so as to secure) the fellowship of worthy men.

---

எ. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(பரி - ரை.) எ-து,—தீயன கண்டால் நெருங்கிச்சொல்லுந் துணையாந்தன்மையை உடையாரை இவர் நமக்குச் சிறந்தாரென்றாளும் அரசரைக் கெடுக்கும் பெருமையுடைய பகைவர் உலகத்து யாவர், எ-று.

தீயன - பாவங்களும் நீதி அல்லனவும். துணையாந் தன்மையாவது தமக்கு அவையின்மையும் அரசன்கண் அன்புடைமையுமாம். அத்தன்மையுடையார் நெறியினீங்க விடாமையின், அவரையாளும் அரசர் ஒருவரானுங் கெடுக்கப்படா ரென்பதாம். நெருங்கிச் சொல்லும் அளவினோரை யென்றுரைப்பாருமுளர். இவை யிரண்டுபாட்டானும் அதன்பயன் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இடிக்கும் - கோபித்துப் புத்திசொல்லும், துணையாரை - துணையாந்தன்மையை யுடையவரை, ஆள்வாரை- (இவர்நமக்குச்சிறந்தவரென்று) ஆளும்அரசரை, கெடுக்குந்தகைமையவர் - கெடுக்கும் பெருமையையுடையபகைவர், யார் - (உலகத்தில்) யாவர்.

447. Who are great enough to destroy him who has servants that have power to rebuke him?

---

அ. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(பரி - ரை.) எ - து,—கழறுதற்குரியாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையிற் காவலற்ற அரசன் பகையாய்க் கெடுப்பார் இல்லையா யினும் தானே கெடும், எ-று.

இல்லாத ஏமரா என்பன பெயரெச்சவடுக்கு. கெடுப்பார் உளரா வரென்பது தோன்ற, இலானுமென்றார். தானே கெடுதலாவது பாக னில்லாத யானைபோல நெறியல்லா நெறிச்சென்று கெடுதல்.

(தெ - ப - ரை.)—இடிப்பாரை - உறுதிசொல்லுதற் குரிய வரை, இல்லாத - (தனக்குத்துணையாகக்) கொள்ளாமையால், ஏமரா - காவலற்ற, மன்னன் - அரசன், கெடுப்பார்இல்ஆனும்- (பகையாய்க்) கெடுப்பவர் இல்லாதிருந்தாலும், கெடும் - (தானே) கெடுவன்.

448. The king, who is without the guard of men who can rebuke him, will perish, even though there be no one to destroy him.

---

கூ. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(பரி-ரை.) எ-து,—முதற்பொருளில்லாத வணிகர்க்கு அதனால்வரும் ஊதியம் இல்லையாம், அதுபோலத் தம்மைத் தாங்குவதாந் துணையில்லாத அரசர்க்கு அதனான் வரும் நிலையில்லை, எ-று.

முதலைப்பெற்றே இலாபம் பெறவேண்டுமாறுபோலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெறவேண்டுமென்பதாம். நிலை - அரசர் பாரத்தோடு சலி யாது நிற்றல்.

(தெ - ப - ரை.)—முதல்இலார்க்கு - முதற்பொருளில்லாத வணிகர்க்கு, ஊதியம்-(அதனால்வரும்) ஆதாயம், இல்லை-இலது, (அதுபோல) மதலைஆம் - (தம்மைத்) தாங்குவதாகிய, சார்பு இலார்க்கு - துணையில்லாத அரசர்க்கு, நிலை - (அதனால்வரும்) நிலையானது, இல்லை - இலது.

49. There can be no gain to those who have no capital; and in like manner there can be no permanence to those who are without the support of adherents.

---

சுo. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(பரி - ரை.) எ - து,—தான் தனியனுய்வைத்துப் பலரோடும் பகை கொள்ளுதலின் பதிற்றுமடங்கு தீமையுடைத்து அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளாதொழிதல், எ-று.

பலர் பகையாயக்கால் "மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்—பேதுசெய்து பிளக்கிடல்" என்பவையல்லது ஒருங்கு வினையாக்குதல் தீது, செய்தாலும் ஒருவாற்று னுய்தல்கூடும், நல்லார் தொடர்கைவிட்டால் ஒருவாற்றானும் உய்தல் கூடாமையின், இது செய்தல் அதனினுந் தீதென்பதாம். இவைமூன்றுபாட்டானும் அது செய்யாதவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நல்லார் - (அரசன்) பெரியவருடைய, தொடர்கைவிடல் - நட்பைவிட்டிருத்தல், பல்லார் - (தான்தனியனு யிருந்து) பலரோடும், பகைகொளலின் - பகைகொள்ளுதலைப்பார்க்கினும், பத்தடுத்த-பத்துப்பங்கு அதிகமாகிய, தீமைத்தே - தீமையையுடையதேயாம்.

**450**. It is tenfold more injurious to abandon the friendship of the good, than to incur the hatred of the many.

---

## சசு - ம். அதி—சிற்றினஞ்சேராமை.

அஃதாவது சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது நல்லதன்நலனும் தீயதன்தீமையும் இல்லென்போரும் விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையுங்கெடுக்கும் இயல் பிற்றுய அதனைப் பொருந்திற் பெரியாரைத் துணைக்கோடல் பயனின் றென்ப துணர்த்தற்கு இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

க. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(பரி-ரை.) எ-து,—பெரியோரியல்பு சிறிய இனத்தை அஞ்சாநிற்கும்; ஏனைச்சிறியோரியல்பு அது சேர்ந்தபொழுதே அதனைத் தனக்குச் சுற்றமாக எண்ணித் துணியும், எ-று.

தத்தம் அறிவு திரியுமாறும அதனுல் தமக்குவருந் துன்பமும் நோக்கலின் அறிவுடையா ரஞ்சுவரொன்றும், அறிவொற்றுமையாற் பிறிது நோக்காமையின் அறிவிலாதார் தமக்குச் சுற்றமாகத் துணிவரொன்றுங் கூறினர். பொருளின்தொழில்கள் பண்பின்மேனின்றன. இதனுற் சிறிய இனம் பெரியோர்க் காகாதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பெருமை - பெரியோருடைய சுபாவகுணமானது, சிறுஇனம் - சிறியவினத்தைக்கண்டு, அஞ்சும் - அஞ்சாநிற்கும்; சிறுமைதான் - மற்றைச்சிறியோருடைய சுபாவகுண

மானது, (அந்தச் சிற்றினஞ் சேர்ந்தவுடனே), சுற்றம் ஆக - (தனக்கு) உறவாக, சூழ்ந்துவிடும் - எண்ணித் தழுவிக்கொள் ளும்.

**451.** (True) greatness fears the society of the base; it is only the low-minded who will regard them as friends.

---

உ. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
  கினத்தியல்ப தாகு மறிவு.

(பரி-ரை.) எ-து,—தான் சேர்ந்த நிலத்தினது இயல்பானே நீர் தன் தன்மை திரிந்து அந்நிலத்தின் தன்மைத்தாம்; அதுபோல, மாந்தர்க்குத் தாம்சேர்ந்த இனத்தினது இயல்பானே அறிவுந் தன்தன்மை திரிந்து அவ் வினத்தின் தன்மைத்தாம், எ-று.

எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கண் தன்தன்மைத்தாய நீர் நிலத் தோடு சேர்ந்தவழி நிறம், சுவைமுதலிய பண்புகள் திரிந்தாற்போலத் தனிநிலைக்கண் தன்தன்மைத்தாய அறிவு பிற இனத்தோடு சேர்ந்தவழிக் காட்சிமுதலிய தொழில்கள் திரியுமென இதனால் அதனது காரணம் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நீர் - நீரானது, நிலத்து - (தான்சேர்ந்த) நிலத்தினது, இயல்பான் - குணத்தினாலே, திரிந்து - (தனது) தன்மைவேறுபட்டு, அற்று ஆகும் - அந்நிலத்தினது தன்மைய தாகும்; (அதுபோல) மாந்தர்க்கு - மனிதர்க்கு, அறிவு - அறி வானது, இனத்து-(தாம்சேர்ந்த) இனத்தினது, இயல்பு-குணத் தினாலே, (திரிந்து) - தனது தன்மைவேறுபட்டு, அது ஆகும் - அவ்வினத்தினது தன்மையதாகும்.

**452.** As water changes (its nature) from the nature of the soil (in which it flows), so will the character of men resemble that of their associates.

---

ஙு. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
  மின்னா னெனப்படுஞ் சொல்.

(பரி - ரை.) எ-து,—மாந்தர்க்குப் பொதுவுணர்வு தம்மனங்காரண மாக வுண்டாம்; இவன் இத்தன்மையனென்று உலகத்தாராற் சொல்லப் படும் சொல் இனங்காரணமாக வுண்டாம், எ-று.

இயற்கையாய புலனுணர்வுமாத்திரத்திற்கு இனம் வேண்டாமையின் அதனை மனத்தானாமென்றும், செயற்கையாய விசேடவுணர்வுபற்றி நல் லனென்றாகத் தீயனென்றாக நிகழுஞ்சொற்கு இனம் வேண்டுதலின் அதனை இனத்தானாமென்றுங் கூறினர். உவமையளவை கொள்ளாது அத்திரிபும் மனத்தானாமென்பாரை நோக்கி இதனான் அது மறுத்துக் கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—மாந்தர்க்கு - மனிதர்க்கு, உணர்ச்சி - பொது அறிவானது, மனத்தான் - (தம்) மனங்காரணமாக, ஆம் - உண்டாகும்; இன்னானெனப்படும் - (இவன்) இத்தன்மையனென்று (உலகத்தாராலே) சொல்லப்படும், சொல் - சொல்லானது, இனத்தான்-இனங்காரணமாக, ஆம் - உண்டாகும்.

**453**. The power of knowing is from the mind; (but) his character is from that of his associates.

ச. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

(பரி - ரை.) எ-து,—ஒருவற்கு மனத்து உளதுபோலக்காட்டி அவன் சேர்ந்த இனத்தின் கண்ணே உளதாம், எ-று.

மெய்ம்மை நோக்காமுன் மனத்துளதுபோன்று காட்டியும் பின்னேச் சியவழிப் பயின்றவினத்துளதாயும் இருத்தலின், காட்டியென இறந்தகாலத்தாற் கூறினர். விசேடவுணர்வுதானும் மனத்தின்கண்ணே அன்றே உளதாவ தென்பாரைநோக்கி, ஆண்டுப் புலப்படுத் துணையேயுள்ளது அதற்குமூலம் இனமென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அறிவு - அந்தவிசேட அறிவு, ஒருவற்கு- ஒருவனுக்கு, மனத்து - மனத்தினிடத்து, உளதுபோல - உண்டாவதுபோல, காட்டி - (தன்னைக்) காட்டி, இனத்து - (அவன் சேர்ந்த) இனத்தினிடத்தே, உளது ஆகும் - உண்டாகும்.

**454**. Wisdom appears to rest in the mind, but it really exists to a man in his companions.

---

ரு. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

(பரி-ரை.) எ - து,—அவ்விசேடவுணர்வு புலப்படுதற்கிடனாய மனத் தூயனாதற்றன்மையும் செய்யும்வினை தூயனாதற் றன்மையுமாகிய இரண்டும் ஒருவற்கு இனந்தூயனாதற்றன்மை பற்றுக்கோடாக உளவாம், எ-று.

மனந்தூயனாதலாவது விசேடவுணர்வு புலப்படுமாறு இயற்கையாய அறியாமையின் நீங்குதல். செய்வினை தூயனாதலாவது மொழிமெய்களாற் செய்யும் நல்வினை உடையனாதல். தூவென்பது அப்பொருட்டாதல் "தூவறத் துறந்தாரை" என்பதனானு மறிக. ஒருவன் இனந்தூயனாகவே அதனோடு பயிற்சிவயத்தான் மனந்தூயனாய் அதன்கண் விசேடவுணர்வு புலப்பட்டு அதனாற்சொல்லுஞ் செயலுந் தூயனாமென, இதனால் இனத்துள்ளவாமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—மனம் - (அந்தவிசேடஅறிவு வெளிப்படுதற்கு இடமாகிய) மனம், தூய்மை - பரிசுத்தனாதற் றன்மையும்

செய்வினை - செய்தொழில், தூய்மை-பரிசுத்தனுதற்றன்மையும், இரண்டும் - (ஆகிய) இரண்டும், இனம் - (சேர்ந்த) இனம், தூய்மை - பரிசுத்தனுந்தன்மை, தூவா - பற்றுக்கோடாக, வரும் - உண்டாகும்.

**455.** Chaste company is the staff on which come, these two things, viz. purity of mind and purity of conduct.

---

சு. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(பரி - ரை.) எ-து,—மனந்தூய ராயினுர்க்கு மக்கட்பேறு நன்றாகும்; இனந்தூய ராயினுர்க்கு நன்றாகாத வினை யாதும் இல்லை, எ-று.

காரியங் காரணத்தின் வேறுபடாமையின் எச்சநன்றாகுமென்றும், நல்லினத்தோடெண்ணிச் செய்யப்படுதலின் எல்லாவினையும் நல்லவாமென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—மனம்தூயார்க்கு - மனம் பரிசுத்தமானவர்க்கு, எச்சம் - மக்கட்பேறு, நன்று ஆகும்-நலமுடையதாம், இனம்தூயார்க்கு - இனம் பரிசுத்தமானவர்க்கு, நன்று ஆகாவினை-நன்றாகாதசெயல், இல்லை - (யாதும்) இல்லை.

**456.** To the pure-minded there will be a good posterity. By those whose associates are pure, no deeds will be done that are not good.

---

எ. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

(பரி-ரை.) எ-து,—நிலைபெற்ற உயிர்கட்கு மனத்தது நன்மை செல்வத்தைக் கொடுக்கும்; இனத்தது நன்மை அதனோடு எல்லாப்புகழையுங் கொடுக்கும், எ-று..

மன்னுயிரென்றது ஈண்டு உயர்திணைமேனின்றது. தருமென்னும் இடவழுவமைதிச்சொல் முன்னுங் கூட்டப்பட்டது. உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. மனநன்றுதல்தானே அறமாகலின் அதனை ஆக்கந்தருமென்றும், புகழ் கொடுத்தற்குரிய நல்லோர்தாமே இனமாகலின் இனநலமெல்லாப் புகழுந்தருமென்றுங் கூறினர். மேல் மனநன்மை இனநன்மைபற்றிவருமென்பதனை உட்கொண்டு அஃதியல்பாகவே உடையார்க்கு அவ்வினநன்மை வேண்டாவென்பாரை நோக்கி, அதுவேயன்றி அத்தன்மைய பலவற்றையுந் தருமென அவர்க்கும் அதுவேண்டுமென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—மன்உயிர்க்கு - நிலைபெற்றவுயிர்களுக்கு, மனநலம் - மனத்தினதுநன்மையானது, ஆக்கம் - செல்வத்தைத் (தரும்), இனநலம் - இனத்தினதுநன்மையானது, எல்லாப்புகழும் - (அதனோடு) எல்லாப்புகழையும், தரும் - கொடுக்கும்.

**457.** Goodness of mind will give wealth, and good society will bring with it all praise, to men.

---

அ. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

(பரி - ரை.) எ - து,—மனநன்மையை முன்னைநல்வினையால் தாமே உடையராயினும் அமைந்தார்க்கு இனநன்மை அதற்கு வலியாதலை உடைத்து, எ-று.

நன்காலென்னும் மூன்றனுருபு விகாரத்தாற்றொக்கது. அந்நல்வினை உள்வழியும் மனநலத்தை வளர்த்துவருதலின், அதற்கேமாப் புடைத்தாயிற்று.

(தெ - ப - ரை.)—மனநலம் - மனநன்மையை, நன்கு - (முன்னை) நல்வினையினாலே, உடையர் ஆயினும்-(தாமே) உடையவராயிருந்தாலும், சான்றோர்க்கு - நிறைந்தோர்க்கு, இனநலம்- இனநன்மையானது, ஏமாப்பு - (அதற்கு) வலிமையாதலை, உடைத்து - உடையது.

**458.** Although they may have great (natural) goodness of mind, yet good society will tend to strengthen it.

---

கூ. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(பரி - ரை.) எ - து,—ஒருவற்கு மனநன்மையானே மறுமையின்பம் உண்டாம்; அதற்கு அச்சிறப்புத்தானும் இனநன்மையான் வலிபெறுதலை உடைத்து, எ-று.

மனநலத்தினாகு மறுமையென்றது மறுமை பயப்பது மனநன்மை தானே பிறிதொன் றன்றென்னும் மதத்தை உடம்பட்டுக் கூறியவாறு. மற்று—வினைமாற்று. உம்மை—இறந்ததுதழீஇய எச்சவும்மை. ஒரோவழித் தாமதகுணத்தான் மனநலந்திரியினும் நல்லினம் ஒப்பநிறுத்தி மறுமைபயப்பிக்குமென நிலைபெறச்செய்யுமாறு கூறப்பட்டது. இவையைந்துபாட்டானும் சிற்றினஞ்சேராமையது சிறப்பு நல்லினஞ்சேர்தலாகிய எதிர்மறைமுகத்தாற் கூறியவாறறிக.

(தெ-ப-ரை.)—மனநலத்தின் - மனநன்மையால், மறுமை- மறுமையின்பம், ஆகும் - உண்டாம்; மற்றுஅஃதும் - அதற்கு அச்சிறப்புத்தானும், இனநலத்தின்-இனநன்மையால், ஏமாப்பு- வலிபெறுதலை, உடைத்து - உடையதாம்.

**459.** Future bliss is (the result) of goodness of mind; and even this acquires strength from the society of the good.

---

சo. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

(பரி - ரை.) எ-து,—ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையும் இல்லை; தீயவினத்தின் மிக்க பகையும் இல்லை, எ-று.

ஐந்தனுருபுகள் உறழ்பொருளின்கண் வந்தன. ஊங்கென்பது பின்னுங்கூட்டி உம்மை மாற்றியுரைக்கப்பட்டது. நல்லினம் அறியாமையின் நீக்கித் துயருறுமற் காத்தலின் அதனைத் துணையென்றும், தீயினம் அறிவின் நீக்கித் துயருறுவித்தலின் அதனைப் பகையென்றுங் கூறினார். அல்லற்படுப்பதென்பது ஏதுப்பெயர். இதனால் விதியெதிர்மறைகள் உடன்கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—நல் இனத்தின் ஊங்கு துணையும் இல்லை - (ஒருவனுக்கு) நல்ல இனத்தின் மிகுந்த துணையும் இல்லை; தீயினத்தின் (ஊங்கு) - தீய இனத்தின்மிகுந்த, அல்லற்படுப்பதும்- துன்பத்தைவிளைவிப்பதும் [பகையும்], இல் - இல்லை.

**460.** There is no greater help than the company of the good; there is no greater source of sorrow than the company of the wicked.

---

## சஎ - ம். அதி—தெரிந்துசெயல்வகை.

அஃதாவது அரசன் தான்செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந்திறம். அச்செயல் பெரியாரைத் துணைக்கோடல் பயனுடைத்தாயவழி அவரோடுஞ் செய்யப்படுவதாகலின், இது சிற்றினஞ் சேராமையின்பின் வைக்கப்பட்டது.

க. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(பரி - ரை.) எ-து,—வினைசெய்யுங்கால் அப்பொழுது அதனால் அழிவதனையும் அழிந்தாற்பின் ஆவதனையும் ஆய்கின்று பிற்பொழுதுதரும் ஊதியத்தையும் சீர்தூக்கி உறுவதாயிற் செய்க, எ-று.

உறுவதாவது நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு எதிர்வினும் அது வளர்ந்துவருதல். அழிவதின்மையின், எதிர்வின்கண் வருமாக்கத்தை ஊதிய மென்றார்: எனவே, அவ்வூதியம் பெறின் நிகழ்வின்கண் அழிவதும் ஆவதுந் தம்முளொத்தாலும் ஒழிதற்பாற்றன்றென்பது பெற்றாம். இரண்டுகாலத்தும் பயனுடைமை தெரிந்து செய்கவென்பதாம்.

(தெ - ப - ரை.)—அழிவதும் - (தொழில்செய்யுமிடத்து) (அதனால்) அழிவதையும், ஆவதும் - (அழிந்தால்பின்) ஆவதையும், ஆகி - ஆகின்று, வழிபயக்கும் - பின்புதருகின்ற, ஊதியமும் - ஆதாயத்தையும், சூழ்ந்து - ஆராய்ந்து, செயல் - (ஆதாயம் அதிகப்பட்டால்) செய்யக்கடவன்.

**461.** Let a man reflect on what will be lost, what will be acquired and (from these) what will be his ultimate gain, and (then, let him) act.

---

உ. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(பரி-ரை.) எ-து,—தாம் தெரிந்துகொண்ட இனத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின் தாமேயும் எண்ணிச் செய்து முடிக்கவல்ல அரசர்க்கு எய்துதற்கரிய பொருள் யாதொன்றும் இல்லை, எ-று.

ஆராயப் படுவனவெல்லாம் ஆராய்ந்துபோந்த இனமென்றுமாம். செய்வார்க் கென்றதனால், வினையென்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப் பட்டது. வினையாவது மேற்சேறன்முதல் வேறல் ஈறாய தொழில். பொருள்கட்கேதுவாய அதனிற்றவறாமையின், அரியபொருள்களெல்லாம் எளிதினெய்துவ ரென்பதாம். இவை யிரண்டுபாட்டானுஞ் செய்யத்தகும் வினையும் அது செய்யுமாறும் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—தெரிந்த - (தாம்) தெரிந்துகொண்ட, இனத்தொடு - இனத்துடனே, தேர்ந்து - (செய்யத்தகுந்தொழிலை) ஆராய்ந்து, எண்ணி - (பின்புதாமுந்தனித்து) ஆலோசித்து, செய்வார்க்கு - செய்துமுடிக்கவல்ல அரசருக்கு, அரும்பொருள் - பெறுதற்கரியபொருள், யாதொன்றும் இல் - யாதொன்றும் இல்லை.

**462.** There is nothing too defficult to (be attained by) those who, before they act, reflect well themselves, and thoroughly consider (the matter) with chosen friends.

---

ங. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

(பரி-ரை.) எ-து,—மேல்எய்தக்கடவ ஊதியத்தினை நோக்கி முன்னெய்திநின்ற முதல் தன்னையும் இழத்தற்கேதுவாய செய்வினையை அறிவுடையார் மேற்கொள்ளார், எ-று.

கருதியென்னும் வினையெச்சம் இழக்குமென்னும் பெயரெச்சவினை கொண்டது. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. ஆக்கமேஅன்றி முதலையும் இழக்கும் வினைகளாவன வலியுங் காலமும் இடனும் அறியாது பிறர் மண் கொள்வான்சென்று தம்மண்ணும் இழத்தல்போல்வன. முன்செய்துபோந்த வினையாயினுமென்பார், செய்வினையென்றார்.

(தெ-ப-ரை.)—ஆக்கங் கருதி-(பின்பெறக்கடவதாகிய)இலாபத்தைநினைத்து, முதல் - (முன்பெற்றுள்ள) முதலையும், இழக்கும் - இழத்தற்கு ஏதுவாகிய, செய்வினை - தொழிலை, அறிவுடையார் - விவேகிகள், ஊக்கார் - மேற்கொள்ளார்.

**463.** Wise men will not, in hopes of profit, undertake works that will consume their principal.

---

ச. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்று
மேதப்பா டஞ்சு பவர்.

(பரி-ரை.) எ-து,—இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து துணித லில்லாத வினையைத் தொடங்கார். தமக்கு இளிவரவென்னுங் குற்றமுண் டாதலை அஞ்சுவார், எ-று.

தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின், தொடங்காரென்றார். இளிவரவு - அவ்வினையாற் பின்னழிவெய்தியவழி அதன் மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழும் இகழ்ச்சி. அஃதுண்டாதல் ஒருதலையாகலின், தெளிவுள்வழித் தொடங்குக வென்பதாம்.

(தெ-ப-ரை.)—இளிவுஎன்னும் - (தமக்கு) இழிவென்று சொல்லப்பட்ட, ஏதப்பாடு-குற்றமுண்டாவதற்கு, அஞ்சுபவர்-பயப்படுவோர், தெளிவுஇல்அதனை - (இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து) தெளியாததொழிலை, தொடங்கார்-செய்யத்தொடங் கார்.

**464.** Those who fear reproach will not commence any thing which has not been (thoroughly considered) and made clear to them.

---

ரு. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

(பரி-ரை.) எ-து,—சென்றால் நிகழும் திறங்களையெல்லாம் முற்ற எண்ணாது சில எண்ணிய துணையானே அரசன் பகைவர்மேற் செல்லு தல் அவரை வளருநிலத்திலே நிலைபெறச் செய்வதொரு நெறியாம், எ-று.

அத்திறங்களாவன வலி, காலம், இடனென்றிவற்றால் தனக்கும் பகை வர்க்கு முளவாம் நிலைமைகளும், வினை தொடங்குமாறும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனாற் பெறும் பயனும் முதலாயின. அவற்றுட்சில எஞ்சினும் பகைவர்க்கு இடனும் ஆக லான், முற்றுப்பெற எண்ணவேண்டுமென்பதாம். இவை மூன்றுபாட்டா னும் ஒழியத்தகும் வினையும் ஒழியாவழிப்படும் இழுக்குங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—வகை - (சென்றால்நடக்கும்) விதங்களை யெல்லாம், அறச்சூழாது - முற்ற எண்ணாமல் [சிலவெண்ணிய வளவிலென்றபடி], எழுதல் - (அரசன் பகைவர்மேல்) செல்லு தல், பகைவரை - அப்பகைவரை, பாத்தி - வளருநிலத்திலே, படுப்பது - நிலைபெறச்செய்வதாகிய, ஓர்ஆறு - ஒருவழியாம்.

**465.** One way to promote the prosperity of an enemy, is (for a king) to set out (to war) without having thoroughly weighed his ability (to cope with its chances).

---

சு. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(பரி-ரை.) எ-து,—அரசன் தன்வினைகளுள் செய்யத்தக்கன அல்லவற்றைச் செய்தலாற்கெடும்; இனி அதனானே அன்றிச் செய்யத்தக்கனவற்றைச் செய்யாமைதன்னானுங் கெடும், எ-று.

செய்யத்தக்கன வல்லவாவன பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிதாயினவும், ஐயமாயினவும், பின்துயர்விளைப்பனவுமென இவை. செய்யத்தக்கனவாவன அவற்றின் மறுதலையாயின. இச்செய்தல் செய்யாமைகளான் அறிவு ஆண்மை பெருமையென்னும் மூவகையாற்றலுள் பொருள் படையென இருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனும் ஆகலான், இரண்டுங் கேட்டிற்கேதுவாயின. இதனாற் செய்வன செய்து ஒழிவனவொழிகவென இருவகையனவும் உடன் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—செய்தக்க அல்ல - (அரசன் தனதுதொழில்களில்) செய்யத்தகாதவைகளை, செய - செய்தலால், கெடும்-கெடுவான்; (அன்றியும்), செய்தக்க - செய்யத்தக்கவைகளை, செய்யாமையானும் - செய்யாமையினாலும், கெடும் - கெடுவான்.

**466.** He will perish who does what it is not fit to do; and he also will perish who does not do what it is fit to do.

---

௭. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

(பரி-ரை.) எ-து,—செய்யத்தக்க கருமமும், முடிக்கும் உபாயத்தை எண்ணித்தொடங்குக, தொடங்கிவைத்துப் பின்னெண்ணக்கடவோம் என்றெழிதல் குற்றமாதலான், எ-று.

துணிவுபற்றி நிகழ்தலின், துணிவெனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. உபாயமென்பது அவாய்நிலையான் வந்தது. அது கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தலென நால்வகைப்படும். இவற்றை வடநூலார் தான சாம பேத தண்ட மென்ப. அவற்றுள் முன்னைய இரண்டும் ஐவகைய, ஏனைய மூவகைய; அவ்வகைகளெல்லாம் ஈண்டுரைப்பிற்பெருகும். இவ்வுபாயமெல்லாம் எண்ணாதுதொடங்கின் அவ்வினை மாற்றானால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையின் ஒழிதலாகாமையானும், அரசன் துயருறுதலின், அவ்வெண்ணாமையை இழுக்கென்றார். செய்வனவற்றையும் உபாயமறிந்தே தொடங்குக வென்பதாம்.

(தெ - ப - ரை.)—கருமம் - (செய்யத்தக்க) தொழிலையும், எண்ணி - (முடிக்கும் உபாயத்தை) ஆலோசித்து, துணிக - தொடங்கக்கடவன், துணிந்தபின் - தொடங்கியபின்பு, எண்ணுவம் என்பது-ஆராயக்கடவோமென்பது, இழுக்கு - குற்றமாதலால்.

**467.** Consider, and then undertake a matter; after having undertaken it, to say "We will consider," is folly.

---

அ. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(பரி-ரை.) எ-து,—முடியும் உபாயத்தாற் கருமத்தை முயலாத முய ற்சி, துணைவர்பலர் நின்று புரைபடாமற் காப்பினும் புரைபடும், எ-று.

முடியும் உபாயத்தான் முயறலாவது கொடுத்தலைப் பொருணசையா ளன் கண்ணும், இன்சொல்லைச் செப்பமுடையான், மடியாளன், முன்னே பிறரோடு பொருது நொந்தவனென இவர்கண்ணும், வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், தன் பகுதியோடு பொருந்தாதானென இவர்கண் ணும், ஒறுத்தலை இவற்றின் வாராதவழி இவர்கண்ணுந் தேறப்படாத கீழ்மக்கள்கண்ணுஞ் செய்து, வெல்லுமாற்றான் முயறல். புரைபடுதல்-கரு திய நன்மையன்றிக் கருதாத தீமை பயத்தல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு.

(தெ-ப-ரை.)—ஆற்றின் - முடியுமுபாயத்தால், வருந்தா வருத்தம் - (கருமத்தைக்குறித்து) வருந்தாத முயற்சியானது, பலர்நின்று - (துணைவர்) பலர்கூடிநின்று, போற்றினும் - (குற்றப் படாமல்) காப்பினும், பொத்துப்படும் - குற்றப்படும்.

**468.** The work, which is not done by suitable methods, will fail though many stand to uphold it.

---

கூ. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(பரி-ரை.) எ-து,—வேற்றுவேந்தர்மாட்டு நன்றான வுபாயஞ்செய் தற்கண்ணுங் குற்றமுண்டாம், அவரவர்குணங்களை ஆராய்ந்தறிந்து அவற் றிற்கியையச் செய்யாவிடின், எ-று.

நன்றானவுபாயமாவது கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலுமாம். அவை யாவர்கண்ணும் இனியவாதற் சிறப்புடைமையின், உம்மை சிறப் பும்மை. அவற்றை அவரவர் பண்பறிந் தாற்றாமையாவது அவற்றிற்கு உரியரல்லாதார்கண்ணே செய்தல். தவறு - அவ்வினைமுடியாமை.

(தெ-ப-ரை.)—நன்று - (வேற்றரசரிடத்து) நல்லவுபா யத்தை, ஆற்றலுள்ளும் - செய்யுமிடத்தும், தவறு - குற்றம், உண்டு—; அவர் அவர் - அவரவருடைய, பண்பு-குணங்களை, அறி ந்து - (ஆராய்ந்து) அறிந்து, ஆற்றாக்கடை - (அக்குணங்களுக்கு இசையச்) செய்யாவிடத்து.

**469.** There are failures even in acting well, when it is done without knowing the various dispositions of men.

---

கo. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(பரி-ரை.) எ-து,—அரசர் வினைமுடித்தற்பொருட்டுத் தம் நிலைமை யோடு பொருந்தாத உபாயங்களைச் செய்வராயின் உலகந் தம்மை இகழா நிற்கும்; ஆகலான், அஃது இகழாவுபாயங்களை நாடிச் செய்க, எ-று.

தம்மென்பது ஆகுபெயர். தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது தாம் வலியராய்வைத்து மெலியார்க்குரிய கொடுத்தன்முதலிய மூன்றனைச்செய்தலும், மெலியராய்வைத்து வலியார்க்குரிய ஒறுத்தலைச் செய்தலுமாம். இவையிரண்டும் அறிவிலார் செய்வன ஆகலின் உலகங் கொள்ளாதென்றார். அஃது எள்ளாதனசெய்தலாவது அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட்கேற்பச் செய்தல். மேல் இடவகையான் உரிமை கூறிய உபாயங்கட்கு வினைமுதல்வகையான் உரிமை கூறியவாறு. இவை நான்குபாட்டானுஞ் செய்வனவற்றிற்கு உபாயமும் அதனது உரிமையுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—தம்மொடு - (அரசர்தொழில் முடித்தற்பொருட்டுத்) தமதுநிலைமையோடு, கொள்ளாத-பொருந்தாத உபாயங்களைச் (செய்வாராயின்), உலகு - உலகமானது, கொள்ளாது- அங்கீகரியாது [இகழுமென்றபடி]; (ஆதலால்), எள்ளாத - (அவ்வுலகம்) இகழாத உபாயங்களை, எண்ணி - ஆராய்ந்து, செயல்வேண்டும் - செய்யக்கடவர்.

**470.** Let a man reflect, and do things which bring no reproach; the world will not approve, with him, of things, which do not become of his position to adopt.

---

## சஅ-ம். அதி—வலியறிதல்.

அஃதாவது அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந்தறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
 துணைவலியுந் தூக்கிச் செயல்.

(பரி-ரை.) எ-து,—தான் செய்யக்கருதிய வினைவலியையும் அதனைச் செய்து முடிக்குந் தன்வலியையும் அதனை விலக்கலுறும் மாற்றான்வலியையும் இருவர்க்குந் துணையாவார் வலியையும் சீர்தூக்கித் தன்வலிமிகுமாயின் அவ்வினையைச் செய்க, எ-று.

இந்நால்வகைவலியுள் வினைவலி அரண்முற்றலும் கோடலும் முதலிய தொழிலானும், ஏனைய மூவகையாற்றலானுங் கூறுபடுத்துத் தூக்கப்படும். தன்வலி மிகவின்கட் செய்கவென்ற விதியால், தோற்றல் ஒருதலையாய குறைவின்கண்ணும் வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிகவென்பது பெற்றாம்.

(தெ - ப - ரை.)—வினைவலியும் - (தான் செய்யக்கருதிய) தொழிலது வலிமையையும், தன்வலியும் - (அதனைச்செய்துமுடிக்கும்) தனதுவலிமையையும், மாற்றான்வலியும் - (அதனைவிலக்கும்) பகைவனது வலிமையையும், துணைவலியும் - (இருவர்க்

கும்) துணையாவாரது வலிமைகளையும், தூக்கி - ஆராய்ந்து, செயல் - (தன்வலிமிகுமாயின் அத்தொழிலைச்) செய்யக்கடவன்.

**471.** Let (one) weigh well the strength of the deed (he purposes to do), his own strengh, the strength of his enemy, and the strength of the allies (of both), and then let him act.

---

உ. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(பரி - ரை.) எ - து,—தமக்கியலும் வினையையும் அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து எப்பொழுதும் மனமொழி மெய்களை அதன்கண்வைத்துப் பகைமேற்செல்லும் அரசர்க்கு முடியாத பொருளில்லை, எ-று.

ஒல்வதெனவே வினைவலி முதலாய மூன்றும்அடங்குதலின், ஈண்டறிவதென்றது துணைவலியேயாயிற்று. எல்லாப்பொருளும் எய்துவரென்பதாம். இவையிரண்டுபாட்டானும் வலியின்பகுதியும் அஃதறிந்து மேற்செல்வாரெய்தும் பயனுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒல்வது - (தமக்குச்) செய்யக்கூடுந்தொழிலையும், அறிவது அறிந்து - (அதற்கு) அறியவேண்டும்வலியையும் அறிந்து, அதன்கண்-அதனிடத்து, தங்கி - (மனமொழிகளை எப்போதும்) வைத்து, செல்வார்க்கு - (பகைமேல்) செல்லும் அரசர்க்கு, செல்லாதது - முடியாதபொருள், இல் - இல்லை.

**472.** There is nothing which may not be accomplished by those who, before they attack (an enemy), make themselves acquainted with their own ability, and with whatever else is (needful) to be known, and apply themselves wholly to their object.

---

ங. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(பரி-ரை.) எ-து,—கருத்தாவாதலையுடைய தம்வலியின் அளவறியாதே மனவெழுச்சியால் தம்மின்வலியாரோடு வினைசெய்தலைத் தொடங்கி அவர் அடர்த்தலான் அது செய்து முடிக்கப்பெறாது இடையே கெட்ட அரசர் உலகத்துப் பலர், எ-று.

உடையவென்பது அவாய்நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. மூவகையாற்றலுள்ளுஞ் சிறப்புடைய அறிவுடையார் சிலராதலின், முரிந்தார் பலரென்றார். அதனால் தம்வலியறிந்தே தொடங்குகவென்பது எஞ்சிநின்றது.

(தெ-ப-ரை.)—உடைய - (தலைவனாதலை) உடைய, தம்வலி-தமதுவலிமையினளவை, அறியார் - தெரிந்துகொள்ளாதவராகி, ஊக்கத்தின் - மனவெழுச்சியால், ஊக்கி - (தம்மின் வலியுவ

ரோடு) போர்செய்யத்தொடங்கி, இடைக்கண் -(அவர்முரியஅடி த்தலால் தாம் அதுசெய்து முடிக்கப்பெறாது) நடுவிலே, முரிந் தார் - கெட்டஅரசர், பலர் - (உலகத்துப்) பலராவர்.

**473.** There are many who, ignorant of their (want of) power (to meet it), have haughtily set out to war, and broken down in the midst of it.

---

ச. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(பரி - ரை.) எ - து,—அயல்வேந்தரோடு பொருந்தி ஒழுகுவதுஞ் செய்யாது தன் வலியளவறிவதுஞ் செய்யாது தன்னை வியந்து அவரோடு பகைத்தஅரசன் விரையக் கெடும், எ-று.

காரியத்தைக் காரணமாக உபசரித்து, வியந்தானென்றார். விரைய வென்பது திரிந்துநின்றது. நட்பாயொழுகுதல், வலியறிந்து பகைத்த லென்னும் இரண்டனுள் ஒன்றன்றே அயல்வேந்தரோடு செயற்பாலது, இவையன்றித் தான் மெலியனாய்வைத்து அவரோடு பகைகொண்டானுக்கு ஒருபொழுதும் நிலையின்மையின், விரைந்துகெடுமென்றார். இவையிரண் டுபாட்டானுந் தன்வலி யறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஆங்கு - அயல்வேந்தரிடத்து, அமைந்து - பொருந்தி, ஒழுகான் - நடவாதவனாகியும், அளவு - (தன்வலி) யளவை, அறியான் - அறியாதவனாகியும், தன்னை வியந்தான் - தன்னை மெச்சிக்கொண்டு (அவரோடுபகைத்த) அரசன், விரை ந்து - விரைவாக, கெடும் - கெடுவான்.

**474.** He will quickly perish who, ignorant of his own resources flatters himself of his greatness, and does not live in peace with his neighbours.

---

ரு. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(பரி-ரை.) எ-து,—பீலியேற்றிய சகடமும் அச்சுமுறியும், அப்பீலி யை அது பொறுக்குமளவின்றி மிகுத்தேற்றின், எ-று.

உம்மை சாகாட்டது வலிச்சிறப்பேஅன்றிப் பீலியது நொய்மைச் சிறப்புந்தோன்ற நின்றது. இறுமென்னுஞ்சினைவினை முதன்மேனின்றது. எளியவொன்று பலரோடு பகைகொள்வான் தான் வலியனே ஆயினும் அவர் தொக்கவழி வலியழியுமென்னும் பொருள்தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதலென்னும் அலங்காரம்: இதனை நுவலாநுவற்சி யென்பா ரும் ஒட்டென்பாருமுளர். ஒருவன் தொகுவார்பலரோடு பகைகொள் ளற்கவென்றமையின், இதனான் மாற்றான் வலியும் அவன்துணைவலியும் அறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பீலி - மயிலிறகை, பெய் - ஏற்றிய, சாகா டும் - வண்டியும், அச்சுஇறும் - இருசுமுறியும், அப்பண்டம் -

அம்மயிலிறகை, சாலமிகுத்து - (அதுசுமக்குமளவினல்லாமல்) மிகவும் அதிகப்படுத்தி, பெயின் - ஏற்றினால்.

**475.** The axletree of a bandy, loaded only with peacocks' feathers will break, if it be greatly overloaded.

---

சு. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(பரி-ரை.) எ - து,—ஒருமரக்கோட்டினது நுனிக்கண்ணே ஏறினின்றார் தம்மூக்கத்தால் அவ்வளவினைக் கடந்து மேலும்ஏற வூக்குவராயின், அவ்வூக்கம் அவருயிர்க்கு இறுதியாய் முடியும், எ-று.

நுனிக்கொம்பரென்பது கடைக்கணென்பதுபோலப் பின்முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. பன்மை அறிவின்மைபற்றி இழித்தற்கண் வந்தது. இறுதிக்கேதுவாவதனை இறுதியென்றார். பகைமேற்செல்வான்தொடங்கித் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்று நின்றான் பின் அவ்வளவில் நில்லாது மனவெழுச்சியான் மேலுஞ்செல்லுமாயின், அவ்வெழுச்சி வினைமுடிவிற் கேதுவாகாது அவன் உயிர்முடிவிற்கேதுவாமென்னும் பொருள்தோன்ற நின்றமையின், இதுவும் மேலை அலங்காரம். அளவறிந்து நிற்றல்வேண்டு மென்றமையின், இதனால் வினைவலி யறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கொம்பர் - (ஒருமரக்) கொம்பினது, நுனி-நுனியில், ஏறினார் - ஏறிநின்றவர், அஃது - (தம்வலிமையால்) அவ்வளவினை, இறந்து-கடந்து, ஊக்கின் - மேலும் ஏறவலிமை கொள்வாராயின், உயிர்க்கு - (அவ்வலிமை அவர்) உயிர்க்கு, இறுதியாகிவிடும் - முடிவாகிவிடும்.

**476.** There will be an end to the life of him who, having climbed out to the end of a branch, ventures to go further.

---

எ. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(பரி - ரை.) எ - து,—ஈயுநெறியாலே தமக்குள்ள பொருளின் எல்லையைஅறிந்து அதற்கேற்ப ஈக; அங்ஙனம் ஈதல் பொருளைப் பேணிக்கொண்டொழுகும் நெறியாம், எ-று.

ஈயும்நெறி மேல் இறைமாட்சியுள் வகுத்தலும் வல்லதரசு என்புழி உரைத்தாம். எல்லைக்கேற்ப ஈதலாவது ஒன்றானவெல்லையை நான்கு கூறாக்கி, அவற்றுள் இரண்டனைத் தன்செலவாக்கி, ஒன்றனை மேல் இடர் வந்துழி அது நீக்குதற்பொருட்டு வைப்பாக்கி, நின்றவொன்றனையீதல் பிறரும் "வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" என்றார். பேணிக்கொண்டொழுகுதல் - ஒருவரோடு நட்பிலாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக் கொண்டொழுகுதல். முதலிற்செலவு சுருங்கிற் பொருள் ஒருகாலும் நீங்காதென்பதாம்.

(தெ - ப - ரை.)—ஆற்றின் - (கொடுக்கும்) வழியினாலே, அளவு-(தனக்குள்ள பொருளின்) அளவை, அறிந்து-தெரிந்து, ஈக - (அதற்கு ஏற்கக்) கொடுக்கக்கடவன், அது - அக்கொடுத்தலானது, பொருள் - பொருளை, போற்றிவழங்குநெறி - காப்பாற்றிக்கொண்டு நடக்கும் வழியாம்.

**477.** Let a man know the measure of his ability (to give,) and let him give accordingly; such giving is the way to preserve his property.

---

அ. ஆகா றளவிட் டிதாயினுங் கேடில்லைப்
போகா றகலாக் கடை.

(பரி-ரை.) எ - து,—அரசர்க்குப் பொருள்வருகின்ற நெறியளவு சிறிதாயிற்றாயினும் அதனாற்கேடில்லையாம், போகின்ற நெறியளவு அதனிற் பெருகாதாயின், எ-று.

இட்டிதெனவும் அகலாதெனவும் வந்தபண்பின்தொழில்கள் பொருண்மேனின்றன. பொருளென்பது அதிகாரத்தான் வருவித்து, அளவென்பது பின்னுங்கூட்டி உரைக்கப்பட்டன. முதலுஞ் செலவுந் தம்முள் ஒப்பினுங் கேடில்லையென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஆகுஆறு - (அரசனுக்குப்பொருள்) வருகின்றவழியானது, அளவு - அளவினால், இட்டிதுஆயினும்-சிறியதாயிருந்தாலும், கேடு இல்லை - (அதனால்) கெடுதல் இல்லை, போகு ஆறு - போகின்றவழி, (அளவு) - அளவினால், அகலாக் கடை - (அதனில்) அதிகப்படாதாயின்.

**478.** Even though the income (of a king) be small, it will not cause his (ruin), if his outgoings be not larger than his income.

---

கூ. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—தனக்குள்ள பொருளின் எல்லையை அறிந்து அதற்கேற்ப வாழமாட்டாதான் வாழ்க்கைகள் உள்ளனபோலத் தோன்றி மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத்தோற்றமும் இன்றிக் கெட்டுவிடும், எ-று.

அவ்வெல்லைக்கேற்ப வாழ்தலாவது அதனிற் சுருங்கக் கூடாதாயின் ஒக்கவாயினும் ஈத்துந் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்திற் கேடு வெளிப்படாமையின், உளபோலத் தோன்றியென்றார். முதலிற்செலவு மிக்கால் வரும் ஏதங் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—அளவு - (தனக்குள்ளபொருளின்) அளவை, அறிந்து - தெரிந்து, வாழாதான் - (அதற்கேற்க) வாழமாட்டாதவனது, வாழ்க்கை - வாழ்க்கைகளானவை, உளபோல- உள்ளவைபோலத் (தோன்றி), இல்லாகி - (மெய்ம்மையால்)

இல்லையாகி, தோன்று - (பின்பு) அத்தோற்றமும் இல்லாமல், கெடும் - அழியும்.

**479.** The prosperity, of him who lives without knowing the measure (of his property), will perish, even while it seems to continue.

---

கo. உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—தனக்குள்ள அளவு தூக்காமைக் கேதுவாய ஒப்புரவாண்மையால் ஒருவன் செல்வத்தினெல்லை விரையக் கெடும், எ-று.

ஒப்புரவேயாயினும் மிகலாகாதென்றமையான், இதுவுமது. இவை நான்குபாட்டானும் மூவகையாற்றலுள் பெருமையின் பகுதியாய பொருள்வலியறிதல் சிறப்பு நோக்கி வகுத்துக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உளவரை - (தனக்கு) உள்ள பொருளினளவை, தூக்காத - ஆராயாமைக்கேதுவாகிய, ஒப்புரவுஆண்மை - உபகாரமுடைமையால், வளவரை - (ஒருவனது) செல்வத்தினளவு, வல்லைக்கெடும் - விரைவாகக்கெடும்.

**480.** The measure of his wealth will quickly perish, whose liberality weighs not the measure of his property.

---

## சகூ - ம் அதி—காலமறிதல்.

அஃதாவது வலியான் மிகுதியுடையனும் பகைமேற்சேறலுற்ற அரசன் அச்செலவிற்கேற்ற காலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது

(பரி - ரை.) எ-து,—தன்னின் வலிதாய கூகையைக் காக்கை பகற்பொழுதின்கண் வெல்லாநிற்கும்; ஆதலால், பகைவரது இகலை வெல்லக் கருதும் அரசர்க்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாது, எ-று.

எடுத்துக்காட்டுவமை. காலமல்லாவழி வலியாற் பயனில்லையென்பது விளக்கி நின்றது. இனிக் காலமாவது வெம்மையுங் குளிர்ச்சியுந் தம்முள் ஒத்து நோய்செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய வுடைத்தாய்த் தானை வருந்தாது செல்லும் இயல்பினதாம். இதனாற் காலத்தது சிறப்புக்கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—காக்கை - காக்கையானது, கூகையை - (தன்னைப்பார்க்கிலும் வலிதாகிய) கோட்டானை, பகல் - பகற்பொழுதில், வெல்லும்-செயிக்கும், (ஆதலால்), இகல் - பகைவ

ளை, வெல்லும் - வெல்லக்கருதுகின்ற, வேந்தர்க்கு - அரசர்க்கு, பொழுதுவேண்டும் - (அதற்கேற்ற) காலம் வேண்டும்.

**481.** A crow will overcome an owl in the day time; so the king who would conquer his enemy must have (a suitable) time.

---

உ. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(பரி - ரை.) எ-து,—அரசன் காலத்தோடு பொருந்த வினைசெய்து ஒழுகுதல் ஒருவர்கண்ணும் நில்லாது நீங்குஞ்செல்வத்தைத் தன்கண் நீங்காமற் பிணிக்குங்கயிறும், எ-று.

காலத்தோடுபொருந்துதல்—காலந்தப்பாமற்செய்தல். தீராமையென்றதனால், தீர்தன்மாலையதென்பது பெற்றும். வினை வாய்த்துவருதலான் அதனின் ஆகுஞ் செல்வம் எஞ்ஞான்றும் நீங்காதென்பதாம்.

(தெ - ப - ரை.)—பருவத்தோடொட்ட - (அரசன்) காலத்தோடுபொருந்த, ஒழுகல் - (தொழில்செய்து) நடத்தல், திருவினை-(ஒருவரிடத்தும் நில்லாதுநீங்குஞ்) செல்வத்தை, தீராமை—(தன்னிடத்து) நீங்காமல், ஆர்க்கும் - கட்டுவதாகிய, கயிறு-கயிறாகும்.

**482.** Acting at the right season, is a cord that will immoveably bind success (to a king.)

---

ந. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(பரி-ரை.) எ-து,—அரசரால் செய்தற்கரிய வினைகளென்று சொல்லப்படுவன உளவோ, அவற்றை முடித்தற்கு ஆம் கருவிகளுடனே செய்தற்கு ஆங்காலம் அறிந்து செய்வராயின், எ-று.

கருவிகளாவன—மூவகையாற்றலும் நால்வகை உபாயங்களுமாம். அவை உளவாயவழியுங் காலம் வேண்டுமென்ப தறிவித்தற்கு, கருவியானென்றார். எல்லாவினையும் எளிதின்முடியுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—கருவியால் - (முடித்தற்குஅமைந்த) காரணங்களுடனே, காலம் - (செய்தற்குஆகும்) காலத்தையும், அறிந்து - தெரிந்து, செயின் - செய்வாராயின், அருவினைஎன்ப-(அரசரால்) செய்தற்குஅரிய தொழில்களென்று சொல்லப்படுவன, உளவோ - உண்டோ.

**483.** Is there any thing difficult for him to do, who acts, with (the right) instruments, at the right time?

---

௪. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் ஞாலமுழுதுந் தானே ஆளக் கருதினன் ஆயினும் அஃது அவன் கையகத்ததாம். அதற்குச் செய்யும் வினையைக் காலமறிந்து இடத்தோடு பொருந்தச் செய்வனாயின், எ-று.

இடத்தானென்பதற்கு மேற்கருவியா னென்பதற்கு உரைத்தாங்குரைக்க. கைகூடாதனவும் கைகூடுமென்பதாம். இவை மூன்றுபாட்டானுங் காலமறிதற்பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—காலம் - காலத்தை, கருதி - அறிந்து, இடத்தால் - இடத்தோடுபொருந்த, செயின் - (அதற்காகச்செய்யுந் தொழிலைச்) செய்வானாயின், ஞாலம் - (ஒருவன்) பூமிமுழுவதையும், கருதினும் - (தானேஆள) நினைத்தாலும், கைகூடும்-(அது) அவன் கைக்குள் இருந்ததாம்.

**484.** Though (a man) should meditate (the conquest of) the world, he may accomplish it, if he acts in the right time, and at the right place.

---

௫. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(பரி - ரை.) எ-து,—தப்பாது ஞாலமெல்லாங் கொள்ளக் கருதும் அரசர் தம் வலிமிகும் ஆயினும் அது கருதாது அதற்கேற்ற காலத்தையே கருதி அதுவருந்துணையும் பகைமேற் செல்லார், எ-று.

தப்பாமை - கருதியவழியே கொள்ளுதல். வலிமிகுதி காலங்கருதி யென்றதனாற் பெற்றாம். அதுகருதாது செல்லின் இருவகைப்பெருமையுந் தேய்ந்து வருத்தமும் உறுவராகலின், இருப்பரென்றார். இருத்தலாவது நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டலென்னும் அறுவகைக்குணங்களுள் மேற்செலவிற்கு மாறாயது. இதனாற் காலம் வாராவழிச் செய்வது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கலங்காது - தப்பாமல், ஞாலம் - பூமி முழுவதையும், கருதுபவர் - (கைக்கொள்ள) நினைக்குமரசர், காலம் - (தம்வலி மிகுமாயினும் அதைநினையாமல் அதற்கேற்ற) காலத்தையே, கருதி-நினைத்து, இருப்பர்-(அதுவருமளவும் பகை மேற்செல்லாது) காத்திருப்பர்.

**485.** They who thoughtfully consider and wait for the (right) time (for action,) may successfully meditate (the conquest of) the world.

---

௬. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(பரி - ரை.) எ-து,—வலிமிகுதியுடைய அரசன் பகைமேற்செல்லாது காலம் பார்த்திருக்கின்ற இருப்பு பொருகின்ற தகர் தன்பகை கெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குந் தன்மைத்து, எ-று.

உவமைக்கண் தாக்கற் கென்றதனுல், பொருளினும் வென்றியெய்தற் பொருட்டென்பது கொள்க. இதனுல் அவ்விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை)—ஊக்கமுடையான்-மிகுந்த வலிமையுடைய அரசன், ஒடுக்கம் - (பகைமேற்செல்லாது) காலம்பார்த்திருக்கின்ற இருப்பு, பொருதகர் - சண்டைசெய்கின்ற ஆட்டுக்கடா, தாக்கற்கு - (தன்பகைகெடப்) பாய்தற்பொருட்டு, பேரும்தகைத்து - பின்னேகால்வாங்கிப்போம் தகைமைத்து.

**486.** The self-restraint of the energetic (while waiting for a suitable opportunity,) is like the drawing back of a fighting-ram in order to butt.

---

எ. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(பரி-ரை.) எ-து,—அறிவுடைய அரசர் பகைவர் மிகைசெய்த பொழுதே அவரறியப் புறத்து வெகுளார்; தாம் அவரை வெல்லுதற்கேற்ற காலத்தினையறிந்து அது வருந்துணையும் உள்ளே வெகுள்வர். எ-று.

பொள்ளெனவென்பது குறிப்புமொழி. வேரார் வேர்ப்பரெனக் காரணத்தைக் காரியமாக வுபசரித்தார். அறிய வெகுண்டுழித் தம்மைக் காப்பர் ஆகலிற் புறம்வேராரென்றும், வெகுளியொழிந்துழிப் பின்னும் மிகை செய்யாம லடக்குதல் கூடாமையின் உள்வேர்ப்பரென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—ஒள்ளியவர் - அறிவுடைய அரசர், ஆங்கே-(பகைவர் குற்றஞ்செய்த) அப்பொழுதே, பொள்ளென - (அவரறிய) விரைவாக, புறம்வேரார் - புறத்தில் கோபஞ்செய்யார், காலம்-(அவரை வெல்லுதற்கேற்ற) காலத்தை, பார்த்து-அறிந்து, உள்வேர்ப்பர் - உள்ளேகோபங்கொண்டிருப்பர்.

**487.** The wise will not immediately and hastily shew out their anger; they will watch their time, and restrain it within.

---

அ. செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(பரி-ரை.) எ-து,—தாம் வெல்லக் கருதிய அரசர் பகைவர்க்கு இறுதிக்காலம் வருந்துணையும் அவரைக் கண்டாற்பணிக; பணியவே, அக்காலம் வந்திறும்வழி அவர் தலைகீழின்றி இறுவர், எ-று.

பகைமை ஒழியும் வகை மிகவுந்தாழ்கவென்பார் சுமக்கவென்றும், அங்ஙனந் தாழவே அவர் தம்மைக் காத்த லிகழ்வராகலின் தப்பாமற் கெடுவரென்பார் அவர்தலை கீழாமென்றுங் கூறினர். தலைமேற்கொண்ட தொருபொருளைத் தள்ளுங்கால் அது தன்தலை கீழாக விழுமாகலின், அவ்வியல்பு பெறப்பட்டது. இவை யிரண்டுபாட்டானும் இருக்கும்வழிப் பகைமை தோன்றாம லிருக்கவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செறுநரை - (வெல்லக்கருதிய அரசர்) பகைவரை, காணின்-கண்டால், சுமக்க - (அவர்க்கு முடிவுகாலம் வருமளவும்) பணியக்கடவர், இறுவரைகாணின் - அக்காலம் வந்து முடியுமிடத்து, தலை - (அவரது) தலை, கிழக்காம் - கீழ்விழும்.

**488.** If one meets his enemy, let him show him all respect, until the time for his destruction is come; when that is come, his head will be easily brought low.

---

கூ. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(பரி-ரை.) எ-து,—பகையை வெல்லக்கருதும்அரசர் தம்மாலெய்துதற்கரிய காலம் வந்துகூடியக்கால், அதுகழிவதற்கு முன்பே அது கூடாவழித் தம்மாற் செய்தற்கரிய வினைகளைச் செய்க, எ-று.

ஆற்றன்முதலியவற்றுற் செய்துகொள்ளப்படாமையின் எய்தற்கரியதென்றும், அது தானேவந் தியைதல் அரிதாகலின் இயைந்தக்காலென்றும், இயைந்தவழிப் பின்னில்லாது ஓடுதலின் அந்நிலையேயென்றும், அது பெருவழிச் செய்யப்படாமையின் செய்தற்கரியவென்றுங் கூறினர். இதனுற் காலம் வந்துழிவிரைந்து செய்கவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எய்தற்குஅரியது - (பகையைவெல்லக்கருதும் அரசர்தம்மாலே) பெறுதற்கரியகாலம், இயைந்தக்கால்—வந்து கூடியக்கால், அந்நிலையே - அது நிற்குமளவிலே, செய்தற்குஅரிய - (அக்காலம் வராததற்குமுன்னே) செய்தற்கு அரியனவாயிருந்த தொழில்களை, செயல் - செய்யக்கடவர்.

**489.** If a rare opportunity occurs, while it lasts, let a man do that which is rarely to be accomplished (but for such an opportunity.)

---

கo. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(பரி-ரை.) எ-து,—வினைமேற் செல்லாதிருக்குங்காலத்துக் கொக்கு இருக்குமாறுபோல இருக்க ; மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமற்செய்து முடிக்க, எ-று.

மீன்கோடற்கு இருக்கும் வழி அது வந்தெய்துந்துணையும் முன்னறிந்து தப்பாமற்பொருட்டு உயிரில்லது போன்றிருக்கும் ஆகலானும், எய்தியவழிப் பின்தப்புவதற்கு முன்பே விரைந்து குத்தும் ஆகலானும், இருப்பிற்குஞ் செயலிற்குங் கொக்கே உவமையாயிற்று. கொக்கொக்க வென்றாராயினும் அது கூம்புமாறுபோலக் கூம்புகவென்றும், குத்தொக்க வென்றாராயினும் அது குத்துமாறுபோலக் குத்துகவென்றும் உரைக்கப்படும், இது தொழில் உவமமாகலின். உவமைமுகத்தால் இருப்பிற்குஞ் செயலிற்கும் இலக்கணங் கூறியவாறாயிற்று.

(தெ-ப-ரை.)—கூம்பும்பருவத்து - தொழின்மேற்செல்லாதிருக்கவேண்டுங்காலத்தில், கொக்குஒக்க - கொக்கு இருப்பது

போல் இருக்கக்கடவன்; மற்றுச்சீர்த்தவிடத்து - மற்றைச் (செல் லுங்காலம்) வாய்த்தவிடத்து, அதன்குத்துஒக்க - அது தப்பா மற்குத்திக்கொள்வதுபோலத் தப்பாமற்செய்து முடிக்கக்கடவன்.

**490**. At the time when one should use self-control, let him restrain himself like a heron; and, let him like it, strike, when there is a favourable opportunity.

---

## ருo-ம். அதி—இ ட ன றி த ல்.

அஃதாவது வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கேற்ற நிலத்தினை அறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

(பரி-ரை.) எ-து,—பகைவரை முற்றுதற்காவதோரிடம் பெற்றபின் அல்லது அவர்மாட்டு யாதொரு வினையையுந் தொடங்காதொழிக; அவ ரைச் சிறியரென் றிகழாதொழிக, எ-று.

முற்றுதல்-வளைத்தல். அதற்காம் இடமாவது வாயில்களானும் நூழில் களானும் அவர் புகலொடு போக்கொழியும்வகை அரணினைச் சூழ்ந்து ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள் நலிவிலாத பலபடை யிருப்பிற்கும் மதிலும் அகழு முதலிய அரண்செய்யப்பட்ட அரசிருப்பிற்கும் ஏற்ற நிலக் கிடக்கையும் நீருமுடையது. அது பெற்றால் இரண்டுஞ் செய்க வென்ப தாம்.

(தெ - ப - ரை.)—முற்றும் - (பகைவரை) வளைத்துக்கொள் வதற்கான, இடம்-ஓரிடத்தை, கண்டபின் அல்லது - பெற்றபின் பன்றி, எவ்வினையும் - (அவரிடத்து) யாதொரு தொழிலையும், தொடங்கற்க-தொடங்காதிருக்கக்கடவர்; எள்ளற்க - (அவரைச் சிறியரென்று) இகழாதிருக்கக்கடவர்.

**491**. Let not (a king) despise (an enemy,) nor undertake any thing (against him,) until he has obtained (a suitable) place for besieging him.

---

உ. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

(பரி-ரை.) எ - து,—மாறுபாட்டோடு கூடிய வலியினை உடையார்க் கும் அரணைச்சேர்ந்து ஆகின்ற ஆக்கம் பலபயன்களையுங்கொடுக்கும், எ-று.

மாறுபாடாவது ஞாலம் பொதுவெனப் பொறா அரசர் மனத்தின்கண் நிகழ்வ தாகலானும், வலியுடைமை கூறியவதனானும், இது பகைமேற் சென்ற அரசர்மேற்றாயிற்று. உம்மை சிறப்பும்மை. அரண்சேர்ந்தா மாக்க மும் உண்மையின், ஈண்டாக்கம் விசேடிக்கப்பட்டது. ஆக்கமென்றது அதற்கேதுவாய முற்றினை, அது கொடுக்கும் பயன்களாவன பகைவரால்

தமக்கு நலிவின்மையும், தாம் நிலைபெற்றுநின்று அவரை நலிதலும் முத லாயின.

(தெ-ப-ரை.)—முரண் - மாறுபாட்டை, சேர்ந்த - அடை ந்த, மொய்ம்பினவர்க்கும்-வலிமையை யுடையவருக்கும், அரண் சேர்ந்து - அரணைச்சேர்ந்து, ஆம் - ஆகின்ற, ஆக்கம் - பெருக்க மானது, பலவும் - பலபயன்களையும், தரும் - கொடுக்கும்.

**492.** Even to those who are men of power and expedients, an attack in connection with a fortification will yield many advantages.

---

௩. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

(பரி-ரை.) எ-து,—வலியர்அல்லாதாரும் வலியராய் வெல்வர், அதற் கேற்ற இடத்தினையறிந்து தம்மைக் காத்துப் பகைவர்மாட்டு வினை செய் வாராயின், எ-று.

வினையென்பதூஉம் தம்மையென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. காத்தல் - பகைவரான் நலிவு வாராமல் அரணானும் படையானுங்காத்தல். இவ்வாற்றான் வினைசெய்வாராயின் மேற்சொல்லிய வலியின்றியும் வெல்வ ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—இடன்அறிந்து - (வெல்லுதற்குஏற்ற) இட த்தைஅறிந்து, போற்றி-(தம்மைப்) பாதுகாத்துக்கொண்டு, போ ற்றார்கண்-பகைவரிடத்து, செயின்-(தொழிலைச்) செய்வாராயின், ஆற்றாரும்-வலியில்லாதவரும், ஆற்றி-பலமுடையவராகி, அடுப- வெல்லுவர்.

**493.** Even the powerless will become powerful and conquer, if they select a proper field (of action), and guard themselves, while they make war on their enemies.

---

௪. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(பரி - ரை.) எ - து,—தாம் வினைசெய்தற்கேற்ற இடத்தினையறிந்து சென்ற அரசர் அரணைப் பொருந்திநின்று அதனைச் செய்வாராயின் அவரை வெல்வதாக எண்ணியிருந்த பகைவர் அவ்வெண்ணத்தினை யிழப்பர், எ-று.

அரணென்பது அவாய்நிலையான்வந்தது. எண்ணமென்றது எண் ணப்பட்ட தம்வெற்றியை. அதனையிழப்பரென்றார், அவர் வினைசெய்யா மல் தம்மைக்காத்தமையின். இதனால் அவர் பகைவர் தோற்பரென்ப தாயிற்று. இவை நான்குபாட்டானும் பகைவ ரரணின் புறத்திருப்பார் அதற்காமிடம் அறிதல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இடன் - (தாம்தொழில் செய்தற்கேற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து, துன்னியார்-சென்றஅரசர், துன் னி - (அவ்வரணைப்) பொருந்திநின்று, செயின் - (அத்தொழி

லைச்) செய்வாராயின், எண்ணியார் - (முன்பு அவரை வெல்ல) எண்ணியிருந்தபகைவர், எண்ணம் - அவ்வெண்ணத்தை, இழப்பர்-இழந்துவிடுவர்.

**494.** If they who draw near (to fight) choose a suitable place to approach (their enemy), the latter, will have to relinquish the thought which they once entertained, of conquering them.

---

௫. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

(பரி - ரை.) எ - து,—முதலை ஆழமுடைய நீரின்கண்ஆயின் பிறவற்றையெல்லாந் தான் வெல்லாநிற்கும்; அப்புனலின் நீங்குமாயின் அதனைப் பிறவெல்லாம் வெல்லாநிற்கும், எ-று.

எனவே, எல்லாரும் தந்நிலத்து வலியரென்பது கூறப்பட்டது. பிற வென்பது முன்னுங் கூட்டப்பட்டது. நிலைப்படா நீரின்கண் பிறவெல்லாம் நிற்றல் ஆற்றாமையின் அவையெல்லாம் முதலைக்கெளியவாம், அவை இயங்குதற்குரிய நிலத்தின்கண் அஃதியங்கல் ஆற்றாமையின் அஃதவற்றிற் கெல்லாம் எளிதாமென்றது, மேற்செல்லும் அரசர் பகைவர் நிற்றல்ஆற்றா இடனறிந்து செல்வராயின் அவர்தமக் கெளியராவர்அன்றித் தாம் நிற்றல் ஆற்றாவிடத்துச் செல்வராயின் அவர்க் கெளியராவரொன்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதலென்னும் அலங்காரம். அவரை அவர் நிற்றல் ஆற்றாவிடத்துச் சென்று வெல்கவென்பதாம்.

(தெ-ப-ரை.)—முதலை-முதலையானது, நெடும்புனலுள்-ஆழமுள்ள நீரிலானால், பிற - பிறவுயிர்களையெல்லாம், வெல்லும் - வெல்லாநிற்கும்; புனலின் - அந்நீரினின்றும், நீங்கின்-நீங்கினால், அதனை-அம்முதலையை, பிற-பிறவுயிர்களெல்லாம், அடும்-வெல்லும்.

**495.** In deep water, a crocodile 'will conquer (all other animals); but if it leave the water, other animals will conquer it.

---

௬. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

(பரி - ரை.) எ - து, — நிலத்தின்கண்ஓடுங் கால்வலிய நெடியதேர்கள் கடலின்கண் ஓடமாட்டா ; இனி அக்கடலின்கண் ஓடும் நாவாய்கள் தாமும் நிலத்தின்கண் ஓடமாட்டா, எ-று.

கடலோடாவென்ற மறுதலையடையான் நிலத்தோடுமென்பது வருவிக்கப்பட்டது. கால்வனெடுந்தேரென்பது ஓடுதற்கேற்றகாலும் பெருமையுமுடைய வாயினுமென்பது பட நின்றது. மேற்சென்றார் பகைவரிடங்களைஅறிந்து அவற்றிற்கேற்ற கருவிகளான் வினைசெய்கவென்பது தோன்றநின்றமையின், இதுவும் மேலை அலங்காரமாயிற்று.

(தெ-ப-ரை.)—வல்கால் - (நிலத்தில் ஓடுகின்ற) வலிமை ஆகிய உருளைகளையுடைய, நெடுதேர் - பெரிய தேர்கள், கடல்-கடலில், ஓடா-ஓடமாட்டாவாம்; கடல்ஓடும்-கடலில்ஓடுகின்ற, நாவாயும் - மரக்கலங்களும், நிலத்து - நிலத்தில், ஓடா-ஓடமாட்டாவாம்.

**496.** Wide chariots, with mighty wheels, will not run on the ocean; neither will ships that traverse the ocean, move on the earth.

---

எ. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

(பரி-ரை.) எ-து,—பகையிடத்து வினைசெய்யுந் திறங்களையெல்லாம் ஒழியாதெண்ணி அவற்றை அரசர் இடத்தோடு பொருந்தச் செய்வராயின் அச்செயற்குத் தம்திண்மையல்லது பிறிதொருதுணை வேண்டுவதில்லை, எ-று.

திண்ணியராய் நின்று செய்துமுடித்தலே வேண்டுவதல்லது துணை வேண்டாவென்றார், அவ்வினை தவறுதற் கேதுவின்மையின். இவை மூன்றுபாட்டானும் வினைசெய்தற்காம் இடனறிதல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எஞ்சாமை - (அரசர் பகைவரிடத்துத் தொழில்செய்யும் விதங்களையெல்லாம்) குறையாமல், எண்ணி-ஆலோசித்து, இடத்தால் - இடத்தோடுபொருந்த, செயின்-செய்வாராயின், அஞ்சாமைஅல்லால் - (அச்செயலுக்குத் தமது) தைரியமல்லாமல், துணை - (வேறொரு) துணை, வேண்டா - வேண்டுவதில்லை.

**497.** You will need no other aid than fearlessness, if you thoroughly reflect (on what you are to do), and select (a suitable) place for your operations.

---

அ. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

(பரி-ரை.) எ-து,—பெரும்படையுடைய அரசன் ஏனைச்சிறுபடையுடையானைஅழித்தல் கருதி அவன் புகலைச்சென்று சாருமாயின் அவனால் தன்பெருமை யழியும், எ-று.

செல்லிடம் - அவனுக்குச் செல்லுமிடம். அழிந்துவிடுமென்பது-எழுந்திருக்கு மென்றாற்போல ஒரு சொல். ஊக்கத்தின் அழிவு உடையான் மேலேற்றப்பட்டது. தன்படைப் பெருமைநோக்கி இடநோக்காது செல்லுமின் அஃது அப்படைக் கொருங்குசென்று வினைசெயல் ஆகாமையான் ஆகப் பயிற்சியின்மையான்ஆக அப்பெருமையாற் பயனின்றித் தானழிந்துவிடுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—உறுபடையான் - பெருஞ்சேனையையுடைய அரசன், சிறுபடையான்-சிறியசேனையுடையவனது, செல்லிடம்-செல்லுமிடத்தை, சேரின் - (அவனை அழிக்கநினைத்துச்) சேர்வ

ஞயின், ஊக்கம் - (அவனால்தன்) பெருமை, அழிந்துவிடும்-அழி ந்துபோம்.

**498.** The power of one who has a large army will perish, if he goes into ground where only a small army can act.

---

கூ. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தொ டொட்ட லரிது.

(பரி-உரை.) எ-து,—அரண்அழித்தற்கருமையும் பெருமையாகிய ஆற்றலும்உடையர் அல்லராயினும், வினைக்குரிய மாந்தரை அவருறைகின்ற நிலத்தின்கட்சென்று தாக்குதலரிது, எ-று.

நிலத்தோடென்பது வேற்றுமைமயக்கம். ஆண்மை யுடையாரைச் சிறுமை நோக்கி இருப்பின்கட்சென்று தாக்கின் அவர் அது விட்டுப் போதற் றுணிவினர் அன்றிச் சாதற்றுணிவினராவர் ; ஆகவே, அவர்க்குப் பெரும்படை உடையு மென்பதாம்.

(தெ - ப - உரை.)—சிறைநலனும் - அழித்தற்கு அரியகோட்டையும், சீரும் - பெருமையாகிய வலிமையும், இலர்எனினும் - இல்லாதவராயினும், மாந்தர் - (தொழில்செய்தற்குரிய) மனிதரை, உறைநிலத்தோடு-(அவரது) இருப்பிடத்திற்சென்று, ஒட்டல் - தாக்குதல், அரிது-அரியது.

**499.** It is a hazardous thing to attack men in their own country, although they may neither have power nor a good fortress.

---

கo. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

(பரி - உரை.) எ-து,—பாகர்க்கடங்காவுமாய் வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறுகளை, அவை காலாழும் இயல்பிற்றாய சேற்றுநிலத்துப் பட்டுழி நரி கொல்லும், எ-று.

முகம்—ஆகுபெயர். ஆண்மையும் பெருமையும்உடையாரும் தமக்கேலா நிலத்துச் செல்லின் அவற்றாற் பயனின்றி மிகவும்எளியரால் அழிவரென்பது தோன்ற நின்றமையின், இதுவும் அவ்வலங்காரம். வேலாழ்முகத்த வென்று பாடமோதுவாருமுளர்: வேற்படை குளித்தமுகத்தவாயின் அதுவும் நரியடுதற்கேதுவாய் முடிதலின், அது பாடம் அன்மையறிக. இவை மூன்றுபாட்டானும் பகைவரைச் சார்தலாகாவிடனும் சார்ந்துழிப் படும் இழுக்குங் கூறப்பட்டன.

(தெ-ப-உரை.)—கண்அஞ்சா - பாகர்க்கு அடங்காதனவும், வேல் ஆள் முகத்த - வேலையுடைய ஆட்களைக் கோத்த கொம்புகளையுடையனவும்ஆகிய, களிறு - யானைகளை, கால்ஆழ் - கால் புதைகிற இயல்பினதாகிய, களரில் - சேற்றுநிலத்தில்(அகப்பட்டவிடத்து), நரி - நரிகளானவை, அடும் - கொல்லும்.

**500.** A fox can kill a fearless, warrior-faced, elephant, if it go into mud in which its legs sink down.

---

## ருக-ம் அதி—தெரிந்துதெளிதல்.

அஃதாவது அமைச்சர் முதலாயினோரைப் பிறப்புக் குணம் அறிவென் பனவற்றையும் செயலையும் காட்சி கருத்து ஆகமமென்னும் அளவைக ளானாராய்ந்து தெளிதல். வலிமுதன் மூன்றுமறிந்து பகைமேற்செல்வா னுக்குத் தானை வினையுற்றுச் செய்தற்பொருட்டும் அறைபோகாமற்பொ ருட்டும் இது வேண்டுதலின், அவற்றின்பின் வைக்கப்பட்டது.

க. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

(பரி-ரை.) எ-து,—அரசனாற் றெளியப்படுவானொருவன், அறமும்பொ ருளும் இன்பமும் உயிர்ப்பொருட்டான்வரும் அச்சமும் என்னும் உபதை நான்கின் திறத்தான் மனவியல்பு ஆராய்ந்தால் பின்பு தெளியப்படும், எ-று.

அவற்றுள், அறவுபதையாவது புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரால் இவ்வரசன் அறவோன்அன்மையின் இவனைப் போக்கி அறனும் உரிமையுமுடையான் ஒருவனை வைத்தற்கெண்ணினம், இதுதான் யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்து என்னையெனச் சூளுறவோடு சொல் லுவித்தல். பொருளுபதையாவது சேனைத்தலைவனையும் அவனோடியைந்தா ரையும் விட்டு, அவரான் இவ்வரசன் இவறன்மாலையன் ஆகலின் இவனைப் போக்கிக் கொடையும் உரிமையு முடையானொருவனை வைத்தற்கெண்ணி னம், இதுதான் யாவர்க்கும் இயைந்தது, நின்கருத்தென்னையெனச் சூளுற வோடு சொல்லுவித்தல். இன்பவுபதையாவது தொன்றுதொட்டு உரி மையோடு பயின்றாள் ஓர் தவமுதுமகளைவிட்டு, அவளால் உரிமையுள் இன்னாள் நின்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்கவேண்டுமென்று என் னைவிடுத்தாள், அவனைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமேயன்றிப் பெரும்பொருளுங் கைகூடுமெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். அச்ச வுபதையாவது ஒரு நிமித்தத்தின்மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவன் இல்லின்கண் அழைப்பித்து, இவர் அறைபோவான் எண்ணற்குக் குழீஇயினரொன்று தான் காவல்செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம்முற்படச்செய்து நமக்கினிய அரசனொருவனை வைத்தல், ஈண்டை யாவர்க்கும் இயைந்தது, நின்கருத் தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இந்நான்கினுந் திரிபில னுபவழி எதிர்காலத்துந் திரிபிலனெனக் கருத்தளவையாற் றெளியப்படு மென்பதாம். இவ்வடநூற்பொருண்மையை யுட்கொண்டு இவரோதிய தறியாது பிறரெல்லாம் இதனை உயிரொச்சமெனப் பாடந்திரித்துத் தத் தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்.

(தெ-ப-ரை.)—அறம் - (அரசனால் சோதிக்கப்படுவான் ஒருவன்) தருமமும், பொருள்-பொருளும், இன்பம் - காமமும், உயிர்அச்சம் - உயிர்ப்பொருட்டால்வரும் பயமும், நான்கின் - ஆகிய நான்கு தந்திரங்களினுடைய, திறம்-திறத்தினால், தெரிந்து- (மனநிலை) ஆராய்ந்து, தேறப்படும் - (பின்) தெளியப்படுவான்.

**501.** Let (a minister) be chosen, after he has been tried by means of these four things, viz,—his virtue, (love of) money, (love of) sexual pleasure, and fear of (losing) life.

உ. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்த குடியிற்பிறந்து குற்றங்களினின்று நீங்கி நமக்கு வடு வருங்கொலென்று அஞ்சாநிற்கும் நாணுடையவன் கண்ணதே அரசனது தெளிவு, எ-று.

குற்றங்களாவன மேல்அரசனுக்குச் சொல்லிய வகையாறும், மடி, மறப்பு, பிழைப்பு என்றிவை முதலாயவுமாம். நாண்-இழிதொழில்களின் மனஞ்செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலாகிய ஆகமஅளவையாற் றெரிவன. இந்நான்கும் உடையவனையே தெளிக வென்பதாம்.

(தெ - ப - ரை.)—தெளிவு - (அரசரது) தெளிவானது, குடிப்பிறந்து - (உயர்ந்த) குடியில்பிறந்து, குற்றத்தின் - குற்றங்களினின்றும் நீங்கி, வடு - (நமக்குப்) பழுதுவருமோவென்று, பரியும் - அஞ்சிநிற்கும், நாணுடையான்கட்டே - நாணமுடையவனிடத்ததே.

**502.** (The king's) choice should (fall) on him, who is of good family, who is free from faults, and who has the modesty which fears the wounds (of sin).

---

ௗ. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(பரி-ரை.) எ-து,—கற்றற்கரிய நூல்களைக் கற்று மேற்சொல்லிய குற்றங்கள்அற்றார்மாட்டும் நுண்ணிதாக ஆராயுமிடத்து வெண்மையில்லாமை அரிது, எ-று.

வெண்மை-அறியாமை; அஃது இவர்மாட்டுளதாவது மனத்தது நிலையாமையான் ஒரோவழியாகலின், தெரியுங்காலென்றார். காட்சியளவையாற்றெரிந்தால் அதுவும் இல்லாதாரோ தெளியப்படுவொன்பது குறிப்பெச்சம். இவ்வளவைகளான் இக்குணமுங் குற்றமுந்தெரிந்து குணமுடையாரைத் தெளிகவென்பது இவை மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—அரிய கற்று - (கற்றற்கு) அருமையாகிய நூல்களைக்கற்று, ஆசு - (முன்சொல்லப்பட்ட) குற்றங்கள், அற்றார்கண்ணும் - தீர்ந்தவரிடத்தும், தெரியுங்கால் - (நுட்பமாக) ஆராயுமிடத்து, வெளிறு - அறியாமையானது, இன்மை - இல்லாதிருக்கை, அரிதே-அரியதே.

**503.** When even men, who have studied the most difficult works, and who are free from faults, are (carefully) examined, it is a rare thing to find them without ignorance.

---

ச. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

(பரி - ரை.) எ-து,—குணங்குற்றங்களுள் ஒன்றே உடையார் உலகத்தின்மையின் ஒருவன் குணங்களை ஆராய்ந்து ஏனைக்குற்றங்களையும் ஆராய்ந்து பின் அவ்விருபகுதியுள்ளும் மிக்கவற்றை ஆராய்ந்து அவனை அம்மிக்கவற்றானே அறிக, எ-று.

மிகையுடையவற்றை மிகையென்றார். அவையாவன தலைமையான் ஆதல் பன்மையான்ஆக உயர்ந்தன. அவற்றான்அறிதலாவது குணமிக்கதாயின் வினைக்குரியனென்றும், குற்றமிக்கதாயின் அல்லனென்றும் அறிதல். குணமே உடையார் உலகத்தரியராகலின், இவ்வகை யாவரையுந் தெளிக வென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—குணம் - (குணகுற்றங்களில் ஒன்றே யுடையார் உலகில் இல்லாமையால்) குணங்களை, நாடி - ஆராய்ந்து, குற்றமும் - மற்றைக்குற்றங்களையும், நாடி - ஆராய்ந்து, அவற்றுள் - (பின்பு) அவ்விருவகையுள்ளும், மிகை-மிகுந்தவைகளை, நாடி-ஆராய்ந்து, மிக்க - மிகுந்தவைகளால், கொளல்-(அவரை) அறியக்கடவன்.

**504.** Let (a king) consider (a man's) good qualities, as well as his faults, and then judge (of his character) by that which prevails.

---

ரு. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

(பரி-ரை.) எ-து,—பிறப்புக் குணம் அறி வென்பனவற்றான் மக்கள் எய்தும் பெருமைக்கும் மற்றைச்சிறுமைக்கும் உரைகல்லாவது தாம் தாம் செய்யுங் கருமமே, பிறிதில்லை, எ-று.

இஃது ஏகதேசவுருவகம். மக்களது பெருமையும் சிறுமையும், தப்பாமல் அறியலுறுவார்க்குப் பிறகருவிகளும் உளவாயினும், முடிந்தகருவி செயலென்பது தேற்றேகாரத்தாற் பெற்றும். இதனாற் குணங்குற்றங்கள் காடற்குக் கருவி கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பெருமைக்கும் - (குடிப்பிறப்புக்குணம் அறிவு என்பவற்றால் மனிதரடையும்) பெருமையாகிய பொன்னின்மாற்றறிதற்கும், ஏனைச்சிறுமைக்கும் - மற்றைச்சிறுமையாகிய பொன்னின்மாற்றறிதற்கும், கட்டளைக்கல்-உரைகல்லாவது, தம்தம் கருமமே - தங்கள்தங்கள் செயல்களேயாம்.

**505.** A man's deeds are the touch-stone of his greatness and littleness.

---

சு. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

(பரி-ரை.) எ-து,—சுற்றமில்லாதாரைத் தெளிதலையொழிக; அவர் உலகத்தோடு தொடர்பிலர் ஆகலான் பழிக்கஞ்சார், எ-று.

பற்றிலரென்பதனால் சுற்றமென்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன வொழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலக நடையியல்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின், அவர் தெளியப்படா ரென்பதாம்.

(தெ - ப-ரை.)—அற்றாரை - சுற்றமில்லாதவரை, தேறுதல் ஓம்புக - தெளிதலொழியக்கடவன், அவர் மற்றுப்பற்றிலர்-அவர் உலகத்தோடு சம்பந்தமில ராதலால், பழி - பழிக்கு, நாணார் - அஞ்சார்.

**506.** Let (a king) avoid choosing men who have no relations; such men have no attachments, and therefore have no fear of crime.

---

எ. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

(பரி - ரை.) எ-து,—அன்புடைமை பற்றுக்கோடாகத் தமக்கறிய வேண்டுவன அறியாதாரைத் தெளிதல் அரசனுக்கு எல்லாஅறியாமை யையுங் கொடுக்கும், எ-று.

தன்னோடு அவரிடைநின்ற அன்புபற்றி அரசன் அறிவிலார்மேல் வினையைவைப்பின், அஃது அவரறிவின்மையாற் கெடும், கெட்டால் அவர்க்குளதேயன்றி வினைக்குரியாரை அறியாமை, மேல்வினைவறியாமை முதலாக அவனுக்கு அறியாமை பலவும் உளவாமென்பதாம்.

(தெ-ப-ரை.)—காதன்மை - அன்புடைமை யானது, கந்து ஆக - பற்றுக்கோடாக, அறிவு - (தமக்கு) அறியவேண்டுமவைகளை, அறியார் - அறியாதவரை, தேறுதல் - தெளிதலானது, பேதைமை எல்லாம் - அரசனுக்கு எல்லா அறியாமைகளையும், தரும் - கொடுக்கும்.

**507.** To choose ignorant men, through partiality, is the height of folly.

---

அ. தேரான்பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(பரி - ரை.) எ-து;—தன்னோடு இயைபுடையன் அல்லாதானைப் பிறப்பு முதலியவற்றானும் செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு அத்தெளிவு தன்வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும், எ-று.

இயைபு-தன் குடியொடு கோடாமரபு. இதனானே அதுவும் வேண்டு மென்பது பெற்றாம். தெளிதல் அவன்கண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால் தன்குலத்துப் பிறந்தாரும் பகைவர்கைப்பட்டுக் கீழாய் விடுவரென்பதாம். நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது.

(தெ-ப-ரை.)—பிறனை - தன்னோடுசம்பந்தம் இல்லாதவனை, தேரான்-(பிறப்புமுதலியவற்றாலும் செய்கையாலும்) ஆலோசியாதவனாகி, தெளிந்தான் - தெளிந்த அரசனுக்கு, (அத்தெளிவு),

வழிமுறை - (அவன்) குடிவழிக்கிரமத்திலும், தீரா-நீங்காத, இடு ம்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

**508.** Sorrow that will not leave even his posterity will come upon him who chooses a stranger whose character he has not known.

---

கூ. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

(பரி-ரை.) எ-து,—யாவரையும் ஆராயாது தெளியாதொழிக; ஆரா ய்ந்தபின் தெளியும்பொருள்களை ஐயுறாதொழிக, எ-று.

தேறற்கவெனற் பொதுமையான் ஒருவினைக்கண்ணுந் தெளியலாகா தென்பது பெற்றாம். ஈண்டுத்தேறுக வென்றது தாற்பரியத்தால் ஐயுறவி னது விலக்கின்மேனின்றது. தேறும்பொருளென்றது அவரவர் ஆற்றற் கேற்ற வினைகளை. பொருள்—ஆகுபெயர்.

(தெ-ப-ரை.)—யாரையும் - யாவரையும், தேராது - ஆரா யாமல், தேறற்க - தெளியாதிருக்கக் கடவன், தேர்ந்தபின்-ஆரா ய்ந்தபின், தேறும்பொருள் - தெளியும்பொருள்களை, தேறுக - தெளியக்கடவன்.

**509.** Let (a king) choose no one without previous consideration; after he has made his choice, let him unhesitatingly select for each such duties as are appropriate.

---

௧0. தேரான் றெளிவுந் தெளிந்தான்கணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(பரி - ரை.) எ-து,—அரசன் ஒருவனைஆராயாது தெளிதலும் ஆராய் ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும் அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும், எ-று.

வினைவைத்தபின் ஒருதவறு காணாதுவைத்து ஐயுறுமாயின், அதனை அவ னறிந்து இனி இது நில்லாதென்னுங் கருத்தான் அவ்வினையை கெகிழ்த்து விடும், அதுவே யன்றிப் பகைவரால் எளிதிற் பிரிக்கவும்படும், ஆகலான் தெளிந்தான்கண் ஐயுறவும் ஆகாதாயிற்று. தெளிவிற்கெல்லை கூறியவாறு, இவை ஐந்துபாட்டானும், தெளியப்படாதார் இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற்படும் இழுக்கும், தெளிவிற்கெல்லையும், கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—தேரான் - (அரசன்ஒருவனை) ஆராய்ந்தில னாகி, தெளிவும் - தெளிதலும், தெளிந்தான்கண் - ஆராய்ந்து தெளியப் பட்டவனிடத்தே, ஐயுறவும்-சந்தேகப்படுதலும், தீரா இடும்பை - (அவனுக்கு) நீங்காத துன்பத்தை, தரும் - கொடுக் கும்.

**510.** To make choice of one who has not been examined, and to entertain doubts respecting one who has been chosen, will produce irremediable sorrow.

---

## ருஉ - ம். அதி—தெரிந்துவினையாடல்.

அஃதாவது அத்தெளியப்பட்டாரை அவர் செய்ய வல்ல வினைகளை அறிந்து அவற்றின் கண்ணே ஆளுந்திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

க. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

(பரி - ரை.) எ-து,—அரசன் முதற்கண் ஒருவினையைத் தன்கண் வைத்தால், அதன்கண்ஆவனவும் ஆகாதனவும்ஆய செயல்களை ஆராய்ந்தறிந்து அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய இயல்பினையுடையான் பின் அவனாற் சிறந்தவினைகளிலே ஆளப்படும், எ-று.

தன்னை உரிமை அறிதற்பொருட்டு அகம்புறங்கட்கு நடுவாயதோர் வினையை அரசன் தன்கண்வைத்தவழி அதன்கண் ஆம்செயல்களையே செய்தவன் பின்னும் அவ்வியல்பின னாதல்பற்றி அகமாய வினைக்கண்ணே ஆளப்படுவ னென்பதாயிற்று. புரிந்தவென்ற இறந்தகாலத்தான், முன்உரிமை அறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றாம்.

(தெ-ப-ரை.)—நன்மையும்தீமையும் - (அரசன் முதலில் ஒரு தொழிலைக் கொடுத்தால் அதில்) ஆவனவும் ஆகாதனவும் ஆகிய செயல்களை, நாடி - ஆராய்ந்தறிந்து, நலம் - (அவைகளுள்) ஆமவைகளையே, புரிந்த - விரும்பிய, தன்மையான் - தன்மையுடையவன், ஆளப்படும் - (பின்பு சிறந்ததொழில்களில் அவன்) ஆளப்படுவான்.

**511.** He should be employed (by a king), whose nature leads him to choose the good, after having weighed both the evil and the good in any undertaking.

---

உ. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

(பரி - ரை.) எ-து,—பொருள் வருவாயில்களை விரியச்செய்து அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து அவ்வாயில்கட்கும் பொருட்குஞ் செல்வங்கட்கும் உற்ற இடையூறுகளை நாடோறும் ஆராய்ந்து நீக்கவல்லவன் அரசனுக்கு வினைசெய்க, எ-று.

வாயில்களாவன மேல் இறைமாட்சியுள் இயற்றலும் என்புழி உரைத்தனவும், உழவு, பசுக்காவல், வாணிகமென்னும் வார்த்தையுமாம். செல்வங்களாவன ஆண்டுப் பொருளும் இன்பமுமாக உரைக்கப்பட்டன. இடையூறுகளாவன அரசன் வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வரென்று இவரான் வரும் நலிவுகள்.

(தெ-ப-ரை.)—வாரி - (பொருள்கள்) வரும்வழிகளை, பெருக்கி - விரியச்செய்து, வளம்படுத்து - (அப்பொருள்களாலே) செல்வங்களைவளர்த்து, உற்றவை - (அவ்வரும்வழிகளுக்கும் பொருள்களுக்கும் செல்வங்களுக்கும்) வந்த இடையூறுகளை,

ஆராய்வான் - (தினந்தோறும்) ஆராய்ந்து நீக்கவல்லவன், வினை- தொழிலை, செய்க - (அரசனுக்குச்) செய்யக்கடவன்.

512. Let him do (the king's) work who can enlarge the sources (of revenue,) increase wealth and considerately prevent the accidents (which would destroy it).

---

௩. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

(பரி-ரை.) எ-து,—அரசன்மாட் டன்பும் அவனுக்காவன அறியுமறிவும் அவை செய்தற்கட் கலங்காமையும் அவற்றாற் பொருள் கையுற்றவழி அதன்மேல் அவாவின்மையுமாகிய இந்நான்கு குணங்களையும் நிலைபெற வுடையான்மேலதே வினையைவிட்டிருக்குந் தெளிவு, எ-று.

இந்நான்கு நன்குடைமை இவன் செய்கின்ற வினைக்கண் யாதும் ஆராய வேண்டுவதில்லையென்று அரசன் தெளிதற்கேதுவாகலின், அவனை அதன் பிறப்பிடனுக்கிக் கூறினார். இவைமூன்றுபாட்டானும் ஆடற்குரி யானது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அன்பு - (அரசனிடத்து) அன்பும், அறிவு- (அவனுக்கு ஆவனவற்றை அறியும்) அறிவும், தேற்றம் - (அவை களைச் செய்யுமிடத்து) மனங்கலங்காமையும், அவா இன்மை - (அவற்றால் பொருள் கைகூடியவழி அதன்மேல்) ஆசைஇல்லா மையும், இந்நான்கும் - ஆகிய இந்நான்குகுணங்களையும், நன்கு உடையான்கட்டே - நிலையாக உடையவ னிடத்ததே, தெளிவு- (தொழிலைவிட்டிருக்கும்) தெளிவு.

513. Let the choice (of a king) fall upon him who largely possesses these four things, love, knowledge, a clear mind, and freedom from covetousness.

---

௪. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர்.

(பரி - ரை.) எ-து,—எல்லாவகையானும் ஆராய்ந்து தெளிந்து வினை வைத்த பின்னும் அவ்வினையின் இயல்பானே வேறுபடுமாந்தர் உலகத்துப் பலர், எ-று.

கட்டியங்காரன்போல அரச இன்பத்தினை வெஃகி விகாரப்படுவே தல் லது அதனைக் குற்றமென்றொழிந்து தம்மியல்பி னிற்பார் அரியராகலின், வேறாகுமாந்தர் பலரென்றார். வினை வைப்பதற்குமுன் எல்லாக் குணங்க ளும் உடையராய் வைத்தபின் விகாரப்படுவாரை இடையாய தொரு வினை யைவைத்தறிந்து ஒழிக்க வென்பதாம். இதனான் ஒருவகையா லொழிக்கப் படுவார் இவரென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எனைவகையால் - எல்லாவகைகளாலும், தேறியக்கண்ணும் - ஆராய்ந்துதெளிந்து தொழிலைவைத்த பின் னும், வினைவகையான் - அத்தொழிலின் தன்மையினாலே, வேறு

ஆகும் - வேறுபடுகின்ற, மாந்தர் - மனிதர், பலர் - (உலகத்தில்) பலர்.

**514.** Even when (a king) has tried them in every possible way, there are many men who change, from the nature of the works (in which they may be employed).

ரு. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(பரி-ரை.) எ-து,—செய்யும் உபாயங்களைஅறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்ய வல்லானை அல்லது வினைதான் இவன் நம்மாட்டு அன்புடையனென்று பிறனொருவனை யேவும் இயல்புடைத்தன்று, எ-று.

செய்கிற்பாற்கென்பது வேற்றுமைமயக்கம். அறிவாற்றல்களான் அல்லது அன்பான் முடியாதென இதனால் வினையினது இயல்பு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வினைதான் - தொழில்தான், அறிந்து-(செய்யும்உபாயங்களை) அறிந்து, ஆற்றி - (செயலாலும் இடையூறுகளாலும் வருந்துன்பங்களைப்) பொறுத்து, செய்கிற்பாற்கு அல்லால் - (முடிவு) செய்யவல்லவனுக்குஅல்லது, சிறந்தான்என்று-(இவன்நம்மிடத்து) அன்புடையவனென்று, ஏவல்பாற்றுஅன்று-(வேறொருவனை) ஏவுதற்றன்மையை உடையதன்று.

**515.** (A king's) work can only be accomplished by a man of wisdom and patient endurance; it is not of a nature to be given to one from mere personal attachment.

சு. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(பரி - ரை.) எ - து,—முதற்கண்ணே செய்வானது இலக்கணத்தை ஆராய்ந்து பின் செய்யப்படும் வினையினது இயல்பை ஆராய்ந்து பின் அவனையும் அதனையுங் காலத்தோடுபடுத்துப் பொருந்தஅறிந்து அவனை அதன்கண் ஆடலைச்செய்க, எ-று.

செய்வானது இலக்கணமும் வினையினது இயல்பும் மேலேகூறப்பட்டன. காலத்தோடெய்த வுணர்தலாவது இக்காலத்து இவ்விலக்கண முடையான் செய்யின் இவ்வியல்பிற்றாய வினை முடியுமென்று கூட்டியுணர்தல்.

(தெ - ப - ரை.)—செய்வானை - (முன்னே) செய்பவனிலக்கணத்தை, நாடி-ஆராய்ந்து, வினை - (பின்னே செய்யப்படுந்) தொழிலினியல்பை, நாடி - ஆராய்ந்து, காலத்தோடு - (பின்பு அவனையும் அத்தொழிலையும்) காலத்துடனே (சேர்த்து), எய்த-பொருந்த, உணர்ந்து - அறிந்து, செயல் - (அவனை அத்தொழிலினிடத்துஆளுதல்) செய்யக்கடவன்.

**516.** Let (a king) act, after having considered the agent (whom he is to employ), the deed (he desires to do), and the time which is suitable to it.

எ. இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றுய்ந்
ததனை யவன்கண் விடல்.

(பரி-ரை.) எ-து,—இவ்வினையை இக்கருவியால் இவன் முடிக்க வல்ல னெனக் கூறுபடுத் தாராய்ந்து, மூன்றுந் தம்முள் இயைந்தவழி அவ்வினை யை அவன்கண்ணே விடுக, எ-று.

கருவி-துணைவரும் பொருளும் முதலாயின. வினை முதலும் கருவியும் வினையுந் தம்முள் இயைதலாவது ஓரொன்றேடு ஏனைய இரண்டற்கும் பொ ருந்தமுண்டாதல். விடுதல் - அதற்கு அவனை உரியனுக்குதல்.

(தெ-ப-ரை.)—இதனை - இத்தொழிலை, இதனுல் - இந்தக் காரணத்தால், இவன்முடிக்கும்என்று - இவன் முடிக்கவல்லவ னென்று, ஆய்ந்து - (பகுத்து)ஆராய்ந்து, அதனை - (இம்மூன்று ம் தம்முள் ஒத்திருந்தவிடத்து) அத்தொழிலை, அவன்கண் - அவ னிடத்தே, விடல் - விடக்கடவன்.

517. After having considered, "this man can accomplish this, by these means," let (the king) leave with him the discharge of that duty.

---

அ. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற் குரியனுகச் செயல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனை அரசன் தன்வினைசெய்தற் குரியனுக ஆராய்ந்து துணிந்தால், பின் அவனை அதற் குரியனுமாறு உயரச்செ ய்க, எ-று.

உயரச்செய்தலாவது அதனைத் தானே செய்து முடிக்கும் ஆற்றலுடை யானுக்குதல். அது செய்யாக்காலுங் கெடுமென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—உரிமை - (ஒருவனை அரசன்) தன் தொழில் செய்தற்கு உரியனுயிருக்கையை, நாடியபின்றை - ஆராய்ந்து துணிந்தபின்பு, அவனை அதற்கு - அவனை அத்தொழில்செய்த ற்கு, உரியன்ஆக - உரியவனுக, செயல் - (உயரச்) செய்யக்கட வன்.

518. Having considered what work a man is fit for, let (the king) employ him in that work.

---

கூ. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றுக
நினைப்பானை நீங்குந் திரு.

(பரி-ரை.) எ-து,—எப்பொழுதுந் தன்வினையின்கண்ணே முயறலை யுடையான் அவ்வுரிமையாற்றனக்குக் கேளாய் ஒழுகுகின்ற தன்மையை அது பொறுதார் சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின், திரு மகள் அவனை விட்டுநீங்கும், எ-று.

கேளாயொழுகுகின்ற தன்மையாவது தான் பிறனுய் நில்லாது கேளிர்செய்யும் உரிமையெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப் பாகக் கொண்டு செறக்கருதுமாயின் பின் ஒருவரும் உட்பட்டு முயல்வா

ரில்லையாம், ஆகவே, தன்செல்வங் கெடுமென்பது கருத்து. இந்நான்குபாட்டானும் ஆள்தற்குரியானை ஆளுந்திறங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வினைக்கண் - (தன்) தொழிலினிடத்தே, வினைஉடையான் - (எப்போதும்) முயற்சியையுடையவன், (அவ்வுரிமையால்), கேண்மை - (தனக்குச்) சுற்றமாய் நடக்கின்ற தன்மையை, வேறுஆக - (அதுபொறாதவரது சொல்லைக்கேட்டு) மாறுபட, நினைப்பானை - நினைக்கும் அரசனை, திரு - திருமகள், நீங்கும் - விட்டுநீங்குவாள்.

**519.** Prosperity will leave (the king) who doubts the friendship of the man who steadily labours in the discharge of his duties.

---

௰. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(பரி-ரை.) எ - து,—வினைசெய்வான் கோடாதொழிய உலகு கோடாது ; ஆதலான், அரசன் அவன்செயலை நாள்தோறும் ஆராய்க, எ-று.

அஃதொன்றனையும் ஆராயவே அதன்வழித்தாய உலகமெல்லாம் ஆராய்ந்தானும், அதனால் அவனுரிமை அழியாமற் றன்னுள்ளே ஆராய்ந்து போதுக வென்பதாம். இதனான் ஆண்டவழிச்செய்வது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வினைசெய்வான் - தொழில்செய்பவன், கோடாமை - கோணாதிருக்க, உலகு - உலகமானது, கோடாது- கோணாது ; (ஆதலால்), மன்னன்-அரசன், நாள்தோறும்-தினந்தோறும், நாடுக - (அவன்செயலை) ஆராயக்கடவன்.

**520.** Let a king daily examine the conduct of his servants ; if they do not act crookedly, the world will not act crookedly.

---

## ருங-ம். அதி—சுற்றந்தழால்.

அஃதாவது அரசன் தன்கிளைஞரைத் தன்னில் நீங்காமல் அணைத்தல். வினைசெய்வாரைக் கூறி ஏனைச்சுற்றங் கூறுகின்றார் ஆகலின், இது தெரிந்துவினையாடலின் பின் வைக்கப்பட்டது.

க. பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் செல்வந்தொலைந்து வறியன் ஆயவழியும் விடாது தம்மோடு அவனிடைப் பழமையை எடுத்துக்கொண்டாடும் இயல்புகள் சுற்றத்தார்மாட்டே உளவாவன, எ-று.

சிறப்பும்மை வறியனாயவழிப் பாராட்டப்படாமை விளக்கிநின்றது. பழமை - பற்றறாக் காலத்துத் தமக்குச் செய்த உபகாரம். பிறவெல்லாம் அவன் பற்றற்றபொழுதே தாமும் அவனோடு பற்றறுவாராகலின், ஏகாரந்தேற்றத்தின்கண் வந்தது. இதனாற் சுற்றத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பற்று அற்றகண்ணும் - (ஒருவன்) செல்வந் தொலைந்து வறுமைப்பட்டவிடத்தும், பழமை - (தம்மோடு அவ னிடத்து உண்டாகிய) பழமையை, பாராட்டுதல் - (எடுத்துக்) கொண்டாடுந்தன்மைகள், சுற்றத்தார்கண்ணே-உறவினரிடத்தே, உள - உளவாகும்.

**521.** Even when (a man's) property is all gone, relatives will act towards him with their accustomed (kindness).

---

உ. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(பரி-ரை.) எ-து,—அன்பறாத சுற்றம் ஒருவற்கெய்துமாயின் அஃது அவற்குக் கிளைத்தல் அறாத செல்வங்கள் பலவற்றையுங் கொடுக்கும், எ-று.

உட்பகையினீக்குதற்கு விருப்பறாச் சுற்றமென்றும், தானேவளர்க் கும் ஒருதலையாய செல்வத்தினீக்குதற்கு அருப்பறாவாக்கமென்றும், விசே டித்தார். தொடைநோக்கி விகாரமாயிற்று. இயையினென்பது அதன து அருமை விளக்கி நின்றது. ஆக்கமென்பது ஆகுபெயர். பலவுமென்றது அங்கங்கள் ஆறனையும் நோக்கி. பலர்கூடி வளர்த்தலின், அவை மேன்மேற் கிளைக்குமென்பது கருத்து,

(தெ-ப-ரை.)—விருப்பு அறா - அன்புநீங்காத, சுற்றம்-சுற்ற மானது, இயையின் - (ஒருவனுக்கு) வாய்க்குமாயின், (அது) அரும்புஅறா - கிளைத்தல்நீங்காத, ஆக்கம்பலவும் - பலசெல்வங் களையும், தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்.

**522.** If (a man's) relatives remain attached to him with unchanging love, it will be a source of ever-increasing wealth.

---

௩. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

(பரி-ரை.) எ-து,—அச்சுற்றத்தோடு நெஞ்சு கலத்தல் இல்லாத வன் வாழ்க்கை குளப்பரப்புக் கரையின்றி நீர்நிறைந்தாற்போலும், எ-று.

சுற்றத்தோடென்பது அதிகாரத்தான் வந்தது. நெஞ்சுகலப்புத் தன்னளவும் அதனளவும் உசாவுதலான் வருவதாகலின், அளவளாவென் பது ஆகுபெயர். வாழ்க்கையென்றதூஉம் அதற்கேதுவாய செல்வங்களை. நிறைதலென்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் தாங்குவார் இன்மையின் புறத் துப்போமென்பதாம்.

(தெ-ப-ரை.)—அளவளாஇல்லாதான் - (அச்சுற்றத்தோடு) நெஞ்சுகலத்த லில்லாதவனது, வாழ்க்கை - செல்வம், குளவ ளா - குளப்பரப்பானது, கோடுஇன்றி - கரையில்லாமல், நீர் நிறைந்துஅற்று - நீர்நிறைந்தாற்போலும்.

**523.** The wealth of one who does not mingle freely with his relatives, will be like the filling of water in a spacious tank, that has no banks.

---

ச. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(பரி-ரை.) எ-து,—செல்வம் பெற்றவதனால் ஒருவன் பெற்ற பயனாவது தன்சுற்றத்தால் தான் சூழப்படும்வகை அதனைத் தழீஇ ஒழுகுதல், எ-று.

பெற்றவென்பதனுள் அகரமும் அதனானென்பதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி விகாரத்தாற்றொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற் கேதுவாகலின், இதனைச் செல்வத்திற்குப் பயனென்றார். இவை மூன்றுபாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற்கேதுவும் அரணும் பயனுமாமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செல்வம் - செல்வத்தை, பெற்றத்தால்- பெற்ற அதனால், பெற்றபயன் - (ஒருவன்) பெற்றபயனாவது, சுற்றத்தால் - (தன்) சுற்றத்தினாலே, தான்சுற்றப்பட - தான்சூழப்படும்வகை, ஒழுகல் – (அச்சுற்றத்தைத்) தழுவிநடத்தலாம்.

**524.** To live surrounded by relatives, is the advantage to be derived from the acquisition of wealth.

---

ரு. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலையும் இன்சொற் சொல்லுதலையும் வல்லனாயின் தம்மிற்றொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும், எ-று.

இரண்டும் அளவறிந்தாற்றுதல் அரிதென்பதுதோன்ற, ஆற்றினென்றார். தம்மிற்றொடர்தலாவது சுற்றத்தது சுற்றமும் அதனது சுற்றமுமாய் அவற்றாற் பிணிப்புண்டுவருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமுமென்ப.

(தெ-ப-ரை.)—கொடுத்தலும் - (ஒருவன்சுற்றத்திற்கு) (வேண்டுவன) கொடுத்தலையும், இன்சொலும் - இனியசொற் சொல்லுதலையும், ஆற்றின் - செய்யவல்லவனாயின், அடுக்கிய – (தம்மில்) தொடர்ந்த, சுற்றத்தால் (பலவகைச்) சுற்றத்தாலும், சுற்றப்படும் - சூழப்படுவான்.

**525.** He will be surrounded by numerous relatives who manifests generosity and affability.

---

சு. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் மிக்ககொடையை உடையனுமாய் வெகுளியை விரும்பானும் ஆயின் அவன்போலக் கிளையுடையார் இவ்வுலகத்தில்லை, எ-று.

மிக்ககொடை - ஒன்றானும் வறுமையெய்தாமற் கொடுத்தல். விரும்பாமை-இஃதுஅரசற்கு வேண்டுவதொன்றென்று அளவிறந்து செய்யாமை.

(தெ-ப-ரை.)—பெருங்கொடையான் - (ஒருவன்) மிகுந்த கொடையையுடையவனும், வெகுளி - கோபத்தை, பேணான் - விரும்பாதவனும் (ஆனால்), அவனின் - அவனைப்போல, மருங்கு உடையார் - சுற்றமுடையவர், மாநிலத்து - இப்பெரிய உலகத்தில், இல் - இலர்.

**526**. No one, in all the world, will have so many relatives (about him), as he who makes large gifts, and does not give way to anger.

---

எ. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

(பரி-ரை.) எ-து,—காக்கைகள் தமக்கிரையாயின கண்டவழி மறையாது இனத்தை அழைத்து அதனோடுங் கூட வுண்ணாநிற்கும்; சுற்றத்தான் எய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினை உடையார்க்கே உளவாவன, எ-று.

அவ்வாக்கங்களாவன பகையின்மையும், பெருஞ்செல்வம் உடைமையும் முதலாயின. எச்சவும்மையான் அறமும் இன்பமுமே அன்றிப் பொருளும் எய்துமென்பது பெறுதும். அப்பெற்றித்தாய இயல்பென்றது தாம் நுகர்வனவெல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.

(தெ-ப-ரை.)—காக்கை - காகங்கள், கரவா - (இரைகண்டவிடத்து) மறைக்காமல், கரைந்து - (இனத்தை) அழைத்து, உண்ணும் - (அதனோடு) உண்ணாநிற்கும்; ஆக்கமும் - (சுற்றத்தால் வரும்) செல்வங்களும், அன்னநீரார்க்கே - அப்படிப்பட்டகுணத்தை யுடையவர்க்கே, உள - உள்ளனவாகும்.

**527**. The crows do not conceal (their prey), but will call out for others (to share with them) while they eat it; wealth will be with those who show a similar disposition (towards their relatives).

---

அ. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(பரி - ரை.) எ-து,—எல்லாரையும் ஒருதன்மையராக நோக்காது அரசன் தத்தந் தகுதிக்கேற்ப நோக்குமாயின் அச்சிறப்புநோக்கி அவனை விடாது வாழுஞ் சுற்றத்தார் பலர், எ-று.

உயர்ந்தார் நீங்குதல்நோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடா தொழுகுதல் நோக்கி வரிசைநோக்கை விதித்தார். இந்நான்குபாட்டானுஞ் சுற்றந்தழுவும் உபாயங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வேந்தன் - அரசன், பொதுநோக்கான்-எல்லாரையும் ஒருதன்மையாக நோக்காமல், வரிசை ஆ - அவரவர் தகுதிக்கு ஏற்க, நோக்கின் - நோக்குவானாயின், அதுநோக்கி-அச்

சிறப்புநோக்கி, வாழ்வார்பலர் - (அவனைவிடாது) வாழுஞ்சுற்றத்தார் பலர்.

**528.** Many relatives will live near a king, when they observe that he does not look on all alike, but that he looks on each man according to his merit.

---

௬. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

(பரி - ளா.) எ - து,—முன்தமராய் வைத்துத் தன்னோடு அமராது யாதானுமொரு காரணத்தால் தன்னைப் பிரிந்துபோயவர் பின்னும் வந்து சுற்றமாதல் அவ்வமராமைக்காரணம் தன்மாட்டில்லையாகத் தானே யுளதாம், எ-று.

அமராமைக் காரணமின்றி யென்றதனுன், முன் அஃதுண்டாய்த் துறத்தல் பெற்றும்: அஃதாவது, அரசன் தான் நெறிகெடவொழுகல் வெறுப்பன செய்தலென்றிவை முதலியவற்றான் வருவது. ஆக்கம் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடையராய சுற்றத்தார்க்குச் செயற்கையான் வந்த நீக்கம் அதனை ஒழிய ஒழியும், ஒழிந்தால் அவர்க்கன்புசெய்து கொள்ளவேண்டா, பழைய இயல்பாய் நிற்குமென்பார், வருமென்றார்.

(தெ-ப-.ளா.)—தமர் ஆகி - (முன்பு) சுற்றத்தாராயிருந்து, தன் துறந்தார் - யாதோ ஒருகாரணத்தால் தன்னைப்பிரிந்துபோனவர், சுற்றம் - (பின்னும்வந்து) சுற்றத்தாராகுதல், அமராமைக் காரணம் - அப்பொருந்தாமையின்காரணம், இன்றி - (தன்னிடத்து) இல்லையாக, வரும் - (தானே) உண்டாகும்.

**529.** Those who have been friends and have afterwards forsaken him, will return and join themselves (to him), when the cause of disagreement is not to be found in him.

---

௫0. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(பரி - ளா.) எ - து,—காரணமின்றித் தன்னிடத்துநின்றும் பிரிந்துபோய்ப் பின்காரணத்தான் வந்த சுற்றத்தானை அரசன் அக்காரணத்தைச் செய்துவைத்து ஆராய்ந்து தழீஇக்கொள்க, எ-று.

வாளா உழைப்பிரிந்தென்றமையின், பிரிதற்குக் காரணம் இன்மை பெற்றும். வருதற்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்துபோய்ப் பகையோடு கூடுமாகலின் இழைத்திருந்தென்றும், அன்பின்றிப் போய்ப் பின்னுங் காரணத்தான் வந்தமையின் எண்ணிக் கொளலென்றுங் கூறினார். பிரிந்துபோய சுற்றத்தாருள் தீமை செய்யப்போய் அதனை ஒழிய வருவானும் அது செய்யாமற்போய்ப் பின் நன்மை செய்யவருவானும் தழுவப்படுமாகலின், தழுவுமாறுமுறையே இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உழை-(காரணமின்றித்) தன்னிடத்தினின்றும், பிரிந்து - பிரிந்துபோய், காரணத்தின் - (பின்பு) காரணத்தால், வந்தானை – வந்தசுற்றத்தானை, வேந்தன் - அரசன், இழைத்துஇருந்து - அக்காரணத்தைச்செய்துவைத்து, எண்ணி - ஆராய்ந்து, கொளல் (தழுவிக்) கொள்ளக்கடவன்.

**530.** When one may have left him, and for some cause has returned to him, let the king fulfil the object (for which he has come back) and thoughtfully receive him again.

## ருச - ம். அதி—பொச்சாவாமை.

அஃதாவது உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தன் முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத்தாராற் பயனுள்ளது இச்சோர்வு இல்வழி யாகலின், இது சுற்றந்தழாலின்பின் வைக்கப்பட்டது.

க. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(பரி - ரை.) எ-து,—மிக்கவுவகைக் களிப்பான் வரும் மறவி அரசனுக்கு அளவிறந்த வெகுளியுனுந் தீது, எ-று.

மிக்கவுவகை-பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதமென்றிவற்றான் வருவது. அளவு பகைவரை அடர்த்தற்கும் கொடியோரை ஒறுத்தற்கும் வேண்டுவது. இறந்தவெகுளி ஒரோவழிப் பகைவரையுங்கொல்லும், இஃது இன்னதன்றித் தன்னையே கோறலின், அதனினுந் தீதாயிற்று.

(தெ-ப-ரை.)—சிறந்தஉவகை – மிகுந்த அகமலர்ச்சியினது, மகிழ்ச்சியின் – களிப்பால் வருவதாகிய, சோர்வு - மறதியானது, இறந்த வெகுளியின் – (அரசனுக்கு) அளவுகடந்த கோபத்தினும், தீதே – தீயதேயாம்.

**531.** More evil than excessive anger, is forgetfulness which springs from the intoxication of great joy.

உ. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் புகழினை அவன் மறவிகெடுக்கும், அறிவினை நிச்சநிரப்புக் கெடுக்குமாறுபோல, எ-று.

நிச்சநிரப்பு-நாள்தோறும் இரவான் வருந்தித் தன்வயிறு நிறைத்தல். அஃது அறிவுடையான்கண் உண்டாயின் அவற்கு இளிவரவானும் பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவன் நன்குமதிப்பினை அழிக்கும்; அதுபோல, மறவியும் புகழுடையான்கண் உண்டாயின் அவற்குத் தற்காவாமையானும் காரியக்கேட்டானும் எள்ளற்பாட்டினை விளைத்து அவன் நன்குமதிப்பினை அழிக்குமென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும் பொச்சாப்பினது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அறிவினை - ஞானத்தை, நிச்சநிரப்பு - நித்தியதரித்திரமானது, கொன்றாங்கு - கெடுக்கும்விதம்போல, பொச்சாப்பு - (ஒருவனுடைய) மறதியானது, புகழை - (அவன்) புகழை, கொல்லும் - கெடுக்கும்.

**532**. Forgetfulness will destroy fame, even as constant poverty destroys knowledge.

---

ங. பொச்சாப்பார்க் கில்லைப் புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(பரி-ரை.) எ - து,—பொச்சாந் தொழுகுவார்க்குப் புகழுடைமை யில்லை; அவ்வின்மை இந்நீதி நூலுடையார்க்கே அன்றி உலகத்து எவ்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது, எ-று.

அரசர்க்கே அன்றி அறமுதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும் அவை கைகூடாமையின் புகழில்லையென்பது தோன்ற, எப்பானூலோர்க்குந் துணிவென்றார்.

(தெ-ப-ரை.)—புகழ்மை - புகழுடையாராயிருக்கையானது, பொச்சாப்பார்க்கு - மறதியுடையவர்க்கு, இல்லை-இலது; அது- அவ்வில்லாமையானது, (இந்நீதி நூலுடையார்க்கே அன்றி), உலகத்து - உலகத்துள்ள, எப்பால்நூலோர்க்கும் - எவ்வகைப்பட்ட நூலுடையவர்க்கும், துணிவு - (ஒப்பமுடிந்த) தெளிவாம்.

**533**. Thoughtlessness will never acquire fame; and this tenet is upheld by all treatises in the world.

---

ச. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(பரி-ரை.) எ-து,—காடு மலை முதலிய அரண்களுள்ளே நிற்பினும், மனத்தின்கண் அச்சமுடையார்க்கு அவற்றாற்பயனில்லை; அதுபோலச் செல்வமெல்லாம் உடையராயினும், மனத்தின்கண் மறவியை உடையார்க்கு அவற்றாற் பயனில்லை, எ-று.

நன்மைக்கேதுவாகலின், நன்கென்றார். அச்சமுடையார் நின்ற அரணழியுமாறுபோல மறவியுடையாருடைய செல்வங்களும் அழியுமென்பதாயிற்று.

(தெ - ப - ரை.)—அச்சம்உடையார்க்கு - (மனத்தின்கண்) அச்சமுடையார்க்கு, அரண் - (காடுமலை முதலாகிய) அரணங்களில் (இருந்தாலும்), இல்லை - (அவைகளாலே பயன்) இல்லை; ஆங்கு - அதுபோலவே, பொச்சாப்புஉடையார்க்கு - மறதியுடைவர்க்கு, நன்கு-செல்வமெல்லாம் (உடையராயிருந்தாலும்), இல்லை- (அவைகளாலேபயன்) இல்லை.

**534**. Just as the coward has no defence (by whatever fortifications he may be surrounded), so the thoughtless has no good (whatever advantages he may possess.)

---

௫. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(பரி - ஊ.) எ-து,—தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை அவை வருதற்குமுன்னே அறிந்து காவாது மறந்திருந்தான் பின்வந்து உற்றகாலத்துக் காக்கலாகாமையின் அப்பிழைப்பினை நினைந்திரங்கிவிடும், எ-று.

காக்கப்படுந் துன்பங்களாவன சோர்வு பார்த்துப் பகைவர் செய்வன. ஊற்றின்கண்ணென்புழி உருபுஞ்சாரியையும் உடன்றொக்கன. உற்றகாலத்துக் காக்கலாகாமையின், இரங்கிவிடு மென்றார். இவை மூன்று பாட்டானும் பொச்சாப்புடையார்க்கு வரும் ஏதங் கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—முன்உற - (வாராமற்காக்கப்படுந் துன்பங்களை அவை வருதற்கு) முற்பட, காவாது - (அறிந்து) காவாமல், இழுக்கியான் - மறந்திருந்தவன், பின் ஊறு - பின் துன்பம் வந்தகாலத்தில் (காக்கக்கூடாமையால்), தன்பிழை - தன்னுடைய அத்தவறு (நினைத்து), இரங்கிவிடும்—இரங்கிவிடுவான்.

**535.** **The thoughtless man, who provides not against the calamities that may happen, will afterwards repent for his fault.**

---

௬. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

(பரி - ரை.) எ-து,—அரசர்க்கு மறவாமைக்குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின் அதனை ஒக்கும் நன்மை பிறிதில்லை, எ-று.

வினைசெய்வார் சுற்றந்தாரென்னுந் தம் பாலார்கண்ணும் ஒப்ப வேண்டுதலின் யார்மாட்டுமென்றும், தாம் பெருகியஞான்றும் சுருங்கியஞான்றும் ஒப்பவேண்டுதலின் என்றுமென்றும், எல்லாக்காரியங்களினும் ஒப்பவேண்டுதலின் வழுக்காமையென்றுங் கூறினார். வாயினென்பது முதனிலைத்தொழிற்பெய ரடியாக வந்த வினையெச்சம். வாய்த்தல்-நேர்படுதல்.

(தெ - ப-ரை.)—இழுக்காமை - (அரசர்க்கு) மறவாமையானது, யார்மாட்டும் - யாவரிடத்தும், என்றும் - எக்காலத்திலும், வழுக்காமை - ஒழிவில்லாமல், வாயின் - வாய்க்குமாயின், அது - அதனை, ஒப்பது - ஒக்கும் நன்மையானது, இல் - இல்லை.

**536.** **There is nothing comparable with the possession of unfailing thoughtfulness at all times, and towards all persons.**

---

௭. அரியவென் றாகாத வில்லைப்பொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(பரி - ரை.) எ - து,—இவை செய்தற்கரியனவென்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்களில்லை, மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின், எ-று.

பொச்சாவாத என்பதன் இறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. அந்தக்கரணமாகலின் கருவியென்றார். இடைவிடாதநினைவும் தப்பாத சூழ்ச்சியும் உடையார்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பொச்சாவாத-மறவாத, கருவியால்-மனத்தால், போற்றிச்செயின் - எண்ணிச்செயின், அரிய என்று - (இவைசெய்தற்கு) அரியனவென்று சொல்லப்பட்டு, ஆகாத இல்லை - முடியாத காரியங்களில்லை.

**537.** There is nothing too difficult to be accomplished, if a man set about it carefully, with unflinching endeavour.

---

அ. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
இகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(பரி-ரை.) எ-து,—நீதிநூலுடையார் இவை அரசர்க்குரியன வென்று உயர்த்துக்கூறிய செயல்களைக் கடைப்பிடித்துச் செய்க, அங்ஙனஞ்செய்யாது மறந்தவர்க்கு எழுமையினும் நன்மையில்லை ஆகலான், எ-று.

அச்செயல்களாவன மூவகைஆற்றலும், நால்வகை உபாயமும், ஐவகைத் தொழிலும், அறுவகைக் குணமும் முதலாய செயல்கள். சாதிதருமமாகிய இவற்றின் வழீஇயோர்க்கும் உள்ளது நிரயத்துன்பமே யாகலின், எழுமையு மில்லென்றார். எழுமை—ஆகுபெயர். இதனாற் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—புகழ்ந்தவை - (நீதி நூலுடையார் இவை அரசர்க்கு உரியவையென்று) உயர்த்திச்சொல்லிய செயல்களை, போற்றி - மறவாது, செயல்வேண்டும் - செய்யக்கடவர், செய்யாது - (அப்படிச்) செய்யாமல், இகழ்ந்தார்க்கு-மறந்தவர்க்கு, எழுமையும் - எழுபிறப்பிலும் வரும் நன்மை, இல் - இல்லை, (ஆதலால்).

**538.** Let (a man) observe and do these things which have been praised (by the wise); if he neglects, and fails to perform them, for him there will be no (happiness) throughout the seven births.

---

கூ. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(பரி-ரை.) எ-து,—அரசர் தம்மகிழ்ச்சிக்கண் தாம் வலியுறும்பொழுது, முற்காலத்து அதனின் ஆய சோர்வாற் கெட்டவர்களை நினைக்க, எ-று.

காரணங்களோடு அவர்க்குளதாய உரிமையை மகிழ்ச்சிமேலேற்றித் தம்மகிழ்ச்சியி னென்றும், இகழ்ச்சியுங் கேடும் உடன்தோன்றுமாகலின் மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்தென்றுங் கூறினார். கெட்டாரை உள்ளவே, நாமும் அவ்வாறே கெடுதுமென்று அதன்கண் மைந்துறாதொன்பது கருத்து. எண்ணுகவென்று பாடமோதுவாரும் உளர்.

(தெ - ப - ரை.)—தம்மகிழ்ச்சியின் - (அரசர்) தமதுமகிழ்ச்சியில், தாம் மைந்துறும்போழ்து-தாம்வலிபட நிற்கும்பொழுது, இகழ்ச்சியின் - (முற்காலத்தில் அம்மகிழ்ச்சியில்தோன்றிய) மறதியினால், கெட்டாரை-கெட்டவர்களை, உள்ளுக-நினைக்கக்கடவர்.

**539.** Let (a king) think of those who have been ruined by neglect, when his mind is elated with joy.

---

௫0. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

(பரி - ரை.) எ - து,—அரசனுக்குத் தான் எய்த நினைத்தபொருளை அந்நினைத்த பெற்றியே எய்துதல் எளிதாம், பின்னும் அதனையே நினைக்கக்கூடுமாயின், எ-று.

அது கூடாதென்பது ஒழிந்து நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அதனையே நினைத்தலாவது மறவியின்றி அதன்கண்ணே முயறல். இவை யிரண்டுபாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உள்ளியது - (அரசன்தான்பெற) நினைத்த பொருளை, எய்தல் - (அந்நினைத்தபடியே) அடைதல், எளிது மன் - எளிதாகும், மற்றும்தான் - பின்னும் அவன், உள்ளியது - அந்நினைத்தபொருளையே, உள்ளப்பெறின்-நினைக்கக்கூடுமானால்.

**540.** It is easy for (one) to obtain whatever he may think of, if he can again think of it.

---

## ௫௫ - ம். அதி—செங்கோன்மை.

அஃதாவது அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒருபாற்கோடாது செவ்விய கோல் போறலின் செங்கோலெனப்பட்டது. வடநூலாரும் தண்டமென்றார். அது சோர்வில்லாத அரசனாற் செயற்பாலதுஆகலின், இது பொச்சாவாமையின்பின் வைக்கப்பட்டது.

க. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(பரி-ரை.) எ - து,—தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை நாடி யாவர்மாட்டுங் கண்ணோடாது நடுவுநிலைமையைப் பொருந்தி அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆராய்ந்து அவ்வளவிற்றாகச் செய்வதே முறையாம், எ-று.

நடுவுநிற்றல் இறைக்கியல்பாகலின் அதனை இறையென்றும், உயிரினுஞ் சிறந்தார்கண்ணும் என்பார் யார்மாட்டுமென்றுங் கூறினார். இறைமை இறையெனவும், செய்வது செய்வஃதெனவும், நின்றன. இதனாற் செங்கோன்மையது இலக்கணங் கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—ஓர்ந்து - (தன்கீழ்வாழ்வார் செய்தகுற்றத்தை) ஆராய்ந்து, யார்மாட்டும் - யாவரிடத்தும், கண்ணோடாது - தாட்சிணியப்படாமல், இறைபுரிந்து - நடுவுநிலைமையை விரும்பி, தேர்ந்து - (அக்குற்றத்திற்குச்சொல்லிய தண்டத்தை நூலோரோடும்) ஆராய்ந்து, செய்வஃதே - அவ்வளவினதாகச் செய்தலே, முறை - நீதியாம்.

**541.** To examine into (the crimes which may be committed), to show no favor (to any one), to desire to act with impartiality towards all, and to inflict (such punishments) as may be wisely resolved on, constitute rectitude.

---

உ. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(பரி-ரை.) எ-து,—உலகத்துயிரெல்லாம் மழையுளதாயின் உளவாகாநிற்குமே எனினும், குடிகள் அரசன் செங்கோலுளதாயின் உளவாகாநிற்கும், எ-று.

நோக்கிவாழ்தல்-இன்றியமையாமை. வானினுயவுணவை வானென்றும், கோலினுய ஏமத்தைக் கோலென்றுங் கூறினர். அவ்வேமம் இல்வழி உணவுளதாயினுங் குடிகட்கு அதனாற் பயனில்லை யென்பதாம்.

(தெ-ப-ரை.)—உலகுஎல்லாம் - உயிர்களெல்லாம், வான்நோக்கி - மழையைநோக்கி, வாழும் - வாழாநிற்கும், (ஆயினும்) குடி - குடிகள், மன்னவன் - அரசனது, கோல்நோக்கி - செங்கோலைநோக்கி, வாழும் - வாழாநிற்கும்.

**542.** When there is rain, the living creation thrives; and so when the king rules justly, his subjects thrive.

---

௩. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(பரி-ரை.) எ - து,—அந்தணர்க்குரித்தாய வேதத்திற்கும் அதனாற் சொல்லப்பட்ட அறத்திற்குங் காரணமாய் நிலைபெற்றது அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோல், எ-று.

அரசர் வணிகரென்னும் ஏனையோர்க்கும் உரிததாயினும், தலைமைபற்றி அந்தணர் நூலென்றார். "மாதவர் நோன்பு மடவார் கற்புங்—காவலன் காவலன்றித் தங்கா" ஆகலின், ஈண்டறமென்றது அவையொழிந்தவற்றை. வேதமும் அறனும் அநாதியாயினுஞ் செங்கோல் இல்வழி நடவாவாகலின், அதனை அவற்றிற்காதியென்றும், அப்பெற்றியே தனக்காதியாவது பிறிதில்லையென்பார் நின்றதென்றுங் கூறினர். இவையிரண்டுபாட்டானுஞ் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—மன்னவன்கோல் - அரசன்செங்கோலானது, அந்தணர்நூற்கும் - அந்தணர்க்கு உரித்தாகிய வேதத்திற்

கும், அறத்திற்கும் - (அதனால் சொல்லப்பட்ட) தருமத்திற்கும், ஆதிஆய் - காரணமாகி, நின்றது - நிலைபெற்றது.

**543.** The sceptre of the king is the firm support of the Vedas of the Brahmin, and of all virtues therein described.

---

ச. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

(பரி - ரை.) எ - து,—தன்குடிகளையும் அணைத்துச் செங்கோலையுஞ் செலுத்தும் பெருநிலவேந்தன் அடியைப் பொருந்தி விடார் உலகத்தார், எ-று.

அணைத்தல் - இன்சொற் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமற்செய்வான் நிலமுழுதும் ஆளுமாகலின் அவனை மாநிலமன்னனென்றும், அவன்மாட்டியாவரும் நீங்காஅன்பின ராவர்ஆகலின் அடிதழீஇ நிற்கு முலகென்றும், கூறினர்.

(தெ - ப - ரை.)—உலகு - உலகத்தார், குடிதழீஇ - (தன்) குடிகளையும்அணைத்துக்கொண்டு, கோல் ஓச்சும்-செங்கோலையும் செலுத்தும், மாநிலமன்னன் - பெரியநிலவேந்தனது, அடிதழீஇ - அடியை அணைத்துக்கொண்டு, நிற்கும்-விடாதுநிற்பார்.

**544.** The world will constantly embrace the feet of the great king who rules over his subjects with love.

---

ரு. இயல்புளி கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(பரி - ரை.) எ-து,—பருவமழையுங் குன்றுதவிளைவும் ஒருங்கு கூடி நூல்கள் சொல்லிய இயல்பாற் செங்கோலைச் செலுத்தும் அரசனது நாட்டின்கண்ணவாம், எ-று.

உளியென்பது மூன்றுவதன் பொருள்படுவதோ ரிடைச்சொல். வானும் நிலனுஞ் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம்.

(தெ-ப-ரை.)—பெயலும்-(காலந்தப்பாத)மழையும், விளையுளும்-(குறையாத) விளைவும், தொக்கு-(ஒருமிக்கக்) கூடி, இயல்புளி - (நூல்கள்சொல்லிய) இயல்பால், கோல்ஓச்சும் - செங்கோலைச்செலுத்தும், மன்னவன் - அரசனது, நாட்ட - நாட்டினுள்ளனவாம்.

**545.** Rain and plentiful crops will ever dwell together in the country of the king who sways his sceptre with justice.

---

சு. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

(பரி - ரை.) எ - து,—மன்னவனுக்குப் போரின்கண் வென்றியைக் கொடுப்பது அவன் எறியும் வேலன்று கோல், அஃதும் அப்பெற்றித்தாவது தான் கோடாதாயின், எ-று.

கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பதென்பார் வேல்அன்றென்ருர் : "மாண்ட—வறநெறி முதற்றே யரசின் கொற்றம்" என்ருர் பிறரும். கோடாதெனென்பது பாடமாயின், கருவியின்தொழில் வினைமுதன்மேனின்றதாக வுரைக்க.

(தெ-ப-ரை.)—மன்னவன் - அரசனுக்கு, வென்றிதருவது—(போரில்) வெற்றியைத்தருவது, வேல்அன்று-(அவன்எறியும்) வேற்படையன்ருகும், கோல் - (அவனது) செங்கோலாகும்; அதுவும் - அக்கோலும், (அவ்வாருவது) கோடாதுஎனின் - (தான்) கோணுதிருக்குமாயின்.

**546.** It is not the javelin that gives victory, but the king's sceptre, if it do no injustice.

---

எ. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

(பரி-ரை.) எ-து,—வையகத்தையெல்லாம் அரசன் காக்கும்; அவன் தன்னை அவனது செங்கோலே காக்கும், அதனை முட்டவந்தவழியும் முட்டாமற்செலுத்துவனுயின், எ-று.

முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான்கண்ணும் தன்கை குறைத்தான்கண்ணுங் காண்க. முட்டாதென்பதன் இறுதிநிலை விகாரத்தாற்ருெக்கது. இவை நான்குபாட்டானும் அதனைச் செலுத்தினுன் எய்தும் பயன் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இறை - அரசன், வையகம்எல்லாம் - பூமிமுழுதையும், காக்கும் - காப்பாற்றுவான்; முறை - (அவனது) செங்கோல், அவனை - அவ்வரசனை, காக்கும் - காப்பாற்றும், முட்டாச்செயின் - முட்டுப்படாமல் அதைச்செலுத்த வல்லவனுயின்.

**547.** The king defends the whole world; and justice, when administered without defect, defends the king.

---

அ. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் ருனே கெடும்.

(பரி - ரை.) எ-து,—முறைவேண்டினுர்க்கு எளிய செவ்வியையுடையனுய் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடும் ஆராய்ந்து நின்றவுண்மைக்கொப்ப முறை செய்யாத அரசன் தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும், எ-று.

எண்பதத்தானென்னும் முற்றுவினையெச்சமும், ஓராவென்னும் வினையெச்சமும், செய்யாவென்னும் பெயரொச்ச எதிர்மறையுஞ் செய்தல் வினைகொண்டன. தாழ்ந்தபதம்-பாவமும் பழியும் எய்தி நிற்கும்நிலை. "அல்லவைசெய்தார்க் கறங்கூற்றம்" ஆகலின், பகைவர்இன்றியுங் கெடுமென்ருர். இதனுன் முறை செலுத்தாதானது கேடு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எண்பதத்தான் - (நீதிவேண்டினோர்க்கு) எளிதாகிய சமயத்தையுடையவனாகி, ஓரா - (அவர்சொல்லியவற்றை நூலோர்பலரோடும்) ஆராய்ந்து, முறைசெய்யா - (நின்ற உண்மைக்கேற்க) நீதிசெய்யாத, மன்னவன்-அரசன், தண்பதத்தால் - தாழ்ந்தபதத்திலே நின்று, தானேகெடும் - (ஒருவர்கெடுக்கவேண்டாமல்) தானேகெடுவான்.

**548.** The king who gives not facile audience (to those who approach him), and who does not examine and pass judgment (on their complaints), will perish in disgrace.

---

கூ. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(பரி - ரை.) எ - து,—குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, அவர்மாட்டுக் குற்றநிகழின் அதனை ஒழிப்பானொறுத்தல் வேந்தனுக்குப் பழியன்று, தொழில்ஆகலான், எ-று.

துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கோறலென ஒறுப்பு மூன்று; அவற்றுள், ஈண்டைக்கெய்துவன முன்னையவென்பது குற்றங்கடிதலென்பதனாற் பெற்றாம். தன்கீழ் வாழ்வாரை ஒறுத்தல் அறன்அன்மையின் வடுவாமென்பதனை ஆசங்கித்து, அஃதாகாது, அரசனுக்கு அவரை அக்குற்றத்தினீக்கித் தூயராக்குதலுஞ் சாதிதரும மென்றார்.

(தெ - ப - ரை.)—குடி - குடிகளை, புறங்காத்து-பிறர்வருத்தாமற்காத்து, ஓம்பி-தானும்வருத்தாமற்காத்து, குற்றம் - (அவரிடத்தில்) குற்றம்உளதாயின், கடிதல் - (அதை நீர்க்கும்பொருட்டுத்) தண்டித்தல், வேந்தன்தொழில் - அரசனது தொழிலாம், (ஆதலால்), வடுஅன்று - பழியன்று.

**549.** In guarding his subjects (against injury from others), and in preserving them himself, to punish crime is not a fault in a king, but a duty.

---

௫0. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

(பரி - ரை.) எ-து,—அரசன் கொடியவர்களைக் கொலையான் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல், உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காத்ததனோடொக்கும், எ-று.

கொடியவரொன்றது தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில்விழைவாரென்றிவர் முதலாயினாரை. இவரை வடநூலார் ஆததாயிகளென்ப. இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழிப் புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ்போன்று நலிவுபலவெய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசற்குச் சாதிதரும மென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானுஞ் செங்

கோல்செலுத்தும் வெண்குடை வேந்தற்குத் தீயார்மாட்டு மூவகையொறுப்பும் ஒழியற்பால அல்லவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வேந்து - அரசன், கொடியாரை - கொடியவர்களை, கொலையின்-கொலையினாலே, ஒறுத்தல்-தண்டித்து (நல்லோரைக் காப்பாற்றல்), பைங்கூழ் - (உழவன்) பயிரை, களைகட்டதனொடு - களையைக்களைந்துகாத்ததனோடு, நேர் - ஒக்கும்.

**550.** For a king to punish criminals with death, is like pulling up the weeds in the green corn.

---

## ருசு-ம். அதி—கொடுங்கோன்மை.

*அஃதாவது அம்முறையினது கோடுதற் றன்மை. ஈண்டும் உவமையின் பெயர் பொருண்மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறாகலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.*

க. கொலைமேற் கொண்டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

(பரி-ரை.) எ-து,—பகைமைபற்றிக் கொல்லுதற்றொழிலைத் தம்மேற்கொண்டொழுகுவாரினுங் கொடியன், பொருள் வெஃகிக் குடிகளையலைத்தற்றொழிலைத் தன்மேற்கொண்டு முறையல்லவற்றைச் செய்தொழுகும் வேந்தன், எ-று.

*அவர் செய்வது ஒருபொழுதைத்துன்பம், இவன் செய்வது எப்பொழுதுந் துன்பமாமென்பதுபற்றி, அவரினுங் கொடியனென்றார். பான்மயக்குறழ்ச்சி. வேந்தென்பது உயர்திணைப் பொருட்கண் வந்த அஃறிணைச்சொல். அலை கொலையினுங் கொடிதென்பதாயிற்று.*

(தெ-ப-ரை.)—அலை - (பொருளை விரும்பிக் குடிகளை) அலைத்தற்றொழிலை, மேற்கொண்டு - (தன்) மேற்கொண்டு, அல்லவை - நீதியல்லாதவைகளைச் செய்து, ஒழுகும் - நடக்கும், வேந்து - அரசன், கொலை - (பகைமைபற்றிக்) கொல்லுதற்றொழிலை, மேற்கொண்டாரின் - (தம்) மேற்கொண்டுநடப்பவரினும், கொடிது-கொடியனவன்.

**551** The king who gives himself up to oppression and acts unjustly (towards his subjects) is more cruel than the man who leads the life of a murderer.

---

உ. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

(பரி-ரை.) எ-து,—ஆறலைக்குமிடத்துத் தனியே வேல்கொண்டு நின்ற கள்வன் ஆறுசெல்வானை நின்கைப்பொருள் தாவென்று வேண்டுதலோடு ஒக்கும், ஒறுத்தற்றொழிலொடு நின்ற அரசன் குடிகளைப் பொருள் வேண்டுதல், எ-று.

வேலொடு நின்றானென்றதனாற் பிறரொடு நில்லாமையும், இரவென்றதனால் இறைப்பொருள் அன்மையும், பெற்றாம். தாராக்கால் ஒறுப்பலென்னுங் குறிப்பினன் ஆகலின், இரவாற்கோடலும் கொடுங்கோன்மையாயிற்று. இவை யிரண்டுபாட்டானுங் கொடுங்கோன்மையது குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கோலொடு - ஒறுத்தற்றொழிலோடு, நின்றான்-நின்றஅரசன், இரவு - (குடிகளைப்பொருள்) வேண்டுதல், வேலொடு - வேல்கொண்டு, நின்றான் - (வழியில்அடித்துப் பறிக்குமிடத்துத்தனியே) நின்ற கள்வன், இடுஎன்றதுபோலும்-(வழிப்போக்கனை நோக்கி உன் கைப்பொருளைத்) தாவென்றுவேண்டுதல் போலும்.

**552**. The request (for money) of him who holds the sceptre, is like the word of a highway robber who stands with a weapon in hand and says "give up your wealth."

---

௩. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

(பரி-ரை.) எ-து,—தன்னாட்டு நிகழுந் தீமைகளை நாடோறும் ஆராய்ந்து அதற்கொக்க முறைமையைச் செய்யாத அரசன் நாடோறும் நாடிழக்கும், எ-று.

அரசனுக்கு நாடு உறுப்பாகலின், அதன்வினை அவன்மேனின்றது. இழத்தல்-பயனெய்தாமை. மன்னவனுடு நாடொறுங் கெடுமென் றுரைப்பாரும் உளர்.

(தெ-ப-ரை.)—நாள்தொறும் - தினந்தோறும், நாடி - (தன்னாட்டில் நடக்கும் தீமைகளை) ஆராய்ந்து, முறை-நீதியை, செய்யா - (அதற்குஒக்கச்) செய்யாத, மன்னவன் - அரசன், நாள்தொறும் - நாள்தோறும், நாடுகெடும்-நாடிழப்பான்.

**553**. The country of the king who does not daily examine into the wrongs done and distribute justice, will daily fall to ruin.

---

௪. கூழுங்குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

(பரி-ரை.) எ-து,—மேல் விளைவது எண்ணாது முறை தப்பச் செய்யும் அரசன் அச்செயலான் முன்னீட்டியபொருளையும் பின்னீட்டுதற்கேதுவாகிய குடிகளையுஞ் சேர இழக்கும், எ-று.

கோடவென்பது திரிந்துநின்றது. முன்னீட்டியபொருள் இழத்தற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

(தெ-ப-ரை.)—சூழாது - (மேல்விளைவை) எண்ணாமல், கோல்கோடி-நீதிதப்ப, செய்யும்-செய்கின்ற, அரசு-அரசன், (அச்

செயலால்) கூழும் - (முன்பு சம்பாதித்துவைத்த) பொருளேயும், குடியும்-(பின்பு பொருள்சேர்ப்பதற்குக் காரணமாகிய) குடிகளை யும், ஒருங்கு - ஒருசேர, இழக்கும் - இழப்பான்.

**554.** The king, who, without reflecting (on its evil consequences), perverts justice, will lose at once both his wealth and his subjects.

---

ரு. அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(பரி - ரை.) எ-து,—அரசன் முறைசெய்யாமையாற் குடிகள் துன்ப முற்று அதனைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீரன்றே அவன் செல் வத்தைக் குறைக்குங் கருவி, எ-று.

அழுதகண்ணீர்-அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய மரத்தை யென்னுமையின், இஃது ஏகதேசவுருவகம். அல்லற்படுத்திய பாவத்தது தொழில் அதற்கேதுவாகிய கண்ணீர்மேனின்றது. அக்கண்ணீரிற்கொடிது பிறிதின்மையின், செல்வங்கடிதிற் றேயுமென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—செல்வத்தை - (அரசன்) செல்வத்தை, தேய்க்கும் - குறைக்கும், படை - ஆயுதம், (அவன் நீதிசெய்யா மையினுலே,) அல்லற்பட்டு - (குடிகள்) துன்பப்பட்டு, ஆற்ருது- (அதனைப்) பொறுக்கமாட்டாமல், அழுத கண்நீர் அன்றே-அழுத கண்ணீர் அன்ருே.

**555.** Will not the tears, shed by a people who cannot endure the oppression which they suffer (from their king), become a saw to waste away his wealth?

---

சு. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி.

(பரி-ரை.) எ - து,—அரசர்க்குப் புகழ்கள்தாம் நிலைபெறுதல் செங் கோன்மையான் ஆம்; அச்செங்கோன்மை யில்லையாயின், அவர்க்கு அப் புகழ்கள்தாம் உளவாகா, எ-று.

விகாரத்தாற்றெக்க மூன்ருவது விரித்து ஆக்கம் வருவித்துரைக்கப் பட்டது. மன்னுதற்கேது புகழாதல் "இந்நிலத்து மன்னுதல் வேண்டி னிசைநடுக" என்பதனுனும் அறிக. மன்னுமை-ஒருகாலும்நிலையாமை. பழிக் கப்பட்டால் ஒளி மன்னுவாம், ஆகவே, தாமும் மன்ன ரென்பதாயிற்று. வென்றி, கொடை முதலியவேதுக்களாற் புகழ் பகுதிப்படுதலின், பன்மை யாற் கூறினர். அவையெல்லாம் செங்கோன்மையில்வழி இலவாமென்ப தாம். இவைநான்குபாட்டானுங் கோடுங்கோலனுயினுன் எய்துங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மன்னர்க்கு-அரசர்க்கு, மன்னுதல்- (புகழ் கள்) நிலைபெறுதல், செங்கோன்மை-நீதியினுலேயாம்; அஃது-

அந்நீதி, இன்றேல்-இல்லையாயின், மன்னர்க்கு - அவ்வரசர்க்கு, ஒளி-அப்புகழ்கள், மன்னாவாம் - நிலைபெறுதலில்லையாம்.

**556.** Righteous government gives permanence to (the fame of) kings; without that their fame will have no endurance.

---

எ. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—மழையில்லாமை வையத்து வாழும் உயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும், அவ்வகைத் துன்பம் பயக்கும் அரசன் தண்ணளியில்லாமை அவனாட்டு வாழுங் குடிகட்கு, எ-று.

சிறப்புப்பற்றித் துளியென்பது மழைமேனின்றது. உயிரென்பது குடிகண்மேனின்றது. மேல் வானோக்கிவாழுமென்றதனை எதிர்மறை முகத்தாற் கூறியவாறு.

(தெ-ப-ரை.)—வேந்தன் - அரசனது, அளிஇன்மை - அருளில்லாமையானது, வாழும் - (அவன்நாட்டில்) வாழும், உயிர்க்கு-குடிகளுக்கு, துளி - மழையினது, இன்மை - இல்லாமையானது, ஞாலத்திற்கு - பூமியில்வாழும் உயிர்களுக்கு, எற்று-எவ்வகைத்துன்பந்தருமோ, அற்று - அவ்வகைத்துன்பம் தரும்.

**557.** As is the world without rain, so live a people whose king is without kindness.

---

அ. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

(பரி - ரை.) எ - து,—முறைசெய்யாத அரசனது கொடுங்கோலின் கீழ் வாழின், யாவர்க்கும் பொருளினது இன்மையினும் உடைமை இன்னாது, எ-று.

தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் வெஃகுவோனது நாட்டுக் கைந்நோவ யாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே ஆகலின், அவ்வுடைமை இன்மையினும் இன்னாதாயிற்று. இவையிரண்டு பாட்டானும் அவனாட்டு வாழ்வார்க்கு வருங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—முறைசெய்யா-நீதியைச்செய்யாத, மன்னவன்-அரசனது, கோல்கீழ்-கொடுங்கோலின்கீழ், படின்—வாழின், இன்மையின் - (யாவர்க்கும்) பொருளில்லாமையினும், உடைமை-பொருளுடைமையானது, இன்னாது - துன்பந்தருவதாம்.

**558.** Property gives more sorrow than poverty, to those who live under the sceptre of a king without justice.

---

கூ. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

(பரி-ரை.) எ-து,—மன்னவன் தான் செய்யும் பொருளை முறை தப்பச் செய்யுமாயின், அவனாட்டுப் பருவமழை இன்றாம்வகை மேகம் பொழிதலைச்செய்யாது, எ-று.

இரண்டிடத்துங் கோட வென்பன திரிந்துநின்றன. உறைகோடுதலாவது பெய்யுங்காலத்துப் பெய்யாமை. அதற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

(தெ - ப - ரை.)—மன்னவன் - அரசன், முறைகோடி-நீதி தப்ப, செய்யின் - (பொருளைச்) சம்பாதிப்பானாயின், (அவனது நாட்டில்) உறை-பருவமழையானது, கோடி - இல்லாமற்போக, வானம் - மேகமானது, பெயல் - பொழிதலை, ஒல்லாது-பொருந்தாது.

**559**. If the king acts contrary to justice, rain will become unseasonable, and the heavens will withhold their showers.

---

௬௦. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

(பரி-ரை.) எ-து,—காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவானாயின் அறனில்லாத அவனாட்டுப் பசுக்களும் பால்குன்றும் அந்தணரும் நூல்களை மறந்து விடுவர், எ-று.

ஆபயன் - ஆவாற்கொள்ளும் பயன். அறுதொழிலாவன—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என இவை. பசுக்கள் பால்குன்றியவழி அவியின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரம், கற்பமென்பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம், ஆகவே, வானம் பெயலொல்லா தென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும் அவனாட்டின்கண் நிகழுங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—காவலன் - காத்தற்குரிய அரசன், காவான் எனின்-(உயிர்களைக்) காப்பாற்றானாயின், (அவனது நாட்டிலே) ஆ - பசுக்களும், பயன்குன்றும் - பால்சுருங்கும், அறுதொழிலோர்-அந்தணரும், நூல் - நூல்களை, மறப்பர் - மறந்துவிடுவர்.

**560**. If the guardian (of the country) neglects to guard it, the produce of the cows will fail, and the men of six-duties viz. the brahmins will forget the vedas.

---

## ௫௭ - ம். அதி—வெருவந்தசெய்யாமை.

அஃதாவது குடிகள் அஞ்சுவதும் பகுதி அஞ்சுவதும் தானஞ்சுவதும் ஆயதொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங்கோன்மைப் பாற்படுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

க. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தன்னின்மெலியார்மேற் சென்றவழி அதனை நடுவாக நின்று ஆராய்ந்து பின்னும் அது செய்யாமற்பொருட்டு அவனை அக்குற்றத்திற்கொப்ப ஒறுப்பானே அரசனாவான், எ-று.

தக்காங்கு ஒத்தாங்கென்பன ஒருசொல்; தகுதியென்பது நடுவுநிலைமையாதல் "தகுதி யெனவொன்று நன்றே" என்பதனானும் அறிக. இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர்காரணம்பற்றி மிகவொறுத்தலும், குடிகளஞ்சும் வினையாதல் பெற்றாம்.

(தெ - ப - ரை.)—தக்காங்கு - (ஒருவன் மெலியவனுக்குத் தீங்குசெய்தவிடத்து) நடுவாய்நின்று, நாடி - (அதனை) ஆராய்ந்து, தலைச்செல்லா வண்ணத்தால் - (பின்னும்) அதுசெய்யாதிருத்தற்பொருட்டு, ஒத்தாங்கு - (அக்குற்றத்துக்கு) ஏற்க, ஒறுப்பது-(அவனைத்) தண்டிப்பவனே, வேந்து - அரசனாவான்.

**561.** He is a king who having equitably examined (any injustice which has been brought to his notice), suitably punishes it, so that it may not be again committed.

---

௨. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர்.

(பரி - ரை.) எ-து,—அவ்வொத்தாங்கு ஒறுத்தல் தொடங்குங்கால் அளவிறப்பச் செய்வார்போற் றொடங்கி, செய்யுங்கால் அளவிறவாமற் செய்க, ஆக்கந் தங்கண் நெடுங்காலம் நிற்றலை வேண்டுவார், எ-று.

கடிதோச்சல் குற்றஞ்செய்வார் அதனையஞ்சுதற்பொருட்டும், மெல்ல வெறிதல் யாவரும் வெருவாமைப்பொருட்டும் ஆம். தொடங்கின அளவிற் குறைதல்பற்றி மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல் எறிதலென்பன இரண்டும் உவமைபற்றி வந்தன. இவையிரண்டு பாட்டானும் குடிகள் வெருவந்த செய்யாமையது இயல்பு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஆக்கம் - செல்வமானது, நெடிது-நெடுங்காலம், நீங்காமை - நீங்காமல் நிற்றலை, வேண்டுபவர் - விரும்புவோர், கடிது ஓச்சி - (தண்டிக்கத் தொடங்கும்போது) அளவு கடக்கச் செய்பவர்போலே தொடங்கி, மெல்லஎறிக - (செய்யும்போது) அளவுகடவாமற் செய்யக்கடவர்.

**562.** Let the king, who desires that his prosperity may long remain, commence his preliminary enquiries with strictness, and then punish with mildness.

---

௩. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—குடிகள் வெருவிய செயல்களைச்செய்து நடக்கும் வெங்கோலன் ஆமாயின் அரசன் ஒருதலையாகக் கடிதிற் கெடும், எ-று.

வெங்கோலனென்பது ஈண்டு வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன ஒருபொருட்கிளவி. அச்செயல்களுங் கேடுகளும் முன்னர்க் கூறப்படும்.

(தெ-ப-ரை.)—வெருவந்தசெய்து-(அரசன் குடிகள்) அஞ்சத்தக்க செயல்களைச்செய்து, ஒழுகும்-நடக்கும், வெங்கோலன் ஆயின் - கொடுங்கோலனாயிருந்தால், ஒருவந்தம்-நிச்சயமாகவே, ஒல்லை - கடிதில், கெடும் - (அவன்) கெடுவான்.

**563**. The cruel-sceptred king, who acts so as to put his subjects in fear, will certainly and quickly come to ruin.

---

ச. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—குடிகளான் நம்மிறைவன் கடியனென்று சொல்லப்படும் இன்னாத சொல்லையுடைய வேந்தன் ஆயுளுங்குறைந்து செல்வமுங் கடிதின் இழக்கும். எ-று.

நெஞ்சு நொந்து சொல்லுதலான், இன்னாமை பயப்பதாய சொல்லை இன்னாச் சொல்லென்றார். உறையென்பது முதனிலைத் தொழிற்பெயர். அஃது ஈண்டு ஆகுபெயராய் உறைதலைச்செய்யும் நாண்மே னின்றது. அது குறைதலாவது அச்சொல்லில்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல்.

(தெ-ப-ரை.)—இறை - (குடிகளால்நம்) அரசன், கடியன் என்று - கடுமையையுடையவனென்று, உரைக்கும் - சொல்லப்படுகிற, இன்னாச்சொல் - துன்பந்தருஞ் சொல்லையுடைய, வேந்தன் - அரசன், உறைகடுகி - ஆயுளுங்குறைந்து, ஒல்லைக்கெடும்-(செல்வமும்) கடிதின் இழப்பான்.

**564**. The king who is spoken of as cruel will quickly perish, his life becoming shortened.

---

ரு. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

(பரி-ரை.) எ-து,—தன்னைக் காணவேண்டுவார்க்குக் காலம்அரியனாய்க் கண்டால் இன்னாத முகத்தினையுடையானது பெரியசெல்வம் பேயாற் காணப்பட்டாற் போல்வதொரு குற்றம் உடைத்து, எ-று.

எனவே, இவையிரண்டும் வெருவந்த செய்தலாயின. இவைசெய்வானைச் சார்வார் இன்மையின், அவனது செல்வந் தனக்கும் பிறர்க்கும் பயன்படாதென்பதுபற்றிப் பேய்கண்டன்ன துடைத்தென்றார். காணுதல்-தன்வயமாக்குதல்.

(தெ-ப-ரை.)—அருஞ்செவ்வி - (தன்னைக் காணவேண்டுவார்க்கு) அரிதாகிய சமயத்தையும், இன்னாமுகத்தான் - (கண்டால்) இனிமையில்லாத முகத்தையும் உடையவனது, பெருஞ்செல்வம் - மிக்கசெல்வமானது, பேய் - பேயால், கண்டு அன்னது - காணப்பட்டாற் போல்வதொருகுற்றத்தை, உடைத்து - உடையதாகும்.

**565**. The great wealth of him who is difficult of access and possesses a sternness of countenance, is like that which has been obtained by a devil.

---

சு. கடுஞ்சொல்லன் கண்ணில ஞயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

(பரி - ரை.) எ - து,—அரசன் கடியசொல்லையும் உடையனுய்க் கண்ணோட்டமும் இலனும் ஆயின், அவனது பெரியசெல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும், எ-று.

"வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு—ளீட்டங்கட் காமமோடேழு" எனப்பட்ட விதனங்களுட் கடுஞ்சொல்லையும் மிகுதண்டத்தையும் இவர் இவ்வெருவந்தசெய்தலுள் அடக்கினுர். கண்—ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடுஞ்சிறுமைத்து அன்றாயினுமென்பார், நெடுஞ்செல்வ மென்றார். நீடுதல்-நீட்டித்தல்.

(தெ-ப-ரை.)—கடுஞ்சொல்லன் - (அரசன்) கடுஞ்சொல்லையுடையவனும், கண்இலன்-கண்ணோட்டமில்லாதவனும், ஆயின்-ஆனால், நெடுஞ்செல்வம் - (அவனது) பெரியசெல்வமானது, நீடுஇன்றி - நீடுதலில்லாமல், ஆங்கே - அப்பொழுதே, கெடும்-அழியும்.

**566**. The abundant wealth of the king whose words are harsh and whose looks are void of kindness, will instantly perish instead of abiding long, with him.

---

எ. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

(பரி - ரை.) எ-து,—கடிய சொல்லும் குற்றத்தின் மிக்க தண்டமும் அரசனது பகை வெல்லுதற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம். எ-று.

கடுமொழியால் தானையும் கையிகந்த தண்டத்தால் தேசமும் கெட்டு முரண் சுருங்கி வருதலின் அவற்றை அரமாக்கி, திண்ணிதாயினுந் தேயுமென்றற்கு அடுமுரணை இரும்பாக்கினுர்; ஏகதேசவுருவகம். அரமென்பதனைத் தனித்தனி கூட்டுக. இவை ஐந்துபாட்டானும், செவ்வியின்மை, இன்னாமுகம் உடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ்சொற் சொல்லல், கையிகந்த தண்டமென்றிவைகள் குடிகளஞ்சும் வினையென்பதூஉம், இவை செய்தான் ஆயுளும் அடுமுரணுஞ் செல்வமும் இழக்கு மென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—கடுமொழியும்-கடுஞ்சொல்லும், கையிகந்த தண்டமும் - (குற்றத்தின்) மேற்பட்டதண்டமும், வேந்தன்-அரசன், அடும் - (தன்பகையை) வெல்லுதற்கு ஏற்ற, முரண்-மாறுபாடாகிய இரும்பை, தேய்க்கும் - குறைக்கும், அரம் - அரமாம்.

**567**. Severe words and excessive punishments will be a file to waste away a king's power for destroying (his enemies).

---

அ. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(பரி - ரை.) எ - து,—காரியத்தைப்பற்றிவந்த எண்ணத்தை அமைச்சர்மேல்வைத்து அவரோடு தானும் எண்ணிச்செய்யாத அரசன் அப்பிழைப் பாற் றன்காரியந் தப்பியவழித் தன்னைச் சினமாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி அவரை வெகுளுமாயின் அவன்செல்வம் நாடோறுஞ் சுருங்கும், எ-று.

அரசர்பாரம் பொறுத்துய்த்தல் ஒப்புமையான் அமைச்சரை இன மென்றும், தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர்மேல் ஏற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர், நீங்கவே, அப்பிழைப்புத் தீருமாறும் அப்பாரம் இனிதுய்க்குமாறும் இலனாமென்பது நோக்கித் திருச்சிறுகு மென்றுங் கூறினார். இதனாற் பகுதியஞ்சும் வினையும் அதுசெய்தான் எய்துங் குற்றமுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—இனத்துஆற்றி - (காரியத்தைப்பற்றிவந்த எண்ணத்தை) மந்திரிகள்மேல்வைத்து, எண்ணாத - (அவரோடு தானும்) எண்ணிச்செய்யாத, வேந்தன் - அரசன், (அதனால் தன் காரியந்தப்பியவிடத்து) சினத்துஆற்றி-(தன்னைக்) கோபத்திலே செலுத்தி, சீறின் - (அவரைக்) கோபிப்பானாயின், திரு - (அவனது) செல்வமானது, சிறுகும் - (நாள்தோறும்) சுருங்கும்.

**568.** The prosperity of that king will waste away, who without reflecting (on his affairs himself), commits them to his ministers, and (when a failure occurs) gives way to anger, and rages against them.

---

கூ. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

(பரி-ரை.) எ-து,—செரு வருதற்குமுன்னே தனக்குப் புகலாவதோர் அரண்செய்துகொள்ளாத அரசன், அது வந்தகாலத்து ஏமம் இன்மையான் வெருவிக் கடிதிற்கெடும், எ-று.

பகையை வெருவிச் சேர்ந்தார் நீங்குதலின் தமியனாய்த் தானும் வெருவி அப்பகைவயத்தனாமென்பதாம். இதனால் தானஞ்சும் வினையும் அது செய்தான் எய்தும் பயனுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—சிறைசெய்யா - (போர்வருதற்குமுன்னே தனக்கொருகாப்பிடமாக) அரண்செய்துகொள்ளாத, வேந்தன் - அரசன், செருவந்தபோழ்தில் - போர்வந்தகாலத்தில், வெருவந்து - (காப்பிடம் இல்லாமையால்) அஞ்சி, வெய்து-விரைவில், கெடும் - கெடுவான்.

**569.** The king who has not provided himself with a place of defence, will in times of war be seized with fear and quickly perish.

---

கo. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

(பரி-ரை.) எ-து,—கடுங்கோலனாய அரசன் நீதிநூன்முதலிய கல்லாதாரைத் தனக்குப் பகுதியாகக் கூட்டாநிற்கும்; அக்கூட்டம் அல்லது நிலத்திற்கு மிகையாய பாரம் பிறிதில்லை, எ-று.

கடுங்கோலென்பது ஈண்டு மிக்க தண்டத்தின்மேற்றன்றி அதனைச் செய்வான் மேற்றாயிற்று. அவன் அது செயதற்கியைவாரை அல்லது கூட்டாமையின் கல்லார்ப்பிணிக்குமென்றும்,ஏனையவற்றையெல்லாம் பொறுக்கின்றது இயல்பாகலின் நிலத்திற்குப் பொறை அதுவல்ல தில்லையென்றுங் கூறினர். நிலக்கென்பது செய்யுள் விகாரம். இதனால் வெருவந்த செய்தலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கடுங்கோல் - கடுங்கோலனாகிய அரசன், கல்லார் - (நீதிநூல்முதலியவற்றைக்) கல்லாதவரை, பிணிக்கும்- (தனக்குக்காரியஞ்செய்பவராகக்) கூட்டாநிற்பன்; அது அல்லது- அக்கூட்டமல்லாமல், நிலக்கு - பூமிக்கு, பொறை-(அதிகமான) பாரம், இல்லை - (வேறே) இல்லை.

**570.** The earth bears up no greater burden than ignorant men whom a cruel sceptre attaches to itself (as the ministers of its evil deeds.)

---

## ருஅ-ம். அதி—கண்ணோட்டம்.

அஃதாவது தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப் பெயர்த்தாயிற்று. மேல் வெருவந்தசெய்யாமையுட் கூறியவதனையே சிறப்புப்பற்றி விரித்துக்கூறுகின்றமையின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

க. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

(பரி-ரை.) எ-து,—கண்ணோட்டமென்று சொல்லப்படுகின்ற சிறப்புடைய அழகு அரசர்மாட்டு உண்டாகலான் இவ்வுலகம் உண்டாகாநின்றது, எ-று.

கழிபெருங்காரிகையென்புழி ஒருபொருட்பன்மொழி இவ்வுயிரழகது சிறப்புணர நின்றது. இவ்வழகு அதற்குறுப்பாகலின், உண்மையானென நிலைபேறுங் கூறினர். இன்மை வெருவந்தசெய்தலாகலின் அவர்நாட்டு வாழ்வார் புலியைஅடைந்த புல்வாயினம்போன்று ஏமஞ்சாராமைபற்றி, இவ்வுலகுண்டென்றார்.

(தெ-ப-ரை.)—கண்ணோட்டம்என்னும் - கண்ணோட்டமென்றுசொல்லப்படுகிற, கழிபெருங்காரிகை – மிக்கசிறப்புடைய அழகானது, உண்மையால் – (அரசரிடத்தே) உண்டாதலால், இவ்வுலகு-இந்தவுலகம், உண்டு-உண்டாகாநின்றது.

**571.** The world exists through that greatest ornament (of princes,) a gracious demeanour.

---

௨. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

(பரி-ரை.) எ-து,—உலகநடை கண்ணோட்டத்தின் கண்ணே நிகழ்வது ஆகலான், அக்கண்ணோட்டமில்லாதார் உளராதல் இந்நிலத்திற்குப் பாரமாதற்கே, பிறிதொன்றற்கு அன்று, எ-று.

உலகநடையாவது—ஒப்புரவுசெய்தல், புறந்தருதல், பிழைத்தனபொறுத்தலென் றிவைமுதலாயின. அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பதுபற்றி, நிலக்குப்பொறை யென்றார். ஆதற்கென்பது சொல்லெச்சம். இவையிரண்டுபாட்டானுங் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகுஇயல் - உலகநடையானது, கண்ணோட்டத்து - கண்ணோட்டத்தினிடத்தே, உள்ளது - உண்டாவது (ஆதலால்), அஃதுஇலார் - அக்கண்ணோட்ட மில்லாதவர், உண்மை - உள்ளவராதல், நிலக்கு - பூமிக்கு, பொறை-பாரமாவதற்கே (வேறொன்றுக்கு அன்று).

**572.** The prosperity of the world springs from the kindliness, the existence of those who have no (kindliness) is aburden to the earth.

---

௩. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
கண்ணோட்ட மில்லாத கண்.

(பரி-ரை.) எ-து,—பண் என்னபயத்ததாம் பாடற்றொழிலோடு பொருத்தம் இன்றாயின்; அதுபோலக் கண் என்ன பயத்ததாம் கண்ணோட்ட மில்லாதவிடத்து, எ-று.

பண் கண் என்பன சாதிப்பெயர். பண்களாவன பாலையாழ் முதலிய நூற்றுமூன்று. பாடற்றொழில்களாவன யாழின்கண் வார்தல் முதலிய எட்டும், பண்ணல் முதலிய எட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலமென்னும் ஐந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ண முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். இவற்றொடியையாதவழிப் பண்ணூற்பயனில்லாத வாறுபோலக் கண்ணோட்டத்தியை யாதவழிக் கண்ணாற் பயனில்லையென்பதாம். கண் சென்றவழி நிகழ்தல்பற்றி அதனை யிடமாக்கினார். இறுதிக்கட் கண்ணென்பதனைக் "கண்ணகன் ஞாலம்" என்புழிப்போலக்கொள்க.

(தெ-ப-ரை.)—பண்-இசையானது, பாடற்கு-பாடற்றொழிலோடு, இயைபுஇன்றேல் - பொருத்தமில்லையாயின், என் ஆம் - என்னபயனுடையதாம், (அதுபோல) கண் - கண்ணானது, கண்ணோட்டம் இல்லாதகண் - கண்ணோட்டமில்லாத இடத்து, என் ஆம் - என்னபயனுடையதாம்.

**573.** Of what avail is a song if it be inconsistant with harmony? What is the use of eyes which possess no kindliness.

---

௪. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

(பரி-ரை.) எ-து,—கண்டார்க்கு முகத்தின்கண் உளபோற்றோன்றல் அல்லது வேறென்ன பயனைச்செய்யும், அளவிறவாத கண்ணோடுதலையுடைய அல்லாத கண்கள், எ-று.

தோன்றல் அல்ல தென்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. கழிகண்ணோட்டத்தி னீக்குதற்கு, அளவினானென்றார். ஒருபயனையுஞ் செய்யாவென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—அளவினால் - அளவோடுகூடி, கண்ணோட்டம்இல்லாத - கண்ணோடுதலில்லாத, கண் - கண்கள், முகத்து - (கண்டோர்க்கு) முகத்தினிடத்து, உளபோல் - உள்ளனபோல் தோன்றுவதல்லது, எவன்செய்யும்-வேறென்னபயனைச்செய்யும்.

**574.** Beyond appearing to be in the face, what good do they do, those eyes in which is no well-regulated kindness ?

---

௫. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் கண்ணிற்கு அணியுங் கலமாவது கண்ணோட்டம்; அக்கலமில்லையாயின் அஃதறிவுடையாராற் புண்ணென்றறியப் படும், எ-று.

வேறணிகலம் இன்மையின் கண்ணிற் கணிகலமென்றும், கண்ணைத் தோன்றினும் நோய்களானும் புலன்பற்றானும் துயர்விளைத்தல்நோக்கிப் புண்ணென்றுணரப் படுமென்றுங் கூறினர். இவை மூன்றுபாட்டானும் ஓடாதநின்ற கண்ணின்குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கண்ணிற்கு - (ஒருவனது) கண்ணிற்கு, அணிகலம் - அணிதற்குரிய ஆபரணம், கண்ணோட்டம்-தாட்சிணியமாம்; அஃது இன்றேல் - அவ்வாபரணம் இல்லையாயின், புண் என்று உணரப்படும் - (அறிவுடையோரால்) அது புண்ணென்று அறியப்படும்.

**575.** Kind looks are the ornaments of the eyes; without these they will be considered (by the wise) to be merely two sores.

---

௬. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

(பரி - ரை.) எ - து,—ஓடுதற்குரிய கண்ணோடியைந்துவைத்து அஃ தோடாதவர் இயங்கா நின்றார் ஆயினும் மண்ணோடு பொருந்திநிற்கின்ற மரத்தினையொப்பர், எ-று.

ஓடாதவொன்புழிச் சினைவினை முதன்மேனின்றது. மரமுங் கண்ணோ டியைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம். இதனைச் சுதைமண் ணோடு கூடிய மரப்பாவையென் றுரைப்பாருமுளர். அஃதுரை அன்மை

காணப்படுங் கண்ணனன்றி அதனுண் மறைந்துநிற்கின்ற ஒருசாருள்ளீட்டாற் கூறினமையானும், "மரக்கண்ணோ மண்ணுள்வார் கண்ணென் றிரக் கண்டாய்" என்பதனானுமறிக.

(தெ-ப-ரை.)—கண்ணோடு - (தாட்சிணியப்படுதற்குஉரிய) கண்ணோடு, இயைந்து - கூடியிருந்தும், கண்ணோடாதவர் - தாட்சிணியப்படாதவர், (நடந்து திரிபவராயினும்), மண்ணோடு இயைந்த - மண்ணோடுபொருந்திநிற்கின்ற, மரத்துஅனையர் - மரத்தை ஒப்பர்.

**576.** They resemble the trees of the earth, who, although they have eyes, never look kindly (on others).

---

எ. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்.

(பரி-ரை.) எ-து,—கண்ணோட்டமில்லாதவர் கண்ணுடையரும்அல்லர்; கண்ணுடையவர் கண்ணோட்டமிலராதலும் இல்லை, எ-று.

கண்ணுடையராயின் காட்சிக்கண்ணே அஃதோடும் என்பது பற்றிக் கண்ணோட்டமில்லவர் கண்ணிலரெனக் கூறிப் பின் அதனை எதிர்மறை முகத்தான் விளக்கினார். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இவையிரண்டுபாட்டானுங் கண்ணோடாதாரது இழிபு கூறப்பட்டது.

(தெ - ப-ரை.)—கண்ணோட்டம் இல்லவர் - தாட்சிணியம் இல்லாதவர், கண்இலர் - கண்ணுடையரும்அல்லர்; கண்உடையார் - கண்ணுடையவர், கண்ணோட்டம்இன்மையும் - தாட்சிணியம் இலராதலும், இல் - இல்லை.

**577.** Men without kind looks are men without eyes: those who (really) have eyes are also not devoid of kind looks.

---

அ. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(பரி - ரை.) எ-து,—முறைசெய்தலாகிய தந்தொழிலழியாமற் கண்ணோட வல்ல வேந்தர்க்கு உரித்தாந்தன்மையுடைத்து இவ்வுலகம், எ-று.

தம்மோடு பயின்றார் பிறரை யிடுக்கண் செய்துழி அவரைக் கண்ணோடி ஒறுதார்க்கு முறை சிதைதல் மேல் "ஓர்ந்துகண் ணோடாது" என்ற முறையிலக்கணத்தானும் பெற்றாம். முறை சிதையவரும்வழிக் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கியல்பாத லருமையின் கண்ணோடவல்லார்க்கென்றும், அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங் காலஞ் சேறலின் உரிமையுடைத்தென்றுங் கூறினார். இதனாற் கண்ணோடுமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இவ்வுலகு - இவ்வுலகம், கருமம் - (நீதி செய்தலாகிய தமது) தொழில், சிதையாமல் - அழியாமல், கண்

ணோட வல்லார்க்கு-தாட்சிணியப்படவல்ல அரசர்க்கு, உரிமை-உரியதாந் தன்மையை, உடைத்து - உடையதாம்.

**578.** The world is theirs (kings) who are able to show kindness, without injury to their affairs, (administration of justice.)

---

சுூ. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(பரி - ரை.) எ - து,—தம்மை ஒறுக்கும் இயல்புடையா ரிடத்தும் கண்ணோட்டம் உடையராய்க் குற்றத்தைப் பொறுக்குமியல்பே அரசர்க்குத் தலையாய இயல்பாவது, எ-று.

பண்பினாரொன்றதனால் அவர்பயிற்சி பெற்றும். ஒறுத்தாற்றும், பொறுத்தாற்று மென்பன ஈண்டொருசொன்னீர.

(தெ-ப-ரை.)—ஒறுத்துஆற்றும் பண்பினார்கண்ணும் - (தம்மை) வருத்தும் இயல்புடையவரிடத்தும், கண்ணோடி - தாட்சிணியமுடையராகி, பொறுத்துஆற்றும் பண்பே - (அக்குற்றத்தைப்) பொறுக்குந் தன்மையே, தலை - (அரசர்க்கு) முதன்மையாகிய நற்குணம்.

**579.** Patiently to bear with, and shew kindness to those who grieve us, is the most excellent of all dispositions.

---

சுo. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(பரி-ரை.) எ-து,—பயின்றார் தமக்கு நஞ்சிடக்கண்டுவைத்தும் கண் மறுக்கமாட்டாமையின் அதனையுண்டு பின்னும்அவரோடு மேவுவர் யாவராலும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுமவர், எ-று.

நாகரிகமென்பது கண்ணோட்டமாதல் "முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி—னஞ்சு முண்பர் நனிநா கரிகர்." என்பதனானுமறிக. அரசர் அவரை ஒறுது கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ்செய்துழியென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ- ப - ரை.)—நயத்தக்க - (யாவராலும்) விரும்பத்தக்க, நாகரிகம் - தாட்சிணியத்தை, வேண்டுபவர் - விரும்புவோர், நஞ்சு-நஞ்சை, பெயக்கண்டும் (பழகினவர்) இடக்கண்டும், உண்டு-(மறுக்கமாட்டால் அதனை) உண்டு, அமைவர் - (பின்னும் அவரோடு) பழகுவர்.

**580.** Those who desire (to cultivate that degree of) urbanity which all shall love, even after swallowing the poison served to them by their friends, will be friendly with them.

---

## ருசு - ம். அதி—ஒற்றாடல்.

அஃதாவது பகை, நொதுமல், நட்பென்னும் மூன்றுதிறத்தார் மாட்டும் நிகழ்ந்தனஅறிதற்கு ஒற்றரையாளுதல். மேற்சொல்லிய இலக்கணத்தனுடைய அரசனுக்குத் தன்னாடு செலுத்துங்காலும் பிறர்நாடு கொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றாராகலின், அவ்விருமைக்கும் இன்றியமையாததாய இது முன்வைக்கப்பட்டது.

க. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

(பரி - ரை.) எ - து,—ஒற்றும் புகழமைந்த நீதிநூலுமாகிய இவையிரண்டனையும் அரசன் தன்னிரண்டு கண்ணுமாகத் தெளிக, எ-று.

ஒற்று தன்கண் செல்லமாட்டாத பரப்பெலாஞ்சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லாம் உணர்த்தலானும், நூல் அங்கிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளையெல்லாஞ் சொல்லி யுணர்த்தலானும், இவ்விரண்டனையுமே தனக்கூனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டு ஒழுகுக என்பதாம். ஒற்றனை ஒற்றென்றார், வேந்தனை வேந்தென்றாற்போல. தெற்றென்க என்பது தெற்றென்என்பது முதனிலையாகவந்த வியங்கோள். அது தெற்றென என்னுஞ் செயவெனச்சத்தானறிக. இதனால் ஒற்றினது சிறப்புக்கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மன்னவன் - அரசன், ஒற்றும் - ஒற்றனும், உரைசான்ற - புகழ்நிறைந்த, நூலும் - (நீதி) நூலும், இவைஇரண்டும் - ஆகிய இவ்விரண்டையும், கண் - (தன்னிரு) கண்களுமாக, தெற்றென்க - தெளியக்கடவன்.

**581. Let a king consider as his eyes these two things, a spy and a book (of laws) universally esteemed.**

---

உ. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(பரி - ரை.) எ - து,—எல்லார்கண்ணும் நிகழ்வன எல்லாவற்றையும் நாள்தோறும் ஒற்றான் விரைந்தறிதல் அரசனுக்கு உரியதொழில், எ-று.

எல்லார்க்குமென்றது மூன்றுதிறத்தாரையும். நான்காவது ஏழாவதன்பொருட்கண் வந்தது. நிகழ்வனவெல்லாமென்றது நல்லவுந் தீயவுமாய சொற்களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்தபொழுதே அவற்றிற்குத் தக்கவழியாகத் தேறுதலாகச் செய்யவேண்டுதலின் வல்லறிதலென்றும், அவ்விருதொழிற்கும் அறிதல் காரணமாகலின் அதனையே உபசாரவழக்காற் றொழிலென்றுங் கூறினர். ஒற்றானென்பது அதிகாரத்தான் வந்தது. இதனால் ஒற்றினது பயன்கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எல்லார்க்கும் - எல்லாரிடத்தும், நிகழ்பவையெல்லாம் - நடப்பன எல்லாவற்றையும், நாள்தோறும் —

தினந்தோறும், வல்அறிதல் - (ஒற்றனாலே) விரைந்தறிதல், வேந்தன்தொழில் - அரசனுக்கு உரிய தொழிலாம்.

**582.** It is the duty of a king to know quickly (by a spy) what all happens, daily, amongst all men.

---

௩. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

(பரி - ரை) எ - து,—ஒற்றினானே எல்லார்கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து அவற்றான் எய்தும் பயனை ஆராயாத அரசன் வென்றி யடையக்கிடந்தது வேறொரு நெறியில்லை, எ-று.

அந்நிகழ்ந்தனவும் பயனும் அறியாது பகைக்கெளியனாதல் பிறிதிற் றீராமையின், கொற்றங்கொளக் கிடந்ததில்லென்றார். இதற்குக் கொள க்கிடந்ததொரு வென்றியில்லையென் றுரைப்பினு மமையும். இதனால் அத் தொழில் செய்யாதவழி வருங்குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஒற்றினான் - ஒற்றனைக்கொண்டு, ஒற்றி - (எல்லாரிடத்தும் நிகழ்ந்தவைகளை) அறிந்துவரச்செய்து, பொருள் - (அவற்றால் அடையும்) பயனை, தெரியா - ஆராய்ந்தறியாத, மன்னவன் - அரசன், கொற்றங் கொளக்கிடந்தது-வெற்றியடையக்கிடந்தது, இல் - (வேறொருவழி) இல்லை.

**583.** There is no way for a king to obtain conquests, who knows not the advantage of discoveries made by a spy.

---

௪. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

(பரி - ரை.) எ - து,—தங்காரியஞ்செய்வார், சுற்றத்தார், பகைவ ரென்று சொல்லப்பட்ட அனைவரையும் சொற்செயல்களான் ஆராய்வானே ஒற்றனாவான், எ-று.

தம்மென்றது அரசனை யுளப்படுத்தி. அவனுக்குக் காரியஞ்செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் தன்அற்றம் ஆராய்தலும் மேற்றேறப்படுதலும் முன்னிட்டுத் தன் னிடத்துச் செய்வனவு மறிந்து, அவற்றிற் கேற்றன செய்யவேண்டுதலின், இம்மூவகையாரையும் எஞ்சாமல் ஆராயவேண்டுமென்பார், அனைவரையு மாராய்வ தொற்றென்றார்.

(தெ-ப-ரை.)—தம் - தம்முடைய, வினைசெய்வார் - காரியஞ்செய்பவர், சுற்றம் - சுற்றத்தார், வேண்டாதார் - பகைவர், என்ற - என்று சொல்லப்பட்ட, அனைவரையும் - யாவரையும், ஆராய்வது-(சொல்லாலும்செயலாலும்) ஆராய்பவனே, ஒற்று- ஒற்றனாவான்.

**584.** He is a spy who watches all men, to wit, those who are in the king's employment, his relatives, and his enemies.

---

ரு. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

(பரி-ரை.) எ-து,—ஒற்றப்பட்டார் கண்டால் ஐயுறாத வடிவோடு பொருந்தி அவர் ஐயுற்றறியலுறின் செயிர்த்து நோக்கிய அவர்கண்ணிற் கஞ்சாது நின்று நான்குபாயமுஞ் செய்தாலும் மனத்துக்கொண்டவற்றை உமிழாமை வல்லவனே ஒற்றனாவான், எ-று.

கடாவென்பது கடுக்கும் பெயரெச்சத்தெதிர்மறை. ஐயுறாத வடிவாவன பார்ப்பார், வணிகர் முதலாயினார் வடிவு.

(தெ-ப-ரை.)—கடா – (எவரது செய்தியை அறிதற்குச் சென்றானோ அவராலே) சந்தேகிக்கப்படாத, உருவொடு – வடிவோடு (பொருந்தி), கண்அஞ்சாது – (அவர்சந்தேகித்து அறியத்தொடங்கினால் கோபித்துப்பார்க்கின்ற அவர்) கண்ணிற்கு அஞ்சாமனின்று, யாண்டும் – நான்குபாயங்களும் செய்தாலும், உகாமை – (மனத்திலுள்ளவைகளை) உமிழாதிருக்க, வல்லதே – வல்லவனே, ஒற்று – ஒற்றனாவான்.

**585**. A spy is one who is able to assume an appearance which may create no suspician (in the minds of others), who fears no man's face, and who never reveals (his purpose).

---

சு. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(பரி-ரை.) எ-து,—முற்றத்துறந்தாராயும் விரதவொழுக்கினராயும் உள்புகுதற் கரியவிடங்களெல்லாம் உள்புக்கு ஆராயவேண்டுவன ஆராய்ந்தறிந்து ஆண்டையார் ஐயுற்றுப் பிடித்து எல்லாத்துன்பமுஞ்செய்து கேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான், எ-று.

விரதவொழுக்கம்—தீர்த்தயாத்திரை முதலாயின. செயினுமென்பது அறவோரொன்று செய்வாரின்மை விளக்கி நின்றது. மேல் நால்வகையுபாயத்தினுஞ் சோர்வின்மை சொல்லிவைத்து ஈண்டுத் தண்டத்தைப் பிரித்துக்கூறியது அதனது பொறுத்தற்கருமைச் சிறப்பு நோக்கி. இதனுள் படிவமென்றதனை வேடமாக்கித் துறந்தார் வேடத்தராகியென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—துறந்தார் – (ஆகி) முழுதுந்துறந்தோராகியும், படிவத்தர் ஆகி – விரதவொழுக்கத்தோராகியும், இறந்து – (போகக்கூடாதவிடங்களிலெல்லாம்) போய், ஆராய்ந்து – (ஆராயவேண்டுவனவற்றைஎல்லாம்) ஆராய்ந்தறிந்து, என்செயினும் – (அவ்விடத்துள்ளோர் சந்தேகித்துப்பிடித்து) என்னதுன்பஞ்செய்து கேட்கினும், சோர்விலது – தன்னைவெளிப்படுத்தாதவனே, ஒற்று – ஒற்றனாவான்.

**586**. He is a spy who, assuming the appearance of an ascetic, goes into (whatever place he wishes), examines into (all that is needful), and never discovers himself, whatever may be done to him.

எ. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று.

(பரி - ரை.) எ - து,—ஒற்றப்பட்டார் மறையச்செய்த செயல்களை அவர்க்குள்ளாயினாராற் கேட்க வல்லனாய்க் கேட்டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணியவல்லவனே ஒற்றனாவான், எ-று.

மறைந்தவை சொல்லுவாரை அறிந்து, அவர் அயிராமற் சென்றொட்டித் தாமேசொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாகச் செயலாக முன்னே விளைத்து,அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறாதார் போன்றுநின்று கேட்கவேண்டுதலின் கேட்கவற்றாகி யென்றும், கேட்டறிந்தவற்றைத் தானே ஐயுற்றுவந்து சொல்லின் அரசனால் அவற்றிற்கேற்ற வினை செய்யலாகாமையின் ஐயப்பாடில்லதே யென்றுங் கூறினார். இவை நான்குபாட்டானும் ஒற்றின திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மறைந்தவை - (எவரது செயல்களை அறியச் சென்றானோ அவரது) மறைவாயுள்ளசெயல்களை, கேட்கவற்றாகி- (அவருக்கு உள்ளானவராலே) கேட்கவல்லவனாகி, அறிந்தவை- (கேட்டு) அறியப்பட்ட அச்செயல்களிலே, ஐயப்பாடு இல்லதே- (பின்) சந்தேகப்படுதலில்லாதவனே, ஒற்று - ஒற்றனாவான்.

**587.** A spy is one who is able to discover what is hidden, and who retains no doubt concerning what he has known.

---

அ. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.

(பரி - ரை.) எ - து,—ஓரொற்றன் ஒற்றி வந்தறிவித்த காரியந்தனையும் பிறனோரொற்றனாலும் ஒற்றுவித்து ஒப்புமை கண்டுகொள்க, எ-று.

ஒற்றப்பட்டாரோ டொத்துநின்று மாறுபடக்கூறலுங் கூடுமாகலின், ஒருவன்மாற்றந் தேறப்படா தென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஒற்று - ஓரொற்றனாலே, ஒற்றி - மறைவாயறிந்துவந்து, தந்த-அறிவிக்கப்பட்ட, பொருளையும்-காரியத்தையும், மற்றும் ஓர் ஒற்றினால் - பின்னும் ஓரொற்றனாலும், ஒற்றி - அறிந்துவரச்செய்து, கொளல் - (ஒப்புமைகண்டு) கொள்ளக்கடவன்.

**588.** Let not a king receive the information which a spy has discovered and made known to him, until he has examined it by another spy.

---

கூ. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(பரி - ரை.) எ - து,—ஒற்றரை ஆளுமிடத்து ஒருவனை ஒருவனறியாமல் ஆள்க அங்ஙனமாண்ட வொற்றர்மூவரை ஒருபொருண்மேல் வேறுவேறுவிட்டால் அம்மூவர் சொல்லும் பயனால் ஒத்தனவாயின், அது மெய்யென்று தெளியப்படும், எ-று.

ஆயினென்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை யொருவனறியின் தம்முளியைந்து ஒப்பக்கூறுவராகலின் உணராமை யாள்கவென்றும், மூவர்க்கும் நெஞ்சொற்றுமைப்படுதலும் பட்டால் நீடுநிற்றலுங் கூடாமையின் தேறப்படுமென்றுங்கூறினர். இதனனே அஃதொத்திலவாயின் பின்னும் ஆராய்கவென்பதூஉம் பெற்ரும்.

(தெ - ப - ரை)—ஒற்று - (ஒற்றரை ஆளுமிடத்து) மற்ருெரொற்றனை, உணராமை - அறியாதிருக்கும்படி, ஆள்க-ஆளக்கடவர், (அப்படி ஆளப்பட்ட ஒற்றர்களுள்), உடன்மூவர் - (ஒருபொருண்மேல் வேறுவேறு விடப்பட்ட) மூவருடைய, சொல்-சொற்களும், தொக்க - (பயனல்) ஒத்திருக்குமாயின், தேறப்படும் - (அப்பொருள் மெய்யென்று) தெளியப்படும்.

**589**. **Let a king employ spies so that one may have no knowledge of the other; and when the information of three agrees together, let him receive it.**

---

கO. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(பரி - ரை.) எ-து,—மறைந்தவை அறிந்து கூறிய ஒற்றின்கட் செய்யுஞ் சிறப்பினை அரசன் பிறரறியச் செய்யாதொழிக; செய்தானயின் தன்னகத்து அடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானும், எ-று.

மறையாவது அவனொற்றனயதூஉம், அவன் கூறியதூஉ மாம். சிறப்புப்பெற்ற இவன் யாவனென்றும் இது பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் இறுப்பாரும் அயலாராகலின், புறப்படுத்தா னாகுமென்ரூர். இவைமூன்றுபாட்டானும் ஒற்றரையாளுமாறும், அவரான் நிகழ்ந்தன அறியுமாறும், அறிந்தாற் சிறப்புச்செய்யுமாறுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—ஒற்றின்கண் - (இரகசியங்களை அறிந்து சொல்லிய) ஒற்றனிடத்துச்செய்யும், சிறப்பு-சிறப்பை, அறிய-(பிறர்) அறிய, செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன்; செய்யின்-செய்வானயின், மறை - (தன்னுள் அடக்கப்படும்) இரகசியங்களை, புறப்படுத்தான் ஆகும் - (தானே) வெளிப்படுத்தினவன் ஆவான்.

**590**. **Let not a king publicly confer on a spy any marks of his favor; if he does, he will divulge his own secret.**

---

## சுO-ம். அதி—ஊக்கமுடைமை.

அஃதாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கண் கிளர்ச்சி யுடைத்தாதல். ஒற்றரான் நிகழ்ந்தன அறிந்து அவற்றிற்கேற்ற வினை செய்வானுக்கு இஃது இன்றியமையாமையின், ஒற்றுடலின்பின் வைக்கப்பட்டது.

க. உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று.

(பரி-ரை.) எ-து,—ஒருவரை உடையரென்று சொல்லச் சிறந்தது ஊக்கம்; அவ்வூக்கமில்லாதார் வேறுடையததாலும் உடையராவரோ ஆகார், எ-று.

வேறுடையதென்றது - முன்னெய்திநின்ற பொருளை. உம்மை விகாரத்தாற் றொக்கது. காக்கும் ஆற்றல் இலராகலின், அதுவும் இழப்பரென்பதாம்.

(தெ-ப-ரை.)—உடையர் எனப்படுவது - (ஒருவரை) உடையரென்று சொல்லுதற்குச் சிறந்தது, ஊக்கம் - மனவெழுச்சியாம்; அஃதுஇல்லார்-அம்மனவெழுச்சி யில்லாதவர், மற்றுடையது - வேறுடைத்தா யிருந்ததை, உடையரோ - தாம் உடையராவரோ (ஆகார்.)

**591.** Energy marks out the man of property; as for those who are destitute of it, do they (really) possess what they possess?

---

உ. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(பரி-ரை.) எ-து,—ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது; மற்றைப் பொருளுடைமை நிலைநில்லாது நீங்கிப்போம், எ-று.

உள்ளம்—ஆகுபெயர். ஊக்கம் உள்ளத்துப் பண்பாகலின், அதற்கு நிலைநிற்றலும், பொருள் உடம்பினும் வேறாய் அழிதன்மாலைத்தாகலின் அதற்கு நிலை நில்லாமையுங் கூறினர்; கூறவே, அஃது உடைமை அன்றென்பது பெறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உள்ளம்உடைமை-(ஒருவனுக்கு) ஊக்கம் உடைமையே, உடைமை - (நிலைபெற்ற) உடைமையாம்; பொருளுடைமை - மற்றைப்பொருளுடைமையானது, நில்லாது - நிலை பெறாமல், நீங்கிவிடும் - நீங்கிப்போம்.

**592.** The possession of (energy of) mind is true property; the possession of wealth passes away and abides not.

---

௩. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

(பரி - ரை.) எ-து,—இழந்தாராயினும் யாங்கைப் பொருளையிழந்தேமென்று அலமரார் நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக வுடையார், எ-று.

ஆக்கம்—ஆகுபெயர். ஒருவந்தமாயவூக்கமென்க. கைத்து—கையகத்தாயபொருள்: "கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்" என்றார் பிறரும். அல்லாவாமைக்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

(தெ-ப-ரை.)—ஒருவந்தம் - நிலைபெற்றதாகிய, ஊக்கம்-மனவுறுதியை, கைத்து-கைப்பொருளாக, உடையார் - உடையவர்

(இழந்தாராயினும்), ஆக்கம்-கைப்பொருளை, இழந்தேம் என்று-இழந்தோமென்று, அல்லாவார்-மனஞ்சுழலார்.

**593**. They who are possessed of enduring energy will not trouble themselves saying, "we have lost our property."

---

ச. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

(பரி-ரை.) எ-து,— அசைவில்லாத ஊக்கத்தை உடையான்மாட்டுப் பொருள் தானே வழிவினாவிக்கொண்டு செல்லும், எ-று.

அசைவின்மை—இடுக்கண் முதலியவற்றாற் றளராமை. வழிவினாவிச் சென்று சார்வார்போலத் தானே சென்று சாருமென்பார், அதர்வினாய்ச் செல்லுமென்றார். எய்திநின்ற பொருளினும் அதற்குக் காரணமாய ஊக்கஞ் சிறந்ததென்பது இவைநான்குபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அசைவுஇலா - அசைவில்லாத, ஊக்கம் உடையானுழை - மனத்திட்ப முடையவனிடத்தே, ஆக்கம் - பொருளானது, அதர்வினாய் - வழிகேட்டுக்கொண்டு, செல்லும்-போம்.

**594**. Wealth will find its own way to the man of unfailing energy.

---

ரு. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

(பரி-ரை.) எ-து,—நின்ற நீரினளவினவாம் நீர்ப்பூக்களின் தாளினது நீளங்கள், அதுபோல் மக்கள்தம் ஊக்கத்தளவினதாம் அவருயர்ச்சி, எ-று.

மலர்-ஆகுபெயர். நீர் மிக்கதுணையும் மலர்த்தாள் நீளுமென்பது பட வெள்ளத்தனையவென்றார். இவ்வுவமை ஆற்றலான் ஊக்கமிக்கதுணையும் மக்களுயர்வ ரென்பது பெறப்பட்டது. உயர்தல் - பொருள் படைகளான் மிகுதல்.

(தெ-ப-ரை.)—மலர்-நீர்ப்பூவின் காம்புகளினது, நீட்டம்-நீளம், வெள்ளத்துஅனைய-(நின்ற) நீரளவினவாம்; (அதுபோல்) உயர்வு - உயர்ச்சியானது, மாந்தர்தம்-மனிதரது, உள்ளத்து அனையது-மனவுறுதியி னளவினதாம்.

**595**. The stalks of water-flowers are proportionate to the depth of water ; so is mens' greatness proportionate to their minds.

---

சு. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(பரி-ரை.) எ-து,—அரசராயினார் கருதுவதெல்லாம் தம்முயர்ச்சியையே கருதுக; அவ்வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக்கருத்துத் தள்ளாமை நீர்மையுடைத்து, எ-று.

உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளியவழியுந் தாளாண்மையிற் றவறின்றி நல்லோராற் பழிக்கப்படாமையின், தள்ளா வியற்கைத் தென்பதாம். மேல் 'உள்ளத்தனையதுயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு.

(தெ - ப - ரை.)—உள்ளுவது எல்லாம் - (அரசரானவர்) நினைப்பதெல்லாம், உயர்வு - (தமது) உயர்ச்சியையே, உள்ளல் - நினைக்கக்கடவர்; அது - அவ்வுயர்ச்சியானது, தள்ளினும் - (விதி வகையினாலே) கூடாமற் போயினும், தள்ளாமைநீர்த்து - (அந் நினைப்பு) தள்ளாமைக் குணமுடையதாம்.

**596.** In all that a king thinks of, let him think of his greatness, and if it should be thrust from him (by fate), it will have the nature of not being thrust from him.

---

௭. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(பரி - ரை.) எ - து,—களிறு புதையாகிய அம்பாற் புண்பட்டவிடத்துந் தளராது தன்பெருமையை நிலைநிறுத்தும்; அதுபோல, ஊக்கமுடையார் தாம்கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத் தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர், எ-று.

புதை—அம்புக்கட்டு. பன்மை கூறியவாறு. பட்டாலென்பது பட்டெனத் திரிந்துநின்றது. ஒல்காமை களிற்றுடனும், பாடூன்றுதல் உரவோருடனும், சென்றியைந்தன. தள்ளினும் தவறாது உள்ளியதுமுடிப்பரென்பதாம். இவைமூன்றுபாட்டானும் ஊக்கமுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களிறு - யானை, புதைஅம்பின் - கட்டாகிய அம்பினாலே, பட்டு - (புண்) பட்டவிடத்து, பாடூன்றும்-(தளராமல்தன்) பெருமையை நிலைநிறுத்தும்; (அதுபோல), உரவோர்- மனவெழுச்சியையுடையவர், சிதைவிடத்து - (தாம் நினைத்த உயர்ச்சிக்கு) அழிவுவந்தவிடத்து, ஒல்கார் - தளராமல் தம்பெருமையை நிலைநிறுத்துவார்.

**597.** The strong-minded will not faint, even when all is lost; the elephant stands firm, even when wounded by a shower of arrows.

---

௮. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(பரி - ரை.) எ - து,—ஊக்கமில்லாத அரசர் இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேமென்று தம்மைத் தாமதித்தலைப் பெறார், எ-று.

ஊக்கம் இல்லையாகவே, முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை முறையே இலவாம் ஆகலின், செருக்கெய்தாரென்றார். கொடை வென்றியினாய இன்பம் தமக்கல்லது பிறர்க்குப் புலனாகாமையின், தன்மையாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உள்ளம்இலாதவர் - மனவெழுச்சியில்லாத அரசர், உலகத்து - இவ்வுலகத்தாருள், வள்ளியம்என்னும்-வண்மையையுடையமென்று (தம்மைத்தாமே மதிக்கும்), செருக்கு - மதிப்பை, எய்தார் - பெறார்.

**598**. Those who have no (greatness of) mind, will not acquire that joy of saying in the world, "we have exercised liberality."

---

௯. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(பரி - ரை.) எ-து,—எல்லாவிலங்கினும் தான் பேருடம்பினது, அதுவேயும் அன்றிக் கூரியகோட்டையும் உடையதாயினும், யானை தன்னைப் புலியெதிர்ப்படின் அதற்கஞ்சும், எ-று.

பேருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின்மிக்க மெய்வலியுங் கருவிச் சிறப்பும் உடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் அஃதுடைய அதற்கு அஞ்சுமென்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்பும் உடையராயினும் அரசர் ஊக்கமிலராயின் அஃதுடைய அரசர்க் கஞ்சுவரொன்பது தோன்ற நின்றமையின், பிறிதுமொழிதல்.

யானை - யானையானது, பரியது - (எல்லாமிருகங்களினும்) பெரியஉடம்பையுடையது, (அதுவும்அன்றி) கூர்ங்கோட்டது - கூர்மையான கொம்புகளையுமுடையது, ஆயினும் - ஆனாலும், புலி - புலியானது, தாக்குறின் - (தன்னை) எதிர்ப்படின், வெரூஉம் - (அதற்கு) அஞ்சும்.

**599**. Although the elephant has a large body, and a sharp tusk, yet it fears the attack of the tiger.

---

௬0. உரமொருவற் குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(பரி - ரை.) எ - து,—ஒருவற்குத் திண்ணியஅறிவாவது ஊக்கமிகுதி ; அவ்வூக்கமிகுதியில்லாதார் மக்களாகார், மரங்களாவார்; சாதிமரங்களோடு இம்மரங்களிடை வேற்றுமை வடிவு மக்கள்வடிவே, பிறிதில்லை, எ-று.

உரமென்பது அறிவாதல் "உரனென்னுந் தோட்டியான்" என்பதனானுமறிக. மரமென்பது சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவுங் காரியமுயற்சியும் இன்மைபற்றி மரமென்றும், மரத்திற்குள்ள பயன்பாடின்மைபற்றி மக்களாதலே வேறென்றுங் கூறினார். பயன் பழமுதலியவும், தேவர்கோட்டம், இல்லம், தேர், நாவாய்கட்கு உறுப்பாதலும் முதலிய. இவை மூன்றுபாட்டானும் ஊக்கமில்லாதாரது இழிபு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, உரம்-திடமான அறிவாவது, உள்ளவெறுக்கை - மனவெழுச்சியின் மிகுதியாம்; அஃது - அதனை, இல்லார் - இல்லாதவர், மரம் - [மனிதராகார்]

மரங்களாவார்; வேறு - (சாதிமரங்களோடு இம்மரங்களிடத்து) வேற்றுமை, மக்கள் ஆதலே - மனிதவடிவாயிருக்கையே, [வேறில்லை.]

**600**. Energy is mental wealth; those men who are destitute of it are only trees in the form of men.

---

## ௬௧ - ம். அதி—மடியின்மை.

அஃதாவது கருதியன செய்யுங்காற் சோம்புதலில்லாமை. ஊக்கமுடையார்க்கு ஒரோவழிக் குணவயத்தான் மடி வருதல்நோக்கி, இஃதூக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டது.

க. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

(பரி - ரை.) எ - து,—தான் பிறந்த குடியாகிய நந்தாவிளக்கு ஒருவன் மடியாகிய இருள் அடர நந்திப்போம், எ-று.

உலகநடையுள்ளதுணையும் இடையறாது தன்னுட்பிறந்தாரை விளக்குதலின் குடியைக் குன்றாவிளக்கமென்றும், தாமதகுணத்தான் வருதலின் மடியை மாசென்றும், அஃது ஏனையிருள்போலாது அவ்விளக்கத்தைத் தான்அடர்ந்து மாய்க்கும் வலியுடைமையின் மாசூர மாய்ந்து கெடுமென்றுங்கூறினார். கெடுதல் - பெயர்வழக்கமும் இல்லையாதல்.

(தெ - ப - ரை.)—குடிஎன்னுங் குன்றாவிளக்கம் - (தான் பிறந்த) குடியாகிய கெடாத விளக்கானது, மடிஎன்னும்மாசு - (ஒருவனது) சோம்பலாகிய இருளானது, ஊர - அடர, மாய்ந்துகெடும் - கெட்டுப்போம்.

**601**. By the darkness of idleness, the indestructible lamp of family (rauk) will be extinguished.

---

௨. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(பரி - ரை) எ - து,—தாம் பிறந்த குடியை மேன்மேலுயரும் நற்குடியாக வேண்டுவோர் மடியை மடியாகவே கருதி முயற்சியோடொழுகுக, எ-று.

முயற்சியோடென்பது அவாய்நிலையான் வந்தது. நெருப்பிற்கொடியது பிறிதின்மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுகவென்றாற்போல மடியிற்றீயது பிறிதின்மைபற்றிப் பின்னும் அப்பெயர்தன்னானே கூறினார். அங்ஙனங்கருதியதனைக் கடிந்து முயன்றொழுகவே தாமுயர்வர், உயரவே, குடியுயருமென்பார், குடியைக் குடியாகவேண்டுபவரென்றார். அங்ஙனம் ஒழுகாக்காற் குடியழியுமென்பது கருத்து. இனி மடியாவென்பதனை வினையெச்சமாக்கிக் கெடுத்தொழுகுக வென்று உரைப்பாருமுளர்.

(தெ - ப - ை.)—குடியை - (தாம்பிறந்த) குடியை, குடி ஆக - (மேன்மேலுயரும்) நற்குடியாக, வேண்டுபவர் - விரும்புவோர், மடியை - சோம்பலை, மடி ஆக-சோம்பலாகவே (நினைத்து), ஒழுகல் - (முயற்சியோடு) நடக்கக்கடவர்.

**602.** Let those, who desire that their family may be illustrious, put away all idleness from their conduct.

---

௩. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(பரி-ை.) எ-து,—விடத்தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண்டொழுகும் அறிவில்லாதான் பிறந்தகுடி அவன்தன்னினும் முந்துற அழியும், எ-று.

அழிவு தருவதனை அகத்தே கொண்டொழுகுதலின் பேதையென்றும், அவனாற் புறந்தரப்படுவதாகலின் குடி தன்னினு முந்துற அழியுமென்றுங் கூறினர். ஆக்கத்திற் பிற்படினும் அழிவின் முற்படு மென்பதாம்.

(தெ-ப-ை.)—மடி-மடிக்கத்தகுவதாகிய, மடி-சோம்பலை, கொண்டு - (தன்னுள்ளே) கொண்டு, ஒழுகும் - நடக்கும், பேதை-அறிவில்லாதவன், பிறந்த - தான்பிறந்த, குடி - குடியானது, தன்னினும் - அவனினும், முந்து - முற்பட, மடியும் - அழியும்.

**603.** The (lustre of the) family of the ignorant man, who acts under the influence of destructive laziness will perish, even before he is dead.

---

௪. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(பரி - ை.) எ-து,—மடியின்கண்ணே வீழ்தலாற்றிருந்திய முயற்சியிலராயினார்க்கு குடியும் மடிந்து குற்றமும் பல்கும், எ-று.

மடிந்தெனத் திரிந்து நின்ற வினையெச்சம் இலவொன்னுங் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க்கூறுப. இவை நான்கு பாட்டானும் மடியின் தீமை கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—மடி - சோம்பலிலே, மடிந்து - வீழ்தலால், மாண்ட உஞற்று இலவர்க்கு-திருத்தமாகிய முயற்சி யில்லாதார்க்கு, குடி - குடியும், மடிந்து - கெட்டு, குற்றம் - குற்றங்களும், பெருகும் - பல்கும்.

**604.** Procrastmation, forgetfullness, idleness, and sleep these four things form the ship which is desired by those who are destined to destruction.

---

௫. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

(பரி-ரை.) எ-து,—மடியும், விரைந்துசெய்வதனை நீட்டித்துச்செய்யும் இயல்பும், மறப்பும், துயிலும் ஆகிய இந்நான்கும் இறக்கும் இயல்பினை யுடையார் விரும்பி யேறும் மரக்கலம், எ-று.

முன்னிற்கற்பாலதாய மடி செய்யுள்நோக்கி இடைநின்றது. நெடுமை யாகிய காலப்பண்பு அதன்கண் நிகழ்வதாய செயன்மே னின்றது. கால நீட்டத்தையுடைய செயன் முதன்மூன்றும் தாமதகுணத்திற் றோன்றி உடன் நிகழ்வனவாகலின், மடியோடு ஒருங்கெண்ணப்பட்டன. இறக்கும் இயல்பு-காளுலத்தல். இவை துன்புறு நீரார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி அவர் விரும்பிக் கொண்டவழித் துன்பத்திடை வீழ்த்தலின், காளு லந்தார்க்கு ஆக்கம் பயப்பதுபோன்று காட்டி அவர் விரும்பி யேறியவழிக் கடலிடை வீழ்க்குங் கலத்தினையொக்கு மென்னும் உவமைக்குறிப்புக் காம க்கலனென்னுஞ் சொல்லாற் பெறப்பட்டது. இதற்கு விரும்பிப் பூணும் ஆபரணமென் றுரைப்பாரு முளர்.

(தெ-ப-ரை.)—மடி - சோம்பலும், நெடுநீர் - (விரைவிற் செய்தற் குரியவைகளை) நீட்டித்துச்செய்யுங் குணமும், மறவி - மறதியும், துயில் - நித்திரையும், நான்கும் - ஆகிய இந்நான்கும், கெடுநீரார் - இறக்குமியல்பினையுடையவர், காமக்கலன் - விரும்பி யேறு மரக்கலமாம்.

**605.** Idleness, procrastination, forgetfulness, and sleep, these four things, form the vessel which is desired by those who are destined to destruction.

---

சு. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.

(பரி-ரை.) எ-து,—நிலமுழுதும் ஆண்டாரது செல்வம் தானே வந் தெய்தியவிடத்தும் மடியுடையார் அதனுன் மாண்ட பயனை யெய்துத லில்லை. எ-று.

உம்மை எய்தாமை விளக்கிநின்றது. மாண்பயன் - பேரின்பம். அச் செல்வம் அழியாமற் காக்கும் முயற்சி யின்மையின் அழியும், அழியவே, தம் துன்ப நீங்காதென்பதாம். இதற்கு நிலமுழுதும் உடைய வேந்தர் துணையாதல் கூடியவிடத்தும் என்றுரைப்பாரு முளர்.

(தெ-ப-ரை.)—படிஉடையார் - நிலமுழுமையும் ஆண்ட அரசரது, பற்று-செல்வமானது, அமைந்தக்கண்ணும் - (தானே வந்து) சேர்ந்தவிடத்தும், மடிஉடையார் - சோம்பலுடையவர், மாண்பயன் - (அதனுல்) பெரும்பயனை, எய்தல்அரிது - அடைத லில்லை.

**606.** It is a rare thing for the idle, even when possessed of the riches of kings who ruled over the whole earth, to derive any great benefit from it.

---

எ. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

(பரி - ரை.) எ-து,—மடியை விரும்புதலான் மாண்ட முயற்சியில் லாதார் தம் நட்டார்முன் கழறுதலை மிகச்செய்து அதனாற் பயன் காணாமையின் பின் இகழ்ந்துசொல்லுஞ் சொல்லைக்கேட்பர், எ-று.

இடியென்னும் முதனிலைத்தொழிற்பெயரான், நட்டாரொன்பது பெற்ரும். அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது. அவற்றிற்கெல்லாம் மாறு சொல்லும் ஆற்றலின்மையின், கேட்பரொன்ருர்.

(தெ - ப - ரை.)—மடிபுரிந்து - சோம்பலைவிரும்புதலால், மாண்ட - சிறந்த, உஞற்றுஇலவர் - முயற்சியில்லாதவர், இடிபுரிந்து - (தம்நட்பினர்) கண்டித்துப் புத்திசொல்லி, (அதனாற்பயன் காணமையினல்) எள்ளும்சொல் - (பின்) இகழுஞ்சொல்லை, கேட்பர் - கேட்பார்கள்.

**607.** Those who through idleness, do not engage themselves in dignified exertion, will subject themselves to rebukes and reproaches.

---

அ. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(பரி - ரை.) எ-து,—மடியினது தன்மை குடிமை உடையான் கண்ணே தங்குமாயின், அஃது அவனைத் தன்பகைவர்க்கு அடியனாந்தன்மையை அடைவித்துவிடும், எ-று.

மடியினதுதன்மை - காரியக்கேடு. குடிமை - குடிசெய்தற்றன்மை. அஃது அதனையுடைய அரசன்மேற்ருதல், தன்னொன்னார்க்கென்றதனன், அறிக. அடியனாந்தன்மை - தாழ்ந்துநின்று ஏவல்கேட்டல். இவைநான்கு பாட்டானும் மடிமைக்குற்றங்கள் கூறப்பட்டன.

(தெ- ப - ரை.)—மடிமை - சோம்பற்றன்மையானது, குடிமைக்கண் - குடிமையுடையஅரசனிடத்தே, தங்கின் - தங்குமாயின், (அது) தன்ஒன்னர்க்கு - தன்பகைவர்க்கு, அடிமை - அடியனாந்தன்மையை, புகுத்திவிடும் - அடைவித்துவிடும்.

**608.** If idleness take up its abode in a king of high birth, it will make him a slave of his enemies.

---

கூ. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(பரி-ரை) எ-து,—ஒருவன் தன் மடியாளுந்தன்மையை ஒழிக்கவே, அவன்குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் கெடும், எ-று.

மடியாளுந்தன்மை - மடியுடைமைக் கேதுவாய தாமதகுணம். குடியாண்மை யென்பது உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த குற்றமென்றது மடியான்அன்றி முன்னை பிறகாரணங்களான் நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சியுடையனாக நீங்குமென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஒருவன் மடிஆண்மை - ஒருவன் சோம்பலை ஆளுந்தன்மையை, மாற்ற - ஒழிக்கவே, குடி - (அவனது) குடியுள்ளும், ஆண்மையுள் - ஆண்தன்மையுள்ளும், வந்தகுற்றம் - வந்தகுற்றங்கள், கெடும் - கெட்டுப்போம்.

**609.** When a man puts away idleness, the reproach which has come upon himself and his family will disappear.

---

௧௦. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

(பரி - ரை.) எ - து,—தன்னடியளவானே எல்லாவுலகையும் அளந்த இறைவன் கடந்த பரப்பு முழுதையும் மடியிலாத அரசன் முறையான் அன்றி ஒருங்கே யெய்தும், எ-று.

அடியளந்தானென்றது வாளா பெயராய் நின்றது. தாவியதென்பது இடைக் குறைந்து நின்றது. எப்பொழுதும் வினையின்கண்ணே முயறலின், இடையீடின்றி யெய்துமென்பதாம். இவையிரண்டுபாட்டானும் மடியிலாதான் எய்தும் பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மடிஇலா - சோம்பலில்லாத, மன்னவன் - அரசன், அடி - (தன்) அடியினது அளவினாலே, அளந்தான்-(எல்லாவுலகங்களையும்) அளந்தகடவுள், தாயதுஎல்லாம் - கடந்த உலகவிரிவு முழுவதையும், ஒருங்கு - ஒருசேர, எய்தும்-அடைவான்.

**610.** The king who never gives way to idleness will obtain entire possession of (the whole earth) passed over by Him who measured (the worlds) with His foot.

---

## ௬௰௨-ம். அதி—ஆள்வினையுடைமை.

---

அஃதாவது இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனாதல். இஃது ஆளும் வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடிகெடுத்தாலும் வினை முயற்சியான் அன்றி ஆளப்படாமையின், இது மடியின்மையின்பின் வைக்கப்பட்டது.

௧. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(பரி-ரை.) எ-து,—தம்சிறுமை நோக்கி நாம் இவ்வினை முடித்தலருமையுடைத்தென்றுகருதித் தளராதொழிக; அது முடித்தற்கேற்ற பெருமையைத் தமக்கு முயற்சி யுண்டாக்கும், எ-று.

சிறுமைநோக்கியென்பது பெருமை தருமென்றதனானும், வினைமுடித்தலென்பது அதிகாரத்தானும், வருவிக்கப்பட்டன. விடாது முயலத் தாம் பெரியராவர், ஆகவே, அரியனவும் எளிதின் முடியுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—அருமைஉடைத்தென்று - (தமது சிறுமை நோக்கி நாம் இத்தொழிலை முடித்தல்) அருமையையுடைத்தென்று நினைத்து, அசாவாமைவேண்டும் - தளராதிருக்கவேண்டும்; பெருமை - (அத்தொழிலை முடித்தற்கு ஏற்ற) பெருமையை, முயற்சி- முயற்சியானது, தரும் - (தமக்கு) உண்டாக்கும்.

**611,** Yield not to the feebleness which says, "this is too difficult to be done;" labour will give the greatness (of mind) which is necessary to do it.

---

உ. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(பரி - ரை.) எ-து,—வினையாகிய குறையைச் செய்யாதுவிட்டாரை உலகம் விட்டது; அதனாற் செய்யப்படும் வினைக்கண் தவிர்ந்திருத்தலை ஒழிக, எ-று.

குறை - இன்றியமையாப்பொருள். அது "பயக்குறை யில்லைத்தாம் வாழுநாளே" என்பதனானுமறிக. இதற்கு வினைசெய்யவேண்டுங் குறையை நீங்கினாரின் நீங்கிற்றென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—உலகு - உலகமானது, வினைக்குறை-தொழிலாகியகுறையை, தீர்ந்தாரின்—செய்யாதுவிட்டவரை, தீர்ந்தன்று- விட்டது; (அதனால்) வினைக்கண் - (செய்யத்தகும்) தொழிலினிடத்தே, வினைகெடல் - செயலற்றிருக்கையை, ஓம்பல் - ஒழியக்கடவன்.

**612.** Take care not to give up exertion in the midst of a work; the world will abandon those who abandon their unfinished work.

---

ங. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(பரி - ரை.) எ-து,—முயற்சியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நிலைபெற்றது எல்லார்க்கும் உபகாரஞ்செய்தலென்னும் மேம்பாடு, எ-று.

பொருள் கைகூடுதலான் உபகரித்தற்குரியார் முயற்சியுடையாரென்பார் அவ்வக்குணங்கண்மேல்வைத்தும், அது பிறர்மாட் டில்லையென்பார் தங்கிற்றேயென்றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வேளாண்மை என்னும் செருக்கு - (யாவர்க்கும்) உபகாரஞ் செய்தலென்னு மேம்பாடானது, தாளாண்மை என்னும் தகைமைக்கண் - முயற்சியென்னும் உயர்ந்தகுணத்தினிடத்தே, தங்கிற்று - நிலைபெற்றது.

**613.** The lustre of munificence will dwell only with the dignity of laboriousness or efforts.

---

௪. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(பரி - ரை.) எ - து,—முயற்சி யில்லாதவன் உபகாரியாந் தன்மை படைகண்டால் அஞ்சும் பேடி அதனிடைத் தன்கையில் வாளை ஆளுதற் றன்மைபோல இல்லையாம், எ-று.

ஆளென்பது முதனிலைத்தொழிற்பெயர். பேடி வாளைப் பணிகோடற் கருத்துடையளாயினும் அது தன்அச்சத்தான் முடியாதவாறுபோல முயற்சியில்லாதான் பலர்க்கும் உபகரித்தற் கருத்துடையனாயினும் அது தன் வறுமையான் முடியாதென்பதாம். வாளாண்மையென்பதற்கு வாளாற் செய்யும் ஆண்மையென் றுரைப்பாருமுளர். இதனான் அஃதில்லாதானது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—தாளாண்மைஇல்லாதான் - முயற்சியில்லாதவன், வேளாண்மை - உபகாரியாந்தன்மையானது, பேடி - (சேனையைக்கண்டால் அஞ்சும்) பேடியானவள், கைவாள் ஆண்மைபோல - (அச்சேனையிடத்தே) கையில்வாளை ஆளுதற்றன்மைபோல, கெடும் - இல்லையாம்.

**614.** The liberality of him, who does not labour, will fail, like the manliness of a hermaphrodite, who has a sword in its hand.

---

௫. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

(பரி - ரை.) எ - து,—தனக்கின்பத்தை விரும்பானாகி வினைமுடித்தலையே விரும்புவான் தன்கேளிராகிய பாரத்தின் துன்பத்தினை நீக்கி அதனைத் தாங்குந் தூணாம், எ-று.

இஃது ஏகதேசவுருவகம். ஊன்றுமென்றது அப்பொருட்டாதல் "மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு" என்பதனானுமறிக. சுற்றத்தார் கட்டாரது வறுமையுந்தீர்த்து அவர்க்கு ஏமஞ்செய்யும் ஆற்றலை யுடையனாமெனவே, தன்னைக் கூறவேண்டாவாயிற்று. காரியத்தை விழையாது காரணத்தை விழைவான் எல்லாப்பயனு மெய்துமென்றதனால், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதும் எய்தானென்பது பெற்றாம். இதனால் அஃதுடையானது நன்மை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இன்பம்விழையான் - (தனக்கு) இன்பத்தை விரும்பாதவனாகி, வினைவிழைவான் - தொழில்முடித்தலையே விரும்புவோன், தன்கேளிர் - தன்சுற்றத்தாரது, துன்பம் - துன்பத்தை, துடைத்து - போக்கி, ஊன்றும் - (குடும்பபாரத்தைத்) தாங்குவதாகிய, தூண் - தூணாம்.

**615.** He who desires not pleasure, but desires labour, will be a pillar to sustain his relations, wiping away their sorrows.

---

௬. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(பரி - ளா.) எ - து,—அரசர்மாட்டுளதாய முயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்; அஃதில்லாமை வறுமையைஅடைவித்துவிடும், எ-று.

செல்வம்-அறுவகை அங்கங்கள். வறுமை - அவற்றான் வறியராதல். அதனையடைவிக்கவே, பகைவரான்அழிவரென்பது கருத்து.

(தெ-ப-ளா.)—முயற்சி-(அரசரிடத்துஉண்டாகிய) முயற்சியானது, திருவினை - (அவரது) செல்வத்தை, ஆக்கும் - வளர்க்கும்; முயற்று இன்மை-அம்முயற்சியில்லாமையானது, இன்மை-வறுமையை, புகுத்திவிடும் - அடைவித்துவிடும்.

**616.** Labour will produce wealth; idleness will bring poverty.

---

௭. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(பரி-ளா.) எ-து,—கரியசேட்டை ஒருவன் மடியின்கண்ணே உறையும்; திருமகள் மடியிலாதானது முயற்சிக்கண்ணே உறையுமென்று சொல்லுவர் அறிந்தோர், எ-று.

பாவத்தின் கருமை அதன்பயனாய முகடிமே லேற்றப்பட்டது. மடியும் முயற்சியும் உடையார்மாட்டு நில்லை அவைதம்மேல் வைத்துக் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் அவ்விருமைக்கும் ஏது கூறப்பட்டது.

(தெ-ப-ளா.)—மாமுகடி-கரியமூதேவியானவள், மடி - (ஒருவனது) சோம்பலினிடத்தே, உளாள் - இருப்பாள்; தாமரையினாள் - சீதேவியானவள், மடிஇலான் - சோம்பலில்லாதவனது, தாள் - முயற்சியினிடத்தே, உளாள்-இருப்பாள், ஏன்ப - என்று சொல்லுவர் (அறிவுடையோர்.)

**617.** They say that the black Múdévi (the goddess of adversity) dwells with laziness, and that Latchmi (the goddess of prosperity) dwells with the labour of the industrious.

---

௮. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

(பரி - ளா.) எ-து,—பயனைத் தருவதாய விதியில்லாமை ஒருவற்கும் பழியாகாது; அறியவேண்டுமேவற்றைஅறிந்து வினைசெய்யாமையே பழியாவது, எ-று.

அறியவேண்டுவன வலி முதலாயின. தெய்வம் இயையாவழி ஆள்வினையுடைமையாற் பயனில்லையென்பாரை நோக்கி, உலகம் பழவினைபற்றிப் பழியாது ஈண்டைக் குற்றமுடைமைபற்றியே பழிப்பதென்றார். அதனால் விடாது முயல்கவென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—பொறிஇன்மை - (பயனைத்தருவதாகிய) விதியில்லாமை, யார்க்கும்-யாவர்க்கும், பழிஅன்று-பழியாகாது; அறிவுஅறிந்து - அறியவேண்டுமவைகளை அறிந்து, ஆள்வினை இன்மை - தொழில்செய்யாமையே, பழி - பழியாகும்.

**618.** Adverse fate is no disgrace to any one; to be without exertion and without knowing what should be known, is disgrace.

---

கூ. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(பரி-ரை.) எ-து,—முயன்ற வினை பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும் முயற்சி தனக்கிடமாய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும், பாழாகாது, எ-று.

தெய்வத்தானாயவழித் தன்னளவின் மிக்க பயனைத் தருமென்பது உம்மையாற் பெற்றாம். இருவழியும் பாழாகல் இன்மையின், தெய்வநோக்கியிராது முயல்கவென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—தெய்வத்தான் - (முயற்சி செய்ததொழில்) விதிவகையால், ஆகாதுஎனினும் - (கருதியபயனைத்) தாராதாயினும், முயற்சி - முயற்சியானது, தன்மெய் - தனக்கிடமாகிய உடம்பு, வருத்தக்கூலிதரும் - (வருந்திய) வருத்தத்தின் கூலியளவுதரும் [பாழாகாது.]

**619.** Although it be said that, through fate, it cannot be attained, yet labour, with bodily exertion, will yield its reward.

---

க0. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(பரி-ரை.) எ-து,—பயனை விலக்குவதாய ஊழினையும் புறங்காண்பர் அவ்விலக்கிற் கிளையாது வினையைத் தாழ்வற முயல்வார், எ-று.

தாழ்வறுதல் - சூழ்ச்சியினும், வலி முதலிய அறிதலினும், செயலினுங் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக இருகாலாகவல்லது விலக்கலாமையின் பலகான் முயல்வார் பயனெய்துவரென்பார், உப்பக்கங்காண்பரென்றார். தெய்வத்தான் இடுக்கண்வரினும் முயற்சி விடற்பாலதன்றென்பது இவை மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஊழையும் - (பயனைவிலக்குவதாகிய) விதியையும், உப்பக்கங்காண்பர்-புறங்காண்பர், உலைவுஇன்றி - (அவ்விலக்கிற்கு) இளையாமல், தாழாது - குற்றமற, உஞற்றுபவர் - (தொழிலை) முயல்வோர்.

**620.** They who labour on, without fear and without fainting, will see even fate (put) behind their back.

---

## சுஉ-ம். அதி—இடுக்கணழியாமை.

அஃதாவது வினையின்கண் முயல்வான், தெய்வத்தான்ஆக, பொருளின்மையான் ஆக, மெய்வருத்தத்தான் ஆகத் தனக்கிடுக்கண் வந்துழி, அதற்கு மனங்கலங்காமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

க. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(பரி - உரை.) எ-து,—ஒருவன் வினையாற் றனக்கிடுக்கண் வருமிடத்து அதற்கழியாது உண்மகிழ்க; அவ்விடுக்கணை மேன்மேலடரவல்லது அம்மகிழ்ச்சிபோல்வது பிறிதில்லைஆகலான், எ-று.

வினை இனிதுமுடிந்துழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே இடுக்கண் வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி மனவெழுச்சியான் அதனைத்தள்ளி அக்குறை முடிக்கும் ஆற்றலுடையனும் ஆகலின், அதனையடுத்தூர்வது அஃதொப்பதில் லென்றார்.

(தெ-ப-உரை.)—இடுக்கண் - (ஒருவன்விதியால்தனக்குத்) துன்பமானது, வருங்கால் - வருமிடத்து, நகுக - (அதற்குச்சலியாமல்) மனமகிழக்கடவன்; அதனை-அத்துன்பத்தை, அடுத்து-மேலுமேலுமாய், ஊர்வது-நெருக்கவல்லது, அஃதொப்பது-அம்மகிழ்ச்சிபோல்வது, இல் - (வேறே) இலது (ஆதலால்).

**621.** If troubles come, laugh; there is nothing like that, to press upon and drive away sorrow.

---

உ. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(பரி-உரை.) எ-து,—வெள்ளம்போலக் கரையிலவாய இடும்பைகளெல்லாம் அறிவுடையவன் தன்னுள்ளத்தான் ஒன்றனை நினைக்க, அத்துணையானே கெடும், எ-று.

இடும்பையாவது உள்ளத்து ஓர்கோட்பாடேயன்றிப் பிறிதில்லையென்பதூஉம் அது மாறுபடக்கொள்ள நீங்குமென்பதூஉம் அறிதல் வேண்டுதலின், அறிவுடையானென்றும், அவ்வுபாயத்தெண்மை தோன்ற உள்ளத்தினுள்ளவென்றுங் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் ஊழினான் ஆய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப்பட்டது.

(தெ - ப - உரை.)—வெள்ளத்து அனைய - வெள்ளம்போலக் கரையில்லாத, இடும்பை - துன்பமெல்லாம், அறிவுடையான் - அறிவுடையவன், உள்ளத்தின்-உள்ளத்தினாலே, உள்ள-(ஒன்றை) நினைத்தவளவிலே, கெடும் - கெட்டுப்போம்.

**622.** A flood of troubles will be overcome by the (courageous) thought which the minds of the wise will entertain, even in sorrow.

---

௩. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

**(பரி - ரை.)** எ-து,—வினைசெய்யுங்கால் அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர், அத்துன்பந்தனக்குத் தாந் துன்பம் விளைப்பர், எ-று.

வருந்துதல் - இளைத்து விட நினைத்தல். மனத் திட்பம் உடையராய் விடாதுமுயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே, எல்லா விடும்பையுமிலவா மாகலின், இடும்பைக் கிடும்பை படுப்ப ரென்றார். வருகின்ற பாட் டிரண்டினும் இதற்கு இவ்வாறேகொள்க. சொற்பொருட்பின் வருநிலை.

(தெ-ப-ரை.)—இடும்பைக்கு - (தொழில் செய்யும்போது அதற்கு நடுவிலே வந்த) துன்பத்திற்கு, இடும்பை படாதவர் - வருந்தாதவர், இடும்பைக்கு - அத்துன்பத்திற்கு, இடும்பை-துன்பத்தை, படுப்பர் - உண்டாக்குவார்.

**623.** They give sorrow to sorrow, who in sorrow do not suffer sorrow.

---

௪. மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

**(பரி - ரை.)** எ-து,—விலங்கிய விடங்களெல்லாவற்றினுஞ் சகடமீர்க்கும் பகடுபோல வினையையெடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து, எ-று.

மடுத்தவாயெல்லா மென்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்று நிலமுதலியவாகவும், வினைக்கு இடையூறுகளாகவுங் கொள்க. பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் அரிதினுய்க்குமாறுபோலத் தன்மெய்வருத்த நோக்காது முயன் றுய்ப்பானென்பார், பகடன்ன னென்றார்.

(தெ-ப-ரை.)—மடுத்தவாய் எல்லாம் - தடைப்பட்டவிடங்களிலெல்லாம், பகடுஅன்னன் -(பண்டியை இழுத்துச்செல்லுங்) கடாப்போலத் தொழிலை மேற்கொண்டு செலுத்தவல்லவனை, உற்ற - அடைந்த, இடுக்கண் - துன்பமானது, இடர்ப்பாடு - தானே துன்பப்படுதலை, உடைத்து - உடையதாம்.

**624.** Troubles will vanish [*i. e.*, will be troubled] before the man who (struggles against difficulties) as a buffalo (drawing a cart) through deep mire.

---

௫. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

**(பரி-ரை.)** எ-து,—இடை விடாது மேன்மேல் வந்தனவாயினும், தன்னுள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற விடுக்கண்டாம் இடுக்கணிலே பட்டுப்போம், எ-று.

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலு மடங்க, அடுக்கிவரினுமென்றார். அழிவென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மே னின்றது. இவை மூன்றுபாட்டானும் தெய்வத்தானுயதற் கழியாமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அடுக்கிவரினும் - இடைவிடாது மேலுமேலும் வந்தனவாயினும், அழிவுஇலான் - (தன்னுள்ளக் கோட்பாடு) விடாதவனை, உற்ற - அடைந்த, இடுக்கண்-துன்பமானது, இடுக்கண்படும் - (தான்) துன்பத்திலேபடும்.

**625**. The troubles of that man will be troubled (and disappear) who, however thickly they may come upon him, does not abandon (his purpose.)

---

சா. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

(பரி-ரை.) எ-து,—வறுமைக்காலத்து யாம் வறிய மாயினேமென்று மனத்தாற் றுயருழப்பரோ, செல்வக்காலத்து இது பெற்றேமென்று இவறுதலையறியாதார், எ-று.

பெற்றவழி இவறுமை நோக்கி அற்றவழியும் அப்பகுதி விடாதாகலின், அல்லற்பாடில்லை யாயிற்று. இதனாற் பொருளின்மையான் ஆயதற்கு அழியாமையும் அதற்குபாயமுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—பெற்றேம் என்று - (செல்வக்காலத்து) இது பெற்றேமென்று, ஓம்புதல் - உலோபஞ்செய்தலை, தேற்றாதவர் - அறியாதவர், அற்றேம் என்று - (வறுமைகாலத்து) வறியேமாயினேமென்று, அல்லல் படுபவோ - மனத்தினாலே துன்பப்படுவாரோ.

**626**. Will those men ever cry out in sorrow, "we are destitute," who, (in their prosperity,) give not way to (undue desire) to keep their wealth.

---

எ. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.

(பரி-ரை.) எ-து,—நாற்கதியினும் உள்ள உடம்புகள் இடும்பையென்னும் வாளுக்கு இலக்கென்று தெளிந்து, தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையார், எ-று.

ஏகதேசவுருவகம். உடம்பு—சாதிப்பெயர். கலக்கமென்னுங் காரியப்பெயர் காரணத்தின்மே னின்றது. கையாறென்பது ஒருசொல், இதற்கு ஒழுக்கநெறியென்று ரைப்பாருமுளர். இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—மேல் - அறிவுடையார், உடம்பு - தேகமானது, இடும்பை - துன்பமாகிய வாளுக்கு, இலக்கம் என்று-குறி

யிடமென்று தெளிந்து, கலக்கத்தை-தம்மேல்வந்த துன்பத்தை, கையாறு ஆ - துன்பமாக, கொள்ளாதாம் - கொள்ளார்.

**627.** The great will not regard trouble as trouble, knowing that the body is but the butt of trouble.

---

அ. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.

(பரி - ரை.) எ-து,—தன் உடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையால் இடும்பை எய்துதல் இயல்பென்று தெளிந்திருப்பான், தன்முயற்சியாற் றுன்பமுறான், எ-று.

இன்பத்தை விழையினும், இடும்பையை யியல்பென்னாது காக்கக்கருதினும், துன்பம் விளைதலின், இவ்விரண்டுஞ் செய்யாதானைத் துன்பமுறுதல் இலனென்றார்.

(தெ - ப - ரை.)—இன்பம் - (தன்னுடம்பிற்கு) இன்பமானவைகளை, விழையான் - விரும்பானாகி, இடும்பை - (வினையால்) துன்பமடைதல், இயல்புஎன்பான் - இயல்பென்று தெளிந்திருப்பான், துன்பம் உறுதல் இலன் - (தன் முயற்சியால்) துன்பமடையான்.

**628.** That man never experiences sorrow, who does not seek for pleasure, and who considers distress to be natural (to man).

---

கூ. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(பரி-ரை.) எ-து,—வினையாற் றனக்கின்பம் வந்துழி அதனை யனுபவியாநின்றே மனத்தான் விரும்பாதான், துன்பம் வந்துழியும் அதனை யனுபவியாநின்றே மனத்தான் வருந்தான், எ-று.

துன்பம் - முயற்சியான் வரும் இடுக்கண். இரண்டையும் ஒரு தன்மையாகக்கோடலின், பயன்களு மிலவாயின.

(தெ-ப-ரை.)—இன்பத்துள் - (வினையினாலே) இன்பம் வந்தவிடத்து, இன்பம் - அவ்வின்பத்தை, விழையாதான் - (அனுபவித்துக்கொண்டே மனத்தால்) விரும்பாதவன், துன்பத்துள் - துன்பம் வந்தவிடத்தும், துன்பம் - அத்துன்பத்தை, உறுதல் இலன் - (அனுபவித்துக்கொண்டே மனத்தால்) அடையான்.

**629.** He does not suffer sorrow in sorrow, who does not look for pleasure in pleasure.

---

கo. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் வினைசெய்யு மிடத்து முயற்சியான் வருந் துன்பந்தன்னையே தனக்கின்பமாகக் கற்பித்துக்கொள்வனாயின், அதனாற் றன் பகைவர் நன்கு மதிந்தற் கேதுவாய உயர்ச்சி யுண்டாம், எ-று.

துன்பந்தானும் உயிர்க்கியல்பன்றிக் கணிகமாய் மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடாகலின், அதனை மாறுபடக்கொள்ளவே, அதற்கழிவின்றி மனமகிழ்ச் சியுடையனாய் அதனாற் றொடங்கிய வினை முடித்தேவிடு மாற்றலுடையனா மென் பது கருத்து. இவை நான்கு பாட்டானும் மெய்வருத்தத்தா னுயதற்கு அழியா மையும் அதற் குபாயமுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—ஒருவன் தொழில்செய்யுமிடத்து, இன்னாமை- (முயற்சியால் வருந்) துன்பத்தையே, இன்பம் எனக்கொளின்- (தனக்கு) இன்பமாக நினைத்துக்கொள்ளுவானாயின், அதனால், தன் ஒன்னார் - தன்பகைவர், விழையும் - நன்குமதித்தற்கு ஏது வாகிய, சிறப்பு - உயர்ச்சியானது, ஆகும் - உண்டாகும்.

**630**. The elevation, which even his enemies will esteem, will be gained by him, who regards pain as pleasure.

அரசியல் முற்றிற்று.

# அங்கவியல்.

இனி முறையானே அரசியல் நடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையா ய அங்கங்கள் ஆறனதியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவானெடுத்துக் கொண்டு, அவையாறனுள்ளும் காவற் சாகாடு கைத்தற்கண் அவ்வரசற் கிணை யாய அமைச்சன தியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

## சுச ம். அதி—அமைச்சு.

அஃதாவது அமைச்சனது தன்மை: என்றது அவன் றன் குணங்களையுஞ் செயல்களையும்.

க. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

(பரி-ரை.) எ-து,—வினைசெய்யுங்கால் அதற்கு வேண்டுங்கருவிகளும், அதற்கேற்ற காலமும், அது செய்யுமாறும், அவ்வாற்றிற் செய்யப்படும் அவ் வரியவினைதானும் வாய்ப்ப எண்ணவல்லவனே அமைச்சனாவான், எ-று.

கருவிகள்:—தானையும், பொருளும்; காலம்:—அது தொடங்குங்காலம்; செய்கையெனவே:—அது தொடங்குமுபாயமும், இடையூறுநீக்கி முடிவுபோக் குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரிய பயன் றருவதென்பார், அரு வினையென்றார். இவை யைந்தனையும் வடநூலார் மந்திரத்திற் கங்கமென்ப.

(தெ-ப-ரை.)—தொழில்செய்யும்போது, கருவியும் - (அத ற்குவேண்டுஞ்) சாதனங்களும், காலமும் - (அதற்கேற்ற) கால

மும், செய்கையும் - (அது) செய்யும் விதமும், செய்யும் அரு வினையும் - (அவ்விதத்திலேசெய்யப்படும்) அரியதொழில்களும், மாண்டது - பொருந்த எண்ண வல்லவனே, அமைச்சு-மந்திரி யாவான்.

**631.** The minister is one who can make an excellent choice of means, time, manner of execution, and the difficult undertaking (itself.)

---

௨. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

(ப - ரை.) எ-து—, வினை செய்தற்கண் அசைவின்மையும், குடிகளைக் காத்தலும், நீதிநூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன வறிதலும், முயற்சியும் மேற்சொல்லிய அவ் வங்கங்களைந்துடனே திருந்தவுடையானே அமைச்சனுவா ன், எ-று.

என்னெடு நீண்டது. அவ்வைந்தெனச் சுட்டு வருவிக்க. இந்நான்கனையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடு கூடியே மாட் சிமைப்படவேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னுந்தொகை பெறுதற்கும். இனி இதனை ஈண்டெண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தலென்பத னைக் குடிப்பிறப்பும் அதனை யொழுக்கத்தாற் காத்தலுமெனப் பகுப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாருமுளர். அவர் உட னென்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், குடியென்பதனை ஆகுபெயராக் கியும் இடர்ப்படுப.

(தெ-ப-ரை.)—வன்கண் - (தொழில்செய்யுமிடத்து) அசை வில்லாமையும், குடிகாத்தல் - குடிகளைக் காத்தலும், கற்று அறி தல் - (நீதிநூல்களைக்) கற்று (விதிவிலக்குகளை) அறிதலும், ஆள் வினை-முயற்சியும், ஐந்துடன் - (முன்சொல்லப்பட்ட) அங்கங்க ளைந்துடனே, மாண்டது - திருந்தவுடையவனே, அமைச்சு - மந் திரியாவான்.

**632.** The minister is one who in addition to the aforesaid five things excels in the possession of firmness, protection of subjects, clearness by learning, and perseverance.

---

௩. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(ப - ரை.) எ-து,—வினை வந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவ ரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும், தம்பாலாரை அவர் பிரியாமற் கொடை இன் சொற்களாற் பேணிக்கொள்ளுதலும், முன்னே தம்மினுந் தம்பாலாரினும் பிரி ந்தாரைமீண்டும் பொருத்தவேண்டிற் பொருத்தலும் வல்லவனே அமைச்சனுவா ன், எ-று.

இவற்றுள் அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும், அதனை அவரறி யாமல் ஏற்றவுபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாதனோக்கி, வல்லதென்

ரூர். வடநூலார் இவற்றுட் பொருத்தலைச் சந்தியென்றும், பிரித்தலை விக்கிர கமென்றுங் கூறுப.

(தெ-ப-னை.)—போர்வந்தவிடத்து, பிரித்தலும் - (பகைவர்க்குத் துணையாயினவனை அவனைவிட்டுப் பிரிக்கவேண்டிஞல்) பிரித்தலும், பேணிக்கொளலும் - (தம்மிடத்தோரை இடைபிரியாமற் கொடையினுலும் இன்சொல்லினுலும்) காத்துக்கொள்ளுதலும், பிரிந்தார் - (தம்மைவிட்டும் தமரைவிட்டும்) பிரிந்தவரை, பொருத்தலும்—, வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான்.

**633.** The minister is one who can effect discord (among foes), maintain the good-will of his friends and restore to friendship those who have seceded (from him).

---

௪. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(ப - ரை.) எ-து,—ஒரு காரியச்செய்கை பலவாற்ருற் றேன்றின் அவற்றுள் ஆவ தாராய்ந் தறிதலும், அது செய்யுங்கால் வாய்க்குந் திறஞடிச் செய்தலும், சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும்வகை சொல்லுதலும் வல்லவனே அமைச்சனுவான், எ-று.

தெரிதல் செயன்மேலதாயிற்று, வருகின்றது அதுவாகலின்.

(தெ-ப-னை.)—(ஒருகாரியச்செய்கை பலவிதமாகத் தோன்றினல்) தெரிதலும் - (அவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - (அதுசெய்யும்போது பலிக்கும்விதம்) நாடிச்செய்தலும், (சிலரைப் பிரித்தல் பொருத்தல் செய்தலிலே) ஒருதலையாச்சொல்லலும் - (அவர்க்கு இதுவே நம்பத்தக்கதென்று) துணிவுபிறக்கும் வகைசொல்லலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான்.

**634.** The minister is one who is able to comprehend (the whole nature of an undertaking), execute it in the best manner possible, and offer assuring advice (in time of necessity).

---

௫. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

(பரி-ரை.) எ-து,—அரசனுற் செய்யப்படும் அறங்களையறிந்து தனக்கேற்ற கல்வியா னிறைந் தமைந்த சொல்லை யுடையனுய் எக்காலத்தும் வினை செய்யுந்திறங்களை யறிந்தான் அவற்குச் சூழ்ச்சித் துணையாம், எ-று.

தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடைநிகராய காலத்துமென்பார், எஞ்ஞான்றுமென்ருர். சொல்லானென்பதனை ஒடு வுருபின்பொருட்டாய ஆனுருபாக்கி யுரைப்பாருமுளர். இவை யைந்துபாட்டானும் அமைச்சரது குணத்தன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறன் - (அரசனுலேசெய்யப்படும்) அறங்களை, அறிந்து - தெரிந்து, ஆன்றுஅமைந்த - (தனக்கு ஏற்ற கல்வியாலே) நிறைந்தமைந்த, சொல்லான் - சொல்லை யுடையவனுகி, எஞ்ஞான்றும் - எந்நாளிலும், திறன் - தொழில்செய்யுந் திறங்களை, அறிந்தான் - அறிந்தவன், தேர்ச்சி - ஆலோசனைக்கு, துணை - துணையாவான்.

**635.** He is the best helper (of the king) who understanding the (duties) of the latter, is, by his special learning, able to tender the fullest advice, and at all times conversant with the best method (of performing actions.)

---

சு. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(பரி - பா.) எ-து,—இயற்கையாகிய நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடு உடையராய அமைச்சர்க்கு மிக்கநுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்னிற்பன யாவையுள? எ-று.

மதி நுட்பமென்பது பின்மொழிநிலையல். அது தெய்வந்தர வேண்டுதலின் முற்கூறப்பட்டது. நூலென்பதூஉம் மதிநுட்பமென்பதூஉம் ஆகுபெயர். அதியென்பது வடசொல்லுள் மிகுதிப்பொருளதோ ரிடைச்சொல்; அது திரிந்து நுட்பமென்பதனோடு தொக்கது. முன்னிற்றல் மாற்றார்சூழ்ச்சியாயின தஞ்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி அதிநுட்பமென்று பாடமோதி, அதனினுட்பம் யாவென்றுரைப்பாருமுளர்; அவர் சூழ்ச்சிக்கினமாய் முன்சுட்டப்படுவதொன்றில்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தாமுருபேற்றவழி அவ்வாறு நில்லாமையு மறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து அவரறிந்தழியாதன தாஞ்சூழ்வரென்பது கருத்து. இதனுல் அவரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மதிநுட்பம் - (இயற்கையாகிய) புத்திநுட்பத்தை, நூலோடு - (செயற்கையாகிய) நூலறிவோடு, உடையார்க்கு - உடையமந்திரிகளுக்கு, அதிநுட்பம் - அதிகநுட்பத்தையுடைய ஆலோசனைகளாய், முன்நிற்பவை - எதிர்நிற்பவை, யா உள-எவை யுள.

**636.** What (contrivances) are there so acute as to resist those who possess natural acuteness in addition to learning.

---

எ. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

(பரி - ரை.) எ-து,—நூனெறியான் வினைசெய்யுந் திறங்களை யறிந்தவிடத்தும், அப்பொழுது நடக்கின்ற உலகவியற்கையையறிந்து அதனோடு பொருந்தச் செய்க, எ-று.

கடைத்துமென்புழி து—பகுதிப்பொருள் விகுதி. நூனெறியேயாயினும் உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க, செய்யின் அது பழிக்குமெனா இயற்கையறிவாற் பயன் கூறியவாறு.

(தெ-ப-ரை.)—செயற்கை - நூல்வழியினால் தொழில்செய்யுந் திறத்தை, அறிந்தக்கடைத்தும் - அறிந்தவிடத்தும், உலகத்து - உலகத்திலே, இயற்கை-அப்போது நடக்கின்ற இயற்கையை, அறிந்து - தெரிந்து, செயல் - (அதனோடு பொருந்தச்)செய்யக்கடவன்.

**637.** Though you are acquainted with the (theoretical) methods (of performing an act), understand the ways of the world and act accordingly.

---

அ. அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

(பரி-ரை.) எ-து,—அறிந்து சொல்லியாரது அறிவையு மழித்து, அரசன் தானு மறியானேயாயினும், அக்குற்றம் நோக்கி யொழியாது அவனுக்கு உறுதியாயினகூறுதல் அமைச்சனுக்கு முறைமை, எ-று.

அறியென்பது முதனிலைத்தொழிற்பெயர். கோறல்-தான் கொள்ளாமைமேலும் இகழ்ந்து கூறுதல். உழையிருந்தானெனப் பெயர் கொடுத்தார், அமாத்தியனென்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். உறுதிகூறாக்கால் அவன திறுதியெய்தற் குற்றத்தை உலகர் தன்மேலேற்றுமென்பார், கூறல் கடனென்றார். இவை யிரண்டுபாட்டானும் அவர்செயல் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அறிகொன்று - (அறிந்து சொல்லினவரது) அறிவையும் அழித்து,அறியான் எனினும் - (தானும்) அறியானேயாயினும், (அக்குற்றநோக்கிக் கைவிடாமல்) உறுதி - (அரசனுக்கு) உறுதியானவைகளை, கூறல் - சொல்லுதல், உழையிருந்தான் - மந்திரியினது, கடன் - முறையாகும்.

**638.** Although the king be utterly ignorant, it is the duty of the minister to give (him) sound advice.

---

௯. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரொழுபது கோடி யுறும்.

(பரி-ரை.) எ-து,—பக்கத் திருந்து பிழைப்ப வெண்ணும் அமைச்ச னொருவனில் அரசனுக்கு எதிர்நிற்பார் ஓரெழுபதுகோடி பகைவ ருறுவர், எ-று.

எழுபதுகோடி யென்றது மிகப்பலவாய வெண்ணிற் கொன்று காட்டியவாறு. வெளிப்படநிற்றலான் அவர் காக்கப்படுவேர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படானென்பதுபற்றி, இவ்வாறு கூறினர். எழுபதுகோடிமடங்கு நல்லதொன்றுரைப்பாரும், எழுபதுகூறு தலையென்று பாடமோதுவாருமுளர்.

(தெ-ப-ரை.)—பக்கத்துள் - பக்கத்திலிருந்து, பழுது எண்ணும் - தீங்குசெய்யவெண்ணும், மந்திரியின் - மந்திரி யொருவனில், தெவ் - (அரனுக்கு) எதிர்நிற்பவர், ஓர் எழுபதுகோடி - ஓரெழுபதுகோடி பகைவர், உறும் - உறுவர்.

**639.** Far better are seventy crores of enemies (for a king) than a minister at his side who intends (his) ruin.

---

கO. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(பரி - ரை.) எ-து,—செய்யப்படும் வினைகளை முன் அடைவுபடவெண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யா நிற்பர், முடித்தற்கேற்ற கூறுபா டில்லாதார், எ-று.

அக்கூறுபாடாவன வந்த வந்த விடையூறுகட்கு ஏற்ற வேற்ற பரிகாரமறிந்து செய்தலும், தாந் திண்ணியராதலுமாம். பிழையாமலெண்ண வல்லராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாரு முளரென்பதாம். இவையிரண்டோட்டானும் அமைச்சருள் விடப்படுவோரது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—செய்யப்படுந் தொழில்களை, திறப்பாடு-(முடித்தற்கேற்ற) கூறுபாடு, இலாதவர் - இல்லாதவர், முறைப்படச் சூழ்ந்தும் - (முன்) அடைவுபட ஆலோசித்திருந்தும், முடிவு இலவேசெய்வர் - (செய்யும்பொழுது அவை) முடிவில்லனவாகவே செய்யா நிற்பர்.

**640. Those ministers who are destitute of (executive) ability will fail to carry out their projects, although they may have contrived aright.**

---

## சுரு ம். அதி. சொல்வன்மை.

அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சியனடத்தற்கேதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் ஒருதலையாச் சொல்லலும் வல்லதென்றதனையே சிறப்புப்பற்றி விரித்துரைக்கின்றமையின், இஃதமைச்சின்பின் வைக்கப்பட்டது.

க. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று

(பரி - ரை.) எ-து, அமைச்சர்க்கு இன்றி யமையாக் குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்தினையுடையராதல்; அந்நலம் பிறர்க்கும் பிறநல மெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்க தாகலான், எ-று.

நாவானுளதாய நலமென விரியும். இந்நலம் உலகத்தைத் தம்வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேறாகவேண்டுமென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி நாநலமென்னு நலனென்றும், பிறர்க்கும் இதுபோற் சிறந்தது பிறிதின்மையான் அந்நலம் யாநலத் துள்ளதூஉ மன்றென்றுங் கூறினர். பிரித்தல் பொருத்தல் முதலிய தொழிலில்லாதார்க்கும் இஃதின்றியமையாதாயபின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ வென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—மந்திரிகட்கு அவசியம் வேண்டிய குணமாவது, நாநலம் என்னும் - நாவினுலுளதாய நலமென்று சிறப்பித்துச்சொல்லப்படும், நலன் உடைமை - நலமுடையராதல்; அந்

நலம்-அந்நன்மை (பிறர்க்கும்), யாநலத்து-பிறநலங்களி லெல்லாம், உள்ளதும் அன்று - அடங்குவதுமன்று, (மிக்கது ஆதலால்.)

**641.** The possession of that goodness which is called the goodness of speech is (even to others) better than any other goodness.

---

உ. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(பரி - லை.) எ-து,—தம் மரசற்கும் அங்கங்கட்கும் ஆக்க வழிவுகள் தஞ் சொல்லான் வருமாகலான், அப்பெற்றித்தாய சொல்லின்கட் சோர்தலை அமைச்சர் தங்கணிகழாமற் போற்றிக் காக்க, எ-று.

ஆக்கத்திற்கேதுவாய நற்சொல்லையும் கேட்டிற்கேதுவாய தீச்சொல்லையும் சொல்லாத லொப்புமைபற்றி அதனாலென்றார். செய்யுளாகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வுபோலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்குவருதலால், காத்தோம்பலென்றார். இவையிரண்டுபாட்டானும் இஃது இவர்க் கின்றியமையாதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-லை.)—ஆக்கமும் - (தம்மரசனுக்கும் அங்கங்களுக்கும்) பெருக்கமும், கேடும் - அழிவும், அதனால் - அச்சோர்வினாலே, வருதலால் - வருமாதலால், சொல்லின்கண் - (மந்திரிகள்) சொல்லினிடத்து, சோர்வு - சோர்தலை, காத்து ஓம்பல்- (தம்மிடத் துண்டாகாமல்) காக்கக்கடவர்.

**642.** Since (both) wealth and evil result from (their) speech, ministres should most carefully guard themselves against faultiness therein.

---

௩. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

(பரி-லை.) எ - து,—நட்பாயேற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிக்குங் குணங்களை அவாவி மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமையொழிந்து நட்பினை விரும்பும் வண்ணஞ் சொல்லப்படுவதே அமைச்சர்க்குச் சொல்லாவது, எ-று.

அக்குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருதலென்றிவை முதலாயின. அவற்றை யவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவேயன்றி வேறு நுண்ணுணர்வுடையோர் கொள்பவற்றின்மேலும் நோக்குடைத்தாதல். அவாயென்னுஞ் செய்தெனெச்சம் மொழிவதென்னுஞ் செயப்பாட்டுவினை கொண்டது. இனிக் கேட்டார் கேளாரென்பதற்கு நூல் கேட்டார் கேளாதாரெனவும், வினவியார் வினவாதாரெனவு முரைப்பாருமுளர். தகையவாயென்பதற்கு எல்லாருந் தகுதியையுடையவாயென்றுரைத்தார்; அவர் அப்பன்மை மொழிவதென்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர். இதனும் சொல்லின திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-லை.)—கேட்டார் - (நட்பாய்) ஏற்றுக்கொண்டவரை, பிணிக்கும் - (பின்வேறுபடாமல்) கட்டும், தகை - குணங்

களை, அவாய் - அவாவி, கேளாரும் - (மற்றப்பகையாய்) ஏற்றுக் கொள்ளாதவரும், வேட்ப - (பின் அப்பகைமை ஒழிந்து நட்பினை) விரும்பும்வண்ணம், மொழிவது - சொல்லப்படுவதே, சொல் - சொல்லாம்.

**643**. The (minister's) speech is that which seeks (to express) elements as bind his friends (to himself) and is so delivered as to make even his enemies desire (his friendship).

---

ச. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

**(பரி-ரை.)** எ-து,—அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய திறங்களையறிந்து சொல்லுக, அங்ஙனஞ் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லை யாகலான், எ-று.

*அத்திறங்களாவன குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவ மென்பனவற்றான் வருந் தகுதிவேறுபாடுகள். அவற்றையறிந்து சொல்லுதலாவது அவற்றாற் றமக்கும் அவர்க்கு முளவாய ஏற்றத்தாழ்வுகளை யறிந்து அவ்வம் மரபாற் சொல்லுதல். அஃது உலகத்தோ டொட்டவொழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனுயிற்று, தங்காரியமுடித்தலிற் பொருளாயிற்று. அறனும் பொருளுமெனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினர்.*

(தெ-ப-ரை.)—சொல்லை - (மந்திரிகள் அப்படிப்பட்ட) சொல்லை, திறன் - (தம்முடையவும் கேட்பாருடையவும் ஆன) திறங்களை, அறிந்து - தெரிந்து, சொல்லுக - சொல்லக்கடவர்; அதனின் ஊங்கு - அப்படி சொல்லுதற்கு மேற்பட்ட, அறனும் பொருளும் - தருமமும் பொருளும், இல் - இல்லை, (ஆதலால்.)

**644.** Understand the qualities (of your hearers) and (then make your speech; for, superior to it, there is neither virtue nor wealth.

---

ரு. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

**(பரி-ரை.)** எ-து,—தாஞ்சொல்லக் கருதிய சொல்லைப் பிறிதோர்சொல்லாய் வெல்லவல்லதொரு சொல் இல்லாமையறிந்த பின் அச்சொல்லைச் சொல்லுக, எ-று.

*பிறிதோர்சொல்-மாற்றுரதா மறுதலைச்சொல். வெல்லுதல்-குணங்களான் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக வென்பதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லுஞ் சொல்லெனச் செவ்வெண்ணாக்கி, ஒத்த சொல்லும் மிக்கசொல்லு முளவாகாமற் சொல்லுகவென் றுரைப்பாருமுளர். இது சொற்பொருட்பின் வருமிலை.*

(தெ-ப-ரை.)—சொல்லை - (தாம்சொல்லக்கருதிய) சொல்லை, வெல்லுஞ் சொல் - வெல்லவல்ல சொல்லாகிய, பிறிதோர்

சொல் - வேறொருசொல், இன்மை - இல்லாமையை, அறிந்து- தெரிந்து, அச்சொல்லை - அந்தச்சொல்லை, சொல்லுக - சொல் லக்கடவர்.

**645.** Deliver your speech, after assuring yourself that no counter speech can defeat your own.

---

௬. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

(பரி-லை.)எ-து,—பிறர்க்குத் தாஞ்சொல்லுங்கால் அவர் பின்னுங்கேட் டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின்பய னைக் கொண்டொழிதல் அமைச்சியலுட் குற்றமற்றார து துணிபு, எ-று.

பிறர்சொற்களுட் குற்றமுளவாயினும் அவை நோக்கி யிகழாரென்பதாம். வல்லாரையிகழ்தல் வல்லுநர்க்குத் தகுதியன்மையின், இதுவு முடன்கூறினார். இவை மூன்றுபாட்டானும் அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-லை.)—வேட்பத்தாம் சொல்லி - (பிறர்பின்னுங்கே ட்டலை) விரும்பும்படி தாஞ்சொல்லி, பிறர்சொல் - பிறர் (தமக் குச் சொல்லுஞ்) சொல்லினது, பயன்கோடல் - பயனைக்கொண் டுவிடுதல், மாட்சியில் - (மந்திரி) இலக்கணத்தில், மாசுஅற்றார்- குற்றமற்றவரது, கோள் - துணிவு.

**646.** It is the opinion of those who are free from defects in diplomacy that the minister should speak so as to make his hearers desire (to hear more,) and grasp the meaning of what he hears himself.

---

௭. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

(பரி-லை.) எ-து,—தானெண்ணிய காரியங்களைப் பிறர்க்கேற்பச் சொல் லுதல் வல்லனாய் அவை மிகப் பலவாயவழி ஒன்றினுஞ் சோர்விலனாய் அவைக் கஞ்சானுமினான் யாவன் அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கு மரிது, எ-று.

ஏற்பச்சொல்லுதல் அவர்க்கு அவை காரியமல்லவாயினும் ஆமெனத்துணி யும்வகை சொல்லுதல். சோர்வு - சொல்லவேண்டுவதனை மறப்பானொழிதல். இம்மூன்றுகுணமு முடையானை மாற்றாராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை யென்பதாம்.

(தெ-ப-லை.)—சொலல்வல்லன் - (தான்எண்ணிய காரியங் களைப் பிறர்க்கேற்க) சொல்லுதல் வல்லவனாகி, சோர்விலன்-(அ வைமிகவும் பலவானவிடத்து ஒன்றிலுஞ்) சோர்வில்லாதவனாகி, அஞ்சான் அவனை - (சபைக்கு) அஞ்சாதவன் (யாவன்) அவனை, இகல் - மாறுபாட்டிலே, வெல்லல் - வெல்லுதல், யார்க்கும் - யாவர்க்கும், அரிது-அரியது.

**647.** It is impossible for any one to conquer him by intrigue who possesses power of speech, and is neither faulty nor timid.

---

அ. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(பரி - ரை.) எ-து,—சொல்லப்படுங் காரியங்களை நிரல்படக் கோத்து இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப்பெறின், உலகம் அவற்றை விரைந் தேற் றுக் கொள்ளும், எ-று.

தொழில் - சாதியொருமை. நிரல்படக் கோத்தல்-முன்சொல்வனவும் பின் சொல்வனவு மறிந்து அம்முறையே வைத்தல். இனிதாதல் - கேட்பார்க்கின்பம் பயத்தல். சொல்லுதல்வல்லான் நூறுயிரவருளொருவன் என்ற வடமொழி பற்றிப் பெறினென்றார். ஈண்டுக் கேட்டல்-ஏற்றுக்கோடல். இவை யிரண்டு பாட்டானும் அவ்வாற்றாற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தொழில் - (சொல்லப்படும்) காரியங்களை, நிரந்து - ஒழுங்குபடக்கோத்து, இனிது - இனிதாக, சொல்லுதல் வல்லார் - சொல்லுதல் வல்லவரை, பெறின் - பெற்றால், ஞாலம் - உலகமானது, விரைந்து கேட்கும் - (அவைகளை) விரைந்து ஏற்றுக்கொள்ளும்.

**648.** If there be those who can speak on various subjects in their proper order and in a pleasing manner, the world would readily accept them.

---

௯. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

(பரி - ரை.) எ-து,—குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வா ற்றாற் சொல்லுதலை யறியாதார் பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச்சொல்ல விரும்புவர், எ-று.

குற்றம் - மேற்சொல்லிய குணங்கட்கு மறுதலையாயின. இடைவிடாது பல சொல்லுதலையுஞ் சொல்வன்மையென்று விரும்புவா ருளர், அவர் இவ்வாறு சொல்லமாட்டாதாரே, வல்லார் அதுசெய்யாரென யாப்புறுப்பார், மன்றவெ ன்றார்.

(தெ - ப - ரை.)—மாசு அற்ற - குற்றமற்றவைகளாய், சில - சிலவாகிய வார்த்தைகளை, சொல்லல் - (அவ்வகையால்) சொல் லுதலை, தேற்றாதவர் - அறியாதவர், பல - பலவாகிய வார்த்தை களை, சொல்ல - தொடுத்துச்சொல்ல, காமுறுவர் - விரும்புவார்.

**649.** They will desire to utter many words, who do not know how to speak a few faultless ones.

---

௬௦. இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(பரி - ரை.) எ-து,—கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித் துரைக்கமாட்டாதவர் கொத்தின்கண்ணே மலர்ந்து வைத்தும் நாறாத பூவை யொப்பர், எ-று.

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச் சூடப்படாத வாறு போல நூலைக் கற்றுவைத்துஞ் சொல்லமாட்டாதார் நன்குமதிக்கப்படா ரென் றமையின், இது தொழிலுவமையாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் அது மாட்டாதார திழிபு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கற்றது - கற்றநூல்களை, உணர-(பிறர்) அறி யும் விதமாக, விரித்து உரையாதார்-விரித்துச்சொல்ல மாட்டா தவர், இணர் - கொத்தினிடத்தே, ஊழ்த்தும் - மலர்ந்திருந்தும், நாறா - மணக்காத, மலர் அனையர் - பூப்போல்வர்.

**650.** Those who are unable to set forth their acquirements (before others) are like flowers blossoming in a cluster and yet without fragrance.

---

## ௬௬ - ம். அதி. வினைத்தூய்மை.

அஃதாவது செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாகவேண்டுமென்கின் றமையின், இது சொல்வன்மையின் பின் வைக்கப்பட்டது.

க. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

(பரி - ரை.) எ-து,—ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வமொன்றனை யுங் கொடுக்கும், அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற் றையுங் கொடுக்கும், எ-று.

வேண்டியவெல்லா மென்றது இம்மைக்கண் அறம் பொருளின்ப முதலாய வற்றையும் மறுமைக்கட் டான்விரும்பிய பதங்களையும். இதனாற் காணப்படுந் துணைநன்மையினுங் கருதப்படும் வினைநன்மை சிறந்ததென வினைத்தூய்மை யது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—துணைநலம் - (ஒருவனுக்கு) துணையினது நன்மையானது, ஆக்கம்-செல்வம் ஒன்றையே, தரும் - கொடுக் கும்; வினைநலம் - தொழிலினது நன்மையானது, வேண்டிய எல் லாம்-(அவன்) வேண்டியவைகளையெல்லாம், தரும்-கொடுக்கும்.

**651.** The efficacy of support will yield (only) wealth; (but) the efficacy of action will yield all that is desired.

---

உ. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

(பரி - ரை.) எ-து,—தம்மரசனுக்கு இம்மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை அமைச்சர்க்கு எக்காலத்து மொழிதல்வேண் டும், எ-று.

பெருகல், சுருங்கல், இடைநிற்றலென்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின், என்றுமென்றார். வேண்டுமென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் பொருட்டு.

(தெ-ப-ரை.)—புகழொடு - (தம்மரசனுக்கு) புகழையும், நன்றி - அறத்தையும், பயவா - தராத, வினை - தொழில்களை, என்றும்-எக்காலத்தும், ஒருவுதல் வேண்டும் - (மந்திரிகளுக்கு) ஒழிதல் வேண்டும்.

**652**. **Ministers should at all times avoid acts which, in addition to fame, yield no benefit (for the future).**

---

௩. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

(பரி-ரை.) எ-து—மேலாகக் கடவேமென்று கருதுவார் தம்மொளி கெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க, எ-று.

ஓதல்வேண்டுமென்பது ஒருசொன்னீர்மைத்து. ஒவுதலென்பது குறைந்து நின்றது. ஒளி-தாமுள காலத்து எல்லாராலும் நன்குமதிக்கப்படுதல். செய்யென்னும் முதனிலைத்தொழிற்பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் செய்வினையென வினைத்தொகை யாக்கியவழிப் பொருளின்மையறிக. ஒளிகெடவருவது ஆக்கமன்றென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஆதும் - மேலாக்கடவோம், என்னுமவர் - என்றுநினைப்பவர், ஒளி - (தம்) ஒளி, மாழ்கும் - கெடுதற்குக் காரணமாகிய, வினை - தொழிலை, செய் - செய்தலை, ஓதல்வேண்டும் - ஒழியக்கடவர்.

**653**. Those who say "we will become (better)" should avoid the performance of acts that would destroy (their) fame.

---

௪. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(பரி-ரை.) எ-து,—தாமிடுக்கணிலே படவரினும், அது தீர்தற்பொருட்டு முன்செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார் துளக்கமற்ற தெளிவினையுடையார், எ-று.

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்கணோக்கி எஞ்ஞான்றுங் கழியாத விழிவு எய்தற்பாலதன்றென்பதூஉம் அஃதெய்தினும் வருவது வருமென்பதூஉம் தெளிவராகலான், செய்யாரென்றார்.

(தெ-ப-ரை.)—நடுக்கு அற்ற-அசைவற்ற, காட்சியவர்-தெளிவையுடையவர், இடுக்கட்படினும்-(தாம்) துன்பத்திலேபடவரினும், (அது தீர்தற்பொருட்டு), இளிவந்த செய்யார் - (முன் செய்தவர்க்கு) இழிவுவந்ததொழில்களை, செய்யார் - செய்யமாட்டார்கள்.

**654**. **Those who have an infallible judgment though threatened with peril will not do acts which have brought disgrace (on former ministers).**

---

௫. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—யான் செய்தது எத்தன்மைத்தென்று பின் றானேயிரங்கும் வினைகளை ஒருகாலுஞ் செய்யாதொழிக ; அன்றி ஒருகான்மயங்கி அவற்றைச் செய்யுந்தன்மையனாயினானாயின், பின்னிருந்து அவ்விரங்கல்களைச் செய்யாதொழிதல் நன்று, எ-று.

இரங்குவவென முன்வந்தமையிற் பின் அன்னவெனச் சுட்டியொழிந்தார். அவ்வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந்திரங்குவனாயின், அது தீரும்வாயி லறிந்திலனெனவும், திட்பமிலனெனவும், பயனில்லன செய்கின்றானெனவும், தன்பழியைத் தானே தூற்றுகின்றானெனவும், எல்லாருமிகழ்தலிற் பின்னிரங்காமை நன்றென்றார். இதுவும், வினைத்தூயார் செயலாகலின், உடன்கூறப்பட்டது. பிற்றொடர்தற்குச் செய்வானாயின் அவை போல்வனவுஞ் செய்யாமை நன்றெனப் பிறரெல்லாம் இயைபற வுரைத்தார்.

(தெ-ப-ரை.)—எற்று என்று - (நான்செய்தது)எப்படிப் பட்டதென்று, இரங்குவ-(பின்தானே) இரங்குந் தொழில்களை, செய்யற்க - (ஒருகாலும்) செய்யா திருக்கக்கடவன்; செய்வானேல் - (ஒருகால்மயங்கி அவைகளை) செய்வானாயின், மற்று - பின்பு, அன்ன - அவ்விரங்கல்களை, செய்யாமை - செய்யாதிருத்தல், நன்று - நலமுடையது.

**655** Let a minister never do acts of which he would have to grieve saying, "What is this I have done!"; (but) should he do (them), it were good that he grieved not.

---

௬. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(பரி-ரை.) எ-து,—தன்னைப் பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந் தன்மையனாயினானெனினும் அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை ஒருவன் செய்யாதொழிக, எ-று.

இறந்த மூப்பினராய இருமுதுகுரவருங் கற்புடைமனைவியுங் குழவியும் பசியான் வருந்துமெல்லைக்கண் தீயனபலவுஞ் செய்தாயினும் புறந்தருகவென்னும் அறநூற்பொதுவிதி பொருணூல்வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்கு மதிக்கற்பாடுடைய அமைச்சர்க் கெய்தாமைபற்றி, இவ்வாறு கூறினார். இவை யைந்துபாட்டானும் பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்கவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஈன்றாள் - (ஒருவன் தன்னை) பெற்ற தாயினது, பசி - பசியை, காண்பான் ஆயினும் - (வறுமையாலே) கண்டிருக்குந் தன்மையனாயினானெனினும், (அதைக்குறித்து), சான்றோர் பழிக்கும் - (அறிவால்) நிறைந்தோர் பழிக்கும், வினை - தொழில்களை, செய்யற்க-செய்யாதிருக்கக்கடவன்.

**656.** Though a minister may see his mother starve, let him do no act which the wise would (treat with contempt).

---

௭. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

(பரி - உரை.) சாலாதார் தீயவினைகளைச்செய்து அதனாற் பழியைத் தம் மேற்கொண்டு பெற்ற செல்வத்தின் அது மேற்கொள்ளாத சான்றோ ரனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது, எ-று.

நிலையாத செல்வத்தின்பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் சால் போடியையாமையின், சான்றோர் கழிநல்குரவே தலை யென்றார்.

(தெ - ப - உரை.)—பழிமலைந்து - (சான்றோரல்லாதவர் தீத் தொழிலைச்செய்து அதனால்) பழியைத் தம்மேற்கொண்டு, எய்திய-பெற்ற, ஆக்கத்தின் - செல்வத்தைக்காட்டிலும், சான்றோர்- (அதுமேற்கொள்ளாத) சான்றோ ரனுபவிக்கும், கழிநல்குரவே- மிகுந்தவறுமையே, தலை - உயர்ந்தது.

**657.** Far more excellent is the extreme poverty of the wise than wealth obtained by a heaping up of sinful deeds.

---

௮. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும்.

(பரி - உரை.) எ-து,—நூலோர் கடிந்த வினைகளைத் தாமுங் கடிந்தொழியாது பொருளுக்குச் செய்த அமைச்சர்க்கு அவை தூயவன்மையின் முடியா, ஒருவாற்றான் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும், எ-று.

முடிதல் - கருதியபொருள் தருதல். பீழைதருதலாகிய பொருளின்றொழில் அதற்குக் காரணமாய வினைகண்மே லேற்றப்பட்டது.

(தெ-ப-உரை.)—கடிந்த - (நூலோர்) தள்ளியதொழில்களை, கடிந்து ஓரார் - (தாமும்) தள்ளிவிடாராகி, செய்தார்க்கு-(பொருளைக்குறித்து) செய்த மந்திரிகளுக்கு, அவைதாம் - அத்தொழில்கள், (தூயவை யல்லாமையால் முடியாவாம்), முடிந்தாலும் - (ஒருவழியால்) முடிந்தாலும், பீழை-(பின்) துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

**658.** The actions of those, who have not desisted from doing deeds forbidden (by the great), will, even if they succeed, cause them sorrow.

---

௯. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(பரி - உரை.) எ - து,—ஒருவன் தீயவினைகளைச் செய்து பிறர் இரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன்றன் இரங்கப் போகாநிற்கும்; மற்றைத் தூயவினையான் வந்த பொருள்கள் முன்னிழந்தானாயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும், எ-று.

பின்னெனவே மறுமையு மடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரணமாய வினைகள தியல்பு கூறியவாறு.

(தெ - ப - ரை.)—ஒருவன் தீத்தொழில்களைச் செய்து, அழக்கொண்ட எல்லாம் - (பிறர்) துக்கிக்கக்கொண்ட பொருள்களெல்லாம் அழப்போம் - (இம்மையில் அவன்) துக்கிக்கப் போகாநிற்கும்; நல் பாலவை - மற்ற நல்லதொழில்களால் வந்த பொருள்கள், இழப்பினும் - (முன்) இழந்தாலுயினும், பின்பயக்கும் - பின்வந்து பயன்கொடுக்கும்.

**659.** All that has been obtained with tears (to the victim) will depart with tears (to himself); but what has been obtained by fair means, though with loss at first, will afterward yield fruit.

---

௧0. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(பரி-ரை.) எ-து,—அமைச்சன் தீயவினைகளாற் பொருள்படைத்து அதனால் அரசனுக்கு ஏமஞ்செய்தல் பசிய மட்கலத்துள்ளே நீரைப்பெய்து அதற்கு ஏமஞ்செய்ததனோ டொக்கும், எ-று.

முன் ஆக்கம் பயப்பனபோற்றோன்றிப் பின்னழிவே பயத்தலால், அவை சலமெனப்பட்டன. ஏமமார்த்தலென்பது ஏமாத்தலென்றாயிற்று: ஏமத்தையடையப்பண்ணுதலென்றவாறு. இருத்துதல் - நெடுங்காலமிருப்பச்செய்தல். அரசனும் பொருளும் சேரப்போமென்பதாம். பிறரெல்லாம் ஏமாத்தலென்று பாடமோதி, அதற்கு மகிழ்தலென்றும், இரீஇயற்றென்பதற்கு வைத்தாற்போலுமென்று முரைத்தார்; அவர் அவை தன்வினையும் பிறிதின்வினையுமாய உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர். இவை நான்குபாட்டானும் அதற்குக் காரணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சலத்தால் - (மந்திரி) தீத்தொழில்களால், பொருள்செய்து - பொருளைச் சம்பாதித்து, ஏமம் ஆர்த்தல் - (அதனால் அரசனுக்கு) காப்புச்செய்தல், பசு மட்கலத்துள்-பசிய மட்பாத்திரத்தில், நீர்பெய்து - நீரைவார்த்து, இரீஇயற்று - (அதற்கு) காப்புச்செய்ததனோ டொக்கும்.

**660.** (For a minister) to protect (his king) with wealth obtained by foul means is like preserving a vessel of wet clay by filling it with water.

---

## ௬௭-ம். அதி—வினைத்திட்பம்.

அஃதாவது அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

(பரி-ரை.) எ-து,—வினைசெய்தற்கட் டிண்மையென்று சொல்லப்படுவது அதனை முடித்தற்கு உரியானொருவன் மனத்தினது திண்மை ; அஃதொழிந்தன வெல்லாம் அதற்குத் திண்மையென்று சொல்லப்படா, எ-று.

ஒழிந்தனவாவன—படை, அரண், நட்பு முதலியவற்றின் றிண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின் மற்றையவென்றும், வேண்டினும் அஃதில்வழிப் பயனிலவாகலிற் பிறவென்றுங் கூறினார். இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வினைத்திட்பம் என்பது - தொழில்செய்யுமிடத்து வலிமையென்று சொல்லப்படுவது, ஒருவன் - (அதனை முடித்தற்குரிய) ஒருவனது, மனத்திட்பம் - மனத்தினது வலிமையாம்; மற்றைய எல்லாம்-அது நீங்கலான வல்லமைகளெல்லாம், பிற - (அதற்கு) வலிமையென்று சொல்லப்படுவனவல்ல.

**661.** Firmness in action is (simply) one's firmness of mind; all other (abilities) are not of this nature.

---

உ. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(பரி - ரை.) எ-து,—முன் நீதியாராய்ந்த அமைச்சரது துணிபு பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும், செய்யும்வினை தெய்வத்தாற் பழுதுபட்டவழி அதற்குத் தளராமையும் ஆகிய இவ்விரண்டன் வழியென்பர் நூலோர், எ-று.

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மையும் உடன்கூறினார். உறுதலுடையதனை முன் ஊறென்றமையின் உற்றபினென்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் இரண்டினாறென்றுங் கூறினார். ஊறொராரொன்று பாடமோதுவாருமுளர் ; அஃது ஒல்காமையென்னு மெண்ணேடும் இரண்டென்னுந் தொகையோடும் இயையாமை அவரறிந்திலர்.

(தெ-ப-ரை.)—ஆய்ந்தவர் - (முன்பு நீதிநூலை) ஆராய்ந்த மந்திரிகளது, கோள் - துணிவு, ஊறு - பழுதுபடுந் தொழிலை, ஓரால் - செய்யாமையும், உற்றபின் - (செய்யுந்தொழில் ஊழினாலே) பழுதுபட்டவிடத்து, ஒல்காமை - (அதற்கு) தளராமையும் (ஆகிய), இவ்விரண்டின் - இவ்விரண்டினது, ஆறு-வழியாகும், என்பர் - என்று (நூலோர்) சொல்லுவர்.

**662.** Not to perform a ruinous act, and not to be discouraged by the ruinous termination of an act, are the two maxims which, the wise say, form the principles of those who have investigated the subject.

---

௩. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும்.

(பரி-ரை.) எ-து,—செயப்படும் வினையை முடிவின்கட் புலப்படும்வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது ; அங்ஙனமன்றி இடை

யே புலப்படுமாயின் அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும், எ-று.

மறைத்துச் செய்வதாவது அங்கம் ஐந்து மெண்ணியவாறு பிறரறியாமலும், தானறிந்ததூஉம், தன்னிங்கிதம், வடிவு, சொயல், சொற்களான் அவருய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அத் திட்பம், ஆண்டன்மையான் வருதலின், ஆண்மையெனப்பட்டது. எற்றுவிழுமமாவன—பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வராகலின், அவற்றான் வருவன. விழுமம்—சாதிப்பெயர். இவை யிரண்டொட்டானும் அதனது பகுதி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கடை - (செயப்படுந்தொழிலை) முடிவிலே, கொட்க - சுழல [வெளிப்பட வென்றபடி], செய்தக்கது - (அதற்குமுன்னெல்லாம் மறைத்து) செய்வதே, ஆண்மை - வலியாகும்; இடை - நடுவிலே, கொட்கின் - வெளிப்படுமாயின், (அவ்வெளிப்படுதல்), எற்று - நீக்கப்படாத, விழுமம் - துன்பத்தை, தரும் - (செய்தவனுக்கு) கொடுக்கும்.

**663.** So to perform an act as to publish it (only) at its termination is (true) manliness; for to announce it before hand, will cause irremediable sorrow.

---

௪. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

(பரி - ரை.) எ-து,—யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்துமென நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய; அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கும் அரியவாம், எ-று.

சொல்லுதல், செயலென்பன சாதிப்பெயர். அரியவற்றை யெண்ணிச்சொல்லுதல் திட்பமில்லாதார்க்கும் இயறலின், எளியவென்றார். இதனால் அதனதருமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சொல்லுதல் - (இத்தொழிலை இவ்விதத்தால் செய்வோமென்று ஒழுங்குபட) சொல்லுதல், யார்க்கும் - எவர்க்கும், எளிய - எளியவையாகும், சொல்லியவண்ணம் - (அதனை) அச்சொல்லப்பட்ட விதத்தால், செயல்-செய்தல், அரியவாம் - அரியவையாம்.

**664.** To say (how an act is to be performed) is (indeed) easy for any one; but far difficult it is to do according to what has been said.

---

௫. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

(பரி - ரை.) எ-து,—எண்ணத்தாற் சிறப்பெய்திப் பிறவிலக்கணங்களாலும் மாட்சிமைப் பட்ட அமைச்சரது வினைத்திட்பம், வேந்தன்கண்ணே உறுதலையெய்தலான், எல்லாராலும் நன்குமதிக்கப்படும், எ-று.

வேந்தன்க ணூறெய்தல் - எடுத்தவினை அதனான் முற்றுப்பெற்றுச் செல்வமும் புகழும் அவன்கண்ணவாதல். எய்தலானென்பது திரிந்து நின்றது. உள்ளல் - மதிப்பான் மறவாமை. இதனால் அதன்சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வீறு எய்தி - (எண்ணத்தினாலே) சிறப்பை அடைந்து, மாண்டார் - (மற்றையிலக்கணங்களாலும்) மாட்சிமைப்பட்ட மந்திரிகளது, வினைத்திட்பம் - தொழில் வலிமையானது, வேந்தன்கண்-அரசனிடத்து, ஊறு எய்தி-உறுதலை அடைதலாலே, உள்ளப்படும் - (எல்லாராலும்) நன்குமதிக்கப்படும்.

**665**. The firmness in action of those who have become great by the excellence (of their counsel) will, by attaining its fulfilment in the person of the king, be esteemed (by all).

---

சு. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

(பரி-ரை.) எ-து,—தாமெய்த எண்ணிய பொருள்க ளெல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர், எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கட் டிண்மை யுடையராகப் பெறின், எ-று.

எளிதினெய்துப வென்பார், எண்ணியாங் கெய்துபவென்றார். அவர் அவ்வாறல்ல தென்னுமையிற் றிண்ணியராகவே வினைமுடியும், அது முடிய அவை யாவையுங் கைகூடுமென்பது கருத்து. இதனால் அஃதுடையாரெய்தும் பயன் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—எண்ணியார் - (ஒருபொருளை அடைய) எண்ணினவர், திண்ணியர் ஆகப்பெறின் - (அப்பொருட்கு வழியாகிய தொழிலிடத்து) வலிமையுடையராகப் பெற்றால், எண்ணிய - (தம்மால்) எண்ணப்பட்ட பொருள்களையெல்லாம், எண்ணி ஆங்கு - அவ்வெண்ணியபடியே, எய்துப - அடைவர்.

**666**. If those who have planned (an undertaking) possess firmness (in executing it), they will obtain what they have desired even as they have desired it.

---

எ. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

(பரி - ரை.) எ-து,—உருளா நின்ற பெரிய தேர்க்கு அச்சின்கண் ஆணி போல வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம், அதனால் அவரை வடிவின் சிறுமை நோக்கி இகழ்தலையொழிக, எ-று.

சிறுமை, எள்ளாமைவேண்டு மென்பதனானும், உவமையானும், பெற்றாம். அச்சு - உருள் கோத்த மரம். ஆணி - உருள் கழலாது அதன்கடைக்கட் செருகுமது. அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரியபாரத்தைக் கொண்டுய்க்குந் திட்பமுடைத்து அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டுய்க்குந் திட்பமுடைய அமைச்சருமுளர், அவரை அத்திட்பநோக்கி அறிந்து கொள்கவென்பதாம். இதனால் அவரையறியுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகம், உருள் - உருளாநின்ற, பெருந்தேர்க்கு-பெரியதேர்க்கு, அச்சாணி அன்னார்-அச்சினிடத்தே ஆணி போல் தொழிலினிடத்தே வலிமையையுடையவரை, உடைத்து-உடையது ; (அதனால்) உருவுகண்டு - (அவர்) வடிவினிடத்தே சிறுமைநோக்கி, எள்ளாமைவேண்டும் - (அவரை) இகழாமை வேண்டும்.

**667**. Let none be despised for (their) size; (for) the world has those who resemble the linch-pin of the big rolling car.

---

அ. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

(பரி - ரை.) எ-து,—மனந் தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்னசைதலின்றி நீட்டித்தலையொழிந்து செய்க, எ-று.

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோற் றோன்றுமாகலின், தெளிந்து பல காலாராய்ந்து தாஞ்செய்வதாக ஓர்த்த வினையைக் கலங்காது கண்டவினையென்றார். துளங்காமை-திட்பமுடைமை.

(தெ-ப-ரை.)—கலங்காது - (மனம்) கலங்காமல், கண்ட-(செய்வதாக) துணிந்த, வினைக்கண் - தொழிலினிடத்து, துளங்காது - (பின்) அசைதல் இல்லாமல், தூக்கம் கடிந்து - ஆலசியத்தை ஒழித்து - செயல் - செயக்கடவர்.

**668**. An act that has been firmly resolved on must be as firmly carried out without delay.

---

௯. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

(பரி - ரை.) எ-து,—முதற்கண் மெய்ம்முயற்சியாற் றமக்குத் துன்பம் மிக வருமாயினும், அதுநோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க, எ-று.

துணிவு-கலங்காமை. அஃதுடையார்க்கல்லது கணிகமாய முயற்சித்துன்ப நோக்காது நிலையுதலுடைய பரிணமவின்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், துணிவாற்றிச் செய்கவென்றார். இவை யிரண்டு பாட்டானும் அவர்வினை செய்யுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—துன்பம் - (முதலில் மெய்ம்முயற்சியால்) துன்பம், உறவரினும் - (தமக்கு) மிகவரினும் (அதுகண்டுதளராமல்), இன்பம் - சுகத்தை, பயக்கும் - (முடிவிலே) தருகின்ற, வினை-தொழிலை, துணிவு ஆற்றி - வலிமையுடையராய், செய்க-செய்யக்கடவர்.

**669**. Though it should cause increasing sorrow (at the outset), do with firmness the act that yields bliss (in the end).

---

௧௦. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

(பரி - ரை.) எ-து,—வினைத் திட்பத்தை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை, ஒழிந்த திட்பங்களெல்லா முடையராய விடத்தும் நன்குமதியார் உயர்ந்தோர், எ-று.

மனத்தின்கண் திட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்க ளெல்லாம் உளவாயினும், வினை முடியாதாம், ஆகவே, அவையெல்லாங் கெடும் என்பதுபற்றி உலகு வேண்டாதென்றார். இதனால் வினைத்திட்பமில்லாதாரது இழிபு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகு - உயர்ந்தோர், வினைத்திட்பம்-தொழில்வலிமையை, வேண்டாரை - (இது நமக்குச் சிறந்ததென்று) கொள்ளாத மந்திரிகளை, எனைத்திட்பம்-அவை நீங்கலாகிய வலிமைகளெல்லாம், எய்தியக்கண்ணும் - உடையவராகிய விடத்தும், வேண்டாது - நன்குமதியார்.

**670.** The great will not esteem those who esteem not firmness of action, whatever other abilities the latter may possess.

---

## ௬௮-ம். அதி—வினைசெயல்வகை.

அஃதாவது அத்திட்பமுடைய வமைச்சன் அவ்வினையைச் செய்யுந் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

௧. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

(பரி - ரை.) எ-து,—விசாரத்திற் கெல்லையாவது விசாரிக்கின்றான் இனி இது தப்பாதென்னுந் துணிவினைப் பெறுதல்; அங்ஙனந் துணிவுபெற்ற வினை பின் நீட்டிப் பின்கட் டங்குமாயின், அது குற்றமுடைத்து, எ-று.

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் எனவே, துணிவெய்து மளவுஞ் சூழவேண்டுமென்பது பெற்றாம். பின்னர்த் துணிவு ஆகுபெயர். நீட்டிப்பு-செய்யுங்காலத்துச் செய்யாமை. அஃதுள்வழிக் காலக்கழிவாகலானும், பகைவர் அறிந்தழித்தலானும் முடியாமையின், அதனைத் தீதென்றார்.

(தெ-ப-ரை.)—சூழ்ச்சி - ஆலோசனைக்கு, முடிவு - எல்லையாவது, துணிவு எய்தல் - (ஆலோசிப்பவன் இனி இது தப்பாதென்னும்) துணிவைப்பெறுதல்; அத்துணிவு - அப்படித்துணிவுபெற்றதொழில், தாழ்ச்சியுள் - (பின்) ஆலசியத்தில், தங்குதல் - பொருந்துதல், தீது - குற்றமுடையதாம்.

**671.** Consultation ends in forming a resolution (to act); (but) delay in the execution of that resolve is an evil.

---

௨. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(பரி - வுரை.) எ-து,—நீட்டித்துச் செய்யும் பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க; நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியாதொழிக, எ-று.

இருவழியும் இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. இருவகைவினைகளும் வலியானுங் காலத்தானும் அறியப்படும். மாறிச்செய்யின், அவை வாயாவென்பது கருத்து. மேற்றூங்காமையென்றார், ஈண்டதனைப் பகுத்துக்கூறினார். இவை இரண்டுபாட்டானும் பொதுவகையால் வினைசெய்யுந் திறங் கூறப்பட்டது.

(தெ-ப-வுரை.)—தூங்கி - ஆலசியித்து, செயல்பால - செய்யும்பகுதியையுடைய தொழில்களுள், தூங்குக - ஆலசியம் பண்ணக்கடவன்; தூங்காது - ஆலசியம்பண்ணாமல், செய்யும்வினை — செய்யுந் தொழில்களுள், தூங்கற்க — ஆலசியம் பண்ணாதிருக்கக் கடவன்.

**672.** **Sleep over such (actions) as may be slept over; (but) never over such as may not be slept over.**

---

௩. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(பரி - வுரை.) எ-து,—வினைசெய்யுங்கால் இயலுமிடத் தெல்லாம் போராற் செய்தல் நன்று; அஃதியலாவிடத்து ஏனைமூன் றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாயநோக்கிச் செய்க, எ-று.

இயலுமிடம் - பகையிற்றன் வலியுள்ள காலம். அக்காலத்துத் தண்டமே நன்றென்றார், அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம்-ஒத்தகாலமும் மெலியகாலமும். அவ்விரண்டுகாலத்துஞ் சாம பேத தானங்களுள் அது முடியுமுபாயத்தாற் செய்கவென்றார், அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடைய வேனும் உடம்படுத்தற் பயத்தாற் றம்முளொக்குமாகலின். இதனான் வலியான், ஒப்பான், மெலியானென நிலை மூவகைத் தென்பதூஉம் அவற்றுள் வலியது சிறப்பும், கூறப்பட்டன.

(தெ-ப-வுரை.)—ஒல்லும்வாய் எல்லாம் - (தொழில்செய்யும்போது) கூடுமிடத்தெல்லாம், வினை-தண்டஞ்செய்தல், நன்று-நலமுடையதாம்; ஒல்லாக்கால் - (அது) கூடாதவிடத்து, செல்லும்வாய் நோக்கி - (மற்றைமூன்று உபாயங்களிலே அது) முடிவதோ ருபாயம்நோக்கி, செயல் - செய்யக்கடவன்.

**673.** **Whenever it is possible (to overcome your enemy) the act (of fighting) is certainly good; if not, endeavour to employ some more successful method.**

---

௪. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

(பரி - வுரை.) எ-து,—செய்யத் தொடங்கிய வினையும் களையத் தொடங்கிய பகையுமென்று சொல்லப்பட்ட இரண்டன தொழிவும் ஆராயுங்காற் றீயினதொழிவுபோலப் பின் வளர்ந்து கெடுக்கும், எ-று.

இனி இக்குறை என்செய்வ தென்று இகழ்ந்தொழியற்க, முடியச்செய்க வென்பதாம். பின் வளர்த லொப்புமைபற்றிப் பகையெச்சமும் உடன் கூறினார். இதனான் வலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வினை - (செய்யத்தொடங்கிய) தொழிலும், பகை - (அழிக்கத்தொடங்கிய) பகையும், என்ற இரண்டின் - என்றுசொல்லப்பட்ட இரண்டினது, எச்சம் - குறையும், நினையுங்கால் - ஆராயுமிடத்து, தீ எச்சம் போல - தீயினது குறை போல், தெறும் - (பின்வளர்ந்து) கெடுக்கும்.

**674.** When duly considered, the incomplete execution of an undertaking and hostility will grow and destroy one like the (unextinguished) remnant of a fire.

---

௫. பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(பரி - ரை.) எ-து,—வினைசெய்யு மிடத்துப் பொருளுங் கருவியுங் காலமும் வினையும் இடனுமாகிய இவ்வைந்தினையும் மயக்கமற வெண்ணிச் செய்க, எ-று.

எண்ணொடு பிறவழியுங் கூட்டப்பட்டது. பொருள் - அழியும் பொருளும் ஆகும் பொருளும். கருவி - தன்றானையும் மாற்றார்தானையும். காலம்-தனக்காங் காலமும் அவர்க்காங்காலமும். வினை - தான் வல்லவினையும் அவர் வல்லவினையும். இடம்-தான் வெல்லுமிடமும் அவர் வெல்லு மிடமும். இவற்றைத் தான் வென்றி யெய்துந்திறத்திற் பிழையாமலெண்ணிச் செய்கவென்பதாம்.

(தெ-ப-ரை.)—பொருள் - (தொழில்செய்யுமிடத்து) பொருளும், கருவி - சாதனமும், காலம் - காலமும், வினை - தொழிலும், இடன் - இடமும் (ஆகிய), ஐந்தும்—, இருள்தீர-மயக்கம் நீங்க, எண்ணி - நினைத்து, செயல் - செய்யக்கடவன்.

**675.** Do an act after a due consideration of the (following) five, viz., money, means, time, execution and place.

---

௬. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(பரி - ரை.) எ-து,—வினைசெய்யுங்கால் அது முடிதற்குளதாம் முயற்சியும் அதற்கு வருமிடையூறும் அது நீங்கி முடிந்தாற் றானெய்தும் பெரும்பயனும் சீர்தூக்கிச் செய்க, எ-று.

முடிவு—ஆகுபெயர். முயற்சியிடையூறுகளதளவிற் பயனதளவு பெரிதாயிற் செய்க வென்பதாம்.

(தெ - ப - ரை.)—முடிவும் - (தொழில் செய்யுமிடத்து அது) முடிதற்கு உளதாகிய முயற்சியையும், இடையூறும் - (அதற்குவரும்) இடையூற்றையும், முற்றி - (அவ்விடையூறுநீக்கி)

முடித்தால், எய்தும் - (தான்) அடையும், படுபயனும் - பெரும் பயனையும், பார்த்து - ஆலோசித்து, செயல் - செய்யக்கடவன்.

**676**. An act is to be performed after considering the exertion required, the obstacles to be encountered, and the great profit to be gained (on its completion.)

---

௭. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(பரி - ரை.) எ-து,—அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கி னான் செய்யுமுறைமையாவது அதன துளப்பாட்டினை யறிவான் கருத்தினைத் தானறிதல், எ-று.

அவ்வாறென்றது பொருண்முதலிய வெண்ணலையும் முடிவுமுதலிய தூக்கலையும். உள்ளறிவான் - முன்செய்து போந்தவன். அவன்கருத்து-அவன் செய்து போந்த உபாயம். அதனையறியவே, தானும் அதனாற்செய்து பயனெய்துமென் பதாம். இவை மூன்றுபாட்டானும் ஒப்பான் செய்யுந் திறங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செய்வினை - (அவ்வழியால்) செய்யப்படுந் தொழிலை, செய்வான்-செய்யத்தொடங்கினவன், செயல் முறை-செய்யுமுறையாவது, அவ்வினை - அத்தொழிலினது, உள் - உளப்பாட்டை, அறிவான் - அறிபவனது, உள்ளம் - கருத்தை, கொளல் - (தான்) அறிதல்.

**677**. The method of performance for one who has begun an act is to ascertain the mind of him who knows the secret thereof.

---

௮. வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(பரி-ரை.) எ-து,—செய்கின்ற வினையாலே அன்னது பிறிது மோர்வினை யை முடித்துக்கொள்க; அது மதத்தானனைந்த கபோலத்தினை யுடைய யானை யாலே அன்னது பிறிது மோர்யானையைப் பிணித்ததனோ டொக்கும், எ-று.

பிணித்தற்கருமை தோன்ற நனைகவுளென்பது பின்னுங் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே பிறிதுமோர்வினையை முடித்தற் குபாயமாமாறு எண் ணிச் செய்க; செய்யவே அம்முறையான் எல்லாவினையும் எளிதின் முடியுமெ ன்பதாம்.

(தெ-ப-ரை.)—வினையால் - (செய்யப்படுகின்ற) தொழிலால், வினை - (அப்படிப்பட்ட) வேறொருதொழிலை, ஆக்கிக் கோடல் - முடித்துக்கொள்ளக் கடவன்; (அது) நனை கவுள் - (மதத்தால்) நனைந்த கபோலத்தையுடைய, யானையால் - யானையினாலே, யானை-(அப்படிப்பட்ட வேறொரு) யானையை, யாத்தது அற்று - கட்டியதோடு ஒக்கும்.

**678**. To make one undertaking the means of accomplishing another (similar to it) is like making one rutting elephant the means of capturing another.

---

௯. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(பரி-ரை.) இ-ள்,—வினைசெய்வானுற் றன் னட்டார்க்கு இனியவற்றைச்செய்தலினும் விரைந்து செய்யப்படும் தன்பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல், எ-று.

அவ்வினை வாய்த்தற் பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன்மெலிவு புலனாவதன்முன்னே செய்கவென்பார், விரைந்ததென்றார். விரைந்து செய்யப்படுவதென்றவாறு. வினைசெய்யுந்திறமாகலிற் பகைவரோ டொட்டா ராயிற்று. தன்னொட்டார் பிறருட்கூடாமல் மாற்றி வைத்தலெனினு மமையும்.

(தெ-ப-ரை.)—நட்டார்க்கு - (தொழில்செய்பவனால் தனது) நட்பினருக்கு, நல்லசெயலின் - நல்லவகைகளைச் செய்தலினும், ஒட்டாரை - (தன்பகைவரது) பகைவரை, ஒட்டிக்கொளல் - (தனக்கு) நட்பாக்கிக்கொள்ளுதல், விரைந்ததே - விரைந்து செய்யத்தகுவதாம்.

**679.** One should rather hasten to secure the alliance of the foes (of one's foes) rather than perform good offices to one's friends.

---

௧௦. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(பரி-ரை.) இ-ள்,—ஆளுமிடஞ்சிறியராய அமைச்சர், தம்மின்வலியார் எதிர்ந்தவழித் தம்பகுதி நடுங்கலையஞ்சி, அந்நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை யேற்றுக்கொள்வர், எ-று.

இடம்-நாடும் அரணும். அவற்றது சிறுமை ஆள்வார்மே லேற்றப்பட்டது. மெலியாரோடு சந்திக்கு வலியார் இயைதலரிதாகலின், பெறினென்றார். அடியிலே மெலியராயினர் தம் பகுதியுமஞ்சி நீங்கின் முதலொடுங் கெடுவராகலின், அது வாராமற் சிறிது கொடுத்துஞ் சந்தினை யேற்றுக்கொள்க வென்பதாம். பணிதல் மானமுடையார்க்குக் கருத்தன்மையின், கொள்வரென உலகியலாற் கூறினார். இவை மூன்றுபாட்டானும் மெலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உறை சிறியார்-ஆளும் இடஞ் சிறியராகிய மந்திரிகள், (தம்மின்மிக்க வலியவர் எதிர்ந்தவிடத்தே), உள் - (தமது) அங்கங்கள், நடுங்கல் - நடுங்குதலுக்கு, அஞ்சி - பயந்து, குறைபெறின் - (அந்நிலைக்கு வேண்டுவதாகிய) சந்தி கூடுமாயின், பெரியார் - அப்பெரியவரை, பணிந்து - வணங்கி, கொள்வர் - (அதனை) ஏற்றுக் கொள்ளுவர்.

**680.** Ministers of small states, afraid of their people being frightened, will yield to and acknowledge their superior foes, if the latter offer them a chance of reconciliation.

---

# ௬௯ - ம். அதி. தூது.

அஃதாவது சந்தி விக்கிரகங்கட்கு வேற்றுவேந்தரிடைச் செல்வாரது தன்மை. அவ்விரண்டனையும் மேல் வினைசெயல்வகை யென்றமையின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவானெனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சனோ டொப்பானாகலானும் பின்னோன் அவனிற் கார்கூறு குணம் குறைந்தோ னாகலானும், இஃதமைச்சியலாயிற்று.

௧. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(பரி - ரை.) எ-து,—தன்சுற்றத்தார்மாட்டு அன்புடையனாதலும் அமைச்சுப் பூணற்கமைந்த குடியின்கட் பிறத்தலும் அரசர்சாதி விரும்பும் பண்புடையனாதலும் தூதுவார்த்தை சொல்லுவானுக் கிலக்கணம், எ-று.

முன்னையவிரண்டானும், முறையே சுற்றத்தார்க்குத் தீங்கு வாராமற் றான் பேணி யொழுகலும், தன்முன்னோர் தூதியல் கேட்டறிதலும், பெற்றும். வேந்தவாம்பண்புடைமை முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்தராதல் பெறுதும்.

(தெ-ப-ரை.)—அன்பு உடைமை - (தன்சுற்றத்தாரிடத்து) அன்புடையவனாதலும், ஆன்ற குடிப் பிறத்தல் - (மந்திரித்தொழில் செய்தற்கு) அமைந்த குடியிலே பிறத்தலும், வேந்து அவாம் பண்பு உடைமை-அரசர் சாதி விரும்புங் குணமுடையவனாதலும், தூதுரைப்பான் - தூது வார்த்தையைச் சொல்லுவோனுக்கு, பண்பு - இலக்கணமாம்.

**681.** The qualifications of an ambassador are affection (for his relations), a fitting birth, and the possession of attributes pleasing to royalty.

---

௨. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(பரி - ரை.) எ-து,—தம்மரசன்மாட் டன்புடைமையும் அவனுக்கு ஆவன வறியு மறிவுடைமையும் அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையு மெனத் தூதுரைக்க வுரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று, எ-று.

ஆராய்தல்-அவற்றிற் குடம்படுஞ் சொற்களைத் தெரிதல். இன்றியமையாத மூன்றெனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிற குணங்களும் வேண்டுமென்பது பெற்றும். இவையிரண்டு பாட்டானும் இருவகையார்க்கும் பொதுவிலக்கணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அன்பு - (தம்மரசனிடத்து) அன்புடைமையும், அறிவு - (அவனுக்கு ஆமவைகளை அறியும்) அறிவுடை

மையும், ஆராய்ந்த சொல் வன்மை - (அவைகளை வேற்று வேந்தரிடத்துச் சொல்லும்போது) ஆராய்ந்து சொல்லுதல் வலிமையும், (என) தூதுரைப்பார்க்கு-தூதுசொல்ல உரியவர்க்கு, இன்றியமையாத-அவசியமாக வேண்டிய குணங்கள், மூன்று-மூன்றும்.

**682.** Love (to his sovereign), knowledge (of his affairs), and a discriminating power of speech (before other sovereigns) are the three *sine qua non* qualifications of an ambassador.

---

௩. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(பரி-ரை.) இ-து,—வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது நீதிநூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்லனாதல், எ-று.

*கோறன் மாலையொன்பது தோன்ற வேலாரென்றும், தூதுவினை யிரண்டுமடங்க வென்றிவினையென்றுங் கூறினார். வல்லனாதல்-உணர்வுமாத்திர முடையராய அவர்முன் வகுக்குமாற்ற லுடையனாதல்.*

(தெ-ப-ரை.)—வேலாருள் - வேலினையுடைய வேற்றரசரிடத்து, வென்றி-(தன்னரசனுக்கு) வெற்றியைத் தருகின்ற, வினை உரைப்பான் - தொழிலைச்சொல்வோனுக்கு, பண்பு - இலக்கணமாவது, நூலாருள் - நீதிநூலை அறிந்த மந்திரிகளிடத்து, நூல் வல்லன் ஆகுதல்- (தான்) அந்நூலில் வல்லவனாகுதல்.

**683.** To be powerful in politics among those who are learned (in ethics) is the character of him who speaks to lance-bearing kings on matters of triumph (to his own sovereign.)

---

௪. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(பரி-ரை.) இ-து,—இயற்கையாகியவறிவும் கண்டார்விரும்புந் தோற்றப்பொலிவும் பலரோடும் பலகாலு மாராயப்பட்ட கல்வியுமென நன்குமதித்தற்கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தையுடையான் வேற்றுவேந்தரிடைத் தூதுவினைக்குச் செல்க, எ-று.

*இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின், செறிவுடையானென்றார். இவற்றான் நன்குமதிப்புடையனாகவே, வினை இனிது முடியுமென்பது கருத்து.*

(தெ-ப-ரை.)—அறிவு - (இயற்கை) அறிவும், உருவு - (கண்டோரிச்சிக்கும்) தோற்றப்பொலிவும், ஆராய்ந்த கல்வி - (பலரோடும் பலகாலும்) ஆராயப்பட்டகல்வியும் (என), இம்மூன்றின்-(நன்குமதித்தற்கு ஏதுவாகிய) இம்மூன்றினது, செறிவு உடையான் - கூட்டத்தை உடையவன், வினைக்கு - (வேற்றரசரிடத்துத் தூது) தொழிலுக்கு, செல்க - செல்லக்கடவன்.

**684.** He may go on a mission (to foreign rulers) who has combined in him all these three, viz., (natural) sense, an attractive bearing and well-tried learning.

---

௫. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(பரி-ரை.) எ-து,—வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லும் வழிக் காரணவகையாற் றொகுத்துச் சொல்லியும் இன்னாதகாரியங்களைச் சொல்லும் வழி வெய்யசொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும் தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான், எ-று.

பலகாரியங்கட் குடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாய தொன்றைச் சொல்ல அதனால் அவை விளையுமா றுய்த்துணர வருமையானுஞ் சுருக்கத்தானு முடம்படுவர், இன்னாதவற்றிற் குடம்படாதார் தம்மனமகிழச் சொல்ல அவ்வின்னாமை காணாது உடம்படுவராதலின், அவ்விருவாற்றானும் தன் காரியந் தவறாமல் முடிக்கவல்லா னென்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன.

(தெ-ப-ரை.)—தொகச்சொல்லி - (வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லுமிடத்துக் காரணவகையால்) தொகுத்துச் சொல்லியும், தூவாத நீக்கி - (இனிமையில்லாத காரியங்களைச் சொல்லுமிடத்து) வெய்யசொற்களை நீக்கி, நகச்சொல்லி - (இனிமையான சொற்களால்) மகிழச்சொல்லியும், நன்றிபயப்பது-(தன் அரசனுக்கு) நன்மையைச் செய்பவனே, தூது - தூதனாவான்.

**685.** He is an ambassador who (in the presence of foreign rulers) speaks briefly, avoids harshness, talks so as to make them smile, and thus brings good (to his own sovereign).

---

௬. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

(பரி-ரை.) எ-து,—நீதிநூல்களைக்கற்றுத் தான் சென்ற கருமத்தைப் பகை வேந்தர் மனங்கொளச் சொல்லி அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற் கஞ்சாது காலத்தோடு பொருந்த அது முடிக்கத்தக்க வுபாயமறிவானே தூதனாவான், எ-று.

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், அதனானன்றிப் பிறிதொன்றான் முடியுங்காலம்வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலிற் காலத்தாற் றக்க தறிதலும், இலக்கணமாயின.

(தெ-ப-ரை.)—கற்று - (நீதிநூல்களை) கற்று, செல - (பகைவேந்தர்) மனங்கொள, சொல்லி - (தான் சென்ற கருமத்தை) சொல்லி, கண் அஞ்சான் - (அவர் கோபித்துப் பார்க்கில்) அப்பார்வைக்கு அஞ்சாது, காலத்தால் - காலத்தோடு பொருந்த,

தக்கது - (அது முடிக்க) தக்க உபாயத்தை, அறிவது-அறிபவனே, தூதாம் - தூதனாவான்.

**686.** **He is an ambassador who having studied (politics), talks impressively, is not afraid of angry looks, and knows (to employ) the art suited to the time.**

---

௭. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

(பரி-ரை.) எ-து,—வேற்றரசரிடத்துத் தான் செய்யு முறைமையறிந்து அவர் செவ்விபார்த்துச் சென்ற கருமஞ் சொல்லுதற்கேற்ற இடமறிந்து சொல்லுமாற்றை முன்னே விசாரித்து அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான், எ-று.

செய்யு முறைமையாவது அவர் நிலையும் தன்னரசனிலையும் தன்னிலையும் தூக்கி அவற்றிற்கேற்பக் காணுமுறைமையும் சொல்லு முறைமையும் முதலாயின. செவ்வி - தன்சொல்லை யேற்றுக்கொள்ளும் மனநிகழ்ச்சி. அது காலவயத்ததாகலிற் காலமென்றார். இடம்-தனக்குத் துணையாவா ருடனாயவிடம். எண்ணுதல் - தான் அது சொல்லுமாறும் அதற்கு அவர்சொல்லு முத்தரமும் அதற்குப்பின் றான்சொல்லுவனவுமாக இவ்வாற்றான் மேன்மேற் றானே கற்பித்தல். வடநூலார் இவ்விருவகையாருடன் ஓலைகொடுத்து நிற்பானையுங் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடையென்று வகுத்துக் கூறினாராகலின், அவர்மதமுந் தோன்றத் தலையென்றார். தூதென்பது அதிகாரத்தான் வந்தது. இவை ஐந்து பாட்டானும் தான் வகுத்துக் கூறுவான திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கடன் - (வேற்றரசரிடத்துத்தான்செய்யும்) முறைமையை, அறிந்து-தெரிந்து, காலம் கருதி - (அவர்) சமயம் பார்த்து, இடன் - (சென்றகருமஞ் சொல்லுதற்கு ஏற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து, எண்ணி - (சொல்லும்வழியை முன்னே) விசாரித்து, உரைப்பான் - (அவ்வழி) சொல்லுவோன், தலை-(தூதரில்) மிக்கவன்.

**687.** **He is chief (among ambassadors) who understands the proper decorum (before foreign princes), seeks the (proper) occasion, knows the (most suitable) place, and delivers his message after (due) consideration.**

---

௮. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(பரி-ரை.) எ-து,—தன்னரசன் வார்த்தையை அவன்சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவான திலக்கணமாவது பொருள் காமங்களாற் றூயனாதலும் தனக்கு அவரமைச்சர் துணையாந்தன்மையும் துணிதலுடைமையும் இம்மூன்றோடுங்கூடிய மெய்ம்மையுமென விவை, எ-று.

பொருள் காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சிகூறியவழி எம்மனோர்க் கஃதியல்பெனக்கூறி அவர்

வெகுளி நீக்குதற்பொருட்டுத் துணைமையும், இது சொல்லின் இவரோதஞ் செய்வரோன் றொழியாமற்பொருட்டுத் துணிவுடைமையும், யாவராலுந் தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும், வேண்டப்பட்டன. இன்—ஒடுவின் பொருட்கண் வந்தது.

(தெ - ப - ரை.)—வழி - (தன்னரசன் வார்த்தையை) அவன் சொல்லியவழியே, உரைப்பான் - (வேற்றரசர்க்கு) சொல்லுவானது, பண்பு - இலக்கணமாவது, தூய்மை - (பொருளாலும் காமத்தாலும்) பரிசுத்தனாதலும், துணைமை - (தனக்கு அவர் மந்திரிகள்) துணையாந்தன்மையும், துணிவு உடைமை - துணிதலை யுடைமையும், இம்மூன்றின் - இம்மூன்றோடுகூடிய, வாய்மை - மெய்ம்மையும் ஆம்.

**688.** The qualifications of him who faithfully delivers his (sovereign's) message are purity, the support (of foreign ministers), and boldness, with truthfulness in addition to the (aforesaid) three.

---

௯. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(பரி-ரை.) எ-து,—தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லவுரியான் தனக்கு வரு மேதத்திற்கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத திண்மையை யுடையன், எ-று.

தாழ்வு சாதி தருமமன்மையின், வடுவென்றார். வாய்சோராவெனக் காரியங் காரணத்து ளடக்கப்பட்டது.

(தெ - ப-ரை.)—வடுமாற்றம் - (தனக்கு வரும் துன்பத்திற்கஞ்சி அவனுக்கு) தாழ்வான வார்த்தையை, வாய்சோரா - வாய் தவறியுஞ் சொல்லாத, வன்கணவன் - வலிமையை யுடையவன், விடுமாற்றம் - (தன்அரசன்சொல்லி) விட்டவார்த்தையை, வேந்தர்க்கு - வேற்றரசர்க்கு, உரைப்பான் சொல்லுதற் குரியன்.

**689.** He alone is fit to communicate (his sovereign's) reply, who possesses the firmness not to utter even inadvertently what may reflect discredit (on the latter).

---

௯௰. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(பரி-ரை.) எ-து,—அவ்வார்த்தை தன்னுயிர்க்கிறுதி தருமாயினும் அதற்கஞ்சி யொழியாது தன்னரசன் சொல்லியவாறே அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதனுவான், எ-று.

இறுதிபயப்பினு மென்றதனால், ஏனைய பயத்தல் சொல்லவேண்டா வாயிற்று. இவை மூன்றுபாட்டானுங் கூறியது கூறுவான இலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இறுதி பயப்பினும் - (அவ்வார்த்தை தனக்கு) முடிவைத் தருமாயினும், அஞ்சாது - (அதற்கு) பயப்படாது, (தன்னரசன் சொன்னபடியே) இறைவற்கு - அவ்வரசனுக்கு, உறுதி - மிகுதியை, பயப்பது - (வேற்றரசரிடத்து) சொல்லுவானே, தூதாம் - தூதனுவான்.

**690**. He is the ambassador who fearlessly seeks his sovereign's good though it should cost him his life (to deliver his message).

---

## எ0-ம். அதி. மன்னரைச் சேர்ந்தொழுகல்.

அஃதாவது அமைச்சர் அரசரைப் பொருந்தி யொழுகுமாறு. இது, வேந்தவாம் பண்புடைமை யென மேலே வேண்டப்பட்டமையின் தூதின்பின் வைக்கப்பட்டது.

க. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(பரி-ரை.) எ-து,—மாறுபடுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிகநீங்குவதும் மிகச்செறிவதுஞ் செய்யாது தீக்காய்வார் போல இடைநிலத்திலே நிற்க, எ-று.

கடிதின் வெகுளுந் தன்மையரென்பது தோன்ற, இகல்வேந்த ரென்றார். மிகவகலிற் பயன் கொடாது மிகவணுகின் அவமதிபற்றித் தெறும் வேந்தர்க்கு, மிகவகலிற் குளிர் நீக்காது மிகவணுகிற் சுடுவதாய தீயோடுளதாய தொழிலுவமம் பெறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இகல் - மாறுபடுதலையுடைய, வேந்தர்-அரசரை, சேர்ந்து - அடுத்து, ஒழுகுவார் - நடக்கு மந்திரிகள், அகலாது - அவரை மிக நீங்காமலும், அணுகாது - மிக நெருங்காமலும், தீக்காய்வார் போல்க - நெருப்பிற் குளிர் காய்வார்போல் (நடுவிடத்து) நிற்கக்கடவர்.

**691.** Ministers who serve under fickle-minded monarchs should, like those who warm themselves at the fire, be neither (too) far, nor (too) near.

---

உ. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

(பரி-ரை.) எ-து,—தம்மாற் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதொழிதல் அமைச்சர்க்கு அவரானே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும், எ-று.

ஈண்டு விழைபவென்றது அவர்க்குச் சிறப்பாக வுரியவற்றை. அவை நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மையென் றிவை முதலாயின. இவற்றை ஒப்பிற்

கஞ்சித் தாம் விழையாதொழியவே, அவ்வச்சநோக்கி யுவந்து அவர்தாமே எல்லாச்செல்வமும் நல்குவரென்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பிற் கேடு தருமென்பதாம்.

(தெ-ப-ை.)—மன்னர் - (தம்) அரசரால், விழைப - விரும்பப் பட்டவைகளை, விழையாமை - (தாம்) விரும்பாதிருத்தல், மன்னரால் - அவ்வரசராலே, மன்னிய - நிலைபெற்ற, ஆக்கம் - செல்வத்தை, தரும் - (மந்திரிகளுக்கு) கொடுக்கும்.

**692.** For ministers not to covet the things desired by their kings will through the kings themselves yield them everlasting wealth.

---

௩. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது.

(பரி - ை.) எ-து,—அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரியபிழைகள் தங்கண்வாராமற் காக்க, அவற்றை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர் ஐயுற்றால் அவரைப் பின்றெளிவித்தல் யாவர்க்கு மரிதாகலான், எ-று.

அரியபிழைகளாவன அவராற் பொறுத்தற்கரிய அறைபோதல், உரிமையொடு மருவல், அரும்பொருள் வெளவல் என் றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது ஒருவன் சொல்லியக்கால் தகுமோவென் றையுறாது தகாதென்றே அவர் துணிய வொழுகல். ஒருவாற்றாற் றெளிவித்தாலும் கடன்கொண்டான் றேன்றப் பொருடோன்று மாறுபோலக் கண்டுழியெல்லாம் அவை நினைக்கப் படுதலின், யார்க்குமரி தென்றார். இவை மூன்றுபாட்டானும் அது பொதுவகையாற் கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—போற்றின் - (மந்திரிகள் தம்மை) காத்துக் கொள்ள வேண்டினால், அரியவை - அரியபிழைகளை, போற்றல் - (தம்மிடத்திலே வாராமல்) காக்கக்கடவர், கடுத்தபின் - (அவ்வரசர் அவை வந்தவைகளாகக் கேட்டு) சந்தேகித்தபின்பு, தேற்றுதல் - (அவரைப்பின்) தெளிவித்தல், யார்க்கும் - யாவர்க்கும், அரிது - அரியது, (ஆதலால்.)

**693.** Ministers who would save themselves should avoid (the commission of) serious errors; for if the king's suspicion is once roused, no one can remove it.

---

௪. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

(பரி - ை.) எ-து,—அமைந்த வரச ரருகிருந்தால் அவர்காண ஒருவன் செவிக்கட் சொல்லுதலையும் ஒருவன் முகநோக்கி நகுதலையுந் தவிர்ந்தொழுகுக, எ-று.

சேர்தல் - பிறனோடு சேர்தல். செய்தொழுகின், தங்குற்றங் கண்டு செய்தனவாகக் கொள்வரென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—ஆன்ற - நிறைந்த, பெரியார் அகத்து - அரசரிடத் திருக்கும்போது, செவிச் சொல்லும் - (ஒருவன்) காதிலே சொல்லுதலையும், சேர்ந்த நகையும் - (ஒருவன்முக) நோக்கி நகைத்தலையும், அவித்து - நீக்கி, ஒழுகல் - நடக்கக்கடவன்.

**694**. **While in the presence of the sovereign, ministers should neither whisper to nor smile at others.**

---

௫. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

(பரி - ரை.) எ-து,—அரசனுக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி யாதொரு பொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது அவனை முடுகி வினவுவதுஞ் செய்யாது அம்மறைப்பொருளை அவன்றானே அடக்காது சொல்லியக்காற் கேட்க, எ-று.

ஓர்தற்கேற்கும் பொருளாயினு மென்பார், எப்பொருளு மென்றார். மற்று வினைமாற்றின்கண் வந்தது.

(தெ - ப - ரை.)—மறை - (அரசனுக்குப் பிறரோடு) ரகசியம் (நிகழு மிடத்து), எப்பொருளும் - யாதொரு பொருளையும், ஓரார் - (செவிகொடுத்து) கேளாமலும், தொடரார் - (அவனை) முடுகிவினவாமலும், அப்பொருளை - அந்த ரகசியப்பொருளை, விட்டக்கால் - (அவனே அடக்காமல்) சொல்லினல், கேட்க - கேட்கக்கடவர்.

**695**. **(When the king is engaged) in secret counsel (with others), ministers should neither over-hear anything whatever nor pry into it with inquisitive questions, but (wait to) listen when it is divulged (by the king himself).**

---

௬. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

(பரி - ரை.) எ-து,—அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினையறிந்து சொல்லுதற்கேற்ற காலத்தையும் நோக்கி வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன்மனம் விரும்பும்வகை சொல்லுக, எ-று.

குறிப்புக் காரியத்தின்கணன்றிக் காம வெகுளி யுள்ளிட்டவற்றி னிகழ்வுழியும் அதற் கேலாக்காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலிற் குறிப்பறிந்து காலங் கருதியென்றும், அவனுடம்படாதன முடிவுபோகாமையின் வெறுப்பில வென்றும், பயனில்லவும் பயன்சுருங்கியவுஞ் செய்தல்வேண்டாமையின் வேண்டுபவென்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுகவென்பார் வேட்பச்சொல லென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—(அரசனுக்குக் காரியஞ் சொல்லும்போது) குறிப்பு அறிந்து - (அப்பொழுது நிகழ்கின்ற அவனது) குறிப்

மை அறிந்து, காலம் கருதி - (சொல்லுதற்குஏற்ற) காலத்தையும் பார்த்து, வெறுப்பு இல - வெறுப்பில்லாதனவும், வேண்டுப - வேண்டுவனவும் ஆகிய காரியங்களை, வேட்ப - (அவன்மனம்) விரும்பும்வகை, சொலல் - சொல்லக்கடவர்.

**696.** Knowing the (king's) disposition, and seeking the right time, (the minister) should in a pleasing manner suggest things such as are desirable and not disagreeable.

---

௭. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

(பரி - ரை.) எ-து,—பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி எஞ்ஞான்றும் பயனிலவாய வற்றைத் தானே கேட்டாலுஞ் சொல்லாது விடுக, எ-று.

வினையிலவெனவுங் கேட்பினுமெனவும் வந்த சொற்களான், அவற்றின் மறு தலைச்சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான்வருதலின் வினையென்றும், வறு மைக்காலமு மடங்க எஞ்ஞான்றுமென்றுங் கூறினர். சொல்லுவனவுஞ் சொல் லாதனவும் வகுத்துக் கூறியவாறு. இவை நான்குபாட்டானுஞ் சிறப்புவகை யாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வேட்பன - (பெரும்பய னுள்ளவையும் அரசன்) விரும்புவனவும் (ஆகிய காரியங்களை), சொல்லி - (அவ ன்கேட்டிலனாயினும்) சொல்லி, எஞ்ஞான்றும்-எந்நாளும், வினை இல - பயனில்லாதவைகளை, கேட்பினும் - (தானே) கேட்டா லும், சொல்லாவிடல் - சொல்லாது விடக்கடவன்.

**697.** Ministers should (always) give agreeable advice but on no occasion recommend useless actions, though requested (to do so).

---

அ. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்.

(பரி - ரை.) எ-து,—இவர் எம்மிளையரென்றும் எமக்கின்ன முறையினை யுடையரென்றும் அரசனை யவமதியாது அவர்மாட்டு நின்றவொளியோடு பொ ருந்த வொழுகுதல் செயப்படும், எ-று.

ஒளி - உறங்காநிற்கவுந் தாமுலகங் காக்கின்ற அவர் கடவுட்டன்மை. அத னோடு பொருந்த வொழுகலாவது அவர் கடவுளருந் தாம் மக்களுமா யொழுகு தல். அவ்வொளியாற் போக்கப்பட்ட விளமையும் முறையும்பற்றி இகழ்வரா யின், தாமும் போக்கப்படுவ ரென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—இளையர் - (இவர் எமக்கு) இளையவர், இன முறையர் - (எமக்கு) இன்னமுறையினர், என்று இகழார்- என்று (அரசனை) அவமதியாமல், நின்ற - (அவரிடத்து) நிலை பெற்ற, ஒளியோடு - ஒளியோடுபொருந்த, ஒழுகப்படும் - நடக் கத்தகும்.

**698.** Ministers should behave in accordance with the (Divine) light in the persons of kings and not despise them saying "He is our junior (in age) and connected with our family !"

---

௯. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்
துளக்கற்ற காட்சி யவர். [யார்

(பரி - ரை.) எ-து,—அரசனால் யாம் நன்குமதிக்கப்பட்டேமென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார் நிலைபெற்ற வறிவினையுடையார், எ-று.

கொள்ளாதனசெய் தழிவெய்துவார் கொளப்பாட்டிற்குப் பின் றம்மை வேறொருவராகக் கருதுவராகலின், முன்னையராகவே கருதி யஞ்சி யொழுகுவாரைத் துளக்கற்ற காட்சியவ ரென்றார்.

(தெ-ப-ரை.)—துளக்கு அற்ற - அசைவற்ற, காட்சியவர் - அறிவுடையவர், கொளப்பட்டேம் என்று - (அரசனால்) நன்கு மதிக்கப்பட்டோ மென்று, எண்ணி-கருதி, கொள்ளாத-(அவன்) விரும்பாதவைகளை, செய்யார் - செய்யமாட்டார்கள்.

**699.** Those whose judgment is firm will not do what is disagreeable (to the sovereign) saying (within themselves,) " We are esteemed by the king."

---

௧௰. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

(பரி - ரை.) எ-து,—அரசனுக்கு யாம் பழையமெனக் கருதித் தமக்கியல்பல்லாதவற்றைச் செய்யுமுரிமை அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும், எ-று.

அவன் பொறாது செறும்பொழுதின் அப்பழமை நோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன்வேண்டாதன செய்தற் கேதுவாய கெழுதகைமை கேடுதரு மென்றார். இவை மூன்றுபாட்டானும் பொறுப்பரென்று அரசர் வெறுப்பன செய்யற்க வென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பழையம் என - (அரசனுக்கு) பழைமையோமென, கருதி - நினைத்து, பண்பு அல்ல-(தமக்கு) இயல்பல்லாதவைகளை, செய்யும் - செய்கின்ற, கெழுதகைமை - உரிமையானது, கேடுதரும் - (மந்திரிகளுக்கு) கேட்டைத் தரும்.

**700.** The (foolish) claim with which a minister does unbecoming acts because of his (long) familiarity (with the king) will ensure his ruin.

---

## எக-ம். அதி—குறிப்பறிதல்.

அஃதாவது அரசர் கருதியவதனை அவர் கூறாமலறிதல். இது, மன்னனைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையா தாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

௧. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

(பரி - ரை.) எ-து,—அரசனாற் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டா வகை அவன் முகமானுங் கண்ணானு நோக்கி அறியுமமைச்சன் எஞ்ஞான்றும் வற்றாத நீராற்சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓராபரணமாம், எ-று.

ஒட்பமுடையனாய் எல்லார்க்கும் அழகுசெய்தலான், வையக்கணியென்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர். வையத்திற்கென்பது விகாரப்பட்டு நின்றது.

(தெ-ப-ரை.)—குறிப்பு - (அரசனால்) குறிக்கப்பட்ட காரியத்தை, கூறாமை - (அவன்) சொல்லவேண்டாவகை, நோக்கி- (அவன்முகத்தையாவது கண்ணையாவது) பார்த்து, அறிவான் - அறிகிற மந்திரியானவன், எஞ்ஞான்றும் - எந்நாளும், மாறாநீர் - வற்றாத நீரினாலே சூழப்பட்ட, வையக்கு - உலகத்துள்ளார்க்கு, அணி - ஆபரணம்.

**701.** The minister who by looking (at the king) understands his mind without being told (of it), will be a perpetual ornament to the world which is surrounded by a never-drying sea.

---

௨. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் மனத்தின்க ணிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக வுணரவல்லானை மகனேயாயினும் தெய்வத்தோ டொப்ப நன்குமதிக்க, எ-று.

உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும் பிறர்நினைத்த துணரூந் தெய்வத் தன்மை யுடைமையின், தெய்வத்தோ டொப்ப வென்றார்.

(தெ-ப-ரை.)—அகத்தது - (ஒருவனது) மனத்தினிடத்து நிகழ்வதை, ஐயப்படாது - சந்தேகப் படாமல், உணர்வானை - (துணிவாக) அறியவல்லவனை, தெய்வத்தோடு ஒப்ப-(மனிதனேயாயினும்) தெய்வத்தோடு சமானமாக, கொளல்-நன்குமதிக்கக் கடவன்.

**702.** He is to be esteemed a god who is able to ascertain without a doubt what is within (one's mind).

---

௩. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(பரி - ரை.) எ-து,—தங்குறிப்பு நிகழுமா றறிந்து அதனாற் பிறர் குறிப்பறியுந் தன்மையாரை அரசர் தம்முறுப்புக்களுள் அவர் வேண்டுவதொன்றனைக் கொடுத்தாயினும், தமக்குத் துணையாகக் கொள்க, எ-று.

உண்ணிகழுநெறி யாவர்க்குமொத்தலின், பிறர் குறிப்பறிதற்குத் தங்குறிப்புக் கருவியாயிற்று. உறுப்புகளாவன பொருளும் நாடும் யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புகள். இதற்குப் பிறர் முகக்குறிப்பானே அவர் மனக்குறிப் புணர்வாரை யென்றுரைப்பாரு முளர். இவை மூன்றுபாட்டானுங் குறிப்பறிவாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—குறிப்பின்-(தம்) குறிப்புநிகழும்விதம்(அறிந்து), குறிப்பு உணர்வாரை - (அதனால்) பிறர்குறிப்பு அறியுந் தன்மையவரை, உறுப்பினுள்-(அரசர்தம்) உறுப்புகளுள், யாது கொடுத்தும் - (அவர் வேண்டுவது) யாதொன்றைக் கொடுத்தாயினும், கொளல் - (தமக்குத் துணையாக) கொள்ளத்தக்கவர்.

**703**. The king should even give whatever (is asked) of his belongings and secure him who by the indications (of his own mind) is able to read those of another.

---

ச. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் மனத்துக் கருதிய வதனை அவன் கூறவேண்டாமல் அறியவல்லாரோடு மற்றை மாட்டாதார் உறுப்பா லொருதன்மையரக வொப்பாராயினும் அறிவான் வேறு, எ-று.

கொள்ளாதா ரென்பதூஉம் ஆயினுமென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. சிறந்த வறிவின்மையின், விலங்கென்னுங் கருத்தான் வேறென்றார்.

(தெ-ப-ரை.)—குறித்தது - (ஒருவன் மனத்தில்) நினைத்ததை, கூறாமை - (அவன்) சொல்லாமல், கொள்வாரோடு - அறியவல்லவரோடு, ஏனை - மற்றை (அறியமாட்டாதவர்), உறுப்பு - அவயவத்தால், ஓரனையர்-ஒருதன்மையாக வொப்பினும், வேறு- (அறிவால்) வேறு.

**704**. Those who understand one's thoughts without being informed (thereof) and those who do not may (indeed) resemble one another bodily; still are they different (mentally.)

---

ரு. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

(பரி - ரை.) எ-து,—குறித்தது காணவல்ல தங்காட்சியாற் பிறர்குறிப்பினை யுணரமாட்டாவாயின் ஒருவனுறுப்புகளுட் சிறந்த கண்கள் வேறென்னபயனைச் செய்வன, எ-று.

முதற்கட் குறிப்பு ஆகுபெயர். குறிப்பறிதற்கட் டுணையாதற் சிறப்புப்பற்றி உயிரதுணர்வு கண்மே லேற்றப்பட்டது. அக்கண்களாற் பயனில்லை யென்பதாம். இவை யிரண்டுபாட்டானுங் குறிப்பறியாா திழிபு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—குறிப்பின் - (குறித்ததை அறியவல்லதன்) காட்சியால், குறிப்பு - (பிறர்) குறிப்பை, உணரா ஆயின் - அறியமாட்டா ஆயின், உறுப்பினுள்-(ஒருவனுக்கு) அவயவங்களுள், கண் - சிறந்தகண்கள், என்ன பயத்தவோ-(வேறே) என்னபயன் செய்வனவோ.

**705.** Of what use are the eyes amongst one's members, if they cannot by their own indications divine those of another ?

---

௬. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

(பரி - ரை.) எ-து,—தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டுகாட்டும் பளிங்குபோல ஒருவனெஞ்சத்து மிக்கதனை அவன்முகந் தானே கொண்டு காட்டும், எ-று.

அடுத்ததென்பது ஆகுபெயர். கடுத்ததென்பது கடியென்னு முரிச்சொலடியாய்வந்த தொழிற்பெயர். உவமை ஒருபொருள் பிறிதொரு பொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றி வந்தது.

(தெ-ப-ரை.)—அடுத்தது-(தன்னை) அடுத்த பொருளினது நிறத்தை, காட்டும் - (தான்கொண்டு) காட்டுகிற, பளிங்குபோல் - கண்ணுடிபோல், நெஞ்சம்-(ஒருவனது) நெஞ்சத்தில், கடுத்தது - மிகுந்த குணத்தை, முகம் - (அவன்) முகமானது, காட்டும் - (தான் கொண்டு) காட்டும்.

**706.** As the mirror reflects what is near so does the face show what is uppermost in the mind.

---

௭. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

(பரி - ரை.) எ - து,—உயிர் ஒருவனை யுவத்தலானுங் காய்தலானு முறின், தானறிந்து அவற்றின்கண் அதனின் முற்பட்டு நிற்குமாகலான் முகம்போல அறிவுமிக்கது பிறிதுண்டோ இல்லை, எ-று.

உயிர்க்கே அறிவுள்ளது ஐம்பூதங்களா னியன்ற முகத்திற்கில்லை யென்பாரைநோக்கி, உயிரது கருத்தறிந்து அஃதுவக்குமின் மலர்ந்துங் காய்வுறிற் கருகியும் வரலான், உண்டென மறுப்பார்போன்று, குறிப்பறிதற்குக் கருவி கூறியவாறு.

(தெ - ப - ரை.)—உவப்பினும் - (உயிரானது) விரும்பினலும், காயினும் - வெறுத்தாலும், தான் - தான் (அறிந்து), முந்துறும் - அவ்விரண்டிலும் அவ்வுயிருக்கு) முற்பட்டு நிற்கும், (ஆதலால்) முகத்தின் - முகம்போல, முதுக் குறைந்தது - அறிவு மிகுந்தது, உண்டோ - உளதோ, [இல்லை.]

**707.** Is there anything so full of knowledge as the face? (No.) it precedes the mind, whether (the latter is) pleased or vexed.

---

அ. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(பரி - ரை.) எ-து,—குறையுறுவானும் தன்மனத்தைக் குறிப்பானறிந்து தானுற்றவதனைத் தீர்ப்பாரைப் பெறின் அவர் தன்முகம் நோக்கும்வகை தானும் அவர்முகநோக்கி அவ்வெல்லைக்கணிற்க வமையும், எ-று.

உணர்வாரெனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினர். அவ்வெல்லை யைக் கடந்து சொல்லுமாயின் இருவர்க்குஞ் சிறுமையாமாகலின், அது வேண்டாவென்பதாம். குறையுறுவானியல்பு கூறுவார்போன்று கருவி கூறியவாறு இவை மூன்றுபாட்டானுங் குறிப்பறிதற் கருவி முகமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-உரை.)—அகம் நோக்கி- (குறையுறுவோன் தன்)மனத்தைக் குறிப்பால் அறிந்து, உற்றது - (தான்) உற்றதனை, உணர்வார் - அறிந்து தீர்ப்பாரை, பெறின் - பெற்றால், முகநோக்கி - (அவர்தன் முகத்தை பார்க்கும்படி அவர்) முகத்தைப் பார்த்து, நிற்க - (அவ்வளவிலே) நிற்க, அமையும் - போதும்.

**708.** If the king gets those who by looking into his mind can understand (and remove) what has occurred (to him), it is enough that he stand looking at their face.

---

௯. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

(பரி - உரை.) எ-து,—வேந்தர் தந்நோக்கு வேறுபாட்டின் றன்மையை அறியவல்ல அமைச்சரைப்பெறின் அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும் ஏனைக்கேண்மையையும் வேற்றுவேந்தர் சொல்லிற்றிலராயினும் அவர் கண்களே சொல்லும், எ-று.

இறுதிக்கட் கண் ஆகுபெயர். நோக்கு வேறுபாடாவன வெறுத்தநோக்கமும் உவந்த நோக்கமும். உணர்தல் - அவற்றை அவ்வக்குறிகளா னறிதல்.

(தெ-ப-உரை.)—கண்ணின் வகைமை -(தமது) பார்வை வேறுபாட்டுத் தன்மையை, உணர்வார் - அறியவல்ல மந்திரிகளை, பெறின் - (அரசர்) பெற்றால், (அவர்க்கு) பகைமையுங் கேண்மையும்-(மனத்திலுள்ள) பகைத்தன்மையும் நட்புத்தன்மையும், கண் - (வேற்றரசர் சொல்லாமற் போயினும் அவர்) கண்களே, உரைக்கும் - சொல்லும்.

**709.** If a king gets ministers who can read the movements of the eye, the eyes (of foreign kings) will (themselves) reveal (to him) their hatred or friendship.

---

௧0. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

(பரி - உரை.) எ-து,—யாம் நுண்ணறிவுடையே மென்றிருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை யளக்குங் கோலாவது ஆராயுமிடத்து அவர்கண்ணல்லது பிறவில்லை, எ-று.

அறிவினுண்மை அஃதுடையார்மே லேற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில் சொல்லென்பன முதலாகப் பிறர்கருத் தளக்கு மளவைகள் பல, அவையெல்லாம் முன்னறிந்தவழி அவரான் மறைக்கப்படும், நோக்கம் மனத்தொடு கலத்தலான் ஆண்டு மறைக்கப்படா தென்பதுபற்றி, அதனையே பிரித்துக் கூறி

ஞர். இனி 'அலேக்குங்கோல்' என்று பாடமோதி, நுண்ணியமென்றிருக்கும் அமைச்சரை அரசரலேக்குங்கோலாவது கண்ணென வுரைத்து, தன்வெகுளி நோக்கால் அவர் வெகுடற்குறிப் பறிகவென்பது கருத்தாக்குவாரு முளர். இவையிரண்டுபாட்டானும் நுண்கருவி நோக்கென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நுண்ணியம் என்பார் - நுட்பஅறிவுடையேம் என்றிருக்கு மந்திரிகள், அளக்கும் கோல் - (அரசரது கருத்தை) அளக்குங் கோலாவது, காணுங்கால் - ஆராயுமிடத்து, கண்அல்லது - (அவரது) கண்களல்லாமல், பிற-வேறு, இல்லை-இல்லை.

**710.** The measuring-rod of those (ministers) who say "we are acute" will on inquiry be found to be their (own) eyes and nothing else.

---

## எஉ-ம். அதி. அவையறிதல்.

அஃதாவது அரசனோடிருந்த அவையின் றியல்பையறிதல். காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யன்றி இதுவும் வேண்டுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

க. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
 றொகையறிந்த தூய்மை யவர்.

(பரி-ரை.) எ-து,—சொல்லின் குழுவினை யறிந்த தூய்மையினையுடையார் தாமொன்றுசொல்லுங்கால் அப்பொழுதை யவையினையறிந்து ஆராய்ந்து சொல்லுக, எ-று.

சொல்லின் குழுவெனவே, செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல்லென்னும் மூவகைச்சொல்லு மடங்கின. தூய்மை-அவற்றுள் தமக்காகாதன வொழித்து ஆவன கோடல். அவையென்றது ஈண்டு அதனளவை. அது மிகுதி, ஒப்பு, தாழ்வென மூவகைத்து. அறிதல்-தம்மொடு தூக்கியறிதல். ஆராய்தல்-இவ்வவைக்கட் சொல்லுங்காரியம் இது, சொல்லுமாறிது, சொன்னால் அதன் முடிவிது வென்று இவையுள்ளிட்டன வாராய்தல்.

(தெ-ப-ரை.)—சொல்லின் தொகை - சொல்லின் கூட்டத்தை, அறிந்த - தெரிந்த, தூய்மையவர் - பரிசுத்த குணமுடையவர், (தாம் ஒன்றுசொல்லும்போது) அவை - (அப்பொழுதுள்ள) சபையை, அறிந்து - தெரிந்து, ஆராய்ந்து - ஆராய்ச்சிசெய்து, சொல்லுக - சொல்லக்கடவர்.

**711.** Let the pure who know the arrangement of words speak with deliberation after ascertaining (the nature of) the court (then assembled.)

---

உ. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
 னடைதெரிந்த நன்மை யவர்.

(பரி-ரை.) எ-து,—சொற்களி னடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினை யுடையார் அவைக்கண் ஒன்றுசொல்லுங்கால் அதன் செவ்வியை யாராய்ந்தறிந்து வழுப்படாமல் மிகவுந்தெளிந்து சொல்லுக, எ-று.

சொற்களினடையாவது அம்மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணப்பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி- கேட்டற்கண் விருப்புடைமை. வழு - சொல்வழுவும் பொருள்வழுவும். இவை யிரண்டுபாட்டானும் ஒன்றுசொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டு மென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சொல்லின் நடை - சொற்களது நடையை, தெரிந்த - ஆராய்ந்து அறிந்த, நன்மையவர் - நன்மையை யுடையவர், இடைதெரிந்து - (சபையினிடத்து ஒன்று சொல்லும்போது) சமயத்தை ஆராய்ந்தறிந்து, நன்குணர்ந்து - (வழுப் படாமல்) மிகவுந் தெளிந்து, சொல்லுக - சொல்லக்கடவர்.

**712.** Let the good who know the uses of words speak with a clear knowledge after ascertaining the time (suited to the court.)

---

௩. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூ மில்.

(பரி - ரை.) எ-து,—அவையின தளவை யறியாது ஒன்று சொல்லுதலைத் தம்மேற்கொள்வார் அச்சொல்லுதலின் கூறுபாடும் அறியார், கற்று வல்ல கலையும் அவர்க்கில்லை, எ-று.

அம்மூவகைச்சொற்களால் வருஞ் சொல்லுதல் வகைமை கேட்பாரது உணர்வு வகைமைபற்றி வருதலாற் சொல்லின் வகையறியாரென்றும், இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாரானு மிகழப்படுதலின் வல்லதூஉமில் லென்றுங் கூறினர். இதனால் அவையறியாக்கால் வருங்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அவை - சபையினளவை, அறியார் - அறியாதவராகி, சொல்லல் - (ஒன்று) சொல்லுதலை, மேற்கொள்பவர் - தம்மேற் கொள்ளுபவர், சொல்லின்வகை - அச்சொல்லின் கூறுபாடும், அறியார் - தெரியாராவர்; வல்லது உம் - (மற்றும்) வல்லகலையும், இல் - (அவர்க்கு) இல்லை.

**713.** Those who undertake to speak without knowing the (nature of the) court are ignorant of the quality of words as well as devoid of the power (of learning).

---

௪. ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(பரி - ரை.) எ-து,—அறிவாலொள்ளியார் அவைக்கட் டாமு மொள்ளிய ராக, ஏனைவெள்ளைக ளவைக்கட் டாமும் வாலிய சுதையி னிறத்தைக் கொள்க, எ-று.

ஒள்ளியாரென்றது மிக்காரையும் ஒத்தாரையும். அது விகாரத்தால் ஒளியாரென நின்றது. ஒள்ளியராதல் தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்தல். அவையறியாத புல்லரை வெளியாரென்றது, வயிரமின்மரத்தை வெளிறென்னும் வழக்குப்பற்றி. அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையராக வென்பார், வான்சுதைவண்ணங்கொளலென்றார். அவையளவறிந்தார் செய்யுந்திறம் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டது. முன்னர் விரித்துக் கூறுப.

(தெ - ப - ரை.)—ஒளியார்முன் - (அறிவால்) ஒள்ளியாரது சபையினிடத்து, ஒள்ளியர் ஆதல் - (தாமும்) ஒள்ளியராகக்கடவர்; வெளியார்முன் - (மற்றை) அறிவீனர்களது சபையினிடத்து, வான் சுதை வண்ணம் - (தாமும்) வெண் சுண்ணச் சாந்து நிறத்தை, கொளல் - கொள்ளக்கடவர்.

**714.** Ministers should be lights in the assembly of the enlightened, but assume the pure whiteness of mortar (ignorance) in that of fools.

---

௫. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு

(பரி - ரை.) எ-து, ஒருவற்கு இது நன்றென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே தம்மின் மிக்காரவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத வடக்கம், எ-று.

தங்குறைவும் அவர்மிகுதியும் முந்துகிளந்தாற்படு மிழுக்கும் கிளவாக்காலெய்து நன்மையும் அறிந்தே யடங்கினமையின், அவ்வடக்கத்தினை நன்றென்றவற்றுள்ளு நன்றென்றார். முன்கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலுமா மென்பது பெற்றாம். இதனான் மிக்காரவைக்கட் செய்யுந்திறங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—முதுவருள் - (தம்மின்) மிகுந்தவரது சபையினிடத்து, முந்து - (அவருக்கு) முற்பட்டு, கிளவா - (ஒன்றை) சொல்லாத, செறிவு-அடக்கம், நன்று என்றவற்றுள்ளும் - (ஒருவர்க்கு இது) நல்லதென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்கள் பலவினும், நன்றே - நல்லதாம்.

**715.** The modesty by which one does not rush forward and speak in (an assembly of) superiors is the best among all (one's) good qualities.

---

௬. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(பரி - ரை.) எ-து,—வீடெய்தற்பொருட்டு நன்னெறிக்க ணின்றானொருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தாலொக்கும் அகன்ற நூற்பொருள்களை யுட்கொண்டு அவற்றின் மெய்ம்மை யுணரவல்லா ரவைக்கண் வல்லானொருவன் சொல்லிழுக்குப்படுதல், எ-று.

நிலைதளர்ந்து வீழ்தல் உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காத்தொழுகியான் பின்னிழுக்கிக் கூடாவொழுக்கத்தனாதல். பயனிழத்தலேயன்றி இகழவும் படுமென்பதாம். இதனான் அதன்கணிழுக்கியவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ை.)—வியன்புலம் - விரிந்த நூற்பொருள்களை, ஏற்று - உட்கொண்டு, உணர்வார் முன்னர் - (அவைகளின் மெய்ம்மையை) அறியவல்லவர் சபையினில், இழுக்கு - (வல்லவனொருவன்) சொல்லிழுக்குப்படுதல், (முத்திபெறற்பொருட்டு நல்வழியினின்றவனொருவன்), ஆற்றின் - அவ்வழியினின்றும், நிலைதளர்ந்தால் அற்றே - நிலைதளர்ந்து வீழ்ந்தாலொக்கும்.

**716.** (For a minister) to blunder in the presence of those who have acquired a vast store of learning and know (the value thereof) is like a good man stumbling (and falling away) from the path (of virtue).

---

எ. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

(பரி-ை.) எ-து,—வழுப்படாமற் சொற்களை யாராய்தல் வல்லா ரவைக்கட்சொல்லின், பல நூல்களையுங் கற்று அவற்றினுய பயனையறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித்தோன்றும், எ-று.

சொல்லினென்பது அவாய்நிலையான் வந்தது. ஆண்டே சொல்கவென்பதாம்.

(தெ-ப-ை.)—கசடு அற-வழுப்படாமல், சொல் தெரிதல்-சொற்களை ஆராய்தலில், வல்லார் அகத்து-வல்லவர் சபையிடத்தே, (சொல்லினுல்), கற்று - (பலநூல்களையும்) கற்று, அறிந்தார் - (அவைகளாலாகிய பயனை) அறிந்தவரது, கல்வி - கல்வியானது, விளங்கும் - (யாவர்க்கும்) விளங்கித்தோன்றும்.

**717.** The learning of those who have read and understood (much) will shine in the assembly of those who can faultlessly examine (the nature of) words.

---

அ. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(பரி - ை.) எ-து,—பிறருணர்தலின்றிப் பொருள்களைத் தாமே யுணரவல்ல அறிவினையுடையா ரவைக்கட் கற்றூர் ஒன்றனைச் சொல்லுதல் தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும், எ-று.

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளருமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் ஒத்தாரவைக்கண் எவ்வழியுஞ்சொல்லுகவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—உணர்வது - (பொருள்களைத் தாமே) அறியவல்ல அறிவை, உடையார்முன் - உடையவர் சபையினிடத்து,

சொல்லல் - (கற்றவர் ஒன்றைச்) சொல்லுதல், வளர்வதன் - (தானே) வளர்வதொரு பயிர் நின்ற, பாத்தியுள் - பாத்தியினுள்ளே, நீர் சொரிந்தால் அற்று - நீரைச் சொரிந்தாற்போலும்.

**718.** Lecturing to those who have the ability to understand (for themselves) is like watering a bed of plants that are growing (of themselves.)

---

௯. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

(பரி - ரை.) எ-து,—நல்லாரிருந்த வவைக்கண் நல்லபொருள்களை அவர் மனங்கொள்ளச் சொல்லுதற்குரியார் அவையறியாத புல்லரிருந்த வவைக்கண் அவற்றை மறந்துஞ் சொல்லா தொழிக, எ-று.

சொல்லின், தம் மவையறியாமையை நோக்கி நல்லவையும், பொருளறியாமையாற் புல்லவைதானும் இகழ்தலின், இரண்டவைக்கு மாகாதென்பது கருதிப் பொச்சாந்துஞ் சொல்லற்க வென்றார்.

(தெ-ப-ரை.)—நல் அவையுள் - நல்லவரிருந்த சபையினிடத்து, நன்கு - நல்லபொருள்களை, செல - (அவர்) மனங்கொள்ள, சொல்லுவார் - சொல்லுதற் குரியவர், புல் அவையுள் - (அவையறியாத) புல்லரிருந்த சபையினிடத்து, பொச்சாந்தும் - மறந்தும், சொல்லற்க - (அவைகளை) சொல்லாதொழியக்கடவர்.

**719.** Those who are able to speak good things impressively in an assembly of the good should not even forgetfully speak them in that of the low.

---

௭௦. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(பரி - ரை.) எ-து,—நல்லார் தம்மினத்தரல்லாதா ரவைக்கண் ஒன்றனையுஞ் சொல்லற்க, சொல்லின் அது தூய்தல்லாத முற்றத்தின்கணுக்க அமிழ்தினை யொக்கும், எ-று.

கொள்ளென்னும் முதனிலைத் தொழிற்பெயர் முன்னின்று பின்னெதிர்மறை அல் விகுதியோடு கூடி "மகனெனல்" என்பதுபோனின்றது. சொல்லின் அது வென்பன அவாய்நிலையான் வந்தன. பிறரெல்லாங் கொளலென்பதனைத் தொழிற்பெயராக்கி யுரைத்தார்; அவர் அத்தொழில் அமிழ்தென்னும் பொருளுவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவா மருந்தாதலறிந்து நுகர்வார் கையினும்படாது அவ்வங்கணத்துக்கு மியைபின்றிக் கெட்டவாறு தோன்ற, உக்க வமிழ்தென்றார். அச்சொற் பயனில்சொல்லா மென்பதாயிற்று, இவை யிரண்டுபாட்டானும் தாழ்ந்தாரவைக்கண் ஒருவழியுஞ் சொல்லற்கவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(நல்லோர்) தங்கணத்தர் அல்லார்முன் - தம்மினத்தவ ரல்லாதவர் சபையிடத்து, கோட்டிகொளல் - (யாதொன்றையும்) சொல்லாதிருக்கக்கடவர், (சொன்னால் அது) அங்

கணத்துள் - (பரிசுத்தமல்லாத) முற்றத்துள், உக்க - வீழ்ந்த, அமிழ்து அற்று - அமிர்த மொக்கும்.

**720.** To utter (a good word) in the assembly of those who are of an inferior rank is like dropping nectar on the ground.

---

## எஉ - ம். அதி. அவையஞ்சாமை.

அஃதாவது சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற் கஞ்சாமை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(பரி - ரை.) எ-து,—கற்றுவல்லவவை அல்லாவவை யென்னும் அவைவ கையினையறிந்து வல்ல வவைக்கண் ஒன்றுசொல்லுங்கால் அச்சத்தான் வழுப் படச்சொல்லார் சொல்லின் றொகையெல்லாமறிந்த தூய்மையினை யுடை யார், எ-று.

இருந்தாரது வன்மை அவைமே லேற்றப்பட்டது. வல்லவை யென்பதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென்றுரைப்பாருமுளர். அச்சத்தானென் பது அதிகாரத்தான் வந்தது. சொல்லின்றொகை, தூய்மை யென்பனவற்றி ற்கு மேலுரைத்தாங் குரைக்க.

(தெ-ப-ரை.)—சொல்லின் தொகை அறிந்த - சொற்களது தொகையை அறிந்த, தூய்மையவர் - பரிசுத்தகுணமுடையவர், வகையறிந்து - (கற்றுவல்லசபை மூடசபை என்கிற சபையின்) வகையை அறிந்து, வல்லவை - கற்றுவல்ல சபையில், (ஒன்று சொல்லும்போது) வாய்சோரார் - (அச்சத்தால்) பிழைபடச் சொல்லார்.

**721.** The pure who know the classification of words having first ascertained the nature (of the court) will not (through fear) falter in their speech before that powerful body.

---

உ. கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(பரி - ரை.) எ-து,—கற்றாரெல்லாரினும் இவர் நன்குகற்றாரென்று உல கத்தாராற் சொல்லப்படுவோர் கற்றாரவைக்கண் அஞ்சாதே தாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளும்வகை சொல்லவல்லார், எ-று.

உலகமறிவது அவரையேயாகலின், அதனாற் புகழப்படுவோரும் அவரென் பதாம்.

(தெ-ப-ரை.) — கற்றார் முன் - கற்றோர் சபையினிடத்தே, கற்ற - (தாம்) கற்றவைகளை, செல - (அவர்) மனங்கொள்ளும்

வகை, சொல்லுவார் - (அஞ்சாமல்) சொல்லவல்லவர், கற்றாருள் - கற்றவரெல்லாரினும், கற்றார் - (இவர்) நன்றாகக்கற்றவர், எனப்படுவர் - என்று (உலகத்தோரால்) சொல்லப்படுவர்.

**722**. Those who can agreeably set forth their acquirements before the learned will be regarded as the most learned among the learned.

---

௩. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(பரி-ரை.) எ-து,—பகையிடை யஞ்சாது புக்குச் சாவவல்லார் உலகத்துப் பலர். அவையிடை யஞ்சாது புக்குச் சொல்லவல்லார் சிலர், எ-று.

அஞ்சாமை சாவாரென்பதனோடுங் கூட்டி, அதனாற் சொல்லவல்லாரென்பது வருவித் துரைக்கப்பட்டது. இவை மூன்றுபாட்டானும் அவையஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பகை அகத்து - பகையினிடத்து, சாவார் - (அஞ்சாதுபோய்) இறக்கவல்லவர், எளியர் - (உலகத்து) பலர், அவைஅகத்து - சபையினிடத்து, அஞ்சாதவர் - அஞ்சாமல் (போய்ச்சொல்ல) வல்லவர், அரியர் - சிலர்.

**723**. Many indeed may (fearlessly) die in the presence of (their) foes; (but) few are those who are fearless in the assembly (of the learned).

---

௪. கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(பரி-ரை.) எ-து,—பலநூல்களையுங் கற்றாரவைக்கட் டாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளு மாற்றாற் சொல்லி அவற்றின் மிக்கபொருள்களை அம்மிகக் கற்றாரிடத் தறிந்துகொள்க, எ-று.

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறாய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கட் டாங்கற்றவற்றை அவர்க்கேற்பச் சொல்லுக, சொல்லவே, அவரும் அவையெல்லாஞ் சொல்லுவராகலான், ஏனைக்கற்கப் பெறாதன கேட்டறியலா மென்பதாயிற்று. இதனால் அதன தொருசார்பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கற்றார்முன் - (பலநூல்களையும்) கற்றோர் சபையினிடத்து, கற்ற - (தாம்) கற்றவைகளை, செல - (அவர்) மனங்கொள்ளும்படி, சொல்லி - சொல்லிக்காட்டி, தாம் கற்ற - தாம்கற்றவைகளினும், மிக்க - அதிகமானபொருள்களை, மிக்காருள் - அதிகமாகக் கற்றவரிடத்து, கொளல் - அறிந்துகொள்ளக் கடவர்.

**724**. (Ministers) should agreeably set forth their acquirements before the learned and acquire more (knowledge) from their superiors in (learning).

௫. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(பரி-ரை.) எ-து,—சொல்லிலக்கண நெறியானே அளவைநூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க, வேற்றுவேந்த ரவையிடை யஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற்பொருட்டு, எ-று.

அளவைநூல் சொன்னூல் கற்றே கற்கவேண்டுதலின், அதற் கஃதாறெனப் பட்டது. அளக்குங் கருவியை அளவென்றார், ஆகுபெயரான். அவர்சொல்லை வெல்வதொருசொற் சொல்லலாவது நியாயத்து வாதசெற்ப விதண்டைகளும் சல சாதிகளும் முதலிய கற்றார்க்கே யாகலின், அவற்றைப் பிழையாமற் கற்கவென்பதாம். இதனால் அதன்காரணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அவை - (வேற்றுவேந்தர்) சபையில், அஞ்சா - அஞ்சாமல், மாற்றம் - எதிர்மொழியை, கொடுத்தற்பொருட்டு - சொல்லும்பொருட்டு, ஆற்றின் - (சொல்லிலக்கண) வழியால், அளவு - அளவைநூலை, அறிந்து - தெரிந்து, கற்க - (மந்திரிகள்) கற்கக்கடவர்.

**725.** In order to reply fearlessly before a foreign court, (ministers) should learn logic according to the rules (of grammar.)

---

௬. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
னுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—வன்கண்மை யுடையரல்லாதார்க்கு வாளோடென்ன வியை புண்டு, அதுபோல நுண்ணியார தவையை யஞ்சுவார்க்கு நூலோடென்ன வியை புண்டு, எ-று.

இருந்தாரது நுண்மை அவைமேலேற்றப்பட்டது. நூற்குரியரல்லரென்பதாம்.

(தெ-ப-ரை.)—வன்கண்ணர் அல்லார்க்கு - சௌரியமுடையவ ரல்லாதவர்க்கு, வாளொடு - வாளுடனே, என் - யாது (சம்பந்தமுண்டு), (அதுபோல) நுண் அவை - புத்திநுட்பமுடையவரது சபையை, அஞ்சுபவர்க்கு - பயப்படுபவர்க்கு, நூலொடு - கல்வியுடனே, என் - என்ன (சம்பந்தமுண்டு).

**726.** What have they to do with a sword who are not valiant, or they with learning who are afraid of an intelligent assembly?

---

௭. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன் கற்ற நூல்.

(பரி-ரை.) எ-து,—எறியப்படும் பகைநடுவண் அதனையஞ்சும் பேடி பிடித்த கூர்வாளையொக்கும், சொல்லப்படும் அவைநடுவண் அதனை யஞ்சுமவன் கற்றநூல், எ-று.

பேடி பெண்ணியல்புமிக்கு ஆணியல்பு முடையவள். களமும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினும் பிடித்தவள் குற்றத்தால் வாள் சிறப்பின்றா யினாற்போல, அவையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினுங் கற்ற வன்குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று.

(தெ - ப - ரை.)—அவை அகத்து - (சொல்லப்படும்) சபை நடுவில், அஞ்சுமவன் - (அதனை) அஞ்சுமவன், கற்றநூல் - கற் றறிந்தநூல், பகை அகத்து - (எதிரப்படும்) பகைநடுவில், பேடி - (அதனை அஞ்சும்) பேடி, கை - கையிற்பிடித்த, ஒள்வாள் - கூர் வாளை (ஒக்கும்.)

**727.** The learning of him who is diffident before an assembly is like the shining sword of an hermaphrodite in the presence of his foes.

---

அ. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

(பரி - ரை.) எ - து,—நல்லாரிருந்த வவைக்கண் நல்ல சொற்பொருள்க ளைத் தம்மச்சத்தான் அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார் பலநூல்களைக் கற் றாராயினும் உலகிற்குப் பயன்படுதலிலர், எ-று.

அறிவார்முற் சொல்லாமையிற் கல்வியினுண்மை யறிவாரில்லை யென்ப தாம். இனிப் பயமிலரென்பதற்குக் கல்விப்பயனுடைய ரல்லரென் றுரைப்பா ருமுளர்.

(தெ - ப - ரை.)—நல் அவையுள் - நல்லவரிருந்த சபையுள், நன்கு - நல்லசொற்பொருள்களை, செல-(அவர்க்கு) ஏற்க, சொ ல்லாதார் - (அச்சத்தால்) சொல்லமாட்டாதவர், பல்லவை கற் றும் - பலநூல்களைக் கற்றாராயினும், பயம் இலரே - (உலகத்து க்கு) பிரயோசனப்படுதலிலர்.

**728.** Those who cannot agreeably speak good things before a good assembly are indeed unprofitable persons in spite of all their various acquirements.

---

கூ. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

(பரி - ரை.) எ-து,—நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றாற் பயனறிந்து வைத்தும் நல்லாரிருந்த அவையினையஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை உலகத் தார் கல்லாதவரினுங் கடையென்று சொல்லுவர், எ-று.

அக்கல்வியறிவுகளாற் பயன் றாமுமெய்தாது பிறரையெய்துவிப்பதுஞ் செ ய்யாது கல்வித்துன்பமே யெய்திநிற்றலின், கல்லாதவரிற் கடையென உலகம் பழிக்கு மென்பதாம்.

(தெ - ப - ரை.)—கற்று - (நூல்களை) கற்று, அறிந்தும் - (அவைகளாலேபயனை) அறிந்திருந்தும், நல்லார்-நல்லவரிருந்த, அவை - சபையை, அஞ்சுவார் - அஞ்சி (அவ்விடத்தில்) சொல்

லாதவரை, கல்லாதவரின் - மூடரினும், கடை - கடையர், என்ப - என்று (உலகத்தோர்) சொல்லுவார்.

**729.** They who, though they have learned and understood, are yet afraid of the assembly of the good, are said to be inferior (even) to the illiterate.

---

௧௦. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

(பரி - ரை.) எ-து,—அவைக்களத்தை யஞ்சித் தாங்கற்றவற்றை அதற் கேற்கச் சொல்லமாட்டாதார் உயிர் வாழ்கின்றாராயினும், உலகத்தாரா லெண்ணப்படாமையின் இறந்தாரோ டொப்பர், எ-று.

ஈண்டுக் களனென்றது ஆண்டிருந்தாரை. இவையிரண்டுபாட்டானும் அவை யஞ்சுவார திழிபு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களன் - சபையை, அஞ்சி-பயந்து, கற்ற - (தாம்) கற்றவைகளை, செல - (அதற்கு) ஏற்க, சொல்லாதார் - சொல்லமாட்டாதவர், உளர் எனினும் - உயிரோ டிருந்தாராயினும், இல்லாரோடு ஒப்பர் - (உலகத்தோரால் எண்ணப்படாமையால்) இறந்தவரோ டொப்பாவார்.

**730.** Those who through fear of the assembly are unable to set forth their learning in an interesting manner, though alive, are yet like the dead.

---

## ௭௪-ம். அதி. நாடு.

இனி அவ்வரசனாலும் அமைச்சனாலுங் கொண்டெய்க்கப்படுவதாய் ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு ஓரதிகாரத் தாற் கூறுகின்றார்.

௧. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(பரி - ரை.) எ - து,—குன்றாத விளையுளைச் செய்வோரும் அறவோரும் கேடில்லாத செல்வமுடையோரும் ஒருங்கு வாழ்வதே நாடாவது. எ-று.

மற்றை யுயர்திணைப் பொருள்களோடுஞ் சேர்தற்றொழிலோடும் இயை யாமையின், விளையுளென்பது உழவர்மேனின்றது. குன்றாமை - எல்லாவுணவு களும் நிறைய விளவாதல். இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர் - துறந்தோர் அந்தணர் முதலாயினார். "கற்றவஞ்செய்வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். இதனால் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை - வழங்கத்தொலையாமை; செல்வர் கலத்தினுங் காலினும் அரும்பொரு டரும் வணிகர். இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள்வாய்த்தல் பெறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நாடு - நாடாவது, தள்ளா விளையுளும் - குன்றுத விளைவுசெய்வோரும், தக்காரும் - அறவோரும், தாழ்விலாச் செல்வரும் - கேடில்லாத செல்வமுடையோரும், சேர்வது - கூடி வாழ்வதே.

**731.** A kingdom is that in which (those who carry on) a complete cultivation, virtuous persons, and merchants with inexhaustible wealth, dwell together.

---

உ. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

(பரி - ரை.) எ-து,—அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத்தாராலும் விரும்பத்தக்கதாய் கேடின்மையோடு கூடி மிகவிளைவதே நாடாவது, எ-று.

அளவிறப்புப் பொருள்களது பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது - மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை யென்றிவற்றான் வருவது. "மிக்கபெய லோடுபெய லின்மையெலி விட்டில்கிளி யக்கணர சண்மையோ டாறு." இவற்றை வடநூலார் ஈதிகளென்ப. இவற்றுண் முன்னையவற்றதின்மை அரசனறத்தானும், பின்னையதின்மை அவன்மறத்தானும், வரும். இவ்வின்மைகளான் மிகவிளைவதாயிற்று.

(தெ - ப - ரை.)—நாடு - நாடாவது, பெரும் பொருளால் - அளவற்ற பொருளுடைமையால், பெட்டக்கது ஆகி - (பிறதேசத்தாராலும்) விரும்பத்தக்கதாகி, அருங்கேட்டால் - அழிவில்லாமையோடு கூடி, ஆற்ற விளைவது - மிகவிளைவதே.

**732.** A kingdom is that which is desired for its immense wealth, and which grows greatly in prosperity, being free from destructive causes.

---

௩. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(பரி - ரை.) எ - து,—பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண்வருங்கால் அவற்றைத் தாங்கி அதன்மேற் றன்னரசனுக்கு இறைப்பொருண் முழுதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது, எ-று.

பாரங்கள் - மக்கட்டொகுதியும் ஆனெருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல் - அவை தத்தந்தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசுகோல் கோடியதாக, உணவின்மையானுகத் தன்கண் வந்தால் அவ்வத் தேயங்களைப் போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்பதென்பார், இறையொருங்கு நேர்வதென்றார்.

(தெ-ப-ரை.)—நாடு - நாடாவது, பொறை - (பிறநாடுகள் சுமந்த) பாரமெல்லாம், ஒருங்கு - ஒருங்குசேர, மேல்வருங்கால் - (தன்) மேல்வரும்போது, தாங்கி - (அவைகளை) தாங்கி,

இறைவற்கு - (அதன்மேலும் தன்) அரசனுக்கு, இறை ஒருங்கு- இறைப்பொருண் முழுவதையும், நேர்வது - உடன்பட்டுக் கொடுப்பதே.

**733.** A kingdom is that which can bear any burden that may be pressed on it (from adjoining kingdoms) and (yet) pay the full tribute to its sovereign.

---

ச. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(பரி - ரை.) எ-து,—மிக்க பசியும் நீங்காத நோயும் புறத்துநின்று வந்தழிவுசெய்யும் பகையுமின்றி இனிது நடப்பதே நாடாவது, எ-று.

உறுபசி உழவருடைமையானும் ஆற்றவினைதலானும் சேராதாயிற்று. ஓவாப்பிணி தீக்காற்று மிக்ககுளிர் வெப்பங்களும் துகரப்பமெவற்றது தீமையுமின்மையிற் சேராதாயிற்று. செறுபகை அரசனாற்றலும் நிலைப்படையும் அடவியும் அரணு முடைமையிற் சேராதாயிற்று.

(தெ-ப-ரை.)—நாடு - நாடாவது, உறுபசியும் - அதிகபசியும், ஓவாப் பிணியும் - நீங்காத நோயும், செறுபகையும் - (புறத்திலிருந்துவந்த) அழிவுசெய்யும் பகையும், சேராது - அடையப் பெறுமல், இயல்வது - இனிதுநடப்பதே.

**734.** A kingdom is that which continues to be free from excessive starvation, irremediable epidemics, and destructive foes.

---

ரு. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பு மில்லது நாடு.

(பரி-ரை.) எ-து,சங்கேதவயத்தான் மாறுபட்டுக் கூடும் பலகூட்டமும், உடனுறையாநின்றே பாழாகச் செய்யு முட்பகையும், அளவுவந்தால் வேந்தனையலைக்குங் கொல்வினைக் குறும்பரும் இல்லாததே நாடாவது, எ-று.

சங்கேதம்-சாதிபற்றியும் கடவுள்பற்றியும் பலர்க்குளதா மொருமை. உட்பகை - ஆறலைப்பார் கள்வர் குறளைகூறுவார் முதலிய மக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும். உட்பகை குறும்பென்பன ஆகுபெயர். இம்மூன்றும் அரசனும் வாழ்வாராலுங் கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம்.

(தெ-ப-ரை.)—நாடு - நாடாவது, பல் குழுவும் - (சங்கேத வசத்தால் மாறுபட்டுக்கூடும்) பலகூட்டமும், பாழ் செய்யும் - (உடனிருந்துகொண்டே) பாழாகச்செய்யும், உட்பகையும்-(கள்ளர்முதலிய) உட்பகையும், வேந்தலைக்கும்-(சமயம்வந்தால்) அரசனை அலைக்கின்ற, கொல் குறும்பும் - கொலைத்தொழிற் குறும்பரும், இல்லது - இல்லாததே.

**735.** A kingdom is that which is without various (irregular) associations, destructive internal enemies, and murderous savages who (sometimes) harrass the sovereign.

---

௬. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

(பரி - ரை.) எ-து,—பகைவராற் கெடுத லறியாததாய் அரிதிற்கெட்டதா யினும் அப்பொழுதுந் தன்வளங்குன்றாத நாட்டினை எல்லாநாட்டினுந் தலையென்று சொல்லுவர் நூலோர், எ-று.

அறியாத குன்றாத வென்னும் பெயரெச்சங்களி னிறுதிநிலைகள் விகாரத் தாற் றொக்கன. கேடறியாமை - அரசனாற்றலானுங் கடவுட்பூசை யறங்களை ன்றியற்றது செயலானும் வரும். வளம் - ஆகரங்களிற் படுவனவும் வயலினுந் தண்டலையினும் விளைவனவுமாம். குன்றாமை - அவை செய்யவேண்டாமல் இய ல்பாகவே யுளவாயும் முன்னீட்டப்பட்டுங் குறைவறுதல். இவையாறுபாட் டானும் நாட்ட திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கேடு அறியா - (பகைவராலே) கெடுதலறி யாததும், கெட்டவிடத்தும்-(அரிதில்) கெட்டவிடத்தும், வளம் குன்றா - (அப்பொழுதும்) வளங்குறையாததும் ஆன, நாடு - நாட்டை, நாட்டின் - (எல்லா) நாடுகளிலும், தலை - முதன்மைய தாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவர்.

**736.** The learned say that the best kingdom is that which knows no evil (from its foes), and, if injured (at all), suffers no diminution in its fruitfulness.

---

௭. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(பரி - ரை.) எ-து,—கீழ்நீர் மேனீரெனப்பட்ட தன்கணீரும் வாய்ப்பு டைத்தாய மலையும் அதனினின்றும் வருவதாய நீரும் அழியாத நகரியும் நாட் டிற் கவயவமாம், எ-று.

ஈண்டுப் புனலென்றது நூரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை, அவயவமாதற்குரியன அவையே யாகலின். அவற்றான் வானம் வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது. இடையதன்றி யொருபுடையதாக லும் தன்வளந்தருதலும் மாரிக்கணுண்டநீர் கோடைக்கணுமிழ்தலு முடை மைபற்றி வாய்ந்த மலையென்றார். அரண்—ஆகுபெயர். இதனான் அதனவயவங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இருபுனலும் - (தன்னிடத்துக் கீழ்நீர் மேல் நீர் எனப்படும்) இருவகை நீரும், வாய்ந்த மலையும் - வாய்ப்புடை த்தாகிய மலையும், வரு புனலும் - (அதிலிருந்து) வருவதாகிய நீரும், வல் அரணும் - அழியாத நகரியும், நாட்டிற்கு - நாட்டி னுக்கு, உறுப்பு - அவயவமாம்.

**737.** The constituents of a kingdom are the two waters (from above and below), well situated hills and an indestructible fort.

---

அ. பிணியின்மை செல்வம் விளையின்ப மேம
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(பரி - மை.) எ-து,—நோயின்மையுஞ் செல்வம் விளைதல் இன்பம் காவ லென்றிவை யுடைமையுமாகிய இவ்வைந்தினையும் நாட்டிற் கழகென்று சொல்லுவர் நூலோர், எ-று.

பிணியின்மை-நிலநலத்தான் வருவது. செல்வம்-மேற்சொல்லியன. இன்பம்-விழவும் வேள்வியுஞ் சான்றோரு முடைமையானும், நுகர்வன வுடைமையானும், நிலநீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு உண்ணிகழ்வது. காவலெனவே அரசன்காவலும் வாழ்வோர் காவலும் அரண்காவலு மடங்கின. பிறதேயங்களி னுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக் கேதுவாய அதனழகு இதனாற் கூறப்பட்டது.

(தெ - ப - மை.)—பிணி இன்மை - நோயில்லாமையும், செல்வம் - செல்வமும், விளைவு - பயிர்விளைவும், இன்பம் - சுகமும், ஏமம் - காவலும், இவ்வைந்து - ஆகிய இவ்வைந்தினையும், நாட்டிற்கு - தேசத்திற்கு, அணி - அழகாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவர்.

**738.** Freedom from epidemics, wealth, produce, happiness, and protection (to subjects); these five, the learned say, are the ornaments of a kingdom.

---

கூ. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(பரி-மை.) எ-து,—தங்கண்வாழ்வார் தேடி வருந்தாமல் அவர்பாற் றானேயடையுஞ் செல்வத்தை யுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர்; ஆதலாற் றேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள் நாடாகா, எ-று.

நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மே னின்றது. "பொருள்செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். நூலோர்விதிபற்றி எதிர்மறை முகத்தாற் குற்றங் கூறியவாறு. இவ்வாறன்றி என்பவென்பதனைப் பின்னுங்கூட்டி இரு பொருள்பட வுரைப்பின், அனுவாதமாம்.

(தெ - ப - மை.)—நாடா - (தம்மிடத்து வாழ்வோர்) தேடி வருந்தாமல், வளத்தன - (அவரிடத்துத் தானே அடையும்) செல்வத்தை யுடையவைகளை, நாடு-நாடுகள், என்ப-என்று (நூலோர்) சொல்லுவர், (ஆதலால்), நாட - தேடிவருந்த, வளந்தரும் -செல்வத்தை அடைவிப்பவையாகிய, நாடு - நாடுகள், நாடுஅல்ல - நாடுகளாகாவாம்.

**739.** The learned say that those are kingdoms whose wealth is not laboured for, and those not, whose wealth is only obtained through labour.

---

கO. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(பரி-டை.) எ-து,—வேந்தனோடு மேவுதலில்லாத நாடு மேற்சொல்லிய குணங்களெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று, எ-று.

வேந்தமைவெனவே, குடிகள் அவன்மாட்டன்புடையராதலும் அவன்றான் இவர்மாட்டருளுடையனாதலும் அடங்கின. அவையில்வழி வாழ்வோரின்மையின் அவற்றாற் பயனின்றாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் அதன்குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-டை.)—வேந்து - அரசனோடு, அமைவு இல்லாத - பொருந்துதலில்லாத, நாடு - தேசம், ஆங்கு - மேற்சொல்லிய குணங்களாலெல்லாம், அமைவு எய்தியக்கண்ணும் - நிறைந்துள்ளதாயினும், பயம் இன்றே-(அவைகளால்) பயனுடைத்தன்று.

**740.** Although in possession of all the above mentioned excellences, these are indeed of no use to a country, in the absence of harmony between the sovereign and the subjects.

---

## எரு-ம். அதி—அரண்.

---

இனி அந்நாட்டிற் குறுப்பா யடங்குமாயினும் பகைவராற் றொலைவுவந்துழி அது தனக்கும் அரசன்றனக்கும் ஏமமாதற் சிறப்புப்பற்றிப் பிறிதோரங்கமாக வோதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

க. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(பரி-டை.) எ-து,—மூவகையாற்றலு முடையராய்ப் பிறர்மேற் செல்வார்க்கும் அரண் சிறந்தது. அவையின்றித் தம்மேல் வருவார்க்கஞ்சித் தன்னையே யடைவார்க்கும் அரண் சிறந்தது. எ-று.

பிறர்மேற் செல்லுங்கால் உரிமை பொருண் முதலியவற்றைப் பிறனொருவன் வெளவாமல் வைத்துச் செல்லவேண்டு மாகலானும், அப்பெருமை தொலைந் திறுதிவந்துழிக் கடனுடைவே ணுடைகலத்தார் போன்று ஏமங்காணு திறுவராகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று. அரணில்வழி அழியும்பாலராகலின், அவரை முற்கூறினார். இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-டை.)—அரண் - கோட்டையானது, ஆற்றுபவர்க்கும் - (மூவகை வலிமையு முடையவராய்) பிறர்மேற் செல்வோர்க்கும், பொருள் - சிறந்ததாகும்; அஞ்சி - (அவையல்லாமல் தம்மேல் வருவோர்க்கு) அஞ்சி, தற்போற்றுபவர்க்கும் - தன்னையே அடைவோர்க்கும், பொருள் - சிறந்ததாகும்.

**741.** A fort is an object of importance to those who march (against their foes) as well as to those who through fear (of pursuers) would seek it for shelter.

---

௨. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(பரி - ரை.) எ-து,—மணிபோலு நிறத்தினையுடைய நீரும் வெள்ளிடை நிலமும் மலையுங் குளிர்ந்த நிழலையுடைய காடுமுடையதே அரணாவது, எ-று.

எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் மணிநீரென்றும், நீருநிழலுமில்லா மருநிலமென்பார் மண்ணென்றும், செறிந்த காடென்பார் அணிநிழற்காடென்றுங் கூறினார். மதிற்புறத்து மருநிலம் பகைவர் அரண்பற்றாமைப் பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண் காட்டரணென இயற்கையுஞ் செயற்கையு மாய இந்நான்கரணுஞ் சூழப்படுவது அரணென்பதாம்.

(தெ-ப-ரை.)—அரண் - கோட்டையாவது, மணிநீரும் - மணிபோல் நிறத்தையுடைய நீரும், மண்ணும் - வெளிநிலமும் மலையும், அணிநிழல் காடும் - குளிர்ந்த நிழலையுடைய காடும், உடையது - உடையதே.

**742.** A fort is that which has ever-lasting water, plains, mountains and cool shady forests.

---

௩. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(பரி-ரை.) எ-து,—உயர்ச்சியும் அகலமும் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை அரணென்றுசொல்லுவர் நூலோர், எ-று.

அமைவு நூல் என்பன ஆகுபெயர். உயர்வு - ஏணியெய்தாதது. அகலம்- புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும், அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாந் தலையகலமும். திண்மை-கல்லிட்டிகைகளாற் செய்தலிற் குத்தப்படாமை. அருமை - பொறிகளான் அணுகற்கருமை. பொறிகளாவன—“வளைவிற் பொறியு மயிற்செறிநிலையுங்—கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்—பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்—காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்—தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்பும்—கவையுங் கழுவும் புதையும் புழையு—மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்—சென்றெறி சிரலும் பன்றியும் பணையு—மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்—கோலுங் குந்தமும் வேலுஞ் சூலமும்” என்றிவை முதலாயின.

(தெ - ப - ரை.)—உயர்வு - உயர்ச்சியும், அகலம் - அகலமும், திண்மை - வலிமையும், அருமை - அருமையும் (என்னப்பட்ட), இந்நான்கின் - இவை நான்கினுடைய, அமைவு - மிகுதியையுடைய மதிலை, அரணென்று - கோட்டையென்று, நூல் - நூலோர், உரைக்கும் - சொல்லுவர்.

**743.** The learned say that a fortress is an enclosure having these four (qualities) viz. height, breadth, strength and inaccessibility.

---

௪. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(பரி - ரை.) எ-து,—காக்கவேண்டு மிடஞ்சிறிதாய் அகன்ற விடத்தை யுடைத்தாய்த் தன்னைவந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணாவது, எ-று.

வாயிலும் வழியும் ஒழித்த விடங்கள் மலை, காடு, நீர்நிலையென் றிவற்றுள் ஏற்பனவுடைத்தாதல் பற்றிச் சிறுகாப்பினென்றும், அகத்தோர் நலிவின்றி யிருத்தல் பற்றிப் பேரிடத்ததாகியென்றும், தம்வலி நோக்கி இதுபொழுதேயழித்து மென்று வரும்பகைவர் வந்துகண்டால் அவ்வூக்க மொழிதல்பற்றி ஊக்க மழிப்ப தென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—அரண் - கோட்டையாவது, சிறுகாப்பின்-காக்கவேண்டுமிடஞ் சிறியதாய், பேரிடத்தது ஆகி-பரந்த இடத்தை உடையதாய், உறுபகை - (தன்னை) சூழ்ந்த பகைவரது, ஊக்கம் - மனவெழுச்சியை, அழிப்பது - கெடுப்பதே.

**744.** A fort is that which has an extensive space within, but only small places to be guarded, and such as can destroy the courage of besieging foes.

---

௫. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

(பரி - ரை.) எ-து,—புறத்தாராற் கோடற்கரிதாய் உட்கொண்ட பலவகை யுணவிற்றாய் அகத்தாரது போர்நிலைக்கெளிதாய நீர்மையை யுடையதே அரணாவது, எ-று.

கோடற்கருமை - இளை கிடங்குகளானும் பொறிகளானும் இடங்கொள்ளுதற் கருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவு மடங்கின. நிலைக்கெளிதா நீர்மையாவது அகத்தார் விட்ட ஆயுத முதலிய புறத்தார்மேலெளிதிற்சேறலும், அவர்விட்டன அகத்தார்மேற் செல்லாமையும், பதணப்பரப்பும் முதலாயின.

(தெ - ப - ரை.)—அரண் - கோட்டையாவது, கொளற்கு அரிது ஆய் - (புறத்தோரால்) கொள்ளுதற் கரிதாய், கொண்ட - உட்கொண்ட, கூழ்த்து ஆகி - (பலவகை) உணவை உடையதாகி, அகத்தார் - உள்ளிடத்தோரது, நிலைக்கு - (போர்) நிலைக்கு, எளிது ஆம் - எளியதாகிய, நீரது - குணத்தையு முடையதே.

**745.** A fort is that which cannot be captured, which abounds in suitable provisions, and affords a position of easy defence to its inmates.

---

௬. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(பரி - ரை.) எ-து,—அகத்தோர்க்கு வேண்டும் பொருள்க ளெல்லாவற்றையும் உள்ளேயுடைத்தாய்ப் புறத்தோரால் அழிவெய்து மெல்லைக்கண் அஃதெய்தாவகை யுதவிக் காக்கும் நல்லவீரரையு முடையதே அரணாவது, எ-று.

அரசன்மாட் டன்பும் மானமும் மறமும் சோர்வின்மையும் முதலிய நற்கு ணங்க ளுடைமைபற்றி நல்லாளென்றார்.

(தெ - ப - ரை.) — அரண் - கோட்டையாவது, எல்லாப் பொருளும் - (உள்ளிடத்தோர்வேண்டும்) பொருள்கள் யாவை யும், உடைத்தாய் - உடையதாகி, இடத்து - (புறத்தோரால்) அழிவடையுமளவில், உதவும் - (அது வாராதபடி) உதவிக்காக் கவல்ல, நல்ல ஆள் - நல் வீரரையும், உடையது-உடையதே.

**746.** **A fort is that which has all (needful) things, and excellent heroes that can help it against destruction (by foes.)**

---

எ. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(பரி - ரை.) எ-து,—புகலொடு போக்கொழியும்வகை நெருங்கிச் சூழ் ந்தும் அங்ஙனஞ் சூழாது நெகிழ்ந்தவிடநோக்கி ஒருமுகமாகப் பொருதும் அகத்தோரை அவர் தெளிந்தோரைவிட்டுக் கீழறுத்துத் திறப்பித்தும் புறத் தோராற் கொள்ளுதற்கரியதே அரணாவது, எ-று.

இம்மூன்றுபாயத்துள்ளும் முதலது எல்லாப் பொருளுடைமையானும், ஏனைய நல்லாளுடைமையானும், வாயாவாயின.

(தெ - ப - ரை.)—அரண் - கோட்டையாவது, முற்றியும் - (வரவுபோக் கொழியும் வகை) நெருங்கிச்சூழ்ந்தும், முற்றாது- அப்படிச்சூழாமல், எறிந்தும் - (நெகிழ்ந்தவிடநோக்கி) ஒருமு கமாகப் போர்செய்தும், அறைப்படுத்தும் - (உள்ளிடத்தோரை அவருக்கு நம்பிக்கையானவரை விட்டு) கீழறுத்துத் திறப்பித் தும், பற்றற்கு அரியது - (புறத்தோராலே) பிடித்துக் கொள்ளு தற்கரியதே.

**747.** **A fort is that which cannot be captured by blockading, assaulting, or underming it.**

---

அ. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார்வெல்வ தரண்.

(பரி - ரை.) எ - து,—தானைப்பெருமையாற் சூழ்தல்வல்லராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும் தன்னைப்பற்றிய வகத்தோர் தாம் பற்றியவிடம் விடா தே நின்று பொருது வெல்வதே அரணாவது, எ-று.

உம்மை சிறப்பும்மை. பற்றின்கண்ணே யாற்றியெனவிரியும். பற்று ஆகு பெயர். வெல்வதென உடையார்தொழில் அரண்மே னின்றது. பெரும்படை யானைச் சிறுபடையான் பொறுத்து நிற்குந் துணையேயன்றி வெல்லுமியல்பின தென்பதாம். இதற்குப் பிறிதுரைப்பாருமுளர். இவை யேழுபாட்டானும் அத னிலக்கணங் கூறப்பட்டது.

(தெ - ப - ை.)—அரண்-கோட்டையாவது, முற்று ஆற்றி-(சேனைப்பெருமையால்) சூழ்தல்வல்லவராகி, முற்றியவரையும் - (வந்து) சூழ்ந்த புறத்தோரையும், பற்றியார் - (தன்னைப்பற்றிய) உள்ளிடத்தோர், பற்று ஆற்றி - (தாம்) பற்றியவிடம் விடாதே நின்று, வெல்வது - (போர்செய்து) வெல்வதே.

**748.** That is a fort whose inmates are able to overcome, without losing their ground, even abler men who have besieged it.

---

௯. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(பரி - ரை.) எ-து,—போர்தொடங்கினவளவிலே பகைவர் கெடும்வண்ணம் அகத்தோர்செய்யும் வினைவேறுபாடுகளான் வீறுபெற்று மற்றும் வேண்டுமாட்சியை யுடையதே அரணாவது, எ-று.

தொடக்கத்திற் கெட்டார் பின்னுங்கூடிப் பொருதல் கூடாமையின், முனைமுகத்துச்சாய வென்றார். வினைவேறுபாடுகளாவன பகைவர் தொடங்கிய போரினையறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதலென் றிவை முதலாயின வினைகளுள் அதனைச் சாய்ப்பன செய்தல். மற்றும்வேண்டுமாட்சியென்றது புறத்தோரறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட சுருங்கைவழி முதலாயினவுடைமை.

(தெ - ப - ை.)—அரண் - கோட்டையாவது, முனைமுகத்து - போர்தொடங்கினவளவிலே, மாற்றலர் - பகைவர், சாய - கெட, வினைமுகத்து - (உள்ளிடத்தோர் செய்யும்) தொழில் வேறுபாடுகளால், வீறு எய்தி - வீறு பெற்று, மாண்டது - (மற்றும் வேண்டும்) பெருமையை யுடையதே.

**749.** A fort is that which derives excellence from the stratagems made by (its inmates) to defeat their enemies in the battle-field.

---

௭௰. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்

(பரி - ரை.) எ-து,—அரண் மேற் சொல்லப்பட்ட மாட்சியெல்லா முடைத்தாய விடத்தும் வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு அவையில தாம், எ-று.

வாளாவிருத்தலும் அளவறியாது செய்தலும் ஏலாதது செய்தலுமெல்லாம் அடங்க வினைமாட்சியில்லா ரென்றும், ஏற்றவினையை யளவறிந்துசெய்து காவாக்கால் அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் அவையுடைத் தன் றென்றுங் கூறினர். இவையிரண்டுபாட்டானுங் காப்பாரை யின்றியமையாதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—அரண் - கோட்டையாவது, எனை மாட்சித்து ஆகியக்கண்ணும் - (முன்சொல்லப்பட்ட) பெருமையெல்

லாம் உடைத்தாகிய விடத்தும், வினை - தொழில் செய்யுமிடத்து, மாட்சி - பெருமையை, இல்லார்கண் - இல்லாதவரிடத்து, இல்லது - (அவை) இலதாம்.

**750.** Although a fort may possess all (the above-said) excellencies it is, as it were without these, if its inmates possess not the excellency of action.

---

## எகூ-ம். அதி. பொருள்செயல்வகை.

இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

க. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(பரி - வை.) எ-து,—ஒருபொருளாக மதிக்கப்படாதாரையும் படுவோராகச் செய்யவல்ல பொருளையொழிய ஒருவனுக்குப் பொருளாவதில்லை, எ-று.

மதிக்கப்படாதார்—அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவுசிறப்பும்மைவிகாரத்தாற்றொக்கது. மதிக்கப்படுவோராகச் செய்தல்-அறிவுடையாரும் உயர்குலத்தாரும் அவர்பாற்சென்று நிற்கப் பண்ணுதல். அதனால் ஈட்டப்படுவது அதுவே பிறிதில்லையென்பதாம்.

(தெ - ப - வை.)—பொருள் அல்லவரை - ஒரு பொருளாக மதிக்கப்படாதவரையும், பொருள் ஆகச்செய்யும் - பொருளாக மதிக்கப்படச்செய்யவல்ல, பொருள் அல்லது-பொருளையல்லாமல், பொருள் - (வேறு) பொருள், இல்லை - இல்லையாம்.

**751.** Besides wealth there is nothing that can change people of no importance into those of (some) importance.

---

உ. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(பரி - வை.) எ-து,—எல்லாநன்மையு முடையராயினும் பொருளில்லாரை யாவரு மிகழ்வர், எல்லாத்தீமையு முடையராயினும் அஃதுடையாரை யாவரு முயரச்செய்வர், எ-று.

உயரச்செய்தல் - தாந்தாழ்ந்து நிற்றல். இகழ்தற்கண்ணும் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமல ரென்னும் மூவகையாரு மொத்தலின், யாவருமென்றார். பின்னுங்கூறியது அதனைவலியுறுத்தற்பொருட்டு.

(தெ-ப-வை.)—இல்லாரை - (எல்லாநன்மையு முடையராயினும் பொருள்) இல்லாதவரை, எல்லாரும் - யாவரும், எள்ளுவர் - இகழ்வர்; செல்வரை - (எல்லாத்தீமையு முடையராயினும்)

அப்பொருளுடையவனை, எல்லாரும் - யாவரும், சிறப்புச்செய்வர் - உயரச்செய்வர்.

**752.** All despise the poor; (but) all praise the rich.

---

௩. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

(பரி - ரை.) எ - து,—பொருளென்று எல்லாராலுஞ் சிறப்பிக்கப்படும் நந்தாவிளக்குத் தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச் சென்று பகையென்னுமிருளைக் கெடுக்கும், எ-று.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல்பற்றிப் பொய்யாவிளக்கமென்றும், ஏனைவிளக்கோடு இதனிடை வேற்றுமைதோன்ற எண்ணியதேயத்துச் சென்றென்றுங் கூறினார். ஏகதேசவுருவகம். இவை மூன்றுபாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பொருள் என்னும் - பொருளென்று (எல்லாராலும்) சிறப்பிக்கப்படும், பொய்யா விளக்கம் - கெடாத விளக்கானது, (தன்னைச் சம்பாதித்தவர்க்கு) எண்ணிய - அவர் நினைத்த, தேயத்துச் சென்று - நாடுகளிற்போய், இருள் - (பகையென்னும்) இருளை, அறுக்கும் - கெடுக்கும்.

**753.** The imperishable light of wealth goes into regions desired (by its owner) and destroys the darkness (of enmity therein).

---

௪. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(பரி - ரை.) எ-து,—செய்யுந் திறத்தினையறிந்து அரசன் கொடுங்கோன்மையிலனாக உளதாயபொருள் அவனுக்கு அறத்தையுங் கொடுக்கும், இன்பத்தையுங் கொடுக்கும், எ-று.

செய்யுந்திறம்-தான் பொருள்செய்தற்குரிய நெறி. இலனாகவென்பது இன்றியெனத் திரிந்துநின்றது. செங்கோலனென்று புகழப்படுதலானும் கடவுட்பூசை தானங்களாற் பயனெய்தலானும் அறனீனுமென்றும், நெடுங்காலநின்று துய்க்கப்படுதலான் இன்பமு மீனுமென்றுங் கூறினார். அதனுன் அத்திறத்தானீட்டுக வென்பதாம்.

(தெ-ப-ரை.)—திறன் அறிந்து - (சம்பாதிக்கும்) திறத்தை அறிந்து, தீது இன்றி - (அரசன்) கொடுங்கோன்மையிலனாக, வந்தபொருள் - அடைந்தசெல்வம், அறன் - (அவனுக்கு) அறத்தையும், ஈனும் - கொடுக்கும், இன்பமும் - இன்பத்தையும், ஈனும் - கொடுக்கும்.

**754.** The wealth acquired with a knowledge of the proper means and without foul pratices will yield virtue and happiness.

---

௫. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

(பரி - ரை.) எ - து,—தாங்குடிகண்மாட்டுச் செய்யு மருளோடும் அவர் தம்மாட்டுச் செய்யு மன்போடுங் கூடிவாராத பொருளீட்டத்தை அரசர் பொருந்தாது கழியவிடுக, எ-று.

அவற்றோடு கூடிவருதலாவது ஆறிலொன்றாய் வருதல். அவ்வாறு வாராத பொருளீட்டம் பசுமட்கலத்துணீர்போலச் செய்தானையுங் கொண்டிறத்தலின், அதனைப் புல்லாரென்றொழியாது புரளவிடலென்றுங் கூறினார்.

(தெ - ப - ரை.)—அருளொடும் - (தாம்குடிகளிடத்துச் செய்யும்) கருணையோடும், அன்பொடும் - (அவர் தம்மிடத்துச் செய்யும்) அன்போடும், வாரா - (கூடி) வாராத, பொருள் ஆக்கம் - பொருட்சம்பாத்தியத்தை, புல்லார் - (அரசர்) பொருந்தாராகி, புரளவிடல் - நீங்கவிடக்கடவர்.

**755.** (Kings) should rather avoid than seek the accumulation of wealth which does not flow in with mercy and love.

---

௬. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

(பரி - ரை.) எ-து,—உடையாரின்மையிற் றானேவந்துற்ற பொருளும் சுங்கமாகிய பொருளும் தன்பகைவரைத் திறையாகக் கொள்ளும்பொருளும் அரசனுக்குரிய பொருள்கள், எ-று.

உறுபொருள் - வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட்கிடந்து பின்கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுததூஉமாம். சுங்கம் - கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கிறையாயது. தெறுபொருள் - தெறுதலான் வரும் பொருளென விரியும். ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்றுபாட்டாலும் அஃதீட்டுநெறி கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—உறுபொருளும்-(உடையவர் இல்லாமையால் தானேவந்து) கிடைத்தபொருளும், உல்குபொருளும்-தீர்வையாகியபொருளும், தன் ஒன்னார் - தன்பகைவரை, தெறுபொருளும் - வென்று (திறையாகக்கொள்ளும்) பொருளும், வேந்தன் பொருள் - அரசனுக்குரிய பொருள்கள்.

**756.** Unclaimed wealth, wealth acquired by taxes, and wealth (got) by conquest of foes are (all) the wealth of the king.

---

எ. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(பரி-ரை.) எ-து,—அன்பினா லீனப்பட்ட அருளென்னுங்குழவி பொருளென்றுயர்த்துச் சொல்லப்படுஞ் செல்வத்தையுடைய செவிலியான் வளரும், எ-று.

தொடர்புபற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய அருள் தொடர்புபற்றிச் செல்லு மன்பு முதிர்ந்துழி உளதாவதாகலின் அதனை அன்பீன்குழவியென்றும், அது வழியார்மேற்செல்வது அவ்வறுமை களையவல்லார்க்காதலிற் பொருளை அதற்குச் செவிலியென்றும், அஃதலகிற்செவிலியர்போலாது தானே யெல்லாப்பொருளுமுதவி வளர்த்தலிற் செல்வச்செவிலியென்றுங் கூறினார்.

(தெ - ப - ரை.)—அன்புஈன் - அன்பினால் ஈன்றிடப்பட்ட, அருள் என்னும் - அருளென்கிற, குழவி - குழந்தையானது, பொருள் என்னும் - பொருளென்று (உயர்த்திச்)சொல்லப்படும், செல்வம் - செல்வத்தையுடைய, செவிலியால் - வளர்க்குந்தாயால், உண்டு - வளரும்.

**757.** The child mercy which is borne by love grows under the care of the rich nurse of wealth.

---

அ. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன் றுண்டாகச் செய்வான் வினை.

(பரி - ரை.) எ-து,—தன் கையதாகிய பொருளுண்டாக ஒருவினையை யெடுத்துக்கொண்டான் அதனைச் செய்தல் ஒருவன் மலைமேலேறிநின்று யானைப்போரைக் கண்டாலொக்கும், எ-று.

ஒன்றென்பது வினையாதல் செய்வா னென்றதனாற் பெற்றாம். குன்றேறியான் அச்சமும் வருத்தமுமின்றி நிலத்திடை யானையும் யானையும் பொருபோரைத் தானினிதிருந்து காணுமதுபோலக் கைத்துண்டாக வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமுமின்றி வல்லாரையேவித் தானினிதிருந்து முடிக்குமென்பதாம்.

(தெ-ப-ரை.) — தன் கைத்து - தன்கையதாகிய பொருள், உண்டு ஆக - உளதாக, ஒன்று - ஒருதொழிலை, செய்வான்-செய்பவனது, வினை - செய்தலானது, குன்று ஏறி - (ஒருவன்) மலைமேல் ஏறிநின்று, யானைப்போர் - யானைகளதுபோரை, கண்டது அற்று - கண்டதனோடொக்கும்.

**758.** An undertaking of one who has wealth in one's hands is like viewing an elephant-fight from a hill-top.

---

௯. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு மெஃகதனிற் கூரிய தில்.

(பரி - ரை.) எ-து,—தமக்கொன்றுண்டாகக் கருதுவார் பொருளை யுண்டாக்குக ; தம்பகைவர் தருக்கினையறுக்கும் படைக்கலம் அதுவாம்; அதற் கதுபோலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை, எ-று.

அதுவாம் அதற்கென்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்புமுடையராவர், ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமே யடங்குவரென்பார் செறுநர்செருக்கறுக்குமெஃகாமென்றும், ஏனையெஃ

குகன் அதுபோல அருவப்பொருளை யறுக்கமாட்டாமையின் அதினிற் கூரியதில் லென்றுங் கூறினர்.

(தெ - ப - ரை.)—(தமக்கு ஒன்று உண்டாக நினைப்பவர்) பொருளை - செல்வத்தை, செய்க - சம்பாதிக்கக்கடவர்; செறு நர் - (அப்பொருள் தம்) பகைவரது, செருக்கு - களிப்பை, அறு க்கும் - கெடுக்கும், எஃகு - ஆயுதமாம்; அதனின் - அதுபோ ல, கூரியது - கூரிய ஆயுதம், இல் - (வேறு) இல்லை.

**759.** Accumulate wealth; it will destroy the arrogance of (your) foes; there is no weapon sharper than it.

---

கo. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

(பரி-ரை.) எ-து,—நெறியான் வரும் பொருளை இறப்ப மிகப்படைத்தார்க்கு மற்றை யறனுமின்பமும் ஒருங்கே யெளிய பொருள்களாம்.

காழ்த்தல் - முதிர்தல். பயன்கொடுத்தல்லது போகாமையின் ஒண்பொருளென்றும், ஏனையிரண்டும் அதன்விளைவாகலிற் றமேயொருகாலத்திலே யுளவாமென்பார் எண்பொருளென்றுங் கூறினர். இவை நான்குபாட்டானும் அதனுன் வரும் பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒள் பொருள் - நல்லவழியால் வரும்பொருளை, காழ்ப்ப - மிகவதிகமாக, இயற்றியார்க்கு - உண்டாக்கின வர்க்கு, ஏனை இரண்டும் - மற்றை அறமும் இன்பமும், ஒருங்கு- ஒருசேர, எண் பொருள் - எளிய பொருள்களாம்.

**760.** To those who have honestly acquired an abundance of riches, the other two, (virtue and pleasure), are things easy (of acquisition).

---

## எஎ - ம். அதி. படைமாட்சி.

---

இனி அப்பொருளினுளவதாய் வெல்வதாய படை இரண்டதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை.

க. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(பரி-ரை.) எ-து,—யானை முதலிய நான் குறுப்பானும் நிறைந்து போரின்க ணூறுபடுதற் கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை அரசன் செல்வங்க ளெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம், எ-று.

ஈண்டுப் படையென்றது அந்நான்கன் றொகுதியை. ஊறஞ்சியவழி வேறல் கூடாமையின் ஊறஞ்சா வென்றும், ஒழிந்த வங்கங்கட்கும் அரசன்றனக்குங் காவலாகலின் வெறுக்கையு ளெல்லாந் தலையென்றுங் கூறினர்.

(தெ - ப - ரை.)—உறுப்பு - (யானைமுதலாகிய) நாலுறுப்புகளாலும், அமைந்து - நிறைந்து, ஊறு - (போரிலே) காயம்படுதற்கு, அஞ்சா - அஞ்சாதுநின்று, வெல் - (பகையை) வெல்வதாகிய, படை - சேனையானது, வேந்தன் - அரசனது, வெறுக்கையுள் எல்லாம் - செல்வங்களிலெல்லாம், தலை - முதன்மையாகிய (செல்வமாம்.)

**761.** The army which is complete in (its) parts and conquers without fear of wounds is the chief wealth of the king.

---

௨. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

(பரி - ரை.) எ-து,—தான் சிறிதாய வழியும் அரசற்குப் போரின்க ணுலைவு வந்தால் தன்மே லுறுவதற் கஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உளதாகாது, எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, கைப்படை யென்னும் அறுவகைப் படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படையாகலான், அதனை அரசன் "வெல் பொறியு நாடும் விழுப்பொருளுந் தன்னடையும்—கொல்களிறுமாவுங்கொடுத்தளிக்க" என்பது குறிப்பெச்சம். இப்படையை வடநூலார் மௌலமென்ப.

(தெ - ப - ரை.)—தொலைவிடத்து - (தான்) சிறிதாகியவிடத்தும், உலைவிடத்து - (அரசனுக்குப் போரினிடத்து) அழிவு வந்தால், ஊறு - (தன்மேல்) காயம்படுதற்கு, அஞ்சா - அஞ்சாதுநின்று தாங்கும், வன்கண்-சௌரியமானது, தொல் படைக்கு அல்லால் - அவன்முன்னோரைத் தொடங்கிவருஞ் சேனைக்கல்லாமல், அரிது - உண்டாகாது.

**762.** Ancient army can alone have the valor which makes it stand by its king at the time of defeat, fearless of wounds and unmindful of its reduced strength.

---

௩. ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(பரி - ரை.) எ-து,—எலியாயபகை திரண்டு கடல்போல வொலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும்; அந்நாகமுயிர்த்த துணையானே அது தானே கெடும், எ-று.

உவமைச்சொற் றொக்கு நின்றது. இத்தொழிலுவமத்தாற் றிரட்சிபெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டார்த்தால் அதற்கு வீரனஞ்சான் அவன் ளோர்ந்ததுணையானே அவர் தாங்கெடுவரென்பது தோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதலென்னு மலங்காரம். வீரரல்லாதார்பலரினும் வீரனொருவனையாடல் நன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் முறையே அரசனுக்குப் படை

ஏனை யங்கங்களுட் சிறந்த தென்பதூஉம், அதுதன்னுள்ளும் மூலப்படை சிறந்த தென்பதூஉம், அதுதன்னுள்ளும் வீரன் சிறந்தானென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—எலிப்பகை - எலிகளாகிய பகை(திரண்டு), உவரி - கடல்போல், ஒலித்தக்கால் - இரைந்தால், என் ஆம் - (பாம்புக்கு) என்னதுன்பம் வரும்; நாகம் - அப்பாம்பு, உயிர்ப்ப - மூச்செறிந்தவளவிலே, கெடும் - (அது தானே) கெடும்.

**763.** What if (a host of) hostile rats roar like the sea? They will perish at the mere breath of the cobra.

---

௪. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(பரி-ரை.) எ-து,—போரின்கட் கெடுதலின்றி பகைவராற் கீழறுக்கப்படாததாய் தொன்றுதொட்டுவந்த தறுகண்மையை யுடையதே அரசனுக்குப் படையாவது, எ-று.

அழிவின்மையான் மறமானங்க ளுடைமையும், அறைபோகாமையான் அரசசன்மாட் டன்புடைமையும், பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை — "கன்னின்றானெந்தைகணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தானென்னையர்—பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன்மே லோடி, யெய் போற் கிடந்தானென் னேறு." என்பதனானறிக. குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான்வந்தது. இது வருகின்றபாட்டுள்ளுமொக்கும்.

(தெ-ப-ரை.)—படை - (அரசனுக்கு) படையாவது, அழிவு இன்று - (போரினிடத்து) கெடுதலில்லாமல், அறைபோகாது ஆகி - (பகைவரால்) கீழறுக்கப்படாததாகி, வழிவந்த - பழமையாகவந்த, வன்கணதுவே - சௌரியமுடையதே.

**764.** That indeed is an army which has stood firm of old without suffering destruction or deserting (to the enemy).

---

௫. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(பரி - ரை.) எ - து,—கூற்றுவன் றானே வெகுண்டு மேல்வந்தாலும் நெஞ்சொத்து எதிர்நின்று தாங்குமாற்றலை யுடையதே படையாவது, எ-று.

மருந்தில் கூற்றாகலின், உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ்சொத்தற்குக் காரணம் அரசன்மேலன்பு. ஆற்றல் - மனவலி.

(தெ - ப - ரை.)—படை - சேனையாவது, கூற்று - எமன், உடன்று - கோபித்து, மேல்வரினும் - எதிர்ப்பினும், கூடி - மனமொத்து, எதிர்நிற்கும் - எதிர்நின்றுதாங்கும், ஆற்றலதுவே - மனவலிமையையுடையதே.

**765.** That indeed is an army which is capable of offering a united resistance, even if Yama advances against it with fury.

சு. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

(பரி - யை.) எ-து,—தறுகண்மையும் மானமும் முன்வீரராயினர் சென்ற நன்னெறிக்கட்சேறலும் அரசனாற் றேறப்படுதலு மென இந்நான்கு குணமுமே படைக்கு அரணாவது, எ-று.

இவற்றான் முறையே பகைவரைக் கடிதிற்கொன்று நிற்றலும், அரசனுக்குத் தாழ்வுவராமற் காத்தலும், அழியுநர்புறக்கொடையயில் வாளோச்சாமை முதலியவும் அறைபோகாமையு மாகிய செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கை யார்க்குப் பகைவர் நணுகாராகலின், வேறரண் வேண்டாமென்பதாம்.

(தெ - ப - யை.)—மறம் - சௌரியமும், மானம் - மானமும், மாண்ட - மாட்சிமைப்பட்ட, வழிச்செலவு - (முன்வீரர்சென்ற) நல்வழியிலே செல்லுதலும், தேற்றம் - (அரசனால்) நம்பப்படுதலும், என நான்கே-என இந்நான்கு குணமுமே, படைக்கு-சேனைக்கு, ஏமம் - காவலாம்.

**766.** Valour, honour, following in the exellent-footsteps (of its predecessors) and trust-worthiness: these four alone constitute the safeguard of an army.

---

எ. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(பரி - யை.) எ - து,—மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல்வந்த படையின்போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு அவர் தூசியைத் தன்மேல் வராமற்றடுத்துத் தான் அதன்மேற் செல்வதே படையாவது, எ-று.

படைவகுப்பாவது வியூகம்; அஃது எழுவகை யுறுப்பிற்றாய், வகையானன்காய், விரியான்முப்பதாம். உறுப்பேழாவன அரமுதற் றோட்டியீறாயின. வகை நான்காவன தண்டம், மண்டலம், சங்கதம், போகமென விவை. விரி முப்பதாவன தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், சங்கதவிரியாறும், போகவிரி யைந்துமென விவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற் பெருகும்; அவையெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க. இவை நான்குபாட்டானும் படையின திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-யை.)—தானை - சேனையானது, தலைவந்த - பகைவராலே வகுக்கப்பட்டு) தன்மேல்வந்த, போர் - (படையின்) போரை, தாங்குந்தன்மை - விலக்கும்வகுப்பை, அறிந்து - தெரிந்து (வகுத்துக்கொண்டு), தார் - (அவரது) தூசிப்படையை, தாங்கி-(தன்மேல் வாராமல்) தடுத்து, செல்வது - (தான் அதன்மேலே) செல்வதே.

**767.** That is an army which knowing the art of warding off an impending struggle, can bear against the dust-van (of a hostile force).

---

அ. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(பரி - வை.) எ-து,—தானை, பகைமேற் றான் சென்றடுந் தறுகண்மையும் அது தன்மேல்வந்தாற் பொறுக்குமாற்றலும் இல்லையாயினும், தன்றோற்றப் பொலிவானே பெருமையெய்தும், எ-று.

இல்லெனினுமெனவே, அவற்ற தின்றியமையாமை பெறப்பட்டது. படைத்தகையென்றது ஒருபெயர்மாத்திரமாய் நின்றது. தோற்றப்பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர், யானை, குதிரைகளுடனும் பதாகை, கொடி, குடை, டல்லியம், காகளமுதலியவற்றுடனும் அணிந்து தோன்றுமழகு. பாடு - கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை.

(தெ-ப-வை.)—தானை - சேனை, அடல் தகையும் - (பகைமேல் தான்சென்று) போர்செய்யுஞ் சௌரியமும், ஆற்றலும் - (அது தன்மேல்வந்தால்) பொறுக்கும் வலிமையும், இல் எனினும் - இல்லையாயினும், படைத்தகையால் - தனது தோற்றப் பொலிவால், பாடு - பெருமையை, பெறும் - அடையும்.

**768.** Though destitute of courage to fight and strength (to endure), an army may yet gain renown by the splendour of its appearance.

---

கூ. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

(பரி - வை.) எ-து,—தான் றேய்ந்து சிறிதாகலும் மனத்தினின்று நீங்காத வெறுப்பும் நல்குரவும் தனக்கில்லையாயின் படை பகையைவெல்லும், எ-று.

விட்டுப்போதலும் நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள்கொடாமையான் வருவன. செல்லாத்துனியாவது மகளிரை வௌவல், இளிவரவாயின செய்தல் முதலியவற்றான் வருவது. இவையுள்வழி அவன்மாட் டன்பின்றி உற்றுப்பொராமையின், இல்லாயின் வெல்லுமென்றார்.

(தெ-ப-வை.)—சிறுமையும் - (தான்தேய்ந்து) சிறிதாகலும், செல்லாத் துனியும் - (மனத்திலிருந்து) நீங்காதவெறுப்பும், வறுமையும் - தாரித்திரியமும், இல் ஆயினும் - (தனக்கு) இல்லையாயின், படை - சேனையானது, வெல்லும் - (பகையை) வெல்லும்.

**769.** An army can triumph (over its foes) if it is free from diminution, irremediable aversion and poverty.

---

எ0. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

(பரி - வை.) எ-து,—போரின்க ணிலையுடைய வீரரை மிகவுடைத்தேயாயினும், தனக்குத் தலைவராகிய வீரரில்லாதவழித் தானை நில்லாது, எ-று.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காண்போ ரில்லெனப் பொராது தானும் போமென்பார், தலைமக்களில்வழி யில்லென்றார். இவை மூன்றுபாட்டானும் முறையே படைத்தகையின்மையானும், அரசன்கொடைத் தாழ்வுகளானும், தலைவரின்மையானும், தாழ்வு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நிலைமக்கள் - (போரிடத்து) நிலையையுடைய வீரரை, சால உடைத்து எனினும்-மிகவுடையதாயினும், தலைமக்கள் – (தனக்கு) தலைவராகிய வீரர், இல்வழி - இல்லாவிடத்து, தானை - சேனை, இல் - நில்லாது.

**770.** Though an army may contain a large number of permanent soldiers, it cannot last if it has no generals.

---

## எஅ - ம். அதி. படைச்செருக்கு.

அஃதாவது அப்படையது மறமிகுதி. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

(பரி - ரை.) எ-து,—பகைவீர், இன்றிங் கென்றலைவனெதிர் போரேற்று நின்று அவன்வேல்வாய் வீழ்ந்து பின்கல்லின்கண்ணே நின்றவீரர் பலர் நீவிர் அதன்கணின்றி நும்முடற் கணிற்றல்வேண்டின், என்றலைவனெதிர் போரேற்று நிற்றலை யொழிமின், எ-று.

என்னையெனத் தன்னொடு தொடர்புபடுத்துக் கூறினமையின், அவன்வேல்வாய் வீழ்தல்பெற்றாம். கல்-நடுகல். "நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சிலல்லா—லம்பொன் முடிப்பூ ணரசும்மிலை" எனப் பதுமுகன் கூறினாற்போல ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல் வைத்துக் கூறியவாறு. இப்பாட்டு நெடுமொழி வஞ்சி.

(தெ - ப - ரை.)—தெவ்விர் - பகைவரே, என் - என்னுடைய, ஐமுன் - தலைவனெதிர், நின்று - (போரேற்று) நின்று, கல் நின்றவர் - (அவன் வேல்பட்டு வீழ்ந்து) கல்லினிடத்தே நின்ற வீரர், பலர் - அநேகர், என் - (நீர் அதனிடத்து நில்லாமல் உம்முடலிலே நிற்கையை வேண்டில்) என்னுடைய, ஐமுன்-தலைவனெதிர், நில்லன்மின் - (போரேற்று) நில்லாதேயுங்கள்.

**771.** O my foes, stand not before my leader; (for) many are those who did so and afterwards stood (in the shape of) statues.

---

உ. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(பரி - ரை.) எ-து,—கானத்தின்கணோடும் முயலைப் பிழையாம லெய்த அம்பை யேந்தலினும் வெள்ளிடைநின்ற யானையையெறிந்து பிழைத்த வேலை யேந்துதல் நன்று, எ-று.

கானமுயலென்றதனால் வெள்ளிடைநின்ற வென்பதும், பிழைத்தவென்றதனாற் பிழையாமலென்பதும், முயற்குத் தக எய்தவென்றதனான் யானைக்குத் தக எறிதலும், வருவிக்கப்பட்டன. இது வேற்றரசன் படையொடு பொருதானோர் வீரன் அது புறங்கொடுத்ததாக காணிப் பின்னவன் றன்மேற் செல்லலுற்றனது கூற்று.

(தெ-ப-ரை.)—கானம் - காட்டில் ஓடுகிற, முயல் - முசலை, எய்த - (தப்பாமல்) எய்த, அம்பினில் - அம்பை ஏந்துதலைப் பார்க்கிலும், யானை - (வெளிநிலத்திலேநின்ற) யானையை, பிழைத்தவேல் - (எறிந்து) தப்பிய வேலை, ஏந்தல் - ஏந்துதல், இனிது - நன்று.

**772.** It is more pleasant to hold the dart that has missed an elephant than that which has hit a deer in the forest.

---

௩. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

(பரி - ரை.) எ-து,—பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கவாண்டன்மை யென்று சொல்லுவர், அவர்க்கு ஒருதாழ்வு வந்தாயிற் கண்ணோடி அது தீர்க்குக்கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மையென்று சொல்லுவர், எ-று.

என்ப வென்பது பின்னு மியைந்தது. ஊராண்மை-உபகாரியாந் தன்மை. அஃதாவது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன்றானை முழுதும்படத் தமியனாயகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய் நாளை நின்றானையோடு வாவென விட்டாற்போல்வது. இவை யிரண்டு பாட்டுந் தழிஞ்சி.

(தெ-ப-ரை.)—தறுகண் - (பகைவரிடத்தே முகங்கொடாமற் செய்கிற) மறம், பேர் ஆண்மை - மிகுந்த ஆண்மையாகும், ஒன்று உற்றக்கால் - (அவர்க்கு) ஒருதாழ்வு வந்ததாயின், (அது தீர்த்துக்கொள்ளுதற் பொருட்டு), ஊராண்மை - (முகங்கொடுத்து) உபகாரியாந்தன்மை, அதன் - அதற்கு, எஃகு - கூர்மையாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவர்.

**773.** The learned say that fierceness (in contest with a foe) is indeed great valour; but to become a benefactor in case of accident (to a foe) is the extreme (limit) of that valour.

---

௪. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(பரி - ரை.) எ - து,—தன்கைப்படையாய வேலைத் தன்மேல்வந்த களிற்றோடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேறுடித் திரிவான் தன்மார்பின்கணின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும்.

களிற்றொடு போக்கல் - களிற்றினதுயிரைக் கொடுபோமாறு விடுதல். மகிழ்ச்சி தேடியதெய்தலான். இதனுட் களிற்றையல்ல தெறியானென்பதூஉம், சினமிகுதியான் வேலிடைபோழ்ந்த தறிந்திலனென்பதூஉம், பின்னும் போர் மேல் விருப்பின னென்பதூஉம், பெறப்பட்டன. நூழிலாட்டு.

(தெ-ப-ரை.)—கைவேல்-(தன்) கைப்படையாகிய வேலை, களிற்றொடு - (தன்மேல்வந்த) யானையோடு, போக்கி - எறிந்து விட்டு, வருபவன் - (வருகின்ற யானைக்கு வேல் தேடி) திரிபவன், மெய்வேல் - தன்மார்பி லிருந்த வேலை, (கண்டு), பறியா - பிடுங்கி, நகும் - மகிழ்வான்.

**774.** The hero who after casting the lance in his hand on an elephant, comes (in search of another) will pluck the one (that sticks) in his body and laugh (exultingly).

---

௫. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னோட்டன்றோ வன்க ணவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—பகைவரை வெகுண்டுநோக்கிய கண் அவர் வேலைக் கொண்டெறிய அஃதாற்றாது அந்நோக்கையழித்து இமைக்குமாயின், அது வீரர்க்குப் புறங்கொடுத்தலாம், எ-று.

அவ்வெகுளிநோக்க மீட்டலும் போரின்கண் மீட்சியெனக்கருதி அதுவுஞ் செய்யா ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—விழித்தகண் - (பகைவரை) கோபித்துப் பார்த்தகண், வேல்கொண்டு - (அவர்) வேலைக்கொண்டு, எறிய - வீச, அழித்து - (அதற்குப் பொறாமல் அப்பார்வையை) அழித்து, இமைப்பின் - இமைக்குமாயின், (அவ்விமைத்தல்), வன்கணவர்க்கு - வீரர்க்கு, ஓட்டு அன்றோ - தோற்பாம்.

**775.** Is it not a defeat to the valiant to wink and destroy their ferocious look when a lance is cast at them (by their foe)?

---

௬. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

(பரி-ரை.) எ-து,—தனக்குச் சென்ற நாள்களை யெடுத்தெண்ணி, அவற்றுள் விழுப்புண்படாத நாள்களையெல்லாம் பயன்படாது கழிந்தநாளுள்ளே வைக்கும் வீரன், எ-று.

விழுப்புண்-முகத்தினும் மார்பினும் பட்டபுண். போர்பெற்றிருக்கவும் அது பெறாத நாள்களோடுங் கூட்டுமென்பதாம். இவைமூன்றுபாட்டானும் ஊறஞ்சாமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தன் நாளை - (வீரனானவன்) தனக்குக் கழிந்த நாட்களை, எடுத்து - எடுத்து (எண்ணி), (அந்நாட்களுள்),

விழுப்புண் - பெருங்காயங்கள், படாத நாள் எல்லாம் - படாத நாட்களையெல்லாம், வழுக்கினுள் - (பயன்படாது) கழிந்தநாட்களுள்ளே, வைக்கும் - வைப்பான்.

**776.** The hero will reckon among wasted days all those on which he had not received severe wounds.

---

௭. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(பரி - ரை.) எ-து,—துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழை வேண்டி உயிர்வாழ்தலை வேண்டாத வீரர் கழல் கட்டுதல் அலங்கார நீர்மையையுடைத்து, எ-று.

வையத்தைச் சூழுமெனவே, அதன் பெருமை பெற்றாம். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல்-அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதினெய்துவராகலின், ஆபரணமாவது அதுவேயென்பதாம்.

(தெ - ப - ரை.)—சுழலும் - (பூமியை) சூழ்ந்து நிற்கும், இசை - புகழை, வேண்டி - விரும்பி, வேண்டா உயிரார் - உயிர் வாழ்தலை வேண்டாத வீரர், கழல் - வீரக்கழலை, யாப்பு - கட்டுதல், காரிகை நீர்த்து - அலங்கார குணமுடையதாம்.

**777.** The fastening of ankle-ring by those who desire a world-wide renown and not (the safety of) their lives is like adorning (themselves).

---

௮. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(பரி - ரை.) எ-து,—போர்பெறிற் றம்முயிர்ப்பொருட் டஞ்சாது அதன் மேற்செல்லும் வீரர் தம்மிறைவன் அது வேண்டாவென்று முனியினும் அவ்வீர மிகுதி குன்றார், எ-று.

போர்பெற் றறியாமையின், அதுபெற்றால் அரசன் றடுப்பினும் நில்லாரென்பதாம். பிறரும் "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" என்றும் "புட்பகத் தேவ னாகலிற் சாவேம் யாமென - நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப" என்றுங் கூறினார்.

(தெ - ப - ரை.)—உறின் - (போர்) பெறின், உயிர் - (தம்) முயிர்ப்பொருட்டு, அஞ்சா - அஞ்சாமல் (அதன்மேற்செல்லும்), மறவர் - வீரர், இறைவன் - (தம்) அரசன், செறினும் - (அது வேண்டா என்று) கோபிக்கினும், சீர்குன்றல் இலர் - அவ்வீர மிகுதிகுறைதல் இலர்.

**778.** The heroes who are not afraid of losing their life in a contest will not cool their ardour, even if the king prohibits (their fighting.)

---

௯. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

(பரி - ரை.) எ-து,—தாங்கூறின வஞ்சினந் தப்பாமற் பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை அது தப்பியவாறு சொல்லி யெள்ளுதற்குரியார் யாவர், எ-று.

இழைத்தல் - இன்னது செய்யேனாயின் இன்னனாகுகவெனத் தான் வரைத்தல். சொல்லியென்பது அவாய் நிலையான் வந்தது. வஞ்சினமுடிப்பான்புக்கு முன்னே சாவினுந் தொலைவின்மையின், அது முடித்தாராவரெனச் சாதற்சிறப்புக் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—இழைத்தது - (தாம்) சொல்லியசபதம், இகவாமை - தப்பாமற்பொருட்டு, சாவாரை - (போய்) சாகவல்லவீரரை, பிழைத்தது - (அது) தப்பியவிதம் (சொல்லி), ஒறுக்கிற்பவர் - இகழ்தற்குரியவர், யார் - யாவர்.

**779.** Who would reproach with failure those who seal their oath with their death.

---

௮௰. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

(பரி - ரை.) எ-து,—தமக்குச்செய்த நன்றிகளை நினைந்து ஆண்டவரசர் கண்கள் நீர் மல்கும்வகை போரிடைச் சாவப்பெறின், அச்சாக்காடு இரந்தாயினுங்கொள்ளுந் தகுதியையுடைத்து, எ-று

மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. இளையமூ இல்லிடைகோயால் விளிவார் பழவினைப்பயனே யெய்தலின், அடுத்த வினையாற் றுறக்கமெய்துஞ் சாதலை இரந்துகோட்டக்கதுடைத்தென்றார். இவை நான்குபாட்டானும் உயிரோம்பாமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(தமக்குச்செய்த நன்றினை நினைத்து,) புரந்தார் - ஆண்டவரசரது, கண் - கண்கள், நீர்மல்க - நீர்பெருகும்படி, சாகிற்பின் - (போரிலே) சாகப்பெறின், சாக்காடு - அச்சாவு, இரந்து - இரந்தாயினும், கோட்டக்கது - கொள்ளுந்தகுதியை, உடைத்து-உடையது.

**780.** If (heroes) can so die as to fill with tears the eyes of their rulers, such a death deserves to be obtained even by begging.

---

## எ௯ - ம். அதி. நட்பு.

---

இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத்துதவுவதாய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறைமுகத்தானுங் கூறுவான்றொடங்கி, விதிமுகவதிகாரமைந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும்.

௧. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

(பரி - ரை.) எ-து,—நட்புப்போலச் செய்து கோடற்கரிய பொருள்கள் யாவையுள? செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவையுள? எ-று.

நட்புச்செய்தற்காவாரைப் பெறுதலும் பெற்றாற் செய்யுமுபாயமும் செய்தாற்றிரிபின்றி நிற்றலுமுதலிய அரியவாகலின் நட்பிற்செயற்கரியனவில்லையென்றும், செய்தாற் பகைவரஞ்சி வினைதொடங்காராகலின் அதுபோல வினைவாராமைக்கு அரியகாவ லில்லையென்றுங் கூறினார். நட்புத்தான் இயற்கை செயற்கையென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்புமுறையானுயதூஉம் தேயமுறையானுயதூஉமென விருவகைப்படும். அவற்றுண் முன்னையது சுற்றமாகலின் அது சுற்றந்தழாலினடங்கிற்று; ஏனையது பகையிடையிட்டதேயத்ததாகலின், அது துணைவலியென வலியறிதலுளடங்கிற்று. இனி ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த வுதவிபற்றி வருஞ்செயற்கையேயாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நட்பின் - சிநேகம்போல, செயற்கு அரிய - சம்பாதித்துக்கொள்ளுதற்கு அரியபொருள்கள், யா - எவைகள், உள - இருக்கின்றன, (சம்பாதித்துக்கொண்டால்) அதுபோல் - அச்சிநேகத்தைப் போல, வினைக்கு அரிய - (பகைவர் செய்யும்) தொழிலுக்குப் (புகுதற்கு) அரிய, காப்பு - காவலானவை, யா - எவைகள், உள - இருக்கின்றன.

**781. What things are there so difficult to acquire as friendship? What guards are there so difficult to break through by the efforts (of one's foes)?**

---

உ. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(பரி - ரை.) எ-து,—அறிவுடையார் நட்புக்கள் பிறை நிறையுந்தன்மை போல நாடோறு நிறையுந்தன்மையவாம்; மற்றைப் பேதைமையுடையார் நட்புக்கள் நிறைந்த மதியின் குறையுந்தன்மைபோல நாடோறுங் குறையுந் தன்மையவாம், எ-று.

நீரவென்றார், இனிமைபற்றி. கேண்மை, நட்பென்பன ஒருபொருட்கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப் பின்பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ் செய்தன முன்பெருகிப் பின்சுருங்கற்குங் காரணம் தம்முன் முன்னறியாமையும் பின்னறிதலுமாம்.

(தெ - ப - ரை.)—நீரவர் - அறிவுடையவரது, கேண்மை - சிநேகம், பிறை - பிறைபோல, நிறை நீர - (நாடோறும்) நிறையுந் தன்மையினவாம்; பேதையார் - அறிவில்லாதவரது, நட்பு - சிநேகம், மதி - (நிறைந்த) சந்திரன்போல, பின் நீர - பின்னே (நாடோறும்) குறையுந்தன்மை யனவாம்.

**782.** **The friendship of the wise waxes like the new moon; (but) that of fools waxes like the full moon.**

---

௩. நவில்தொறும் நூனயம் போலும் பயில்தொறும்
பண்புடையாளர் தொடர்பு.

(பரி - ரை.) எ-து,—நற்குணமுடையமக்கள் தம்முட்செய்த நட்புப்பயிலுந்தோறும் அவர்க்கின்பஞ்செய்தல் நூற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க்கின்பஞ் செய்தலை யொக்கும், எ-று.

நயத்தினைச் செய்தலான், நயமெனப்பட்டது. இருமையினும் ஒருகாலைக்கொருகால் மிகுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அச்சிறப்பிற்கேது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பண்புடையாளர் - நற்குண முடையமக்கள், தொடர்பு - (தங்களிலேசெய்த) நட்பு, பயில்தொறும்-பழகுந்தோறும், (அவருக்கு இன்பஞ்செய்தல்), நூல் - நூற்பொருள், நவில்தொறும் - கற்குந்தோறும், நயம்போலும் - (கற்பவர்க்கு) இன்பஞ்செய்தல்போலும்.

**783.** **Like learning, the friendship of the noble, the more it is cultivated, the more delightful does it become.**

---

௪. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனோடொருவன் நட்புச்செய்தல் தம்முணகுதற்கியைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று; அவர்க்கு வேண்டாதசெய்கை யுளதாயவழி முற்பட்டுக் கழறுதற்பொருட்டு.

பழியும் பாவமுந் தருஞ்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவ தன்மையின் அதனை மிகுதியென்றும், அதுசெய்தற்கு முன்னே மீட்டல்வேண்டுதலின் மேற்சென்றென்றும், இன்சொற்கு மீளாமையின் இடித்தற்பொருட்டென்றுங்கூறினார். இதனான் நட்பின்பயன் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல், (நகைசெய்தற்கு ஏற்றவைசொல்லி) நகுதல்பொருட்டு-நகைசெய்தற்பொருட்டு, அன்று-அல்ல, மிகுதிக்கண் - (அவர்க்கு) வேண்டாத செய்கை (உண்டான விடத்து); மேற்சென்று - முற்பட்டு, இடித்தல்பொருட்டு - கண்டித்துப் புத்திசொல்லுதற் பொருட்டு.

**784.** **Friendship is to be practised not for the purpose of laughing but for that of being beforehand in giving one another sharp rebukes in case of transgression.**

---

௫. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(பரி - ரை.) எ-து,—ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை, இருவர்க்கு மொத்த வுணர்ச்சி தானே நட்பாமுரிமையைக் கொடுக்கும், எ-று.

புணர்ச்சி ஒருதேயத்தா ராதல், "இன்றே போல்க நும் புணர்ச்சி தானே." என்றதும் அதனை. பழகுதல் பலகாற்கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சியொப்பின், அதுவே உடனுயிர் நீங்குமுரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம். நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்த லென்னுங் காரண மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்தென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு), புணர்ச்சி - ஓரிடத்திருத்தலும், பழகுதல் - பலதரங்கண்டு பேசலும், வேண்டா - வேண்டுவதில்லை; உணர்ச்சிதான் - (இருவர்க்கும்) ஒத்த அறிவுதானே, நட்பு ஆம் - சிநேகமாகும், கிழமை - உரிமையை, தரும் - கொடுக்கும்.

**785.** Living together and holding frequent intercourse are not necessary (for friendship); (mutual) understanding can alone create a claim for it.

---

௬. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
அகநக நட்பது நட்பு.

(பரி - ரை.) எ-து,—கண்டவழி அகமொழிய முகமாத்திரமே மலரும் வகை நட்குமது நட்பாகாது; அன்பால் அகமுமலர நட்குமதே நட்பாவது எ-று.

நெஞ்சின்க ணிகழ்வதனை நெஞ்சென்றார். இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அதனால் இரண்டும் ஒருங்கே மலரவேண்டுமென்பது பெற்றாம்.

(தெ-ப-ரை.)—முகம் நக - (கண்டவிடத்து) முகமாத்திரமே மலரும் வகை, நட்பது - சிநேகிப்பது, நட்பு அன்று - சிநேகமன்று; நெஞ்சத்து அகம் நக - (அன்பால்) உள்ளமும் மலர, நட்பது - சிநேகிப்பதே, நட்பு - சிநேகமாம்.

**786.** The love that dwells (merely) in the smiles of the face is not friendship; (but) that which dwells deep in the smiles of the heart is true friendship.

---

எ. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

(பரி-ரை.) எ-து,—கேட்டினைத்தருந் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி ஏனை நன்னெறிகளைச் செல்லாக்காற் செலுத்தித் தெய்வத்தாற் கேடுவந்தழி

அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது, எ-று.

ஆறென வருகின்றமையின், அழிவினைத் தருமவையென் றொழிந்தார். "தெருண்டவறிவினவர்" என்புழிப்போல இன்சாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது. இனி நவையென்று பாடமோதி, அதற்குப் போரழிவினுஞ் செல்வ வழிவினும் வந்த துன்பங்களென்றும், அழிவின்கணென்பதற்கு யாக்கையழிவின்க ணென்றும் உரைப்பாரு முளர்.

(தெ-ப-ரை.)—நட்பு - (ஒருவனுக்கு) நட்பாவது, அழிவின் - அழிவைத்தருகிற, அவை - தீயவழிகளிலே, நீக்கி-நீங்கச் செய்து, ஆறு - நல்வழிகளிலே, உய்த்து-நடத்தி, அழிவின்கண்-(ஊழினாலே) கேடு வந்தவிடத்து, அல்லல் - அத் துன்பத்தை, உழப்பது ஆம் - உடனிருந்து அனுபவிப்பதேயாம்.

**787.** (True) friendship turns aside from evil (ways), makes (him) walk in the (good) way, and, in case of loss it shares his sorrow (with him).

---

௮. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

பரி-ரை.) எ-து,—அவையிடை யாடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்றுதவி அவ்விளிவரல் களையுமாறுபோல, நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக் களைவதே நட்பாவது, எ-று.

அற்றங்காத்தற்கட் கை தன்மனத்தினு முற்படுதலின், அவ்விரைவு இடுக்கண் களைவுழியும் அதற்கொத்த தொழி லுவமையினும் வருவிக்க. உடையவன் றொழில் நட்பின்மே லேற்றப்பட்டது.

(தெ-ப-ரை.)—நட்பு - நட்பாவது, உடுக்கை இழந்தவன் - (சபையினிடத்து) ஆடைகுலைந்தவனுக்கு, கைபோல-கையுதவுதல்போல, (சிநேகிக்கப்பட்டவனுக்கு), ஆங்கே-அப்பொழுதே, இடுக்கண் - துன்பத்தை, களைவது ஆம் - நீக்குவதாம்.

**788.** (True) friendship hastens to the rescue of the afflicted (as readily) as the hand of one whose garment is loosened (before an assembly).

---

௯. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

(பரி-ரை.) எ-து,—நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின், அஃது எஞ்ஞான்றுந் திரிபின்றி இயலுமெல்லையெல்லாம் அறம் பொருள்களிற் றளராமைத் தாங்குந் திண்மை, எ-று.

ஒருஞான்றும் வேறுபடாது மறுமை யிம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களிற் றளர்ந்துழி அத்தளர்ச்சி நீக்கி அவற்றின்க ணிறுத்துதற்கு மேல் ஒரு செயலுமின்மையின், அதனை நட்பிற்கு முடிந்தவெல்லை யென்றார்.

(தெ-ப-ரை.)—நட்பிற்கு - சிநேகத்திற்கு, வீற்றிருக்கை - அரசிருக்கை, யாது எனின் - ஏதெனின், கொட்பு இன்றி-(எங்காளும்) வேறுபடாமல், ஒல்லும்வாய் - கூடுமிடத்தெல்லாம், ஊன்றும்நிலை - (அறம்பொருள்களிலே தளராமல்) தாங்குந்திண்மை.

**789.** Friendship may be said to be on its throne when it possesses the power of supporting one at all times and under all circumstances, (in the practice of virtue and wealth).

---

௰. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

(பரி-ரை.) எ-து,—இவர் நமக் கித்துணையன்பினர் யாமிவர்க் கித்தன்மையமென்று ஒருவரை யொருவர் புனைந்துசொல்லினும், நட்புப் புல்லிதாய்த் தோன்றும், எ-று.

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. தாம் அவரொன்னும் வேற்றுமையின்றிவைத்துப் புனைந்துரைப்பினும் வேற்றுமையுண்டாமாகலின், நட்புப் புல்லென்னுமென்றார். இவையைந்துபாட்டானும் நட்பினதிலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.) இவர் எமக்கு - இவர்நமக்கு, இனையர் - இவ்வள வன்பினர், யாம் - நாம், இன்னம் என்று - (இவர்க்கு) இவ்வள வன்பினேம் என்று, புனையினும் - (ஒருவரை)ஒருவர் சிறப்பிக்கினும், நட்பு - சிநேகம், புல் என்னும் - சிறிதாய்த்தோன்றும்.

**790.** Though friends may praise one another saying "He is so intimate with us, and we so much (with him);" (still) such friendship will appear mean.

---

## ௮௰-ம். அதி—நட்பாராய்தல்.

அஃதாவது மேற்சொல்லிய விலக்கணத்தாரை யாராய்ந்தறிந்தே நட்கவேண்டுதலின், அவரை யாராயுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(பரி-ரை.) எ-து,—நட்பினைவிரும்பி அதன்கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச்செய்தபின் அவனை விடுதலுண்டாகாது; ஆகலான், ஆராயாது நட்புச்செய்தல்போலக் கேடு தருவது பிறிதில்லை, எ-று.

ஆராய்தல்-குணச்செய்கைகளது நன்மையை யாராய்தல். கேடு—ஆகுபெயர். நட்கிற்றுமவரொன்னும் வேற்றுமையின்மையின் வீடில்லையென்றும், அவ்வேற்றுமை யின்மையான் அவன்கட் பழிபாவங்கள் தமவா மாகலின் இருமையுங் கெடுமென்பது நோக்கி நாடாது நட்டலிற் கேடில்லையென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.) நட்பு ஆள்பவர்க்கு - நட்பைவிரும்பி அதனிடத்தே நிற்பவர்க்கு, நட்டபின்-(ஒருவனோடு)நட்புச் செய்தபின், வீடு - (அவனை) விடுதல், இல்லை - உண்டாகாது, (ஆதலால்), நாடாது - ஆராயாமல், நட்டலின் - சிநேகித்தல்போல, கேடு - கேடு (தருவது), இல்லை - (வேறே) இல்லையாம்.

**791.** As those who are of a friendly nature will not forsake (a friend) after once loving (him), there is no evil so great as contracting a friendship without due inquiry.

---

உ. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

(பரி-ரை.) எ-து,—குணமுஞ்செய்கையு நல்லனென்பதும் அல்லனென்பதும் பலகா லாராய்ந்தும் பலவாற்றா னாராய்ந்தும் ஒருவனோடு நட்புக்கொள்ளாதவன் முடிவிற் றான் சாதற்கேதுவாய துன்பத்தினைத் தன் மாற்றார் விளைக்கவேண்டாமற் றானே விளைக்கும், எ-று.

கடைமுறைக்கண்ணென இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்க. குணமுஞ் செயலுந் தீயானொடு கொள்ளின் அவற்கு வரும் பகைமையெல்லாந் தன்மேல வாய்ப்பின் அவற்றா னிறந்துவிடு மென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் ஆராயாவழிப் படுமிழுக்குக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—(குணமுஞ் செய்கையும் நல்லனென்பதும் அல்லனென்பதும்) ஆய்ந்து - (பலகால்) ஆராய்ந்தும், ஆய்ந்து - (பலவழியால்) ஆராய்ந்தும், கேண்மை - (ஒருவனோடு) நட்பை, கொள்ளாதான் - கொள்ளாதவன், கடைமுறை - முடிவில், தான் சாம் - தான் சாவதற்கு ஏதுவாகிய, துயரம் - துன்பத்தை, தரும் - (தானே) விளைத்துக்கொள்ளுவான்.

**792.** The friendship contracted by him who has not made repeated inquiry will in the end grieve (him) to death.

---

௩. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையு மாராய்ந்தறிந்து, அவனோடு நட்புச் செய்க, எ-று.

குற்றமில்லாதார் உலகத்தின்மையின் உள்ளது பொறுக்கப்படுவதாயின் அவர்நட்பு விடற்பாற் றன்றென்பார் குற்றமுமென்றும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்வேருதலிற் குன்றாவினனு மென்றும், விடப்படிற் றங்குறையா மென்பார் அறிந்தியாக்க வென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—குணனும் - (ஒருவனது) குணத்தையும், குடிமையும் - குடிப்பிறப்பையும், குற்றமும் - குற்றத்தையும், குன்றா இனனும் - குறைவற்ற சுற்றத்தையும், அறிந்து - (ஆரா

ய்ந்து) அறிந்து, நட்பு யாக்க - (அவனோடு) சிநேகஞ்செய்யக் கடவன்.

**793.** Make friendship (with one) after ascertaining (his) character, birth, defects, and the whole of one's relations.

---

௪. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(பரி - ரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பிறந்து தன்மாட்டு உலகர் சொல்லும் பழிக்கு அஞ்சுவானைச் சில கொடுத்தாயினும் நட்புக்கோடல் சிறந்தது, எ-று.

குடிப்பிறப்பாற் றான் பிழைசெய்யாமையும், பழிக்கஞ்சலாற் பிழைத்தன பொறுத்தலும், பெற்றும். இவை யிரண்டு முடையானைப் பெறுதலருமையின், அவன் நட்பை விலைகொடுத்துங் கொள்க வென்பதாம்.

(தெ - ப - ரை.) குடிப்பிறந்து - உயர்ந்தகுடியிற் பிறந்து, தன்கண் - தன்னிடத்து, பழி - (உலகத்தார்)சொல்லும் பழிக்கு, நாணுவானை-அஞ்சுபவனை, கொடுத்தும்-(யாதாயினுமொன்றை) கொடுத்தாயினும், நட்புக் கொளல்வேண்டும்-சிநேகஞ் செய்தல் வேண்டும்.

**794.** The friendship of one who belongs to a (good) family and is afraid of (being charged with) guilt, is worth even purchasing.

---

௫. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(பரி-ரை.) எ-து,—தாம் உலகவழக்கல்லது செய்யக் கருதிற் சோகம் பிறக்கும்வகை சொல்லி விலக்கியும், செய்தக்காற் பின்னுஞ் செய்யாவகை நெருக்கியும், அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை ஆராய்ந்து நட்புக்கொள்க, எ-று.

அழச்சொல்லி யிடித்தென வந்த பரிகாரவினைகளான் அவற்றிற்கேற்ற குற்றவினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு - உலகத்தார் அடிப்படச் செய்து போந்த செயல். தம்மொடு நட்டாரும் அறியும்வகை அறிவித்த லரிதாகலின் அறியவல்லா ரென்றார். இரண்டாவது இறுதிக்கட் டொக்கது.

(தெ - ப - ரை.)—அல்லது - (தாம்) உலகநடையல்லாததை (செய்யநினைக்கின்), அழச்சொல்லி - அழும்வகைசொல்லி (விலக்கியும்), இடித்து - (செய்தக்கால் பின்னும்செய்யாவகை) நெருக்கியும், வழக்கு - அவ்வுலகநடையைச் (செய்யாவிடத்து), அறியவல்லார் - செய்விக்கவும், வல்லவரை, ஆய்ந்து - ஆராய்ந்து, நட்பு கொளல் - சிநேகஞ்செய்யக் கடவர்.

**795.** You should examine and secure the friendship of those who can speak so as to make you weep over a crime (before its commission).

or rebuke you severely (after you have done it) and are able to teach (you the ways of) the world.

௬. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(பரி - வை.) எ-து,—ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலங்களை எஞ்சாம லளப்பதோர் கோல்; ஆகலின், அதன்கண்ணும் அவனாற் பெறப்படுவதோர் நல்லறி வுண்டு, எ-று.

தத்த நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் புறத்துத்தோன்றுமற் போந்தார் பின் கேடுவந்துழிச் செயல் வேறுபடுதலின் அக்கேட்டால் அவை வரையறுக்கப்படுமென்பது பற்றிக் கேட்டினைக்கோலாக்கியும், அதனால் அவரை யளந்தறிந்தால் அவரையே கோடலின் அவ்வறிவை உறுதியென்றுங் கூறினார். கிளைஞர்—ஆகுபெயர். இஃதேகதேசவுருவகம். இவைநான்குபாட்டானும் ஆராயுமாறும் ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவரென்பதூஉங் கூறப்பட்டன.

(தெ-ப-வை.)—(ஒருவனுக்குக் கேடென்பது,) கிளைஞரை - சுற்றத்தாரது நட்பாகிய (நிலங்களை,) நீட்டி அளப்பது - குறையாமல் அளப்பதாகிய, ஓர்கோல் - ஒருகோலாம்; (ஆகலால்), கேட்டினும் - அக்கேட்டினிடத்தும், ஓர் உறுதி - (அவராலே பெறப்படும்) ஒருநல்லறிவு, உண்டு - உளது.

**796**. Even in ruin there is some good; (for) it is a rod by which one may measure fully (the affection of one's) relations.

௭. ஊதியமென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(பரி - வை.) எ-து,—ஒருவனுக்குப் பேறென்று சொல்லப்படுவது அறிவிலாரோடு நட்புக்கொண்டானாயின் அதனையொழிந்து அவரி னீங்குதல், எ-று.

நட்பொழிந்தாலும் நீங்காக்கால் வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோலத் தீங்கு வருதலின் விடலென்றும், நீங்கியவழித் தீங்கொழிதலேயன்றி இருமை யின்பத்திற் குரிமையெய்தலு முடைமையின் அதனை ஊதியமென்றுங் கூறினார்.

(தெ-ப-வை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, ஊதியம் என்பது - பேறென்று சொல்லப்படுவது, பேதையார் - அறிவில்லாதவரது, கேண்மை - நட்பை, ஒரீஇ - ஒழிந்து, விடல் - (அவரை) விட்டு நீங்குதல்.

**797**. It is indeed a gain for one to renounce the friendship of fools.

௮. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(பரி - ரை.) எ-து,—தம்மூக்கஞ் சுருங்குதற்குக் காரணமாய வினை களைச் செய்ய நினையாதொழிக; அதுபோலத் தமக்கொருதுன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளாதொழிக, எ-று.

உள்ளஞ் சிறுகுவவாவன தம்மின்வலியாரோடு தொடங்கியனவும் பயனில்ல னவுமாம். ஆற்றென்பது முதனிலைத்தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியரா வார்போன்று ஒழிதலின், வலியறுப்பா ரென்றார். எடுத்துக்காட்டுவமை. கொள் ளின் அழிந்தேவிடுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—உள்ளம் - (தம்) மனவெழுச்சி, சிறுகுவ - சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை, உள்ளற்க - (செய்ய) நினையாதிருக்கக்கடவர்; (அதுபோல), அல்லற்கண் - (தமக் கொரு) துன்பம் வந்தவிடத்து, ஆற்று அறுப்பார் - கைவிடுவோர து, நட்பு-சிநேகத்தை, கொள்ளற்க-கொள்ளாதிருக்கக்கடவர்.

**798.** Do not think of things that discourage your mind, nor contract friendship with those who would forsake you in adversity.

---

கூ. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் கெடுங்காலத்து அவனைவிட்டு நீங்குவார் முன்னவனோடு செய்த நட்பு, தன்னைக் கூற்றடுங்காலத்து ஒருவன் நினைப்பி னும், அந்நினைத்த வுள்ளத்தைச் சுடும், எ-று.

நினைத்ததுணையானே இயைபில்லாத பிறனுக்குங் கூற்றினுங் கொடிதா மெனக் கைவிடெண்ணிச் செய்த நட்பின் கொடுமை கூறியவாறு. இனி அவன் றனே ஆக்கியகேடு தன்னையடுங்காலை யுள்ளினும் அக்கேட்டினுஞ் சுடுமென் றுரைப்பாரு முளர். இவை மூன்றுபாட்டானும் ஆராய்ந்தால் நட்கப்படாதார் இவரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கெடும் காலை - (ஒருவன்) கெடுங்காலத்து, கைவிடுவார் - (அவனைவிட்டு) நீங்குவார், கேண்மை - (முன் அ வனோடுசெய்த) நட்பானது, அடும் காலை - (கூற்றுவன்) கொல் லுங்காலத்து, உள்ளினும் - (ஒருவன்) நினைக்கினும், உள்ளம் - (அந்நினைத்த) உள்ளத்தை, சுடும் - வருத்தும்.

**799.** The very thought of the friendship of those who have deserted one at the approach of adversity will burn one's mind at the time of death.

---

அ0. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

(பரி - ரை.) எ-து,—உலகோடு ஒத்துக் குற்றமற்றார் நட்பினையே பயி ல்க; உலகோடொத்தலில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டியதொன்றனைக் கொடுத்தாயினும் விடுக, எ-று.

உலகோடொத்தார் நட்பு இருமையின்பமும் பயத்தலின் மருவுகவென்றும், அதனோடு மாறுயினார் நட்புத் துன்பமே பயத்தலின் அதனொழிவை விலைகொடுத்துங் கொள்கவென்றுங் கூறினார். இதனால் அவ்விருமையுந் தொகுத்துக் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—மாசு அற்றார் - (உலகோடொத்து) குற்றமற்றவரது, கேண்மை - நட்பையே, மருவுக - பழகக்கடவன்; ஒப்பு இலார் - (உலகத்தோடு) ஒத்தலில்லாதவரது, நட்பு-சிநேகத்தை, (ஆராயாதுகொண்டால்), ஒன்று - (அவருக்குவேண்டிய) ஒன்றை, ஈந்தும் - கொடுத்தாயினும், ஒருவுக - விடக்கடவன்.

**800.** Continue to enjoy the friendship of the pure; (but) renounce even with a gift, the friendship of those who do not agree (with the world.)

## அக-ம். அதி. பழமை.

அஃதாவது நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற் காயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரொனினும் பொறுக்கப்படுங் குற்றமுடைய ராகலானும் ஊழ்வகையானும் நட்டார்மாட்டுப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு, இது நட்பாராய்தலின்பின் வைக்கப்பட்டது.

க. பழமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(பரி-ரை.) எ-து,—பழமையென்று சொல்லப்படுவ தியாதென்று வினவின், அது பழமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதுஞ்சிதையாது அவற்றிற் குடம்படும் நட்பு, எ-று.

கிழமை—ஆகுபெயர். கெழுதகைமையென வருவனவு மது. உரிமையாற் செய்வனவாவன கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவச்சங்களின்மை யென்றிவை முதலாயின. சிதைத்தல் - விலக்கல். இதனாற் பழமையாவது காலஞ்சென்றதன்று இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பழமை எனப்படுவது-பழமைஎன்று சொல்லப்படுவது, யாது எனின்-யாதென்றுகேட்கின் (அது), கிழமையை - (பழமையோர்) உரிமையாலே செய்தவைகளை, யாதும்-சிறிதாயினும், கீழ்ந்திடா - சிதைக்காமல் (அவைகளுக்கு உடன்படுவதாகிய), நட்பு - சிநேகமாம்.

**801.** Intimate friendship is that which cannot in the least be injured by (things done through the) right (of long standing intimacy).

உ. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

(பரி - ரை.) எ-து,—நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையாற்செய்வன, அதனுல் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை, எ-று.

வேறன்மை தோன்ற உறுப்பென்றார். உறுப்பென்பது ஈண்டிலக்கணையடியாகவந்த குறிப்புச்சொல். அவயவமாத லறிந்தே இனியராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார்.

(தெ-ப-ரை.)—நட்பிற்கு - சிநேகத்திற்கு, உறுப்பு-அவயவமாவன, கெழுதகைமை - (நட்பினர்) உரிமையாற் செய்பவையாம்; (ஆதலால்), அதற்கு - அவ்வுரிமைக்கு, உப்பு ஆதல்-இனிமையராதல், சான்றோர் - நிறைந்தோர்க்கு, கடன் - முறைமை.

**802.** The constituents of friendship are (things done through) the right of intimacy; to be pleased with such a right is the duty of the wise.

---

கூ. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(பரி - ரை.) எ-து, — தாமுடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத் தாஞ்செய்தாற்போல உடம்படாராயின், அவரோடு பழயதாய்வந்த நட்பு என்னபயனைச் செய்யும், எ-று.

செய்தாற்போல வுடம்படுதலாவது தாமும் அவரிடத்துரிமையா னுடம்படுதல். இவை யிரண்டுபாட்டானும் பழமையான் வரும் உரிமையது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கெழுதகைமை - (நட்பினர்) உரிமையினாலே செய்தவைகளுக்கு, செய்தாங்கு - (தாம்) செய்தவைபோல, அமையாக்கடை - உடன்படாராயின், பழகிய - (அவரோடு) பழையதாய்வந்த, நட்பு-சிநேகம், எவன்-என்னபயனை, செய்யும் - தரும்.

**803.** Of what avail is long-standing friendship, if friends do not admit as their own actions done through the right of intimacy?

---

ச. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

(பரி - ரை.) எ-து,—தங்கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின், அச்செயலது விழையப்படுந் தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார், எ-று.

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமன் முடிந்திருத்தலினூஉங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று. அதனை அவ்வாறறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்ல தின்மையின், அவர்மேல்வைத்துக்கூறினார். வேண்டியிருப்பரென்பது எழுந்திருப்ப ரென்பதுபோல ஒருசொன்னீர்மைத்து. இதனாற் கேளாது செய்தழி அதனை விரும்புகவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ை.)—நட்டார் - நட்பினர், கெழுதகையால் - உரிமையால், கேளாது - (தம்மை) கேளாமல், செயின் - (தங் கருமத்தை) செய்தாராயின், விழைதகையான் - (அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி, (அறிவுடையோர்,) வேண்டியிருப் பர் - (அதனை) விரும்புவர்.

**804.** If friends, through the right of friendship, do (anything) without being asked, the wise will be pleased with them on account of its desirability.

---

ரு. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

(பரி - ை.) எ-து,—தாம் வெறுக்கத்தக்கனவற்றை நட்டார் செய்தாரா யின், அதற்குக் காரணம் ஒன்றிற் பேதைமையென்றுதல் ஒன்றின் மிக்கவுரிமை யென்றுதல் கொள்க, எ-று.

ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். செயினெனவே, தம்மியல்பாற் செய்யாமைபெற்றும். இது வருகின்றவற்றுள்ளு மொக்கும். இழவூழான் வரும்பேதைமை யாவர்க்கு முண்மையிற் றமக் கேதங்கொண்டா ரென்றுதல் ஊழ்வகையான் எம்மின்வரற்பாலது ஒற்றுமைமிகுதிபற்றி அவரின் வந்ததென் றுதல்கொள்வதல்லது அன்பின்மையென்று கொள்ளப்படா தென்பதாம். கெடும்வகை செய்யின் அதற்குக் காரணம் இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—நோ தக்க - (தாம்) வெறுக்கத்தக்கவைகளை, நட்டார் - சிநேகித்தவர், செயின் - செய்தாராயின், (அதற்குக்கா ரணம்), பேதைமை ஒன்றோ - அறியாமையொன்றோ, பெருங் கிழமை - மிகுந்த உரிமையு(மாம்), என்று-என்று, உணர்க - அறி யக்கடவர்.

**805.** If friends should perform what is painful, understand that it is owing not only to ignorance, but also to the strong claims of intimacy.

---

சு. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(பரி - ை, எ-து,—நட்புவரம் பிகவாது அதன்கண்ணே நின்றவர் தம் மொடு பழமையிற் பிரியாது நின்றாரது நட்பினை அவராற் றொலைவு வந்தவிடத் தும் விடார், எ-று.

பழமையிற் பிரியாமை - உரிமையொழியாமை. தொலைவு - பொருட்கேடும் போர்க்கேடும்.

(தெ-ப-ை.)—எல்லைக்கண் நின்றார் - (நட்பின்) வரம்பிலே நின்றவர், தொல்லைக்கண் நின்றார் - (தம்மோடு) பழமையில் வேறுபடாது நின்றவரது, தொடர்பு - நட்பை, தொலைந்த விடத் தும் - (அவராலே) தொலைவு வந்தவிடத்தும், துறவார் - விடார்.

**806.** Those who stand within the limits (of true friendship) will not even in adversity give up the intimacy of long standing friends.

---

எ. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(பரி - ரை.) எ-து,—நட்டார் தமக்கழிவுவந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட் டன்பொழியார்; அன்புடனே பழையதாய் வந்த நட்பினையுடையார், எ-று.

*அழியென்பது முதனிலைத்தொழிற்பெயர். அழிவு - மேற்சொல்லிய கேடுகள். இவை யிரண்டுபாட்டானுங் கேடுசெய்தக்கண்ணும் நட்பு விடற்பாற் றன்றென்பது கூறப்பட்டது.*

(தெ - ப - ரை.)—அன்பின் - அன்புடனே, வழிவந்த - பழையதாய்வந்த, கேண்மையவர் - நட்பினையுடையவர், அழிவந்த - அழிவு வந்தவைகளை, செய்யினும் - செய்தாராயினும், அன்பு அறார் - (அவரிடத்தே) அன்பு நீங்கார்.

**807.** Those who have (long) stood in the path of affection will not give it up even if their friends cause (them) their ruin.

---

அ. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

(பரி - ரை.) எ-து,—நட்டார்செய்த பிழையைத் தாமாகவேயன்றிப் பிறர் சொன்னாலுங் கொள்ளாத உரிமையறியவல்லார்க்கு அவர் பிழை செய்வாராயின், அது பயன்பட்ட நாளாம், எ-று.

*பிழையாவன சொல்லாது நற்பொருள்வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலாயின. கேட்டல்-உட்கோடல். கெழுதகைமைவல்லா ரென்பது ஒருடையராய்க் கேளாதவென்னு மெச்சத்திற்கு முடிபாயிற்று. செய்துபோர்துழியல்லது அவ்வன்மை வெளிப்படாமையின், செய்யாதன நாளல்லவாயின. இதனாற் பிழைபொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.*

(தெ - ப - ரை.)—கேள் - நட்பினரது, இழுக்கம் - பிழையை, கேளா - (பிறர்சொல்லினும்) கேளாத, கெழுதகைமை வல்லார்க்கு - உரிமையறியவல்லவர்க்கு, நட்டார் - அந்நட்பினர், இழுக்கம் - பிழையை, செயின் - செய்தாராயின் (அது), நாள் - (பயன்பட்ட) நாளாம்.

**808.** To those who understand that by which they should not listen to (tales about) the faults of their friends, that is a (profitable) day on which the latter may commit a fault.

---

கூ. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

(பரி-ரை.) எ-து,—உரிமையறாது பழையதாய்வந்த நட்பினையுடையா ரது நட்பினை அவர் பிழைநோக்கி விடுதல்செய்யாதாரை உலகம் நட்புக்குறி த்து விரும்பும், எ-று.

கெடாதென்பது விறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. விடாதாரையெனவே விடுதற்காரணங் கூறப்பட்டது. தம்மாட்டும் இவரித்தன்மைய ராவரென்று யா வருந் தாமே வந்து நட்பாவரென்பதாம். கெடாரென்று பாடமோதி, நட்புத்த ன்மையிற் கெடாராகியென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—கெடா - (உரிமை) கெடாமல், வழிவந்த- பழையதாய்வந்த, கேண்மையார் - நட்பையுடையவரது, கேண் மை - நட்பை, விடார் - (அவர் பிழைநோக்கி) விடாதவரை, உலகு - உலகமானது, விழையும் - (நட்புக்குறித்து) விரும்பும்.

**809.** They will be loved by the world, who have not forsaken the friendship of those with whom they have kept up an unbroken long-standing intimacy.

௧௦. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

(பரி-ரை.) எ-து,—பழைய நட்டார் பிழைசெய்தாராயினும். அவர்மா ட்டுத் தம்பண்பி னீங்காதார் பகைவராலும் விரும்பப்படுவர், எ-று.

தம்பண்பாவது செய்யாதமுன்போல அன்புடையராதல். மூன்றனுருபுஞ் சிறப்பும்மையும் விகாரத்தாற் றொக்கன. அத்திரிபின்மை நோக்கிப் பகைவரும் நட்டாராவ ரொன்பதாம். இவையிரண்டுபாட்டானும் பழமையறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பழையார்கண் - பழைய நட்பினரிடத்து, (அவர் பிழைசெய்தாராயினும்), பண்பின்தலைப் பிரியாதார்-(தம்) பண்பு நீங்காதவர், விழையார் - பகைவராலும், விழையப்படுப- விரும்பப்படுவர்.

**810.** Even enemies will love those who have never changed in their affection to their long standing friends.

---

## அ௨-ம். அதி. தீநட்பு.

இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு நட் பாராய்தற்கட் சுருங்கச்சொல்லிய துணையான் அடங்காமையின் அதனை யிருவகை ப்படுத்து இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் டீநட்புக்கூறு கின்றார். அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின்றீமை ஒற்றுமைபற்றி உடையார் மேற்றாயது, பின் அவரோடு செய்த நட்பின்மேற்று யிற்று. அதிகாரமுறைமை கூறுமையே விளங்கும்.

க. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(பரி-ரை) எ-து,—காதன்மிகுதியாற் பருகுவார் போன்றாராயினுந் தீக்குணமுடையார் நட்பு வளர்தலிற் றேய்தல் நன்று, எ-று.

"பருகு வன்ன வருகா நோக்கமொடு" என்றார் பிறரும். நற்குணமில்லாரெனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தியான் வந்தது. பெருகினால் வருங்கேடு குன்றினால் வாராமையின், குன்றலினிதென்றார். இதனாற் றீநட்பினது ஆகாமை பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(தெ-ப-ரை)—பருகுவார் போலினும்-(ஆசைமிகுதியால்) உண்பவர் போன்றாராயினும், பண்பு இலார் - குணமிலாரது, [தீக்குணமுடையவரது என்றபடி,] கேண்மை - நட்பானது, பெருகலின் - வளர்தலினும், குன்றல் - குறைதல், இனிது - நல்லது.

**811.** The decrease of friendship with those who look as if they would eat you up (through excess of love) while they are really destitute of goodness is far better than its increase.

---

உ. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

(பரி-ரை.) எ-து,—தமக்குப் பயனுள்வழி நட்புச்செய்து அஃதில்வழி யொழியும் ஒப்பிலாரது நட்பினை பெற்றால் ஆக்கமியாது? இழந்தாற் கேடியாது? எ-று.

தமக்குற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தமிலராகலின், அவரை ஒப்பிலாரென்றார். அவர்மாட்டு நொதுமற்றன்மையே அமையு மென்பதாம்.

(தெ-ப-ரை.)—உறின் - (தமக்குப்பயன்) உள்ளவிடத்து, நட்டு - சிநேகித்து, அறின் - (அது) இல்லாவிடத்து, ஒரூஉம் - ஒழியும், ஒப்பு இலார் - ஒப்பில்லாதவரது, கேண்மை - சிநேகத்தை, பெறினும்-பெற்றாலும், (என்) - (செல்வம்) யாது, இழப்பினும் - இழந்தாலும், என் - (கேடு) யாது.

**812.** Of what avail is it to get or lose the friendship of those who love when there is gain and leave when there is none.

---

ங. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

(பரி-ரை.) எ-து,—நட்பளவு பாராது அதனால்வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும், கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக்கொள்ளும் பொதுமகளிரும், பிறர்கேடு நோக்காது அவர்சோர்வு நோக்குங் கள்வரும், தம்முளொப்பர், எ-று.

நட்பு—ஆகுபெயர். பொருளையேகுறித்து வஞ்சித்தொழுகலின், கணிகையர் கள்வ ரென் றிவரோ டொப்பரென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானுந் தமக்குறுவது பார்ப்பார் நட்பின்றீமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உறுவது - (நட்பளவுபாராமல் அதனால்) வரும் பிரயோசனத்தளவு, சீர்தூக்கும்-பார்க்கும், நட்பும் - நட்

பினரும், பெறுவது - (கொடுப்பாரைக் கொள்ளாமல்) விலையை, கொள்வாரும் - கொள்ளும் வேசையரும், கள்வரும் - (பிறர் கேடுநோக்காது அவர்சோர்வுபார்க்கும்) கள்வரும், நேர் - (தம்முள்) ஒப்பர்.

**813.** Friends who calculate the profits (of their friendship), prostitutes who are bent on obtaining their gains, and thieves are (all) of the same character.

---

ச. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னர்
தமரிற் றனிமை தலை.

(பரி - ரை.) எ-து,—அமர் வாராதமுன்னெல்லாந் தாங்குவதுபோன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போங் கல்வியில்லாத புரவிபோல்வாரது தமர்மையில் தனிமை சிறப்புடைத்து, எ-று.

கல்லாமை-கதியைந்தும் சாரிபதினெட்டும் பொருமுரணுற்றலும் அறியாமை. துன்பம் வாராதமுன்னெல்லாந் துணையாவார்போன்று வந்துழி விட்டு நீங்குவரென்பது உவமையாற் பெற்றும். அவர் தமரானல் வருமிறுதி தனியானல் வாராமையின், தனிமையைத் தலையென்றுர்: எனவே, அதுவுந் தீதாதல் பெறுதும்.

(தெ-ப-ரை.)—(முன்னெல்லாந் தாங்குவதுபோ லிருந்து) அமரகத்து-போர்வந்தவிடத்து, ஆற்று அறுக்கும்-போர்க்களத்திலே தள்ளிவிட்டுப்போகின்ற, கல்லா-கல்வியில்லாத, மா அன்னர் - குதிரைபோல்பவரது, தமரின் - தமராந் தன்மையினும், தனிமை - தனியாயிருத்தலே, தலை - சிறப்புடைத்து.

**814.** Solitude is more to be desired than the society of those who resemble the untrained horses which throw down (their riders) in the field of battle.

---

ரு. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

(பரி-ரை.) எ-து,—செய்துவைத்தாலும் அரணுகாத கீழ்மக்களது தீநட்பு ஒருவற் குண்டாதலின் இல்லையாதல் நன்று, எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற்றெக்கது. அரணுகாமை-தொலைவின்கண் விட்டு நீங்குதல். எய்தலினெய்தாமை நன்றென்பதற்கு மேலுரைத்தாங் குரைக்க. சாராதவென்னும் பெயரெச்சம் கேண்மையென்னும் பெயர்கொண்டது; சிறியவரென்பதனைக் கொள்ளின், செய்தென்பது நின்று வற்றும். இவையிரண்டுபாட்டானுந் தொலைவிற் றுணையாகாத நட்பின் தீமை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—செய்து - செய்துவைத்தாலும், ஏமம் சாரா - காவலாகாத, சிறியவர் - கீழ்மக்களது, புல் கேண்மை - தீநட்பு, எய்தலின் - (ஒருவனுக்கு) உண்டாதலினும், எய்தாமை - இல்லாதிருத்தல், நன்று - நல்லது.

**815.** It is far better to avoid than to contract the evil friendship of the base who cannot protect (their friends) even when appointed to do so.

---

சு. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

(பரி - ரை.) எ-து,—அறிவிலானது மிகச்செறிந்த நட்பின் அறிவுடையானது பகைமை கோடிமடங்கு நன்று, எ-று.

கெழீஇயவென்பத னிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான்பகைமை ஒருதீங்கும் பயவாமையானும், பேதை நட்பு எல்லாத்தீங்கும் பயத்தலானும், கோடியுறுமென்றார். பெருங்கழிநட்பென்று பாடமோதுவாருமுளர்.

(தெ - ப - ரை.)—பேதை - அறிவில்லாதவனது, பெருங்கெழீஇ நட்பின்-மிகநெருங்கிய நட்பைப்பார்க்கிலும், அறிவுடையார் - அறிவுடையவரது, ஏதின்மை - பகைமை, கோடி உறும்-கோடிப்பங்கு நல்லது.

**816.** The hatred of the wise is ten-million times more profitable than the excessive intimacy of the fool.

---

எ. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

(பரி - ரை.) எ-து,—தாமறிதல் வகையராகாது நகுதல் வகையராதற்கேதுவாகிய நட்பான் வருவனவற்றின் பகைவரான் வருவன பத்துக்கோடிமடங்கு நல்ல, எ-று.

நட்பு—ஆகுபெயர். அந்நட்பாவது விடமருந் தூர்த்தரும் வேழம்பரும் போன்று பலவகையா னகுவித்துத் தாம் பயன்கொண் டொழிவாரோடு உளதாயது. பகைவராலென்பது அவாய்நிற்றலின், வருவனவென்பது வருவிக்கப்பட்டது. பத்தடுத்தகோடி - பத்தாகத்தொகுத்தகோடி. அந்நட்பான் வருமின்பங்களின் அப்பகைவரான் வருந்துன்பங்கள் இறப்பநல்லவென்பதாம். இதற்குப் பிறசொல்லாஞ் சொல்லிலக்கணத்தோடு மாறுகொள வுரைத்தார்.

(தெ - ப - ரை.)—நகைவகையர் ஆகிய - (தாம் அறிதல்வகையராதற்கல்லாமல்) நகுதல்வகையராதற்கு ஏதுவாகிய, நட்பின் - நட்பால் (வருமவைகளின்), பகைவரால்-பகைவரால் (வருபவை), பத்தடுத்தகோடி - பத்துக்கோடிமடங்கு, உறும்-நல்லவையாம்.

**817.** What comes from enemies is a hundred-million times more profitable than what comes from the friendship of those who cause only laughter.

---

அ. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

(பரி-ரை.) எ-து,—தம்மான் முடியுங் கருமத்தை முடியாதாக்கிச்செய்யா தாரோடு கொண்ட நட்பினை அது கண்டால் அவரறியச்சொல்லாதே சோர விடுக, எ-று.

முடியாதாக்குதல் - முடியாதாக நடித்தல். சோரவிடல் - விடுகின்றவாறு தோன்றாமல் ஒருகாலைக்கொருகா லோயவிடுதல். அறியச்சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது பரிகரித்துப் பின்னு நட்பாயொழுகக் கருதுவராகலின், சொல்லாடாரென்றுஞ் சோரவிடலென்றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் முறையே பேதையார், நகுவிப்பார், இயல்வது செய்யா தாரென்றிவர்க ணட்பின் தீமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஒல்லும் கருமம் - (தம்மாலே) முடியுந் தொழிலை, உடற்றுபவர்-முடியாதாகச் செய்பவரோடு கொண்ட, கேண்மை - நட்பை, (அதுகண்டால்) சொல்லாடார் - (அதை அவரறிய) சொல்லாமல், சோரவிடல் - தளரவிடக்கடவர்.

**818.** Gradually abandon without revealing (beforehand) the friendship of those who pretend inability to carry out what they (really) could do.

---

௯. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

(பரி - ரை.) எ-து,—வினையுஞ்சொல்லு மொவ்வாது வேறுவேறா யிருப்பார் நட்பு நனவின்கண்ணேயன்றிக் கனவின்கண்ணு மின்னாது, எ-று.

வினை சொற்களதொவ்வாமை முதன்மே லேற்றப்பட்டது. அஃதாவது வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்தல். நிகழ்வின்கண் உளதா யிருத்தலால், கனவினு மின்னாதென்றார். உம்மை எச்சவும்மை: இழிவு சிறப்பும்மையுமாம். மன்னும் ஓவும் அசைநிலை.

(தெ-ப-ரை.)—வினைவேறு - தொழில்வேறு, சொல்வேறு- பேச்சுவேறு, பட்டார் - பட்டவரது, தொடர்பு - நட்பு, கனவினும் - (நனவிலே மாத்திரமல்லாமல்) கனவிலும், இன்னாது - துன்பஞ் செய்வதாகும்.

**819.** The friendship of those whose actions do not agree with their words will distress (one) even in (one's) dreams.

---

௧௦. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

(பரி - ரை.) எ-து,—தனியே மனைக்கணிருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்க ணிருந்துழிப் பழிகூறுவார்நட்பு சிறிதாயினுந் தம்மை நணுகுதலைப் பரிகரிக்க, எ-று.

மனைக்கட் கெழுமலும் மன்றின்கட் பழித்தலுந் தீதாகலின், அவர் ஒருகா லுந் தம்மை நணுகாவகை குறிக்கொண்டு காக்கவென்பார், அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் வஞ்சர்நட்பின் தீமை கூறப் பட்டது.

(தெ - ப - ரை.)—மனை - வீட்டிலே (தனித்திருந்தபோது) கெழீஇ-நட்பாடி, மன்றில்-சபையிலே (பலருடனிருந்தபோது), பழிப்பார் - பழிசொல்வோரது, தொடர்பு - நட்பு, எனைத்தும் - எவ்வளவு சிறிதாயினும், குறுகுதல் - (தம்மை) சேர்தலை, ஓம்பல் - பரிகரிக்கக்கடவர்.

**820**. Avoid even the least approach to a contraction of friendship with those who would love you in private but ridicule you in public.

---

## அ௯ - ம். அதி. கூடாநட்பு.

இனி யேனைக் கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடியொழுகுவார் நட்பு.

க. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(பரி - ரை.) எ-து,—கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையுங்கூடி யொழுகுவார்நட்பு அது பெற்றால், அறவெறிதற்குத் துணையாய பட்டடையாம், எ-று.

எறியுமெல்லை வாராமுனெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து வந்துழி அறவெறிவிப்பதாய பட்டடைக்கும் அத்தன்மைத்தாய நட்பிற்குந் தொழிலொப்புமை யுண்மையான், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக வுபசரித்தார். நேர்விடமென்று பாடமோதி முடிவிடமென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—நேரா - கூடாதிருந்தே, நிரந்தவர் - (வாய்க்குமிடம் காணுமளவும்) புறத்திற்கூடி நடப்பவரது, நட்பு - சிநேகம், சீர் இடம் - வாய்க்குமிடத்தை, காணின் - கண்டால், எறிதற்கு - (அற) வெறிதற்குத் (துணையாகிய), பட்டடை - பட்டடையாம்.

**821**. The friendship of those who behave like friends without inward affection is a weapon that may be thrown when a favourable opportunity presents itself.

---

உ. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம் போல வேறுபடும்.

(பரி-ரை.) எ-து,—தமக் குற்றார்போன்று உறாதாரோடு உளதாய நட்பு இடம்பெற்றாற் பெண்பாலார் மனம்போல வேறுபடும். எ-று.

அவர்மனம் வேறுபடுதல் "பெண்மனம் பேதின் றொருப்படுப் பேனென்னு மெண்ணி லொருவன்" என்பதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது பழைய பகையேயாதல். இவை யிரண்டுபாட்டானுங் கூடாநட்பினது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இனம்போன்று - (தமக்கு) உற்றவர்போன்று, இனம் அல்லார் - உறாதவரோடு உண்டாகிய, கேண்மை - நட்பானது, (இடம்பெற்றால்) மகளிர் - பெண்பாலார், மனம்போல - மனதைப்போல, வேறுபடும் - மாறும்.

**822.** The friendship of those who seem to be friends while they are not, will change like the love of women.

---

௩. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

(பரி - ரை.) எ-து,—நல்லன பலநூல்களைக் கற்றவிடத்தும் அதனான் மனந்திருந்தி நட்பாதல் பகைவர்க் கில்லை, எ-று.

நல்லன - மனக்குற்றங்கெடுப்பன. மனநல்லரெனச் சினைவினை முதன்மேனின்றது. நல்லராகுதல் - செற்றம் விடுதல். உள்ளே செற்றமுடையாரைக் கல்வி யுடைமைபற்றி நட்பென்று கருதற்க வென்பதாம்.

(தெ - ப - ரை.)—நல்ல - நல்லவையாகிய, பல - பலநூல்களை, கற்றக்கடைத்தும் - கற்றவிடத்தும் (அதனால்), மனம் நல்லர் ஆகுதல் - மனந்திருந்தி நட்பினராகுதல், மாணார்க்கு - பகைவர்க்கு, அரிது - இல்லை.

**823.** Though (one's) enemies may have mastered many good books, it will be impossible for them to become truly loving at heart.

---

௪. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(பரி - ரை.) எ-து,—கண்டபொழுது முகத்தால் இனியவாச் சிரித்து எப்பொழுதும் மனத்தா லின்னாராய வஞ்சரை அஞ்சல்வேண்டும், எ-று.

நகையது வகைபற்றி இனியவென்றும், அகத்துச் செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகையைப் புறத்துவிளைத்தலின் வஞ்சரென்றும், அச்செற்றங் குறிப்பறிதற் கருவியாய முகத்தானுந் தோன்றாமையின் அஞ்சுதல் செய்யப்படுமென்றுங் கூறினார். இவை யிரண்டேட்டானுங் குற்றத்திற் கேதுவாய அவர் கொடுமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(கண்டபோது) முகத்தின் - முகத்தால், இனிய - இனிமையுள்ளனவாக, நகா - சிரித்து, அகத்து - மனத்தால், இன்னா - (எப்பொழுதும்) இனியராகாத, வஞ்சரை - வஞ்சகரை, அஞ்சப்படும் - அஞ்சல்வேண்டும்.

**824.** One should fear the deceitful who smile sweetly with their face but never love with their heart.

---

௫. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(பரி - ரை.) எ-து,—மனத்தாற் றம்மொடு மேவாதாரை யாதொரு கருத்தினுஞ் சொல்லாற் றெளிதன்முறைமைத் தன்றென்று சொல்லும் நீதிநூல், எ-று.

நீதிநூலென்பது அவாய்நிலையான் வந்தது. பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லைச் செவ்விய சொல்லெனக் கருதி அவரைக் கருமங்களிற்றெளிதல் நீதிநூன்முறைமை யன்றென்பதாம்.

(தெ-ப-ரை.)—மனத்தின் - மனத்தால், அமையாதவரை - (தம்மோடு) பொருந்தாதவரை, எனைத்து ஒன்றும் - யாதொரு கருமத்திலும், சொல்லினல் - (அவர்பேசும்) பேச்சினல், தேறல் பாற்று - தெளிதன் முறைமையது, அன்று - அல்ல (என்று நீதிநூல் சொல்லும்.)

**825.** **In nothing whatever is it proper to rely on the words of those who do not love with their heart.**

---

சு. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

(பரி-ரை.) எ-து,—நட்டார்போன்று நன்மைபயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும் பகைவர்சொற்கள் அது பயவாமை அச்சொல்லியபொழுதே யறியப்படும், எ-று.

சொல்லினுமெனவே, சொல்லாமையே பெற்றும். ஒட்டாராதலாற் றீமை பயத்தல் ஒருதலையென்பார், ஒல்லை யுணரப்படு மென்றார்.

(தெ-ப-ரை.)—நட்டார்போல் - நட்பினர்போல, நல்லவை- நன்மையைத்தருஞ் சொற்களை, சொல்லினும் - சொன்னாலும், ஒட்டார்சொல் - பகைவர்சொற்கள், (அதுதாராமை), ஒல்லை - விரைவிலே (சொல்லியபொழுதே யென்றபடி), உணரப்படும் - அறியப்படும்.

**826.** **Though (one's) foes may utter good things as though they were friends, one will at once understand (their evil) import.**

---

எ. சொல்வணக்கமொன்னர்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

(பரி - ரை.) எ-து,—வில்லினது வணக்கம் ஏற்றவர்க்குத் தீமைசெய்தலைக் குறித்தமையால் பகைவர்மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மைசெய்தலைக் குறித்ததென்று கருதற்க, எ-று.

தம்வணக்க மன்றென்பது தோன்றச் சொல்வணக்கமென்றும், வில்வணக்கம் வேறுயினும் வணங்குத லொப்புமைபற்றி அதன்குறிப்பை யேதுவாக்கியுங் கூறினர். வில்லியதுகுறிப்பு அவனிறுய வில்வணக்கத்தின்மே னிற்றலான், ஒன்னாது குறிப்பும் அவரிறுய சொல்வணக்கத்தின்மேலதாயிற்று. இதுவுந் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டஞ்சிக் காக்கவென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அவரைச் சொல்லாற் றெளியற்கவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வில்வணக்கம் - வில்லினது வணக்கம், தீங்கு குறித்தமையான் - (ஏற்றவர்க்குத்)தீமைசெய்தலைக் குறித்தமையால், ஒன்னார்கண் - பகைவரிடத்தே (பிறக்கும்), சொல்வணக்கம் - சொல்லினது வணக்கத்தையும், கொள்ளற்க - (நமக்கு நன்மைசெய்தலைக் குறித்ததென்று) நினையாதிருக்கக்கடவர்.

**827.** Since the bending of the bow bespeaks evil, one should not accept (as good) the humiliating speeches of one's foes.

---

அ. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து.

(பரி-ரை.) எ-து,—ஒன்னார் குறிப்பையுணர வல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும் அவரழுத கண்ணீரும் அவ்வாறே அது மறைந்திருத்தற் கிடனும், எ-று.

தாம் நட்பென்பதனைத் தங்கையாலுங் கண்ணானுந் தேற்றிப் பின் கோறற்கு வாங்கவிருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வுழித் தேற்றுகின்றபொழுதே அவற்றுள்ளே தோன்றுமென்பார், ஒடுங்குமென்றார். பகைவர் தம்மென்மை காட்டித் தொழினுமழினும், அவர்குறிப்பையே நோக்கிக் காக்கவென்பதாம். இதனால் அவரைச் செயலாற் றெளியற்கவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(பகைவர்குறிப்பை அறியவல்லவர்க்கு) ஒன்னார் - பகைவர், தொழுத கையுள்ளும் - கும்பிட்ட கையுள்ளும், படை - ஆயுதமானது, ஒடுங்கும்-மறைந்திருக்கும்; அழுத கண்ணீரும் - (அவர்) அழுதகண்ணீரும், அனைத்து - அப்படியே அதுமறைந்திருத்தற்கு இடமாம்.

**828.** A weapon may be hid in the very hands with which (one's) foes adore (him); (and) the tears they shed are of the same nature.

---

௯. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(பரி-ரை.) எ-து,—பகைமை தோன்றாமற் புறத்தின்கண் நட்பினை மிகச் செய்து அகத்தின்கட் டம்மையிகழும் பகைவரைத் தாமும் அந்நட்பின்கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும்வண்ணஞ் செய்து அகத்தின்கண் அது சாம் வண்ணம், பொருந்தற்பான்மை யுடைத்து அரசநீதி, எ-று.

நின்றென்பதூஉம் அரசநீதியென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. அகனென்று புறனென்றுதல் ஒருவற்குத் தகாதெனினும் பகைவர் மாட்டாயிற் றகுமென்பது நீதிநூற்றுணிபென்பார், அதன்மேல்வைத்துக் கூறினர். சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது, "கோட்டின்வாய்ச்சாக்குத்தி" என்புழிப்போல. எள்ளுவாரைப் புல்லலெனக் கூட்டுக.

(தெ - ப - ரை.)—(அரசநீதியானது) மிகச்செய்து - (புறத்திலே நட்பை) மிகச்செய்து, தம் எள்ளுவாரை - (உள்ளே)தம்

மை இகழும்பகைவரை, நட்பினுள் - (தாமும்) அந்நட்பினிடத்தே நின்று, நகச்செய்து - (புறத்திலே அவர்) மகிழும்படிசெய்து, சாப் புல்லல் பாற்று - (உள்ளே அது) சாம்படிக்குப் பொருந்துந் தன்மை யுடைத்து.

**829.** It is the duty of kings to affect great love but make it die (inwardly,) as regard those foes who shew them great friendship but despise them (in their heart).

---

௩௦. பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

(பரி-ரை.) எ-து,—தம்பகைவர் தமக்கு நட்டாரா யொழுகுங்காலம் வந்தால் தாமும் அவரோடு முகத்தால் நட்புச்செய்து அகத்தால் அதனைவிட்டுப் பின் னதுவுந் தவிர்க, எ-று.

அக்காலமாவது தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்கலாகாத வளவு. இதனானே ஆமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றும். இவை யிரண்டுபாட்டானும் அந்நட்பிடை யொழுகுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பகை - (தம்) பகைவர், நட்பு ஆம் காலம்- நட்பினராய் நடக்குங்காலம், வருங்கால் - வரும்போது, முகம்- (தாமும்) முகத்தால், நட்டு - (அவரோடு) நட்புச்செய்து, அகம்- மனத்தால், நட்பு - சிநேகத்தை, ஒரீஇ - நீங்கி, விடல் - (பின் அதையும்) விடக்கடவர்.

**830.** When one's foes begin to affect friendship, one should love them with one's looks, and, cherishing no love in the heart, give up (even the former).

---

## அசு - ம். அதி. பேதைமை.

இனி அந்நட்பினை யெதிர்மறுத்துப் பகைமுகத்தாற் கூறிய தொடங்கினர். அப்பகைதான் முற்றக்கடியுங் குற்றமன்மையி னுளவாய வெகுளியானுங் காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் காமத்தான் வருவன ஐந்ததிகாரத்தானுங் கூறுவார், அவ்விரண்டற்கும் அடியா யமயக்கத்தை இருவகைப்படுத்து, இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட்பேதைமை கூறுகின்றார். அஃதாவது யாதுமறியாமை.

௧. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம்போக விடல்.

(பரி-ரை.) எ-து,—பேதைமையென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு ஏனைக்குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதொன்று; அதுதான் யாதென்று வினவின், தனக்குக்கேடு பயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல், எ-று.

கேடு - வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம் - செல்வம், புகழ், அறங்கள். தானே தன்னிருமையுங் கெடுத்துக்கோடலென்பதாம்.

(தெ - ப - ரை.)—பேதைமை என்பது - பேதைமையென்று சொல்லப்படுவது, ஒன்று - (மற்றைக் குற்றங்களிளெல்லாம் மிகுந்தது) ஒன்று, யாது எனின் - (அது) யாதென்று வினவினால், ஏதம் கொண்டு - (தனக்கு) கேடு தருமவைகளைக் கைக்கொண்டு, ஊதியம் - ஆக்கந்தருமவைகளை, போகவிடல் - கைவிடுதல்.

**831.** Folly is one (of the chief defects); it is that which (makes one) incur loss and forego gain.

---

உ. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்குப் பேதைமை யெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது தனக்காகாத ஒழுக்கத்தின்கட் காதன்மை செய்தல், எ-று.

இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் பேதைமையதிலக்கணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(ஒருவனுக்கு) பேதைமையுள் எல்லாம் - பேதைமை யெல்லாவற்றுள்ளும், பேதைமை - மிகுந்த பேதைமையாவது, கை அல்லதன்கண் - (தனக்கு) ஆகாத செய்கையில், காதன்மை - ஆசையை, செயல் - செய்தலாம்.

**832.** The greatest folly is that which leads one to take delight in doing what is forbidden.

---

௩. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(பரி-ரை.) எ-து,—நாணவேண்டுமவற்றுக்கு நாணாமையும் நாடவேண்டுமவற்றை நாடாமையும் யாவர்மாட்டும் முறிந்தசொற்செயலுடைமையும் பேணவேண்டுமவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும் பேதையது தொழில், எ-று.

நாணவேண்டுமவை-பழி பாவங்கள். நாடவேண்டுமவை-கருமங்களிற் செய்வன தவிர்வன. முறிதல்-கண்ணறுதல். பேணவேண்டுமவை-குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கமுதலாயின. இவை பேதைக்கு எஞ்ஞான்று மியல்பாய் வருதலின், தொழிலென்றார்.

(தெ - ப - ரை.)—நாணாமை - (நாணவேண்டு மவைகளுக்கு) நாணாமையும், நாடாமை - (நாடவேண்டுமவைகளை) நாடாமையும், நார் இன்மை - (யாவரிடத்திலும்) முறிந்த சொற்செயலுடைமையும், யாது ஒன்றும் - (பேணவேண்டு மவைகளுள்)

யாதொன்மையும், பேணமை - பேணமையும், பேதை தொழில்- மூடனது தொழில்களாம்.

**833.** Shamelessness, indifference (to what must be sought after), harshness, and aversion for everything (that ought to be desired) are the qualities of the fool.

---

௪. ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(பரி - ரை.) எ-து,—மனமொழிமெய்க ளடங்குதற்கேதுவாய நூல்களை யோதியும், அவ்வடக்கத்தான் வரும் பயனை யுணர்ந்தும், அதனை யறியுமாறு பிறர்க்குரைத்தும், தான் அவையடங்கி யொழுகாத பேதைபோல பேதையார் உலகத்தில்லை, எ-று.

உம்மை மூன்றுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றாற் றீராமையானும், வேற்றுமருந்தின்மையானும், பேதையிற் பேதையா ரில்லென்றார். இவை யிரண்டோட்டானும் பேதையது தொழில் பொதுவகை யாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(தெ-ப-ரை.)—ஓதி - (மனமொழிமெய்கள் அடங்குதற்கு ஏதுவாகிய நூல்களை) ஓதியும், உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால் வரும் பயனை) அறிந்தும், பிறர்க்கு - மற்றவர்களுக்கு, உரைத்தும் - (அதனை அறியும்படி) சொல்லியும், தான் அடங்கா - தான் (அவை) அடங்கிநடவாத, பேதையின் - மூடன்போல, பேதையார் - மூடர், இல் - (உலகில்) இல்லை.

**834.** There are no greater fools than he who, though he has read and understood (a great deal) and even taught it to others, does not walk according to his own teaching.

---

௫. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

(பரி-ரை.) எ-து,—பேதையாயினன் வரும் பிறவிகளெல்லாந் தான்புக் கழுந்தும் நிரயத்தினை இவ்வொரு பிறப்புள்ளே செய்துகொள்ள வல்லனும், எ-று.

எல்லாப்பிறப்பும் ஏழாயடங்குதல் அறியப்பட்டமையின், முற்றும்மை கொடுத்தார். அழுந்துதற்கிடனாய நிரயம் ஈண்டைப்பிறப்புக்களினுங் கொடு வினைவயத்தால் அந்நிரயத்துன்பமே யுழந்துவருதலின், எழுமையுந் தான்புக் கழுந்து மளறென்றார். முடிவில் காலமெல்லாம் தான் நிரயத்துன்ப முழத்தற் கேதுவாங் கொடுவினைகளையேயறிந்து சிலகாலத்துள்ளே செய்துகோடல் பிறர்க் கரிதாகலின், ஆற்றுமென்றார். இதனான் அவன் மறுமைச்செயல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பேதை - மூடனானவன், எழுமையும் - (வரும்) எழுவகைப் பிறவிகளிலெல்லாம், தான் புக்கு - தான் புகுந்து, அழுந்தும் - அழுந்துதற்கிடமாகிய, அளறு-நரகத்தை, ஒருமை - இவ் வொருபிறப்புள்ளே, செயல் ஆற்றும் - செய்து கொள்ள வல்லவனாவான்.

**835.** **A fool can procure in a single birth a hell into which he may enter and suffer through all the seven births.**

---

௬. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

(பரி-ரை.) எ-து,—செய்யுமுறைமை யறியாதபேதை ஒருகருமத்தை மேற்கொள்வனாயின், அதுவும் புரைபட்டுத் தானுந் தளைபூணும், எ-று.

புரைபடுதல்-பின் ஆகாவகை உள்ளழிதல். ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். அதனையுங்கெடுத்துத் தானுங்கெடுமென்பதாம். இதனால் அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கை அறியா - செய்யுமுறைமையறியாத, பேதை - மூடனானவன், வினை - ஒருதொழிலை, மேற்கொளின்- மேற்கொள்ளுவானாயின், பொய்படும் - (அதுவும்) புரைபடும், ஒன்றோ - (அது) ஒன்றுதானோ, புனை பூணும் - (தானும்) தளை பூணும்.

**836.** **If the fool who knows not how to act undertakes a work, he will (certainly) fail. (But) is it all? He will even adorn himself with fetters.**

---

௭. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(பரி-ரை.) எ-து,—பேதையாயினான் பெரியசெல்வத்தைத் தெய்வத்தா னெய்தியவழி, தன்னோடு உரிமையுமில்லாதார் நிறைய, எல்லாவியைபுமுடைய தமராயினார் பசியாநிற்பர், எ-று.

எல்லா நன்மையுஞ் செய்துகோடற் கருவியென்பது தோன்றப் பெருஞ்செல்வமென்றும், அதனைப் படைக்கு மாற்றலில்லாமை தோன்ற உற்றக்கடையென்றும், எல்லாம் பெறுதறோன்ற ஆரவென்றும், உணவும் பெறாமை தோன்றப் பசிப்பவென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—பேதை - மூடனானவன், பெருஞ்செல்வம்- பெரியசெல்வத்தை, உற்றக்கடை - (ஊழால்) அடைந்தவிடத்து, ஏதிலார் - (தன்னோடு) ஒரு சம்பந்தமுமில்லாதவர், ஆர - நிறைய, தமர் - (எல்லாச் சம்மந்தமுமுடைய) தம்மவர், பசிப்பர் - பசியாநிற்பர்.

**837.** **If a fool happens to get an immense fortune, his neighbours will enjoy it while his relations starve.**

---

௮. மையல் லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(பரி-ரை.) எ-து,—பேதையாயினான் தன்கைக்கண்ணே ஒன்றனையுடைமையாகப் பெற்றானாயின், அவன் மயங்குதல் முன்னே பித்தினையுடையானொருவன் அம்மயக்கத்தின்மேலே மதுவுண்டு மயங்கினாற்போலும், எ-று.

பெறினெனவே, தெய்வத்தானன்றித் தன்னாற்பெறுமை பெற்றாம். பேதைமையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன் செய்வன மையலும் மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோற் றலைதடுமாறு மென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவன் செல்வமெய்தியவழிப் பயன் கொள்ளுமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பேதை - மூடனானவன், தன்கை - தன் கையில், ஒன்று - ஒருபொருளை, உடைமைபெறின் - உடைமையாகப் பெற்றானாயின், மையல் ஒருவன் - பித்தினையுடைய ஒருவன், களித்தற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டு மயங்கியதுபோலும்.

**838.** A fool happening to possess something is like the intoxication of one who is (already) giddy.

---

௯. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

(பரி - ரை.) எ-து,—பின் பிரிவுவந்துழி அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை; ஆகலாற் பேதையாயினார் தம்முட்கொண்ட நட்பு மிகவினிது, எ-று.

காடோறுந்தேய்ந்து வருதலின், துன்பந்தாராதாயிற்று. புகழ்வார்போன்று பழித்தவாறு. இதனால் அவரது நட்பின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பிரிவின்கண் - (பின்) பிரிவு வந்தவிடத்து, (அப்பிரிவு) தருவது - (இருவருக்கும்) தருவதாகிய, பீழை ஒன்று - துன்ப மொன்று, இல் - இல்லை, (ஆதலால்), பேதையார் கேண்மை - பேதையாயினார் (தம்முட்கொண்ட) நட்பு, பெரிது இனிது - மிகவுமினிது.

**839.** The friendship between fools is exceedingly delightful (to each other); for at parting there will be nothing to cause them pain.

---

௪0. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

(பரி-ரை.) எ-து,—சான்றோரவையின்கட் பேதையாயினான் புகுதல் தூயவல்ல மிதித்தகாலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற்போலும், எ-று.

கழுவாக்காலென்பது இடக்கரடக்கு. அதனால் அவ்வமளியும் இழிக்கப்படுமாறுபோல இவனால் அவ்வவையும் இழிக்கப்படுமென்பதாம். இதனால் அவன் அவை யிடை யிருக்குமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சான்றோர் - பெரியோரது, குழாத்து - சபையினிடத்து, பேதை-மூடனானவன், புகல்-புகுதல், கழாஅக்கால் - கழுவாதகாலை, (அசுத்தமிதித்தித்த காலையென்றபடி),

பள்ளியுள் - (இன்பந்தரும்) சயனத்தின்மேல், வைத்தற்று - வைத்தல்போலும்.

**840.** The appearance of a fool in an assembly of the learned is like placing (one's) unwashed feet on a bed.

---

## அ௫ - ம். அதி. புல்லறிவாண்மை.

இனி ஏனைப்புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லியவறிவினையாடற் றன்மையென விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற் கொள்ளாமை.

க. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்கவில்லாமையாவது அறிவில்லாமை ; மற்றைப்பொரு ளில்லாமையோவெனின், அதனை அப்பெற்றித்தாய இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார், எ-று.

அறிவென்பது ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின்மேனின்றது. புல்லறிவாளர் செல்வமெய்தியவழியும் இம்மை மறுமைப்பயனெய்தாமையின் அதனை இன்மையுளின்மையென்றும், நல்லறிவாளர் வறுமையெய்தியவழியும் அஃதிழவாமையின் அதனை இன்மையா வையாதென்றுங் கூறினார். இதனாற் புல்லறிவினது குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இன்மையுள் - (ஒருவனுக்கு) இல்லாமை பலவுள்ளும், இன்மை - மிகுந்த இல்லாமையாவது, அறிவு இன்மை - அறிவில்லாமை; பிறிது இன்மை - மற்றைப் பொருளில்லாமையோவெனின், (அதனை), உலகு - உலகத்தார், இன்மை ஆ - (அப்படிப்பட்ட) இல்லாமையாக, வையாது - கொள்ளார்.

**841.** The want of wisdom is the greatest of all wants; but that of wealth the world will not regard as such.

---

உ. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்.

(பரி-ரை.) எ-து,—புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று, கொடுத்தல் கூடிற்றாயின், அதற்குக் காரணம் பெறுகின்றவ னல்வினையே, வேறொன்று மில்லை, எ-று.

ஒரோவழி நெஞ்சுவந்தீதல் கூடலிற் புல்லறிவாளரும் நல்வினைசெய்ப என்பார்க்குப் பெறுவான் வீழ்பொருளெய்தியான்போல்வதல்லது இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈகின்றானல்லனெனக் கூறியவாறு. கூடிற்றாயின் அதற்குக்காரணமென்னுஞ் சொற்கள் அவாய் நிலையான் வந்தன. இதனால் அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தலறியாமை கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—அறிவு இலான்-புல்லறிவுடையவன், நெஞ்சு உவந்து - மனமகிழ்ந்து, ஈதல் - (ஒருவனுக்கு ஒன்று) கொடுத்தல், (கூடியதாயின் அதற்குக்காரணம்), பெறுவான்-பெறுகின்றவனது, தவம் - நல்வினையே, பிறிது யாதும் இல்லை - வேறொன்றும் இல்லை.

**842.** (The cause of) a fool cheerfully giving (something) is nothing else but the receiver's merit (in a former birth.)

---

௩. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

(பரி-ை.) எ-து,—புல்லறிவுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம் அது செய்தற்குரியராய தம்பகைவர்க்குஞ் செய்தலரிது, எ-று.

பகைவர் தாம் அறிந்ததொன்றனைக் காலம்பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவமுதலிய பலவற்றையும் எக்காலத்துஞ் செய்யமாட்டாமையின், அவர்க்குஞ் செய்தலரிதென்றார். இதனால் அவர்தம்மாட்டுந் தீயன செய்தலறிவொன்பது கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—அறிவு இலார் - புல்லறிவுடையவர், தாம் - தாமே, தம்மை - தங்களை, பீழிக்கும் - வருத்தும், பீழை - வருத்தமானது, செறுவார்க்கும் - (வருத்துதற்குரிய) பகைவர்க்கும், செய்தல் அரிது - செய்தலரிதாம்.

**843.** The suffering that fools inflict upon themselves is hardly possible even to foes.

---

௪. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

(பரி-ை.) எ-து,—புல்லறிவுடைமை யென்றுசொல்லப்படுவது யாதென்று வினவின், அது தம்மைத்தாமே யாம் நல்லறிவுடையமென்று நன்குமதிக்கும் மயக்கம், எ-று.

வெண்மையாவது அறிவுமுதிராமை. ஒண்மையெனக் காரியப்பெயர் காரணத்திற் காயிற்று. உலகத்தாரிகழ்தல் அறிந்துவைத்தும் அவ்வாறு மதித்தலான், மயக்கமென்றார்.

(தெ-ப-ை.)—வெண்மை எனப்படுவது - புல்லறிவுடைமையெனப்படுவது, யாது எனின் - யாதென்றுவினவின், (அது) ஒண்மை உடையம் யாம் - யாம் நல்லறிவுடையோம், என்னும் - என்று (தம்மைத்தாமே) நன்குமதிக்கும், செருக்கு - மயக்கம்.

**844.** What is called want of wisdom is the vanity which says, "We are wise."

---

௫. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

(பரி-ரை.) புல்லறிவாளர் தாங் கல்லாத நூல்களையுங் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல், கசடறக் கற்றதொருநூ லுண்டாயின், அதன் கண்ணும் பிறர்க்கு ஐயத்தை விளக்கும், எ-று.

வல்லதெனை ஏழாவது இறுதிக்கட்டொக்கது. உண்டாயினென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயம் அதுவல்லவொன்பதூஉம் இவ்வாறு கொல்லோ வென்பது.

(தெ-ப-ரை.)—(புல்லறிவாளர்), கல்லாத - (தாம்) கல்லாத நூல்களையும், மேல் கொண்டு - (கற்றவராக) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல் - நடக்குதல், கசடு அற - குற்றமற, வல்லதூம் - கற்றதொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும், ஐயம் - சந்தேகத்தை, தரும் - (பிறருக்கு) விளக்கும்.

**845.** Fools pretending to know what has not been read (by them) will rouse suspicion even as to what they have thoroughly mastered.

---

௬. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

(பரி-ரை.) எ-து,—புல்லறிவாளர் தங்கணிகழுங் குற்றங்களையறிந்து கடியாராயின், ஆடையால் அற்றமறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம், எ-று.

குற்றமறைத்தலாவது அவற்றை இலவாக்குதல். மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றனையே மறைத்து அவ்வளவாற் றம்மையு முலகவொழுக்கினராக மதித்தலும் புல்லறிவென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அவர் தம்மை வியத்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(புல்லறிவாளர்), தம்வயின் - தம்மிடத்து உண்டாகும், குற்றம் - குற்றங்களை, மறையாவழி - (அறிந்து) கடியாராயின், அற்றம்-மறைக்கத்தக்க அவயவத்தை, மறைத்தலோ - (ஆடையால்) மறைத்தவராகத் தம்மை நினைத்தலும், புல் அறிவு - புல்லறிவாம்.

**846.** Even to cover one's nakedness would be folly, if (one's) faults were not covered (by forsaking them.)

---

௭. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(பரி-ரை.) எ-து,—பெறுதற்கரிய உபதேசப்பொருளைப் பெற்றும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன் அவ்வுறுதியறியாமற் றானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளும், எ-று.

சோருமென இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மே னின்றது. மிக்கவருத்தம்-பொறுத்தற்கரிய துன்பங்கள். இனி அருமறைசோருமென்பதற்

ருப் பிறரெல்லாம் உள்ளத்தடக்கப்படும் எண்ணத்தை வாய்சோர்ந்து பிறர்க்குரைக்குமென் றுரைத்தார்: அது பேதைமையென்னும் பேதைமையாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை யறிக.

(தெ-ப-ரை.)—அருமறை - பெறுதற்கரிய உபதேசப் பொருளை, சோரும்-(பெற்றாலும்) உட்கொள்ளாது போக்கும், அறிவு இலான் - புல்லறிவாளன், (அவ்வுறுதி அறியாமையால்) தானே தனக்கு - தனக்குத்தானே, பெருமிறை - மிகுந்த வருத்தத்தை, செய்யும் - செய்துகொள்ளுவான்.

**847.** The fool who neglects precious counsel does, of his own accord, a great injury to himself.

அ. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

(பரி-ரை.) எ-து,—புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாநிற்கவுஞ் செய்யான்; அதுவன்றித் தானாகவும் இவை செய்வனவென்றறியான்; அவ்வுயிர் யாக்கையி னீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கரிய தொருநோயாம், எ-று.

உயிர் தான் உணர்தற்றன்மைத்தா யிருந்தும் நின்ற யாக்கைவயத்தான் மருடற்றன்மைத்தாய் வேறுபடுதலின் அவ்வுயிரென்றும், அதனினீங்கியபொழுதே அதற்கு இரண்டனுளொன்று கூடுதலிற் போமளவுமென்றும், குலமலை முதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ் செய்தலின் ஒருநோயென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—(புல்லறிவாளன்), ஏவவும் - (தனக்கு உறுதியானவைகளை அறிவுடையோர்) சொல்லவும், செய்கலான் - செய்யான்; (அதுவல்லாமல்), தான் - தானாகவும், தேறான் - (இவை செய்பவையென்று) அறியான்; அவ்வுயிர் - அந்த உயிரானது, போம் அளவும் - (உடம்பைவிட்டு) நீங்குமளவும், ஓர் நோய் - (பூமிக்குப் பொறுத்தற்கரிய) ஒருநோயாம்.

**848.** The fool will not perform (his duties) even when advised nor ascertain them himself; such a soul is a burden (to the earth) till it departs (from the body.)

கூ. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

(பரி-ரை.) எ-து,—தன்னை எல்லாமறிந்தானாக மதித்தலாற் பிறரால் ஒன்றறியுந்தன்மை யிலாதானை அறிவிக்கப்புகுவான் அவனாற் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்; இனி அவ்வறியுந்தன்மை யில்லாதான் கொண்டது விடாமையாற் றானறிந்தவாற்றால் அதனை அறிந்தானாய் முடியும், எ-று.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவதன்றென்பதாம்.

(தெ - ப - ரை.)—(தன்னை எல்லாமறிந்தவனாக மதித்தலால்) காணுதான் - (பிறரால் ஒன்றை) அறியுந் தன்மை யில்லாதவனை, காட்டுவான் - அறிவிக்கப்புகுவோன், தான்காணுன் - (அவனாலே பழிக்கப்பட்டு) தான் அறியாதவனுய் முடியும்; காணுதான் - (இனி) அவ்வறியுந்தன்மை யில்லாதவன், (தான் கொண்டது விடாமையால்) தான் கண்ட ஆறு - தான் அறிந்த விதத்தால், கண்டான் ஆம் - (அதனை) அறிந்தவனுய் முடியும்.

**849**. One who would teach a fool will (simply) betray his folly; and the fool would (still) think himself "wise in his own conceit."

---

௫௦. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்தோர் பலரும் உண்டென்ப தோர் பொருளைத் தன் புல்லறிவா னில்லையென்று சொல்லுவான் மகனென்று கருதப்படான்; வையத்துக் காணப்படுவதோர் பேயென்று கருதப்படும், எ-று.

கடவுளும் மறுபிறப்பும் இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேறுஞ் சாதிபற்றி உண்டென்பதென்றும், தானே வேண்டியகூறலால் ஒப்படும் வடிவால் ஒவ்வாமையு முடைமையிற் றன்யாக்கை கரந்து மக்கள்யாக்கையுட்டோன்றுதல்வல்ல அலகையென்றுங் கூறினர். இவை நான்குபாட்டானும் உறுதிச்சொற் கொள்ளாமையது குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—உலகத்தார் - உயர்ந்தோர்பலராலும், உண்டு என்பது - உண்டெனப்படுகிற பொருளை, இல் என்பான் - (தன்புல்லறிவால்) இல்லையென்று சொல்லுவோன், (மனிதனென்று நினைக்கப்படான்), வையத்து - பூமியிலே, அலகை ஆ - (காணப்படுகிற) ஒரு பேயென்று, வைக்கப்படும் - நினைக்கப்படுவான்.

**850**. He who denies the existence of what the world believes in will be regarded as a demon on earth.

---

## அசு - ம். அதி. இகல்.

இனி அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத்தாகலின், அதனுன் வருவன கூறுவான்றொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். அஃதாவது இருவர் தம்முட்பொருது வலிதொலைதற் கேதுவாய மாறுபாடு.

க. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(பரி-ரை.) எ-து,—எல்லாவுயிர்கட்கும் பிறவுயிர்களோடு கூடாமையென்னுந் தீக்குணத்தை வளர்க்குங்குற்றம் இகலென்று சொல்லுவர் நூலோர், எ-று.

மக்களையும் விலங்குகளோ டொப்பிப்பதென்பது தோன்ற எல்லாவுயிர்க்கு மென்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலிற் பகலென்னும் பண்பின் மையென்றுங் கூறினர். நற்குணமின்மை அருத்தாபத்தியாற் றீக்குணமாயிற்று. இதனால் இகலது குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—எல்லா உயிர்க்கும் - எல்லா உயிர்களுக்கும், பகல் என்னும் - (பிறவுயிரோடு) கூடாமையென்னும், பண்பு இன்மை - தீயகுணத்தை, பாரிக்கும் - வளர்க்கும், நோய் - குற்றமாவது, இகல் - மாறுபாடாம், என்ப - என்று சொல்லுவர் (நூலோர்).

**851.** The disease which fosters the evil of disunion among all creatures is termed hatred by the wise.

---

௨. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

(பரி-ரை.) எ-து,—தம்மோடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும், அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தாமவனுக்கு இன்னா தவற்றைச் செய்யாமை உயர்ந்தது, எ-று.

செய்யிற் பகைமைவளரத் தாந் தாழ்ந்துவரலானும், ஒழியின் அப்பற்றாதன தாமேயோய்ந்துபோகத் தாம் ஓங்கிவரலானும், செய்யாமை தலையென்றார். பற்றாதவென்பது விகாரமாயிற்று.

(தெ-ப-ரை.)—பகல் - (தம்மோடு) கூடாமையை, கருதி - நினைத்து, பற்றா - வெறுப்பவைகளை, செயினும்-(ஒருவன்) செய்தானாயினும், இகல் கருதி - (அவனோடு) மாறுபடுதலைக் குறித்து, இன்னா - துன்பந்தருமவைகளை, செய்யாமை - (தாம் அவனுக்கு) செய்யாமை, தலை - உயர்ந்தது.

**852.** Though disagreeable things may be done from (a feeling of) disunion, it is far better that nothing painful be done from (that of) hatred.

---

௩. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

(பரி-ரை.) எ - து,—மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யு நோயை ஒருவன் தன்மனத்தினின்று நீக்குமாயின், அவனுக்கு அந்நீக்குதல் எஞ்ஞான்றும் உளனாதற் கேதுவாய புகழைக் கொடுக்கும், எ-று.

தவலில்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. தாவில்விளக்கம் வெளிப்படை. யாவரு நண்பராவர், ஆகவே எல்லாச்செல்வமு மெய்திக் கொடைமுதலிய காரணங்களாற் புகழ்பெறு மென்பதாம்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) இகல் என்னும்-மாறுபாடென்று சொல்லப்படுகின்ற, எவ்வம் - துன்பத்தைச் (செய்யும்), நோய் -

நோயை, நீக்கின் - (தன்மனத்திலிருந்து) நீக்குவானாயின், (அந் நீக்குதல்), தவல் இல்லா - (எந்நாளும்) அழிவில்லாமைக்கு ஏதுவாகிய, தாவில் விளக்கம்-கெடுதலில்லாத புகழை, தரும் - (அவனுக்கு) கொடுக்கும்.

**853.** To rid one-self of the distressing disease of hatred will bestow (on one) a never-decreasing imperishable fame.

---

௪. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(பரி-ரை.) எ-து,—மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பங்களெல்லாவற்றினும் மிக்கதுன்பம் ஒருவனுக் கில்லையாயின், அவ்வின்மை அவனுக்கு இன்பங்களெல்லாவற்றினும் மிக்கவின்பத்தினைக் கொடுக்கும், எ-று.

துன்பத்துட்டுன்பம் - பலரோடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கு மெளியனாயுறுவது. அதனை இடையின்றியே பயத்தலின், இகலென்னுமென்றார். இன்பத்துளின்பம் யாவரு நட்பாகலின் எல்லாப்பயனு மெய்தி யுறுவது.

(தெ-ப-ரை.)—இகல் என்னும் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற, துன்பத்துள் - துன்பங்கள் பலவினும், துன்பம் - மிகுந்ததுன்பம், கெடின் - (ஒருவனுக்கு) இல்லையாயின், (அவ்வில்லாமை), இன்பத்துள் - இன்பங்கள் பலவினும், இன்பம் - மிகுந்தவின்பத்தை, பயக்கும் - (அவனுக்கு) கொடுக்கும்.

**854.** If hatred which is the greatest misery is destroyed, it will yield the greatest delight.

---

௫. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

(பரி-ரை.) எ-து,—தம்முள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை யேற்றுக்கொள்ளாது சாய்ந்தொழுகவல்லாரை வெல்லக்கருதுந்தன்மை யுடையார் யாவர், எ-று.

இகலையொழிந் தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின் வல்லாரையென்றும், அவர் யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக் கருதுவார் யாவரு மில்லையென்றுங் கூறினார். இவைநான்கு பாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இகல் - மாறுபாடு, (தம்மனத்துத் தோன்றியவிடத்து) எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - (அதனை) ஏற்றுக்கொள்ளாமற் சாய்ந்து நடக்கவல்லவரை, மிகல் ஊக்கும் - வெல்லநினைக்கும், தன்மையவர் - தன்மையையுடையவர், யார் - யாவர்.

**855.** Who indeed would think of conquering those who natarally shrink back from hatred?

---

௬. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(பரி-ரை.) எ-து,—பிறரோடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச் செய்வானது உயிர்வாழ்க்கை பிழைத்தலும் முற்றக்கெடுதலுஞ் சிறிதுபொழுதுள் உளவாம், எ-று.

மிகுதல் - மேன்மேலூக்குதல். இனிதென்பது தான் வேறல் குறித்தல். பிழைத்தல் - வறுமையா லின்னுதாதல். முற்றக்கெடுதல் - இறத்தல். இவற்றோடு நணித்தென்பதனைத் தனித்தனிக்கூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததுந் தழீஇய வெச்சவும்மையாக வுரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே யுளவா மென்பதாம்.

(தெ - ப - ரை.)—இகலின் - (பிறரோடு) மாறுபடுதலிலே, மிகல் - மிகுதல், இனிது என்பவன் - (எனக்கு) இனிதென்று செய்பவனது, வாழ்க்கை - உயிர்வாழ்க்கை, தவலும் - பிழைபடுதலும், நணித்து - சிறிது பொழுதிலுண்டாம்; கெடலும் - முழுதுங்கெடுதலும், (நணித்து) - சிறிது பொழுதிலுண்டாம்.

**856.** Failure and ruin are not far from him who says it is sweet to excel in hatred.

---

௭. மிகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்மேவு
மின்னா வறிவி னவர்.

(பரி-ரை.) எ-து,—இகலோடு மேவுதலையுடைய இன்னுதவறிவினையுடையார் வெற்றிபொருந்துதலையுடைய நீதிநூற்பொருளை யறியமாட்டார், எ-று.

இன்னுவறிவு - தமக்கும் பிறர்க்குந் தீங்கு பயக்குமறிவு. வெற்றிவழி நின்றார்க்கு உளதாவது. காணப்படும்பயத்ததாகலின், மெய்ந்நூலெனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின், காணரென்றார். இவை யிரண்டுபாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இகல் மேவும் - மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய, இன்னா - துன்பஞ்செய்கின்ற, அறிவினவர் - அறிவையுடையவர், மிகல் மேவும் - வெற்றி பொருந்துதலை யுடைய, மெய்ப்பொருள் - நீதிநூற்பொருளை, காணார் - அறியமாட்டார்.

**857.** Those whose judgment brings misery through its connection with hatred cannot understand the triumphant nature of truth.

---

௮. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(பரி-ரை.) எ-து,—தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனையெதிர்தலையொழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம்; அதுசெய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடுந் தன்கண்வருதலை மேற்கொள்ளும், எ-று.

எதிர்தல்-ஏற்றுக்கோடல். சாய்ந்தபொழுதே வருதலின், சாய்தல் ஆக்கமென்றார். இகலிற்கெனவும் அதனையெனவும் வந்தன வேற்றுமைமயக்கம்.

(தெ - ப - ை.)—இகலிற்கு - (தன்னுள்ளத்து) மாறுபாடு தோன்றியவிடத்து, எதிர் சாய்தல் - (அதற்கு) எதிரிடுதலையொழிதல், ஆக்கம் - (ஒருவனுக்கு) ஆக்கமாம்; அதனை - அம்மாறுபாட்டிலே, மிகல் - மிகுதலை, ஊக்கின் - மேற்கொள்ளுவானாயின், கேடு - கேடும், ஊக்கும் ஆம் - (தன்னிடத்து வருதலை) மேற்கொள்ளும்.

**858.** Shrinking back from hatred will yield wealth; indulging in its increase will hasten ruin.

---

௫௯. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(பரி-ை.) எ-து,—ஒருவன் றன்கணாக்கம் வரும்வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான், தனக்குக் கேடுசெய்துகோடற்கட் காரணமின்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும், எ-று.

இகலான் வருங்கேடு பிறரா னன்றென்பது தோன்றத் தரற்கென்றார். நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக்கேடுகட்கு முன்னடப்பன இகலினது இன்மை உண்மைக ளென்பதாம்.

(தெ-ப-ை.)—(ஒருவன்) ஆக்கம் வருங்கால் - (தன்னிடத்து) ஆக்கம் வரும்போது, (காரணம் உண்டாயினும்), இகல் - மாறுபாட்டை, காணான் - நினையான்; கேடு தரற்கு - (தனக்கு) கேடு செய்துகொள்ளு மிடத்து, (காரணம் இல்லாதிருந்தும்), அதனை - அதனிடத்தே, மிகல்-மிகுதலை, காணும்-நினைப்பான்.

**859.** At the approach of wealth one will not think of hatred; (but) to secure one's ruin, one will look to its increase.

---

௬0. இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

(பரி-ை.) எ-து,—ஒருவனுக்கு மாறுபா டொன்றானே இன்னாதனவெல்லாம் உளவாம்; நட்பொன்றானே நல்லநீதி யென்னும் பெருஞ்செல்வம் உளதாம், எ-று.

இன்னாதன-வறுமை, பழி, பாவ முதலாயின. நகல்-மகிழ்தல். நகலென்பதூஉஞ் செருக்கென்பதூஉம் தத்தங் காரணங்கட் காயின. நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். இவை மூன்றுபாட்டானும் அவ்விருமையுங் கூறப்பட்டன.

(தெ - ப - ை.)—இகலான் - மாறுபாடொன்றினாலே, இன்னாத எல்லாம் - துன்பஞ் செய்பவையெல்லாம், ஆம் - உண்டா

கும்; நகலான் - நட்பொன்றினாலே, நல் நயம் என்னும் - நல்ல நீதியென்னும், செருக்கு - பெருஞ்செல்வம், ஆம்-உண்டாகும்.

**860.** All calamities are caused by hatred; but by the delight (of friendship) is caused the great wealth of good virtues.

---

## அஎ-ம். அதி. பகைமாட்சி.

அஃதாவது அறிவின்மை முதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் மேற்பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றாராகலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

க. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(பரி-ரை.) எ-து,—தம்மின் வலியார்க்குப் பகையாயெதிர்தலை ஒழிக; ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக, எ-று.

வலியாரென்புழித் துணைவலியு மடங்கலின், மெலியாரென்புழித் துணைவலியின்மையுங் கொள்ளப்படும். அத்துணைதான் படை பொருண்முதலிய வேற்றுமைத்துணையும் நல்லறிவுடைமை நீதிநூல்வழி யொழுகன் முதலிய ஒற்றுமைத் துணையுமென விரண்டாம். அவ்விரண்டுமில்லாரை வெல்வார்க்கு வலிதொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. சிங்கநோக்காகிய இதனுட் பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வலியார்க்கு - (தம்மின்) வலியவர்க்கு, மாறு ஏற்றல் - பகையா யெதிர்தலை, ஓம்புக - ஒழியக்கடவர்; மெலியார்மேல் - (மற்றை) மெலியவர்க்கு, பகை - பகையாகுதலை, ஓம்பா - ஒழியாமல், மேக - விரும்பக்கடவர்.

**861.** Avoid offering resistance to the strong; (but) never fail to cherish enmity towards the weak.

---

உ. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தன்சுற்றத்தின்மே லன்பிலன், அதுவேயன்றி வலிய துணையிலன், அதன்மேற் றான்வலியிலன், அப்பெற்றியான் மேல்வந்த பகைவன் வலியினை யாங்ஙனந் தொலைக்கும், எ-று.

சுற்றமும் இருவகைத்துணையும் தன்வலியுமிலனாகலின், அவன்மேற் செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தொலையா தென்பதாம். துவ்வான்-துவ்வினைச்செய்யான்.

(தெ-ப-ரை)—(ஒருவன்) அன்பு இலன் - (தன் சுற்றத்தார் மேல்) அன்பிலன், ஆன்ற துணை இலன் - (அதுவேயன்றி) வலிய

துணையிலன், தான் துவ்வான் - (அதன்மேல்) தான்வலியிலன், (அப்படிப்பட்டவன்), ஏதிலான் - (தன்மேல்வந்த) பகைவனது, துப்பு - வலிமையை, என் பரியும் - எப்படித்தொலைப்பான்.

**862** How can he who is unloving, destitute of powerful aids, and himself without strength overcome the might of his foe.

---

௩. அஞ்சு மறியா னமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு.

(ப-ரை.) எ-து,—ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும், அறியவேண்டுமவற்றை யறியான், பிறரோடுபொருந்தமிலன், இவற்றின்மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன், இப்பெற்றியான் பகைவர்க்கு மிகவெளியன், எ-று.

தஞ்சமெளியனென்பன ஒருபொருட்பன்மொழி. இந்நான்கு குற்றமுமுடையான் பகையின்றியு மழியுமாகலின், தஞ்சமெளியனென்றார்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) அஞ்சும் - (அஞ்சவேண்டாதவைகளுக்கு) அஞ்சுவான், அறியான்-(அறியவேண்டுமவைகளை) அறியான், அமைவு இலன் - (பிறரோடு) பொருந்தமிலன், ஈகலான் - (இவைகளின்மேலும் யாவரிடத்தும்) உலோபகுணமுடையன், (இப்படிப்பட்டவன்), பகைக்கு - பகைவர்க்கு, தஞ்சம் எளியன் - மிக வெளியனாவான்.

**863**. In the estimation of foes miserably weak is he, who is timid, ignorant, unsociable and niggardly.

---

௪. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் வெகுளியினீங்கான், அதுவேயன்றித் தான் நிறையுடையனல்லன், அவன்மேற்சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கு மெளிது, எ-று.

நிறை - மறைபிறரறியாமை. வெகுடன்மாலையனாகலானும், மறைவெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியுமறிந்து சேறல் வேண்டாதாயிற்று. இனி இனிதென்று பாடமோதி அவன்பகைமை இனிதென்றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) வெகுளி நீங்கான் - கோபத்தினின்றும் நீங்கான், நிறை இலன் - (அதுவேயன்றித்தான்) நிறையுடையனல்லன், (அவன்மேலே செல்லுதல்), எஞ்ஞான்றும் - எந்நாளும், யாங்கணும் - எவ்விடத்தும், யார்க்கும் - எவருக்கும், எளிது - எளிதாம்.

**864**. He who neither refrains from anger nor keeps his secrets will at all times and in all places be easily conquered by all.

---

ரு. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் நீதிநூலை யோதான், அது விதித்த தொழில்களைச் செய்யான், தனக்கு வரும் பழியைப் பாரான், தான் பண்புடைய னல்லன், அவன் பகைவர்க்கு அப்பகைமை யினிது, எ-று.

தொல்லோ ரடிப்பட்டு வழங்கிவந்த தாகலான் வழியென்றும், தப்பாது பயன்படுதலின் வாய்ப்பனவென்றும், இக்குற்றங்களுடையான் றானே யழிதலிற் பற்றார்க் கினிதென்றுங் கூறினார்.

(தெ - ப - ரை.)—(ஒருவன்) வழி நோக்கான் - நீதிநூலைக் கல்லான், வாய்ப்பன செய்யான் - (அது) விதித்த தொழில்களைச் செய்யான், பழி நோக்கான் - (தனக்குவரும்) பழியைப்பாரான், பண்பு இலன் - குணமுடையனல்லன், பற்றார்க்கு இனிது - (அவன் பகைமை) பகைவர்க் கினிது.

**865.** (A) pleasing (object) to his foes is he who reads not moral works, does nothing that is enjoined by them, cares not for reproach and is not possessed of good qualities.

---

சு. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

(பரி-ரை) எ-து,—தன்னையும் பிறரையுந் தானறியாமைக் கேதுவாகிய வெகுளியை யுடையான் யாவன், மேன்மேல் வளராநின்ற மிக்க காமத்தையுடையான் யாவன், அவரது பகைமை விரும்பிக் கொள்ளப்படும், எ-று.

காணாத சினமென்பது விகாரமாயிற்று. முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனோனுக்குக் காரியந் தோன்றாமையானும், தாமே யழிவரென்பது பற்றி, இவர்பேணாமை பேணப்படு மென்றார்.

(தெ - ப - ரை.)—காணாச் சினத்தான் - (தன்னையும் பிறரையும்) அறியாமைக்கு ஏதுவாகிய கோபத்தையுடையவன், கழிபெருங்காமத்தான் - மேலுமேலும் வளராநின்ற மிகுந்த காமத்தையுடையவன், (ஆகிய இவரது), பேணாமை - பகைமை, பேணப்படும் - விரும்பிக்கொள்ளப்படும்.

**866.** Highly to be desired is the hatred of him whose anger is blind, and whose lust increases beyond measure.

---

எ. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

(பரி-ரை.) எ-து,—வினையைத் தொடங்கியிருந்து அதற் கேலாதன செய்வான் பகைமையைச் சிலபொரு ளழியக் கொடுத்தாயினுங் கோடல் ஒருதலையாக வேண்டும், எ-று.

ஏலாதன - மெலியனாய்வைத்துத் துணிதலும், வலியனாய்வைத்துத் தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனாற் சிலபொரு ளழியினும் பின் பல

பொரு ளெய்தற்கு ஐயமின்மையின், கொளல்வேண்டு மன்ற வென்றார். இவை யாறுபாட்டானும் அது சிறப்புவகையாற் கூறப்பட்டது.

(தெ-ப-உரை.)—அடுத்து இருந்து - (தொழிலை) தொடங்கி யிருந்து, மாணாத - (அதற்கு) ஏற்காதவைகளை, செய்வான் - செய்பவனது, பகை - பகைமையை, கொடுத்தும் - (சிலபொருள்அழிய) கொடுத்தாயினும், மன்ற - நிச்சயமாக, கொளல் வேண்டும் - கொள்ளல்வேண்டும்.

**867.** It is indeed necessary to obtain even by purchase the hatred of him who having begun (a work) does what is not conducive (to its accomplishment).

---

௮. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.

(பரி-உரை.) எ-து,—ஒருவன் குண னொன்று மிலனாய் உடைய குற்றம் பல வாயவழி அவன் துணையிலனாம்; அவ் விலனாதறானே அவன் பகைவர்க்குத் துணை யாதலை யுடைத்து, எ-று.

குணம்-இறைமாட்சியுட்சொல்லியன. குற்றம்-இவ்வதிகாரத்துச் சொல்லி யனவும் மற்று மத்தன்மையனவும். துணை-சுற்றம், நட்பு, பொருள், படை முத லாயின. பகைவர்க்கு இவற்றானுளதாம் பயன்றானே யுளதாமாகலின், ஏமாப் புடைத்தென்றார். இலனாயென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென்ன வந்த பெயரொச்சக்குறிப்புக் கொண்டது.

(தெ - ப - உரை.)—(ஒருவன்) குணன் இலன் ஆய் - குண மொன்றுமிலனாய், குற்றம் பல ஆயின் - (உடைய) குற்றம் பல வாகியவிடத்து, இனன் இலன் ஆம் - (அவன்) துணையில்லாதவ னாகும்; (அவ்விலனாகுகையே), மாற்றார்க்கு - (அவன்) பகைவர் க்கு, ஏமாப்பு உடைத்து - துணையாகுகையை யுடையது.

**868.** He will become friendless who is without (any good) qualities, and whose faults are many; (such a character) is a help to (his) foes.

---

௯. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(பரி - உரை.) எ-து,—நீதியை யறிதலில்லாத அஞ்சும் பகைவரைப் பெற் றால், அவரைச் செறுவார்க்கு உயர்ந்த வின்பங்கள் நீங்கா, எ-று.

உபாயமறிதலும் அறிந்தாற் செய்து முடிக்குந் திண்மையு மில்லாதாரே பகைவராதல் கூடாமையிற் பெறினென்றும், அவரை யறிந்து மேற் சென்றபொ ழுது பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கே யெய்தலிற் சேணுடையின்பங்கள் இகவாவென்றுங் கூறினார்.

(தெ-ப-உரை.) — அறிவு இலா - (நீதியை) அறிதலில்லாத, அஞ்சும் - பயப்படுகின்ற, பகைவர் - பகைவரை, பெறின்-பெற் றால், செறுவார்க்கு - (அவரை) வெல்வார்க்கு, சேண் - உயர் வுள்ள, இன்பம் - இன்பங்கள், இகவா - நீங்கா.

**869.** There will be no end of lofty delights to the victorious, if their foes are (both) ignorant and timid.

---

௯0. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

(பரி-ரை.) எ-து,—நீதிநூலைக் கல்லாதானோடு பகைத்தலான் வரும் எளிய பொருளை மேவாதானை எஞ்ஞான்றும் புகழ் மேவாது, எ-று.

சிறுபொருள்-முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும் அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாதென்பதாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயனெய்துக வென்றவாறாயிற்று. இதற்குப் பிறசொல்லாம் அதிகாரத்தோடு மாறுதன்மேலும் ஓர் பொருட்டொடர்பு படாமை யுரைத்தார். இவை மூன்று பாட்டானும் அதனினுய பயன் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கல்லான் - (நீதி நூல்களை) கல்லாதவனோடு, வெகுளும் - பகைத்தலால் வரும், சிறு பொருள் - எளிய பொருளை, ஒல்லானை - அடையாதவனை, எஞ்ஞான்றும் - எந்நாளும், ஒளி - புகழ், ஒல்லாது - அடையாது.

**870.** The light (of fame) will never be gained by him who gains not the trifling reputation of having fought an unlearned (foe).

---

## அஅ-ம். அதி. பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது மாறுத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற்பாலதும், அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற்பால தன்கட்செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற்படும் இழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். இரட்டுறமொழிதலென்பதனாற் பகையது திறமும் பகையிடத்தாக்குந் திறமுமென விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாறுப் பகையவாகலின், இது பகைமாட்சியின்பின் வைக்கப்பட்டது.

க. பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(பரி-ரை.) எ-து,—பகையென்று சொல்லப்படுந் தீமை பயப்பதனை ஒருவன் விளையாட்டின்கண்ணே யாயினும் விரும்புத லியற்கைத்தன்றென்று கூறும் நீதிநூல், எ-று.

மாறுத பகையை யாக்கிக்கோடல் எவ்வாற்றானுந் தீமையே பயத்தலிற் பண்பில தென்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினுஞ் செற்றமே விளைந்து மெய்யாமாகலின் நகையேயு மென்றும், வேண்டாமை தொல்லையோரது துணிவென்பார் நீதிநூன்மேல் வைத்துங் கூறினர். அப்பெயர் அவாய் நிலையான் வந்தது.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) பகை என்னும் - பகையென்று சொல்லப்படும், பண்பு இலதனை - தீமையுண்டாக்குவதனை, நகை

யேயும்-விளையாட்டிடத்தேயாயினும், வேண்டல் பாற்று அன்று-விரும்புதற்றன்மையை யுடையதன்று, (நீதிநூல்).

**871. The evil of hatred is not of a nature to be desired by one even in sport.**

---

உ. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் வில்லை ஏராகவுடைய உழவரோடு பகைகொண்டானாயினும், சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளாதொழிக, எ-று.

சொல் ஆகுபெயரான் நீதிநூன்மே னின்றது. வீரம் சூழ்ச்சி யென்னும் ஆற்றல்களுள் வீரமே யுடையாரோடு பகைகொண்டாற் கேடுவருதல் ஒருதலையன்று, வந்ததாயினுந் தனக்கேயாம்; ஏனைச்சூழ்ச்சி யுடையாரோடாயிற் றன் வழியினுள்ளார்க்குந் தப்பாது வருதலின், அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். உம்மையான் அதுவு மாகாமை பெறுதும். இரண்டு முடையாரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டா வாயிற்று. உருவக விசேடம்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) வில் ஏர்-வில்லை ஏராகவுடைய, உழவர் - உழவரோடு, [வீரர் என்றபடி], பகை கொளினும் - மாறுகொண்டாலும், சொல் ஏர் - சொல்லை ஏராகவுடைய, உழவர் - உழவரோடு, [அமைச்சர்கள் என்றபடி], பகை-விரோதத்தை, கொள்ளற்க - கொள்ளாதொழியக்கடவன்.

**872. Though you may incur the hatred of warriors whose ploughs are bows, incur not that of ministers whose ploughs are words.**

---

௩. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(பரி-ரை.) எ-து,—தான் தனியனாய்வைத்துப் பலரோடு பகைகொள்வான் பித்துற்றாரினும் அறிவிலன், எ-று.

தனிமை-சுற்றம் நட்புப் படைமுதலிய வின்மை. மயக்கத்தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனாற் றீங்கெய்தாமையின், தீங்கெய்துதலுமுடைய இவனை அவரினும் ஏழையென்றார். தீங்காவது துணையுள்வழியும் வேறல் ஐயமாயிருக்க அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறுவேறு பொருதற்கண்ணும் ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தேவிடுதல். இவை மூன்று பாட்டானும் பகைகோடற் குற்றம் பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தமியன் ஆய் - (தான்) தனியனாயிருந்துகொண்டு, பல்லார் - பலரோடும், பகைகொள்பவன் - மாறுபடுபவன், ஏமுற்றவரினும் - பித்தங்கொண்டவரினும், ஏழை - அறிவிலன்.

**873. He who, being alone, incurs the hatred of many is more infatuated than even madmen.**

---

௪. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

(பரி-ரை.) எ-து,—வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச் செய்துகொண் டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே அடங்கிற்று இவ்வுலகு, எ-று.

வேண்டிய வழியென்பது ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல்-பகைநிலைமையி னீக்குதல். ஒழுகல்—நீதிவழியொழுகல். பெருமை—பொருள் படையென இருவகைத்தாய ஆற்றல். அதன் வழித்தாதற்கு என்ஞான்றுந் திரிபின்மையின், அத் துணிவுபற்றித் தங்கிற் றென்றார்.

(தெ-ப-ரை.)—பகை - பகையை, நட்பு ஆ கொண்டு ஒழுகும் - (வேண்டியபோது வேறுபடுத்தித் தனக்கு) நட்பாகச் செய்துகொண்டு நடக்கும், பண்பு உடையாளன்-இயல்பையுடைய அரசனது, தகைமைக்கண் - பெருமையுள்ளே, உலகு - உலகம், தங்கிற்று - சுவாதீனமாயிருக்கின்றது.

**874.** The world abides in the greatness of that good natured man who behaves so as to turn hatred into friendship.

---

௫. தன்றுணை யின்றாற் பகையிரண் டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(பரி-ரை.) எ-து,—தனக்குதவுந் துணையோவெனின் இல்லை; நலிவுசெய்யும் பகையோவெனின் இரண்டு; அங்ஙனமாய் நின்றவழி ஒருவனாகிய தான் அப்பகையிரண்டனுட் பொருந்தியதொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்துகொள்க, எ-று.

பொருந்தியது-ஏனையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது-அவ்வெல்லும் பொழுது. திரிபின்றாகச் செய்துகொள்கவென்பார், இன்றுணையா வென்றார். ஆல்கள் அசை. இவை யிரண்டுபாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தன் துணை - தனக்கு உதவுந் துணையோவெனில், இன்று - இல்லை ; பகை இரண்டு - (நலிவுசெய்யும்) பகையோவெனில் இரண்டு (இப்படியிருக்கையில்), தான் ஒருவன் - ஒருவனாகியதான், அவற்றின் - அப்பகை யிரண்டனுள், ஒன்று-(பொருந்தியதாகிய) ஒன்றை, இன் துணையா - (அக்காலத்துக்கு) இனியதுணையாக, கொள்க - (செய்து) கொள்ளக்கடவன்.

**875.** He who is alone and helpless while his foes are two should secure one of them as an agreeable help (to himself).

---

௬. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

(பரி-ரை.) எ-து,—பகைவனை முன் தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினும் தனக்குப் புறத்து ஒருவினையாற் றாழ்வு வந்தழிக் கூடாது நீக்காது இடையேவிட்டு வைக்க, எ-று.

முன் தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிகவென்றது, உள்ளாய் நின்று கெடுத்தல் நோக்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்காதொழிக வென்றது, அவ்வழிவிற்குத் துணையாதல் நோக்கி. இதனான் நொதும லாக்கற் பாலது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—(பகைவன்) தேறினும் - (முன்) தெளிந்தானாயினும், தேறாவிடினும் - தெளிந்திலனாயினும், அழிவின்கண் - (தனக்குப் புறத்தொரு தொழிலால்) தாழ்வு வந்தவிடத்து, தேறான் - கூடானாகியும், பகான் - நீங்கானாகியும், விடல் - (நடுவே) விட்டுவைக்கக்கடவன்.

**876.** Though (one's foe is) aware or not of one's misfortune, one should act so as neither to join or separate (from him).

---

எ. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(பரி-ரை.) எ-து,—நொந்ததனைத் தாமாக வறியாத நட்டார்க்குத் தன்னோவு சொல்லற்க; வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்மாட்டு அவ்வலியின்மையை மேலிட்டுக் கொள்ளற்க, எ-று.

நோவென்னும் முதனிலைத்தொழிற்பெயர் ஈண்டு அதுசொல்லுதற்க ணாயிற்று. பகைவர்கட் டவிர்வது கூறுவார், நட்டார்கட் டவிர்வதும் உடன் கூறினார். இதனால் அவ் விருபகுதிக்கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நொந்தது - நொந்ததனை, அறியார்க்கு - (தாமாக) அறியாத நட்பினர்க்கு, நோவற்க - (தன்) நோவுசொல்லாதிருக்கக்கடவன்; மென்மை - வலியில்லாமையை, பகைவர் அகத்து - (அதைப் பார்த்திருக்கும்) பகைவரிடத்து, மேவற்க - மேலிட்டுக் கொள்ளா திருக்கக்கடவன்.

**877.** Relate not your suffering even to friends who are ignorant of it, nor refer to your weakness in the presence of your foes.

---

அ. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(பரி-ரை.) எ-து,—தான் வினைசெய்யும் வகையை அறிந்து அது முடித்தற்கேற்பத் தன்னைப் பெருக்கி மறவிபுகாமற் றன்னைக் காக்கவே, தன்பகைவர் மாட்டுளதாய களிப்புக் கெடும், எ-று.

வகை - வலியனாய்த் தானெதிரே பொருமாறும், மெலியனாயவளவிற் போரிலக்குமாறும் முதலாயின. பெருக்கல் - பொருள் படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு - இவற்றான் வேறுமென் றெண்ணி மகிழ்ந்திருத்தல். இவ் விருகுதலறிந்து தாமே அடங்குவ ரென்பதாம். இதனாற் களைதற்பால தன்கட் செய்வன கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வகை அறிந்து - (தான் தொழில்செய்யும்) வகையை அறிந்து, தன் செய்து - (அது முடித்தற்கு ஏற்ப) தன்

னைப்பெருக்கி, தன் காப்ப - (மறதி அடையாமல்) தன்னைக் காக்கவே, பகைவர்கண் - (தன்) பகைவரிடத்து, பட்ட-உண்டாகிய, செருக்கு - களிப்பு, மாயும் - கெடும்.

**878.** The joy of one's foes will be destroyed if one guards oneself by knowing the way (of acting) and securing assistanco.

---

௯. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(பரி-ரை.) எ-து,—களையவேண்டுவதாய முண்மரத்தை இளைதாய நிலைமைக்கட் களைக; அன்றியே முதிர்ந்த நிலைமைக்கட் களையலுறிற் களைவார் கையினை அது தான் களையும், எ-று.

களையப்படுவதாய தம்பகையை அது மெலிதாய காலத்தே களைக, அன்றியே வலிதாயகாலத்துக் களையலுறிற் றம்மை அது தான்களையு மென்பது தோன்றநின்றமையின், இது பிறிதுமொழிதல். இதனாற் களையும் பருவங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—முள் மரம் - (களையவேண்டுவதாகிய) முள்ளுமரத்தை, இளைதாக - இளைதாகிய நிலையிலே, கொல்க - களையக்கடவர்; (அல்லாமல்), காழ்த்த இடத்து - முதிர்ந்த நிலையில், (களையத் தொடங்கினால்), களையுநர் - களைபவரது, கை - கையை, கொல்லும் - (அது தானே) களையும்.

**879.** A thorny tree should be felled while young, (for) when it is grown it will destroy the hand of the feller.

---

௧௦. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(பரி-ரை.) எ-து,—தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியான் அது செய்யாத வரசர் பின் உயிர்க்குமாத்திரத்திற்கும் உளரல்லர் ஒருதலையாக, எ-று.

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒருதலையாகலின், இறந்தாரேயாவ ரென்பதாம். அவருயிர்த்த துணையானே தாமிறப்பரொனினு மமையும். இதனாற் களையாவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—செயிர்ப்பவர் - (தம்மோடு) பகைப்பவரது, செம்மல் - தருக்கை, (கெடுக்கலாயிருக்க), சிதைக்கலாதார் - (இகழ்ச்சியால்) கெடுக்காதவரசர், உயிர்ப்ப - (பின்) மூச்சுவிடுமாத்திரத்திற்கும், மன்ற - நிச்சயமாக, உளர் அல்லர் - இருக்கின்றவரல்லர்.

**880.** Those who do not destroy the pride of those who hate (them) will certainly not exist even to breathe.

---

# அகூ - ம். அதி. உட்பகை.

அஃதாவது புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லுந்துணையும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும், களையப்படுவதன் பாலதாகலின், பகைத்திறந் தெரிதலின்பின் வைக்கப்பட்டது.

க. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய் செய்வன இன்னாவாம்; அதுபோலத் தழுவ வேண்டுவனவாய தம ரியல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னா செய்வன இன்னாவாம், எ-று.

நோய் - பெருங்கால், பெருவயிறு முதலாயின. தம ரொன்றதனால் உட்பகையாதற் குரியராய் ஞாதிய ரென்ப தறிக. இன்னா செயல் - முன்வெளிப்படாமைநின்று துணைபெற்றவழிக் கெடுத்தல்,

(தெ-ப-ரை.)—(ஒருவனுக்கு) நிழல் நீரும் - (அனுபவிக்கப்படுவனவாகிய) நிழலும் நீரும், இன்னாத - (முன் இன்பஞ்செய்வனவாயினும் பின்) நோய்செய்யுமவை, இன்னா - இனியனவல்லவாம்; (அதுபோல), தமர் நீரும்-(தழுவவேண்டுவனவாகிய) தம்மவரியல்புகளும், இன்னா செயின் - (முன் இன்பஞ் செய்வனவாயினும் பின்) துன்பஞ் செய்யுமவை, இன்னாவாம்-இனியனவல்லவாம்.

**881. Shade and water are not pleasant, (if) they cause disease; so are the qualities of (one's) relations not agreeable, (if) they cause pain.**

---

உ. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(பரி-ரை.) எ-து,—வாள்போல எறிது மென்று வெளிப்பட்டு நிற்கும் பகைவரை அஞ்சாதொழிக; அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக, எ-று.

முன்னே யறிந்து காக்கப்படுதலான் அஞ்சற்கவென்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும் படாமையிற் கெடுதல் ஒருதலை யென்பதுபற்றி அஞ்சுக வென்றுங் கூறினார். பின்செய்யும் பகையினுங் கொடிதாகலானும், காக்குங்காலம் அதுவாகலானும் அஞ்சப்படுவது முன்செய்த அவர்தொடர்பாயிற்று. இவையிரண்டுபாட்டானும் உட்பகை ஆகாதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வாள்போல் - வாள்போலே (வெட்டுவோமென்று வெளிப்பட்டுநிற்கும்), பகைவரை - பகையாளிகளை, அஞ்சற்க - அஞ்சாதிருக்கக்கடவர்; (அப்படிநில்லாமல்), கேள்போல் - உறவினர்போலே (மறைந்துநிற்கும்), பகைவர் - பகைவரது, தொடர்பு - நட்பை, அஞ்சுக - பயப்படக்கடவன்.

882. Fear not foes (who say they would cut) like a sword; (but) fear the friendship of foes (who seemingly act) like relations.

---

௩. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(பரி - ரை.) எ-து,—உட்பகையாயினாை யஞ்சித் தன்னைக் காத்துக்கொண்டொழுகுக; அங்ஙன மொழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சி வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை யறுக்குங் கருவிபோல அவர் தப்பாமற் கெடுப்பர், எ-று.

காத்தல்-அவரணையாமலும் அவர்க்கு உடம்படாமலும் பரிகரித்தல். மண்ணைப் பருக்குங் கருவி மட்பகையெனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின், கெடுதல் தப்பாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—உட்பகை - உட்பகையாயினோரை, அஞ்சி- பயந்து, தன் காக்க - தன்னைக்காத்துக்கொண்டு நடக்கக்கடவர்; (அப்படிநடவாதபோது), உலைவிடத்து - (தனக்கு ஓர்) தளர்ச்சி வந்தவிடத்து, மண் பகையின் - (குயவன்) மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல, மாண - தப்பாமல், தெறும் - (அவர்) கெடுப்பர்.

883. Fear internal enmity and guard yourself; (if not) it will destroy (you) in an evil hour, as surely as the tool which cuts the potter's clay.

---

௪. மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும்.

(பரி-ரை.) எ-து,—புறந் திருந்தியதுபோன்று அகந்திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், அஃது அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக் கேதுவாகிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், எ-று.

அவை சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவழித் தான் தேறாமையும், பின் அவற்றான் விளைவனவு மாம்.

(தெ-ப-ரை.)—மனம் மாணா - (புறந்திருந்தியது போன்று) அகந் திருந்தாத, உட்பகை - உட்பகையானது, தோன்றின் - (அரசனுக்கு) உண்டாமாயின், (அது) இனம் மாணா - சுற்றம் வசப்படாமைக்கு ஏதுவாகிய, ஏதம் பலவும் - பலகுற்றங்களையும், தரும் - (அவனுக்கு) உண்டாக்கும்.

884. The secrect enmity of a person whose mind is unreformed will lead to many evils causing disaffection among (one's) relations.

---

௫. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

(பரி - ரை.) எ-து,—புறத்து உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், அஃது அவனுக்கு இறத்தன் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், எ-று.

அவை புறப்பகைத் துணையாய் நின்றே அது தோன்றாமற் கோறன் முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புகளைத் தேய்த்தலும் முதலாயின.

(தெ - ப - ரை.)—உறல்முறையான் - (புறத்தில்) உறவு முறைத் தன்மையோடு கூடிய, உட்பகை - உட்பகையானது, தோன்றின் - (அரசனுக்கு) உண்டாயின், (அது) இறல் முறையான் - இறத்தன்முறைமையோடுகூடிய, ஏதம்பலவும் - குற்றம் பலவற்றையும், தரும் - (அவனுக்கு) கொடுக்கும்.

**885. If there appears internal hatred in a (king's) family, it will lead to many a fatal crime.**

---

௬. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

(பரி - ரை.) எ-து,—பகைமை தனக்குள்ளாயினர் மாட்டே பிறக்குமாயின், அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்று மரிது, எ-று.

பொருள் படை முதலிய உறுப்புகளாற் பெரியனாய காலத்து மென்பார், எஞ்ஞான்று மென்றார். இவை நான்கு பாட்டானும் அதனாற் றனக்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஒன்றாமை - பகைமை, ஒன்றியார்கண் - (தனக்கு) உள்ளாயினரிடத்து, படின் - உண்டாகுமாயின், பொன்றாமை - இறவாமை, ஒன்றல் - (அரசனுக்கு) கூடுதல், எஞ்ஞான்றும் - எக்காலும், அரிது - அரிது.

**886. If hatred arises among (one's) own people, it will be hardly possible (for one) to escape death.**

---

௭. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

(பரி-ரை.) எ-து,—செப்பினது புணர்ச்சிபோலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினாராயினும், உட்பகை உண்டாய குடியிலுள்ளார் அகத்துத் தம்முட் கூடார், எ-று.

செப்பினது புணர்ச்சி - செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்றுவீற்றாவரென்பதாம். குடிகூடா தென்பதனை நாடு வந்த தென்பதுபோலக் கொள்க. உட்பகை தானுற்றகுடியோடு கூடாதென்றும் உட்பகையுண்டாயகுடி அப்பகையோடு கூடாதென்றும் உரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—செப்பின் - செப்பினது, புணர்ச்சி போல்—(மூடிகளின்) சேர்க்கைபோல, கூடினும் - (புறத்தே வேற்றுமை தெரியாமற்) கூடினாராயினும், உட்பகை - உட்பகையானது,

உற்ற - உண்டாகிய, குடி - குடியிலுள்ளார், கூடாதே - (அகத்தே தம்முள்) கூடார்.

**887. Never indeed will a family subject to internal hatred unite (really) though it may present an apparent union like that of a casket and its lid.**

---

அ. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

(பரி-உரை.) எ-து,—முன் வளர்ந்து வந்த தாயினும் உட்பகையுண்டாயகுடி அரத்தாற் பொரப்பட்ட இரும்புபோல அதனாற்பொரப்பட்டு வலிதேயும், எ-று.

பொருதென்னுஞ் செயப்பாட்டுவினையெச்சம் தேயுமென்னும் வினைகொண்டது. அஃது, உரத்தின் றொழிலாயினுங் குடிமே லேற்றுதலின், வினைமுதல் வினையாயிற்று. காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்லமெல்லப் பிரிவித்தலான், வலி தேய்ந்துவிடு மென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவன் குடிக்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(தெ - ப - உரை.)—(முன்வளர்ந்து வந்ததாயினும்) உட்பகை உற்ற குடி - உட்பகையுள்ள குடியானது, அரம் பொருத-அரத்தினாலே தேய்க்கப்பட்ட, பொன் போல - இரும்புபோல, பொருது - (அதனாலே) தேய்க்கப்பட்டு, உரம் - வலிமை, தேயும் - குறையும்.

**888. A family subject to internal hatred will wear out and lose its strength like iron that has been filed away.**

---

கூ. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(ப-உரை.) எ-து,—அரசனது உட்பகை அவன் பெருமையை நோக்க எள்ளின்பிளவை யொத்த சிறுமையுடைத்தே யாயினும் பெருமையெல்லாம் அழிய வருங்கேடு அதனகத்த தாம், எ-று.

எத்துணையும் பெரிதாயகேடு தனக் கெல்லைவருந்துணையும் எத்துணையுஞ் சிறிதாய உட்பகையுள்ளே யடங்கியிருந்து வந்தால் வெளிப்பட்டுநிற்கு மென்பதாம். இதனால் அது சிறிதென்று இகழப்படா தென்பது கூறப்பட்டது.

(தெ - ப - உரை.)—உட்பகை - (அரசனது) உட்பகை, (அவன்பெருமையைநோக்க) எள் பகவு அன்ன - எள்ளின் பிளவை யொத்த, சிறுமைத்தே ஆயினும் - சிறுமையுடையதேயாயினும், கேடு - (அப்பெருமையெல்லாம் அழியவரும்) கேடு, உள்ளது ஆம் - (அதன்) அகத்ததாம்.

**889. Although internal hatred be as small as the fragment of the sesamum (seed), still does destruction dwell in it.**

---

கo. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

(பரி-ரை.) எ-து,—மனப்பொருத்த மில்லாதாரோடுகூட ஒருவன் வாழும் வாழ்க்கை ஒரு குடிலுள்ளே பாம்போடுகூட உறைந்தாற் போலும், எ-று.

குடங்கமென்னும் வடசொல் திரிந்து நின்றது. இடச்சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம்; ஆகவே, அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதி வருதல் ஒருதலையென்பது பெற்றும். இதனாற் கண்ணோடாதவரைக் கடிகவென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—உடம்பாடு இலாதவர் - மனப்பொருத்தமில்லாதவரோடு, வாழ்க்கை - (ஒருவன்) கூடிவாழும் வாழ்வு, குடங்கருள் - ஒரு குடிசையினுள்ளே, பாம்போடு-பாம்புடனே, உடன் உறைந்தற்று - கூடிவாழ்ந்தாற் போலும்.

**890.** Living with those who do not agree (with one) is like dwelling with a cobra (in the same) hut.

---

## கூ0-ம். அதி. பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது பெரியராயினாரை அவமதித்து ஒழுகாமை. இரட்டுறமொழிதலென்பதனாற் பெரியாரென்பது ஆற்றலாற் பெரியராய வேந்தர்மேலும் தவத்தாற் பெரியராய முனிவர்மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சிநின்றதாகலின், இது வெகுளியான் வருவனவற்ற திறுதிக்கண் வைக்கப்பட்டது.

க. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(பரி-ரை.) எ-து,—எடுத்துக்கொண்டன யாவும் முடிக்க வல்லாருடைய ஆற்றலைஅவமதியாமை, தங்கட் டீங்குவராமற் காப்பார் செய்யுங் காவல்களெல்லாவற்றினும் மிக்கது, எ-று.

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சியென்னும் மூன்றன்மேலும் நிற்றலிற் சாதியொருமை. இகழ்ந்தவழிக் களைய வல்லாரென்பது தோன்ற ஆற்றுவாரென்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிற காவல்கள் அவரா னழியுமாகலின் அவ்விகழாமையைத் தலையாய காவலென்றுங் கூறினார். பொதுவகையால் அவ் விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஆற்றுவார் - (எடுத்துக்கொள்ளப்பட்டவை யாவும் முடிக்க) வல்லாருடைய, ஆற்றல் - வல்லமைகளை, இகழாமை - அவமதியாமை, போற்றுவார் - (தம்மிடத்துத் தீங்குவாராமல்) காப்பவருடைய, போற்றலுள் எல்லாம் - காவல்களுக்குளெல்லாம், தலை - மிக்கது.

**891.** Not to disregard the power of those who can carry out (their wishes) is more important than all the watchfulness of those who guard (themselves against evil).

உ. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

(பரி-ரை.) எ - து,—ஆற்றல்களாற் பெரியராயினாரை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின், அவ்வொழுக்கம் அப்பெரியரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும், எ-று.

அத்துன்பங்களாவன இருமையினும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களுமாம். அவையெல்லாந் தாமே செய்துகொள்கின்றன வென்பது தோன்ற, ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினார். பொதுவகையால் அவரைப் பிழைத்தற்குற்றம் இதனாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(தெ-ப-ரை.)—(வேந்தர்) பெரியாரை - (வலிமைகளாலே) பெரியராயினாரை, பேணாது - நன்குமதியாமல் (அவமதித்து), ஒழுகின் - நடப்பாராயின், (அந்நடக்கையானது), பெரியாரால்- அப்பெரியரால், பேரா இடும்பை - (எந்நாளும்) நீங்காத துன்பங்களை, தரும் - (அவருக்கு) கொடுக்கும்.

**892.** To behave without respect for the great (rulers) will make them do (us) irremediable evils.

---

௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு.

(பரி - ரை.) எ-து,—வேற்றுவேந்தனைக் கோறல்வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டுப் பிழையினை, தான் கெடுதல்வேண்டினனாயின், ஒருவன் நீதிநூலைக் கடந்து செய்க, எ-று.

அப்பெரியாரைக் "காலனுங் காலம் பார்க்கும் பாராது—வேலீ னடுதானை விழுமியோர் தொலைய—வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தர்" என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாதென்று கூறலின், கேளாதென்றார்.

(தெ-ப-ரை.)—அடல் வேண்டின் - (வேற்று வேந்தனை) கொல்லுதல் வேண்டியவிடத்து, ஆற்றுபவர்கண் - (அதனை அப்பொழுதே) செய்யவல்ல வேந்தரிடத்து, இழுக்கு - பிழையை, கெடல் வேண்டின் - (தான்) கெடுதல் வேண்டினனாயின், கேளாது - (நீதிநூலிலே சொல்லப்பட்டதை) கேளாமல், செய்க - (ஒருவன்) செய்யக்கடவன்.

**893.** If a person desires ruin, let him not listen to the righteous dictates of law, but commit crimes against those who are able to slay (other sovereigns).

---

௪. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

(பரி - ரை.) எ-து,—மூவகையாற்றலு முடையார்க்கு அவையில்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல் தானேயும் வரற்பாலனாய கூற்று வனை அதற்கு முன்னே கைகாட்டி அழைத்தா லொக்கும், எ-று.

கையால் விளித்தல் இகழ்ச்சிக் குறிப்பிற்று. தாமேயும் உயிர்முதலிய கோடற்குரியானை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வார் இறப்பினது உண்மையும் அண்மையுங் கூறியவாறு. இவை யிரண்டு பாட்டா னும் வேந்தரைப் பிழைத்தலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஆற்றுவார்க்கு - (மூவகை)யாற்றலுமுடைய வர்க்கு, ஆற்றாதார் - அவ்வாற்றலில்லாதவர், இன்னா - இன்னாதை வைகளை, செயல் - (முற்பட்டு) செய்தல், கூற்றத்தை - (தா னேயும் வருந் தன்மையனாகிய) யமனை, கையால் - (அதற்குமுன் னே) கைகாட்டி, விளித்தற்று - அழைத்தாலொக்கும்.

**894.** **The weak doing evil to the strong is like beckoning Yama to come (and destroy them).**

---

ரு. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(பரி-ரை.) எ-து,—பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற் செறப்பட்ட அரசர் அவனைத் தப்பி எங்கேபோ யுளராவர்; ஓரிடத்தும் உள ராகார், எ-று.

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வெந்துப்பின் வேந் தாகலால் தந்நிலம் விட்டுப்போயவர்க்கு இடங்கொடுப்பாரில்லை, உளராயின் இவர் இனி யாகாரென்பது நோக்கி அவனோடு நட்புக்கோடற்பொருட்டும் தா மே வந்தெய்திய அவருடைமையை வெளவுதற்பொருட்டுங் கொல்வர், அன் றெனின் உடனேயழிவரென்பன நோக்கி, யாண்டுச்சென்றியாண்டு முளராகா ரென்றார். இதனால் அக்குற்றமுடையார் அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யாரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வெம் துப்பின் - வெவ்விதாகிய வலிமையை யுடைய, வேந்து - வேந்தனால், செறப்பட்டவர் - கோபிக்கப்பட் ட அரசர், யாண்டுச் சென்று - (அவனைத்தப்பி) எங்கேபோய், (உளராவார்,) யாண்டும் - எவ்விடத்தும், உளர் ஆகார் - பிழை த்திரார்.

**895.** **Those who have incurred the wrath of a cruel and mighty potentate will not prosper wherever they may go.**

---

சு. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(பரி-ரை.) எ-து,—காட்டிடைச் சென்றானொருவன் ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானாயினும் ஒருவாற்றான் உயிருய்தல் கூடும்; தவத்தாற் பெரியா ரைப்பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார், எ-று.

தீ முன் உடம்பினைக் கதுவி அதுவழியாக உயிர்மேற் சேறலின் இடையே உய்யவுங் கூடும், அருந்தவர்வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அத னுள்ளே யாவர்க்குங் காத்த லரிதாகலின், அது கூடாதாகலான் அதற்சேது வாய பிழை செய்யற்க வென்பதாம்.

(தெ-ப-ரை.)—(காட்டிடைச்சென்றுஒருவன்) எரியால்-(அவ்விடத்து) தீயால், சுடப்படினும் - சுடப்பட்டாலும், உய்வு - (ஒருவழியால்) உயிர்பிழைத்தல், உண்டாம் - கூடும்; பெரியார் - (தவத்தால்) பெரியார்க்கு, பிழைத்து ஒழுகுவார் - பிழை செய்து நடப்பவர், உய்யார் - (எவ்வழியாலும்) உயிர்பிழையார்.

**896.** Though burnt by a fire (from a forest), one may perhaps live; (but) never will he live who has shown disrespect to the great (devotees).

---

எ. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின்.

(பரி - ரை.) எ-து,—சாப வருள்கட் கேதுவாய பெருமை மாட்சிமைப் பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வராயின் உறுப்பழகுபெற்ற அவனரசாட்சி யும் ஈட்டிவைத்த பெரும்பொருளும் என்பட்டுவிடும், எ-று.

உறுப்பு அமைச்சு, நாடு, அரண், படை யெனவிவை. செறினென்பது அவர் செறுமை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான் முன் வருவனவற்றிற் கும் இஃதொக்கும். அரசர் தஞ்செல்வக்களிப்பான் அருந்தவர்மாட்டுப் பிழை செய்வாராயின், அச்செல்வம் அவர் வெகுளித்தீயான் ஒருகணத்துள்ளே வெந் துவிடுமென்பதாம்.

(தெ - ப - ரை)—தகை - (சாபானுக்கிரகங்களுக்கு ஏதுவாகிய) பெருமையால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, தக்கார்-அருந்தவர், செறின் - (அரசனை) கோபிப்பாராயின், வகை - அங்கங்களால், மாண்ட-அழகுபெற்ற, வாழ்க்கையும் - (அவன்) அரசாட்சியும், வான் பொருளும் - (சம்பாதித்து வைத்த) பெரும் பொருளும், என்னும் - எப்படியாய்விடும்.

**897.** If a king incurs the wrath of the righteous great, what will become of his government with its splendid auxiliaries and (all) its untold wealth?

---

அ. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(பரி-ரை.) எ-து,—குன்றத்தையொக்கும் அருந்தவர் கெட நினைப்பாரா யின், அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தங்குடியொ டும் மாய்வர், எ-று.

வெயில் மழை முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும் உள்ளிட்ட குணங் களுடைமையின், குன்றன்ன ரென்றார்: "மல்லன் மலையனைய மாதவர்" என்

ரூர் பிறரும். நிலைபெற்றாற் போறலாவது இறப்பப் பெரியராகலின் இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லையென்று கண்டாராற் கருதப்படுதல்.

(தெ - ப - ரை.)—குன்று அன்னர் - மலையையொக்கும் அருந்தவர், குன்ற - கெட, மதிப்பின் - நினைப்பாராயின், நிலத்து - இந்நிலத்து, நின்று அன்னர் - நிலைபெற்றாற்போலுள்ள செல்வர், குடியொடு - (தம்) குடியோடு, மாய்வர் - (அப்பொழுதே) கெடுவர்.

**898. If (the) hill-like (devotees) resolve on destruction, those who seemed to be everlasting will be destroyed root and branch from the earth.**

---

௯௯. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(பரி - ரை.) எ-து,—காத்தற் கருமையான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வராயின், அவராற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்து கெடும், எ-று.

"வேந்தன் மேய தீம்புன லுலகமும்" என்றார் பிறரும். நகுடனென்பான் இந்திரன் பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வ தோர் பிழைசெய அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தா னென்பதனை யுட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவை நான்கு பாட்டானும் முனிவரைப் பிழைத்தலின் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—ஏந்தியகொள்கையார் - (காத்தற்கருமையால்) உயர்ந்த விரதங்களை யுடையார், சீறின் - (அவர்வலிமையால்) கோபித்தால், வேந்தனும் - இந்திரனும், இடைவேந்து முரிந்து - நடுவே தன்பதம் இழந்து, கெடும் - கெடுவான்.

**899. If those of exalted vows burst in a rage, even (Indra) the King will suffer a sudden loss and be entirely ruined.**

---

௯0. இறந்தமைந்த சார்புடையா ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(பரி - ரை.) எ-து,—கழியமிக்க தவத்தினையுடையார் வெகுள்வராயின், அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரியசார்பு உடையராயினும், அதுபற்றி உய்யமாட்டார், எ-று.

சார்பு - அரண், படை, பொருள், நட்பெனவிவை. அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலாற் றிரிபுரம்போல அழிந்துவிடு மாகலின், உய்யாரென்றார். சீருடையது சீரெனப்பட்டது. இதனால் அக்குற்றமுடையார் சார்புபற்றியும் உய்யாரென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சிறந்து அமைந்த - மிகவும் அதிகமான, சீரார் - தவத்தையுடையவர், செறின் - கோபிப்பாராயின், (அக்

கோபிக்கப்பட்டவர்), இறந்து அமைந்த - மிகவும் பெரிய, சார்பு உடையாராயினும் - துணையாய அங்கங்களை யுடைவராயினும், உய்யார் - (அதுபற்றி) உய்யமாட்டார்.

**900.** Though in possession of numerous auxiliaries, they will perish who are exposed to the wrath of the noble whose penance is boundless.

---

## ௯௰௧-ம். அதி. பெண்வழிச்சேறல்.

இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கஞ்சிதைத்தல் அழிவு தலைத்தருத லென்னுந் தொழில்களாற் பகையோடொத்தலிற் பகைப் பாற் படுவனவாம்; ஆகலான் அவற்றைப் பகைப் பகுதிய திறுதிக்கட் கூறுவான் றொடங்கி, முதற்கட் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃதாவது தன்வழி யொழுகற் பாலளாய இல்லாள்வழியே தான் ஒழுகுதல்.

௧. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

(பரி-உரை.) எ-து,—இன்பங் காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவ டன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றுணையாய அறத்தினை யெய்தார்; இனிப் பொருள் செய்தலை முயல்வார் அதற் கிடையீடென்று இகழும் பொருளும் அவ் வின்பம், எ-று.

மனையும் விழைதலும் பயனும் ஆகுபெயர். அவ்வின்பம் - அவடன்மைய ராதற்கு ஏதுவாய வின்பம். அஃது அவளாற் பயனாய வறத்தினும் அவ்வறத் திற்குந் தனக்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்லவிடாமையின், விடற்பாற் றென்பதாம்.

(தெ-ப-உரை.)—மனை விழைவார் - (இன்பங் காரணமாக) தம்மனையாளை விரும்பி (அவள்வழி) நடப்பவர், மாண் பயன் - (தமக்கு) இனியதுணையாகிய (அறத்தை), எய்தார் - அடையார்; வினை விழைவார் - பொருள் சம்பாதித்தலிலே முயல்பவர், வேண்டாப் பொருளும் - (அதற்கு விரோதமென்று) இகழும்பொருளும், அது - அவ்வின்பம்.

**901.** Those who lust after their wives will not attain the excellence of virtue; and it is just this that is not desired by those who are bent on acquiring wealth.

---

௨. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

(பரி-உரை.) எ-து,—தன் ஆண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்துகின்ற செல்வம் இவ்வுலகத்து ஆண்பாலார்க் கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும், எ-று.

எய்துகின்றதாயிற்று, படைக்கும் ஆற்ற லிலனாகலின். அச்செல்வத்தால் ஈதலுந் துய்த்தலும் முதலிய பயன்கொள்வாள் அவளாகலின், அவ்வாண்

ருக

மைச்செய்கை அவள்கண்ண தாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அத னாற் றன் ஆண்மையின்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் பெரியதோர்நாணைக நாணுத்தரு மென்றார். இவை யிரண்டுபாட்டானும் மனை விழைதற் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—பேணாது - (தன்னாண்மையை) விரும்பா மல், பெண்விழைவான் - (மனையவளது) பெண்மையை விரும்பு வோனது, ஆக்கம் - செல்வம், (இவ்வுலகத்து ஆண்பாலார்க் கெல்லாம்), பெரியது ஓர் நாண் - மிக்கதொரு வெட்கம், ஆக - உண்டாக, நாணு - நாணுதலை, தரும் - (தனக்கும்) கொடுக்கும்.

**902.** The wealth of him who, regardless (of his manliness), devotes himself to his wife's feminine nature will cause a great shame (to all men) and to himself.

---

ஙு. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

(பரி-ை.) எ-து,—ஒருவன் இல்லாண்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச் சம் அஃதிலராய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத் துங் கொடுக்கும், எ-று.

அவடான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவனை யஞ்சுதல் இயல்பின் மையாயிற்று. அங்ஙன மஞ்சி யொழுகுதலின், அவனை நியமிப்பா ரில்லையாம்; ஆகவே, எல்லாக்குற்றமும் விளையுமென்பது நோக்கி, எஞ்ஞான்றும் நாணுத் தருமென்றார்.

(தெ-ப-ை.)—(ஒருவன்) இல்லாள் கண் - இல்லாளி டத்து, தாழ்ந்த இயல்பு இன்மை - தாழ்தற்கு ஏதுவாகிய அச் சம், நல்லாருள் - (அவ்வச்சமில்லாத) நல்லாரிடத்து, (செல்லு ங்கால்) நாணு - நாணுதலை, எஞ்ஞான்றும் - எந்நாளும், தரும்- (அவனுக்கு) கொடுக்கும்.

**903.** The frailty that stoops to a wife will always make (her husband) feel ashamed among the good.

---

ச. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(பரி-ை.) எ-து,—தன் மனையாளை யஞ்சி ஒழுகுகின்ற மறுமைப்பய னில் லாதானுக்கு வினையை ஆளுந்தன்மை உண்டாயவழியும் நல்லோராற் கொள் ளாடப்படாது, எ-று.

உண்டாயவழியுமென்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ் செய்தற் குரிய நன்மை யின்மையின் மறுமையிலாள னென்றும், வினையை யாளுந்தன்மை தன்றன்மை யில்லாத அவனுன் முடிவுபோகாமையின் வீறெய்த லின்றென்றுங் கூறினார்.

(தெ-ப-ை.)—மனையாளை - (தன்) மனையாளை, அஞ்சும்- அஞ்சி நடக்கின்ற, மறுமை இலாளன் - மறுமைப்பய னில்லாத

வனுக்கு, வினை ஆண்மை - தொழிலை யாளுந்தன்மை, (உண்டாகியவழியும்) வீறு எய்தல் இன்று - (நல்லோராலே) கொண்டாடப்படாது.

**904.** The undertaking of one, who fears his wife and is therefore destitute of (bliss), will never be applauded.

---

௫. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

(பரி-ரை.) எ-து,—தன் மனையாளை யஞ்சுவான் தான் றேடிய பொருளே யாயினும் அதனால் நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும், எ-று.

நல்லார் - தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் முதலாயினாரும் நல்விருந்தினரும். நல்லன செய்தல் - அவர்விரும்புவன கொடுத்தல். அது செய்யவேண்டும் நாள்களினு மென்பார் எஞ்ஞான்று மென்றார். "இல்லாளை யஞ்சி விருந்தின்முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாளனாக" என்றார் பிறரும்.

(தெ-ப-ரை.)—இல்லாளை அஞ்சுவான் - (தன்) மனையாளை அஞ்சுவோன், (தான் தேடியபொருளே யாயினும்), நல்லார்க்கு- நல்லவர்க்கு, நல்ல செயல் - (அப்பொருளாலே) நல்லவைகள் செய்தற்கு, எஞ்ஞான்றும்-எந்நாளும், அஞ்சும்-அஞ்சாநிற்பன்.

**905.** He that fears his wife will always be afraid of doing good deeds (even) to the good.

---

௬. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(பரி-ரை.) எ-து,—தம் மில்லாளுடைய வேய்போலுந் தோளினை அஞ்சுவார் வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மை யிலர், எ-று.

அமரர்போல வாழ்தலாவது பகைத்த வீரர் தோள்களையெல்லாம் வேறலான் நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின், வாழினு மென்றார். அமையார்தோ ளெனவே, அஞ்சுதற் காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர் தோள்களை வென்றாராயினும் இல்லாடோள்களை அஞ்சுவார் ஆண்மையில ரென்பதாம். இவை நான்கு பாட்டானும் அவளை யஞ்சுதற் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இல்லாள் - (தம்) மில்லாளுடைய, அமை ஆர் தோள் - வேய்போலுந் தோளுக்கு, அஞ்சுபவர் - அஞ்சி நடப்பவர், இமையாரின் - (வீரத்தாலே சுவர்க்கமடைந்த) தேவர்போல, வாழினும் - (இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும், பாடு இலர் - ஆண்மை யிலர்.

**906.** They that fear the bamboo-like shoulders of their wives will be destitute of manliness though they may flourish like the gods.

---

எ. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

(பரி-ரை.) எ-து,—நாணின்றித் தன் னில்லாளது ஏவற்றொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண்டன்மையின் நாணினையுடைய அவள் பெண்டன்மையே மேம்பா டுடைத்து, எ-று.

நாணுடைப் பெண்ணென வேண்டாது கூறியது அவளேவல் செய்வானது நாணின்மை முடித்தற் காதலின், அம்மறுதலைத்தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல்—ஆகுபெயர், இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்துக் கோடற்சிறப்புத் தோன்றப் பெண்ணே யெனப் பிரித்தார்.

(தெ-ப-ரை.)—பெண் - இல்லாளது, ஏவல் - ஏவற்றொழிலை, செய்து ஒழுகும் - (நாணமில்லாமல்) செய்து திரிகின்றவனது, ஆண்மையின்-ஆண்டன்மையைக்காட்டிலும், நாண் உடை- நாணத்தையுடைய, பெண்ணே - (அவள்) பெண்தன்மையே, பெருமை - மேம்பாட்டை, உடைத்து - உடையது.

**907.** **Even shame-faced womanhood is more to be esteemed than the shameless manhood that performs the behests of a wife.**

---

அ. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட்
பெட்டாங் கொழுகு பவர்.

(பரி-ரை.) எ-து,—தாம் வேண்டியவா றன்றித் தம்மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார் தம்மொடு நட்புச்செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார்; அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ் செய்யவு மாட்டார், எ-று.

நன்னுதலா ளென்பதனை "அமையார்தோள்" என்புழிப்போலக் கொள்க. அவடானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலுங் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—(தாம் வேண்டியபடியன்றி) நல் நுதலாள் - (தம்) மனையாள், பெட்டு ஆங்கு - வேண்டியபடி, ஒழுகுபவர் - நடப்பவர், நட்டார் - (தம்மோடு) நட்புச்செய்தவரது, குறை - குறையை, முடியார் - முடிக்கமாட்டார்; (அதுவல்லாமலும்) நன்று - (மறுமைக்குத் துணையாகிய) அறத்தையும், ஆற்றார் - செய்யமாட்டார்.

**908.** **Those who yield to the wishes of their wives will neither relieve the wants of (their) friends nor perform virtuous deeds.**

---

கூ. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

(பரி-ரை.) எ-து,—அறச் செயலும் அது முடித்தற்கு ஏதுவாய பொருட் செயலும் அவ்விரண்டின் வேறாய இன்பச் செயல்களும் தம்மனையாள் ஏவல் செய்வார் மாட்டு உளவாகா, எ-று.

புலன்களைத்தாகலின், பிறவினையெனப் பன்மை யாயிற்று. அவை நோக்கி அறச்செயல் பொருட்செயல்கள் முன்னே யொழிந்தார்க்குத் தலைமை அவன் கண்ணதாகலின், பின் அவைதாமும் இலவாயினவென்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினர். இவை மூன்று பாட்டானும் அவளேவல் செய்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அறவினையும் - அறச்செயலும், ஆன்ற பொருளும் - அது முடித்தற்கு ஏதுவாகிய பொருட்செயலும், பிறவினையும் - அவ்விரண்டின் வேறாகிய இன்பச் செயல்களும், பெண் ஏவல் - (தம்) மனையாளேவலை, செய்வார்கண் - செய்பவரிடத்து, இல் - உண்டாகா.

**909.** From those who obey the commands of their wives are to be expected neither deeds of virtue, nor those of wealth, nor (even) those of pleasure.

---

க0. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

(பரி-ரை.) எ-து,—கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத்தினையும் அதனானாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது, எ-று.

"இடனில் பருவத்தும்" எனவும் "இடனின்றி யிரந்தோர்க்கு" எனவும் வந்தமையான், இடனென்பது அப் பொருட்டாதலறிக. இளமைக்காலத்துமென்பார், எஞ்ஞான்று மென்றார். அப் பேதைமை யாவது மேற்சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல் செய்த லென்னும் மூன்றற்குங் காரணமாயது. எதிர்மறை முகத்தான் அம் மூன்றும் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—எண்சேர்ந்த - (கரும) ஆலோசனையிலே சென்ற, நெஞ்சத்து - மனத்தையும், இடன் - (அதனாலாகிய) செல்வத்தையும், உடையார்க்கு - உடையவர்களுக்கு, பெண் சேர்ந்து ஆம் - மனையாளைச் சேர்தலால் விளையும், பேதைமை - அறிவின்மை, எஞ்ஞான்றும் - எக்காலத்தும், இல் - உண்டாகாது.

**910.** The foolishness that results from devotion to a wife will never be found in those who possess a reflecting mind and a prosperity (flowing) therefrom.

---

## கூ௨-ம். அதி. வரைவின் மகளிர்.

அஃதாவது தந்நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

க. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனை அன்பு பற்றி விழையாது பொருள் பற்றி விழையும் மகளிர் அது கையுறுந் துணையும் தாம் அன்பு பற்றி விழைந்தாராகச் சொல்லும் இனிய சொல் அவனுக்குப் பின் இன்னாமையைப் பயக்கும், எ-று.

பொருளென்புழி இன் விகாரத்தாற் றொக்கது. ஆய்ந்த தொடியினையுடையா ரென்றதனானும், இனிய சொல் லென்றதனானும், அவர் கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின் வறுமை பயத்தலின், அது கொள்ளற்க வென்பதாம்.

(தெ-ப-ரை.)—அன்பின் விழையார்-(ஒருவனை) அன்புபற்றி விரும்பாராகி, பொருள் விழையும் - பொருள்பற்றி விரும்பும், ஆய் தொடியார் - ஆய்ந்தணிந்த வளையையுடைய மகளிர், இன்சொல் - (அது கைவருமளவும் அன்புபற்றி விரும்பினராகச் சொல்லும்) இனியசொல், இழுக்கு - இன்னாமையை, தரும் - (அவனுக்கு) கொடுக்கும்.

**911.** The sweet words of elegant braceleted (prostitutes) who desire (a man) not from affection but from avarice, will cause sorrow.

---

உ. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு உள்ளபொருளை அளந்தறிந்து அஃதெய்துந்துணையும் தம் பண்புடைமை சொல்லும் பண்பில்லாத மகளிரது ஒழுகலாற்றினை ஆராய்ந்தறிந்து அவரைப் பொருந்தாது விடுக, எ-று.

பண்பு சொல்லின்க ணல்லது தங்கட் கிடவாமை தோன்றப் பண்பின் மகளிரென்றும், அவர்க்கு அது சாதிதருமமாதல் நூலானே யன்றி அவர் செயலானு மறிந்தென்பார் நயன்றூக்கி யென்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின் நள்ளாவிடலென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—பயன் தூக்கி - (ஒருவனுக்கு உள்ள) பொருளை அளந்தறிந்து, பண்பு உரைக்கும் - (அது கிடைக்குமளவும்) தமது குணமுடைமை சொல்லும், பண்பு இல் மகளிர் - குணமில்லாத மகளிரது, நயன் தூக்கி - நடக்கைவழியை ஆராய்ந்தறிந்து, நள்ளா - (அவரை) பொருந்தாமல், விடல் - விடக்கடவர்.

**912.** One must ascertain the character of the ill-natured women who after ascertaining the wealth (of a man) speak (as if they were) good natured-ones, and avoid intercourse (with them).

---

௩. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

(பரி-ரை.) எ-து,—கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்ம்மையையுடைய முயக்கம் பிணமெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன் னறியாத பிணத்தைத் தழுவினாற் போலும், எ-று.

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதானை முயங்குங்கால் அவர் குறிப்புக் கூலிக்குப் பிண மெடுப்

பார் காணப்படாததோ ரிடத்தின்கண் இயை பில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போ டொக்கு மெனவே, அகத்தால் அருவராநின்றும் பொருணோக்கிப் புறத்தாற் றழுவுவர் அதனையொழிக வென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—பொருள் பெண்டிர் - (கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்) பொதுமகளிரது, பொய்ம்மை - பொய்ம்மையையுடைய, முயக்கம் - தழுவுதல், (பிணமெடுப்பவர்) இருட்டு அறையில் - இருள்வீட்டில், ஏதில் பிணம் - முன்னறியாதபிணத்தை, தழீஇ அற்று - தழுவினாற்போலும்.

**913.** The false embraces of wealth-loving women are like (hired men) embracing a strange corpse in a dark room.

---

௪. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

(பரி-ை.) எ-து;—இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினை யுடையார் தீண்டார், எ-று.

அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், பொருட்பொருள் அருட்பொருளென விசேடித்தார். புன்மை - இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்ந்நலம் மறுதலை யாகலின், தோயா ரென்பதாம்.

(தெ-ப-ை.)—பொருள் பொருளார் - (இன்பமாகிய பொருளை இகழ்ந்து) பொருளாகிய பொருளையே விரும்பு மகளிரது, புல் நலம் - புல்லிய நலத்தை, அருள் பொருள் - அருளோடுகூடியபொருளை, ஆயும் - ஆராய்ந்து சம்பாதிக்கும், அறிவினவர் - அறிவையுடையவர், தோயார் - தீண்டார்.

**914.** The wise who seek the wealth of grace will not desire the base favours of those who regard wealth (and not pleasure) as (their) riches.

---

௫. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

(பரி-ை.) எ-து,—இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கை யறிவினை யுடையார் பொருள் கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார், எ-று.

மதிநன்மை — முற்பிறப்புகளிற் செய்த நல்வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல். அதனு னன்றிக் கல்வி யறிவு மாட்சிமைப் படாமையின் 'மதிநலத்தின் மாண்டவறிவினவ' ரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவ ராசையது பொய்ம்மையும் மெய்ந்நலத்தது பொதுமையும் விளங்கித் தோன்றலின் தோயாரென்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—மதி நலத்தின் - (இயற்கையாகிய) மதிநன்மையால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, அறிவினவர் - (செயற்கை) யறிவையுடையவர், பொது நலத்தார் - (பொருள் கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையையுடைய மகளிரது, புல் நலம் - புல்லிய நலத்தை, தோயார் - தீண்டார்.

**915**. Those whose knowledge is made excellent by their (natural) sense will not covet the trifling delights of those whose favours are common (to all).

---

௬. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

(பரி-ரை.) எ-து,—ஆடல், பாடல், அழகென்பனவற்றாற் களித்துத் தம் புல்லிய நலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர் தோளினை அறி வொழுக்கங்களா லாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார், எ-று.

ஆடன்முதலாகிய மூன்று முடைமை அவர்க்கு மேம்பாடாகலின் தகையென்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியு மாகலின் அவற்றாற் புகழ் பரப்புவார் தோயா ரென்றுங் கூறினார். தந்நல மென்புழி நலம் ஆகுபெயர். இவை மூன்று பாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டா ரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தகை - ஆடல் பாடல் அழகென்பவைகளாலே, செருக்கி - களித்து, புல் நலம் - (தம்) புல்லிய நலத்தை, பாரிப்பார் - (விலை கொடுப்பவர்க்கெல்லாம்) பரப்பு மகளிரது, தோள் - தோளை, தம் நலம் - (அறிவொழுக்கங்களாலாகிய) தமது புகழை, பாரிப்பார் - (உலகத்தே பரப்புதற்குரிய) உயர்ந்தோர், தோயார் - தீண்டார்.

**916**. Those who would spread (the fame of) their own goodness will not desire the shoulders of those who rejoice in their accomplishments and bestow their despicable favours (on all who pay).

---

௭. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

(பரி-ரை.) எ-து,—நெஞ்சினாற் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை நிறையால் நிருத்திய நெஞ்ச மில்லாதார் தோய்வர், எ-று.

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு அவற்றின் மேலதாகலின், புணர்வது உடம்புமாத்திர மென்ப தறிந்து அதுவழி ஓடாது நிற்கும் நெஞ்சினை யுடையார் தோயாமையின், அஃதிலார் தோய்வ ரென்றார்.

(தெ-ப-ரை.) நெஞ்சின் - நெஞ்சினால், பிற - வேறுபொருள்களை, பேணி - ஆசைப்பட்டு, (அவை கொடுப்பவரை) புணர்பவர் - (அவைகாரணமாக மெய்யினாலே) புணரு மகளிரது,

தோள் - தோள்களை, நிறை நெஞ்சம் இல்லவர் - நிற்கச்செய்தலி ைலே (திருந்திய) நெஞ்சமில்லாதவர், தோய்வர் - தீண்டுவர்.

**917.** Those who are destitute of a perfectly (reformed) mind will covet the shoulders of those who embrace (them) while their hearts covet other things.

---

அ. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(பரி-ரை.) எ-து,—உருவு சொற் செயல்களான் வஞ்சித்தலை வல்ல மக ளிரது முயக்கத்தை அவ் வஞ்சனை ஆராய்ந்தறியு மறிவுடைய ரல்லார்க்கு அண ங்குதாக்கு என்று சொல்லுவர் நூலோர், எ-று.

அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு - தீண் டல். இவ் வுருவகத்தான் அம் முயக்கம் முன் இனிது போன்று பின் உயிர்கோ டல் பெறும். இது நூலோர் துணிவென்பது தோன்ற அவர்மேல் வைத் துக் கூறினர். அப் பெயர் அவாய் நிலையான் வந்தது.

(தெ-ப-ரை.)—மாய மகளிர்-(உருவு சொற் செயல்களால்) வஞ்சித்தல் வல்ல மகளிரது, முயக்கு - புணர்ச்சியை, ஆயும் - (அவ்வஞ்சனையை) ஆராய்ந்தறியும், அறிவினர் அல்லார்க்கு-அறி வுடையவ ரல்லாதவர்க்கு, அணங்கு - அணங்குதாக்கு, என்ப - என்று சொல்வர் (நூலோர்).

**918.** The wise say that to such as are destitute of discerning sense the embraces of faithless women are (as ruinous as those of) the celestial female.

---

கூ. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்தோர் இழிந்தோ ரென்னாது விலை கொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லிய தோள்கள் அக் குற்றத்தை யறியும் அறிவில்லாத கீழ் மக்கள் புக்கழுந்து நிரயம், எ-று.

உயர்தற் கேதுவாகலின், புரை யெனப்பட்டது. சாதியா னிழிந்தாரி னீக்குதற்குப் புரையிலாப் பூரியர்க ளென்றும், அவர் ஆழ்தற்கேது உருவமுத லிய மூன்றுமென்பது தோன்ற மாணிழையார் மென்றோ ளென்றும், அவர்க்கு அளற்றினை யிடையின்றிப் பயக்கு மென்பது தோன்ற உருவக மாக்கியுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—வரைவு இலா - உயர்ந்தோர் இழிந்தோரென் னாது விலைகொடுப்பவர் யாவரையும் கூடும், மாண் இழையார் - மாட்சிமைப்பட்ட ஆபரணத்தை யுடையவரது, மெல் தோள் - மெல்லியதோள்கள், புரை இலா - (அக்குற்றத்தை அறியும்) அறி வில்லாத, பூரியர்கள் - கீழ்மக்கள், ஆழும் - (புகுந்து) அழுந் தும், அளறு - நரகமாம்.

**919.** The delicate shoulders of prostitutes with excellent jewels are a hell into which are plunged the ignorant base.

௰. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(பரி-ரை.) எ-து,—கவர்த்த மனத்தினையுடைய மகளிரும் கள்ளும் சூது மென இம்மூன்றும் திருமகளாற் றுறக்கப்பட்டார்க்கு நட்பு, எ-று.

இருமனம்—ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தே யுடைய மனம். கவறு—ஆகுபெயர். ஒத்த குற்றத்த வாகலின், கள்ளும் சூதும் உடன் கூறப்பட்டன. வடநூலாரும் இக்கருத்தான் விதனமென உடன் கூறினார். வருகின்ற அதிகார முறைமையும் இதனா னறிக. இணைவிரா யெண்ணியவழிப் பன்மை பற்றி முடிபு கோடலின், ஈண்டு அஃறிணையாற் கொண்டது. திரு நீக்கப் பட்டமை இக்குறிகளான் அறியப்படு மென்பதாம். இவை நான்கு பாட்டானும் சேர்வார் இழிந்தோ ரென்பது கூறப்பட்டது.

(தெ - ப-கை.)—இரு மனப் பெண்டிரும் - கவர்மனத்தை யுடைய மகளிரும், கள்ளும் - கள்ளுண்ணலும், கவறும் - சூதும், திரு - திருமகளால், நீக்கப்பட்டார் - விடப்பட்டவர்க்கு, தொடர்பு - நட்புகளாம்.

**920.** Treacherous women, liquor, and gambling are the associates of such as have been forsaken by Fortune.

## கூ௩-ம். அதி. கள்ளுண்ணாமை.

இனி ஒழுக்கமும் உணர்வு மழித்தற்கண் அவ்வரைவின் மகளிரோ டொப்பதாய கள்ளினை யுண்ணாமையது சிறப்பு எதிர்மறைமுகத்தாற் கூறுகின்றார்.

௧. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

(பரி-ரை.) எ-து,—கள்ளின்மேற் காதல்செய்தொழுகு மரசர் எஞ்ஞான்றும் பகைவரா னஞ்சப்படார்; அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையு மிழப்பர், எ-று.

அறிவின்மையால் பொருள் படை முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோரா னெய்திநின்ற ஒளியினையும் இகழ்ச்சியான் இழப்பரென்பதாம். இவை யிரண்டானும் அரசு இனிது செல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கள் காதல் கொண்டு-கள்ளின்மேல் ஆசை கொண்டு, ஒழுகுவார் - நடக்குமரசர், எஞ்ஞான்றும் - எந்நாளும், உட்கப்படார் - (பகைவரால்) அஞ்சப்படார்; (அதுவேயல்லாமல்) ஒளி - (முன்பெற்றுநின்ற) ஒளியையும், இழப்பர்—.

**921.** Those who always thirst after drink will neither inspire fear (in others) nor retain the light (of their fame).

௨. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
ளெண்ணப் படவேண்டா தார்.

(பரி-ரை.) எ-து,—அறிவுடையராயினர் அஃதிலராதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணுதொழிக; அன்றியே உண்ணல் வேண்டுவார் உளராயின், நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார் உண்க, எ-று.

பெறுதற்கரிய அறிவைப் பெற்றுவைத்தும் கள்ளானழித்துக் கொள்வாரை இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் எண்ணுராகலின், சான்றோரா னெண்ணப்பட வேண்டாதா ருண்க வென்றார்.

(தெ-ப-ரை.)—(அறிவுடையராயினோர்), கள்ளை - (அவ்வறிவுகெடுதற்கு ஏதுவாகிய) கள்ளினை, உண்ணற்க - உண்ணுதிருக்கக்கடவர்; உணில் - உண்ணவேண்டுவா ருண்டாயின், சான்றோரான் - நல்லோரால், எண்ணப்பட வேண்டாதார் - எண்ணப்படுதலை வேண்டாதவர், உண்க - உண்ணக்கடவர்.

**922.** Let no liquor be drunk; if it is desired, let it be drunk by those who care not for the esteem of the great.

---

௩. ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(பரி-ரை.) எ-து,—யாது செய்யினும் உவக்குந்தாய் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாதாம்; ஆனபின் குற்றம் யாதும் பொறாத சான்றோர் முன்பு களித்தல் அவர்க்கியாதாம்? எ-று.

மனமொழிமெய்கள் தம்வயத்த வன்மையான் நாணழியும், அழியவே, ஈன்றாட்கும் இன்னாதாயிற்று, ஆனபின், கள் இருமையுங் கெடுத்தலறிந்து செய்மைக்கண்ணே கடியுஞ் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஈன்றாள் முகத்தேயும் - (எது செய்தாலும் மகிழும்) தாய்முன்பாயினும், களி - (கள்ளுண்டு) களித்தல், இன்னாது - துன்பஞ்செய்வதாம்; (ஆதலால்), மற்றுச் சான்றோர் முகத்து-(பின் குற்றம் யாதும் பொறாத) பெரியோர் முன்பு, (அக்களித்தல்), என் - (அவர்க்கு) யாதாகும்.

**923.** Intoxication is painful even in the presence of (one's) mother; what will it not then be in that of the wise?

---

௪. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணப் பெருங்குற்றத் தார்க்கு.

(பரி-ரை.) எ-து,—கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவருமிகழும் மிக்க குற்றத்தினை யுடையாளை நாணென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கஞ்சி அவர்க்கெதிர்முக மாகாள், எ-று.

காணுதற்கு மஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவாராகலிற் பேணு வென்றும், பின் ஒருவாற்றானுங் கழுவப்படாமையிற் பெருங்குற்றமென்றும், இழிந்தோர்பா லில்லாமையின் நல்லாளென்றும், கூறினர். பெண்பாலாக்கி யது வடமொழி முறைமைபற்றி. இவை மூன்றுபாட்டானும் ஒளியிழத்தற் காரணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கள் என்னும் - கள்ளென்றுசொல்லப்ப டுகிற, பேணு - (யாவரும்) இகழும், பெருங் குற்றத்தார்க்கு - மிகுந்த குற்றத்தை யுடையவர்க்கு, நாண் என்னும் நல்லாள் - நாணமாகிய நல்லவள், (அவரைப்பார்த்தற்கு அஞ்சி) புறங் கொடுக்கும் - எதிர் முகமாகாள்.

**924.** **The fair maid of modesty will turn her back on those who are guilty of the great and abominable crime of drunkenness.**

---

ரு. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளாற் றனக்கு மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல் அவன் பழவினைப்பயனுய செய்வ தறியாமையைத் தனக்குக்காரணமாக வுடைத்து, எ-று.

தன்னை யறியாமை சொல்லவே, ஒழிந்தன யாவு மறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. கை அப்பொருட்டாதல் "பழனுடைப் பெருமரம் வீழ்ந் தெனக் கையற்று" என்பதனானு மறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொள்ளுங்காற் றீயதுகொள்ளாமையின், மெய்யறியாமை கொளல் முன்னை யறியாமையான் வந்ததென்பதாம்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்), பொருள் கொடுத்து - விலைப் பொருளைக் கொடுத்து, மெய் அறியாமை - (கள்ளாலே தனக்கு) மெய்ம் மறதியை, கொளல்-கொள்ளுதல், கை அறியாமை - (அ வன் பழவினைப்பயனாகிய) செய்வ தறியாமையை, உடைத்து - (தனக்குக் காரணமாக) உடைத்து.

**925.** **To give money and purchase unconsciousness is the result of one's ignorance of (one's own actions).**

---

சு. துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(பரி - ரை.) எ-து,—உறங்கினார் செத்தாரின் வேறாத லுடையரேனும், அக்காலத் தறிவின்மையான் வேறெனப்படார்; அவ்வாறே கள்ளுண்பார், நஞ் சுண்பாரின் வேறாத லுடையரேனும், எக்காலத்து மறிவின்மையான் வேறெனப் படார், அவர்தாமே யாவர், எ-று.

உறங்கினார்க்கும் கள்ளுண்பார்க்கும் வேற்றுமை உயிர்ப்பு நிற்றல். வேறா தலும் வேறன்மையு முடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரனிறை யாக்கி, திரிக்கப்படுதலால் உறங்கினாரும் நஞ்சுண்பாரு மொப்பர்,

கைவிடப்படுதலாற் செத்தாருங் கள்ளுண்பாரு மொப்பரொன் றுரைப்பாரு முளர். அதிகாரப்பொருள் பின்னதாயிருக்க யாதுமியைபில்லாத நஞ்சுண்பார்க்கு உவமை புணர்த்து ஈண்டுக்கூறல் பயனின்றாகலானும், சொற்கிடக்கை நிரனிறைக்கேலாமையானும், அஃதுரையன்மை யறிக. இவை யிரண்டுபாட்டானும் அவர தறிவிழத்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—துஞ்சினார் - உறங்கினவர், செத்தாரின்-இறந்தாரினும், வேறு அல்லர் - (வேறாயினும் அக்காலத்தே அறிவில்லாமையால்) வேறெனப்படார்; (அப்படியே), கள்ளுண்பவர், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், நஞ்சுண்பார் - (அறிவில்லாமையால்), நஞ்சுண்பவரே யாவர்; [அவரின் வேறாயினும் வேறெனப்படார்.]

**926.** They that sleep resemble the dead; (likewise) they that drink are no other than poison-eaters.

---

ஏ. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(பரி-ரை.) எ-து,—கள்ளை மறைந்துண்டு அக்களிப்பாற் றம்மறிவு தளர்வார் உள்ளூர் வாழ்பவரான் உண்ணிகழ்கின்ற துய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவர், எ-று.

உள்ளூர்—ஆகுபெயர். உண்டென்பது அவாய் நிலையான் வந்தது. உய்த்துணர்தல் தளர்ச்சியாற் களிப்பினை யுணர்ந்து அதனாற் கள்ளுண்ட துணர்தல்.

(தெ-ப-ரை.)—கள் ஒற்றி-கள்ளை மறைந்து (குடித்து), கண் சாய்பவர் - (அக்களிப்பால்) அறிவுசோர்பவர், உள் ஊர் - உள்ளூர் வாழ்பவரால், உள் ஒற்றி - உள்ளே நடக்கிற காரியத்தை) ஆலோசித்தறிந்து, எஞ்ஞான்றும்-எந்நாளும், நகப்படுவர்-சிரிக்கப்படுவார்.

**927.** Those who always intoxicate themselves by a private (indulgence in) drink, will have their secrets detected and laughed at by their fellow-townsmen.

---

அ. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(பரி-ரை.) எ-து,—மறைந்துண்டு வைத்து யான் கள்ளுண்டறியேனென்று உண்ணாதபொழுது தம்மொழுக்கங் கூறுதலை யொழிக; அவ்வுண்டபொழுதே பிறரறியின் இழுக்காமென்று முன்னெஞ்சத் தொளித்த குற்றமும் முன்னை யளவின்மிக்கு வெளிப்படுதலான், எ-று.

களித்தறியே னெனக் காரியத்தாற் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் அது மறைக்கப்படா தென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—களித்து அறியேன் என்பது-(மறைந்துண்டு) கள்ளுண் டறியேனென்று (உண்ணாதபொழுது தமது ஆசாரஞ்)

சொல்லுதலை, கைவிடுக - விடக்கடவர்; (அவ்வுண்டபொழுதே) நெஞ்சத்து ஒளித்ததூஉம்-(முன் பிறர் அறிந்தால் இழுக்காமென்று) மனத்தில் ஒளித்த குற்றமும், ஆங்கே மிகும் - (முன்னையளவின்) மிகுந்து வெளிப்படும் (ஆதலால்.)

**928.** Let (the drunkard) give up saying "I have never drunk;" (for) the moment (he drinks) he will simply betray his former attempt to conceal.

---

கூ. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(பரி - ரை.) எ-து,—கள்ளுண்டு களித்தானொருவனை இஃதாகாதென்று பிறனொருவன் காரணங்காட்டித் தெளிவித்தல் நீருண்மூழ்கின னொருவனைப் பிறனொருவன் விளக்கினால் நாடுதலை யொக்கும், எ-று.

களித்தானை யென்னு மிரண்டாவது "அறிவுடை யந்தண னவனைக்காட் டென்றனனே" என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச் செல்லாதாற்போல அவன் மனத்துக் காரணஞ் செல்லா தென்பதாம். இதனான் அவனைத் தெளிவித்தல் முடியாதென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—களித்தானை - (கள்ளுண்டு) களித்த ஒருவனை, காரணம் காட்டுதல் - (இது ஆகாதென்று மற்றொருவன்) காரணங்காட்டித் தெளிவித்தல், கீழ் நீர் குளித்தானை-நீருள்ளே மூழ்கிய ஒருவனை, தீ - விளக்கினால், துரீஇயற்று - (மற்றொருவன்) தேடுதலை யொக்கும்.

**929.** Reasoning with a drunkard is like going under water with a torch in search of a drowned man.

---

கo. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(பரி-ரை.) எ-து,—கள்ளுண்பானொருவன் தான் அஃதுண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே, காணுங்கால் தானுண்டபொழுதே உளதாஞ் சோர்வினை அவன் சோர்வால் அதுவு மிற்றென்று கருதான்போலும், எ-று.

சோர்வு - மனமொழிமெய்கள் தன்வயத்தவல்ல வாதல். கருதலளவையான் அதனிழுக்கினை யுய்த்துணரின் ஒழியுமென இதனான் அஃதொழிதற் காரணங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(கள்ளுண்பவனொருவன்), கள் உணாப் போழ்தில் - கள்ளையுண்ணாமல் தெளிந்திருந்தபொழுதில், களித்தானை - (கள்ளுண்டு) களித்த பிறனை, காணுங்கால்—, உண்ட தன் சோர்வு-(தான்) உண்டபொழுது உண்டாந் தன்சோர்வை,

உள்ளான் கொல் - (அவன்சோர்வால் அதுவும் இப்படிப்பட்ட தென்று) நினையான்போலும்.

**930.** When (a drunkard) who is sober sees one who is not, it looks as if he remembered not the evil effects of his (own) drink.

---

## ௯௪-ம். அதி. சூது.

---

*இனி அக்கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடை யீடாகிய சூதாடலும் பிணியுழத்தலுங் கூறுவான் றொடங்கி, முதற்கட் சூதின தியல்பு கூறுகின்றார்.*

க. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(பரி-ரை.) எ-து,—தான் வெல்லுமாற்றலுடைய னாயினும் சூதாடலை விரும்பாதொழிக; வென்று பொருளெய்துவார் உளராலெனின் அவ்வென்ற பொருடானும் இரையான் மறைந்த தூண்டி லிரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற் போலும், எ-று.

வேறல் ஒருதலை யன்மையின் வென்றிடினு மென்றும், கருமங்கள் பலவுங் கெடுதலின் வேண்டற்க வென்றுங் கூறினார். எய்தியபொருள் சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தளையென்பதூஉம், அதனாற் பின்றுயருழத்தலும், உவமையாற் பெற்றாம்.

(தெ-ப-ரை.)—வென்றிடினும் - (தான்) வெல்லும்வலிமை யுடையனாயினும், சூதினை - சூதாடுதலை, வேண்டற்க - விரும்பா திருக்கக்கடவன்; (வென்றுபொருள் பெறுவார் உண்டென்றால்) வென்றதும் - அவ்வென்றபொருளும், தூண்டில் பொன் - (இரையால் மறைந்த) தூண்டிலிரும்பை, மீன் விழுங்கியற்று - மீன் விழுங்கியதுபோலும்.

**931.** Though able to win, let not one desire gambling; (for) even what is won is like a fish swallowing the iron in a fish-hook.

---

உ. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(பரி-ரை.)—எ-து, அத்தூண்டிற் பொன்போன்ற ஒன்றனை முன்பெற்று இன்னும் பெறுதுமென்னுங் கருத்தால் நூற்றினை யிழந்து வறியராஞ் சூதர்க்கும் பொருளால் அறனுமின்பமுமெய்தி வாழ்வதொரு நெறியுண்டாமோ ஆகாது, எ-று.

அவ்வாற்றாற் பொருளிழந்தே வருதலான், அதனானெய்தும் பயனும் அவர்க் கில்லை யென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஒன்று எய்தி - (அத்தூண்டி லிரும்புபோன்ற) ஒன்றனை முன்பெற்று, (இன்னும் பெறுவோ மென்னுங்

கருத்தால்), நூறு இழக்கும் - நூற்றினை இழந்து வறியராகும், சூதர்க்கும்-சூதாடுவோர்க்கும், நன்று எய்தி - (அப்பொருளால்) அறமுமின்பமும் பெற்று, வாழ்வது ஓர் ஆறு - வாழ்வதொரு வழி, உண்டாங்கொல் - உண்டாமோ.

**932.** Is there indeed a means of livelihood that can bestow happiness on gamblers who gain one and lose a hundred.

---

௩. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(பரி-ரை.) எ-து,—உருளுங் கவற்றின்கட் பட்ட ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், அரசனீட்டியபொருளும் அவன் பொருள் வருவாயும் அவனை விட்டுப்போய்ப் பகைவர்கண்ணே தங்கும், எ-று.

கவற்றினதுருட்சியை அதனானாய ஆயத்தின்மேலேற்றியும், சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மேலிட்டுங் கூறினார். பொருளாயமென்பது உம்மைத்தொகை. ஆயம்—வடமொழித்திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகலின், அவையிரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—உருள் ஆயம் - (உருளுங் கவற்றில் அகப்பட்ட) ஆதாயத்தை, ஓவாது-இடைவிடாமல், கூறின்-சொல்லிச் (சூதாடு) மாயின், பொருள் - (அரசன் சம்பாதித்த) பொருளும், ஆயம் - (அவன்) பொருள் வருவாயும், போய் - (அவனைவிட்டு) போய், புறமே படும் - பகைவரிடத்தே தங்கும்.

**933.** If the king is incessantly addicted to the rolling dice in the hope of gain, his wealth and the resources thereof will take their departure and fall into other's hands.

---

௪. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(பரி-ரை.) எ-து,—தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ளபுகழையுங் கெடுக்குஞ் சூதுபோல் நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை, எ-று.

அத்துன்பங்கள் முன்னர்க்கூறுப, நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால், சீரழிக்குமென்றார். வறுமைக்கு எல்லையாவதொன்பதாம்.

(தெ-ப-ரை.)—சிறுமை பல - (முன்னில்லாத) துன்பங்கள்பலவும், செய்து - (தன்னை விரும்பினவர்க்கு) செய்து, சீர் - (உள்ள) புகழையும், அழிக்கும் - கெடுக்கும், சூதின் - சூது போல, வறுமை - வறுமையை, தருவது - கொடுக்கவல்லது, ஒன்று - வேறொன்று, இல் - இல்லை.

**934.** There is nothing else that brings (us) poverty like gambling which causes many a misery and destroys (one's) reputation.

---

௫. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

(பரி-உரை.) எ-து,—முற்காலத்துத் தாமுளராகியே இலராகியொழுகினர் கவற்றினையும் அஃதாடுங் களத்தினையும் அவ்வாடற்கு வேண்டுங் கைத்தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர், எ-று.

கைத்தொழில்—வெல்லுமாயம்படப் பிடித்தெறிதல். அவ்விவறுதலாற் பாண்டவர் தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டு மறைந்தொழுகினமையான அநுபவங் காட்டியவாறு. இவை யைந்துபாட்டானும் அதனது வறுமை பயத்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - உரை.)—இல்லாகியார் - (முற்காலத்திலே தாம் இருந்தும்) இல்லாதவரா யொழுகினவர், கவறும் - சூதினையும், கழகமும் - அதையாடு மிடத்தினையும், கையும் - (அவ்வாடுதற்கு வேண்டும்) கைத்தொழிலினையும், தருக்கி இவறியார் - மேற்கொண்டு கைவிடாத வேந்தர்.

**935.** Penniless are those who by reason of their attachment would never forsake gambling, the gambling-place and the handling (of dice).

---

௬. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப் பட்டார்.

(பரி-உரை.) எ-து,—தன்பெயர்சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார் இம்மைக்கண் வயிறாரப்பெறார், மறுமைக்கண் நிரயத்துன்ப முழப்பர், எ-று.

செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில் வேறுபடாமையிற் சூதென்று முகடியென்றும், வெற்றி தோல்விகளுக்கு ஒருபொழுதும் விடாராகலின் ஈண்டு அகடாராரென்றும், பொய்யுங் களவும் முதலிய பாவங்களீட்டலின் ஆண்டு அல்லலுழப்பரென்றுங் கூறினர். வயிறாராமை சொல்லவே, ஏனைப்புலன்களுகரப்பெறாமை சொல்ல வேண்டா வாயிற்று. உழப்பரென்பது எதிர்காலவினை.

(தெ - ப - உரை.)—சூது என்னும்-(தனது பெயர்சொல்லல் மங்கல மல்லாமையால்) சூதென்று (வேறுபெயர்) சொல்லப்படுகிற, முகடியால் - மூதேவியால், மூடப்பட்டார் - விழுங்கப்பட்டவர், அகடு ஆரார் - (இம்மையிலே) வயிறு நிறையப்பெறார்; அல்லல் உழப்பர் - (மறுமையிலே) நரகத்துன்ப மனுபவிப்பர்.

**936.** Those who are swallowed by the Goddess (மூதேவி) called "gambling" will never have their hunger satisfied, but suffer the pangs of hell in the next world.

---

௭. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

(பரி-ரை.) எ-து,—அறம் பொருளின்பங்கட் கடைத்தகாலம் அரசனுக்குச் சூதாடு களத்தின்கட் கழியுமாயின், அக்கழிவு தொன்றுதொட்டுவந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும், எ-று.

பழகியவென்பது பண்புடனும்மியையும். தான் செய்துகொள்ளும் அறமுதலியவேயன்றி முன்னோரைத்தொடங்கி வருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாமென்பதாம்.

(தெ-ப-ரை.)—காலை - (அறம் பொரு ளின்பங்களுக்கு விதித்த) காலம், கழகத்து - சூதாடுமிடத்து, புகின் - (அரசனுக்கு) கழியுமாயின், (அக்கழிவு), — பழகிய - நெடுநாளாய்வந்த, செல்வமும் - (அவன்) செல்வத்தையும், பண்பும் - நற்குணங்களையும், கெடுக்கும் - போக்கும்.

**937.** **To waste time at the place of gambling will destroy inherited wealth and goodness of character.**

---

௮. பொருள்கெடுத்துப்பொய்மேற்கொளீஇயருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(பரி-ரை.) எ-து,—சூது தன்னைப் பயின்றவன்பொருளைக் கெடுத்துப் பொய்ம்மையை மேற்கொள்ளப்பண்ணி, மனத்தெழும் அருளைக்கெடுத்து இவ்வாற்றான் அவனை இருமையினுந் துன்பமுறுவிக்கும், எ-று.

இத்தொழில்கண் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி, வெற்றி, செற்றமென்பன முறையே கருவிகளாகவுங் கொள்க. முன்னதனான் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினுமாம். பொருள்கொடுத்தென்பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிவு மேற்கொளீஇயென்புழி மேற்கோடலாகிய வினைமுதல்வினை.

(தெ-ப-ரை.)—சூது—, பொருள் கெடுத்து-(தன்னைப் பழகினவனது) பொருளைக்கெடுத்து, பொய் - பொய்யை, மேற்கொளீஇ - மேற்கொள்ளப்பண்ணி, அருள்கெடுத்து - (மனதில் எழுகிற) அருளைக்கெடுத்து, (இவ்வழியால்), அல்லல் உழப்பிக்கும் - (அவனை இருமையிலும்) துன்பமுறுவிக்கும்.

**938.** **Gambling destroys property, teaches false-hood, puts an end to benevolence, and brings in misery (here and hereafter).**

---

௯. உடைசெல்வ மூனொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(பரி-ரை.) எ-து,—அரசன் சூதினைத் தனக்கு விநோதத்தொழிலாக விரும்புமாயின் அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையுமென் றிவ்வைந்துஞ் சாராவாம், எ-று.

ஆயம்—ஆகுபெயர். இச்சிறப்புமுறை செய்யுளேக்கிப் பிறழ்நின்றது. செல்வம்—அறுவகை யுறுப்புக்கள். ஊணுடை யென்பனவற்றால் துப்புரவுக

ளெல்லாங் கொள்ளப்படும். காலமும் கருத்தும் பெருமையின், இவையுள வாகாவென்பதாம். இவை நான்குபாட்டானும் சிறுமைபலசெய்து அவற்று ளிருமையுங் கெடுத்தல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(அரசன்) ஆயம் - சூதினை, கொளின் - (தனக்கு விளையாட்டுத்தொழிலாக) விரும்புவானாயின், ஒளி - ஒளியும், கல்வி - கல்வியும், செல்வம் - செல்வமும், ஊண் - ஊணும், உடை - உடையும், என்ற ஐந்தும் - என்றுசொல்லப் பட்ட விவ்வைந்தும், அடையாவாம் - (அவனை) சேராவாம்.

**939**. **The habit of gambling prevents the attainment of these five :—clothing, wealth, food, fame and learning.**

---

கo. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(பரி-ரை.) எ-து,—சூதாடலான் இருமைப்பயன்களையு மிழக்குந்தோறும் அதன்மேற் காதல்செய்யுஞ் சூதன்போல உடம்பான் மூவகைத் துன்பங்களை யும் அனுபவிக்குந்தோறும் அதன்மேற் காதலையுடைத்து உயிர், எ-று.

சூது—ஆகுபெயர். உயிரினதறியாமை கூறுவார்போன்று சூதனதறியா மை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற்பொருட்டு உவமமாக்கிக் கூறினார். இத னெதிர்மறைமுகத்தாற் சூதினை வெறுத்தொழிவானை யொக் கும் உடம்பினை வெறுத்தொழியு முயிரெனவுங் கொள்க. இதனான் அஃதொ ழிதற் கருமையும் ஒழிந்தாரது பெருமையுங் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—இழத்தொறூஉம் - (சூதாடலால் இருமை ப்பயன்களையும்) இழக்குந்தோறும், காதலிக்கும் - (அதன்மே ல்) ஆசைசெய்யும், சூதேபோல் - சூதனேபோல, உயிர்—, துன்பம் உழத்தொறூஉம் - (உடம்பால்) மூவகைத் துன்பங்களை யும், அனுபவிக்குந்தோறும், காதற்று - (அதன்மேல்) ஆசை யையுடைத்து.

**940**. **As the gambler loves (his vice) the more he loses by it, so does the soul love (the body) the more it suffers through it.**

---

## கூரு - ம். அதி. மருந்து.

பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாதமுதலிய பிணிகள் வரும்; அவற்றுட் பழவினையான் வருவன அதன்கழிவின்கணல்லது தீராமை யின் அவையொழித்து, ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின்றிறங் கூறுகின்றார். காரணங்களாவன - உணவு செயல்கள தொவ் வாமையாகலின், பிணிகளுங் காரணத்தான் வருவனவாயின.

க, மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

(பரி-ரை.) எ-து,—உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த வள வினவன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும் ஆயுள்வேத முடையா ரால் வாதமுதலாக வெண்ணப்பட்ட மூன்றுநோயும் அவனுக்குத் துன்பஞ்செ ய்யும், எ-று.

நூலோ ரெண்ணியவெனவே, அவர் அவற்றான்வகுத்த வாதப்பகுதி பித் தப்பகுதி ஐப்பகுதியென்னும் பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றிற் குணவொத் தலாவது சுவை வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்களொ த்தலாவது மனமொழி மெய்களாற்செய்யுந் தொழில்களை அவைவருந்துவத ற்கு முன்னேயொழிதல். இவையிரண்டும் இங்ஙனமன்றி மிகுதல் குறைதல் செய்யின், அவை தத்தநிலையினில்லாவாய் வருத்துமெண்பதாம். காரண மிர ண்டும் அவாய்நிலையான் வந்தன. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. இத னால், யாக்கைகட் கியல்பாகிய நோய் மூவகைத் தென்பதூஉம், அவை துன்ப ஞ்செய்தற் காரணம் இருவகைத் தென்பதூஉம், கூறப்பட்டன. இன்பஞ்செ ய்தற்காரணம் முன்னர்க்கூறுப.

(தெ-ப-ரை.)—(உணவும் செயல்களும் ஒருவன் சரீர சுபா வத்துக்கு ஒத்தவளவினவன்றி) மிகினும் - (அதனின்) மிகு மாயினும், குறையினும் - குறையுமாயினும், நூலோர் - ஆயுள் வேதமுடையோரால், வளி முதல் ஆ-வாதமுதலாக, எண்ணிய- எண்ணப்பட்ட, மூன்று - மூன்றுநோயும், நோய் - துன்பத் தை, செய்யும் - (அவனுக்குச்) செய்யும்.

**941.** If (food and work are either) excessive or deficient, the three things enumerated by (medical) writers, flatulance, biliousness and phlegm, will cause (one) disease.

---

உ. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

(பரி - ரை.) எ-து,—ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளாற் றெளியவறிந்து பின்னுண்ணுமாயின் அவன்யாக்கைக்கு மருந்தென்று வேறுவே ண்டாவாம், எ-று.

குறிகளாவன யாக்கை நொய்ம்மை, நோக்கின்றூய்மை, கரணங்கடொ ழிற் குரியவாதல், பசிமிகுதலென விவை முதலாயின. பிணிகள் யாக்கையவாக லின், யாக்கைக்கென்றார். உணினென்பது அதனருமை தோன்ற நின்றது.

(தெ - ப - ரை.)—(ஒருவன்) அருந்தியது - (முன்) உண்ண ப்பட்டது, அற்றது - சீரணித்தபடியை, போற்றி - (குறிகளா லே) தெளியவறிந்து, உணின் - (பின்னே) உண்பானாயின், யா க்கைக்கு - (அவன்) உடம்புக்கு, மருந்து என-மருந்தென்று, வேண்டாஆம்-(வேறு) வேண்டுவதில்லை.

**942.** No medicine is necessary for him who eats after assuring (himself) that what he has (already) eaten has been digested.

---

௩. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

(பரி - ரை.) எ-து,—முன்னுண்டது அற்றாற் பின்னுண்பதனை அறுமளவறிந்து அவ்வளவிற்றாக உண்க, இறப்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கரிய இம்மானுடயாக்கையைப் பெற்றான் அதனை நெடுங்காலங் கொண்டு செலுத்துநெறி அதுவாகலான், எ-று.

இம்மை மறுமை வீடு பேறுக ளெய்தற்பாலது ஈதொன்றுமேயாகலின் உடம்புபெற்றானென்றும், அது நெடிதுநின்றுழி அவை பெருகச் செய்துகொள்ளலாமாகலின் நெடிதுய்க்குமாறென்றுங் கூறினார். பெற்றாலென்று பாடமோதுவாருமுளர்.

(தெ-ப-ரை.)—அற்றால் - (முன்னுண்ணப்பட்டது) சீரணித்தால், (பின்னுண்ணப்படுவதனை), அளவு அறிந்து - (அறும்) அளவறிந்து, உண்க - (அவ்வளவினதாக) உண்ணக்கடவன்; உடம்பு - (பெறுதற்கரிய விம்மனித) உடம்பை, பெற்றான் - பெற்றவன், நெடிது - நெடுங்காலம், உய்க்கும் ஆறு - (அதனை) கொண்டு செலுத்தும்வழி, அஃது - அதுவாம், (ஆகலால்).

**943**. If (one's food has been) digested let one eat with moderation; (for) that is the way to prolong the life of an embodied soul.

---

௪. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(பரி-ரை.) எ-து,—முன்னுண்டது அற்றபடியையறிந்து பின் மிகப்பசித்து உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கொண் டுண்க, எ-று.

அற்றதறிந்தென்னும் பெயர்த்துறை அதனை யாப்புறுத்தற்பொருட்டு. உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரத மறாதாகலான் அதுவு மறல்வேண்டுமென்பார் மிகப்பசித்தென்றார். பசித்தல்வினை ஈண்டு உடையான்மேனின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களாற் றம்முண் மாறு கொள்ளாமையுமாம். அவையாவன முறையே வாத பித்த ஐகளானாய பகுதிகடாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற் காகாமையும், தேனுநெய்யுந் தம்முளொத்து நஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவாற்றாற் றுய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், கடைப்பிடித் தென்றார்.

(தெ-ப-ரை.)—அற்றது அறிந்து - (முன்னுண்ணப்பட்டது) சீரணித்தபடியை அறிந்து, துவரப் பசித்து - (பின்னே) மிகப் பசித்து, (உண்ணும்போது), மாறு அல்ல - மாறுகொள்ளாத உணவுகளை, கடைப்பிடித்து - குறிக்கொண்டு, துய்க்க - உண்ணக்கடவன்.

**944.** (First) assure yourself that your food has been digested, and never fail to eat, when very hungry, whatever is not disagreeable (to you.)

---

௫. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(பரி-ரை.) எ-து,—அம்மூவகை மாறுகோளுமில்லாத உணவைத் தன்னுள்ளம் வேண்டிய வளவினுனன்றிப் பிணிவாரா வளவினுல் ஒருவனுண்னுமாயின் அவனுயிர்க்குப் பிணிகளாற் றுன்பம் விளைதலுண்டாகாது, எ-று.

உறுவதனை ஊறென்றார்; அஃது இன்பத்திற் செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரோயாதலின், அதன்மேல் வைத்துக்கூறினார். மாறுபா டில்வழியுங் குறைதல் நன்றென்பதாம். இவை நான்குபாட்டானும் உண்ணப்படுவனவும், அவற்றதளவும், காலமும் பயனுங் கூறப்பட்டன.

(தெ - ப - ரை.)—மாறுபாடு இல்லாத - அம்மூவகை மாறுகோளும் இல்லாத, உண்டி - உணவை, மறுத்து - (தன்னுள்ளம் வேண்டியவளவை) மறுத்து, (பிணிவாராதவளவில்), உண்ணின்-(ஒருவன்) உண்டால், உயிர்க்கு-(அவன்) உயிர்க்கு, ஊறுபாடு - (பிணிகளாலே) துன்பம்விளைதல், இல்லை - உண்டாகாது.

**945.** There will be no disaster to one's life, if one eats with moderation, food that is not disagreeable.

---

௬. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்.

(பரி-ரை.) எ-து,—அக்குறைதலை நன்றென்றறிந்து அவ்வாறே யுண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறுபோல் மிகப் பெரியவிரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும், எ-று.

அவ்வாறேயுண்டல் உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது வாதமுதலிய மூன்றும் தத்தநிலையிற் றிரியாமையின் மனமொழிமெய்கள் அவன் வயத்தவாதலும் அதனான் அறமுதலிய நான்குமெய்தலுமாம். இரையை யளவின்றியெடுத்து அதனான்வருந்தும் விலங்கோ டொத்தலின், இரையானென்றார். விதி யெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது இரண்டானும் பெறுதற்கு.

(தெ - ப - ரை.)—இழிவு அறிந்து - அக்குறைதலை (நல்லதென்று) அறிந்து, உண்பான்கண் - (அவ்வாறே) உண்பவனிடத்து, இன்பம்போல்-இன்பம் (நீங்காது நிலைநிற்குமாறு) போல, கழிபேர் இரையான்கண் - மிகப்பெரிய இரையை விழுங்குவோனிடத்து, நோய்—, நிற்கும் - நீங்காதிருக்கும்.

**946.** As pleasure dwells with him who eats moderately, so disease (dwells) with the glutton who eats voraciously.

---

எ. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

(பரி - ரை.) எ-து,—தன்பகுதியும் அதற்கேற்றவுணவும் காலமு மாரா யாது வேண்டியதோருணவை வேண்டியதோர்காலத்து வயிற்றுத் தீயள வன்றி ஒருவன் மிகவுண்ணுமாயின் அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளரும், எ-று.

தெரியாமைவினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன. நோய்—சாதியொருமை. இவை யிரண்டுபாட்டானும் அவ்வகை யுண்ணுவழிப் படு மிழுக்குக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—தெரியான் - (தன்சரீரசுபாவமும் அதற் கேற்ற வுணவும் காலமும்) ஆராயானாகி, (வேண்டிய உணவை வேண்டியகாலத்து), தீயளவு அன்றி-(வயிற்று) தீயளவல்லாமல், பெரிது உண்ணின் - (ஒருவன்) மிகவுண்ணுமாயின், நோய் அளவு இன்றி - எஅளவில்லாமல், படும் - (அவனிடத்தே) வளரும்.

**947.** He will be afflicted with numberless diseases, who eats immoderately, ignorant (of the rules of health.)

---

அ. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(பரி-ரை.) எ-து,—மருத்துவனுயினன் ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற நோயை அதன்குறிகளான் இன்னதென்று துணிந்து, பின் அதுவருதற் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கு முபாயத்தினை யறிந்து, அதனைச் செய்யும் வழிப் பிழையாமற் செய்க, எ-று.

காரணம்—உணவு செயலென முற்கூறிய விரண்டும். அவற்றை ஆயுள் வேதமுடையார் நிதானமென்ப. அவை நாடுதற் பயன் நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதன்முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, அது தணிக்கும் வாயென்றார். "கழு வாயுமுள" என்றார் பிறரும். பிழையாமை—பழையமருத்துவர் செய்துவரு கின்ற முறைமையிற் றப்பாமை.

(தெ - ப - ரை.)—(மருத்துவன்) நோய் - (நோயாளியிடத்து நிகழ்கின்ற) நோயை, நாடி - (அதன் குறிகளால் இன்ன தென்று) துணிந்து, நோய் முதல் - (பின்பு) அந்நோய்வருதற் காரணத்தை, நாடி - ஆராய்ந்து, அது தணிக்கும் வாய் - (பின்) அது தீர்க்கும் உபாயத்தினை, நாடி - அறிந்து, வாய்ப்ப செயல் - (அதனைப்) பிழைபடாமற் செய்யக்கடவன்.

**948.** Let the physician enquire into the (nature of the) disease, its cause and its method of cure and treat it faithfully according to (medical rule).

---

௯. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(பரி-ரை.) எ-து,—ஆயுள்வேதத்தினைக் கற்றமருத்துவன், அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால் ஆதாரனளவினையும் அவன்கணிகழ்கின்ற நோயினளவினையும் தன்செயற்கேற்ற காலத்தினையும், அந்நூனெறியால் நோக்கி அவற்றோடு பொருந்தச்செய்க, எ-று.

ஆதாரனளவு—பகுதி பருவம் வேதனை வலிகளி னளவு. பிணியளவு—சாத்தியம், அசாத்தியம், யாப்பியமென்னுஞ் சாதி வேறுபாடும், தொடக்க நடு வீறென்னும் அதன் பருவவேறுபாடும், வன்மை மென்மைகளு முதலாயின. காலம் - மேற்சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்க வென்பார், கற்றான் கருதிச் செயலென்றார். இவை யிரண்டுபாட்டானும் அவ்விழுக்குப்பட்டுழி மருத்துவன் றீர்க்குமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கற்றான் - (ஆயுள்வேதத்தை) கற்றமருத்துவன், (அவ்வுபாயத்தைச் செய்யுங்கால்), உற்றான்அளவும் - நோயாளி யளவையும், பிணி அளவும் - (அவனிடத்து நிகழ்கின்ற) நோயினளவையும், காலமும் - (தன்செயற்கேற்ற) காலத்தினையும், கருதி - (அந்நூல்வழியால்) நோக்கி, செயல் - (அவைகளோடு பொருந்த) செய்யக்கடவன்.

**949.** The learned (physician) should ascertain the condition of his patient, the nature of his disease, and the season (of the year) and (then) proceed (with his treatment).

---

௧0. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

(பரி - ரை.) எ-து,—பிணிக்கு மருந்தாவது அதனையுற்றவன் அதனைத் தீர்க்கு மருத்துவன் அவனுக்குக் கருவியாகிய மருந்து அதனைப் பிழையாமல் இயற்றுவானென்று சொல்லப்பட்ட நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது, எ-று.

நான்கென்னு மெண் வருகின்றமையின், அதுநோக்கி அப்பாலென்றொழிந்தார். நாற்கூற்றதென்பது விகாரமாயிற்று. அவற்றுள் உற்றவன்வகை நான்காவன—பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலை யுணர்த்தல் வன்மை, மருத்துத்துன்பம் பொறுத்தலென விவை. தீர்ப்பான்வகை நான்காவன—பலபிணிநோய் கண்டற்கஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியு நுண்ணறிவுமுடைமை, பலகாலுந் தீர்த்துவருதல், மனமொழிமெய்க ளேவாதலென விவை. மருந்தின்வகை நான்காவன—பலபிணிகட்குமேற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதினெய்தப்படுதல், பகுதியோடு பொருந்துதலென விவை. இயற்றுவான்வகை நான்காவன — ஆதுரன்மாட்டன்புடைமை, மனமொழிமெய்க ளேவாதல், சொல்லியன அவ்வாறேசெய்தல் வன்மை, அறிவுடைமை யென விவை. இவையெல்லாங் கூடியவழியல்லது பிணி

தீராமையின், இத்தொகுதியையும் மருந்தென்றார். ஆயுள்வேதமுடையாரும் இவை கால்களாக நடக்குமென்பதுபற்றிப் பாதமென்றும், இவை மாறுபட்ட வழிச் சாத்தியமு முதிர்ந்து அசாத்தியமா மென்றுங் கூறினார். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—மருந்து - (பிணிக்கு) மருந்தாவது, உற்றவன் - (அதனை) யடைந்தவன், தீர்ப்பான் - (அதனைத்) தீர்க்கு மருத்துவன், மருந்து - (அவனுக்குச் சாதனமாகிய) மருந்து, உழைச்செல்வான் - (அதனைத்தப்பாமல்) செய்பவன், என்ற - என்றுசொல்லப்பட்ட, அப்பால் - அந்நான்கு பகுதியையுடைய, நாற்கூற்று - நான்குதிறத்தது.

**950.** Medical science consists of four parts, viz. patient, physician, medicine and compounder; and each of these (again) contains four subdivisions.

---

# ஒ ழி பி ய ல்.

இனி அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்கா தொழிந்தவற்ற நியல்பு பதின்மூன் றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி,முதற்கட் குடிமை கூறுகின்றார்.

---

## ௯௬ - ம். அதி. குடிமை.

அஃதாவது உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப் பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச்சிறப்புப் பற்றி இது முன்வைக்கப்பட்டது.

க. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

(பரி-ரை.) எ - து,—செம்மையும் நாணும் சேரக் குடிப்பிறந்தார்மாட் டல்லது பிறர்மாட் டியற்கையாக உளவாகா, எ-று.

இல்லுக்குடி யென்பன ஈண் டுயர்ந்தவற்றின் மேல. செம்மை—கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முண்மாறுகாமை. நாண்—பழி பாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்கவேண்டாமற் றாமேயுளவாம், பிறர்க்காயிற் கற்பித்தவழியும் நெடிது நில்லா வென்பதாம்.

(தெ-ப-ரை.)—செப்பமும் - செம்மையும், நாணும்-வெட்கமும், ஒருங்கு-ஒருசேர, இல் பிறந்தார்கண் அல்லது - உயர்ந்த குடியிலே பிறந்தவரிடத்தல்லாமல் (பிறரிடத்தே), இயல்பு ஆக-சுபாவமாக, இல்லை - உண்டாகா.

**951.** Consistency (of thought, word and deed) and fear (of sin) are conjointly natural only to the high born.

---

௫௬

௨. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
இழுக்கார் குடிப்பிறந் தார்.

(பரி-உரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாணெனப்பட்ட இம் மூன்றன்கண்ணும் கல்வியானன்றித் தாமாகவே வழுவார், எ-று.

ஒழுக்க முதலியன மெய்ம்மொழி மனங்களினவாகலின், அம்முறைய வாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், இழுக்காரென்றார்.

(தெ - ப - உரை.)—குடிப்பிறந்தார்-உயர்ந்த குடியிற்பிறந்தவர், (தமக்குரிய), ஒழுக்கமும்-நன்னடைக்கையும், வாய்மையும்-மெய்ம்மையும், நாணும் - வெட்கமும் ஆகிய, இம்மூன்றும்-இம் மூன்றிடத்தும், இழுக்கார் - (நூலறிவா லல்லாமல் தாமாகவே) வழுவார்.

**952.** The high born will never deviate from these three: good manners, truthfulness and modesty.

---

௩. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகை யென்ப வாய்மைக் குடிக்கு.

(ப-உரை.) எ - து,—எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர், எ-று.

பொய்ம்மை திரிபுடைமையிற் றிரிபின்மையை வாய்மையென்றும், இல்லாரை யெல்லாரு மெள்ளுவராகலின் இகழாமையை அவர் கூறுக்கியுங் கூறினார். குடி—ஆகுபெயர். நான்கின்வகையென்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந்நான்கானுளதாமென் றுரைக்க. இவை மூன்றுபாட்டானுங் குடிப்பிறந்தா ரியல்பு கூறப்பட்டது.

(தெ-ப-உரை.)—வாய்மை - (எக்காலத்தும்) வேறுபடாத, குடிக்கு - குடியிற் பிறந்தவர்க்கு, (வறியவர் சென்றவிடத்து), நகை - முகமலர்ச்சியும், ஈகை - (உள்ளவை) கொடுத்தலும், இன் சொல் - இனியசொற் (சொல்லுதலும்), இகழாமை - இகழாமையும், நான்கும் - (ஆகிய) நான்கும், வகை - (உரிய) வகையாகும், என்ப - என்று சொல்லுவர் (நூலோர்).

**953.** A cheerful countenance, liberality, pleasant words, and an unreviling disposition, these four are said to be the proper qualities of the truly high born.

---

௪. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(பரி-ரை.) எ-து,—பலவாக வடுக்கிய கோடி யளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும், உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தம்மொழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யார், எ-று.

அடுக்கிய கோடியென்பது ஈண் டெண்ணப்படும் பொருண்மே னின்றது. குன்றுந் தொழில்கள் - குன்றுதற் கேதுவாய தொழில்கள்.

(தெ - ப - ரை.)—அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடி-கோடியளவினதாகிய பொருளை, பெறினும்-பெற்றாலும், குடிப்பிறந்தார் - உயர்ந்தகுடியிலே பிறந்தவர், குன்றுவ - (தம்மொழுக்கங்) குன்றுந்தொழில்களை, செய்தலிலர் - செய்யமாட்டார்கள்.

**954.** Though blessed with immense wealth, the noble will never do anything unbecoming.

---

௫. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(பரி-ரை.) எ-து,—தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார் தாங்கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய விடத்துந் தம்பண்புடைமையின் நீங்கார், எ-று.

தொன்றுதொட்டு வருதல் - சேர சோழ பாண்டிய ரென்றாற்போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள் வீழ்வதாகலின், அதனையே கூறினர்.

(தெ - ப - ரை.)—பழம் குடி - பழமைதொட்டுவருகிற குடியிலே பிறந்தவர், வழங்குவது - (தாம்) கொடுக்கும்பொருள், உள் வீழ்ந்த கண்ணும் - முன்னையளவிலே சுருங்கியவிடத்தும், பண்பின் - (தமது) குணமுடைமையில், தலைப்பிரிதல் இன்று - நீங்கார்.

**955.** Though their means fall off, those born in ancient families, will not lose their character (for liberality).

---

௬. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(பரி - ரை.) எ-து,—வசையற்று வருகின்ற நங் குடிமரபினோ டொத்து வாழக்கடவேமென்று கருதி அவ்வாறு வாழ்வார், வறுமையுற்ற வழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவிலவாய தொழில்களைச் செய்யார், எ-று.

அமைவின்மை—அம்மரபிற்கேலாமை. இவை மூன்று பாட்டானும் அவர் வறுமையுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—மாசு அற்ற - வசையற்று வருகின்ற, குலம் பற்றி - (நமது) குடிமரபினோடொத்து, வாழ்தும் என்பார் - வாழக்கடவோமென்று நினைத்து அப்படியே வாழ்வோர் (வறுமை

உ. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூ ...பொருந்தி, சால்பு
மிழுக்கார் குடிப்பிறந் தார். ...ர்-செய்யமாட்டார்.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பி ...reproachable honour of
மெய்ம்மை நாணெனப்பட்ட இம் மூன்றன்கண் ...rimental thereto.
கவே வழுவார், எ-று.

ஒழுக்க முதலியன மெய்ம்மொழி ...குங் குற்றம் விசும்பின்
வாயின. இழுக்குதல் அறியாது வருகின் ...யர்ந்து.

(தெ - ப - ரை.)—குடி ...யின்கட் பிறந்தார்மாட் ளதாங்குற்
வர், (தமக்குரிய), ஒழுக்க ...ன்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித்
மெய்ம்மையும், நாணும் - ...
மூன்றிடத்தும், இழு ...வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமை
வழுவார். ...து. குடிய துயர்ச்சியானும், மதிபோன்ற
...வருதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படு

952. The high...
manners, truthfuln...

...ரை.)—குடி பிறந்தார்கண் - உயர்ந்த குடியிற்
...(உண்டாகிற), குற்றம் - குற்றமானது, (தான்
௩. நல ...), விசும்பின் - ஆகாசத்தின்கண், மதிக்கண் -
...மறு போல் - களங்கம்போல, உயர்ந்து-ஓங்கி,
(ப- ...தோன்றும்.
வறியார் ...
சொல் ...951. The defects of the noble will be observed as clearly as the
வர் ...dark spots in the moon.

௪. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(பரி-ரை.) எ-து,—குல நல முடையனாய் வருகின்றவன்கண்ணே ஈர
மின்மை யுளதாமாயின், அவனை அக் குலப் பிறப்பின்கண்ணே ஐயப்படும்
உலகம், எ-று.

நலமும் குலமும் ஆகுபெயர். நாரின்மையாற் கொடாமையுங் கடுஞ்
சொல்லு முதலிய கூறப்பட்டன. தோன்றினென்பது தோன்றுமை விளக்கி
நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உள்ளது
ஐயமாயிற்று. உலகமென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயப்படலென்பது
படமாயின், ஐயப்படுகவென விதியாக்கி யுரைக்க. இவை யிரண்டு பாட்டா
லும் வேறுபட்டவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நலத்தின்கண் - (குல) நலமுடையனாய்
வருகின்றவனிடத்தே, நார் இன்மை - அன்பில்லாமை, தோன்
றின் - உண்டாமாயின், அவனை—, குலத்தின்கண் - அக்குலப்
பிறப்பிடத்தே, ஐயப்படும் - சந்தேகப்படும் (உலகம்.)

958. If one of a good family betrays want of affection, his descent
from it will be called in question.

ம் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
றந்தார்வாய்ச் சொல்.

ந்தி னியல்பை அதன்கண் முளைத்த முளை காட்
ல்பை அதன்கட் பிறந்தார்வாயிற்சொற் காட்

ாபடி. முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந்
லிய கூறுராயினர்; ஆகவே, பொருளினுஞ் செயன் முத
வாயின. குலத்தியல் பறிதற் கருவி கூறுவார்போன்று, இன்
மென்றவா றாயிற்று.

த-ப-ை.)—நிலத்தில் கிடந்தமை - நிலத்தினியல்பை, - (அதனிடத்தேமுளைத்த) முளையானது, காட்டும் - காட்டிவிடும்; (அதுபோல), குலத்தில் பிறந்தார் வாய்ச்சொல் - நல்ல குலத்தில் பிறந்தவர்களின் வாயிலுண்டாகுஞ் சொற்கள், காட்டும் - (அக்குலத்தினியல்பை) காட்டும்.

**959** As the sprout indicates the nature of the soil, (so) the speech of the noble indicates (that of one's birth.)

---

சO. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டி
வேண்டுக யார்க்கும் பணிவு. [ன்

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தா னாணுடையனாதலை வேண்டுக; குலனுடைமையை வேண்டுவனாயின், பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக, எ-று.

நலம்—புகழ், புண்ணியங்கள். வேண்டு மென்பது விதிப்பொருட்டாய் நின்றது, "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தா யென் றிவரெல்லாரு மடங்க, யார்க்குமென்றார். பணிவு—இருக்கை யெழுதலும் எதிர்செலவும் முதலாயின. இவை யிரண்டு பாட்டானும் குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன.

(தெ - ப - ை.)—(ஒருவன்) நலம் வேண்டின் - (தனக்கு) நலமுடைமை வேண்டுவானாகில், நாண் உடைமை-நாணமுடையவனாதலை, வேண்டும் - வேண்டக்கடவன்; குலம் வேண்டின் - குலமுடைமையை வேண்டுவானாயின், யார்க்கும் - (வணங்கத்தக்க) யாவரிடத்தும், பணிவு - வணங்குதலை, வேண்டுக - வேண்டக்கடவன்.

**960**. He who desires a good name must desire modesty; and he who desires (the continuance of) a family greatness must be submissive to all.

---

## கூள-ம். அதி. மானம்.

இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் றொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழா

யுற்றவிடத்தும்), சலம் பற்றி-வஞ்சனையைப் பொருந்தி, சால்பு இல - அமைவில்லாத தொழில்களை, செய்யார்-செய்யமாட்டார்.

**956.** Those who seek to preserve the irreproachable honour of their families will not viciously do what is detrimental thereto.

---

எ. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பிறந்தார்மாட் டுளதாங் குற்றம், தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும், எ-று.

உயர்குடி முதலிய பொருள் வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமை வகை யொத்துப் பான்மாறுபட்டது. குடிய துயர்ச்சியாலும், மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறாதலாலும், உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம்.

(தெ-ப-ரை.)—குடி பிறந்தார்கண் - உயர்ந்த குடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற), குற்றம் - குற்றமானது, (தான் சிறியதேயாயினும்), விசும்பின் - ஆகாசத்தின்கண், மதிக்கண் - சந்திரனிடத்து, மறு போல் - களங்கம்போல, உயர்ந்து-ஓங்கி, விளங்கும் - தோன்றும்.

**957.** The defects of the noble will be observed as clearly as the dark spots in the moon.

---

அ. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(பரி-ரை.) எ-து,—குல நல முடையனாய் வருகின்றவன்கண்ணே ஈரமின்மை யுளதாமாயின், அவனை அக் குலப் பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம், எ-று.

நலமும் குலமும் ஆகுபெயர். நாரின்மையாற் கொடாமையுங் கடுஞ்சொல்லு முதலிய கூறப்பட்டன. தோன்றினென்பது தோன்றாமை விளக்கி நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உள்ளது ஐயமாயிற்று. உலகமென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயப்படலென்பது பாடமாயின், ஐயப்படுகவென விதியாக்கி யுரைக்க. இவை யிரண்டு பாட்டானும் வேறுபட்டவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நலத்தின்கண் - (குல) நலமுடையனாய் வருகின்றவனிடத்தே, நார் இன்மை - அன்பில்லாமை, தோன்றின் - உண்டாமாயின், அவனை—, குலத்தின்கண் - அக்குலப் பிறப்பிடத்தே, ஐயப்படும் - சந்தேகப்படும் (உலகம்.)

**958.** If one of a good family betrays want of affection, his descent from it will be called in question.

---

கூ. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(பரி - ரை.) எ-து,—நிலத்தி னியல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்; அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட் பிறந்தார்வாயிற்சொற் காட்டும், எ-று.

*கிடந்தமை - உள்ளபடி. முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின், இலைமுதலிய கூறாராயினார்; ஆகவே, பொருளினுஞ் செயன் முதலியன வேண்டாவாயின. குலத்தியல் பறிதற் கருவி கூறுவார்போன்று, இன் சொல் வேண்டுமென்றவா றாயிற்று.*

(தெ-ப-ரை.)—நிலத்தில் கிடந்தமை - நிலத்தினியல்பை, கால் - (அதனிடத்தேமுளைத்த) முளையானது, காட்டும் - காட்டிவிடும்; (அதுபோல), குலத்தில் பிறந்தார் வாய்ச்சொல் - நல்ல குலத்தில் பிறந்தவர்களின் வாயிலுண்டாகுஞ் சொற்கள், காட்டும் - (அக்குலத்தினியல்பை) காட்டும்.

**959** As the sprout indicates the nature of the soil, (so) the speech of the noble indicates (that of one's birth.)

---

க0. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தா னாணுடையனாதலை வேண்டுக; குலனுடைமையை வேண்டுவனாயின், பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக, எ-று.

*நலம்—புகழ், புண்ணியங்கள். வேண்டு மென்பது விதிப்பொருட்டாய் நின்றது, "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தா யென் றிவரெல்லாரு மடங்க, யார்க்குமென்றார். பணிவு—இருக்கை யெழலும் எதிர்செலவும் முதலாயின. இவை யிரண்டு பாட்டானும் குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன.*

(தெ - ப - ரை.)—(ஒருவன்) நலம் வேண்டின் - (தனக்கு) நலமுடைமை வேண்டுவானாகில், நாண் உடைமை-நாணமுடையவனாதலை, வேண்டும் - வேண்டக்கடவன்; குலம் வேண்டின் - குலமுடைமையை வேண்டுவானாயின், யார்க்கும் - (வணங்கத் தக்க) யாவரிடத்தும், பணிவு - வணங்குதலை, வேண்டுக - வேண்டக்கடவன்.

**960.** He who desires a good name must desire modesty; and he who desires (the contiuuance of) a family greatness must be submissive to all.

---

## கூஎ-ம். அதி. மானம்.

---

*இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் றொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழா*

மையும், தெய்வத்தாற் சூழ்வுவந்தழி உயிர்வாழாமையு மாம். இஃது, அக்குடிப் பிறப்பினை நிறுத்துதலுடைமையின், அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப்பட்டது.

க. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(பரி-ரை.) எ-து,—செய்யாதவழித் தாம் அமையாத சிறப்பினை யுடைய வேயெனினும், தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களை யொழிக, எ-று.

அமையாமை—இறத்தல். குடிப்பிறப் பென்பது அதிகார முறைமையான் வந்தது. இறப்பவருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் வடநூன்முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்க வென்பதாம்.

(தெ - ப - ரை.)—இன்றி அமையா - செய்யாதவிடத்தே தாம் அமையாத, சிறப்பின ஆயினும் - சிறப்புடையவை யானலும், குன்ற - (தங்குடிப்பிறப்பானது) தாழ, வருப - வருஞ்செயல்களை, விடல் - விடக்கடவன்.

**961**. Actions that would degrade (one's) family should not be done, though they may be so important that not doing them would end in death.

---

உ. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(பரி - ரை.) எ-து,—புகழ் செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார், புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார், எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் பேராண்மை யெனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவுஞ் செய்யாரென்பதாம்.

(தெ - ப - ரை.)—சீரொடு - புகழுடனே, பேர் ஆண்மை— மானத்தை நிறுத்துதலை, வேண்டுபவர் - விரும்புகின்றவர்கள், சீரினும் - புகழ் சம்பாதிக்குமிடத்தும், சீர் அல்ல - (தங்குடிக்கு) ஒவ்வாத (இழிதொழில்களை), செய்யார் - செய்யமாட்டார்கள்.

**962**. Those who desire (to maintain their) honour, will surely do nothing dishonourable, even for the sake of fame.

---

ங. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(பரி-ரை.) எ-து,—குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாய வழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்; குறைந்த நல்குரவுளதாய வழிப் பணியாமை வேண்டும், எ-று.

பணியாமை—தாழ்வுவாராமற் பழையவுயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை அஃதுயர்ச்சி செய்யத் தாந் தாழ்தலும், அல்லற்காலை அது தாழவு

செய்யத் தாமுயர்தலும், வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் தாழ்தற்கேதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ஸா.) — (குடிப்பிறந்தவர்க்கு), பெருக்கத்து - நிறைந்தசெல்வம் உண்டானவிடத்து, பணிதல் வேண்டும்-(யாவ ரிடத்தும்) பணிவு வேண்டும்; சிறிய - குறைந்த, சுருக்கத்து - வறுமை யுண்டானவிடத்து, உயர்வு வேண்டும் - பணியாமை வேண்டும்.

**963.** In great prosperity humility is becoming; dignity, in great adversity.

---

ச. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(பரி-ஸா.) எ-து,—குடிப்பிறந்த மாந்தர், தம்முயர்ந்த நிலையை விட்டு அதனினின்றுந் தாழ்ந்தவழி தலையை விட்டு அதனி னின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பர், எ-று.

அந்நிலையை விடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற் பெற்றாம்.

(தெ - ப - ஸா.)—மாந்தர் - (குடிப்பிறந்த) மனிதர், நிலை யின் - (தம்முயர்ந்த) நிலையிலிருந்து, இழிந்தக்கடை - தாழ்ந்த விடத்து, தலையின் இழிந்த - தலையிலிருந்து வீழ்ந்த, மயிர் அனை யர் - மயிர்போல்வர்.

**964.** They who have fallen from their (high) position are like the hair which has fallen from the head.

---

ரு. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(பரி-ஸா.) குடிப்பிறப்பான் மலைபோல வுயர்ந்தோரும் தாழ்தற் கேது வாகிய செயல்களை ஒரு குன்றி யளவாயினுஞ் செய்வராயிற் றாழ்வர், எ-று.

குன்றி யனையவுமென்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தாழ்தற்கேதுவாய செயல்களாவன இனிவருவன. சொற்பின்வருநிலை.

(தெ-ப-ஸா.)—குன்றின் அனையாரும் - (குடிப்பிறப்பால்) மலைபோலுயர்ந்தவரும், குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகிய செய ல்களை, குன்றி அனைய - ஒருகுன்றிமணி யளவாயினும், செயின்— செய்தால், குன்றுவர் - தாழ்வார்.

**965.** Even those who (are exalted) like a hill will be thought low, if they commit deeds that are debasing.

---

சு. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(பரி-ரை.) எ-து,—மானத்தை விட்டுத் தன்னை யவமதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலை இவ்வுலகத்துப் புகழ்பயவாது; ஏனைப்புத்தே ளுலகத்துச் செலுத்தாது; இனி அவனுக்கு அது செய்வதியாது? எ-று.

புகழ் பயப்பதனைப் புகழென்றார். பயனுய இவ்விரண்டு மின்றிக் கொன்னே மானங் கெடுக்கின்றது என்னை யென்பதாம். இவை மூன்று பாட்டா லும் அவை செய்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இகழ்வார் பின் - (தம்மை) அவமதிப்ப வர்பின்னே, சென்று நிலை - (ஒருவன் மானம் விட்டு) சென்று நிற்கின்றநிலை, புகழ் இன்று - (இவ்வுலகத்து) புகழுண்டாக் காது; புத்தேள் நாட்டு - (மற்றை) தெய்வலோகத்திலே, உய் யாது - செலுத்தாது; மற்று - இனி, என் - (அவனுக்குச் செய் வது) யாது?

**966.** Of what good is it (for the high-born) to go and stand in vain before those who revile him. It only brings him loss of honour and exclusion from heaven.

---

எ. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

(பரி-ரை.) எ-து,—தன்னை யிகழ்வார் பின்னே சென்று பொருள் பெற்று அதனாலொருவன் உயிர்வாழ்தலின், அது செய்யாது இறந்தானென்று சொல் லப்படுதல் அவனுக்கு நன்று, எ-று.

ஒட்டுதல்-பொருந்துதல். அந்நிலையே யென்றது செல்லாத முன்னை நிலைக் கண்ணே நின்றென்றவாறு; அப்பொழுதே யென்றுமாம். புகழும் புத்தே ளுடும் பயவாதேனும் பொருள் பெற்று உயிர் வாழ்வா மென்பானை நோக்கிக் கூறியது.

(தெ - ப - ரை.)—ஒட்டார் பின் - (தன்னை) இகழ்வார்பின் னே, சென்று - போய், (பொருள்பெற்று), ஒருவன் வாழ்தலின்- (அதனால்) ஒருவன் உயிர்வாழ்தலைக்காட்டிலும், அந்நிலையே - முன்னை நிலையிலேநின்று, கெட்டான் எனப்படுதல் - இறந்தா னென்று சொல்லப்படுதல், நன்று - (அவனுக்கு) நன்று.

**967.** It is better for a man to be said of him that he died in his usual state than that he eked out his life by following those who disgraced him.

---

அ. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

(பரி-ரை.) எ-து,—உயர் குடிப்பிறப்புத் தன்வலியாகிய மானம் அழிய வந்துழி, இறத்த லொழிந்து பயனில்லாத வுடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னு மிறவாமைக்கு மருந்தாமோ? எ-று.

மற்றென்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற்குணங்கட் கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றிப் பெருந் தகைமை யென்றும், அவையெல் லாவற்றுள்ளும் அதற்கு வலியாதற் சிறப்புப்பற்றிப் பீடென்றும், அஃதழிந் தால் நின்றவெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை ஊனென்றும், பின்னு மிறத் தல் ஒருதலையென்பார் மருந்தோ வென்றுங் கூறினார். மானத்தின் றொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின் மேனின்றது.

(தெ-ப-ரை.) — பெருந் தகைமை - உயர்குடிப் பிறப்பானது, பீடு-(தன்) வலியாகிய மானம், அழிய வந்தவிடத்து-அழி யும்படி நேரிட்டபோது, ஊன் ஓம்பும் - (இறந்துபோகாமல் பய னில்லாத) உடம்பைக் காப்பாற்றும், வாழ்க்கை - வாழ்வானது, மற்று மருந்தோ - (பின்னுமிறவாமைக்கு) மருந்தாமோ.

**968.** For the high born to keep their body in life when their honor is gone will certainly not prove a remedy against death.

---

௯. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(பரி-ரை.) எ-து,—தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வா ழாத கவரிமாவை யொப்பார், உயிர் நீக்கத்தான் மானமெய்து மெல்லைவரின், அதனைத் தாங்கா திறப்பர், எ-று.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உயிரும் மானமும் உடனில் லாமைக்கண், பின்னும் போவதாய உயிரை நீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை யெய்துவரென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விள க்கி நின்றது.

(தெ-ப-ரை.)—மயிர் நீப்பின் - (தன் மயிர்த்திரளில்) ஒரு மயிர் நீங்கினும், வாழா - உயிர்வாழாத, கவரிமா அன்னார் - கவ ரிமாவை யொப்பவர், மானம் வரின் - (உயிர்நீக்குதற்கான) மா னம் பெறுமளவுவரின், உயிர் - அவ்வுயிரை, நீப்பர்-விடுவர்.

**969.** Those who give up (their) life when (their) honor is at stake are like the yac which kills itself at the loss of (even one of) its hairs.

---

௧௦. இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(பரி-ரை.) எ-து,—தமக்கோ ரிழிவு வந்தவழிப் பொறுத்து உயிர் வா ழாது அதனை நீத்த மானமுடையாரது புகழ்வடிவினை எஞ்ஞான்றுந் தொழுது துதியா நிற்பர் உலகத்தார், எ-று.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வான வூர்தி யெய்துவ" ராகலின், துறக்கச்செலவு சொல்லவேண்டா வாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இளி வரின் - (தமக்கு) ஓரவமானம் வந்த விடத்து, வாழாத - (பொறாமல்) உயிர்விட்ட, மானம் உடை

ருள

யார் - மானமுடையவரது, ஒளி - புகழ்வடிவை, உலகு - உலகத்தார், தொழுது ஏத்தும் - (எந்நாளும்) தொழுது துதியாநிற்பர்.

**970.** The world will (always) praise and adore the fame of the honourable who would rather die than suffer indignity.

## ௯௮-ம். அதி. பெருமை.

அஃதாவது செயற்கரியசெய்தல், தருக்கின்மை, பிறர் குற்றங்கூறாமையென்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையினுமேன்மேலுயர்த்தற் பயத்தவாய இவை உளவாவது நிலையிற் றாழாமையுள்வழியாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

க. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்கமிகுதி; ஒருவனுக்கு மாசாவது அச்செயலை யொழிந்து உயிர்வாழக்கடவேமென்று கருதுதல், எ-று.

ஒளி தானுளனாயகாலத்து மிக்குத்தோன்றுதலுடைமை. "ஒளிநிறானோங்குபுகழ் செய்யான்" என்றார் பிறரும். மேலும் செயற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த வொப்புரவு ஈகை முதலியவாம். அவற்றினுடைய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு உள்ள வெறுக்கையென்று, அது தன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியுங் கூறினார். இவ்வாறு இதனெதிர்மறைக் கண்ணுமொக்கும். இதனாற் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒளி-ஒளியாவது, உள்ள வெறுக்கை - (பிறராலே செய்தற் கரியவைகளைச் செய்வோமென்று நினைக்கிற) மனவெழுச்சியின் மிகுதி; ஒருவற்கு-ஒருவனுக்கு, இளி - மாசாவது, அஃது இறந்து - அச்செயலை யொழிந்து, வாழ்தும் எனல் - உயிர்வாழக் கடவோமென்று நினைத்தல்.

**971.** One's light is the abundance of one's courage; one's darkness is the desire to live destitute of such (a state of mind.)

உ. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(பரி-ரை.) எ-து,—எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், பெருமை சிறுமை யெனப்பட்ட சிறப்பியல்புகளொவ்வா, அவைசெய்யுந் தொழில்களது வேறுபாட்டான், எ-று.

வேறுபாடு—நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவுமாய் அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாம

மாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன்பய னனுபவித்தல் எல்லாவருண த்தார்க்கு மொத்தலிற் பிறப்பொக்கு மென்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் சிறப்பொவ்வா வென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—எல்லா உயிர்க்கும் - எல்லா மக்களுயிர்க்கும், பிறப்பு - (பொதுவாகிய) பிறப்பியல்பு, ஒக்கும் - ஒத்திருக்கும், (ஆயினும்), சிறப்பு - (பெருமை சிறுமையெனப்பட்ட) சிறப்பியல்புகள், செய் தொழில்-செய்யுந் தொழில்களது, வேற்றுமையான் - வேறுபாட்டால், ஒவ்வா - ஒத்திடாவாம்.

**972.** All human beings agree as regards their birth but differ as regards their characteristics, because of the different qualities of their actions.

---

௩. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(பரி - ரை ) எ-து,—செயற்கரிய செய்கலாது சிறியராயினார், உயர்ந்த வமளி முதலியவற்றின்மிசை யிருந்தாராயினும், பெரியராகார்; அவைசெய்து பெரியராயினார், தாழ்ந்த வறுநிலத் திருந்தாராயினும், சிறியராகார், எ-று.

மேலிருத்தல் கீழிருத்தல் களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன. இவை யிரண்டுபாட்டானும் முறையே குடிமை மாத்திரத்தானுஞ் செல்வமாத்திரத்தானும் அஃதுளதாகாமை கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—மேல் அல்லார் - (செய்தற் கரியவைகளைச் செய்யமாட்டாமல்) சிறியராயினோர், மேல் இருந்தும் - உயர்ந்த ஆதனங்களில் இருந்தாராயினும், மேல் அல்லர் - பெரியராகார்; கீழ் அல்லவர்-(அவைசெய்து) பெரியராயினோர், கீழ் இருந்தும்-தாழ்ந்த வெறுநிலத்தில் இருந்தாராயினும், கீழ் அல்லார் - சிறியராகார்.

**973.** Though (raised) above, the base cannot become great; though (brought) low, the great cannot become base.

---

௪. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(பரி-ரை.) எ-து,—கவரா மனத்தினை யுடைய மகளிர் நிறையின் வழுவாமற் றம்மைத் தாங் காத்துக்கொண் டொழுகுமாறுபோல, பெருமைக்குணனும், ஒருவன் நிறையின் வழுவாமற் றன்னைத் தான் காத்துக்கொண்டொழுகுவானாயின், அவன்கணுண்டாம், எ-று.

பொருளின்கணுழில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் மன மொழி மெய்களை யொடு

௨. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாணெனப்பட்ட இம் மூன்றன்கண்ணும் கல்வியானன்றித் தாமாகவே வழுவார், எ-று.

ஒழுக்க முதலியன மெய்ம்மொழி மனங்களினவாகலின், அம்முறைய வாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், இழுக்காரென்றார்.

(தெ - ப - ரை.)—குடிப்பிறந்தார்-உயர்ந்த குடியிற்பிறந்தவர், (தமக்குரிய), ஒழுக்கமும்-நன்னடைக்கையும், வாய்மையும்-மெய்ம்மையும், நாணும் - வெட்கமும் ஆகிய, இம்மூன்றும்-இம் மூன்றிடத்தும், இழுக்கார் - (நூலறிவா லல்லாமல் தாமாகவே) வழுவார்.

**952. The high born will never deviate from these three: good manners, truthfulness and modesty.**

---

௩. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகை யென்ப வாய்மைக் குடிக்கு.

(ப-ரை.) எ - து,—எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர், எ-று.

பொய்ம்மை திரிபுடைமையிற் றிரிபின்மையை வாய்மையென்றும், இல்லாரை யெல்லாரு மெள்ளுவராகலின் இகழாமையை அவர் கூறுக்கியுங் கூறினார். குடி—ஆகுபெயர். நான்கின்வகையென்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின் வேறுபாடு இந்நான்கானுளதாமென் றுரைக்க. இவை மூன்றுபாட்டானுங் குடிப்பிறந்தார தியல்பு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—வாய்மை - (எக்காலத்தும்) வேறுபடாத, குடிக்கு - குடியிற் பிறந்தவர்க்கு, (வறியவர் சென்றவிடத்து), நகை - முகமலர்ச்சியும், ஈகை - (உள்ளவை) கொடுத்தலும், இன் சொல் - இனியசொற் (சொல்லுதலும்), இகழாமை - இகழாமையும், நான்கும் - (ஆகிய) நான்கும், வகை - (உரிய) வகையாகும், என்ப - என்று சொல்லுவர் (நூலோர்).

**953. A cheerful countenance, liberality, pleasant words, and an unreviling disposition, these four are said to be the proper qualities of the truly high born.**

---

௪. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தா
குன்றுவ செய்த லிலர்.

(பரி-ரை.) எ-து,—பலவாக அடுக்கிய கோடி யளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும், உயர்ந்த குடியின்கட் பிறந்தார் தம் மொழுக்கங் குன்றுந் தொழில்களைச் செய்யார், எ-று.

அடுக்கிய கோடியென்பது ஈண் டெண்ணப்படும் பொருண்மே னின்றது. குன்றுந் தொழில்கள் - குன்றுதற் கேதுவாய தொழில்கள்.

(தெ-ப-ரை.)—அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடி - கோடியளவினதாகிய பொருளை, பெறினும் - பெற்றாலும், குடிப்பிறந்தார் - உயர்ந்தகுடியிலே பிறந்தவர், குன்றுவ - (தம்மொழுக்கம்) குன்றுந்தொழில்களை, செய்தலிலர் - செய்யமாட்டார்கள்.

**954. Though blessed with immense wealth, the noble will never do anything unbecoming.**

---

௫. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(பரி-ரை.) எ-து,—தொன்று தொட்டு வருகின்ற குடியின்கட் பிறந்தார் தாங்கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கிய விடத்தும் தம்பண்புடைமையின் நீங்கார், எ-று.

தொன்றுதொட்டு வருதல் - சேர சோழ பாண்டிய ரென்றாற்போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள் வீழ்வதாகலின், அதனையே கூறினர்.

(தெ-ப-ரை.)—பழம் குடி - பழமைதொட்டுவருகிற குடியிலே பிறந்தவர், வழங்குவது - (தாம்) கொடுக்கும்பொருள், உள் வீழ்ந்த கண்ணும் - முன்னையளவிலே சுருங்கியவிடத்தும், பண்பின் - (தமது) குணமுடைமையில், தலைப்பிரிதல் இன்று - நீங்கார்.

**955. Though their means fall off, those born in ancient families, will not lose their character (for liberality).**

---

௬. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(பரி-ரை.) எ-து,—வசையற்று வருகின்ற நங் குடிமரபினோ டொத்து வாழக்கடவேமென்று கருதி அவ்வாறு வாழ்வார், வறுமையுற்ற வழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவிலவாய தொழில்களைச் செய்யார், எ-று.

அமைவின்மை—அம்மரபிற்கேலாமை. இவை மூன்று பாட்டானும் அவர் வறுமையுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—மாசு அற்ற - வசையற்று வருகின்ற, குலம் பற்றி - (நமது) குடிமரபினோடொத்து, வாழ்தும் என்பார் - வாழக்கடவோமென்று நினைத்து அப்படியே வாழ்வோர் (வறுமை

யுற்றவிடத்தும்), சலம் பற்றி-வஞ்சனையைப் பொருந்தி, சால்பு இல - அமைவில்லாத தொழில்களை, செய்யார்-செய்யமாட்டார்.

**956.** **Those who seek to preserve the irreproachable honour of their families will not viciously do what is detrimental thereto.**

---

எ. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(பரி-ரை.) எ-து,—உயர்ந்த குடியின்கட் பிறந்தார்மாட் டுளதாங் குற்றம், தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும், எ-று.

உயர்குடி முதலிய பொருள் வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமை வகை யொத்துப் பான்மாறுபட்டது. குடிய துயர்ச்சியானும், மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம்.

(தெ - ப - ரை.)—குடி பிறந்தார்கண் - உயர்ந்த குடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற), குற்றம் - குற்றமானது, (தான் சிறியதேயாயினும்), விசும்பின் - ஆகாசத்தின்கண், மதிக்கண் - சந்திரனிடத்து, மறு போல் - களங்கம்போல, உயர்ந்து-ஓங்கி, விளங்கும் - தோன்றும்.

**957.** **The defects of the noble will be observed as clearly as the dark spots in the moon.**

---

அ. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(பரி - ரை.) எ-து,—குல நல முடையனாய் வருகின்றவன்கண்ணே ஈர மின்மை யுளதாமாயின், அவனை அக் குலப் பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம், எ-று.

நலமும் குலமும் ஆகுபெயர். ஈரின்மையாற் கொடாமையுங் கடுஞ் சொல்லு முதலிய கூறப்பட்டன. தோன்றினென்பது தோன்றுமை விளக்கி நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உள்ளது ஐயமாயிற்று. உலகமென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயப்படலென்பது பாடமாயின், ஐயப்படுகவென விதியாக்கி யுரைக்க. இவை யிரண்டு பாட்டானும் வேறுபட்டவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நலத்தின்கண் - (குல) நலமுடையனாய் வருகின்றவனிடத்தே, நார் இன்மை - அன்பில்லாமை, தோன்றின் - உண்டாமாயின், அவனை—, குலத்தின்கண் - அக்குலப் பிறப்பிடத்தே, ஐயப்படும் - சந்தேகப்படும் (உலகம்.)

**958.** **If one of a good family betrays want of affection, his descent from it will be called in question.**

---

௯. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(பரி-ரை.) எ-து,—நிலத்தி னியல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்; அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட் பிறந்தார்வாயிற்சொற் காட்டும், எ-று.

கிடந்தமை - உள்ளபடி. முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின், இலைமுதலிய கூறாராயினார்; ஆகவே, பொருளினுஞ் செயன் முதலியன வேண்டாவாயின. குலத்தியல் பறிதற் கருவி கூறுவார்போன்று, இன்சொல் வேண்டுமென்றவா றாயிற்று.

(தெ-ப-ரை.)—நிலத்தில் கிடந்தமை - நிலத்தினியல்பை, கால் - (அதனிடத்தேமுளைத்த) முளையானது, காட்டும் - காட்டிவிடும்; (அதுபோல), குலத்தில் பிறந்தார் வாய்ச்சொல் - நல்ல குலத்தில் பிறந்தவர்களின் வாயிலுண்டாகுஞ் சொற்கள், காட்டும் - (அக்குலத்தினியல்பை) காட்டும்.

**959** As the sprout indicates the nature of the soil, (so) the speech of the noble indicates (that of one's birth.)

---

௧௦. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டி
வேண்டுக யார்க்கும் பணிவு. [ன்

(பரி-ரை.) எ-து,—ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தா னாணுடையனாதலை வேண்டுக; குலனுடைமையை வேண்டுவனாயின், பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக, எ-று.

நலம்—புகழ், புண்ணியங்கள். வேண்டு மென்பது விதிப்பொருட்டாய் நின்றது, "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தா யென் றிவரெல்லாருமடங்க, யார்க்குமென்றார். பணிவு—இருக்கை யெழலும் எதிர்செலவும் முதலாயின. இவை யிரண்டு பாட்டானுங் குடிமைக்கு வேண்டுவன கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) நலம் வேண்டின் - (தனக்கு) நலமுடைமை வேண்டுவானாகில், நாண் உடைமை-நாணமுடையவனாதலை, வேண்டும் - வேண்டக்கடவன்; குலம் வேண்டின் - குலமுடைமையை வேண்டுவானாயின், யார்க்கும் - (வணங்கத்தக்க) யாவரிடத்தும், பணிவு - வணங்குதலை, வேண்டுக - வேண்டக்கடவன்.

**960.** He who desires a good name must desire modesty; and he who desires (the continuance of) a family greatness must be submissive to all.

---

## ௯௭-ம். அதி. மானம்.

இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் றொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றுந் தந்நிலையிற் றாழா

மையும், தெய்வத்தாற் றாழ்வுவந்தழி உயிர்வாழாமையு மாம். இஃது, அக்குடிப் பிறப்பினை நிறுத்துதலுடைமையின், அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப்பட்டது.

க. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(பரி-ரை.) எ-து,—செய்யாதவழித் தாம் அமையாத சிறப்பினை யுடைய வேயெனினும், தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களை யொழிக, எ-று.

அமையாமை—இறத்தல். குடிப்பிறப் பென்பது அதிகார முறைமையான் வந்தது. இறப்பவருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் வடநூன்முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்க வென்பதாம்.

(தெ - ப - ரை.)—இன்றி அமையா - செய்யாதவிடத்தே தாம் அமையாத, சிறப்பின ஆயினும் - சிறப்புடையவை யானாலும், குன்ற - (தங்குடிப்பிறப்பானது) தாழ, வருப - வருஞ்செயல்களை, விடல் - விடக்கடவன்.

**961.** Actions that would degrade (one's) family should not be done, though they may be so important that not doing them would end in death.

---

உ. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(பரி - ரை.) எ-து,—புகழ் செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார், புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார், எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் பேராண்மை யெனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவுஞ் செய்யாரென்பதாம்.

(தெ - ப - ரை.)—சீரொடு - புகழுடனே, பேர் ஆண்மை- மானத்தை நிறுத்துதலை, வேண்டுபவர் - விரும்புகின்றவர்கள், சீரினும் - புகழ் சம்பாதிக்குமிடத்தும், சீர் அல்ல - (தங்குடிக்கு) ஒவ்வாத (இழிதொழில்களை), செய்யார் - செய்யமாட்டார்கள்.

**962.** Those who desire (to maintain their) honour, will surely do nothing dishonourable, even for the sake of fame.

---

௩. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(பரி-ரை.) எ-து,—குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாய வழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்; குறைந்த நல்குரவுளதாய வழிப் பணியாமை வேண்டும், எ-று.

பணியாமை—தாழ்வுவாராமற் பழையவுயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை அஃதுயர்ச்சி செய்யத் தாந் தாழ்தலும், அல்லற்காலை அது தாழவு

செய்யத் தாமுயர்தலும், வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் தாந்தாழ்தற்கேதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.) — (குடிப்பிறந்தவர்க்கு), பெருக்கத்து - நிறைந்தசெல்வம் உண்டானவிடத்து, பணிதல் வேண்டும்-(யாவரிடத்தும்) பணிவு வேண்டும்; சிறிய - குறைந்த, சுருக்கத்து - வறுமை யுண்டானவிடத்து, உயர்வு வேண்டும் - பணியாமை வேண்டும்.

**963. In great prosperity humility is becoming; dignity, in great adversity.**

---

௪. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(பரி-ரை.) எ-து,—குடிப்பிறந்த மாந்தர், தம்முயர்ந்த நிலையை விட்டு அதனினின்றுந் தாழ்ந்தவழி தலையை விட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பர், எ-று.

அந்நிலையை விடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற் பெற்றாம்.

(தெ - ப - ரை.)—மாந்தர் - (குடிப்பிறந்த) மனிதர், நிலையின் - (தம்முயர்ந்த) நிலையிலிருந்து, இழிந்தக்கடை - தாழ்ந்தவிடத்து, தலையின் இழிந்த - தலையிலிருந்து வீழ்ந்த, மயிர் அனையர் - மயிர்போல்வர்.

**964. They who have fallen from their (high) position are like the hair which has fallen from the head.**

---

௫. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(பரி-ரை.) குடிப்பிறப்பான் மலைபோல வுயர்ந்தோரும் தாழ்தற் கேதுவாகிய செயல்களை ஒரு குன்றி யளவாயினுஞ் செய்வாராயிற் றாழ்வர், எ-று.

குன்றி யனையவுமென்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தாழ்தற்கேதுவாய செயல்களாவன இளிவந்தன. சொற்பின்வருநிலை.

(தெ-ப-ரை.)—குன்றின் அனையாரும் - (குடிப்பிறப்பால்) மலைபோலுயர்ந்தவரும், குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களை, குன்றி அனைய - ஒருகுன்றிமணி யளவாயினும், செயின்- செய்தால், குன்றுவர் - தாழ்வார்.

**965. Even those who (are exalted) like a hill will be thought low, if they commit deeds that are debasing.**

---

௬. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(பரி-ரை.) எ-து,—மானத்தை விட்டுத் தன்னை யவமதிப்பார் பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலை இவ்வுலகத்துப் புகழ்பயவாது; ஏனைப்புத்தேளுலகத்துச் செலுத்தாது; இனி அவனுக்கு அது செய்வதியாது? எ-று.

புகழ் பயப்பதனைப் புகழென்றார். பயனுய இவ்விரண்டு மின்றிக் கொன்னே மானங் கெடுக்கின்றது என்னை யென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவை செய்தற் குற்றங் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இகழ்வார் பின் - (தம்மை) அவமதிப்பவர்பின்னே, சென்று நிலை - (ஒருவன் மானம் விட்டு) சென்று நிற்கின்றநிலை, புகழ் இன்று - (இவ்வுலகத்து) புகழுண்டாக்காது; புத்தேள் நாட்டு - (மற்றை) தெய்வலோகத்திலே, உய்யாது - செலுத்தாது; மற்று - இனி, என் - (அவனுக்குச் செய்வது) யாது?

**966.** Of what good is it (for the high-born) to go and stand in vain before those who revile him. It only brings him loss of honour and exclusion from heaven.

---

௭. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

(பரி-ரை.) எ-து,—தன்னை யிகழ்வார் பின்னே சென்று பொருள் பெற்று அதனாலொருவன் உயிர்வாழ்தலின், அது செய்யாது இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று, எ-று.

ஒட்டுதல்—பொருந்துதல். அந்நிலையே யென்றது செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்றென்றவாறு; அப்பொழுதே யென்றுமாம். புகழும் புத்தேளுடும் பயவாதேனும் பொருள் பெற்று உயிர் வாழ்வா மென்பானை நோக்கிக் கூறியது.

(தெ - ப - ரை.)—ஒட்டார் பின் - (தன்னை) இகழ்வார்பின்னே, சென்று - போய், (பொருள்பெற்று), ஒருவன் வாழ்தலின்- (அதனால்) ஒருவன் உயிர்வாழ்தலைக்காட்டிலும், அந்நிலையே - முன்னை நிலையிலேநின்று, கெட்டான் எனப்படுதல் - இறந்தானென்று சொல்லப்படுதல், நன்று - (அவனுக்கு) நன்று.

**967.** It is better for a man to be said of him that he died in his usual state than that he eked out his life by following those who disgraced him.

---

௮. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

(பரி-ரை) எ-து,—உயர் குடிப்பிறப்புத் தன்வலியாகிய மானம் அழிய வந்துழி, இறத்த லொழிந்து பயனில்லாத வுடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னு மிறவாமைக்கு மருந்தாமோ? எ-று.

மற்றென்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற்குணங்கட்கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றிப் பெருந் தகைமை யென்றும், அவையெல்லாவற்றுள்ளும் அதற்கு வலியாதற் சிறப்புப்பற்றிப் பீடென்றும், அஃதழிந்தால் நின்றவெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை ஊனென்றும், பின்னு மிறத்தல் ஒருதலையென்பார் மருந்தோ வென்றுங் கூறினார். மானத்தின் றொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின் மேனின்றது.

(தெ-ப-ரை.) — பெருந் தகைமை - உயர்குடிப் பிறப்பானது, பீடு-(தன்) வலியாகிய மானம், அழிய வந்தவிடத்து-அழியும்படி நேரிட்டபோது, ஊன் ஓம்பும் - (இறந்துபோகாமல் பயனில்லாத) உடம்பைக் காப்பாற்றும், வாழ்க்கை - வாழ்வானது, மற்று மருந்தோ - (பின்னுமிறவாமைக்கு) மருந்தாமோ.

**968.** For the high born to keep their body in life when their honor is gone will certainly not prove a remedy against death.

---

கூ. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(பரி-ரை.) எ-து,—தன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவை யொப்பார், உயிர் நீக்கத்தான் மானமெய்து மெல்லைவரின், அதனைத் தாங்கா திறப்பர், எ-று.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரைநீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை யெய்துவரென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விளக்கி நின்றது.

(தெ-ப-ரை.)—மயிர் நீப்பின் - (தன் மயிர்த்திரளில்) ஒரு மயிர் நீங்கினும், வாழா - உயிர்வாழாத, கவரிமா அன்னார் - கவரிமாவை யொப்பவர், மானம் வரின் - (உயிர்நீக்குதற்கான) மானம் பெறுமளவுவரின், உயிர் - அவ்வுயிரை, நீப்பர்-விடுவர்.

**969.** Those who give up (their) life when (their) honor is at stake are like the yac which kills itself at the loss of (even one of) its hairs.

---

கo. இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(பரி - ரை.) எ-து,—தமக்கோ ரிழிவு வந்தவழிப் பொறாத்து உயிர் வாழாது அதனை நீத்த மானமுடையாரது புகழ்வடிவினை எஞ்ஞான்றுந் தொழுது துதியா நிற்பர் உலகத்தார், எ-று.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வான வூர்தி யெய்துவ" ராகலின், துறக்கச்செலவு சொல்லவேண்டா வாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இளி வரின் - (தமக்கு) ஓரவமானம் வந்தவிடத்து, வாழாத - (பொறாமல்) உயிர்விட்ட, மானம் உடை

ருள

யார் - மானமுடையவரது, ஒளி - புகழ்வடிவை, உலகு - உலகத்தார், தொழுது ஏத்தும் - (எந்நாளும்) தொழுது துதியாநிற்பர்.

**970.** The world will (always) praise and adore the fame of the honourable who would rather die than suffer indignity.

---

## ௯௮-ம். அதி. பெருமை.

அஃதாவது செயற்கரியசெய்தல், தருக்கின்மை, பிறர் குற்றங்கூறாமை யென்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையினு மேன்மேலுயர்த்தற் பயத்தவாய விவை உளவாவது நிலையிற் றாழாமையுள்வழி யாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

௧. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்கமிகுதி; ஒருவனுக்கு மாசாவது அச்செயலை யொழிந்து உயிர்வாழக்கடவே மென்று கருதுதல், எ-று.

ஒளி தானுளனாயகாலத்து மிக்குத்தோன்றுத லுடைமை. "ஒளிநிறானேங்குடுகழ் செய்யான்" என்றார் பிறரும். மேலும் செயற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த வொப்புரவு ஈகை முதலியவாம். அவற்றினுடைய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு உள்ள வெறுக்கையென்று, அது தன்னையே அதன் காரியமாகிய ஒளியாக்கியுங் கூறினார். இவ்வாறு இதனெதிர்மறைக் கண்ணுமொக்கும். இதனாற் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒளி-ஒளியாவது, உள்ள வெறுக்கை - (பிறராலே செய்தற் கரியவைகளைச் செய்வோமென்று நினைக்கிற) மனவெழுச்சியின் மிகுதி; ஒருவற்கு-ஒருவனுக்கு, இளி - மாசாவது, அஃது இறந்து - அச்செயலை யொழிந்து, வாழ்தும் எனல் - உயிர்வாழக் கடவோமென்று நினைத்தல்.

**971.** One's light is the abundance of one's courage; one's darkness is the desire to live destitute of such (a state of mind.)

---

௨. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(பரி-ரை.) எ-து,—எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், பெருமை சிறுமை யெனப்பட்ட சிறப்பியல்புகளொவ்வா, அவைசெய்யுந் தொழில்களது வேறுபாட்டான், எ-று.

வேறுபாடு—நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவுமாய் அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாம

மாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன்பய னனுபவித்தல் எல்லாவருண த்தார்க்கு மொத்தலிற் பிறப்பொக்கு மென்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் சிறப்பொவ்வா வென்றுங் கூறினார்.

(தெ-ப-ரை.)—எல்லா உயிர்க்கும் - எல்லா மக்களுயிர்க் கும், பிறப்பு - (பொதுவாகிய) பிறப்பியல்பு, ஒக்கும் - ஒத்திருக் கும், (ஆயினும்), சிறப்பு - (பெருமை சிறுமையெனப்பட்ட) சிறப்பியல்புகள், செய் தொழில்-செய்யுந் தொழில்களது, வேற் றுமையான் - வேறுபாட்டால், ஒவ்வா - ஒத்திடாவாம்.

**972.** All human beings agree as regards their birth but differ as regards their characteristics, because of the different qualities of their actions.

---

௩. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(பரி - ரை) எ-து,—செயற்கரிய செய்கலாத சிறியராயினார், உயர்ந்த வமளி முதலியவற்றின்மிசை யிருந்தாராயினும், பெரியராகார்; அவைசெய்து பெரியராயினார், தாழ்ந்த வறுநிலத் திருந்தாராயினும், சிறியராகார், எ-று.

மேலிருத்தல் கீழிருத்தல் களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன. இவை யிரண்டுபாட்டானும் முறையே குடிமை மாத்திரத்தானுஞ் செல்வமாத்திரத்தானும் அஃதுளதாகாமை கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—மேல் அல்லார் - (செய்தற் கரியவைகளைச் செய்யமாட்டாமல்) சிறியராயினோர், மேல் இருந்தும் - உயர்ந்த ஆதனங்களில் இருந்தாராயினும், மேல் அல்லர் - பெரியராகார்; கீழ் அல்லவர்-(அவைசெய்து) பெரியராயினோர், கீழ் இருந்தும்- தாழ்ந்த வெறுநிலத்தில் இருந்தாராயினும், கீழ் அல்லார் - சிறிய ராகார்.

**973.** Though (raised) above, the base cannot become great; though (brought) low, the great cannot become base.

---

௪. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(பரி-ரை.) எ-து,—கவரா மனத்தினை யுடைய மகளிர் நிறையின் வழுவா மற் றம்மைத் தாங் காத்துக்கொண் டொழுகுமாறுபோல, பெருமைக்குண னும், ஒருவன் நிறையின் வழுவாமற் றன்னைத் தான் காத்துக்கொண்டொழுகு வானாயின், அவன்கணுண்டாம், எ-று.

பொருளின்கணுமில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் மன மொழி மெய்களை யொடு

க்கி ஒப்புரவு முதலிய செய்துபோதல். இதனால் அஃதுளதாமாறு கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருமை - பிளவுபடாத மனத்தையுடைய, மகளிரே போல - மக்களைப்போல, தன்னைத்தான்—, காத்தொழுகின் - (ஒருவன் நிறையின் வழுவாமல்) காத்துக்கொண்டு நடக்க வல்லனாயின், பெருமையும் - பெருமைக்குணமும், உண்டு - (அவனிடத்து) உண்டாம்.

**974.** **Even greatness, like a woman's chastity, belongs only to him who guards himself.**

---

௫. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

(பரி - ரை.) எ-து,—அவ்வாற்றாற் பெருமை யுடையராயினார் தாம் வறியராயவழியும் பிறராற் செய்தற்கரியவாய தஞ்செயல்களை விடாது அவை செய்யு நெறியாற் கடைபோகச்செய்தலை வல்லராவர், எ-று.

வறியராய வழியு மென்பது, முன்செய்து போந்தமை தோன்றப் பெருமை யுடையவரென்றதனானும், ஆற்றுவாரென்றதனானும், பெற்றாம். இதனால் அதனை யுடையார் செய்தி கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—பெருமை உடையவர் - (அவ்வழியாலே) பெருமையுடையவராயினர், (தாம் வறியராகிய வழியும்), அருமை உடைய - (பிறராலே செய்தற்கு) அருமை யுடையனவாகிய, செயல் - (தஞ்) செயல்களை, ஆற்றின் - (அவை செய்யும்) வழியால், ஆற்றுவார் - (முடிவுபெற) செய்யவல்லவராவர்.

**975.** **(Though reduced,) the great will be able to perform, in the proper way, deeds difficult (for others to do.)**

---

௬. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(பரி - ரை.) எ - து,—அப்பெற்றியராய பெரியாரை வழிபட்டு அவரியல்பினை யாங்கோடு மென்னுங் கருத்து மற்றைச் சிறியராயினார் மனத்தின்கண் உளதாகாது, எ-று.

குடிமை, செல்வம், கல்வி யென்றிவற்றது உண்மை மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அமைந்திருப்பாரை வழிப்பட்டு அஃதுடையராதல் கூடாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—பெரியாரை-(அப்படிப்பட்ட) பெரியாரை, பேணி - வழிபட்டு, கொள்வேம் என்னும் - (அவ ரியல்பை) கொள்வோமென்னும், நோக்கு - கருத்து, சிறியார் - (மற்றை)

சிறியராயினோரது, உணர்ச்சியுள் - மனத்தினிடத்து, இல்லை - உண்டாகாது.

**976.** It is never in the nature of the base to seek the society of the great and partake of their nature.

---

எ. இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(பரி-ரை.) எ-து,—தனக்கொக்கும் பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும், தனக்கொவ்வாத சிறியாரிடத்துப் படுமாயின், அதனை யொழிந்து தருக்கின்கண்ணே மிக்கசெயலை யுடைத்தாம், எ-று.

தருக்கினை மிகச்செய்யு மென்பதாயிற்று. சிறப்பு—குடிமை, செல்வம், கல்விகளினுய மிகுதி. இவை யிரண்டு பாட்டானும் அஃதிலார் செய்தி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சிறப்பும்-(தனக்குத்தகும் பெரியோரிடத்து அடங்கியிருத்தலைச் செய்வதாகிய) சிறப்பும், தான்—, சீரல்லவர்கண் படின் - (தனக்குத்தகாத) சிறியவரிடத்து உண்டாமாயின், இறப்பே புரிந்த - (அடங்கி யிருத்தலொழிந்து) செருக்கினிடத்திலே மிகுந்த, தொழிற்றும் - செயலையுடைத்தாம்.

**977.** Even nobility of birth, wealth and learning, if in (the possession of) the base, will (only) produce ever-increasing pride.

---

அ. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(பரி-ரை.) எ-து,—பெருமையுடையார் அச்சிறப்புண்டாய ஞான்றுந் தருக்கின்றி அமைந்தொழுகுவார்; மற்றைச் சிறுமையுடையார் அஃதில்லாத ஞான்றுந் தம்மை வியந்து புனையாநிற்பர், எ-று.

பொருளின் றொழில்கள் பண்பின்மே லேற்றப்பட்டன. இஃது 'அற்ற மறைக்கும் பெருமை' என்புழியு மொக்கும். என்று மென்பது பின்னும் வந்தியைந்தது. ஆமென்பன விரண்டும் அசை. புனைதல்—பிறரிற் றமக்கோர் மிகுதியையேற்றிக் கோடல். இதற்கு உயர்ந்தார் தாழ்வார் தாழ்ந்தார் உயர்வார் இஃதொரு விரோத மிருந்தவாறென்னென உலகியலை வியந்து கூறிற்றுக்கு வாருமுளர்.

(தெ-ப-ரை.)—பெருமை - பெருமையுடையவர், என்றும்- சிறப்புண்டாகிய நாளிலும், பணியும் - அடங்கி நடப்பார்; சிறுமை - (மற்றை) சிறுமையுடையவர், (என்றும்) - அது இல்லாதநாளிலும், தன்னை வியந்து - தம்மை மெச்சி, அணியும் - சிறப்பிப்பார்.

**978.** The great will always humble himself; but the mean will exalt himself in self-admiration.

---

௯. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(பரி-ரை.) எ-து,—பெருமைக்குணமாவது காரண முண்டாய வழியும் அஃதியல் பாதனோக்கித் தருக்கின்றி யிருத்தல்; சிறுமைக் குணமாவது அஃதில் வழியும் அதனை யேற்றுக்கொண்டு தருக்கின் முடிவின் கண்ணே நின்று விடுதல், எ-று.

அளவறத்தருக்குதலென்பதாயிற்று. விடுமென்று பாடமோதுவாருமுளர். முற்றுத் தொடரும் எழுவாய்த் தொடரும் தம்மு ளியையாமையின், அது பாட மன்மை யுணர்க.

(தெ-ப-ரை.)—பெருமை - பெருமைக்குணமாவது, பெருமிதம் இன்மை - (காரணம் உண்டாகியவிடத்தும் அது இயல் பாதனோக்கி) செருக்கில்லா திருத்தல்; சிறுமை - சிறுமைக் குணமாவது, பெருமிதம் ஊர்ந்து விடல் - (காரணம் இல்லா விடத்தும் அதனை ஏற்றுக்கொண்டு) செருக்கின் முடிவிலே நின்றுவிடுதல்.

**979.** Freedom from conceit is (the nature of true) greatness, (while) obstinacy therein is (that of) meanness.

---

௧0. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(பரி-ரை.) எ-து,—பெருமை யுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையா நிற்பர்; மற்றைச் சிறுமை யுடையார் பிறர்குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறி விடுவர், எ-று.

மறைத்தலுங் கூறலும் ஏனையிடத்து மியைந்தன. அற்றம்—ஆகுபெயர். தானென்பது அசை. இவை மூன்று பாட்டானும் இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—பெருமை - பெருமையுடையவர், அற்றம் மறைக்கும் - (பிறர் மானத்தையே சொல்லி) அவமானத்தை மறையாநிற்பர்; சிறுமை - (மற்றை) சிறுமையுடையவர், குற்றமே கூறிவிடும் - (பிறர் குணத்தை மறைத்து) குற்றத்தையே சொல்லிவிடுவர்.

**980.** The great hide the faults of others; the base only divulge them.

---

## ௯௯-ம். அதி. சான்றாண்மை.

அஃதாவது பலகுணங்களானு நிறைந்து அவற்றை யாடற்றன்மை. பலகுணங்களானு மென்பது சாலுதற் றொழிலாற் பெறப்படுதலின், அவற்றை

யென்பது வருவிக்கப்பட்டது. பெருமையு ளடங்காத குணங்கள் பலவற்றை யுந் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

க. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(பரி - ரை.) எ-து,—நமக்குத் தகுவது இதுவென் றறிந்து சான்றாண்மை யை மேற்கொண் டொழுகுவார்க்கு நல்லனவாய குணங்க ளெல்லாம் இயல் பா யிருக்குமென்று சொல்லுவர் நூலோர், எ-று.

சில குணங்க ளிலவாயவழியும் உள்ளன செய்துகொண்டனவாய வழி யுஞ் சான்றாண்மை யென்னுஞ் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ் வேதுப்பெயர் பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறுவ ரென்பதாம்.

(தெ - ப - ரை.)—கடன் அறிந்து - (நமக்கு இது) தகுவதென்று அறிந்து, சான்று - (பலகுணங்களாலும்) நிறைந்து, ஆண்மை - (அவைகளை) ஆளுந்தன்மையை, மேல் கொள்பவர்க்கு - மேற்கொண்டு நடப்பவர்க்கு, நல்லவை எல்லாம் - நல்லகுணங்களெல்லாம், கடன் - இயல்பா யிருக்கும், என்ப - என்று சொல்லுவர் (நூலோர்).

**981.** It is said that those who are conscious of their duty and behave with a perfect goodness will regard as natural all that is good.

---

உ. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

(பரி-ரை.) எ-து,—சான்றோர் நலமாவது குணங்களாகிய நலமே; அஃதொழிந்த வுறுப்புக்களாகிய நலம் ஒரு நலத்தினு முள்ளதன்று, எ-று.

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப்புற நலத்தைப் பிறநலமென்றும், அது குடிப்பிறப்புங் கல்வியு முதலாக நூலோரெடுத்த நலங்களுட் புகுதாமையின் எந் நலத்துள்ளதூஉ மன்றென்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—சான்றோர் நலன் - சான்றோர் நலமாவது, குண நலம் - குணங்களாலாகிய நலமே; பிற நலம் - அது நீங்கலான (உறுப்புக்களாலாகிய) நலம், எந்நலத்து உள்ளதும் - எந்தநலத்திலு முள்ளதும், அன்று - அல்லதாம்.

**982.** The only delight of the perfect is that of their goodness; all other (sensual) delights are not to be included among any (true) delights.

---

ந. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

(பரி - ரை.) எ - து,—சுற்றத்தார்மேலே யன்றிப் பிறர்மேலு முளதாய வன்பும், பழிபாவங்களி னாணலும், யாவர்மாட்டு மொப்புரவு செய்தலும், பழை

யார்மேற் கண்ணோடலும், எவ்விடத்தும் மெய்ம்மைகூறலும் என சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்களைந்து, எ-று.

என்னோடு முன்னவற்றோடுங் கூடிற்று. இக்குணங்க ளில்வழிச் சால்பு நிலைபெறுமையின், இவற்றைத் தூணென்றார். ஏகதேச வுருவகம்.

(தெ - ப - ரை.)—அன்பு - (சுற்றத்தார்மேலே யல்லாமல் பிறர்மேலும் உண்டாகிய) அன்பும், நாண் - (பழிபாவங்களில்) நாணலும், ஒப்புரவு - (யாவரிடத்தும்) உபகாரஞ் செய்தலும், கண்ணோட்டம் - (பழையவர்மேல்) கண்ணோடலும், வாய்மையோடு - (எவ்விடத்தும்) மெய்மைசொல்லலும் என, சால்பு - சால்பென்னும் (பாரத்தை), ஊன்றிய - தாங்கிய, தூண் - தூண்கள், ஐந்து - ஐந்தாகும்.

**983.** Affection, fear (of sin), benevolence, favour and truthfulness: these are the five pillars on which perfect goodness rests.

---

௪. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(பரி-ரை.) எ-து,—பிறவறங்களும் வேண்டுமாயினுந் தவம் ஓருயிரையுங் கொல்லாத அறத்தின்கண்ணதாம்; அதுபோலப் பிறகுணங்களும் வேண்டுமாயினுஞ் சால்பு பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தின் கண்ணதாம், எ-று.

நலமென்னும் ஆகுபெயர்ப்பொருளிரண்டனையுந் தலைமைதோன்ற இவ்விரண்டற்கு மதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லாவறஞ் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றஞ் சொல்லாக்குணஞ் சிறந்த தென்பதாம்.

(தெ-ப-ரை.) — நோன்மை - தவமாவது, கொல்லா நலத்தது - (பிற வறங்களும் வேண்டுமாயினும்) ஓருயிரையுங் கொல்லா அறத்தினிடத்ததாம்; (அதுபோல), சால்பு - சால்பாவது, பிறர் தீமை சொல்லா நலத்தது - (பிறகுணங்களும் வேண்மாயினும்) பிறர் தீமையைச் சொல்லாத குணத்தினிடத்ததாம்.

**984.** Penance consists in the goodness that kills not, and perfection in the goodness that tells not others' faults.

---

௫. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(பரி - ரை.) எ-து,—ஒருகருமத்தைச் செய்து முடிப்பார தாற்றலாவது அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; இனிச் சால்புடையார் தம்பகைவரைப் பகைமை யொழிக்குங் கருவியும் அது, எ-று.

ஆற்றல்—அதுவல்லராந் தன்மை. இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. சால்பிற்கேற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார் ஏனையது முடன் கூறினார்.

(தெ - ப - ரை.) — ஆற்றுவார் - (ஒருகருமத்தை) செய்து முடிப்பவரது, ஆற்றல் - வலிமையாவது, பணிதல் - (அதற்குத் துணையாவாரை) தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; சான்றோர் - (இனி) சால்புடையவர், மாற்றாரை - பகைவரை, மாற்றும் படை - (பகைமை) ஒழிக்குஞ் சாதனமும், அது - அப்படிப் பணிதலேயாம்.

**985.** Stooping (to inferiors) is the strength of those who can accomplish (an undertaking); and that is the weapon with which the great avert their foes.

---

கூ. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(பரி-ரை.) எ-து,—சால்பாகிய பொன்னி னளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின், அது தம்மி னுயர்ந்தார்மாட்டுக் கொள்ளுந் தோல்வியை இழிந்தார் மாட்டுங் கோடல், எ-று.

துலை—ஒப்பு. எச்ச வும்மையான் இருதிறத்தார் கண்ணும் வேண்டுதல் பெற்றாம். கொள்ளுதல்—வெல்லுமாற்ற லுடையராயிருந்தே ஏற்றுக் கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோ டொப்பித்துக் கொள்ளாது தோல்வியான் அவரி னுயர்வராயின், அதனாற் சால்பன வறியப்படு மென்பதாம்.

(தெ - ப - ரை.)—சால்பிற்கு - சால்பாகிய (பொன்னின்) அளவறிதற்கு, கட்டளை - உரைகல்லாகிய (செயல்), யாது எனின் - என்னவெனின், தோல்வி - (அது தம்மி னுயர்ந்தவரிடத்துக் கொள்ளும்) தோற்பை, துலை அல்லார் கண்ணும் - இழிந்தவரிடத்தும், கொளல் - (வெல்லும் வலிமை யுடையராயிருந்தே) ஏற்றுக்கொள்ளுதலாம்.

**986.** The touch-stone of perfection is to receive a defeat even at the hands of one's inferiors.

---

எ. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

(பரி - ரை.) எ-து,—தமக்கின்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின், அச்சால்பு வேறென்ன பயனை யுடைத்து, எ-று.

சிறப்பும்மை அவர் இன்னாசெய்தற் கிடனாதல் விளக்கி நின்றது. ஓகாரம்-அசை. வினா எதிர்மறைப் பொருட்டு. தாமு மின்னாசெய்வாராயின், சால்பாலொரு பயனுமில்லை யென்பதாம். இவை யைந்துபாட்டானுஞ் சிறப்பு வகையாற் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(சால்புடையவர்) இன்னா - (தமக்கு) துன்பந் தருமவைகளை, செய்தார்க்கும் - செய்தவர்களுக்கும், இனியவே - இன்பந்தருமவைகளையே, செய்யாக்கால் - செய்யா

விடின், சால்பு - அச்சால்புடைமை, என்ன பயத்தது - (வேறே) என்ன பயனுடைத்து.

**987.** Of what avail is perfect goodness if it cannot do pleasing things even to those who have pained (it)?

---

௮. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(பரி - உரை.) எ-து,—சால்பென்று சொல்லப்படும் வலியுண்டாகப்பெறின் ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது, எ-று.

தளராமை நாட்டுதலின், வலியாயிற்று. இன்மையான் வருவதனை இன்மைதானாக வுபசரித்துக் கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம்படுத லுடையரென்பதாம்.

(தெ - ப-உரை.)—சால்பு என்னும் - சால்பென்று சொல்லப்படும், திண்மை - வலிமை, உண்டு ஆகப் பெறின் - உண்டாகப் பெற்றால், ஒருவற்கு - ஒருவனுக்கு, இன்மை - வறுமையால் வருவது, இளிவு அன்று - இகழ்வாகாது.

**988.** Poverty is no disgrace to one who abounds in good qualities.

---

௯. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(பரி-உரை.) எ-து,—சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப்படுவார் ஏனைக்கடலுங் கரையுணில்லாமற் காலந்திரிந்தாலும், தாந்திரியார், எ-று.

சான்றாண்மையது பெருமைதோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியுங் கூறினார்; "பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்றார் பிறரும். ஏகதேசவுருவகம்.

(தெ-ப-உரை.)—சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய (கடலுக்கு), ஆழி எனப்படுவார் - கரையென்று சொல்லப்படுவார், ஊழி பெயரினும் - (மற்றைக் கடலும் கரையுள் நில்லாமல்) காலம் வேறுபட்டாலும், தாம் பெயரார் - தாம் வேறுபடார்.

**989.** Those who are said to be the shore of the sea of perfection will never change, though ages may change.

---

௰. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

(பரி-உரை.) எ-து,—பலகுணங்களானு நிறைந்தவர் தந்தன்மை குன்றுவராயின் மற்றை யிருநிலந்தானுந் தன்பொறையைத் தாங்காதாய் முடியும், எ-று.

தானுமென்னு மெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவர்க்கது குன்றுமையும் அதற்கது தாங்கலும் இயல்பாகலான், அவையெஞ்ஞான்று முளவாகாநின்றனவென்பது தோன்றநின்றமையின், யன் ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் அசை. இதற்கு இருநிலம் பொறைதாங்குவது சான்றவர் துணையாக வருதலான் அதுவும் அது தாங்கலாற்றாதென் றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அவற்றானிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ஸா.)—சான்றவர் - (பலகுணங்களாலும்) நிறைந்தவர், சான்றாண்மை - (தமது) தன்மை, குன்றின் - குன்றுவராயின், இரு நிலந்தான் - மற்றைப்பெரிய பூமிதானும், பொறை- (தன்) பாரத்தை, தாங்காது - தாங்காதாய் முடியும்.

**990**. If there is a defeat in the character of the perfect, (even) the great world cannot bear (its) burden.

---

## ௱00-ம். அதி. பண்புடைமை.

அஃதாவது பெருமை சான்றாண்மைகளிற் றம்வழுவாதுநின்றே எல்லாரியல்புகளு மறிந்தொத்தொழுகுதல்; "பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்" என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(பரி-ஸா.) எ-து,—யாவர்மாட்டு மெளியபசவ்வியராதலால் அரிதாயபண்புடைமையென்னும் நன்னெறியினையெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர், எ-று.

குணங்களா னிறைந்து செவ்வியெளியரு மாயக்காற் பண்புடைமைதானே உளதா மாகலின், எண்பதத்தாலெய்த லெளிதென்றும், அஃதுலகத்தையெல்லாம் வசிகரித்தற்பயத்த தாகலின் அதனைத் தொல்லோர்சென்ற நன்னெறியாக்கியும், அதனை யெளிதி னெய்துதற்கு இது நூலோரோதிய வுபாயமென்பார் அவர்மேல் வைத்துங் கூறினார்.

(தெ-ப-ஸா.)—யார் மாட்டும் - யாவரிடத்தும், எண் பதத்தால் - எளியசமயத்தரா யிருந்தால், பண்பு உடைமை என்னும்- பண்புடைமை யெனப்படுகின்ற, வழக்கு - (அரிதாகிய) நல்வழியை, எய்தல் - அடைதல், எளிது—, என்ப - என்று சொல்லுவர் (நூலோர்).

**991**. If one is easy of access to all, it will be easy for one to obtain the virtue called goodness.

---

உ. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(பரி - ரை.) எ-து,—பிறர்மே லன்புடையனாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட் பிறத்தலுமாகிய இவ்விரண்டும் ஒருவனுக்குப் பண்புடைமையென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி, எ-று.

அமைதல்-ஒத்துவருதல். குடிப்பிறத்தலென்றது பிறந்தார்செயலை. தனித்தவழி ஆகாது இரண்டுங்கூடியவழியே ஆவதென்பது தோன்ற, மூற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக வுபசரிக்கப்பட்டன. இவையிரண்டோட்டாலும் பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அன்பு உடைமை - (பிறர்மேல்) அன்புடையதனாலும், ஆன்ற குடிப் பிறத்தல் - (உலகத்தோடு) அமைந்த குடியிற் பிறத்தலும் (ஆகிய), இவ்விரண்டும்—, பண்பு உடைமை என்னும் - (ஒருவனுக்கு) பண்புடைமை யென்று (உலகத்தார்) சொல்லும், வழக்கு - நல்வழி.

**992.** Affectionateness and birth in a good family, these two constitute what is called a proper behaviour to all.

---

ங. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(பரி - ரை.) எ - து,—செறியத்தகாத வுடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோ டொப்பாகாமையின் அது பொருந்துவதன்று; இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத்தக்க பண்பா லொத்தல், எ-று.

வடநூலார் அங்கமென்றமையின், உறுப்பென்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படு மொப்பாவது உயிரின்வேறாய் நிலையுதலில்லா வுடம்பொத்தலன்று வேறன்றி நிலையுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய அவர் பண்பினை யுடையனாக வென்பதாம்.

(தெ-ப-ரை.)—உறுப்பு ஒத்தல் - (நெருங்கத்தகாத) உடம்பாலொத்தல், மக்கள் ஒப்பு அன்று - (ஒருவனுக்கு) நல்லமனிதரோடு (ஒப்பாகாமையால்) பொருந்துவதன்று; ஒப்பது ஆம் - (இனி) பொருந்துவதாகிய, ஒப்பு - ஒப்பாவது, வெறுத்தக்க - நெருங்கத்தக்க, பண்பு ஒத்தல் - பண்பாலொத்தல்.

**993.** Resemblance of bodies is no resemblance of souls; true resemblance is the resemblance of qualities that attract.

---

ச. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

(பரி - ரை.) எ-து,—நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயன்படுத லுடையாரது பண்பினை உலகத்தார் கொண்டாடா நிற்பர், எ-று.

புரிந்தவென்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப்பொருட்டு; நயனெறி நன்றிபுரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், அதனைப் பாராட்டு மென்றார்.

(தெ-ப-ரை.)—நயன் - நீதியையும், நன்றி - அறத்தையும், புரிந்த - விரும்புதலால், பயன் உடையார் - (பிறர்க்கும் தமக்கும்) பயன்படுதலுடையவரது, பண்பு - பண்பை, உலகு - உலகத்தார், பாராட்டும் - கொண்டாடாநிற்பர்.

**994.** The world applauds the character of those whose usefulness results from their equity and charity.

---

௫. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(பரி-ரை.) எ-து,—தன்னையிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின் கண்ணும் இன்னாது; ஆகலாற் பிறர்பாடறிந் தொழுகுவார் மாட்டுப் பகைமையுள்வழியும் அஃதுள தாகாது இனியவாய பண்புகளே உளவாவன, எ-று.

பாடறிவா ரெனவே, அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம். அதனையறிந்தவர் பின் அதுசெய்யார் இனியவே செய்வா ரென்பது கருத்து. இதற்குப் பிற ரெல்லாம் இரண்டுதொடருந் தம்மு ளியையாம லுரைப்பாரும், இன்னாதென்னுஞ் சொற்குப் பிறவாதென் றுரைப்பாரு மாயினார்.

(தெ-ப-ரை.)—இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல், நகையுள்ளும் - (ஒருவனுக்கு) விளையாட்டினிடத்தும், இன்னாது - துன்பந்தருவதாம்; (ஆகலால்), பாடு அறிவார்மாட்டு - (பிறர்) இயல்பறிந்து நடப்பவரிடத்து, பகையுள்ளும் - பகையுள்ளவிடத்தும், பண்பு - (அப்பகை உண்டாகாமல் இனிமையாகிய) பண்புகளே, உள - உண்டாவனவாம்.

**995.** Reproach is painful to one even in sport; those (therefore) who know the nature of others exhibit (pleasing) qualities even when they are hated.

---

௬. பண்புடையார் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

(பரி-ரை.) எ-து,—பண்புடையார்கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்று முண்டாய் வாராநின்றது; ஆண்டுப்படுத லில்லையாயின், அது மண்ணின்கட் புக்கு மாய்ந்துபோவதாம், எ-று.

படுவென்பது திரிந்துநின்றது. உலகு—ஆகுபெயர். மற்றைப்பண்பில்லார் சார்பன்மையின் ஓர் சார்புமின்றி மண்ணின்கட்புக்கு மாயுமது வேண்டாவாயிற்றென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. இவை நான்கு பாட்டானும் அதனை யுடையா ருயர்ச்சி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பண்பு உடையார் - பண்புடையவரிடத்தே, பட்டு - படுதலால், உலகம் - உலகியல், உண்டு - (எந்நாளும்)

உளதாய் வராநின்றது; இன்றேல் - (அங்கேபடுதல்) இல்லையாயின், அது - அவ்வுலகியல், மண் புக்கு - மண்ணிலே புகுந்து, மாய்வது - மாய்ந்துபோவதாம்.

**996.** The (way of the) world subsists by contact with the good; if not, it would bury itself in the earth and perish.

---

எ. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(பரி-ரை.) எ-து,—நன்மக்கட்கேயுரிய பண்பில்லாதவர் அரத்தின் கூர்மைபோலுங் கூர்மையையுடையரேயாயினும் ஓரறிவிற்றாயமரத்தினையொப்பர், எ-று.

அரம்—ஆகுபெயர். ஓரறிவு - ஊற்றினையறிதல். உவமையிரண்டனுள், முன்னது தான் மடிவின்றித் தன்னையுற்றபொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது; ஏனையது விசேடவறிவின்மையாகிய பண்புபற்றிவந்தது. அவ்விசேடவறிவிற்குப் பயனாகிய மக்கட்பண்பின்மையின், அதுதானுமில்லையென்பதாயிற்று.

(தெ-ப-ரை.)—மக்கள் - (நல்) மக்களுக்கே (உரிய), பண்பு இல்லாதவர்—, அரம் போலும் - அரத்தைப்போலும், கூர்மையர் ஏனும் - கூர்மையை யுடையரேயாயினும், மரம் போல்வர் - (பரிசத்தை அறிதலென்னும் ஓரறிவினதாகிய) மரத்துக்கொப்பாவர்.

**997.** He who is destitute of (true) human qualities (only) resembles a tree, though he may possess the sharpness of a file.

---

அ. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

(பரி-ரை.) எ-து,—தம்மொடு நட்பினைச்செய்யாது பகைமையைச் செய்தொழுகுவார் மாட்டும் தாம் பண்புடையரா யொழுகாமை அறிவுடையார்க்கிழுக்காம், எ-று.

நயம் - ஈரம். சிறப்பும்மை அவர் பண்பாற்றாமைக்கிடனுதல் தோன்றநின்றது. அதனைச்செய்யிற் றாமும் அவர் தன்மையராவரென்பார், கடையென்றார்.

(தெ-ப-ரை.)—நண்பு - நட்பினை, ஆற்றார் ஆகி - (தம்மோடு) செய்யாதவராகி, நயம் இல - பகைமையை, [ஈரமில்லாமையை என்றபடி], செய்வார்க்கும்-செய்து நடப்பவரிடத்தும், பண்பு ஆற்றார் ஆதல் - (தாம்) பண்புடையவராய் நடவாமை, கடை - (அறிவுடையவர்க்கு) இழுக்காம்.

**998.** It is wrong (for the wise) not to exhibit (good) qualities even towards those who bearing no friendship (for them) do only what is hateful.

---

௯௯. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(பரி-ரை.) எ-து,—பண்பின்மையான் ஒருவரோடுங்கலந்து உண்மகிழ் தன்மாட்டாதார்க்கு மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட் கிடந்ததாம், எ-று.

எல்லாரோடுங் கலந்தறியப் பெருமையிற் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாதென்பார், உலக மிருளின்கட் பட்ட தென்றார். பாழ்பட்டன்றிரு ளென்றுபாடமோதி, இருணீக்கிற்றன்றென் றுரைப்பாரு முளர்.

(தெ-ப-ரை.)—நகல் வல்லர் அல்லார்க்கு - (பண்பில்லாமை யால் ஒருவரோடுகலந்து) உண்மகிழ்தல் மாட்டாதவர்க்கு, மா இரு ஞாலம் - மிகவும் பெரியபூமியானது, பகலும் - (இருளில் லாத) பகற்பொழுதிலும், இருட்பால் - இருளினிடத்தே, பட்டன்று - கிடந்ததாம்.

**999.** To those who cannot rejoice, the wide world is buried in darkness even in (broad) daylight.

---

௧0. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

(பரி - ரை.) எ-து,—பண்பிலாதவன் முன்னைநல்வினையா னெய்திய பெரியசெல்வம் அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல் நல்ல வான்பால் ஏற்ற கலத்தின் குற்றத்தால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போ லும், எ-று.

கலத்தீமை யென்பது மெலிந்துநின்றது. தொழிலுவம மாகலின் பொரு ளின்கண் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைக்கு மாற்றிலனுதலென்றப் பெற்ற வென்றும் எல்லாப்பயனுங் கோடற்கேற்ற இடனுடைமை தோன்றப் பெருஞ்செல்வ மென்றுங் கூறினார். அச்செல்வமும் பயன்படாதென்ற இத னன் வருகின்ற அதிகாரப் பொருண்மையுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்குபாட்டானும் அஃதில்லார திழிவு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பண்பு இலான் - பண்பில்லாதவன், பெற்ற- (முன்னை நல்வினையினால்) அடைந்த, பெருஞ் செல்வம்—, (அக் குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல்), நல் பால் - நல்ல (பசுவின்) பால், கலம் - (ஏற்ற) கலத்தினது, தீமையால்- குற்றத்தால், திரிந்தற்று - கெட்டாற்போலும்.

**1000.** The great wealth obtained by one who has no goodness will perish like pure milk spoilt by the impurity of the vessel.

---

# கOக - ம். அதி. நன்றியில் செல்வம்.

அஃதாவது ஈட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுத லில்லாத செல்வத்தின தியல்பு. உடையானது குற்றஞ் செல்வத்தின்மே லேற்றப்பட்டது. அதிகார முறைமை மேற்றோற்றுவாய் செய்வதனாற் பெறும்.

க. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

(பரி - ரை.) எ-து,—தன் மனையகலமெல்லாம் நிறைதற் கேதுவாய பெரும்பொருளை யீட்டிவைத்து உலோபத்தால் அதனை யுண்ணாதவன் உளனாயினுஞ் செத்தானாம், அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோ ருரிமை யின்மையான், எ-று.

வைத்தானென்பது முற்றெச்சம். உண்ணுதல் அதனா னைம்புலன்களையும் நுகர்தல். வாய்சான்ற பெரும்பொருளை வைத்தானொருவன் அதனையுண்ணாது செத்தவழி அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோ ருரிமையில்லையாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்கவென் றுரைப்பினு மமையும். இதற்குச் செத்தானென்பது எச்சம். இதனால் ஈட்டியானுக்குப் பயன்படாமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—வாய் சான்ற - (தம்) மனையிடமெல்லாம் நிறைதற்கு ஏதுவாகிய, பெரும் பொருள்-பெரியபொருளை, வைத்தான் - (சம்பாதித்து) வைத்தவனாகி, அஃது - அதனை, உண்ணான் - (உலோபத்தால்) அனுபவியாதவன், (உளனாயினும்), செயக்கிடந்தது - (அதனிடத்து அவனாலே) செயக்கிடந்ததோருரிமையானது, இல் - இல்லை (ஆதலால்), செத்தான் - செத்தவனேயாவன்.

**1001.** He who does not enjoy the immense riches he has heaped up in his house, is (to be reckoned as) dead, (for) there is nothing achieved (by him.)

---

உ. பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

(பரி - ரை.) எ-து,—பொருளொன்று முண்டாக அதனா லெல்லா முண்டாமென்றறிந்து அதனை ஈட்டிப் பின் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ்செய்யு மயக்கத்தாலே ஒருவனுக்கு நிறைதலில்லாத பேய்ப்பிறப் புண்டாம், எ-று.

இருமையினு மெய்து மின்பங்கள் பலவுமடங்க எல்லாமென்றும், ஈட்டுதற்கு முன்னுண்டாய வறிவு பின்மயங்குதலின் மருளென்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுக ளுளவாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்புளதா மென்றுங் கூறினார்.

(தே - ப - வை.)—பொருளான் - பொருளொன்றினால், எல்லாம் ஆம் என்று - எல்லாம் உண்டாகும் என்று (அறிந்து), (அதனைச்சம்பாதித்து), ஈயாது இவறும் - (பின்பிறர்க்கு) கொடாது உலோபத்துவஞ் செய்யும், மருளான் - மயக்கத்தினாலே, மாணாப் பிறப்பு - நிறைதலில்லாத (பேய்) பிறப்பு, ஆம் - (ஒருவனுக்கு) உண்டாம்.

**1002**. He who knows that wealth yields every pleasure and yet is so blind as to lead a miserly life will be born a demon.

---

௩. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(பரி-வை.) எ-து,—யாம் பிறரின்மிக வீட்டுத மென்று பொருளின தீட்டன் மாத்திரத்தையே விரும்பி அதன்பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு நிலத்திற்குப் பாரமாமத்துணையே, எ-று.

இசை இருமைக்கு முறுதியாய அறமாகலின் ஈகையான் அதனையே வேண்டல் செய்யாது ஈட்டற் றுன்பத்தையும் காத்தற் றுன்பத்தையும் வேண்டிய வறிவின்மைபற்றி, நிலக்குப்பொறை யென்றார். பிறப்பென்றது அதற்குரிய வுடம்பினை.

(தே - ப - வை.)—ஈட்டம் - (பிறரின்மிக) சம்பாதிப்போமென்று, இவறி - (பொருள் சம்பாதித்தன் மாத்திரத்தையே) விரும்பி, இசை வேண்டா ஆடவர் - (அதன்பயனாகிய) புகழை விரும்பாத மக்களது, தோற்றம் - (பேய்) பிறப்பு, நிலக்கு பொறை - பூமிக்குப் பாரமேயாம்.

**1003.** A burden to the earth are men bent on the acquisition of riches and not (true) fame.

---

௪. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன்.

(பரி - வை.) எ-து,—ஒருபொருளு மீந்தறியாமையின் ஒருவராலும் நச்சப்படுதலில்லாதவன் தானிறந்தவழி ஈண்டொழிந்து நிற்பதாக யாதனைக் கருதுமோ? எ-று.

ஈண்டொழிந்து நிற்கும்புகழ் ஈவான்மேலன்றி நில்லாமையின் அவனுக்கதனோ டியாது மியைபில்லையென்பார், என்னெண்ணுங் கொல்லோவென்றார். ஓகாரம் அசை. இவை மூன்றுபாட்டானும் பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது.

(தே - ப - வை.)—ஒருவரான் - (ஒருபொருளுங் கொடுத்து அறியாமையால்) ஒருவராலும், நச்சப்படாதவன் - இச்சிக்கப்

படாதவன், (தான் இறந்தவிடத்து), எச்சம் என்று - (இங்கே) ஒழிந்துநிற்பதாக, என் எண்ணுங்கொல் - எதை நினைப்பானோ?

**1004.** What will the miser who is not liked (by any one), regard as his own (in the world to come).

---

௫. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(பரி-ரை.) எ-து,—பிறர்க் கீவதும் தானுகர்வதுமாய இரண்டு செய்கையு முடைய ரல்லாதார்க்குப் பலவாக வடுக்கிய கோடிபொரு ளுண்டாயினும் ஒன்று மில்லை, எ-று.

இன்பத்தினும் அறஞ் சிறத்தலையின், கொடுத்தற்றொழில் முற்கூறப்பட்டது. அடுக்கியகோடியென்றது ஈண்டெண்ணப்படும் பொருண்மே னின்றது. ஒன்று மில்லார்போலப் பயனிரண்டு மிழத்தலின், இல்லென்றார்.

(தெ-ப-ரை.)—கொடுப்பதூஉம் - (பிறர்க்கு) ஈவதும், துய்ப்பதூஉம் - (தான்) அனுபவிப்பதுமாகிய, (இரண்டு செய்கையும்), இல்லார்க்கு-உடையரல்லாதவர்க்கு, அடுக்கிய - (பலவாக) அடுக்கிய, கோடி உண்டாயினும் - கோடிப்பொருள் உண்டாயினும், இல் - (ஒன்றும்) இல்லை.

**1005.** Those who neither give (to others) nor enjoy (their property) are (truly) destitute, though possessing immense riches.

---

௬. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

(பரி-ரை.) எ-து,—தானுகரானாய் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர்வேண்டியதொன்றனை ஈதலியற்கை யில்லாயினான் இரண்டுஞ் செய்தற்கிடனுடைத்தாய செல்வத்திற்கு ஒருநோய், எ-று.

தகுதி - தானங் கோடற் கேற்புடைமை. ஏதம்—ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை அன்றாக்கினமையின், நோயென்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு ஈட்டல் காத்தல் முதலியவற்றால் துன்பமேயாமென் றுரைப்பாருமுளர். இவையிரண்டு பாட்டானும் அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—தான் துவ்வான் - தான் அனுபவியாதவனாகி, (அதன்மேலும்), தக்கார்க்கு - தகுதியுடையவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றை, ஈதல் இயல்பு இலாதான் - கொடுத்தற்றன்மை யில்லாதவன், பெருஞ்செல்வம் - (அவ்விரண்டுஞ் செய்தற்கு இடமுடையதாகிய) பெரிய செல்வத்திற்கு, ஏதம்- ஒருநோய்.

**1006.** He who enjoys not (his riches) nor relieves the wants of the worthy is a disease to his wealth.

---

எ. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

(பரி - ரை.) எ-து,—ஒருபொருளு மிலராயினார்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கொடாதானது செல்வங் கொன்னேகழிதல் பெண்டிரின் மிக்க நலத்தினைப்பெற்றாளொருத்தி கொடுப்பாரின்மையிற் கொழுநனின்றித் தமிய ளாய் மூத்ததன்மைத்து, எ-று.

நலம்—வடிவினன்மையும் குணத்தினன்மையும். இரண்டுமொருங்குபெறுத லரிதாகலின், பெற்றாளென்றார். கொடுப்பாருங் கொழுநனுமே யன்றித் தானும் பயனிழந்து கழிந்த் குமரியோ வேமை கூறினமையின், தானுமேற்பானு மேயன்றிச் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று.

(தெ-ப-ரை.)—அற்றார்க்கு-(ஒருபொருளும்) இலராயினார்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றனை, ஆற்றாதான் - கொடாதவனது, செல்வம் - செல்வமானது (வீணாகக்கழிதல்), மிக நலம் பெற்றாள் - (அழகு குணமுதலிய) மிகுந்த நலத்தினைப் பெற்ற வொருத்தி, (கொடுப்பாரில்லாமையினாலே), தமியள் - (கணவனில்லாமல்) தனியளாய், மூத்தற்று - மூத்ததன்மைத்து.

**1007.** The wealth of him who never bestows anything on the destitute is like a woman of beauty growing old without a husband.

---

அ. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(பரி-ரை.) எ-து,—வறியார்க்கணியனா யிருந்தும் ஒன்றுங் கொடாமையின் அவரா னச்சப்படாதவன் செல்வமெய்துதல் ஊரிடை நிற்பதோர் நச்சு மரம் பழுத்தாற்போலும், எ-று.

நடுவூரென்பது பின்முன்னாகத் தொக்கவாறும் வேற்றுமைத்தொகை. அண் மையுடைமைகளாற் பயனில்லை யென்பதாம்.

(தெ-ப-ரை.)—(வறியவர்க்குச் சமீபனா யிருந்தும் ஒன்றுங் கொடாமையால்), நச்சப்படாதவன் - (அவரால்) இச்சிக்கப்படாதவன், செல்வம் - செல்வம் (பெறுதல்), நடுவூருள் - ஊர்நடுவுள்ள, நச்சுமரம் - எட்டிமரம், பழுத்தற்று - பழுத்தல்போலும்.

**1008.** The wealth of him who is disliked (by all) is like the fruit-bearing of the etty tree in the midst of a town.

---

கூ. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

(பரி-ரை.) எ-து,—ஒருவன் கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண் அன்பு செய்தலை யொழிந்து வேண்டுவன நுகராது தன்னைச்செறுத்து வறியார்க்கு ஈதன்முதலியவறத்தை நினைப்பதுஞ் செய்யாது ஈட்டிய வொள்ளியபொருளைக் கொண்டுபோய்ப் பயன்பெறுவார் பிறர், எ-று.

பயனுய அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளா லுள்ளது ஈட்டற்றுன்பமே யென்பது தோன்ற ஈட்டியவென்றும், அவன் வழியி னுள்ளார்க்கும் உதவாதென்பது தோன்றப் பிறரொன்றுங் கூறினர்.

(தெ-ப-ரை.)—(ஒருவன்), அன்பு ஒரீஇ - (கொடாதிருத்தற்பொருட்டுச் சுற்றத்தாரிடத்தும் நட்பினரிடத்தும்) அன்புசெய்வதனை ஒழிந்து, தன் செற்று - (வேண்டுவன அனுபவியாமல்) தன்னைவருத்தி, அறன் நோக்காது - (வலியவர்க்குக் கொடுத்தலாதியாகிய) அறத்தை நினையாமல், ஈட்டிய ஒள் பொருள் - சம்பாதித்த ஒள்ளியபொருளை, பிறர் கொள்வார் - அன்னியர் (கொண்டுபோய்ப் பயன்) கொள்ளுவார்.

**1009.** Strangers will inherit the riches that have been acquired without regard for friendship, comfort and charity.

---

கO. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(பரி-ரை.) எ-து,—புகழுடைத்தாய செல்வத்தினை யுடையவரது நிற்குங்காலஞ் சிறிதாய வறுமை உலகத்தையெல்லாம் நிலைநிறுத்துமேகம் வறுமை மிக்காற்போல்வதோ ரியல்பினை யுடைத்து, எ-று.

துனி-வெறுப்பு; அதனைச் செய்தலாற் றுனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் அதனன் வறியராய வழியும் அவ்வறுமை கடிதினீங்குதலிற் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவரொன்பது உவமையாற் பெறப்பட்டது; படவே நன்றியில்லாத செல்வம் என்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று. இதற்குச் சீருடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில்வெறுப்பு மாரி வறங் கூர்ந்தனைய தன்மையையுடைத்தென அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும் ஓர்பொருட்டொடர்பு படாமலுரைப்பாரு முளர். இவை நான்குபாட்டானும் அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சீர் உடை - புகழுடைத்தாகிய, செல்வர் - செல்வத்தினை யுடையவரது, சிறு துனி - (நிற்குங்காலம்) சிறிய வறுமை, மாரி - (உலகத்தையெல்லா நிலைநிறுத்துகிற) மேகம், வறம் கூர்ந்து அனையது - வறுமை மிகுந்தது போல்வதோ ரியல்பினை, உடைத்து - உடையது.

**1010.** The short-lived poverty of those who are noble and rich is like the clouds becoming poor (for a while.)

---

## கO௨-ம். அதி. நாணுடைமை.

அஃதாவது மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களானுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையராந்தன்மை. அதிகார முறைமையும் இதனனே விளங்கும்.

௧. கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற.

(பரி-ரை) எ-து,—நன்மக்களுக்குவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல்; அஃதன்றி மனமொழிமெய்கள தொடுக்கத்தான் வருவனவோவெனின், அவை அவரளவல்ல அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண்கள், எ-று.

பிற குலமகளிர் நாணென்றதனான் ஏனையது நன்மக்க ளுணென்பதும், நாணுதலென்றதனாற் கருமத்ததிழிவும், பெற்றும். திருநுதனல்லவரென்பது புகழ்ச்சிக்குறிப்பு. ஏதுப்பன்மைபற்றிப் பிறவென்றார். இனி அற்றமறைத்தன் முதலியன பொதுமகளிர் நாணோ டொக்குமென் றுரைப்பாரு முளர். அவர்க்கு நாண்கேடு பயக்குமென விலக்கப்பட்டமையானும், அவர் பெயராற் கூறப்பட்டமையானும், அஃதுரையன்மையறிக. இதனான் நாணின திலக்கணங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நாணு - (நன்மக்களது) நாணுவது, கருமத்தால் நாணுதல் - (இழிந்த) கருமங்காரணமாக நாணுதலாம்; பிற - அதல்லாமல் (மனமொழிமெய்களது ஒடுக்கத்தால் வருகிற) நாணங்கள், திரு நுதல் - அழகிய நெற்றியையுடைய, நல்லவர் - குலமகளிரது, நாணு - நாணங்கள் போலும்.

**1011.** True modesty is the fear of (evil) deeds; all other modesty is (simply) the bashfulness of virtuous maids.

---

௨. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(பரி-ரை.) எ-து,—ஊணும் உடையும் அவையொழிந்தனவும் மக்களுயிர்க்கெல்லாம் பொது; நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, அவையல்ல, எ-று.

ஒழிந்தன—உறக்கமும் அச்சமுங் காமமும். சிறப்பு — அவ்வுயிர்களின் வேறுபாடு. அச்சமென்று பாடமோதுவாரு முளர்.

(தெ-ப-ரை.)—ஊண் - உண்டியும், உடை - ஆடையும், எச்சம் - (உறக்கம் காமம் அச்சம் என்பன) ஒழிந்தவைகளும், உயிர்க்கு எல்லாம் - (மக்கள்) உயிர்க்கெல்லாம், வேறு அல்ல - பொதுவாம்; மாந்தர் சிறப்பு - நன்மக்களுக்குச் சிறப்பாவது, நாண் உடைமை - நாணமுடைமையாம், (அவையல்ல.)

**1012.** Food, clothing and the like are common to all men; but modesty is peculiar to the good.

---

௩. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு.

(பரி-ரை.) எ-து,—எல்லாவுயிர்களும் உடம்பினைத் தமக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனைவிடா; அதுபோலச் சால்பு நாணென்னு நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனை விடாது, எ-று.

உடம்பென்பது சாதியொருமை. நன்மை—ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாதவாறு போலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தா தென்பதாம். ஊனைக் குறித்தவென்று பாடமோதுவாருமுளர்.

(தெ-ப-ரை.)—உயிர் எல்லாம்-எல்லாவுயிர்களும், ஊனை-உடம்பை, குறித்த-(தமக்கு) இருப்பிடமாகக் கொண்டு அதனை விடாவாம்; (அதுபோல்), சால்பு - (நற்குணங்களின்) நிறைவானது, நாண் என்னு நன்மை - நாணென்கிற நற்குணத்தை, குறித்தது - (தனக்கு) இருப்பிடமாகக்கொண்டு அதனை விடாது.

**1013**. As the body is the abode of the spirit, so the excellence of modesty is the abode of perfection.

---

௪. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

(பரி-ரை.) எ-து,—சான்றோர்க்கு நாணுடைமை யாபரணமாம்; அவ்வாபரண மில்லையாயின் அவர் பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்குப் பிணியாம், எ-று.

அழகு செய்தலின் அணியென்றும், பொறுத்தற் கருமையிற் பிணியென்றுங் கூறினார். ஓகாரவிடைச் சொற்கள் எதிர்மறைக்கண் வந்தன. இவை மூன்றுபாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—சான்றோர்க்கு - நற்குண நிறைந்தோர்க்கு, நாண் உடைமை - நாணமுடைமை, அணி அன்றோ - ஆபரணமாம்; அஃது இன்றேல் - அவ்வணி இல்லையாயின், பீடு நடை - (அவர்) பெருமிதநடை, பிணி அன்றோ - (கண்டவர்க்கு) நோயாம்?

**1014**. Is not the modesty oranament of the noble? Without it, their haughtiness would be a pain (to others).

---

௫. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

(பரி-ரை.) எ-து,—பிறர்க்கு வரும்பழியையுந் தமக்கு வரும்பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை உலகத்தார் நாணுக் குறைவிடமென்று சொல்லுவர், எ-று.

ஒப்பமதித்தல்-அதுவுந் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—பிறர் பழியும் - பிறர்க்குவரும் பழியையும், தம் பழியும் - தமக்குவரும் பழியையும், நாணுவார் - (ஒப்பாகமதித்து) நாணுவாரை, உலகு - உலகத்தார், நாணுக்கு—, உறை பதி என்னும் - இருப்பிடமென்று சொல்லுவர்.

**1015.** The world regards as the abode of modesty him who fears his own and others' guilt.

---

௬. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

(பரி - ரை.) எ-து,—உயர்ந்தவர், தமக்கேமமாக நாணினைக் கொள்வதன்றி, அகன்றஞாலத்தைக் கொள்ள விரும்பார், எ-று.

பழி பாவங்கள் புகுதாமற் காத்தலின், வேலியென்றார். நாணும் ஞாலமுந் தம்முண்மாறாயவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவைபுகுது நெறியாய ஞாலத்தினைக்கொள்ள விரும்பா ரென்பதாம். மன்னும் ஓவும் அசை. நாணாகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பாரென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—மேலாயவர் - உயர்ந்தவர், வேலி - (தமக்கு) காப்பாக, நாண் - நாணத்தை, கொள்ளாது - கொள்வதல்லாமல், வியன் ஞாலம் - பரப்பானபூமியை, பேணலர் - கொள்ள விரும்பார்.

**1016.** The great make modesty their barrier (of defence) and not the wide world.

---

௭. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர்.

(பரி-ரை.) எ-து,—நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார் அந்நாணு முயிருந் தம்முண் மாறாயவழி நாண்சிதையாமற் பொருட்டு உயிரை நீப்பர், உயிர் சிதையாமற் பொருட்டு நாணினை நீக்கார், எ-று.

உயிரினும் நாண் சிறந்ததென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—நாண் ஆள்பவர் - நாணத்தை (அதனது சிறப்பறிந்து) விடாதுநடப்பவர், (அந்நாணும் உயிருங் கூடிநிற்கமாட்டாத விடத்து), நாணால் - நாண் சிதையாமற்பொருட்டு, உயிர் துறப்பார் - உயிரை நீக்குவார்; உயிர் பொருட்டான் - உயிர்சிதையாமற் பொருட்டு, நாண் துறவார் - நாணினை நீக்கார்.

**1017.** The modest would rather lose their life for the sake of modesty than lose modesty for the sake of life.

---

௮. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

(பரி - ரை.) எ-து,—கேட்டாருங் கண்டாரு நாணத்தக்க பழியை ஒருவன் தானாணாது செய்யுமாயின், அந்நாணாமை அவனை அறம் விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை யுடைத்து, எ-று.

தானனைச் செய்வானைப் பிரிக்கின்றதாகலின், பிறரென்றார். நாணுடைமை யில்லாதானை அறஞ்சாரா தென்பதாம்.

(தெ-ப-ரை.)—பிறர் - கேட்டவரும் கண்டவரும், நாணத் தக்கது - நாணத்தக்கபழியை, தான் நாணான் ஆயின் - (ஒருவன்) தான் நாணாதுசெய்வானாயின், (அந்நாணாமை), அறம் நாணத் தக்கது - அறமானது (அவனை) விட்டு நீங்கத்தக்க குற்றத்தை, உடைத்து - உடையது.

**1018.** **Virtue is likely to forsake him who shamelessly does what others are ashamed of.**

---

௯. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக் கொழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன் குடிப்பிறப் பொன்றனையுங் கெடுக்கும்; ஒருவன் மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும், எ-று.

நிற்றல் ஒருபொழுதும் நீங்காமை. நலம் சாதியொருமை யாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனமென் றிவற்றான் வந்தனவெல்லாங் கொள்ளப்படும். ஒழுக்க அழிவினும் நாணழிவு இறப்பத் தீதென்பதாம்.

(தெ - ப - ரை.)—கொள்கை - ஒழுக்கம், பிழைப்பின் - (ஒருவனுக்கு) வழுவு மாயின், (அவ்வழுவு,) குலம் சுடும் - (அவன்)குடிப்பிறப் பொன்றையும் கெடுக்கும்; நாண் இன்மை- நாணில்லாமை, நின்றக்கடை - (ஒருவன்கண்ணே) நின்றவிடத்து, (அந்நிலை), நலம் - (அப்பிறப்பு கல்வி குணம் செயல் இனம் என்பவைகளால் அவனுக்குவரும்) நலம்யாவையும், சுடும் - கெடுக்கும்.

**1019.** **Want of manners injures one's family; but want of modesty injures one's charater.**

---

கO. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட் டி யற்று.

(பரி-ரை.) எ-து,—தம்மனத்தின்கண் நாணில்லாத மக்கள் உயிருடையார் போன்றியங்குகின்ற வியக்கம் மரத்தாற் செய்த பாவை இயந்திரக் கயிற்றினுடைய தன்னியக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற்போலும், எ-று.

கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவை யியக்கம் போல்வ தல்லது உயிரியக்க மன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் நாணில்லார திழிவு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—அகத்து - (தம்) மனத்தில், நாண் - நாணத்தை, இல்லார் - இல்லாதமக்கள், இயக்கம் - (உயிருடையவர் போன்று சஞ்சரிக்கின்ற) சஞ்சரிப்பு, மரப்பாவை - மரத்தாற் செய்யப்பட்ட பாவை, நாணால் - எந்திரக் கயிற்றினாலாகிய (ச

ஞ்சரிப்பால்), உயிர் - உயிருடையதாக, மருட்டியற்று - மயக்குதல்போலும்.

**1020.** The actions of those who are without modesty at heart are like those of a puppet moved by a string.

---

## க0ௗ - ம். அதி. குடிசெயல்வகை.

*அஃதாவது ஒருவன் றான்பிறந்த குடியை உயரச்செய்தலின் றிறம். இது தாழ்வின்க ணுணுதலுடையார்க் குளதாவதாகலின் நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.*

க. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

(பரி-ரை.) எ-து,—தன்குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமமுடியாமையின் எண்ணிய கருமஞ் செய்தற் கியான் கையொழியே னென்னும் ஆள்வினைப் பெருமைபோல ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிதில்லை, எ-று.

குடிசெய்தற்கென்பது அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின், பீடுடைய தில்லென்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன்கருமஞ் செய்யவென்றும் பிறர் கருமஞ் செய்யவென்று முரைப்பாரு முளர்; தன் கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல் செய்தல் தலைமையன்மையானும், அவையுரையன்மை யறிக.

(தெ - ப - ரை.)—ஒருவன்—, (தன்குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமமுடியாமையால்), கருமம் செய - அக்கருமஞ் செய்தற்கு, கைதூவேன் என்னும் - கையொழியே னென்கிற, பெருமையின் - முயற்சிப் பெருமைபோல, பீடு உடையது - மேம்பாடுடைய பெருமை, இல் - (அவனுக்கு) இல்லை.

**1021.** There is no higher greatness than that of one saying, I will not cease in my effort (to raise my family).

---

உ. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி.

(பரி-ரை.) எ-து,—முயற்சியும் நிறைந்த வறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய இடையறாத கருமச்செயலால் ஒருவன் குடியுயரும், எ-று.

நிறைதல்—இயற்கையறிவு செயற்கையறிவோடுகூடி நிரம்புதல். ஆள்வினை மடிபுகுதாமற் பொருட்டு. ஆன்றவறிவு உயர்தற்கேற்ற செயல்களும் அவைமுடிக்குந் திறமும் பிழையாம லெண்ணுதற்பொருட்டு. இவை யிரண்டுபாட்டானும் அச்செயற்குக் காரணங் கூறப்பட்டது.

(தெ - ப - ஸா.)—ஆள்வினையும் - முயற்சியும், ஆன்ற அறிவும் - நிறைந்தவறிவும், என இரண்டின் - என்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய, நீள் வினையான் - ஓய்வு இல்லாத கருமச் செயலால், குடி - (ஒருவனது) குடி, நீளும் - உயரும்.

**1022**. One's family is raised by untiring perseverance in both effort and wise contrivances.

---

௩. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(பரி - ஸா.) எ-து,—என் குடியினை யுயரச்செய்யக்கடவே னென்று கொண்டு அதற்கேற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்குத் தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும், எ-று.

முயற்சியை அதன் காரணத்தாற் கூறினர். தற்றுதல்—இறுகவுடுத்தல். முன்னடப்பார்செயல் நியதிமே லேற்றப்பட்டது.

(தெ-ப-ஸா.)—குடிசெய்வல் என்னும் - (என்) குடியினை உயரச்செய்யக்கடவேனென்று கொண்டு (அதற்கு ஏற்ற கருமங்களின் முயலுகிற), ஒருவற்கு - ஒருவனுக்கு, தெய்வம் - தெய்வமானது, மடி - உடையை, தற்று - இறுக வுடுத்திக்கொண்டு, தான்—, முந்துறும் - முன்னே யுற்று நிற்கும்.

**1023**. The Deity will clothe itself and appear before him who resolves on raising his family.

---

௪. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(பரி - ஸா.) எ-து,—தங்குடிக்காம் வினையை விரைந்து முயல்வார்க்கு அவ்வினை முடிக்குந்திறம் அவர் சூழவேண்டாமற் றானே முடிவெய்தும், எ-று.

குடி—ஆகுபெயர். தெய்வ முந்துறுதலாற் பயன்கூறியவாறு. இவையிரண்டு பாட்டானும் அதற்குத் தெய்வந் துணையாதல் கூறப்பட்டது.

(தெ - ப - ஸா.)—தம் குடியை - தங்குடிக்காந் தொழிலை, தாழாது - விரைந்து, உஞற்றுபவர்க்கு - முயல்பவர்க்கு, (அத்தொழில் முடிக்கும் விதம்), சூழாமல் - ஆலோசிக்கவேண்டாமல், தானே முடிவு எய்தும் - தானே முடிவுபெறும்.

**1024**. Those who are prompt in their efforts (to better their family) need no deliberation, such efforts will of themselves succeed.

---

௫. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(பரி - ஸா.) எ-து,—குற்றமாயின செய்யாது தன்குடியை யுயரச்செய் தொழுகுவானை அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார், எ-று.

குற்றமாயின—அறநீதிகட்கு மறுதலையாய செயல்கள். தாமும் பயனை நோக்கி யாவருஞ்சென்று சார்வ ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—குற்றம் இலன் ஆய் - குற்றமானவை செய்திலனாகி, குடி செய்து - (தன்) குடியை உயரச்செய்து, வாழ்வானை-வாழ்கின்றவனை, சுற்றம் ஆ - (அவனுக்கு) உறவாகவேண்டி, உலகு - உலகத்தார், சுற்றும் - (தாமே சென்று) சூழ்வர்.

**1025.** **People will eagerly seek the friendship of the prosperous soul who has raised his family without foul means.**

---

சு. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(பரி - ரை.) எ - து,—ஒருவனுக்கு நல்ல ஆண்மையென்று உயர்த்துச் சொல்லப்படுவது தான் பிறந்த குடியினையாளுந் தன்மையைத் தனக்குளதாக்கிக்கோடல், எ-று.

போர்த்தொழிலி னீக்குதற்கு நல்லாண்மையென விசேடித்தார். குடியினை யாளுந்தன்மை—குடியிலுள்ளாரை யுயரச்செய்து தன்வழிப்படுத்தல். அதனைச் செய்துகோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும்.

(தெ - ப - ரை.)—ஒருவற்கு - ஒருவனுக்கு, நல்ல ஆண்மை என்பது - நல்ல ஆண்மையென்று (உயர்த்தி) சொல்லப்படுவது, தான் பிறந்த—, இல் ஆண்மை - குடியை ஆளுதற் தன்மையை, ஆக்கி கொளல் - (தனக்கு) உண்டாக்கிக்கொள்ளுதல்.

**1026.** **A man's true manliness consists in making himself the head and benefactor of his family.**

---

எ. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(பரி - ரை.) எ-து,—களத்தின்கட் சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர் மேலதானாற்போல, குடியின்கட் பிறந்தார் பலராயினும் அதன் பாரம் பொறுத்தல் அது வல்லார் மேலதாம், எ-று.

பொருட்கொக்கவேண்டுஞ் சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்குமதிக்கப் படுவார் அவரே யென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அது செய்வா ரெய்துஞ் சிறப்புக் கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—அமரகத்து - களத்தினிடத்து, (சென்றவர் பலராயினும் போர்தாங்குதல்), வன் கண்ணர் போல - சூரர் (மேலாகுதல்) போல, தமரகத்தும் - குடியினிடத்தும், (பிறந்தவர் பலராயினும்), பொறை - (அதன்பாரம்) பொறுத்தல், ஆற்றுவார் மேற்றே - வல்லவர்மேலதேயாம்.

**1027.** Like heroes in the battle-field, the burden (of protection &c.) is borne by those who are the most efficient in a family.

அ. குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(பரி-ரை.) எ-து,—தங்குடியினை யுயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தைநோக்கி மடியினைச் செய்துகொண்டு மானத்தையுங் கருதுவராயிற் குடி கெடும், ஆகலான் அவர்க்குக் காலநியதி யில்லை, எ-று.

காலத்தை நோக்கி மடிசெய்தல்—வெயின் மழை பனி யென்பன வுடைமைநோக்கிப் பின்னர்ச் செய்துமென் றொழிந்திருத்தல். மானங் கருதுதல்—இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானோவென்று உட்கோடல். மேல் இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும்பொழுதென்றதுட்கொண்டு இவர்க்கு வேண்டுமோ வென்று கருதினும் அது கருதற்கவென்று மறுத்தவாறு.

(தெ-ப-ரை.)—மடிசெய்து - (குடியுயரச்செய்தலை நோக்காது காலத்தை நோக்கி) சோம்பல்செய்துகொண்டு, மானம் - மானத்தையும், கருத - நினைப்பாராகில், கெடும் - (குடி) கெடும்; (ஆதலால்), குடிசெய்வார்க்கு—, பருவம்-காலநியதி, இல்லை—.

**1028.** As a family suffers by (one's) indolence and false dignity, there is to be no season (good or bad) to those who strive to raise their family.

௯. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

(பரி-ரை.) எ-து,—மூவகைத்துன்பமு முறற்பாலதாய தன்குடியை அவையுறாமற்காக்க முயல்வானது உடம்பு அம்முயற்சித்துன்பத்திற்கே கொள்கலமா மத்துணையே, அஃதொழிந்து இன்பத்திற்காத லில்லையோ? எ-று.

"உறைப்பெய லோலை போல—மறைக்குவன் பெருமநிற் குறித்து வருவலே" என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று. என்குடிமுழுதுமின் புற்றுயரவே நானிருமையுமெய்துதலான் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நன்றென்று முயலுமறிவுடையான் அஃதொருஞான்று மொழியாமைநோக்கி, இடும்பைக்கே கொள்கலங் கொல்லோவென்றார். இது குறிப்புமொழி. இவையிரண்டுபாட்டானும் அவர் அது செய்யுமியல்பு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—குடும்பத்தை - (தன்) குடியை, குற்றம் மறைப்பான் - (மூவகை) துன்பங்களும் அடையாமற்காக்க முயல்பவனது, உடம்பு—, இடும்பைக்கே - (முயற்சி) துன்பத்திற்கே, கொள்கலம் கொல் - கொள்கலமா மவ்வளவோ, [இன்பத்திற் காகுதலில்லையோ?]

**1029.** Is it only to suffering that his body is exposed who undertakes to preserve his family from evil?

௧0. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி.

(பரி-உரை.) எ-து,—துன்பமாகிய நவியம் புகுந்து தன்முதலைவெட்டிச் சாய்க்க ஒருபற்றின்றி வீழாநிற்கும். அக்காலத்துப் பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்லவாண்மகன் பிறவாத குடியாகிய மரம், எ-று.

முதல்—அதன்வழிக்குரியார். வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்து பயன் படுதலும் அல்லாவழிக் கெடுதலுமுடைமையின், மரமாக்கினர்; "தூங்குசிறை வாவலுறை தொன்மரங்களன்ன, ஓங்குகுல நையவத னுட் பிறந்தவீரர், தாங்கல்கட னாகுந்தலை சாய்ப்பவரு நீச்சொ, னீங்கன்மட வார்கள்கடனென்றெ ழுந்து போந்தான்." என்றார் பிறரும். இது குறிப்புருவகம். இதனான் அவ ரில்லாத குடிக்குளதாங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப - உரை.)—அடுத்து - (தான்வீழும்போது) முட்டுக் கொடுத்து, ஊன்றும் - தாங்கவல்ல, நல் ஆள் - நல்ல வாண் மகன், இலாத - பிறவாத, குடி - குடியாகிய (மரம்), இடுக்கண்- துன்பமாகிய (கோடரியானது), கால் - (தன்) முதலை, கொன் றிட - வெட்டிச்சாய்க்க, வீழும் - (ஒருபற்றில்லாமல்) வீழாநிற் கும்.

**1030.** **If there are none to prop up and maintain a family (in distress), it will fall at the stroke of the axe of misfortune.**

---

## ௧0௪-ம். அதி. உழவு.

அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கு முரித்தாய உழுதற்றொழில். செய்விக்குங்கால் ஏனையோர்க்கு முரித்து. இது, மேற்குடி யுயர்தற் கேதுவென்ற ஆள்வினை வகையாகலின், குடிசெயல் வகை யின்பின் வைக்கப்பட்டது.

௧. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை.

(பரி - உரை.) எ-து,—உழுதலான்வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொ ழில்களைச் செய்துதிரிந்தும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம். ஆதலான் எல்லாவருத்த முற்றும், தலையாயதொழில் உழவே, எ-று.

ஏர்—ஆகுபெயர். பிறதொழில்களாற் பொருளெய்திய வழியும் உணவின் பொருட்டு உழுவார்கட் செல்லவேண்டுதலிற் சுழன்று மேர்ப்பின்ன துலக மென்றும், வருத்தமிலவேனும் பிறதொழில்கள் கடையென்பது போதர உழ ந்துமுழவே தலையென்றுங் கூறினார். இதனால் உழவினது சிறப்புக் கூறப் பட்டது.

(தெ-ப - உரை.)—உலகம்—, சுழன்றும் - (உழுதலால் வரு மெய் வருத்தநோக்கிப் பிறதொழில்களைச்செய்து) திரிந்தும், ஏர்

பின்னது - (முடிவிலே) ஏருடையார் வழியதாயிற்று ; அதனல்-ஆதலால், உழந்தும் - (எல்லா) வருத்தமுற்றும், தலை - தலைமையாகிய (தொழில்), உழவே - உழுதலேயாம்.

**1031. Agriculture, though laborious, is the most excellent (form of labour); for, people, though they go about (in search of various employments), have at last to resort to the farmer.**

---

உ. உழுவா ருலகத்தார்க் காணி யஃதாற்
றெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(பரி - ரை.) எ-து,—அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிறதொழில்கண் மேற் செல்வார் யாவரையுந் தாங்குதலால், அதுவல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவார், எ-று.

காடுகொன்று நாடாக்கிக் குளந் தொட்டென்றாற்போல உழுவாரென்றது உழுவிப்பார் மேலுஞ் செல்லும். உலகத்தாரென்றது ஈண்டிவரை யொழித்தாரை. கலங்காம னிறுத்தற்கண் ஆணிபோறலின், ஆணியென்றார். பொறுத்தலானென்பது திரிந்து நின்றது. ஏகதேச வுருவகம். அஃதாற்றார் தொழுவரோ யெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அது மாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவாரேயாவ ரென்றுரைப்பாரு முளர்.

(தெ - ப - ரை.)—உழுவார் - உழுதலில் வல்லவர், அஃது ஆற்றாது - அவ்வுழுதலைச் செய்யமாட்டாமல், எழுவாரை எல்லாம் - (பிறதொழில்களிலே) மேற்செல்வோர் யாவரையும், பொறுத்து - தாங்குதலால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய (தேர்க்கு), ஆணி - அச்சாணியாவார்.

**1032. Agriculturists are (as it were) the linch-pin of the world, for they support all other workers who cannot till the soil.**

---

௩. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின் செல் பவர்.

(ப-ரை.) எ-து,—யாவரு முண்ணும் வகை உழுதலைச்செய்து அதனற் றாமுமுண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர் ; மற்றையாரெல்லாம் பிறரைத்தொழுது அதனற் றாமுண்டு அவரைப் பின்செல்கின்றவர்,எ-று.

மற்றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமு மக்கட்பிறப்பினராய் வைத்துப் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின்செல்வார் தமக்குரியரல்ல ரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—உழுது - (எல்லாரும் உண்ணும்படி) உழுதலைச்செய்து, உண்டு - (அதனல்தாமும்) உண்டு, வாழ்வாரே - வாழ்கின்றவர்களே, வாழ்வார் - (தமக்கு உரியராய்) வாழ்கின்றவர் ; மற்றெல்லாம் - மற்றவரெல்லாரும், தொழுது - (பிறரை)

தொழுது, உண்டு - (அதனால் தாமும்) உண்டு, பின் செல்பவர்- (அவனை) பின்செல்லுகின்றவர்.

**1033.** They alone live who live by agriculture; all others lead a cringing, dependent life.

---

௪. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

(பரி - ரை.) எ-து,—உழுதற்றொழிலான் நெல்லினை யுடையராய தண்ணளியுடையோர் பல வேந்தர் குடைநிழலதாய மண் முழுதினையுந் தம்வேந்தர் குடைக்கீழே காண்பர், எ-று.

அலகு-கதிர்; அஃதீண்டாகுபெயராய் நென்மேலதாயிற்று. உடையவென்பது குறைந்துநின்றது. நீழல்போறலின் நீழலெனப்பட்டது. நீழலவரென்றது இரப்போர்க்கெல்லாம் ஈதனோக்கி. ஒற்றுமைபற்றித் தங்குடையென்றார். குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர்; "ஊன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே" என்றதனால் தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்ப ரென்பதாம்; "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு முழவிடை விளைப்போர்" என்றார் பிறரும்.

(தெ-ப-ரை.)—அலகு உடை - (உழுதற்றொழிலால்) நெல்லையுடையராகிய, நீழலவர் - தண்ணளியுடையோர், பல குடை நீழலும் - பலவேந்தர்குடை நிழலதாகிய (பூமிமுழுதையும்), தம் குடைக்கீழ் - தம் (வேந்தர்) குடைக்கீழே, காண்பர்.—

**1034.** Patriotic farmers desire to bring all other states under the control of their own king.

---

௫. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(பரி-ரை.) எ-து,—தங்கையா லுழுதுண்டலை யியல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார்; தம்மையிரப்பார்க்கு அவர்வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர், எ-று.

செய்தென்பதற்கு உழுதலையெனவருவிக்க. கைசெய்தூண்மாலையவரென்பது ஒருஞான்றும் அழிவில்லாத செல்வமுடையரென்னும் ஏதுவை யுட்கொண்டு நின்றது.

(தெ-ப-ரை.)—கை - (தம்) கையால், செய்து - (உழுதல்) செய்து, ஊண் மாலையவர் - உண்ணுதலை இயல்பாக வுடையவர், இரவார் - (பிறரைத்தாம்) இரவார்; இரப்பார்க்கு - (தம்மை) இரப்பவர்க்கு, ஒன்று - அவர் (வேண்டியது) ஒன்றை, கரவாது- ஒளிக்காமல், ஈவர் - கொடுப்பார்.

**1035.** Those whose nature is to live by manual labour will never beg but give something to those who beg.

---

௬. உழவினர் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

(பரி-ரை.) எ - து,—உழுதலையுடையார்கை அதனைச்செய்யாது மடங்குமாயின், யாவரும் விழையுமுணவும் யாந்துறந்தோ மென்பார்க்கு அவ்வறத்தின்கணிற்றலு முளவாகா, எ-று.

உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது. உணவின்மையால், தாமுண்டலும் இல்லறஞ்செய்தலும் யாவர்க்கு மில்லையாயின. அவ ருறுப்புமாத்திரமாய கை வாளாவிருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழா வென்பதாம். ஒன்றனை மனத்தால் விழைதலுமொழிந்தே மென்பார்க்கெனவுரைப்பாரு முளர். இவையைந்துபாட்டானும் அதனைச்செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது.

(தெ-ப-வுரை.)—உழவினர் - உழுதலை யுடையவர், கைமடங்கின்-கை (அதனைச்செய்யாது) மடங்குமாயின், விழைவதூஉம் - (யாவரும்) விரும்பு முணவும், விட்டேம் என்பார்க்கு-துறந்தோ மென்பார்க்கு, நிலை - (அவ்வறத்திலே) நிற்றலும், இல்லை - உளவாகா.

**1036.** If the farmers' hands are slackened, even the ascetic state will fail.

---

௭. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

(பரி-ரை) எ-து,—ஒரு நிலத்தினையுழுதவன் ஒருபலப்புழுதி கஃசாம் வண்ணம் அதனைக் காயவிடுவனாயின், அதன்கட் செய்தபயிர் ஒருபிடியின்கணடங்கிய எருவுமிடவேண்டாமற் பணைத்து விளையும், எ-று.

பிடித்து—பிடியின்கண்ணது. பிடித்தவென்பதன் விகாரமென்பாருமுளர். வேண்டாமல், சான்று என்பன திரிந்துநின்றன.

(தெ-ப-வுரை.) — (ஒரு நிலத்தினை யுழுதவன்), தொடிப்புழுதி - ஒருபலப்புழுதி, கஃசு ஆ-காற்பலமாம்படி, உணக்கின்-(அதனை) காயவிடுவனாயின், (அதனிடத்துச்செய்தபயிர்), பிடித்து எருவும் - ஒருபிடியில் அடங்கிய எருவும், வேண்டாது - (இட) வேண்டாமல், சாலப் படும் - பருத்து விளையும்.

**1037.** If the land is dried so as to reduce one *pollulm* of earth to a quarter, it will grow plentifully even without a handful of manure.

---

௮. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
னீரினு நன்றதன் காப்பு.

(பரி-ரை.) எ-து,—அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று; இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால் யாத்தலினு நன்று, எ-று.

ஏர்—ஆகுபெயர். காத்தல்—பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமற் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால்யாத்தல், காத்தலென் றிம்முறையவாய இவ்வைந்தும் வேண்டுமென்பதாம்.

(தெ - ப - ரை.)—(அப்பயிர்க்கு), ஏரினும் - அவ்வுழுதலினும், எரு இடுதல் - எருப்பெய்தல், நன்று - நல்லதாம்; கட்டபின் - (இவ்விரண்டுஞ்செய்து) களைபிடுங்கியபின், அதன் காப்பு - அதனைக் காத்தல், நீரினும் - நீர்பாய்ச்சலினும், நன்று - நலந் தருவதாம்.

**1038.** **Manuring is better than ploughing; after weeding, watching is better than watering (it).**

---

கூ. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
இல்லாளி னூடி விடும்.

(பரி-ரை.) எ-து,—அந்நிலத்திற் குரியவன் அதன்க ணுடோறுஞ் சென்று பார்த்து அடுத்தன செய்யாது மடிந்திருக்குமாயின், அஃது அவனில்லாள் போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின்னவனோ டூடிவிடும், எ-று.

செல்லுதல்—ஆகுபெயர். பிறரை யேவியிராது தானே சேறல்வேண்டு மென்பது போதரக் கிழவனென்றார். தன்கட்சென்று வேண்டுவன செய்யாது வேறிடத் திருந்தவழி மனையா ளூடுமாறுபோல வென்றது அவன் போகமிழத்தலோக்கி. இவை மூன்று பாட்டானும் அது செய்யுமாறு கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கிழவன்-(அந்நிலத்துக்கு) உரியவன், செல்லான் - (அதனிடத்து நாள்தோறும்) போய்ப்பார்த்து வேண்டியவை செய்யானாகி, இருப்பின் - (சோம்பி) இருந்தால், நிலம் - அந்நிலம், இல்லாளின் - மனைவிபோல, புலந்து - (தன்னுள்) வெறுத்து, ஊடிவிடும் - (அவனோடு) பிணங்கிவிடும்.

**1039.** **If the owner does not (personally) attend to his cultivation, his land will behave like an angry wife and yield him no pleasure.**

---

க0. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(பரி - ரை.) எ-து,—யாம் வறியேமென்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால், நிலமகளென்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகா நிற்கும், எ-று.

உழுதன் முதலிய செய்வார் யாவர்க்குஞ் செல்வங்கொடுத்து வருகின்ற வாறுபற்றி நல்லாளென்றும், அதுகண்டு வைத்தும் அது செய்யாது வறுமை யுறுகின்ற பேதைமைபற்றி நகுமென்றுங் கூறினார். இரப்பாரை யென்று பாடமோதுவாருமுளர். இதனான் அது செய்யாதவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற வதிகார முறைமைக்குக் காரணமு மிது.

(தெ - ப - ரை)—இலம் என்று - வறியேமென்றுசொல்லி, அசைஇ இருப்பாரை - சோம்பியிருப்பவரை, காணின் - கண்டால், நிலம் என்னும் நல்லாள்-நிலமகளென்று உயர்த்திச் சொல்லப் படுகிற நல்லாள், நகும் - (தன்னுள்ளே) சிரியாநிற்பள்.

**1040**. The maiden, Earth, will laugh at the sight of those who plead poverty and lead an idle life.

---

## ௧0௫-ம். அதி. நல்குரவு.

அஃதாவது நுகரப்படுவன யாவு மில்லாமை.

௧. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

(பரி-ரை.) எ-து,—ஒருவனுக்கு வறுமைபோல வின்னாதது யாதென்று வினவின், வறுமைபோல வின்னாதது வறுமையே, பிறிதில்லை, எ-று.

இன்னாதது-துன்பஞ்செய்வது, ஒப்பதில்லையெனவே, மிக்கதின்மை சொல்லவேண்டா வாயிற்று.

(தெ - ப - ரை.)—இன்மையின் - (ஒருவனுக்கு) வறுமை போல, இன்னாதது - துன்பஞ்செய்வது, யாது எனின்-யாதென் றுவினவின், இன்மையின் - வறுமைபோல, இன்னாதது - துன் பஞ் செய்வது, இன்மையே - வறுமையே.

**1041.** There is nothing that afflicts (one) like poverty.

---

௨. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

(பரி-ரை.) எ-து,—வறுமையென்று சொல்லப்படுவ தொருபாவி ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமை யின்பமு மிம்மையின்பமு மில்லையாக வரும், எ-று.

இன்மையெனவொருபாவியென்பதற்கு மேல் அழுக்காறெனவொருபாவி யென்புழி யுரைத்தாங் குரைக்க. மறுமை இம்மையென்பன ஆகுபெயர். ஈயாமையானுந் துவ்வாமையானும் அவையிலவாயின. இன்றிவிடுமென்று பாடமோதிப் பாவியாலெனா விரித்துரைப்பாரு முளர்.

(தெ - ப - ரை.)—இன்மை என - வறுமையெனப்படுகிற, ஒருபாவி—, (ஒருவனிடத்துவரும்போது), மறுமையும் - மறுமையின்பமும், இம்மையும் - இம்மையின்பமும், இன்றி - (அவனுக்கு) இல்லையாக, வரும் - வரும்.

**1042.** When cruel poverty comes on, it deprives one of both the present and future (bliss).

---

௩. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

(பரி-ரை.) எ-து,—நல்குரவென்று சொல்லப்படு மாசை தன்னாற் பற்றப் பட்டாருடைய பழைய குடிவரவினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும், எ-று.

நசையில்வழி நல்குரவு மில்லையாகலின் நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியிற் றொல்லோர்க்கில்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையு முளவாக்கலான் அவ்விரண்டனையு மொருங்கு கெடுக்குமென்றார்: "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்" என்றார் பிறரும். தோலாவது "இழுமென் மொழியால் விழுமியது நுவறல்" என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு உடம்பென் றுரைப்பாரு முளர்: அஃததற்குப் பெயராயினும் உடம்புகெடுக்கு மென்றற்கோர் பொருட்சிறப்பில்லாமை யறிக.

(தெ-ப-ரை.)—நல்குரவு என்னும்-வறுமையென்று சொல்லப்படுகிற, நசை - ஆசை, தொல் வரவும் - (தன்னாலேபற்றப் பட்டவருடைய) பழையகுடிவரவினையும், தோலும் - (அதற்கேற்ற) சொல்லினையும், கெடுக்கும் - (ஒருசேர) கெடுக்கும்.

**1043.** Hankering poverty destroys at once the greatness of (one's) ancient descent and (the dignity of one's) speech.

---

௪. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(பரி-ரை.) எ-து,—இளிவந்த சொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும் அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும், எ-று.

சிறப்பும்மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. இளிவந்த சொல் - இளிவருதற் கேதுவாகிய சொல். அஃதாவது எமக்கீயவேண்டு மென்றல். சோர்வு - தாமுறுகின்ற துன்பமிகுதி பற்றி ஒரோவழித் தம்பிறப்பினை மறந்து அது சொல்லுவதாக நினைத்தல்.

(தெ-ப-ரை.)—இன்மை - வறுமையானது, இல் பிறந்தார் கண்ணேயும் - உயர்ந்த குடிப்பிறந்தவரிடத்தேயும், இளிவந்த சொல் - அவமானச்சொல், பிறக்கும் - பிறத்தற்கு ஏதுவாகிய, சோர்வு - சோர்வினை, தரும் - உண்டாக்கும்.

**1044.** Even in those of high birth, poverty will produce the fault of uttering mean words.

---

௫. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்.

(பரி - ரை.) எ-து,—நல்குரவென்று சொல்லப்படுந் துன்ப மொன்றனுள்ளே பலதுன்பங்களும் வந்துவிளையும், எ-று.

குறை—இசைநிறை. செலவு—வினைவின்கண் வந்தது. துன்பமுந்தானு முடனே நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத் துன்பமடியாகச் செல்வர் கடைநோக்கிச் சேறற்றுன்பமும், அவரைக் காண்டற்றுன்பமும், கண்டான் மறுத்துழி நிகழுந்துன்பமும், மறுவழியும் அவர் கொடுத்தது வாங்கற் றுன்பமும், அது கொடுவந்து நுகர்வன கூட்டற்றுன்பமு முதலாயின நாடோறும் வேறுவேறாக வருதலின் எல்லாத் துன்பங்களு முளவாமென்றுங் கூறினர். இவை யைந்துபாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டது.

(தெ-ப-ை.)—நல்குரவு என்னும் - வறுமையென்று சொல்லப்படும், இடும்பையுள் - துன்பமொன்றினுள்ளே, பல் - பலவாகிய, துன்பங்கள் - துன்பங்களும், சென்று - வந்து, படும் - விளையும்.

**1045.** The misery of poverty brings in its train many (more) miseries.

---

௫. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

(பரி-ரை.) எ-து,—மெய்ந்நூற் பொருளைத் தெளியவறிந்து சொன்னாராயினும், நல்கூர்ந்தார் சொல்லுஞ்சொற் பொருளின்மையைத் தலைப்படும்,எ-று.

பொருளின்மையைத் தலைப்படுதலாவது யாமிவர் சொல்லியன விரும்பிக் கேட்குமாயிற் கண்ணோடி இவருறுகின்ற குறை முடிக்கவேண்டு மென்றஞ்சி யாவருங் கேளாமையிற் பயனில் சொல்லாய் முடிதல். கல்வியும் பயன்படாதென்பதாம்.

(தெ-ப-ை.)—நல் பொருள் - மெய்ந்நூற்பொருளை, நன்கு உணர்ந்து - தெளியவறிந்து, சொல்லினும் - சொன்னாலும், நல்கூர்ந்தார் - வறுமைப்பட்டவரது, சொல் - சொல்லானது, பொருள் சோர்வு - பொருளில்லாமையை, படும் - கூடும்.

**1046.** The words of the poor are profitless, though they may be sound in thought and clear in expression.

---

எ. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(பரி-ரை.) எ-து,—அறத்தோ டியைபில்லாத நல்குரவுடையான் தன்னை யீன்ற தாயானும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும், எ-று.

அறத்தோடு கூடாமை - காரண காரியங்களு ளொன்று மியையாமை. நல்குரவு—ஆகுபெயர். சிறப்பும்மை அவளதியற்கை யன்புடைமை விளக்கிநின்றது. கொள்வதின்றுதலே யன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையின், அது நோக்கிச் சுற்றத்தார் யாவருந் துறப்ப ரென்பதாம்.

(தெ-ப-ை.)—அறம் சாரா - அறத்தோடு பொருந்துதலில்லாத, நல்குரவு - வறுமையையுடையவன், ஈன்ற தாயானும் -

(தன்னைப்) பெற்றதாயினும், பிறன் போல - ஏதிலன்போல, நோக்கப்படும் - (நினைத்து) பார்க்கப்படுவான்.

**1047.** He that is reduced to absolute poverty will be regarded as a stranger even by his own mother.

---

அ. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

(பரி-ரை.) எ-து,—நெருநற்றுங் கொன்றது போன்று எனக்கின்னாதவற்றைச் செய்த நல்குரவு இன்றும் என்பால் வரக்கடவதோ, வந்தால் இனி யாது செய்வேன், எ-று.

அவ்வின்னாதனவாவன—மேற்சொல்லிய துன்பங்கள். நெருநன்மிகவருந்தித் தன்வயிறு நிறைத்தானொருவன் கூற்று.

(தெ-ப-ரை.)—நெருநலும் - நேற்றும், கொன்றதுபோலும் - கொன்றதுபோன்று (எனக்குத்துன்பங்களைச்செய்த), நிரப்பு - வறுமையானது, இன்றும் - இன்றைக்கும், வருவதுகொல் - (என்னிடத்து) வரக்கடவதோ, [வந்தால் இனி யாது செய்வேன்.]

**1048.** Is the poverty that almost killed me yesterday, to meet me to-day too ?

---

கூ. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

(பரி-ரை.) எ-து,—மந்திர மருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்துறங்கலு மாம்; நிரப்பு வந்துழி யாதொன்றானு முறக்கமில்லை, எ-று.

நெருப்பினும் நிரப்புக் கொடிதென்றவா றாயிற்று. இதுவுமவன் கூற்று. இவை நான்குபாட்டானும் நல்கூர்ந்தார்க் குளதாங் குற்றங் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நெருப்பினுள் - நெருப்பிலே, துஞ்சலும் - (கிடந்து) தூங்கலும், ஆகும் - (மந்திரமருந்துகளால் ஒருவனுக்கு) கூடும்; நிரப்பினுள் - வறுமை வந்தவிடத்து, யாது ஒன்றும் - யாதொன்றாலும், கண்பாடு - தூங்குதல், அரிது - இல்லை.

**1049.** One may sleep in the midst of fire; but by no means in the midst of poverty.

---

கO. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(பரி-ரை.) எ-து,—நுகரப்படும் பொருள்க ளில்லாதார் தம்மாற் செயற்பாலது முற்றத் துறத்தலேயாகவும் அது செய்யா தொழிதல் பிறரில்லி னுளவாய உப்பிற்குங் காடிக்குங் கூற்றாம், எ-று.

மான மழியாமையிற் செயற்பாலது அதுவே யாயிற்று. முற்றத் துறத்தல்—சுற்றந் தானே விட்டமையின் ஒரு வாற்றாற் றுறந்தா ராயினார் நின்ற தம்

முடம்பினையுந் துறத்தல். அது செய்யாது கொண்டிருத்தல் இரண்டனையு மாளப்பண்ணுதலின், அதனை அவற்றிற்குக் கூற்றென்றார். இனி முற்றத் துறத்த லாவது துப்புர வில்லாமையின் ஒருவாற்றாற் றுறந்தாராயினார் பின் னவற்றை மனத்தாற்றுறவாமை யென் றுரைப்பாருமுளர். இதனன் அஃதௌ தாயவழிச்செய்வது கூறப்பட்டது.

(தெ - ப - ை.)—துப்புரவு இல்லார் - அனுபவிக்கப்படும் பொருளில்லாதவர், (தம்மாலே செயத்தகுவது முழுதுந் துறத் தலேயாகவும்), துவரத் துறவாமை - முழுதுந் துறவாதொழிதல், (பிறர்வீட்டிலுள்ள), உப்பிற்கும் காடிக்கும்—, கூற்று - எமனு கும்.

**1050**. The destitute poor, who do not renounce their bodies, only consume their neighbours' salt and water.

---

## ௧0௬-ம். அதி. இரவு.

இனி மானந் தீராவிரவு இரவாமையோ டொத்தலின், அதனானும் வீடெய் தற்பயத்ததாய உடம் போம்பப்படு மென்னும் அறநூல் வழக்குப் பற்றி மே லெய்திய துவரத்துறத்தல் விலக்குதற் பொருட்டு இரவு கூறுகின்றார். அதி கார முறைமையும் இதனானே விளங்கும்.

க. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

(ப°-ை.) எ-து,—நல்கூர்ந்தார் இரத்தற் கேற்புடையாரைக் காணின், அவர் மாட்டிரக்க; இரந்தால் அவர் கரந்தாராயின் அவர்க்குப் பழியாவதல் லது தமக்குப் பழியாகாமையான், எ-று.

இரவென்னு முதனிலைத் தொழிற்பெயர திறுதிக்கண் நான்கனுருபு விகா ரத்தாற் றொக்கது. இரத்தற் கேற்புடைய ராவார் உரையாமைமுன் னுணரு மொண்மை யுடையராய் மாற்றா தீவார். அவர் உலகத்தரியராகலிற் காணி னெ ன்றும், அவர்மாட் டிரந்தார்க்கு இரவான்வரு மிழிவின்மையின் இரக்க வென் றும், அவரீதலிற் குறைகாட்டாமையிற் கரப்பினென்றும், காட்டுவராயின் அப் பழி தூவெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கட் கடிது சேறலின் அவர் பழி யென்றும், ஏற்பிலார்மாட் டிரவன்மையிற் றம்பழியன்றென்றுங் கூறினார்.

(தெ-ப-ை.)—(வறுமைப்பட்டவர்), இரத்தக்கார் - இரத் தற்கு ஏற்புடையவரை [கேட்குமுன்னமே அறிந்து கொடுப்ப வரை என்றபடி], காணின் - கண்டவிடத்து, இரக்க - (அவரி டத்தே) இரக்கக்கடவர்; கரப்பின் - (அப்படிப்பட்டவர்) ஒளித் தாராயின், அவர் பழி - அவர்க்குப் பழியாகுமே(யல்லது), தம் பழி அன்று - தமக்குப்பழியாகாது.

**1051.** If you meet with those that may be begged of, you may beg; (but) if they withhold (their gift) it is their blame and not yours.

---

உ. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

(பரி - ரை.) எ-து,—ஒருவற்கு இரத்தலும் இன்பத்திற் கேதுவாம், இரந்த பொருள்கள் ஈவார தணர்வுடைமையாற் றன்றுன்புறாமல் வருமாயின், எ-று.

இன்பம்—ஆகுபெயர். உறாமலென்பது கடைக்குறைந்து நின்றது. துன்பம்—சாதி யொருமைப்பெயர். அவையாவன ஈவார்கட் காலமுமிடனு மறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத் தம் வயத்தராக்கலும், அவர் மனநெகிழ்வன நாடிச் சொல்லலு முதலியவற்றான் வருவனவும், மறுத்துழி வருவனவுமாம். அவையுறாமல் வருதலாவது அவர் முன்னுணர்ந்தீயக் கோடல். இரந்தவர் துன்பமுறாவரி னென்று பாடமோதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவற்றாற் றுன்புறாது எதிர் வந்தீவராயி னென்றுரைப்பாரு முளர். இவையிரண்டு பாட்டானும் நல்குரவா னுயிர்நீங்கு மெல்லைக்கண் இளிவில்லாவிரவு விலக்கப்படா தென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஒருவற்கு—, இரந்தவை - இரந்தபொருள்கள், (ஈவார்து அறிவுடைமையால்), துன்பம் உறா - (தான்) துன்பமுறாமல், வரின் - வருமாயின், இரத்தல் - இரத்தலும், இன்பம் - இன்பத்திற்கு ஏதுவாம்.

**1052.** Even begging may be pleasant, if what is begged for is obtained without grief (to him that begs).

---

௩. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(பரி - ரை.) எ-து,—கரத்த லில்லாத நெஞ்சினையுடைய மானமறிவார் முன்னர் நின்று அவர்மாட் டொன் றிரத்தலும் நல்கூர்ந்தார்க்கு ஓரழகுடைத்து, எ-று.

சிறிய சுருக்கத்து வேண்டுமுயர் வென்றதனால், அவர்க்கு அதுகடனெனப்பட்டது. அதனை யறிதல்—சொல்லுத லூற்றாரைக்க லாகாமைக் கேதுவாய அதனியல்பினை யறிதல். அவ்வறிவுடையார்க்கு முன்னிற்றன் மாத்திரமே யமைதலின் முன்னின் றென்றும், சொல்லுதலான் வருஞ் சிறுமை யெய்தாமையின் ஓரேருடைத் தென்றுங் கூறினர். உம்மை அதனிழிபு விளக்கி நின்றது.

(தெ-ப-ரை.)—கரப்பு இலா - ஒளித்தலில்லாத, நெஞ்சின் - நெஞ்சினையுடைய, கடன் அறிவார் முன் - மானமறிவார்முன், நின்று—, இரப்பும் - (அவரிடத்தே ஒன்றை) இரத்தலும், ஓர் ஏர் உடைத்து - (வறுமைப் பட்டவர்க்கு) ஓரழகை உடைத்து.

**1053.** There is even a beauty in standing before and begging of those who are liberal in their gifts and understand their duty (to beggars).

---

ச. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

(பரி - ரை.) எ-து,—தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணு மறியா தார் மாட்டுச்சென் றொன்றனை யிரத்தலும் வறியார்க் கீதலே போலும், எ-று.

உம்மை ஈண்டு மவ்வாறு நின்றது. தான் புகழ்பயவா தாயினும் முன்னுள தாய புகழ்கெட வாராமையின், ஈதலேபோலு மென்றார். ஏகாரம்-ஈற்றசை.

(தெ-ப-ரை.)—கரத்தல் - (தமக்கு உள்ளது) மறைத்தலை, கனவிலும்—, தேற்றாதார்மாட்டு - அறியாதவரிடத்து, இரத்தலும் - யாசித்தலும், ஈதலே போலும் - (வறியவர்க்கு) கொடுத்தலேபோலும்.

**1054.** To beg of such as never think of withholding (their charity) even in their dreams, is in fact the same as giving (it oneself).

---

௫. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

(பரி - ரை.) எ-து,—சொல்லுதன் மாட்டாது முன்னிற்றன் மாத்திரத் தான் இரப்பார் உயிரோம்பற் பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின் றது அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார் சிலர் உலகத்துளராய தன்மை யானே, பிறிதொன்று னன்று, எ-று.

அவரில்லையாயின், மான நீக்கமாட்டாமையின் உயிர் நீப்பரொன்பதாம்.

(தெ - ப - ரை.)—கண் நின்று - (சொல்லமாட்டாமல்) முன்னின்றமாத்திரத்தால், கரப்பு இலார் - (அவர்க்கு உள்ளது) ஒளிக்காமற் கொடுப்பவர், வையகத்து - உலகத்து, உண்மையால் - இருக்கின்றபடியினாலே, இரப்பவர்—, மேற்கொள்வது - (இரத்தலை) மேற்கொள்வது, (உயிர்காத்தற் பொருட்டேயாம்.)

**1055.** As there are in the world those that give without refusing, there are (also) those that prefer to beg by simply standing before them.

---

௬. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

(பரி - ரை.) எ-து,—உள்ளது கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால், மானம் விடாதிரப்பார்க்கு நிரப்பான் வருந்துன்பங்க ளெல்லாஞ் சேரக்கெடும், எ-று.

கரத்தல் ஒருவற்கு வேண்டுவ தொன்றன்மையின் அதனை நோயென்றும், அஃதில்லாத இரக்கத்தக்காரைக் கண்ட பொழுதே அவர் கழியுவகைய ராவரா கலின் எல்லா மொருங்கு கெடுமென்றுங் கூறினர். இடும்பை—ஆகுபெயர். முழுதுங் கெடுமென்று பாடமோதி, எஞ்சாமற்கெடுமென் றுரைப்பாருமுளர்.

(தெ - ப - ரை.)—கரப்பு இடும்பை - (உள்ளதை) ஒளித்தலாகிய நோயை, இல்லாரை - உடையரல்லாரை, காணின்—, (மானம் விடாம லிரப்பவர்க்கு), நிரப்பு இடும்பை எல்லாம் -

வறுமையால் வருந் துன்பங்களெல்லாம், ஒருங்கு கெடும் - ஒரு சேரக்கெடும்.

**1056.** All the evil of begging will be removed at the sight of those who are far from the evil of refusing.

---

எ. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

(பரி-வா.) எ-து,—தம்மை யவமதித் திழிவு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால், அவ்விரப்பாரது உள்ளமகிழ்ந்து உள்ளுள்ளே யுவக்குந் தன்மை யுடைத்து, எ-று.

இகழ்ந்தெள்ளாதெனவே, நன்குமதித்தலும் இனியவைகூறலும் பெறுதும். இரப்பிடும்பை கெடுதலளவேயன்றி ஐம்புலன்களானும் பேரின்பமெய்தினராகக் கருதலான், உள்ளுளுவப்பதுடைத்தென்றார். இவையைந்துபாட்டானும் அவ்விரத்தக்கார தியல்பு கூறப்பட்டது.

(தே - ப - வா.)—இகழ்ந்து - (தம்மை) அவமதித்து, எள்ளாது - இழிவு சொல்லாமல், ஈவாரை - (பொருள்) கொடுப்பவரை, காணின் - கண்டால், உள்ளம் - (அவ்விரப்பவரது) மனம், மகிழ்ந்து - மகிழ்வடைந்து, உள் உள் - உள்ளுள்ளே, உவப்பது - மகிழுந்தன்மையை, உடைத்து - உடையதாகும்.

**1057.** Beggars rejoice exceedingly when they behold those who bestow (their alms) with kindness and courtesy.

---

அ. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

(பரி - வா.) எ-து,—வறுமையுற் றிரப்பா ரில்லையாயின், குளிர்ந்தவிடத்தையுடைய பெரியஞாலத்துள்ளார் செலவு வரவுகள் உயிரில்லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றாற் சென்றுவந்தாற் போலும், எ-று.

ஐகாரம்—அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப்பொருட்கு உவமையோடொத்ததொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளாரொன்றது அவரையொழிந்தாரை. அவர்க்கீதலைச்செய்து புகழும் புண்ணியமுமெய்தாமையின், உயிருடையரல்லரென்பதாம்; "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" என்றார் பிறரும். இத்தொடை யின்பநோக்காது இரப்பவரில்லாயி னென்று பாடமோதுவாரு முளர்.

(தெ - ப - வா.)—இரப்பார் - (வறுமையுற்று) இரப்பவர், இல்லாயின் - இல்லையாயின், ஈரம் கண் மா ஞாலம் - குளிர்ந்த இடமுடைய பெரிய பூமியிலுள்ளவரது, (செலவு வரவுகள்), மரப்பாவை - (உயிரில்லாத) மரப்பாவை, சென்று வந்தற்று - (எந்திரக்கயிற்றால்) சென்று வந்தாற் போலும்.

**1058.** If there were no beggars, (the actions done in) the cool wide world would only resemble the movement of a puppet.

---

௯. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை.

(பரி-ரை.) எ-து,—அவர்பாற் சென்று ஒன்றனை யிரந்துகோடலை விரும்புவா ரில்வழிக் கொடுப்பார்மாட் டென்ன புகழுண்டாம் யாதுமில்லை, எ-று.

தோற்றம்—ஆகுபெயர். மேவுவா ரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல் வன்மை வெளிப்படாமையின், அதனாற் புகழெய்தா ரென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் உலகிற் கிரப்பார் வேண்டுமென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—இரந்து கோள்-(அவரிடத்துச்சென்று ஒன்றனை) இரந்துகொள்ளுதலை, மேவார் இலாக்கடை - விரும்புவாரில்லாதவழி, ஈவார்கண் - கொடுப்பவரிடத்து, என் - என்ன, தோற்றம் - புகழ், உண்டாம் - உண்டாகும், [யாதுமில்லை என்றபடி.]

**1059.** What (praise) would there be to givers (of alms), if there were no beggars to ask for and receive (them).

---

௧0. இரப்பான் வெகுளாமை வேண்டு மிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

(பரி-ரை.) எ-து,—ஈவானுக்குப் பொருளுதவாவழி, இவனெனக் கீகின்றில னென்று அவனை யிரப்பான் வெகுளா தொழிதல் வேண்டும்; அது வேண்டிய பொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டா, இரப்பாகிய தன்னிடும்பை தானேயுஞ் சான்றாத லமையும், எ-று.

யாவர்க்கும் வேண்டுதலும் நிலையின்மையு முதலிய பிறசான்று முண்டென்பதுபட நின்றமையின், உம்மை எச்சவும்மை. தனக்கேயன்றி மற்றை யிரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு அவனுறுந் துன்பத்தைத் தனக்கே யாகவைத்துத் தானுறுந்துன்பந் தானறிந்து வெகுளற்கவென்பதாம். இதனால் அவர்க்கின்றியமையாததோ ரியல்பு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—(ஈவானுக்குப் பொருள் உதவாதவிடத்தே), இரப்பான் - இரப்பவன், வெகுளாமை வேண்டும் - (இவன் எனக்குக் கொடுக்கின்றிலனென்று அவனை) கோபியாதொழிதல் வேண்டும்; (அதுவேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசாக்ஷி வேண்டா), இரப்பு இடும்பைதானேயும் - வறுமையாகிய தந்நோய்தானேயும், கரி - சாக்ஷியாதல், சாலும் - அமையும்.

**1060.** He who begs ought not to be angry (at a refusal); for even the misery of (his own) poverty should be a sufficient reason (for so doing).

---

# கoஎ-ம். அதி. இரவச்சம்.

அஃதாவது மானந்தீர வருமிரவிற் கஞ்சுதல். அதிகார முறைமையும் இத னுனே விளங்கும்.

க. கரவா துவந்தீயுங் கண்ணன்னர் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

(பரி-ரை.) எ-து,—தமக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றே மென்று உண்மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தார் மாட்டும் இரவாதே ஒருவன் வறுமை கூர்தல் இரந்து செல்வமெய்தலிற் கோடிமடங்கு நன்று, எ-று.

நல்குரவு மறைக்கப்படாத நட்டார் மாட்டும் ஆகாதென்பதுபட நின்ற மையின், உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது. அவ்விரவான் மானந்தீராதெ ன்னுந் துணையல்லது அதற்கு மிகுதி கூடாமையின், வல்லதோர் முயற்சியா னுயிரோம்பலே நல்லதென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—(ஒருவன்) கரவாது - (தமக்குள்ளதை) ஒளிக்காமல், உவந்து - (இவர் வரப்பெற்றேமென்று) உள்ளமகி ழ்ந்து, ஈயும் - கொடுக்கும், கண் அன்னார்கண்ணும் - கண் போற் சிறந்தவரிடத்தும், இரவாமை - இரவாமல் வறுமைப்ப டுதல், கோடி உறும் - (இரந்து செல்வமடைதலில்) கோடிமட ங்கு நன்றாம்.

**1061**. **Not to beg (at all) even from those exclient persons who cheerfully give without refusing, will do immense good.**

---

உ. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(பரி-ரை.) எ-து,—இவ்வுலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ்வார் க்கு முயன் றுயிர் வாழ்தலை யன்றி இரந்து முயிர் வாழ்தலைவேண்டி விதித்தா னாயின், அக்கொடியோன்றானும் அவரைப் போன்று எங்கு மலமந்து கெடுவா னாக, எ-று.

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாய வுண்டியும் அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினை வயத்தாற் கருவொடு கலந்தவன் றே அவன் கற்பிக்குமன்றே, அவற்றுட் சில வுயிர்க்கு இரத்தலையும் ஒரு செய் தொழிலாகக் கற்பித்தானாயின் அத்தீவினையாற் றானும் அத்துன்ப முறல்வே ண்டு மென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் அவ்விரவின் கொடுமை கூறப் பட்டது.

(தெ-ப-ரை.)—உலகு இயற்றியான் - இவ்வுலகத்தைப் படைத்தவன், (இதனிடத்து வாழ்வார்க்கு முயன்று சீவனஞ் செய்தலை யல்லாமல்), இரந்தும்—, உயிர் வாழ்தல் வேண்டின் -

சீவனஞ்செய்தலை வேண்டி விதித்தானாயின், (அக்கொடியோன்), பரந்து - (தானும் அவர்போல்) எங்குஞ்சுழன்று, கெடுக - கெடக்கடவன்.

**1062.** If the Creator of the world has decreed even begging as a means of livelihood, may he too go abegging and perish.

---

௩. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட் டதில்.

(பரி-ரை.) எ-து,—வறுமையான் வருந்துன்பத்தை முயன்று நீக்கக்கடவேமென்று கருதாது இரந்துநீக்கக்கடவேமென்று கருதும் வன்மைபோல வலிமைப்பாடுடையது பிறிதில்லை, எ-று.

நெறியாய முயற்சி நிற்க நெறியல்லாத இரவாற் றீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு—முரட்டுத்தன்மை, அஃதாவது ஓராது செய்து நிற்றல். இதனான் வறுமை தீர்தற்குநெறி இரவன்றென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—இன்மை - வறுமையால்வரும், இடும்பை - துன்பத்தை, (முயற்சிசெய்து நீக்கக் கடவோமென்று நினையாமல்), இரந்து தீர்வாம் என்னும் - இரந்து நீக்கக்கடவோமென்று நினைக்கும், வன்மையின் - வல்லமைபோல, வன்பாட்டது - வலிமைப்பாடுடையது, இல் - இல்லை.

**1063.** There is no greater folly than the boldness with which one seeks to remedy the evils of poverty by begging (rather than by working).

---

௪. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

(பரி-ரை.) எ-து,—நுகரவேண்டுவனவின்றி நல்கூர்ந்தவழியும் பிறர்பாற் சென்றிரத்தலை யுடம்படாத அமைதி எல்லாவுலகும் ஒருங்கியைந்தாலுங் கொள்ளாத பெருமையுடைத்து, எ-று.

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவொல்லாமை அதன்மேலேற்றப்பட்டது. இதனான் அந்நெறியல்லதனைச் சால்புடையார் செய்யாரென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—இடம் இல்லாக்காலும் - அநுபவிக்கவேண்டுவதில்லாமல் வறுமைப்பட்டவிடத்தும், இரவு - (பிறரிடத்துச் சென்று) இரத்தலுக்கு, ஒல்லா - உடம்படாத, சால்பு - நிறைவு, இடம் எல்லாம் - உலகமெல்லாம், (ஒருசேர இயைந்தாலும்), கொள்ளாத்தகைத்து - கொள்ளாத பெருமையுடைத்து.

**1064.** Even the whole world cannot sufficiently praise the dignity that would not beg even in the midst of destitution.

---

௫. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

(பரி-ரை.) எ-து,—நெறியாய முயற்சிகொடுவந்து தந்தது தெளிந்த நீர் போலும் அடுபுற்கையேயாயினும் அதனையுண்டற்குமே லினியதில்லை, எ-று.

தாடந்த கூழ் செறிவின்றித் தெண்ணீர் போன்றதாயினும் இழிவாய இரவான் வந்ததன்றித் தம்முடைமை யாகலின், அமிழ்தத்தோடொக்கு மென்பதாம். இதனால் நெறியினெய்தது சிறிதேனும் அது செய்யுமின்பம் பெரிதென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—தாள் - (வழியாகிய) முயற்சி, தந்தது - (கொண்டுவந்து) தந்தது, தெள் நீர் - தெளிந்த நீர்போலும், அடு புற்கை ஆயினும் - சமைத்த கூழேயாயினும், உண்ணலின் ஊங்கு - (அதனை) உண்ணுதற்குமேல், இனியது - இன்பந்தருவது, இல் - இல்லை.

**1065. Even thin gruel is ambrosia to him who has obtained it by labour.**

---

௬. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(பரி-ரை) எ-து,—தண்ணீர்பெறாது இறக்குநிலைமைத் தாயதோ ராவினைக் கண்டு அறனோக்கி இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென் றிரந்துசொல்லுங்காலும் அவ்விரவுபோல ஒருவனாவிற் கிளிவந்தது பிறிதில்லை, எ-று.

ஆ காத்தோம்பல் பேரறமாகலின் ஆவிற்கென்றும், பொருள்கொடுத்துக் கொள்ளவேண்டாத எண்மைத்தாகலின் நீரென்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவேயாகலின் நாவிற்கென்றும், அதுதான் எல்லாவிளிவினும் மேற்படுதலின் இளிவந்ததில்லென்றுங் கூறினர். இதனான் அறனும் முயன்று செய்வதல்லது இரந்துசெய்யற்கவென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஆவிற்கு - (தண்ணீர்பெறாதிறக்கு நிலைமையதாகிய) பசுவுக்கு, நீர் என்று - (தருமநோக்கி) இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென்று, இரப்பினும் - இரந்து சொல்லும் போதும், இரவின் - அவ்விரவுபோல, நாவிற்கு - (ஒருவன்) நாவிற்கு, இளிவந்தது - அவமானம்வந்தது, இல் - இல்லை.

**1066. There is nothing more disgraceful to one's tongue than to use it in begging water even for a cow.**

---

எ. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(பரி-ரை.) எ-து,—இரப்பாரையெல்லாம் யானிரவாநின்றேன், யாது சொல்லியெனின், நுமக்கிரக்கவேண்டுமாயிற் நமக்குள்ளது கரப்பாரையிரவாதொழிமினென்றுசொல்லி, எ-று.

இரண்டாவது விகாரத்தாற்றெக்கது. இவ்விளிவந்தசெயலான் வேட்டிய வழியும்] உடம்பு நில்லாதாகலின் இதுவேண்டாவென்பது தோன்ற, இரப்பனென்றார். இதனான் மானந்தீரவருமிரவு விலக்கப்பட்டது.

(தெ-ப-ஸா.)—இரப்பாரை எல்லாம்—, இரப்பின் - (உமக்கு) இரக்கவேண்டுமாகில், கரப்பார் - (தமக்கு உள்ளதை) ஒளிப்பவரை, இரவன்மின்என்று - இரவாதிருங்களென்றுசொல்லி, இரப்பன் - (நான்) இரவாநின்றேன்.

**1067.** I beseech all beggars and say, "If you need to beg, never beg of those who give unwillingly."

---

அ. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(பரி-ஸா.) எ-து,—இவ்வறுமையென்னுங்கடலை இதனாற் கடத்துமென்றுகருதி ஒருவனேறிய இரவென்னுஞ் சேமமற்ற தோணி அதன்கணோடுங்காற் கரத்தலென்னும் வன்னிலத்தோடு தாக்குமாயிற் பிளந்துபோம், எ-று.

முயற்சியாற் கடப்பதனை இரவாற் கடக்கலுற்றான் அதன் கரைகாணாமையின், ஏமாப்பிறோணியென்றார். ஏமாப்பின்மை தோணிமேலேற்றப்பட்டது. அதுகடத்தற்கேற்ற தன்மையானும், நிலமறியாது செலுத்தியவழி உடைதலானும், அதன்கணேறற்க வென்பதாம். இஃதவயவவுருவகம்.

(தெ-ப-ஸா.)—(இவ்வறுமையென்னுங் கடலை இதனாற் கடப்போமென்று நினைத்து ஒருவனேறிய), இரவு என்னும்-இரத்தல் என்னும், ஏமாப்பு இல் - காவலற்ற, தோணி - மரக்கலம், (அதனிடத்தே ஓடுங்கால்), கரவு என்னும் - ஒளித்தலென்னும், பார் - வன்னிலத்தோடு, தாக்க - தாக்குமாயின், பக்குவிடும் - பிளந்துபோம்.

**1068.** The unsafe raft of begging will split when it strikes on the rock of refusal.

---

கூ. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(பரி-ஸா.) எ-து,—உடையார்முன் இல்லார் சென்றிரந்து நிற்றலின் கொடுமையை நினைந்தால் எம்முள்ளங் கரைந் துருகாநிற்கும்; இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர் இல்லையென்றலின் கொடுமையை நினைந்தால் அவ்வுருகுமளவுதானுமின்றிப் பொன்றிவிடும், எ-று.

"இரவினை, யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ — கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு" என்றார் பிறரும். இரவினுங்கரவு கொடிதென்பதாம். இதற்குப் பிறரெல்லாம் இரக்கின்றவருள்ள முருகுமென் றுரைத்தார்.

(தெ-ப-ஸா.)—இரவு - (உடையார்முன் இல்லார்சென்று) இரந்து நிற்றலின் கொடுமையை, உள்ள - நினைத்தால், உள்ளம்-

(எம்) முள்ளம், உருகும் - கரைந்துருகாநிற்கும்; கரவு - (இனி அந்நிலையைக் கண்டிருந்தவர்) இல்லையென்றலின் கொடுமையை, உள்ள - நினைத்தால், உள்ளதும் - அவ்வுருகுமளவு தானும், இன்றி - இல்லாமல், கெடும் - அழிந்துபோம்.

**1069.** To think of (the evil of) begging is enough to melt one's heart; but to think of refusal is enough to break it.

---

௧0. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

(பரி-ரை.) எ-து,—கரப்பார் இல்லையென்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிர்போகாநின்றது; இனிச் சொல்லாடுகின்ற அவர் தமக்கு உயிர் பின்னுநிற்றலான் அப்பொழுது எப்புரையுட் புக்கொளித்துநிற்கும்,எ-று.

உயிர்போகலாவது இனி யாமென்செய்துமென்றேங்கிச் செயலற்று நிற்றல்; "அந்நிலையே—மாயானோ மாற்றி விடின்" என்றார் பிறரும். கேட்டாரைக் கொல்லவற்றாயசொற் சொல்வாரைக்கோறல் சொல்லவேண்டா வாயினும் அதுகாண்கின்றிலம் இஃதென்னோ வென்பதாம். வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர்போம், ஆனபின் மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொல்லாடியக்காற் போகாதெங்கேயொளித்துநிற்கும் இரண்டானும் போமேயன்றேவென இரவஞ்சினானொருவன் கூற்றாக்கி யுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—சொல்லாட - (ஒளிப்பவர் இல்லையென்று) சொல்லிய மாத்திரத்தே, இரப்பவர் - இரப்பவர்க்கு, உயிர்—, போம் - போகா நின்றது; கரப்பவர்க்கு - (இனிச் சொல்லுகின்ற) அவ்வொளிப்பவர்க்கு, (உயிர்பின் இருத்தலால்), யாங்கு - எப்புரையுள், ஒளிக்குங்கொல் - (அப்பொழுது) புகுந்தொளித்து நிற்குமோ.

**1070.** Saying "No" to a beggar takes away his life; (but as that very word will kill the refuser) where then would the latter's life hide itself.

---

## ௧0அ-ம். அதி. கயமை.

அஃதாவது மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளுஞ் சிறப்பு வகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கு மெய்த வைத்தமையின் ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும் ஈண்டொழிபியலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவுமிலராய கீழோரது தன்மை. அதனால் இஃதெல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

௧. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

(பரி - ரை.) எ-து,—வடிவான் முழுதும் மக்களையொப்பர் கயவர்; அவர் மக்களையொத்தாற்போன்றவொப்பு வேறிரண்டு சாதிக்கண் யாங்கண்டதில்லை, எ-று.

முழுதுமொத்தல் தேற்றேகாரத்தாற் பெற்றாம். அவரொன்றது அவர்மாட்டுளதாய வொப்புமையை. மக்கட்சாதிக்குங் கயச்சாதிக்கும் வடிவொத்தலிற் குணங்களது உண்மையின்மைகளா னல்லது வேற்றுமை யறியப்படாதென்பதாம். இதனாற் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கயவர் - கீழோர், மக்களேபோல்வர் - (வடிவால் முழுதும்) மக்களேபோலிருப்பர்; அவர் அன்ன ஒப்பாரி- அவர் அம்மக்களை யொத்தல்போன்ற வொப்பு, யாம் - நாங்கள், கண்டதில் - (வேறிரண்டுசாதிகளிடத்து) கண்டதில்லை.

**1071.** **The base resemble men perfectly (as regards form); and we have not seen such (exact) resemblance (among any other species).**

---

உ. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(பரி-ரை.) எ-து,—தமக் குறுதியாவன வறிவாரின் அவையறியாத கீழ் மக்கள் நன்மையுடையர், அவர்போல அவைகாரணமாகத் தந்நெஞ்சத்தின்கட் கவலை யிலராகலான், எ-று.

நன்றென்பது சாதியொருமை. உறுதிகளாவன இம்மை மறுமை வீடுகட்குரியவாய புகழறஞானங்கள். இவற்றையறிவார் இவை செய்யாநின்றே மிகச் செயப் பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற வினை தமக்கு இடையூறு வருங்கொலென்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவமறியாமை யென்பனவற்றுள் யாதுவிளையுமோ வென்றும், இவ்வாற்றாற் கவலையெய்துவர், கயவர் அப்புகழ் முதலிய வொழித்துப் பழிமுதலிய செய்யாநின்றும் யாதுங்கவலையுடையரல்லராகலாற் றிருவுடையரெனக் குறிப்பா லிகழ்ந்தவாறு. இதனாற் பழிமுதலியவற்றிற் கஞ்சாரென்பது கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—நன்று - (தமக்கு) உறுதியாயினவைகளை, அறிவாரின் - அறிபவர்களினும், கயவர் - (அவையறியாத) கீழ் மக்கள், திருவுடையர் - நன்மையுடையராவர்; (அவர்போல்), நெஞ்சத்து - (தமது) நெஞ்சினிடத்து, அவலம் இலர் - (அவை காரணமாக) கவலையிலர் (ஆகலால்.)

**1072.** **The low enjoy more felicity than those who know what is good, for the former are not troubled with anxiety (as to the good).**

---

௩. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(பரி - ரை.) எ-து,—தேவருங் கயவரும் ஒரு தன்மையர், அஃதியாதனானெனின், தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவருந்தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான், எ-று.

உயர்ச்சியும் இழிவுமாகிய அதன்காரணவேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையின், இது புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—தேவர் அனையர் கயவர் - தேவரும் கயவரும் ஒருதன்மையர், (அது எதனாலெனில்), அவரும் - அக்கயவரும், (தேவர்போலத் தம்மை நியமிப்பா ரில்லாமல்), தாம் மேவன - தாம் விரும்புமவைகளை, செய்து ஒழுகலான் - செய்து நடத்தலால்.

**1073.** The base resemble the gods; for the base act as they like.

---

ச. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(பரி - ரை.) எ-து,—கீழாயினான் தன்னிற் சுருங்கிய பட்டியா யொழுகுவாரைக் கண்டானாயின், அவ்வொழுக்கத்தின்கண் அவரிற் றான் மேம்பட்டு அதனாற் றன்மிகுதிகாட்டி யிறுமாக்கும், எ-று.

அகப்பட்டி—அகமாகியபட்டி. பட்டிபோன்று வேண்டியவாறே யொழுகலின், பட்டியென்றார்; "கோதக்கசெய்யுஞ் சிறுபட்டி" என்றார் பிறரும். இதனால் அவர் மேம்படுமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கீழ் - கீழாயினோன், அகப்பட்டி ஆவாரை - (தன்னில்) குறைந்தபட்டியாய் நடப்பவரை, காணின் - கண்டால், (அவன் அந்நடக்கையிலே), அவரின் - அவரைக் காட்டிலும், மிகப்பட்டு - (தான்) மேம்பட்டு, செம்மாக்கும் - (அதனால் தன்மிகுதிகாட்டி) இறுமாப்பான்.

**1074.** The base feels proud when he sees persons whose acts are meaner than his own.

---

ரு. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(பரி-ரை.) எ-து,—கயவரதாய வாசாரங் கண்டதுண்டாயின் அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வருமென்றஞ்சு மச்சமே; அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும்பொருள் அதனாலுண்டாமாயிற் சிறிதுண்டாம், எ-று.

ஆசாரத்தின்காரணத்தை ஆசாரமென்றும், அவாவப்படுவதனை அவாவென்றுங் கூறினார். எச்சத்தின்கண் ணென்னுமேழாவது இறுதிக்கட் டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானு மன்றி இயல்பாக வுண்டாகாதென்பதாம். வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ் செய்தல் இயல்பன்றென்பது இதனாற் கூறப்பட்டது.

(தெ-ப-ரை.)—கீழ்களது ஆசாரம் - கீழோரது ஆசாரம், (கண்டது உண்டாயின் அதற்குக்காரணம்), அச்சமே - (அரச

னாலே துன்பம் வருமென்று அஞ்சும்) அச்சமே; எச்சம் - (அது) ஒழிந்தால், அவா - அவாவப்படும்பொருள், உண்டேல் - (அதனால்) உண்டாமாகில், சிறிது—, உண்டாம் - உண்டாகும்.

**1075.** (The principle of) behaviour in the mean is chiefly fear; if not, hope of gain, to some extent.

---

௬. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(பரி - மா.) எ-து,—தாங்கேட்டமறைகளை இடந்தோறுந் தாங்கிக்கொண்டுசென்று பிறர்க்குச்சொல்லுதலான், கயவர் அறையப்படும் பறையினை யொப்பர், எ-று.

மறை - வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர்-அம்மறைத்தற்குரியார். உய்த்தென்றார், அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை ஒருவன்கையாற் றன்னை யறிவித்த தொன்றனை இடந்தோறுங் கொண்டுசென்று, யாவரையு மறிவிக்குமாகலான், இது தொழிலுவமம். இதனால் அவரது செறிவின்மை கூறப்பட்டது.

(தெ - ப - மா.)—தாம் கேட்ட மறை - தாங்கள் கேட்ட இரகசியங்களை, உய்த்து - (இடந்தோறும்) தாங்கிக்கொண்டு போய், பிறர்க்கு—, உரைக்கலான் - சொல்லுதலால், கயவர் - கீழ்மக்கள், அறை பறை அன்னர் - அறையப்படும் பறைபோல்வர்.

**1076.** The base are like a drum that is beaten, for they unburden to others the secrets they have heard.

---

௭. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

(பரி-மா.) எ-து,—கயவர் தங்கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினை யுடைய ரல்லாதார்க்குத் தாமுண்டு பூசியகையைத் தெறித்தல்வேண்டுமென் றிரந்தாலுந் தெறியார், எ-று.

வளைந்தகை—முறுக்கியகை. மெலிவார்க்கு யாதுங்கொடார், நலிவார்க்கு எல்லாங்கொடுப்ப ரென்பதாம்.

(தெ-ப-மா.)—கயவர் - கீழ்மக்கள், கொடிறு உடைக்கும் - (தம்) கதுப்பினை நெரிப்பதாக, கூன் - வளைந்த, கையர் அல்லாதவர்க்கு - கையினை யுடைய ரல்லாதவர்க்கு, ஈர்ங்கை - (தாம்) உண்டு பூசியகையை, (தெறிக்கவேண்டுமென்று இரந்தாலும்), விதிரார் - தெறியார்.

**1077.** The mean will not (even) shake off (what sticks to) their hands (soon after a meal) to any but those who would break their jaws with their clenched fists.

---

அ. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(பரி - ரை.) எ-து,—மெலியார் சென்று தங்குறையைச்சொல்லிய துணை யானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினர்; மற்றைக்கீழாயினர் கரும்புபோல வலியார் நையநெருக்கியவழிப் பயன்படுவர், எ-று.

பயன்படுதல்—உள்ளதுகொடுத்தல். கீழாயினரதிழிவுதோன்ற, மேலாயி னரையும் உடன் கூறினர். இவை யிரண்டுபாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—சான்றோர் - மேலாயினோர், சொல்ல - (மெலியவர் போய்த் தங்குறையை) சொல்லியவளவிலே, பய ன்படுவர் - (இரங்கி) பிரயோசனப்படுவர்; கீழ் - (மற்றை) கீழா யினோர், கரும்புபோல்—, கொல்ல - (வலியவர்) நையநெருக்கிய விடத்தே, பயன் படும் - பிரயோசனப்படுவர்.

**1078.** The great bestqw (their alms) as soon as they are informed; (but) the mean, like the sugar-cane, only when they are tortured to death.

---

௯. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

(பரி-ரை.) எ-து,—பிறர் செல்வத்தாற் பட்டுந் துகிலு முடுத்தலையும் பா லோ டடிசி லுண்டலையுங் கீழாயினன் காணுமாயின், அவற்றைப் பொறாது அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்க வல்லனும், எ-று.

உடுப்பது, உண்பதென்பன ஈண்டவ்வத் தொழின்மே னின்றன; அவற் றாற் பூண்டல் ஊர்தன்முதலிய பிறதொழில்களுங் கொள்ளப்படும். அவற் றைக் கண்டதுணையானே பொறாமையெய்தலிற் காணினென்றும், கேட் டார் இது கூடுமென் றியையப்படைத்தல் அரிதாகலின் வற்றாகுமென்றுங் கூறினர். இதனாற் பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கீழ் - கீழாயினோன், உடுப்பதும் - (பட் டுந்துகிலும்) உடுத்தலையும், உண்பதும் - (பாலுஞ்சோறும்) உண்ணுதலையும், காணின் - கண்டால், (அவைபொறாமல்), பிறர் மேல்—, (குற்றமில்லையாகவும்), வடுக்காண - குற்றமுண்டாக்க, வற்று ஆகும் - வல்லவனவன்.

**1079.** The base will bring an evil (accusation) against others, as soon as he sees them (enjoying) good food and clothing.

---

௧0. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(பரி - ரை.) எ-து,—கயவர் தம்மை யாதானுமொரு துன்ப முற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற் குரியர்; அது வன்றி வேறெத்தொழிற் குரியர், எ-று.

உணவின்மையாகப் பிறிதாக ஒன்றுவந் துற்ற துணையானென்பது தோன்ற ஒன்றுற்றக்காலென்றும், கொள்ளுகின்றார் தங் கயமையறிந்து வேண்டாவென்றற்குமுன்னே விற்றுநிற்றலின் விரைந்தென்றுங் கூறினார். ஒருதொழிற்குமுரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனாற் றாம் பிறர்க்கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது.

(தெ - ப - ரை.)—கயவர் - கீழோர், ஒன்று - ஒருதுன்பம், உற்றக்கால் - (தம்மை) அடைந்தவிடத்து, (அதுவே சார்பாக), விரைந்து—, விற்றற்கு உரியர் - (தம்மைப்பிறர்க்கு) விலைசெய்தற்கு உரியவராவர்; (அதுவல்லாமல்), எற்றிற்கு உரியர்-(வேறே) எத்தொழிலுக்கு உரியராவர்.

**1080. The base will hasten to sell themselves as soon as a calamity has befallen them. For what else are they fitted?**

ஒழிபியல் முற்றிற்று.

---

பொருட்பால் முற்றிற்று.

---

# காமத்துப்பால்.

## களவியல்.

இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய வின்பங் கூறுவா னெடுத்துக்கொண்டார். ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொருபொருளான் ஐம்புலனு நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச் சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனுஞ் சுவைபலவென்று கூறுவார் கூறுக யாங்கூறுவ தின்பச்சுவை யொன்றனையுமேயென இதனையே மிகுத்துக் கூறினன். இது புணர்ச்சி பிரிவென விருவகைப்படும். ஏனையிருத்தல், இரங்கல், ஊடலென்பனவோவெனின், இவர் பொருட்பாகு பாட்டினை அறம் பொரு ளின்பமென வடநூல் வழக்குப்பற்றி யோதுதலான், அவ்வாறே யவற்றைப் பிரிவின்க ணடக்கினுரென்க. இனி அவைதம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவைமிகுதிபயப்ப உலக நடையோடு ஒப்பு மொவ்வாமையுமுடைய வாக்கிக் கூறுகின்றுர். அக்கைகோளிரண்டினுள்ளுங் களவாவது பிணிமூப்பிறப்புக்களின்றி என்ஞான்று மொருதன்மையராய் உருவுந்திருவும் பருவமுங்குலனுங் குணனு மன்பு முதலியவற்றுற் றம்மு ளொப்புமையுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர்கொடுப்பவு மடுப்பவுமன்றிப் பால்வகையாற் றுமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை யேழதிகாரத்தாற் கூறுவான் றெடங்கி, முதற்கட் டகையணங்குறுத்தல் கூறுகின்றுர்.

---

### கOக - ம், அதி. தகையணங்குறுத்தல்.

அஃதாவது, பொழில்விளையாட்டு விருப்பான் ஆய நீங்க அதன்கட் டமியளாய் நின்றுளை வேட்டவிருப்பான் இளையார் நீங்கத் தமியனுய்வந்து கண்ணுற்ற தலைமகன் அவள் வனப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லுதல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கட் கூறப்பட்டது.

க. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

[தலைமகளுருவுமுதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமக னையுற்றது.]

(பரி-ரை.) எ-து,—இக்கனவிய குழையையுடையாள் இப்பொழிற்கணுறைவா ளோர் தெய்வமகளோ? அன்றி யொருமயில்விசேடமோ? அன்றியொரு மானுடமாதரோ? இவளை யின்னளென்று துணியமாட்டாது என்னெஞ்சு மயங்காநின்றது, எ-று.

ஓ—அசை. ஆய்மயில்—படைத்தோன் விசேடமாக வாய்ந்து படைத்த மயில்; மயிற்சாதியுட்டெரிந்தெடுத்த மயிலென்றுமாம். கனங்குழை—ஆகுபெயர். கணங்குழையென்று பாடமோதிப் பலவாய்த் திரண்ட குழையென்றுரைப்பாருமுளர். எழுதலாகா வுருவுந் தன் வருத்தமும் பற்றி அணங்குகொலென்றும், சாயலும் பொழில்வயி னிற்றலும் பற்றி ஆய்மயில்கொலென்றும், தன்னெஞ்சஞ் சென்றமையும் அவளெதிர்நோக்கிய வாறும் பற்றி மாதர்கொலென்றுங் கூறினான்.

(தெ - ப - ரை.) — கனம் குழை - இக்கனமாகிய குழையையுடையவள், அணங்கு கொல் - (இச்சோலையி லிருப்பவளாகிய) ஒரு தெய்வப்பெண்ணோ? (அல்லாமல்), ஆய் மயில் கொல் - (கடவுளால் ஆராய்ந்துபடைக்கப்பட்ட) ஒருமயில் விசேஷமோ? (அல்லாமல்), மாதர் கொல்-ஒருமானுடமாதரோ? என்னெஞ்சு - என்மனம், மாலும் - (இவளை இன்னளென்று துணிய மாட்டாமல்) மயங்காநின்றது.

**1081.** Is this jewelled female a celestial, a choice peahen, or a human being? My mind is perplexed.

---

௨. நோக்கினா ணோக்கெதிர் நோக்குத லாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

[மானுடமாதராதல் தெளிந்த தலைமகன் அவணோக்கினானாய வருத்தங் கூறியது.]

(பரி-ரை.) எ-து,—இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற் கெதிர்நோக்குதல் தானே தாக்கிவருத்துவதோரணங்கு தாக்குதற்குத் தானையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையையுடைத்து, எ-று.

மேலும் அணங்குகொ லாய்மயில்கொ லென்றமையான், இகரச்சுட்டு வருவிக்கப்பட்டது. எதிர்நோக்குத லென்றமையின், அது குறிப்பு நோக்காயிற்று. வனப்பால் வருந்துதன்மேலுங் குறிப்புநோக்கால் வருந்துதல் கூறியவாறு. நோக்கினா ளென்பதற்கு என்னா னோக்கப்பட்டாளென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—நோக்கினாள் - (இப்படிப்பட்ட) அழகினையுடையவள், நோக்குஎதிர் - (என்) பார்வைக்கெதிரே, நோக்குதல்—, தாக்குஅணங்கு - (தானே) தாக்கிவருத்துகிற ஒரு தெய்வப்பெண், தானைக் கொண்டன்னது - (தாக்குதற்குச்) சேனையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையை, உடைத்து-உடையது.

**1082.** This female beauty returning my looks is like a celestial maiden coming with an army to contend against me.

---

௩. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—கூற்றென்று நூலோர் சொல்வதனைப் பண்டுகேட்டறிவதல்லது கண்டறியேன்; இப்பொழுது கண்டறிந்தேன்; அது பெண்டகையுடனே பெரியவாய் அமர்த்த கண்களை யுடைத்து, எ-று.

பெண்டகை—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங்குணங்கள். அவை அவ்வக்குறிகளா னறியப்பட்டன. அமர்த்தல் - அமர்செய்தல், பெயரடியாய வினை. பெண்டகையால் இன்பம் பயத்தலு முண்டேனும் துன்பம் பயத்தன் மிகுதிபற்றிக் கூற்றாக்கிக் கூறினான்.

(தெ - ப - வுரை.)—கூற்று என்பதனை - கூற்றுவனென்று (நூலோர்)சொல்லுவதை, பண்டு அறியேன் - முன் (கேட்டறிந்ததல்லது) கண்டறிந்திலேன் ; இனி அறிந்தேன் - இப்பொழுது கண்டறிந்தேன்; (அது), பெண் தகையால் - (நாணம் மடம் அச்சம் பயிர்ப்புஎன்கிற) பெண்குணங்களுடனே, பேர்அமர் - பெரியவாய்ப்போர்செய்கின்ற, கட்டு - கண்களையுடைத்து.

**1083.** I never knew before what is called Yama; I see it now; it is the eyes that carry on a great fight with (the help of) female qualities.

---

௪. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—பெண்டகையையுடைய விட்டேதைக்கு உளவாய கண்கள் தம்மைக்கண்டா ருயிருண்ணுந் தோற்றத்துடனேகூடி அமர்த்திருந்தன, எ-று.

அமர்த்தல் — மாறுபடுதல். குணங்கட்கும் பேதைமைக்கு மேலாது கொடியவாயிருந்தனவென்பதாம்.

(தெ-ப-ரை.)—பெண்தகை - பெண்குணங்களுடைய, பேதைக்கு - இப்பேதைக்கு, கண் - கண்கள், கண்டார் - (தம்மை) கண்டவரது, உயிர் உண்ணுந் தோற்றத்தால் - உயிரையுண்ணுந் தோற்றத்துடனேகூடி, அமர்த்தன - மாறுபட்டிருந்தன.

**1084.** These eyes that seem to kill those who look at them are as it were in hostilities with this feminine simplicity.

---

௫. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
லுேக்கமிம் மூன்று முடைத்து.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ ? என் மேலோடுத லுடைமையாற் கண்ணோ ? இயல்பாக வெருவுத லுடைமையாற் பிணையோ? அறிகின்றிலேன். இம்மடவரல் கண்களி னோக்கம் இம் மூன்றன் றன்மையையு முடைத்தா யிராநின்றது, எ-று.

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்ற தென்பதாம். தொழில்பற்றி வந்த ஐயநிலையுவமம்.

(தெ - ப - ரை.)—கூற்றமோ - (என்னை வருத்துதலாலே) கூற்றமோ ? கண்ணோ - (என்மேலோடுதலாலே) கண்ணோ? பிணையோ - (இயல்பாக அஞ்சுதலாலே) பெண்மானோ ? (அறிகின்றிலேன்); மடவரல்நோக்கம் - இம்மாது (கண்களின்) பார்வையானது, இம்மூன்றும் - இம்மூன்றனுடைய தன்மைகளையும், உடைத்து - உடைத்தாயிருக்கின்றது.

**1085.** Is it Yama, (a pair of) eyes or a hind ?—Are not all these three in the looks of this maid?

---

௬. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—பிரியாநட்பாய கொடும்புருவங்கடாஞ் செப்பமுடையவாய் விலக்கினவாயின் அவற்றைக் கடந்து இவள் கண்கள் எனக்குநடுக்குந் துயரைச் செய்யமாட்டா, எ-று.

நட்டாரைக் கழறுவார்க்குத் தாஞ் செம்மையுடையராதல் வேண்டலிற் கோடாவென்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடைநின்று விலக்குங்காலுஞ் சிறிதிடைபெறின் அதுவழியாக வந்து அஞர் செய்யுமாகலின் மறைப்பினென்றுங் கூறினார். நடுங்கஞர் - நடுங்கற்கேதுவாயவஞர். தாமியல்பாகக் கோடுதலுடைமையான் அவற்றை மிகுதிக்கண் மேற்சென்றிடிக்கமாட்டாவாயின வென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

(தெ - ப - வுரை.)—கொடும் புருவம் - (பிரியா நட்பாகிய) கொடியபுருவங்கள், கோடா மறைப்பின் - (தாம்) செவ்வையாயிருந்துவிலக்கினால், (அவைகளைக்கடந்து), இவள்கண்-இவளது கண்கள், நடுங்கு அஞர் - நடுங்குதற்கு ஏதுவாகியதுயரை, செய்யல - (எனக்கு) செய்யமாட்டா.

**1086.** Her eyes will cause (me) no trembling sorrow, if they are properly hidden by her cruel arched eye-brows.

---

எ. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் துகில்.

[அவள் முலைகளினுய வருத்தங் கூறியது.]

(பரி-ரை.) எ-து,—இம்மாதர் படாமுலைகளின் மேலிட்ட துகில், அவை கொல்லாமற் காத்தலின், கொல்வதாய மதக்களிற்றின்மேலிட்ட முகபடாத்தினை யொக்கும், எ-று.

கண்ணை மறைத்தல் பற்றிக் கட்படா மென்றான். துகிலான் மறைத்தல் நாணுடை மகளிர்க் கியல்பாகலின், அத்துகிலோடு அவற்றின் வெம்மையும் பெருமையுங் கண்டு இத்துணையாற்றலுடையன இனி யெஞ்ஞான்றுஞ் சாய்வில வெனக் கருதிப் படாமுலையென்றான். உவமை சிறிதுமறையாவழி உவை கொல்லுமென்பதுதோன்ற நின்றது.

(தெ-ப-ரை.)—மாதர் - இம்மாதருடைய, படா முலைமேல் துகில் - சாய்தலில்லாத முலைகளின்மேலிட்ட ஆடையானது, (அவைகொல்லாமற் காத்தலால்), கடாக் களிற்றின் மேல் - (கொல்லுவதாகிய) மதயானையின்மேலிட்ட, கட்படாம் - முகபடாத்தினை (ஒக்கும்.)

**1087.** The cloth that covers the firm bosom of this maiden is (like) that which covers the eyes of a rutting elephant.

---

அ. ஒண்ணுதற் கோஓ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

[நுதலினுய வருத்தங் கூறியது.]

(பரி-ரை.) எ-து,—போர்க்களத்து வந்துநேராத பகைவரும், நேர்ந்தார் வாய்க்கேட் டஞ்சுதற் கேதுவாய என்வலி இம்மாதர தொள்ளிய நுதலொன்றற்குமே அழிந்துவிட்டது, எ-று.

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது. ஞாட்பினு ளென்றதனாற் பகைவராதல் பெற்றாம். பீடென்றபொதுமையான் மனவலியுங் காயவலியுங் கொள்க. ஓவென்னும் வியப்பின்கட்குறிப்பு அவ்வலிகளது பெருமையும் நுதலது சிறுமையுந் தோன்ற நின்றது. கழிந்ததற் கிரங்கலிற் றற்புகழ்த லன்றாயிற்று.

(தெ-ப-ரை.)—ஞாட்பினுள் - போர்க்களத்து, நண்ணாரும் - எதிர்த்திலாதபகைவரும், உட்கும் - (எதிர்த்தவர்வாய்ச் சொற்கேட்டு) அஞ்சுதற்கு ஏதுவாகிய, என்பீடு - என்வலி, ஒள் நுதற்கு ஓ - (இம்மாதருடைய) ஒளிபொருந்திய நெற்றியொன்றற்குமே, உடைந்தது - அழிந்துவிட்டது.

**1088.** On her bright brow alone is destroyed even that power of mine that used to terrify the most fearless foes in the battle-field.

---

கூ. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

[அணிநலத்தானய வருத்தங்கூறியது.]

(பரி-ரை) எ-து,—புறத்து மான்பிணையொத்த மடநோக்கினையும் அகத்து நாணினையுமுடையளாய விவட்கு ஒற்றுமையுடைய இவ்வணிகளே யமைந்திருக்க வேற்றுமையுடைய வணிகளைப் படைத்தணிதல் என்னபயனுடைத்து, எ-று.

மடநோக்கு - வெருவுத லுடையநோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக் கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவில ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—பிணை ஏர் மடநோக்கும் - (புறத்திலே) பெண்மான்போன்ற அஞ்சுதலுடைய பார்வையையும், நாணும் - (அகத்தில்) நாணினையும், உடையாட்கு - உடைய இவளுக்கு, (ஒற்றுமையுடைய இப்பார்வையும் நாணமும் ஆகிய அணிகளே போதுமானவையாயிருக்க), ஏதில தந்து - வேற்றுமையுடைய அணிகளையுண்டாக்கி, அணி - அணிதல், எவன் - என்னபயனுடைத்து?

**1089.** Of what use are other jewels to her who is adorned with modesty, and the meek looks of a hind?

---

க௦. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

[தலைமகன் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அடப்படு நறா தன்னையுண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்தலுடைத்தன்று, எ-று.

அடுநறா—வெளிப்படை. காமமென்றது ஈண்டு அது நுகர்தற் கிடனகியாளை. கண்டார்கணென்னு மேழாவது இறுதிக்கட் டொக்கது. மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததே யெனினும் இவள் குறிப்பாராய்ந் தறியாமையின் யானது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க, "அரிமயிர்த்திரண் முன்கை" என்னும் புறப்பாட்டிற் குறிப்புப்போல.

(தெ - ப - ரை.)—அடு நறா - காய்ச்சப்பட்ட மதுவானது, உண்டார்கண் அல்லது - (தன்னை) உண்டவரிடத்தேயல்லாமல், காமம்போல்—, கண்டார் - கண்டவரிடத்தே, மகிழ் செய்தல் - மகிழ்ச்சிசெய்தலை, இன்று - உடைத்தன்று.

**1090.** Unlike boiled honey which yields delight only when it is drunk, love gives pleasure even when looked at.

---

## கக௦ - ம். அதி. குறிப்பறிதல்.

அஃதாவது: தலைமகன் தலைமகள் குறிப்பினை யறிதலும், தோழி குறிப்பினை யறிதலும், அவடான் அவ்விருவர் குறிப்பினையு மறிதலுமாம். தகை

யணங்குற்ற தலைமகன் றலைமகளைக் கூடுங்கால் இது வேண்டுமாகலின், தகை யணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

[தலைமகன் றலைமகளுள்ளப்பாட்டுக் குறிப்பினை அவனோக்கினு னறிந்தது.]

(பரி-ரை.) எ-து,—இவளுடைய வுண்க ணகத்ததாய நோக்கு இதுபொழுது என்மே லிரண்டு நோக்காயிற்று; அவற்றுள் ஒருநோக்கு என்க ணோய் செய்யு நோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு, எ-று.

உண்கண் - மையுண்டகண். நோய் செய்யுநோக்கு—அவண் மனத்தினுய காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு. மருந்தாய நோக்கு - தன்க ணிகழ்கின்ற அற்புநோக்கு. நோய்செய்யு நோக்கினைப் பொதுநோக்கென்பா ருமுளர்: அது நோய்செயிற் கைக்கிளையாவதல்லது அகமாகாமை யறிக. இவ் வருத்தந் தீரும் வாயிலு முண்டாயிற் றென்பதாம்.

(தெ-ப-ரை.)—இவள் உண் கண்-இவளுடைய (மை) உண்டகண்களில், உள்ளது - இருக்கின்ற பார்வையானது, இரு நோக்கு - (இப்பொழுது என்மேல்) இரண்டுபார்வையாயிற்று; (அவற்றுள்), ஒரு நோக்கு - ஒருபார்வையானது, நோய் நோக்கு - (என்னிடத்து) நோய்செய்யும் பார்வையாம்; ஒன்று - மற்றொரு பார்வையானது, அந்நோய் மருந்து - அந்நோய்க்கு மருந்தான பார்வையாம்.

**1091.** There are two looks in the dyed eyes of this (fair one); one causes pain, and the other is the cure thereof.

---

உ. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

[இதுவுமது.]

(ப-ரை.) எ-து,— இவள்கண்கள் யான்காணுமல் என்மே னோக்குகின்ற அருகிய நோக்கம் மெய்யுறு புணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று, அதனினு மிகும், எ-று.

தானோக்கியவழி நாணியிறைஞ்சியும் நோக்காவழி உற்றுநோக்கியும் வருத லாற் களவுகொள்ளுமென்றும், அஃதளதாங் காலஞ் சிறிதாகலிற் சிறுநோக்க மென்றும், அஃது உளப்பாடுள்வழி நிகழ்வதாகலின் இனிப்புணர்தல் ஒருதலை யென்பான் செம்பாகமன்று பெரிதென்றுங் கூறினான்.

(தெ - ப - ரை.)—கண் - (இவளது) கண்கள், களவுகொள்ளும் சிறு நோக்கம் - நான்காணுமல் என்னைப்பார்க்கின்ற சிறிய பார்வை, காமத்தில் - மெய்யுறு புணர்ச்சியில், செம் பாகம் அன்று - ஒத்தபாதியளவன்று, பெரிது - (அதனிலும்) மிகும்.

**1092.** A single stolen glance of her eyes is more than half the pleasure (of sexual embrace).

---

௩. நோக்கினா ணோக்கி யிறைஞ்சின ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

[நோக்கினாலு நாணினாலு மறிந்தது.]

(பரி - ரை.) எ-து,—யானோக்காவளவிற் றானென்னை யன்போடு நோக்கி னாள், நோக்கி யொன்றனை யுட்கொண்டு நாணி இறைஞ்சினாள், அக்குறிப்பு இரு வேமிடையுந் தோன்றிய அற்புப் பயிர்வளர அதன்க ணவள் வார்த்த நீரா யிற்று, எ-று.

அஃதென்னுஞ் சுட்டுப்பெயர் அச்செய்கைக் கேதுவாய குறிப்பின்மே னின்றது. யாப்பினுளையதனை யாப்பென்றார். ஏகதேசவுருவகம்.

(தெ - ப - ரை.)—அவள்—, நோக்கினாள் - (நான் பாராத வளவிலே தான் என்னை அன்போடு) பார்த்தாள்; நோக்கி - பார்த்து, இறைஞ்சினாள் - (ஒன்றை உட்கொண்டுநாணி) தலை குனிந்தாள்; அஃது - அச்செய்கைக்கு ஏதுவாகிய குறிப்பானது, யாப்பினுள் - (எம்மிருவரிடத்துந் தோன்றிய) அன்பாகியபயிரு ள், அட்டிய நீர் - (அதுவளரும்படி) வார்த்த நீராயிற்று.

**1093.** She has looked (at me) and stooped (her head); and that (sign) waters as it were (the corn of) our love.

---

௪. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

[நாணினாலு மகிழ்ச்சியினாலு மறிந்தது.]

(பரி - ரை.) எ-று,—யான் றன்னை நோக்குங்காற் றானெதிர் நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும்; அஃதறிந் தியானோக்காக்காற் றானென் னைநொக்கித் தன்னுள்ளே மகிழாநிற்கும், எ-று.

மெல்ல—வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற் குறிப் பினிது விளங் கும். மெல்லநகு மென்பதற்கு முறுவலிக்குமென் றுரைப்பாரு முளர்.

(தெ - ப - ரை.)—யான் நோக்குங் காலை - (தன்னை) நான் பார்க்கும்போது, நிலம் நோக்கும் - (எதிர்பாராமல் நாணித்தலை குனிந்து) நிலத்தைப் பாரா நிற்கின்றாள்; நோக்காக்கால் - (அதை அறிந்து நான்) பாராதபோது, தான் நோக்கி - தான் (என்னை) பார்த்து, மெல்ல நகும் - (தன்னுள்ளே) மகிழா நிற்பள்.

**1094.** When I look she looks down; when I do not, she looks and smiles gently.

---

௫. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நேரோ குறிக்கொண்டு நோக்காத் துணையல்லது ஒரு கண்ணைச் சிறங்கணித்தாள் போல என்னை நோக்கிப் பின் றன்னுள்ளே மகிழா நிற்கும், எ-று.

சிறக்கணித்தா ளென்பது செய்யுள் விகாரம். சிறங்கணித்தல் - சுருக்குதல். அது தானும் வெளிப்பட நிகழாமையிற் போலவென்றான். நோக்கியென்பது சொல்லெச்சம். இனி இவளை யெய்துதல் ஒருதலை யென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—குறிக்கொண்டு - (நேரே) குறிக்கொண்டு, நோக்காமை அல்லால் - பாராமைமாத்திரமே யல்லது, ஒரு கண் - ஒருகண்ணை, சிறக்கணித்தாள் போல - சுருக்கினவள்போல, நகும் - (என்னைப் பார்த்துத் தன்னுள்ளே) மகிழா நின்றாள்.

**1095. She not only avoids a direct look at me, but looks as it were with a half-closed eye and smiles.**

---

சு. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

[தோழி சேட்படுத்தவழி அவள்குறிப்பறிந்த தலைமகன்
தன்னுள்ளே சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—புறத்து நொதுமலர்போலக் கடுஞ்சொற் சொன்னாராயினும், அகத்துச் செறுதலிலாதார் சொற்பிறபயத்தல் குறையுற்றாராற் கடிதி னறியப்படும், எ-று.

கடுஞ்சொலென்பது-இவ்விடங் காவன் மிகுதியுடைத்து வரற்பாலி ரல்லீரென்றன் முதலாயின. செறாஅவே, அருளுடைமை பெறப்பட்டது. தன் குறை முடிக்கக் கருதியே சேட்படுகின்றமை குறிப்பானறிந்து, உலகியன் மேலிட்டுக் கூறியவாறு. இது வருகின்ற பாட்டிற்கு மொக்கும்.

(தெ - ப - ரை.)—உறாதவர்போல் - (புறத்திலே) அயலார் போல, சொலினும்-(கடுஞ்சொல்)சொல்லினும், செறார் சொல்-(உள்ளே) பகையாதவர்சொல், (பின் பிரயோசனப் படுதல்,) ஒல்லை உணரப்படும் - (குறையிரந்தவராலே) கடிதில் அறியப்படும்.

**1096. Though they may speak harshly as if they were strangers, the words of the friendly are soon understood.**

---

எ. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—பின்னினிதாய் முன்னின்னாதாய சொல்லும் அகத்துச் செறுதிருந்தே புறத்துச் செற்றார் போன்ற வெகுளிநோக்கும் நொதுமலர் போன்று நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன, எ-று.

குறிப்பு—ஆகுபெயர். இவை உள்ளே யொருபயன் குறித்துச்செய்கின்றன இயல்பல்லவாகலான், இவற்றிற் கஞ்சவேண்டா வென்பதாம்.

(தெ-ப-ரை.)—செறாச் சிறு சொல்லும் - (பின் இனிதாவ தாய் முன்னே)இன்னாதாகிய சொல்லும், செற்றார் போல் நோக்கும் - (உள்ளே பகையாதிருந்தே புறத்தே) பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும், உறார் போன்று - அயலார்போலிருந்து, உற்றார் - நட்பாயினவர்க்கு, குறிப்பு - ஒரு குறிப்புப்பற்றிவருவனவாம்.

**1097.** **Little words that are harsh and looks that are hateful are (but) the expressions of lovers who wish to act like strangers.**

---

அ. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

[தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக்கண்டு தலைமகன் கூறியது.]

(பரி-ரை.) எ-து,—என்னையகற்றுகின்ற சொற்காற்றா தியானிரந்து நோக்கியவழி அஃதறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள், அதனால் நுடங்கிய வியல்பினையுடையாட்கு அந்நகையின்கண்ணே தோன்றுகின்ற தோர் நன்மைக் குறிப்புண்டு, எ-று.

ஏர்—ஆகுபெயர். அக்குறிப்பு இனிப்பழுதாகா தென்பதாம்.

(தெ-ப-ரை.)—யான் நோக்க - (என்னை நீக்குகின்ற சொல்லுக்குப் பொறாமல்) நான் (இரந்து) நோக்கியவிடத்து, பசையினள் - (அதுதெரிந்து) இரங்கினவளாகி, பைய நகும் - உள்ளே நகாநின்றாள், (அதனால்), அசை இயற்கு-அசைந்த சாயலையுடையவளுக்கு, ஆண்டு - அந்நகையி னிடத்து, ஓர் ஏர் - ஒரு நன்மைக்குறிப்பு, உண்டு - உளது.

**1098.** **When I look, the pitying maid looks in return and smiles gently; and that is a comforting sign for me.**

---

கூ. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

[தோழி மதியுடம் படுவா டன்னுள்ளே சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—முன்னறியாதார்போல ஒருவரை யொருவர் பொது நோக்கத்தா னோக்குதல் இக்காதலை யுடையார் கண்ணே யுளவாகா நின்றன, எ-று.

பொதுநோக்கு—யாவர்மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு. நோக்குதற் றொழில், ஒன்றேயாயினும் இருவர்கண்ணு நிகழ்தலானும், ஒருவர்கட் டானுங் குறிப்பு வேறுபாட்டாற் பலவா மாகலானும், உளவெனப் பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் மதமறைந் துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலின் அதுபற்றிக் காதலாரென்றும், அது புறத்து வெளிப்படாமையின் ஏதிலார்போல வென்றுங் கூறினாள்.

(தெ-ப-ரை.)—ஏதிலார் போல - முன்னறியாதவர் போல, பொது நோக்கு நோக்குதல் - (ஒருவரை ஒருவர்) பொதுப்பார் வையாகப் பார்த்தல், காதலார்கண்ணே - ஆசையையுடைய இவ் விருவரிடத்தும், உள - உண்டாகின்றன.

**1099.** Both the lovers are capable of looking at each other in an ordinary way, as if they were perfect strangers.

---

கO. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காமத்திற் குரிய விருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர்கண்கள் நோக்கா லொக்குமாயின், அவர் வாய்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒரு பயனு முடையவல்ல, எ-று.

நோக்காலொத்தல்—காதனேக்கினவாதல். வாய்ச்சொற்கள்—மனத்தின் கணின்றி வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். இருவர் சொல்லுங் கேட்டு உலகியன்மேல் வைத்துக் கூறியவாறு. இருவர் சொல்லுமாவன அவள் புனங் காவன்மேலும் அவன் வேட்டத்தின்மேலுஞ் சொல்லுவன. பயனில் சொற்களாகலின், இவை கொள்ளப்படா வென்பதாம். இவை புணர்த நிமித்தம்.

(தெ-ப-ரை.)—(காமத்திற்குரிய இருவருள்), கண்ணொடு - (ஒருவரது) கண்களோடு, கண் இணை - (ஒருவர்) கண்கள், நோக்கு ஒக்கின் - பார்வையால் ஒக்குமாயின், வாய்ச்சொற்கள்-(உண்மைதோன்றச் சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள், என்ன பயனும்-ஒருபயனும், இல - உடையனவல்ல.

**1100.** The words of the mouths are of no use whatever, when there is perfect agreement between the eyes (of lovers).

---

## கககம். அதி. புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது அங்ஙனங் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

[இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—கண்ணாற் கண்டும் செவியாற் கேட்டும் நாவாலுண்டும் மூக்கான் மோந்தும் மெய்யாற் றீண்டியும் அனுபவிக்கப்படு மைம்புலனும் இவ்வொள்ளிய தொடியை யுடையாள் கண்ணே யுளவாயின, எ-று.

உம்மை-முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கிநின்றது. வேறுவேறு காலங்களில் வேறுவேறு பொருள்களா னனுபவிக்கப்படுவன ஒரு காலத்து இவள் கண்ணே யனுபவிக்கப் பட்டனவென்பதாம். வடநூலார்

இடக்கர்ப் பொருளவாகச் சொல்லிய புணர்ச்சித் தொழில்களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன.

(தெ-ப-ரை.)—கண்டு - (கண்ணாலே) கண்டும், கேட்டு - (செவியாலே) கேட்டும், உண்டு - (நாவாலே) உண்டும், உயிர்த்து - (மூக்காலே) மோந்தும், உற்று - (மெய்யாலே) தீண்டியும், அறியும் - அனுபவிக்கப்படுகிற, ஐம்புலனும்—, ஒள் தொடி கண்ணே - இவ்வொளிபொருந்திய வளையையுடையவளிடத்தே, உள - உண்டாயின.

**1101.** The (simultaneous) enjoyment of the five senses of sight hearing, taste, smell and touch can only be found with bright braceleted (women).

---

உ. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

[இடந் தலைப்பாட்டின்கட் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—வாதமுதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானமாயினவன்றி மாறாயவியல்பினை யுடையனவாம்; அவ்வாறன்றி இவ்வணியிழையினை யுடையாள் தன்னினுயபிணிக்கு மருந்துந் தானேயாயினள், எ-று.

இயற்கைப்புணர்ச்சியை நினைந்து முன்வருந்தினாகலிற் றன்னோயென்றும், அவ்வருத்தந் தமியாளை யிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலிற் றானேமருந்தென்றுங் கூறினான். இப்பிணியும் எளியவாயவற்றாற் றீரப்பெற்றில மென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

(தெ-ப-ரை.)—பிணிக்கு - (வாதமுதலாகிய) பிணிகளுக்கு, மருந்து - மருந்தாவன, பிற - (அவைகளுக்கு நிதானமானவையல்லாமல்) விரோதமாகிய குணத்தையுடையவையாம்; அப்படி யல்லாமல்), அணி இழை - இவ்வணியினையுடையவள், தன்னோய்க்கு - தன்னாலாகிய பிணிக்கு, தானே மருந்து - தானே மருந்துமாயினள்.

**1102.** The remedy for a disease is always something different (from it); but for the disease caused by this jewelled maid, she is herself the cure.

---

ரு. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
றாமரைக் கண்ணா னுலகு.

[நிரதிசய வின்பத்திற்குரிய வீ இச்சிற்றின்பத்திற் கின்னையாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம்விரும்பு மகளிர் மெல்லியதோளின்கட் டுயிலுந் துயில்போல வருந்தாம லெய்தலாமோ அவற்றைத்துறந்த யோகிகளெய்துஞ் செங்கண்மா லுலகம், எ-று.

ஐம்புலன்களையு நுகர்வா ரென்னும்பெயர் அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்தவேண்டுதலின், எம்

மனோர்க் காகாதென்னும் கருத்தால் இனிதுகொ லென்றான். இந்திரனுலகென் றுரைப்பாரு முளர்: தாமரைக்கண்ணா னென்பது அவனுக்குப் பெயரன்மையின், அஃதுரையன்மை யறிக.

(தெ-ப-ரை.)—(ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கு), தாம்வீழ்வார் - தாம் விரும்புமகளிரது, மெல்தோள் - மெல்லிய தோள்களிடத்து, துயிலின் - (துயிலும்)துயில்போல, தாமரைக் கண்ணான் உலகு - (அவைகளைத் துறந்தயோகிகளால் அடையப் படுவதாகிய) கமலக்கண்ணனது உலகம், இனிது கொல் - வருந் தாம லடையக்கூடுவதோ.

**1103.** Can the lotus-eyed Vishnu's heaven be indeed as sweet to those who delight to sleep in the delicate arms of their beloved ?

---

௪. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

[பாங்கற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—தன்னை யகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிரா நிற்கும், இப்பெற்றித்தாய தீயை என்கட் டருதற்கு இவ ளெவ்வுலகத்துப் பெற்றாள், எ-று.

கூடாமுன் றுன்புறுதலின் நீங்கிற் றெறூஉ மென்றும், கூடியபி னின்புறுதலிற் குறுகுங்காற் றண்ணென்னு மென்றும், இப்பெற்றியதோர் தீ உலகத் தில்லையாமாகலின் யாண்டுப் பெற்றாளென்றுங் கூறினான். தன்காமத் தீத் தன்னையே அவடந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின்.

(தெ-ப-ரை.)—நீங்கின் - (தன்னை) நீங்கியபோது, தெறும்-சுடாநிற்கும், குறுகுங் கால் - நெருங்கும்போது, தண் என்னும் - குளிரா நிற்கும், தீ - (இப்படிப்பட்ட) தீயை, (எனக்குத் தருவதற்கு), யாண்டு - எவ்வுலகத்திலே, இவள்பெற்றாள்—.

**1104.** From whence has she got this fire that burns when I withdraw and cools when I approach ?

---

௫. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

[தோழியிற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—மிகவினியவாய பொருள்களைப் பெறாது அவற்றின் மேல் விருப்பங்கூர்ந்த பொழுதின்கண் அவையவை தாமேவந் தின்பஞ்செய்யு மாறுபோல இன்பஞ்செய்யும், எப்பொழுதும் பெற்றுப் புணரினும், பூவினை யணிந்த தழைந்த கூந்தலினையுடையா டோள்கள், எ-று.

தோடு—ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந் தலைப்பாடு, பாங்கற்கூட்டத்துக் கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ்வாராமைபற்றி இவ்வாறு கூறினான். தொழிலுவமம்.

(தெ-ப-ரை.)—(எப்பொழுது பெற்றுக்கூடினும்), தோடு ஆர் கதுப்பினாள் - மலரானிறைந்த கூந்தலையுடையவளது, தோள் - தோள்கள், வேட்ட பொழுதின் - (மிகவும் இனிய பொருள்களைப்பெற) விரும்பியபொழுது, அவை அவை போலுமே - அவ்வப்பொருள்கள் போல் வந்து (இன்பஞ்செய்யும்).

**1105.** The shoulders of her whose locks are adorned with flowers delight me as if they were the very sweets I have desired (to get).

---

சுு. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—தன்னைப்பெறாது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறுந் தளிர்க்கும்வகை தீண்டுதலான், இப்பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோ ரமிழ்தினாற் செய்யப்பட்டன, எ-று.

ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்கு மெய்திற்று. வாடிய வுயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அவை யமிழ்தி னியன்றன வென்றான். தளிர்த்தல்-இன்பத்தாற் றழைத்தல்.

(தெ - ப - ரை.)—உயிர் - (தன்னைப்பெறாதுவாடிய என்) உயிர், உறுதோறு - (பெற்று) உறுந்தோறும், தளிர்ப்ப - தளிர்க்கும்படி, தீண்டலால்—, பேதைக்கு-இம்மங்கைக்கு, தோள்-தோள்கள், அமிழ்தின் இயன்றன - (தீண்டப்பட்ட) அமிழ்தினாலே செய்யப்பட்டன.

**1106.** The shoulders of this fair one are made of ambrosia, for they revive me with pleasure every time I embrace them.

---

எ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

[இவளை நீவரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து தமதுபாத்
துண்ணுமில்லறத்தோடு படல்வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அழகிய மாமை நிறத்தையுடைய அரிவையது முயக்கம் இன்பம் பயத்தற்கட் டமக்குரிய வில்லின்கணிருந்து உலகோர் தந்தாளான் வந்தபொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப் பகுத்துத் தங்கூற்றை யுண்டாற்போலும், எ-று.

தொழிலுவமம். இல்லறஞ்செய்தா ரெய்துந் துறக்கத்தின்பம் எனக்கிப் புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று.

(தெ-ப-ரை.)—அம் மா அரிவை முயக்கு - அழகிய மாமை நிறத்தையுடைய மாதின்கண் புணர்ச்சியானது, (இன்பந்தருதலில்), தம் இல் இருந்து-தமக்குரிய மனையிலிருந்து, தமது-(உல

கோர்) தம்முயற்சியால் வந்த பொருளை, பாத்து - (தென்புலத்தார் முதலாகிய ஐவர்க்கும்) பகுந்துகொடுத்து, உண்டது அற்று - (தமது பங்கை) உண்பதுபோல் (இன்பஞ்செய்கின்றது).

**1107**. The embraces of a gold-complexioned beautiful female are as pleasant as to dwell in one's own house and live by one's own (earnings) after distributing (a portion of it in charity).

---

அ. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

[ஒத்தவன்புடைய நமக்கு ஒருபொழுதும்விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை) எ-து,—நீசொல்லுகின்றதொக்கும் ஒருபொழுது நெகிழாமையிற் காற்றாலிடையறுக்கப்படாத முயக்கம் ஒருவரையொருவர் விழைவா ரிருவர்க்கு மினிதே, எ-று.

முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு இருவரில்லை, இன்மையான் இஃதொவ்வாதென்பது கருத்து. களவிற் புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு.

(தெ-ப-ரை.)—(நீசொல்லுகின்ற தொக்கும்), வளி இடை போழப்படா - (ஒருபொழுதும் நெகிழாமையால்) காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு - புணர்ச்சியானது, வீழும் இருவர்க்கு - (ஒருவரைஒருவர்) விரும்புகிற இருவர்க்கும், இனிதே - இனிதேயாம்.

**1108**. To ardent lovers sweet is the embrace that cannot be penetrated even by a breath of breeze.

---

கூ. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

[காத்தல் வேண்டாமையின் இடையறவில்லாதகூட்டமே இன்பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—புணர்ச்சி யினிதாதற்பொருட்டு வேண்டுவதாய ஊடலும் அதனையளவறிந்து நீங்குதலும் அதன்பி னிகழ்வதாய வப்புணர்ச்சிதானுமென விவையன்றே வரைந்துகொண்டு காமத்தையிடைவிடாதெய்தியவர் பெற்ற பயன்கள், எ-று.

ஊடவர்க்குப் பிரிவென்பதொன் றுளதாதன்மேலும் அதுதான் பரத்தையர்மாட் டாதலும் அதனையறிந்து மகளிரூடிநிற்றலும் அவ்வூடலைத் தவறுசெய்தவர் தாமே தந் தவறின்மைகூறி நீக்கலும் பின்னுமவ்விருவரும் ஒத்தவன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந்தெய்தினர் பெற்றபயன்; அப்பயன் இருதலைப்புள்ளி னோருயிராய உழுவலன்புடைய வெமக்கு வேண்டாவென அவ்வரைந்தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு.

(தெ-ப-ரை.)—ஊடல் - (புணர்ச்சி இனிதாதற்பொருட்டு வேண்டும்) ஊடலும், உணர்தல் - (அதனை அளவறிந்து) நீங்குதலும், புணர்தல் - (அதன்பின் உண்டாகின்ற) அப்புணர்ச்சியும் என்கிற, இவை - இவையல்லவா, காமம் கூடியார் (விவாகஞ் செய்துகொண்டு) காமத்தை இடைவிடாதடைந்தவர், பெற்ற பயன் - பெற்றபயன்கள்.

**1109.** Love quarrel, reconciliation and intercourse—these are the advantages reaped by those who marry for lust.

---

௰. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

[புணர்ந்துடன் போகின்றான் றன்னுள்ளே சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை யறி யவறிய முன்னையறியாமை கண்டாற்போலக் காணப்படாநின்றது சிவந்த விழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவண்மாட்டுக் காதல், எ-று.

களவொழுக்கத்திற் பலவிடை யீடுகளா னெய்தப்பெறாது அவாவுற்றான் இது பொழுது நிரந்தரமாக வெய்தப்பெற்றமையின், செறிதோறுமென்றான். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மேலறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய் முடியாநிற்கின்றதெனத் தன்னாராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கு முண்டேனும் அவண்மாட்டுக் குறிப்பானிகழ்வதல்லது கூற்றா னிகழாமையறிக.

(தெ-ப-ரை.)—செறி தோறும் - புணரப்புணர, சேயிழை மாட்டு-செம்பொன் ஆபரணத்தையுடைய இவளிடத்து, காமம்-காதல், அறிதோறு - (நூல்களாலும் நுட்பவறிவாலும் பொருள்களை) அறியவறிய, அறியாமை - (முன்னை) யறியாமை, கண்டற்று - காணப்படுதல்போலே காணப்படுகின்றது.

**1110.** As (one's) ignorance is discovered the more one learns, so does repeated intercourse with a well-adorned female (only create a desire for more).

---

## ௧௧௨-ம். அதி. நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது தலைமகன் றலைமகணலத்தைப் புனைந்துசொல்லியது. இது புணர்ச்சிமகிழ்ந்துழி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.

௧. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

[இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அனிச்சப்பூவே வாழ்வாயாக, மென்மையால் நீயெல்லாப்பூவினு நல்லவியற்கையையுடையை, அங்ஙனமாயினும் எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினுமெல்லிய வியற்கையையுடையள், எ-று.

அனிச்சம்—ஆகுபெயர். வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனி யானே மெல்லியனென்னுந் தருக்கினை யொழிவாயாக வென்பதாம். அது பொழுதுற்றறிந்தானாகலின், ஊற்றினினிமையையே பாராட்டினான். இன்னீரளென்று பாடமோதுவாரு முளர்.

(தெ-ப-ரை.)—அனிச்சமே-அனிச்சப்பூவே, வாழி-வாழ்வாயாக; நல் நீரை - (மென்மையாலே நீ எல்லாப்பூவினும்) நல்ல குணமுடையை; (அப்படியிருந்தாலும்), யாம் வீழ்பவள் - எம்மால் விரும்பப்பட்டவள், நின்னினும் மெல் நீரள் - உன்னினு மெல்லியகுணத்தையுடையள்.

**1111.** May you flourish, O anicham! you have a delicate nature. But my beloved is more delicate than you.

---

௨. மலர்காணின் மையாத்தி நேஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

[இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நெஞ்சே யானேகாணப்பெற்ற இவள்கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி தாமரை, குவளை, நீலமுதலிய மலர்களைக்கண்டால் மயங்காநின்றாய், நின்னறிவிருந்தவா றென்? எ-று.

மையாத்தல்-ஈண்டு ஒவ்வாதவற்றை யொக்குமெனக்கோடல்; இறுமாத்தல் செம்மாத்த லென்பனபோல வொருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கமுதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறுமையின் அவற்றோ டொருபுடையொக்கு மலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கட்காதல் செய்துபோந்தான், இதுபொழுது அக்கண்களி னலமுழுதுந் தானே தமியாளை யிடத்தெதிர்ப்பட்டனுபவித்தானாகலின் அம்மலர்கள் ஒவ்வாமைகண்டு ஒப்புமைகருதிய நெஞ்சை யிகழ்ந்து கூறியவாறு.

(தெ-ப-ரை.)—நெஞ்சே—, இவள் கண் - (யானேகாணப்பெற்ற) இவள் கண்களை, பலர் காணும் - பலராலுங்காணப்படுகிற, பூ ஒக்கும் என்று - மலர்கள் ஒக்குமென்று நினைத்து, மலர் காணின் - (தாமரை குவளை நீலமுதலாகிய) மலர்களைக் கண்டால், மையாத்தி - மயங்காநின்றாய்; [உனக்கு அறிவிருந்தவிதம் என்ன?]

**1112.** O my soul, fancying that flowers which are seen by many can resemble her eyes, you become confused at the sight of them.

---

௩. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

[கூட்டுதலுற்றபாங்கற்குத் தலைமகன்றலைமகள
தியல்பு கூறியது.]

(பரி - ரை.) எ-து,—வேய்போலுந் தோளினையுடையவட்கு நிறந்தளிர் நிறமாயிருக்கும், பல்லுமுத்தமாயிருக்கும், இயல்பாயநாற்றம் நறுநாற்றமாயிருக்கும், உண்கண்கள் வேலாயிருக்கும், எ-று.

பெயரடையாலும் ஓரியல்பு கூறப்பட்டது. முறி, முறுவலென்பன ஆகுபெயர். உருவகவகையாற் கூறினமையின், புனைந்துரையாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை யறியேனென்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம்.

(தெ - ப - ரை.)—வேய் தோளவட்கு - மூங்கில் போலுந் தோள்களையுடையவளுக்கு, மேனி - நிறம், முறி - தளிர்நிறமாயிருக்கும்; முறுவல் - பல்லானது, முத்தம் - முத்தாயிருக்கும்; நாற்றம் - (இயற்கை) வாசனையானது, வெறி - நல்லவாசனையாயிருக்கும்; உண்கண் - (மை) உண்டகண்கள், வேல் - வேல்களாயிருக்கும்.

**1113.** The complexion of this bamboo-shouldered one is that of a shoot; her teeth, are pearls; her breath, fragrance; and her dyed eyes, lances.

---

௪. காணிற்குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

[பாங்கற்கூட்டத்துச்சென்று சார்தலுறுவான் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—குவளைப்பூக்கடாமும் காண்டற்றொழிலை யுடையவாயின் மாண்டவிழையினை யுடையாள்கண்களை யாமொவ்வே மென்றுகருதி அந்நாணினா லிறைஞ்சி நிலத்தினை நோக்கும், எ-று.

பண்பானேயன்றித் தொழிலானு மொவ்வாதென்பான் காணினென்றும் கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாமென்பது தோன்றக் கவிழ்ந்தென்றுங் கூறினான். காட்சியுநாணுமின்மையிற் செம்மாந்து வானைநோக்கின வென்பதாம்.

(தெ-ப-ரை.)—குவளை - குவளைமலர்கள், காணின் - பார்க்கிறதொழிலை உடையவையாயிருந்தால், மாண் இழை கண் - மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை யுடையவளது கண்களை, ஒவ்வேம் என்று - நிகரோமென்றுநினைத்து, கவிழ்ந்து - (அந்நாணத்தினாலே) தலைகுனிந்து, நிலன் - நிலத்தை, நோக்கும் - பார்க்கும்.

**1114.** If the blue lotus could see, it would stoop and look at the ground saying, "I can never resemble the eyes of this excellent-jewelled one.

---

௫. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

[பகற்குறிக்கட் பூவணிகண்டு சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—இவள் தன்மென்மைகருதாது அனிச்சப்பூவை முகிழ் களையாது சூடினாள் இனி யிவளிடைக்கு நல்ல பறைகளொலியா, எ-று.

அம்முகிழ்ப்பாரம் பொறுமையின் இடைமுரியும், முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மே லேற்றப்பட்டன.

(தே - ப - ரை.)—(இவள் தன்மென்மை நினையாமல்), அனிச்சப்பூ - அனிச்சமலரை, கால் களையாள் - தாள் களையாளாகி, பெய்தாள் - சூடினாள்; நுசுப்பிற்கு - (இனியிவள்) இடைக்கு, நல்ல - நல்லவையாகிய, பறை - பறைகள், படா - ஒலியா.

**1115.** No *merry* drums will be beaten for the (tender) waist of her who has adorned herself with the anicham without having removed its stem.

---

சு. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

[இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—வானத்துமீன்கள் வேறுபாடு பெரிதாகவும் தம்மதியினையும் எம்மடந்தை முகத்தினையும் இதுமதி இதுமுகமென் றறியமாட்டாது தந்நிலையினின்றுங் கலங்கித் திரியாநின்றன, எ-று.

ஓரிடத்து நில்லாது எப்பொழுது மியங்குதல்பற்றிப் பதியிற்கலங்கிய வென்றான். வேறுபாடு வருகின்றபாட்டாற் பெறப்படும். இனி யிரண்டனையும் பதியிற்கலங்காத மீன்களறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென்றுரைப்பினு மமையும்.

(தெ-ப-ரை.)—மீன் - தாரகைகள், (வேறுபாடு பெரிதாயிருக்கவும்), மதியும் - (தமது) சந்திரனையும், மடைந்தை முகனும் - (எமது) மாதுமுகத்தையும், அறியா - (இதுசந்திரன் இது முகமென்று) அறியமாட்டாமல், பதியின் - (தன்) நிலையினின்றும், கலங்கிய - கலங்கித்திரியாநின்றன.

**1116.** The stars have become confused in their places not being able to distinguish between the moon and the maid's countenance.

---

எ. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—அம்மீன்கள் அங்ஙனங் கலங்குதற்குக் காரணம்யாது முன்குறைந்தவிடம் வந்துநிரம்பியே விளங்குமதிக்கட்போல இம்மாதர் முகத்து மறுவுண்டோ, எ-று.

இடம் - கலை. மதிக்கென்பது வேற்றுமை மயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையு மின்மைபற்றி வேறுபாடறியலாயிருக்க அறிந்திலவென விகழ்ந்து கூறியவாறு.

(தெ - ப - ரை)—(அத்தாரகைகள் அப்படி கலங்குதற்குக் காரணம் யாது), அறுவாய் நிறைந்த - முன்குறைந்தகலை வந்து நிறைந்த, அவிர்-விளங்குகிற, மதிக்குப்போல - சந்திரனிடத்துப் போல, மாதர் முகத்து-இம்மாதர் முகத்தினிடத்து, மறு-களங்கமானது, உண்டோ - உளதோ, [இல்லை என்றபடி].

**1117.** Could there be spots in the face of this maid like those in the bright full moon.

---

அ. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து, மதியே! வாழ்வாயாக. இம்மாதர்முகம்போல யான் மகிழும்வகை ஒளிவீசவல்லையாயின் நீயுமென்காதலை யுடையையாதி, எ-று.

மறுவுடைமையின் அதுமாட்டாய் மாட்டாமையின் என்னாற் காதலிக்கவும் படாயென்பதாம். வாழியென்பது இகழ்ச்சிக்குறிப்பு.

(தெ - ப - ரை.)—மதி - சந்திரனே! வாழி - வாழ்வாயாக; மாதர் முகம்போல்—, ஒளிவிடவல்லையேல் - (நான்மகிழும்படி) ஒளிவீசவல்லாயாகில், காதலை - (நீயும் என்னால்) இச்சிக்கப்படுதலையுடையையாவாய்.

**1118.** If you can indeed shine like the face of women, flourish, O moon, for then would you be worth loving.

---

கூ. மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—மதியே! இம்மலர்போலுங் கண்ணிணையுடையாள் முகத்தை நீயொக்கவேண்டுதியாயின் இதுபோல யான்காணத் தோன்று, பலர் காணத் தோன்றுதொழி.

தானே முகத்தி னலமுழுதுங் கண்டனுபவித்தானாகலின் ஈண்டும் பலர் காணத் தோன்றலை யிழித்துக் கூறினான். தோன்றின் நினக்கவ்வொப் புண்டாகாதென்பதாம்.

(தெ - ப - ரை.)—மதி - சந்திரனே! மலர் அன்ன கண்ணாள் - இம்மலர் போலுங்கண்களையுடையவளது, முகம் - முகத்தை, ஒத்தி ஆயின் - ஒக்க வேண்டுவையாகில், (இதுபோல் யான்காணத் தோன்று), பலர் காணத் தோன்றல் - பலர்காணத் தோன்றாதே.

**1119.** O moon, if you wish to resemble the face of her whose eyes are like (these) flowers, do not appear so as to be seen by all.

---

௧0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

[உடன்போக்குரைத்த தோழிக்கு அதனதருமைகூறி மறுத்தது.]

(பரி-மே.) எ-து,—உலகத்தாரான் மென்மைக்கெடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகிய விரண்டும் மாதரடிக்கு நெருஞ்சிப்பழம் போல வருத்தஞ்செய்யும், எ-று.

முன் வலிதாத லுடைமையிற் பழமென்றான். இத்தன்மைத்தாயவடி பரத்தியன்ன குடமிக் கூர்ங்கற்களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற் பெறப்பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப் பொருளும் அடிநல னழியாமையாகலின், இதுவு மிவ்வதிகாரத்த தாயிற்று.

(தெ - ப - ரை.)—(உலகத்தாரால் மென்மைக்கு எடுக்கப்பட்ட), அனிச்சமும் - அனிச்சமலரும், அன்னத்தின் தூவியும் - அன்னப்பரவையினிறகும், மாதர் அடிக்கு-மாதர் பாதத்திற்கு, நெருஞ்சிப் பழம்-நெருஞ்சிப் பழம்போல் (வருத்தஞ்செய்யும்).

**1120**. The anicham and the feathers of the swan are to the feet of females, like the fruit of the (thorny) Nerunji.

## ககஉ - ம். அதி. காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது தலைமகன் தன்காதன் மிகுதிகூறலும், தலைமகள் தன்காதன் மிகுதிகூறலுமாம். இது புணர்ச்சியும் நலனும்பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

க. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

[இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் டலைமகன் றன்னயப் புணர்த்தியது.]

(பரி-மே.) எ-து,—இம்மெல்லிய மொழியினை யுடையாளது வாலிய வெயிறூறியநீர் பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும், எ-று.

கலந்ததற்றென்பது விகாரமாயிற்று, கலக்கப்பட்டதென்றவாறு. பாலொடு தேனென்றவதனால் அதன்சுவைபோலுஞ் சுவையினையுடைத் தென்பதாயிற்று. எயிறூறியவென இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின்மேனின்றது. வேறுவே றறியப்பட்ட சுவையவாய பாலுந்தேனுங்கலந்துழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தாமாகலின், அது பொருளாகிய நீர்க்கு மெய்துவிக்க.

(தெ-ப-ரை.)—பணி மொழி - இம்மெல்லிய சொல்லையுடையவளது, வால் எயிறு ஊறிய நீர் - வெண்பல்லூறிய நீரானது, பாலொடு தேன் கலந்தது அற்று - பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும்.

**1121**. The water which oozes from the white teeth of this soft speeched damsel is like a mixture of milk and honey.

உ. உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு.

[பிரிவச்சங் கூறியது.]

(பரி-ரை.) எ-து,—உடம்போடுயிரிடையுளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய இம்மடந்தையோடு எம்மிடையுளவாய நட்புக்கள், எ-று.

என்னவெனப் பன்மையாற்கூறியது, இரண்டுந் தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதல், இன்பதுன்பங்க ளொக்கவனுபவித்தல், இன்றியமையாமை யென்றிவற்றை நோக்கி. தெய்வப்புணர்ச்சி யாகலான் அதுபொழுது உணர்ச்சியிலளாகியாள் பின்னுடையளாமன்றே, ஆயவழி இவன் யாவன்கொ லெனவும் என்கணன்புடையன்கொ லெனவும் இன்னுமிவனைத் தலைப்பெய்தல்கூடுங்கொ லெனவும் அவண்மனத்தின்கணிகழும், அந்நிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து அவைதீரக் கூறியவாறு. என்னையென்று பாடமோதுவாருமுளர்.

(தெ-ப-ரை.)—மடந்தையோடு - இம்மாதோடு, எம்மிடை - எம்மிடத்து உண்டாகிய, நட்பு - நட்புகள், உடம்போடு உயிரிடை - உடம்போடுயிரிடத்து, என்ன - எப்படிப்பட்டவை, அன்ன - அப்படிப்பட்டவையாகும்.

**1122.** The love between me and this damsel is like the union of body and soul.

---

௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

[இடந்தலைப்பாட்டின்கட் டலைமகனீக்கத்துச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—என்கண்ணிற் கருமணியின்கணுறையும் பாவாய், நீ யங்குநின்றும் போதருவாயாக ; போதராதிருத்தியாயின், எம்மால் விரும்பப்பட்ட திருநுதலை யுடையாட்கு இருக்க விடமில்லையாம், எ-று.

யான் காணு தமையாமையின் இவள் புறத்துப்போகற்பாலளன்றி என் கண்ணு ளிருக்கற்பாலள், இருக்குங்கால் நின்னோடொருங்கிருக்க இடம்போதாமையின் நின்னினுஞ் சிறந்த விவட்கு அவ்விடத்தைக்கொடுத்து நீ போதுவாயாக வென்பதாம்.

(தெ - ப - ரை.)—கருமணியில் பாவாய் - (என்கண்ணில்) கருமணியிலிருக்கின்றபாவையே! நீ—, போதாய் - (அவ்விடம் விட்டுப்) போவாயாக; (போகாதிருப்பாயாகில்), யாம் வீழும் - எம்மால் விரும்பப்படுகின்ற, திருநுதற்கு - அழகிய நெற்றியையுடையவளுக்கு, இடம்—, இல்லை - இல்லையாம்.

**1123.** O you image in the pupil (of my eye)! depart; there is no room for (my) fair browed beloved.

---

௪. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

[பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான் சொல்லியது.]

(பரி-லை.) எ-து,—தெரிந்த விழையினை யுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்குடம்போடு கூடிவாழ்தல்போலும்; பிரியுமிடத்து அதற்கு அதனி னீங்கிப்போதல் போலும், எ-று.

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய் நிலையான் வந்தன. வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ் செய்தலானும், அவற்றை அவள்புணர்வு பிரிவுகட் குவமையாக்கினான்.

(தெ-ப-ரை.)—(எனக்கு), ஆய்இழை-ஆராய்ந்துகொள்ளப் பட்ட ஆபரணத்தை யுடையவள், (புணருமிடத்து), உயிர்க்கு—, வாழ்தல் அன்னள் - (உடம்போடுகூடி) வாழ்தல்போ லாகின்றாள்; நீங்கும்இடத்து-பிரியுமிடத்து, அதற்கு-அவ்வுயிர்க்கு, சாதல் அன்னள் - அவ்வுடம்பி னீங்கிப்போதல் போலாகின்றாள்.

**1124.** My fair-jewelled one resembles the living soul (when she is in union with me), the dying soul when she leaves me.

---

௫. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

[ஒருவழித்தணந்துவந்த தலைமகன் நீயிர் தணந்தஞான்று எம்மை யுள்ளியுமறிதிரோவென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-லை.) எ-து,—ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான்மறந்தேனாயின், நினைப்பேன், ஒருபொழுதும் மறத்தலையறியேன், ஆகலான் நினைத்தலையுமறியேன், எ-று.

மன்—ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன்கூற்று; மேற்றலைமகள்கூற்று.

(தெ-ப-ரை.)—யான்—, ஒள் அமர் கண்ணாள் குணம் - ஒளியினவாகிப் போர்செய்கிற கண்களையுடையவளது குணங்களை, மறப்பின் - மறந்தேனாயின், உள்ளுவன் - நினைப்பேன்; மறப்பு அறியேன் - (ஒருபோதும்) மறத்தலறியேன்; (ஆகலால் நினைத்தலுமறியேன்.)

**1125.** If I had forgotten her who has bright battling eyes, I would have remembered (thee); but I never forget her. (Thus says he to her maid.)

---

௬. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

[ஒருவழித்தணப்பின்கட் டலைமகனைத் தோழி இயற்பழிக்குமென்றஞ்சி அவள்கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.]

(பரி-லை.) எ-து,—தாங்காணாமைபற்றிச் சேய்மைக்கட்போயினரென்று கருதுவார் கருதுக; எம்முடையகாதலர் எங் கண்ணகத்துநின்றும் போகார்;

யாமறியாதிமைத்தேமாயின் அதனால் வருந்துவதுஞ் செய்யார்; ஆகலாற் காண ப்படாநுண்ணியர், எ-று.

இடைவிடாத நினைவின்முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னேதோன்ற லிற் கண்ணுள்ளிற் போகாரென்றும், இமைத்தழியும் அது நிற்றலான் இமைப் பிற் பருவராரென்றுங் கூறினாள்.

(தெ - ப - வுரை.) — (தாம் காணாமைபற்றித் தூரத்திலே போயினாரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர்); எம் காதலவர் —, கண்ணுள்ளில் - (எமது) கண்ணுள்ளே நின்றும், போகார் —; இமைப்பின் - (அறியாமல்) இமைத்தேமாயின், பருவரார் - (அத னால்) வருந்துவதுஞ் செய்யார்; (ஆதலாலே), நுண்ணியர் - (காணப்படாத) நுண்ணியர்.

**1126.** My lover would not depart from mine eyes; even if I wink, he would not suffer (from pain); he is so ethereal.

---

௭. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காதலர் எப்பொழுது மெங்கண்ணினுள்ளாராகலாற் கண்ணினை யுஞ்சனத்தா லெழுதுவதுஞ் செய்யேம், அத்துணைக்காலமும் அவர் மறைதலையறிந்து, எ-று.

இழிவுசிறப்பும்மை மாற்றப்பட்டது. கரப்பாக்கென்பது வினைப்பெயர். வருகின்ற வேபாக்கென்பதுமது. யா னிடையீடின்றிக் காண்கின்றவரைப் பிரிந் தாரென்று கருதுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.

(தெ - ப - ரை.)—காதலவர்—, கண் உள்ளார் ஆக - (எம்) கண்ணுள் இருக்கின்றாராகலால், கண்ணும் எழுதேம் - கண் ணினை (மையினால்) எழுதுவதுஞ் செய்யேம்; கரப்பாக்கு அறிந்து - (அவ்வளவுகாலமும் அவர்) மறைதலை அறிந்து.

**1127.** As my lover abides in my eyes, I will not even paint them, for he would (then) have to conceal himself.

---

௮. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காதலர் எங்நெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலையஞ்சாநின்றேம் அவர் அதனான் வெய்துறலையறிந்து,எ-று.

எப்பொழுதும் என்னெஞ்சின்க ணிருக்கின்றவரைப் பிரிந்தாரென் றுகரு மாறென்னையென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—காதலவர்—, நெஞ்சத்தார் ஆக - நெஞ்சு ளிருக்கின்றாராதலால், (உண்ணும்போது), வெய்து உண்டல் -

சூடுள்ளதாக உண்ணுதற்கு, அஞ்சுதும் - அஞ்சாநின்றேம், வேபாக்கு அறிந்து - (அவர் அதனாலே) சூடுறுதலை அறிந்து.

**1128**. As my lover is in my heart, I am afraid of eating (anything) hot, for I know it would pain him.

---

௯. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னு மிவ்வூர்.

[வரைவிடைவைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றுதற்பொருட்டுத்தோழி தலைமகனையியற்பழித்தவழி அவளியற்பட மொழிந்தது.]

(பரி - ரை.) எ-து,—என்கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து இமையேன், அவ்வளவிற்கு அவரைத் துயிலா நோய்செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், எ-று.

தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியைவேறுபடுத்து இவ்வூரென்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற்பாலையல்லை யென்பதாம்.

(தெ - ப - வுரை.)—இமைப்பின் - (என்கண்) இமைக்குமாயின், கரப்பாக்கு அறிவல் - (உள்ளிருக்கிறகாதலர்) மறைதலறிந்து இமையேன், அனைத்திற்கே - அவ்வளவுக்கே, இவ்வூர்—, ஏதிலர் என்னும் - (தூங்காது நோய்செய்தார்) அன்பிலர் என்னும்.

**1129**. I will not wink, knowing that if I did, my lover would hide himself; and for this reason, this town says, he is unloving.

---

க0. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னு மிவ்வூர்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலர் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே யுவந்துறையாநிற்பர், அதனையறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், எ-று.

உவந்துறைவரென்றதனால் அன்புடைமைகூறினாள். பிரியாமையும் அன்புமுடையாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—(காதலர்), உள்ளத்துள் - மனதில், என்றும் - எப்போதும், உவந்து - மகிழ்ந்து, உறைவர் - வாசஞ்செய்யா நிற்பர்; (அதனையறியாமல்), இவ்வூர்—, இகந்து உறைவர்- பிரிந்திராநின்றார், ஏதிலர் என்னும்-அன்பிலரென்று (அவரைச் சொல்லுகின்றது.)

**1130**. My lover dwells in my heart with perpetual delight; but the town says he is unloving and (therefore) dwells afar.

---

## ௧௧௪ - ம். அதி. நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் தோழிக்குத் தன் ஞண்டுறவுரைத்தலும், அறத்தொடுநிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் ஞண்டுறவுரைத்தலுமாம். இது, காதன்மிக்குழி நிகழ்வதாகலின், காதற்சிறப் புரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

[சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—ஆரியராய மகளிரோடு காமத்தை யனுபவித்துப் பின் னதுபெறாது துன்புற்ற வாடவர்க்குப் பண்டும் ஏமமாய்வருகின்ற மடலல்லது இனியெனக்கு வலியாவதில்லை, எ-று.

ஏமமாதல் அத்துன்பநீங்கும்வகை அவ்வனுபவத்தினைக் கொடுத்தல். வலி—ஆகுபெயர். பண்டோடவராயினார் இன்பமெய்தி வருகின்றவாறுநிற்க நின்னையதற்குத் துணையென்று கருதிக் கொன்னேமுயன்ற யான் இது பொ ழுது அல்லாமையை யறிந்தேனுகலான் இனி யானுமவ்வாற்றான் அதனை யெய் துவலென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—காமம் உழந்து - (ஆரியமகளிரோடு) கா மத்தை அனுபவித்து, (பின் அதுபெறாமல்), வருந்தினார்க்கு - துன்பமடைந்த ஆடவர்க்கு, ஏம மடல் அல்லது - (அத்துன்ப நீங்கும்வகை அவ்வனுபவத்தைக் கொடுக்கும்) காப்பாய் வருகி ன்ற மடன்மாவல்லது, [பனைமடலாலே செயப்பட்ட குதிரை என்றபடி], வலி - வலியது, இல்லை - (இனி எனக்கு) இல்லை.

**1131.** To those who after enjoyment of sexual pleasure suffer (for want of more,) there is no help so efficient as the palmyra horse.

---

உ. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

[நாணுடையறுமக்கு அது முடியாதென மடல்விலக்கலுற்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—அவ்வருத்தத்தினைப் பொறாதவுடம்புமுயிரும் அதற் கேமமாய மடன்மாவினையூரக் கருதாநின்றன, அதனை விலக்குவதாய நாணினை யகற்றி, எ-று.

வருந்தினார்க்கென மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூறா ராயினார். மடல்—ஆகுபெயர். நீக்கிநிறுத்தென்பது ஒருசொன்னீர்மைத்து. அறி வுநிறையோர்ப்புக் கடைப்பிடிமுதலிய முன்னேநீங்கவும் நாணீங்காதுநின்றது, அதுவு மிதுபொழுது நீங்கிற்றென்பான், உடம்புமுயிருமென்றான். அவைதாந் தம்முணீங்காமற்பொருட்டு மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையறிந்து கடிதிற்குறைநேர்த லேங்கி.

(தெ - ப - ரை.)—நோனா - (அவ்வருத்தத்தை) பொறாத, உடம்பும் உயிரும்—, மடல் ஏறும் - (அதற்குக்காப்பாகிய மடன்மாவை) ஏறநினையாநின்றன, நாணினை - (அதனை விலக்குவதாகிய) நாணத்தை, நீக்கி நிறுத்து - ஒழித்துவிட்டு.

**1132.** Having got rid of shame, the suffering body and soul save themselves on the palmyra horse.

---

௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

[நாணையன்றி நல்லாண்மையுமுடைமையின் முடியாதென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நாணும் மிக்கவாண்டகைமையும் யான் பண்டுடையேன்; அவை காமத்தானீங்குதலான், அக்காமமிக்கா ரேறும் மடலினை யின்றுடையேன், எ-று.

நாண்—இழிவாயினசெய்தற்கண் விலக்குவது. ஆண்மை—ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன, இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின் முடியுமென்பதாம்.

(தெ - ப - ரை.)—நாணொடு நல் ஆண்மை - நாணத்தையும் மிகுந்த ஆண்மையையும், பண்டு-முன்னே, உடையேன்—; (அவைகாமத்தால் நீங்குதலால்), காமுற்றார் ஏறு மடல் - காமமிகுந்தவரேறுமடலை, இன்று - இப்போது, உடையேன்-உடையவனாகின்றேன்.

**1133.** Modesty and manliness were once my own ; now, my own is the palmyra horse that is ridden by the lustful.

---

௪. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

[நாணுநல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனால் அவைநீங்குவனவல்லவே யென்றாட்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—யான்றன்னைக் கடத்தற்குக் கொண்டநாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை என்னிற்பிரித்துக் காமமாகிய கடியபுனல் கொண்டு போகாநின்றது, எ-று.

அதுசெய்யமாட்டாத ஏனைப்புனலினீக்குதற்குக் கடும்புனலென்றான். இப்புனற்கு அவை புணையாகா, அதனான் அவை நீங்குமென்பதாம்.

(தெ - ப - ரை.)—(நான் தன்னைக் கடத்தற்குக்கொண்ட), நாணொடு நல் ஆண்மை என்னும் புணை - நாணமும் நல்லாண்மையும் ஆகிய புணைகளை, காமம் கடும் புனல் – காமமாகிய கடியவெள்ளமானது, உய்க்கும் - (என்னிற்பிரித்து) கொண்டு போகின்றது.

**1134.** The raft of modesty and manliness, is, alas, carried off by the strong current of lust.

---

௫. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

[இவ்வாற்றுமையும் மடலும் நமக்கெவ்வாறு வந்தனவென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—மாலைப்பொழுதின்க ணனுபவிக்குந் துயரினையும் அதற்குமருந்தாயமடலினையும் முன்னறியேன், இதுபொழுது எனக்கு மாலை போலத்தொடர்ந்த சிறுவளையினையுடையாடந்தாள், எ-று.

காமம் ஏனைப்பொழுதுகளினுமுளதேனும் மாலைக்கண் மலர்தலுடைமை யின் மாலையுழக்குந் துயரென்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலின் அவ்விழி வும் அவளாற் றரப்பட்டதென்றும், அவடான் நீகூறியதே கூறுமிளமையளெ ன்பதுதோன்றத் தொடலைக்குறுந் தொடியென்றுங் கூறினான். அப்பெயர் உவ மைத்தொகைப்புறத்துப் பிறந்த வன்மொழித்தொகை. இவையவடந்தனவாக லின் நின்னுனீங்குமென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—மாலை உழக்கும் துயர் - மாலைக்காலத்து அனுபவிக்குந் துன்பத்தையும், மடலொடு - (அதற்கு மருந்தாகிய) மடன்மாவையும், (முன் அறியேன்); தொடலைக் குறுந் தொடி - மாலைபோல் தொடர்ந்த சிறிய வளையலையுடையவள், தந்தாள் - (இப்பொழுது) எனக்குத் தந்தாள்.

**1135.** She with the small garland-like bracelets has given me the palmyra horse and the sorrow that is endured at night.

---

௬. மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

[மடலூரும்பொழுது இற்றைக்குங் கழிந்ததென்றாட்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நின்பேதைகாரணமாக என்கண்கள் ஒருகாலுந் துயி றலைப்பொருந்தா; அதனால் எல்லாருந் துயிலுமிடையாமத்தும் யானிருந்து மட லூர்தலையே கருதாநிற்பேன், எ-று.

பேதையென்றது பருவம்பற்றியன்று மடமைபற்றி. இனிக்குறைமுடிப் பது நாளை யெனவேண்டா வென்பதாம்.

(தெ - ப - ரை.) — பேதைக்கு - பேதையாகிய எனக்கு, (உன் மாது காரணமாக), என்கண் - எனது கண்கள், படல் ஒல்லா - (ஒருபோதும்) தூங்குதல் பொருந்தாவாம்; (அதனால்), யாமத்தும் - (எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும், மன்ற மடல் ஊர்தல்-மடன்மாவேறலையே, உள்ளுவேன்-நினைப்பேன்.

**1136.** Mine eyes will not close in sleep on your mistress's account; even at midnight will I think of mounting the palmyra horse.

---

எ. கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

[பேதைக்கென்கண்பட லொல்லாவென்பதுபற்றி அறிவிலராய
மகளிரினும் அஃதுடையராய வாடவரன்றே ஆற்றற்பால
ரென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—கடல்போலக் கரையற்ற காமநோயினை யனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப்போல மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்தில்லை, எ-று.

பிறப்பு விசேடத்தால் அவ்வடக்கம் எனக்கில்லையாகாநின்றது, நீயஃதறி கின்றிலையென்பதாம். இத்துணையுந் தலைமகன்கூற்று; மேற்றலைமகள் கூற்று.

(தெ-ப-ரை.)—கடல் அன்ன காமம் உழந்தும்-கடல் போற் கரையற்ற காமநோயை அனுபவித்தும், மடல் ஏறா - மடன்மா வேறாமல் (பொறுத்திருக்கிற), பெண்ணின்-பெண் (பிறப்பு) போல், பெருந்தக்கது - மிகுந்த தகுதியுடையபிறப்பு, இல்-(உலகத்தில்) இல்லை,

**1137.** There is nothing so noble as the womanly nature that would not ride the palmyra horse, though plunged a sea of lust.

---

அ. நிறையரியர் மன்னளியரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

[காப்புச்சிறைமிக்குக் காமம்பெருகியவழிச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இவர்நிறையால் நாமீதூர்தற் கரியரென்றஞ்சுதல் செய்யாது மிகவுமளிக்கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது மகளிர்காமமும் அவர்மறைத்தலைக்கடந்து மன்றின்கண்ணே வெளிப்படுவதாயிருந்தது, எ-று.

என்னுதென்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப் பட்டது. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. மன்றென்பது தந்தை தன்னையரைநோக்கி உலகத்துப் பெண்பாலார் காமத்தியல்புகூறுவாள்போன்று, தன்காமம் பெருகியவாறும் இனி யறத்தொடுநிற்றல் வேண்டுமென்பதுங் குறிப்பாற் கூறியவாறாயிற்று.

(தெ - ப - ரை.) — (இவர்), நிறை அரியர் (என்னாது) - நிறையால் (நாம் மேற்கொள்ளுதற்கு) அரியரென்று அஞ்சாமலும், மன் அளியர் என்னாது - மிகவும் அளிக்கத்தக்கவரென்று இரங்காமலும், காமம் - (மகளிரது) காமமும், மறை இறந்து - (அவர்) மறைத்தலைக் கடந்து, மன்று படும் - சபையிடத்து வெளிப்படுவதாயிருந்தது.

**1138.** Even the Lust (of women) transgresses its secrecy and appears in public, forgetting that they are too chaste and liberal (to be overcome by it).

---

கூ. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—யான் முன்னடங்கி நிற்றலான் எல்லாரு மென்னை யறிதலிலர், இனியவ்வாறு நில்லா தியானே வெளிப்பட்டறிவிப்ப லென்றுகருதி என்காமம் இவ்வூர்மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது, எ-று.

மயங்குதல்-அம்பலாதல். மறுகுதல்-அலராதல். அம்பலுமலருமாயிற்று, இனியறத்தொடுநிற்றல் வேண்டுமென்பதாம். அறிவிலாரென்பதூஉம் பாடம்.

(தெ-ப-ரை.)—(நான்முன் அடங்கியிருக்கையால்), எல்லாரும்—, அறிகிலார் என்று - (என்னை) அறிந்திலர் (இனி அப்படி அடங்கியிராமல் நானேவெளிப்பட்டு அறிவிப்பேன்) என்று நினைத்து, என் காமம்—, மறுகில் - (இவ்வூர்) வீதியில், மருண்டு மறுகும்-மயங்கிச் சுழல்கின்றது, [சிலரறிந்து பேசிக்கொள்ளும் படிக்கும் பலரறிந்து தூற்றும்படிக்கும் என்றபடி].

**1139.** My lust, feeling that it is not known by all, reels confused in the streets (of this town).

---

கo. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

[செவிலிக்கறத்தொடு நின்றுவைத்து யானிற்குமாறென்னை
யென்று நகையாடிய தோழியொடு புலந்து
தன்னுள்ளே சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—யாங்கேட்குமாறுமன்றிக் கண்ணுற்காணுமாறு எம்மையறிவிலார் நகாநின்றார், அவரங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான், எ-று.

கண்ணினென்றது முன்கண்டறியாமை யுணரநின்றது. அறத்தொடுநின்றமையறியாது வரைவுமாட்சிமைப்படுகின்றிலனெனப் புலக்கின்றாளாகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். இது, நகாநின்று சேட்படுக்குந்தோழிக்குத் தலைமகன்கூறிய தாங்கால், அதிகாரத்திற் கேலாமையறிக.

(தெ-ப-ரை.)—யாம்—, கண்ணில் காண - (கேட்கும்படியுமன்றி) கண்ணுற்காணும்படி, அறிவு இல்லார்—, நகுப - (எம்மை) சிரிக்கின்றார்; (அவர் அப்படிச் செய்கின்றது), யாம்பட்ட-யாம் அடைந்த நோய்களை, தாம்படா ஆறு - தாம் அடையாமையால்.

**1140.** Even strangers laugh (at us) so as to be seen by us, for they have not suffered.

---

## ககடு-ம். அதி. அலரறிவுறுத்தல்.

அஃதாவது களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர் கூறுகின்றவலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக் கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைமகளுந் தோழியும் அவ்வலரை யவன்றனக் கறிவுறுத்த

ளுமாம். இது, நாணுத்துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

க. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

[அல்லகுறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி யலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—மடந்தையோ டெம்மிடைநட்பு ஊரின்க ணலரா யெழுதலான் அவளைப்பெறாது வருந்துமென் னரியவுயிர் பெற்றதுபோன்று நிலைபெறும், அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யானேயறிவதல்லது கூறுகின் றபலரு மறியார், எ-று.

அல்லகுறிப்பட்டுத் தலைமகளை யெய்தப்பெறாத வருத்தமெல்லாந்தோ ன்ற அரியவுயிரென்றும், அவ்வருமையாளை எளியளாக்கி யெடுக்கின்றமையின், அஃதவ்வாருயிர்க்குப் பற்றுக் கோடாகாநின்ற தென்பான் அலரொழவாருயிர் நிற்குமென்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலாரறியிற் றூற்றுதொழிவர் ஒழியவே ஆருயிர்போமாகலான் அவரறியாதொழிகின்றது தெய்வத்தானெ ன்றுங் கூறினன். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

(தெ - ப - ரை.)—(உன்மாதுக்கும் எமக்கும் உண்டாகிய நட்பு), அலர் எழ - (இவ்வூரில்) அலராயெழுதலால், ஆர் உயிர்- (அவளைப்பெறாது வருந்துகிற என்) அரிய வுயிரானது, நிற்கும்- (அவளைப் பெற்றதுபோல்) நிலைபெறும்; அதனை - அந்நிலைபேற் றை, பாக்கியத்தால்-நல்லூழால், (நானேஅறிவதல்லது), பலர் - (தூற்றுகின்ற) பலரும், அறியார் - அறியமாட்டார்.

**1141.** My precious life is saved by the rise of rumour, and this, to my good luck no others are aware of.

---

உ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—மலர்போலுங் கண்ணையுடையாளது எய்தற் கருமை யறியாது இவ்வூர் அவளை யெளியளாக்கி அவளோ டலர்கூறலை எமக்குபகரி த்தது, எ-று.

அருமை அல்ல குறிப்பாட்டானும் இடையீடுகளானும் ஆயது. ஈந்ததெ ன்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின். அலர் கூறுவாரை அவர்செய்த வுத விபற்றி இவ்வூரென்றான்.

(தெ - ப - ரை.)—மலர் அன்ன கண்ணாள் - மலர்போலுங் கண்களை யுடையவளது, அருமை - (அடைதற்கு) அருமையை அறியாது, இவ்வூர் - இந்தவூர், (அவளை எளியவளாக்கி), அலர்- (அவளோடு) பழிகூறலை, எமக்கு—, ஈந்தது - உபகரித்தது.

**1142.** Not knowing the value of her whose eyes are like flowers this town has got up a rumour about me.

---

கூ. உறுஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எங்கட்குக் கூட்டமுண்மை இவ்வூரறிதலான் விளைந் தவலர் எனக்குறுவ தொன்றன்றோ, அதுகேட்ட வென்மனம் அக்கூட்டத் தைப் பெறுதிருந்தே பெற்றாற்போலு நீர்மையை யுடைத்தாகலான், எ-று.

பெற்றன்னநீர்மை—பெற்றவழியுளதா மின்பம்போலு மின்பமுடைமை. நீர்த்தென்பதற்கேற்ற மனமென்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.

(தெ-ப-ரை.)—ஊர் அறிந்த கௌவை-(எங்களுக்குப்புண ர்ச்சி உண்டாயிருக்கையை) இவ்வூர் அறிதலால் விளைந்த அல ரானது, உறுஅதோ -(எனக்கு) உறுவதொன்றன்றோ, (அதுகே ட்ட என்மனமானது), பெறுஅது - (புணர்ச்சியை) பெறுதிருந் தே, பெற்றது அன்ன நீர்த்து - பெற்றதுபோலுங் குணமுடைத் து, (ஆகலால்).

**1143.** Will I not get a rumour that is known to the (whole) town? For what I have not got is as if I had got it (already).

---

ச. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—என்காமம் இவ்வூரெடுக்கின்ற அலரானே யலர்தலை யுடைத்தாயிற்று அவ்வலரில்லையாயின், தன்னியல்பிழந்து சுருங்கும், எ-று.

அலர்தல்—மேன்மேன்மிகுதல். செவ்வையுடையதனைச் செவ்விதென்றாற் போலக் கவ்வையுடையதனைக் கவ்விதென்றார். இயல்பு—இன்பம்பயத்தல். தவ்வென்னுமென்பது குறிப்புமொழி ; "நால்கால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" என்புழியுமது.

(தெ - ப - ரை.)—காமம் - (என்) காமம், கவ்வையால் - (இவ்வூர்) எடுக்கின்ற தூறுல், கவ்விது - மேலுமேலும் மிகு தலை யுடைத்தாயிற்று; அது இன்றேல் - அவ்வலர் இல்லையா யின், தன்மையிழந்து - இன்பந் தருதலிழந்து, தவ்வென்னும் - சுருங்கிப்போகும்.

**1144.** Rumour increases the violence of my passion; without it, it would grow weak and waste away.

---

ரு. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங் கள்ளுண்டல் இனிதாமாறுபோல எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது, எ-று.

வேட்கப் பட்டற்றுவென்பது வேட்டற்றுவெனநின்றது. வேட்கைமிகு தியால் அலரும் இன்பஞ் செய்யாநின்ற தென்பதாம்.

(தெ-ப-ஸா.)—(கள்ளுண்பார்க்கு), களித்தொறும் - களிக்குந்தோறும், கள்ளுண்டல்—, வேட்டற்று - இனிதாம் விதம் போல், (எனக்கு), காமம்—,வெளிப்படுந்தோறும் - மிகுந்தோறும், இனிது - இனிதாகாநின்றது.

**1145.** As drinking liquor is delightful (to one) whenever one is in mirth, so is lust delightful to me whenever it is the subject of rumour.

---

சு. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

[இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனையெய்தப்பெறாத தலைமகள் அவன்சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.]

(பரி - ஸா.) எ-து,—யான் காதலனைக் கண்ணுறப்பெற்றது ஒருநான்றே, அதனினுயவலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்புகொண்ட வலர்போன்று உலகெங்கும் பரந்தது, எ-று.

காரியத்தைக் காரணமாக வுபசரித்துப் பாம்புகொண்டற்றென்றாள். இருவழியும் மன்னும் உம்மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது, வரைந்துகோடல் வேண்டுமென்பதாம்.

(தெ - ப - ஸா.)—கண்டது - (தலைவனைநான்) காணப்பெற்றது, ஒரு நாள் - ஒருநாளேயாகும்; அலர் - (அதனாலுண்டாகிய) பழிதூற்றுதலானது, (அவ்வளவினதன்றி), திங்களை பாம்பு கொண்டற்று - சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல் உலகெங்கும் பரந்தது.

**1146.** It was but a single day that I looked on (my lover); but the rumour thereof has spread like the seizure of the moon by the serpent.

---

எ. ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்.

[வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்ததோழி ஊரவரலரும் அன்னைசொல்லுநோக்கி யாற்றல் வேண்டுமெனச் சொல்லெடுப்பியவழி அவள்சொல்லியது.]

(பரி-ஸா ) எ-து,—இக்காமநோயாகிய பயிர் இவ்வூரின் மகளிரொடுக்கின்ற அலர் எருவாக அதுகேட்டு அன்னை வெகுண்டுசொல்லுகின்ற வெஞ்சொல் நீராக, வளராநின்றது, எ-று.

ஊரவவென்பது தொழிலான் ஆணொழித்து நின்றது. ஏகதேசவுருவகம். சுருங்குதற் கேதுவாவனதாமே விரிதற்கேதுவாகா நின்றனவென்பதாம். வரைவானுதல் பயன்.

(தெ - ப - ரை.)—இந்நோய் - இக்காமநோயாகிய (பயிர்), ஊரவர் கௌவை - இவ்வூரிலுள்ள (மகளிர் எடுக்கின்ற) தூற்றனது, எரு ஆக - எருவாகவும், அன்னை சொல் - (அதுகேட்டுக் கோபித்து) தாய்சொல்லுகின்ற கடுஞ்சொல்லானது, நீர் ஆக—, நீளும் - வளராநின்றது.

**1147.** This malady (of lust) is manured by the talk of women and watered by the (harsh) words of my mother.

---

அ. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—ஏதிலாரெடுக்கின்ற அலரால் நாங் காமத்தை யவித்தும் மென்று கருதுதல் நெய்யாலெரியை யவித்துமென்று கருதுதலோ டொக்கும், எ-று.

மூன்றனுருபுகள் கருவிக்கண்வந்தன. வளர்தற் காரணமாய அலரால் அவித்தல் கூடாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—கௌவையால் - (அயலவர் எடுக்கின்ற) அலராலுண்டாகின்ற, காமம் - காமத்தை, நுதுப்பேம் எனல்-அவிப்பேமென்று நினைத்தல், நெய்யால்—, எரி - நெருப்பை, நுதுப்பேம் என்றற்று - அவிப்பே மென்று நினைத்தலோ டொக்கும்.

**1148.** To say that one could extinguish passion by rumour is like extinguishing fire with ghee.

---

கூ. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

[வரைவிடைவைத்துப் பிரிவின்க ணாற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தா னாதலறிந்து அலரஞ்சி யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—தம்மை யெதிர்ப்பட்டஞான்று நின்னிற்பிரியேன் அஞ்சலோம் பென்றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும்வகை நம்மைத் துறந்தபின் நாமேதிலார் கூறுமலருக்கு நாணக்கூடுமோ கூடாது, எ-று.

நாணவென்னும் வினையெச்சம் ஒல்வதென்னுந் தொழிற்பெயருள் ஒல்லுதற் றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணுநிலைமையமாய யாம் நாணுதல் யாண்டையது தென்பதாம்.

(தெ-ப-ரை.) — (தம்மைக்கண்டநாளில்), அஞ்சல் ஓம்பு என்றார் - (உன்னைவிட்டு நீங்கேன்) அஞ்சுதலொழியென்றவரே, பலர் நாண - (இன்றுகண்டவர்) பலரும் நாணும்வகை, நீத்தக் கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின், அலர் - (அயலவர் தூற்றுகிற) தூறுக்கு, நாண ஒல்வதோ - (நாம்) நாணக்கூடுமோ.

**1149.** When the departure of him who said "fear not" has put me to shame before others, why need I be ashamed of scandal.

---

கய. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.

*தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழி தலைமகட்குச்சொல்
லுவாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு
நயப்பச் சொல்லியது.]*

(பரி - ரை.) எ - து,—உடன்போகற் கேதுவாகலேனுக்கி யாம்பண்டே விரும்புவதாய வலரை இவ்வூர்தானே யெடாநின்றது ; இனிக் காதலர்தாமும் யாம்வேண்டியக்கால் அதனை யினிதினேர்வர், அதனுல் இவ்வலர் நமக்கு நன்ருய்வந்தது, எ-று.

எச்சவும்மை விகாரத்தாற்றெக்கது. நங்கட்காதலுடைமையின் மருவொன்பது தோன்றக் காதலரொன்றுள். இவ்விருபதுபாட்டும் புணர்தனிமித்தம்.

(தெ - ப - ரை.)—யாம்—, வேண்டுங் கௌவை - (உடன்போதற்குக் காரணமாதல்பற்றி முன்னமே) இச்சிப்பதாகிய அலரை, இவ்வூர்—, எடுக்கும் - (தானே) எடுக்கின்றது; காதலர்- (இனி) தலைவர், வேண்டின் - (நாம்) வேண்டினுல், தாம் - தாமும், நல்குவர் - அதற்கு உடன்படுவர், (ஆதலால் இவ்வலர் நமக்கு நன்ருய் வந்தது).

**1150.** The rumour I desire is raised by the town (itself); and my lover would if desired consent (to my following him).

களவியல் முற்றிற்று.

---

# கற்பியல்.

இனிக் கற்புப் பதினெட் டதிகாரத்தாற் கூறுவான்றெடங்கி, முதற்கட் பிரிவாற்றுமை கூறுகின்றுர்.

## ககசு - ம். அதி. பிரிவாற்றுமை.

அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொரு ளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்துசெல்லும் செல்லுஞான்று அப்பிரிவினை அவளாற்றுளாந்தன்மை. அஃது ஈண்டுப்பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவ டனக்குத் தலைமகடானே அவன் குறிப்பானுணர்ந்துகூறலும், பிரிவுணர்த்தியவழிக்கூறலும், தலைமகன்பிரிந்தழி ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலைமகள் மறுத்துக்கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.

க. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

[பிரிந்து கடிதின் வருவலென்ற தலைமகற்குத்
தோழி சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நீ யெம்மைப் பிரியாமை யுண்டாயின் அதனை யெனக்குச் சொல், அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்துவருதல் சொல்வையாயின் அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல், எ-று.

தலைமகளையொழித்து எனக்கென்றாள், தானவளென்னும் வேற்றுமையின்மையின். அக்காலமெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காணவல்லளல்லள், பிரிந்தபொழுதே யிறந்துபடுமென்பதாம். அழுங்குவித்தல் பயன். இதனைத் தலைமகன் கூற்றாக்கி யுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—செல்லாமை உண்டேல் - (நீ எம்மை) பிரியாமை உண்டாயின், எனக்கு—, உரை - (அதனை) சொல்லு; மற்று - அதுநீங்க, நின் வல் வரவு - (பிரிந்துபோய்) நின் விரைந்து வருதலை, வாழ்வார்க்கு - (அப்பொழுது) உயிர்வாழ்வார்க்கு, உரை - சொல்லு.

**1151.** If it is not departure, tell me; but if it is your speedy return, tell it to those who would be alive then.

---

௨. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

[பிரிவு தலைமகன் குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச்
சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—தழையுங் கண்ணியுங்கொண்டு பின்னின்ற ஞான்று அவர்நோக்கு மாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கின்ப முடைத்தாயிருக்கும்; இன்று அப்புணர்ச்சிதான் நிகழா நிற்கவும் அது பிரிவொன்றஞ்சு மச்சத்தினை யுடைத்தாயிற்று; அவரன்பி னிலைமை யிது, எ-று.

பார்வலென்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. புன்கணென்னுங் காரியப்பெயர் காரணத்தின்மேல தாயிற்று. அவ்வச்சத்தினை யுடைத்தாதலாவது "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக்—கள்ளினு மகிழ்செய்யு மெனவுரைத்து மமையாரொன்—ளொள்ளிழை திருத்தும்" பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன்.

(தெ-ப-ரை.)—(தழையு மாலையுங் கொண்டு பின்னின்ற நாளில்), அவர் பார்வல் - அவரது பார்வைமாத்திரமும், (புணர்ச்சி குறித்தமையால்), இன்கண் உடைத்து - (நமக்கு) இன்பமுடைத்தா யிருந்தது; (இன்று அப்புணர்ச்சிதான் நடந்துகொண்டிருக்கவும்,) புணர்வு - அப்புணர்ச்சி, பிரிவு அஞ்சும் - பிரிவொன்றஞ்சுகிற, புன்கண் - அச்சத்தினை, உடைத்து - உடைத்தாயிற்று, (அவரன்பி னிலைமை இது.)

**1152.** His very look was once pleasing; but (now) even intercourse is painful through fear of separation.

---

௩. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரி வாற்ருமையும் அறிதலுடையராய காதலர்கண்ணும், ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான், அவர் சொல்லும் தலையளியும் பற்றி நம்மாட் டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது, எ-று.

அரோ—அசைநிலை. உம்மை உயர்வு சிறப்பின்கண் வந்தது.

(தெ-ப-ரை.) — அறிவு உடையார்கண்ணும் - (பிரியேனென்ற தஞ்சொல்லையும், நம்பிரிவு பொருமையையும்) அறிதலுடையவராகிய காதலரிடத்தும், ஓர் இடத்து - ஒரோவழி, பிரிவு—, உண்மையான் - உண்டாதலால், தேற்றம் - (அவர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மேல் அன்புடையரென்று தெளியுந்) தெளிவு, அரிது - அரிதாயிருந்தது.

**1153.** As even the lover who understands (everything) may at times depart, confidence is hardly possible.

---

௪. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் தெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—எதிர்ப்பட்ட ஞான்றே தலையளிசெய்து நின்னிற் பிரியேன் அஞ்சலென்றவர் தாமே பின் பிரிவராயின், அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ, எ-று.

தேறியாரென்பது தன்னைப் பிறர்போற்கூறல். சொல்லுஞ்செயலு மொவ்வாமைக் குற்றம் அவர்க்கெய்தும், அஃதெய்தாவகை யழுங்குவி யென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—அளித்து - (எதிர்ப்பட்டநாளே) தலையளி செய்து, அஞ்சல் என்றவர் - (உன்னைவிட்டுப் பிரியேன்) அஞ்சாதிரு வென்றவர் (தாமே), நீப்பின் - (பின்னே) பிரிவாராயின், (அவர்க்கல்லாமல்), தெளித்த சொல் - (அவரால்) தெளிவிக்கப்பட்ட சொல்லை, தேறியார்க்கு - (மெய்யென்று) தெளிந்தவர்க்கு, தவறு - குற்றம், உண்டோ - உளதோ, [இல்லையென்றபடி].

**1154.** If he who bestowed his love and said "fear not" should depart, will it be the fault of those who believed in (his) assuring words?

---

௫. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயின், அதனையாளுதற் கமைந்தாருடைய செலவினை அழுங்குவிப்பாயாக; அழுங்குவிப்பது

ரின்றி அவர் செல்வராயின் அவராலாளப்பட்ட வுயிருஞ் செல்லும், சென்றாற் பின்னவரைக் கூடுதல் எனக்கரிதாம், எ-று.

ஆளுதற்கமைதல் இறைவராதற்குத் தெய்வத்தா லேற்புடையராதல். மற்று—வினைமாற்றின்கண் வந்தது.

(தெ - ப - ரை.) — ஓம்பின் - (என்னுயிரைச் செல்லாமல்) காப்பாற்றுவையாயின், அமைந்தார்-(அதனை ஆளுதற்கு) அமைந்தவரது, பிரிவு - செலவை, ஓம்பல் - அழுங்குவிப்பாயாக; மற்று அவர் நீங்கின் - அழுங்குவிப்பாரில்லாமல், அவர் செல்வாராயின் - (அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லுமாதலால்), புணர்வு - (பின்பு அவரை) கூடுதல், அரிது - (எனக்கு) அரிதாம்.

**1155.** If you would save (my life), delay the departure of my destined (husband); for if he departs, intercourse will become impossible.

---

சு. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

[தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்துசொல்லிய தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நங்கவவுக்கடுமை யறிந்த தலைவர்தாமே நம்முனின்று தம்பிரிவினை யுணர்த்தும் வன்கண்மை யுடையராயின், அத்தன்மையார் பின்பு நம்மாற்றாமை யறிந்துவந்து தலையளி செய்வரென்றிருக்கு மாசை விடப்படும், எ-று.

அருமை—பயன்படுத லில்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவெண்ணுதலும் உணர்த்தலும் வல்லராயினர் பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டைய தென்பதாம். அழுங்குவித்தல் பயன்.

(தெ - ப - ரை.)—அவர் - (நமது பிரிவுபொறாமையறிந்த) அத்தலைவர்தாமே, (நம்முன்னின்றும்), பிரிவு உரைக்கும்-(தம்) பிரிவை அறிவிக்கும், வன்கண்ணர் ஆயின் - அருளில்லாமையை யுடையராயின், (அத்தன்மையரானபின்பு), நல்குவர் என்னும் நசை - (நம்பொறாமையை அறிந்துவந்து) தலையளிசெய்வாரென்னுமாசை, அரிது - விடப்படும்.

**1156.** If he is so cruel as to mention his departure (to me), the hope that he would bestow (his love) must be given up.

---

எ. துறைவன் றுறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—துறைவன் என்னைப் பிரியலுற்றமையை அவனுணர்த்தாமற் றாமே யுணர்ந்து என் முன்கையி னிறையினின்றுங் கழலாநின்ற வளை

கள் எனக்கறிவியாவோ, அவனுணர்த்த வுணர்ந்துவந்து நீயறிவித்தல் வேண்டுமோ, எ-று.

முன்னே நிகழ்ந்தமையிற் றுறந்தமை யென்றும், கேட்ட துணையான் மெலிந்து ஆற்ருமையின் இறவாநின்ற வென்றுங் கூறினள். அழுங்குவித்து வந்து கூறற்பாலை யல்லையாய நீயும் இவ்வினைகள் செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு.

(தெ-ப-ை.)—துறைவன்—, துறந்தமை - (என்னை) பிரியலுற்றமையை, (அவன் அறிவிக்காமல் தாமே அறிந்து), முன்கை இறை - (என்) முன்கை இறையினின்றும், இறவாநின்ற வளை - கழலாநின்ற வளையல்கள், தூற்ருகொல் - (எனக்கு) அறிவியாவோ, [அவன் அறிவிக்க அறிந்துவந்து நீ அறிவித்தல்வேண்டுமோ.]

**1157.** Do not the rings that begin to slide down my fingers forebode the separation of my lord.

அ. இன்ன தினனில்லூர் வாழ்த லதனினு
மின்ன தினியார்ப் பிரிவு.

[இதுவுமது.]

(பரி-ை.) எ-து,—மகளிர்க்குத் தங்குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தலின்னது ; அதன்மேலுந் தங்காதலனைப் பிரிதல் அதனினுமின்னது, எ-று.

தலைவன் செலவினை யழுங்குவித்து வாராது உடன்பட்டு வந்தமைபற்றிப் புலக்கின்ருளாகலின், இனனில்லூ ரென்ருள். உலகியல் கூறுவாள் போன்று தனக்கவ்விரண்டு முண்மை கூறியவாறு.

(தெ-ப-ை.)—இனன் இல் ஊர் - (மகளிர்க்குத் தங்குறிப்பறிகிற) தோழியரில்லாத வேற்றூரினிடத்து, வாழ்தல்—, இன்னது - துன்பஞ்செய்வதாகும்; (அதன்மேலும்), இனியார் பிரிவு - (தங்) காதலனைப்பிரிதல், அதனினும் - அவ்வாழ்தலைக் காட்டிலும், இன்னது - துன்பஞ்செய்வதாகும்.

**1158.** Painful is it to live in a friendless town; but far more painful is it to part from one's lover.

கூ. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

[காமந்தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான் நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ை.) எ-து,—தீத் தன்னைத்தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது காமமாகிய நோய்போலத் தன்னையகன்ருற் றப்பாது சுடுதலை வற்ருே, மாட்டாது, எ-று.

சுடுமாயினென்பது மந்திரமருந்துகளாற் றம்பிக்கப்படாதாயி னென்றவாறு. காமத்திற் கதுவுமில்லை யென்பாள் வாளா சுடலென்ருள். அகறல்-நீக

ராமை. சுடலென்பது மூன்றுங் கூட்டப்பட்டது. தீயினுங் கொடியதனை யாற்றுமாறென்னை யென்பதாம்.

(தெ-ப-ரை.) — தீ - நெருப்பு, தொடின் - (தன்னை) தொட்டால், சுடின் (சுடல்) அல்லது-சுட்டாற் சுடலல்லது, காமநோய் போல—, விடின் - (தன்னை) விட்டுநீங்கினால், சுடல் ஆற்றுமோ - (தப்பாது) சுடல்வல்லதோ.

**1159.** **Fire burns when touched; but, like the sickness of love, can it also burn when removed?**

---

௧௦. அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

[தலைவியர்பலரும் பிரிவாற்றியிருப்பர் அது நீசெய்கின்றிலை
யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கி பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் பிரிந்தால் அப்பிரிவு தன்னையுமாற்றிப் பின்னுமிருந்த உயிர்வாழு மகளிர் உலகத்துப் பலர், எ-று.

பண்டையிற் சிறப்பத் தலையளிபெற் றின்புறுகின்ற வெல்லைக்கண்ணே அஃதிழந்து துன்புறுதற் குடம்படுதல் அரியதொன்றாகலின் அரியதனைச் செய்தென்றும், செல்லுந் தேயத்து அவர்க்கியாது நிகழுமென்றும் வருந்துனையும் யாமாற்றி யிருக்குமா றென்னென்றும் அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்து மென்றும், இவ்வாற்றா னிகழுங்கவலை மனத்து நீங்காதாகலான் அல்லனோய் நீக்கியென்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழுங் காமவேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்றலென்றிவை முதலாக வந்து அதனை வளர்ப்பனவும் ஆற்றலரியவாகலிற் பிரிவாற்றி யென்றும், தங்காதலரை யின்றியமையா மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர் வாழ்வார் ஒருவருமில்லை யென்பது குறிப்பாற்றோன்றப் பின்னிருந்து வாழ்வார் பலரென்றுங் கூறினாள். அரிதென்பது வினைக்குறிப்புப் பெயர். பிரிவின்க ணிகழ்வனவற்றைப் பிரிவென்றாள். செய்து, நீக்கி, ஆற்றியென்பன ஓசை வகையான் அவ்வவற்ற தருமையுணர நின்றன. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. யானுமிறந்துபடுவ லென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—(நீசொல்லுகின்றது ஒக்கும்); அரிது ஆற்றி-(பிரிவை அறிவித்த விடத்து) அதற்கு உடம்பட்டு, அல்லல் நோய்-(பிரியும்போது உண்டாகிற) துன்பநோயையும், நீக்கி—, பிரிவு ஆற்றி - (பிரிந்தால்) அப்பிரிவையும் பொறுத்து, பின் இருந்து - பின்னும் இருந்து, வாழ்வார்-உயிர்வாழுமகளிர், பலர்-(உலகத்தில்) பலர்.

**1160.** **(As if there were) many indeed that can consent to the impossible, kill their pain, endure separation and yet continue to live afterwards.**

---

## கசள - ம். அதி. படர்மெலிந்திரங்கல்.

அது படரான் மெலிந்திரங்கலென விரியும். அஃதாவது பிரிவாற்ருளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின் அந்நினைவான் மெலிந்திரங்குதல். அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.

க. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

[காமநோயை வெளிப்படுத்தல் நின்னுக் கேலாதென்ற
தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இந்நோயைப் பிறரறிதனுணி யான் மறையா நின்றேன்; நிற்பவும், இஃது அந்நாண்வரை நில்லாது நீர்வேண்டுமென் றிறைப்பவர்க்கு ஊற்று நீர் மிகுமாறுபோன் மிகாநின்றது, எ-று.

அம்மறைத்தலாற் பயனென் னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வர்க் கொத்தனென்யான்" என் புழிப்போல ஈண்டுச் சுட்டுப்பெயரீறு திரிந்து நின்றது. இஃதோர் நோயையென்று பாடமோது வாருமுளர்; அது பாட மன்மையறிக. இனி அதற்கடுத்தது நீசெயல் வேண்டுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—யான்—, நோயை - இந்நோயை, மறைப்பேன் - (பிறரறிதற்குநாணி) மறையாநின்றேன்; (நிற்கவும்), இஃதோ - இந்நோயோ, இறைப்பவர்க்கு - (நீர்வேண்டுமென்று) இறைப்போர்க்கு, ஊற்றுநீர்போல—, மிகும் - பெருகும்.

**1161.** I would hide this pain from others; but it (only) swells like a spring to those who drain it.

---

உ. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

[ஈண்டையா ரறியாமன் மறைத்தல் ஆண்டையா ரறியத்தூது
விடுதலென்னு மிரண்டனுள் ஒன்றுசெயல் வேண்டு
மென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இந்நோயை ஈண்டையா ரறியாமன் மறைத்தலும் வல்லேனுகின்றிலேன்; ஆகாக்கால், நோய் செய்தவர்க் குரைக்கவெனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது, இனியென் செய்கோ, எ-று.

ஒரு காலைக்கொருகான் மிகுதலிற் கரத்தலு மாற்றே னென்றும், சேயிடைச் சென்றவர்க்கு இது சொல்லித் தூது விட்டால் இன்னு மிருந்தே னென்பது பயக்குமென்னுங் கருத்தால் நாணுத்தருமென்றுங் கூறினுள்.

(தெ - ப - ரை.)—இந்நோயை - இக்காமநோயை, கரத்தலும் ஆற்றேன் - (இவ்விடத்தோர் அறியாமல்) மறைத்தலும் வல்லேனுகின்றிலேன்; (ஆகாக்கால்), நோய் செய்தார்க்கு—,

(சொல்லென்மையாயின்), உரைத்தலும் - சொல்லலும், நாணு தரும் – (எனக்கு) நாணந்தரும் (இனி என்செய்வேன்).

**1162.** I cannot conceal this pain, nor can I relate it without shame to him who has caused it.

---

ங. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காமநோயும் அதனைச் செய்தவர்க்கு உரைக்கலொல்லாத நாணும் தம்மைப் பொறாத என்னுடம்பின்கண்ணே உயிர் காத்தண்டாக அதனிருதலையினுந் தூங்காநின்றன, எ-று.

பொறாமை மெலிவானாயது. தூங்குமென்பது ஒன்றி னொன்று மிகாது இரண்டும் ஒத்தசீர வென்பது தோன்ற நின்றது. தூது விடவும் ஒழியவும் பண்ணுவனவாய காம நாண்கள் தம்முளொத்து உயிரினை யிறுவியா நின்றன, யான் அவற்று ளொன்றின்க ணிற்கமாட்டாமையின் இஃதிற்றேவிடு மென்பதாம்.

(தெ - ப - ரை.)—காமமும் - காமநோயும், நாணும் - (அது செய்தவர்க்கு) சொல்லவொட்டாத நாணும், என் நோனாஉடம்பின்அகத்து - (தம்மைப்) பொறாத என்னுடம்பினிடத்து, உயிர்—, காவா - காவடித்தண்டாக, தூங்கும் - (அதனிருதலையிலும்) தொங்குகின்றன.

**1163.** (Both) lust and shame, with my soul for their shoulder pole balance themselves on a body that cannot bear them.

---

ச. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

[தலைவியர் காமக்கடற்படார் படினும் அதனை ஏற்றபுணையானீந்திக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—யாவர்க்கும் உளவாய் வருகின்ற இவ்விரண்டனுள்ளும் எனக்குண்டாகின்றது காமக்கடலே; அதனை நீந்தும் அரணாகிய புணையில்லை, எ-று.

இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலை யென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—(யாவர்க்கும் உண்டாய் வருகின்ற இரண்டினுள்ளும்), காமக்கடலே—, உண்டு - (எனக்கு) உண்டாகின்றது; அது நீந்தும் - அக்கடலைக்கடக்கும், ஏமம் புணை - காப்பாகியபுணை, இல் - (எனக்கு) இல்லை.

**1164.** There is indeed a flood of lust; but there is no raft of safety to cross it with.

---

௫. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

[அதுவிடாமைநோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—இன்பஞ் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்பவர வினைச் செய்ய வல்லவர் துன்பஞ் செய்தற்குரிய பகைமைக்கண் என்செய்வர் கொல்லோ, எ-று.

துப்புப் பகையுமாதல் "துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய—னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" என்பதனானு மறிக. அப்பகைமை ஈண்டுக் காணாமையின் அவர் செய்வது மறியப்பெற்றிலே மென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலை யெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கியும் பிறனாக்கியுங் கூறினாள்.

(தெ-ப-ரை.)—நட்பினுள் - (இன்பஞ் செய்தற்கு உரிய) நட்பினிடத்து, துயர் வரவு – துன்பத்தின் வரவினை, ஆற்றுபவர் - செய்யவல்லவர், துப்பின் - (துன்பஞ்செய்தற்கு உரிய) பகைமையிடத்து, எவன் ஆவர் கொல் - என்னசெய்வரோ.

**1165**. **He who can produce sorrow from friendship, what can he not bring forth out of enmity?**

---

௬. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

[காமத்தானின்ப முற்றார்க்கு அதனினுய துன்பமும் வருமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—காமம் புணர்வா லின்பஞ்செய்யுங்கால், அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம்; இனி அதுதானே பிரிவாற் றுன்பஞ்செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம், எ-று.

மற்று—வினைமாற்றின்கண் வந்தது. அடுங்காலென வந்தமையின், மறுதலை யெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்றவின்பத்தோ டொத்தவிரின் ஆற்றலாம், இஃததன தளவன்றென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—காமம்—, (புணர்ச்சியால் இன்பஞ்செய்யும் போது), இன்பம் - அவ்வின்பம், கடல் - கடல்போற் (பெரிதாம்); மற்று அஃது-இனி அக்காமந்தானே, அடும் கால் - (பிரிவினாலே) துன்பஞ் செய்யும்போது, துன்பம் - அத்துன்பம், அதனிற்பெரிது - அக்கடலினும் பெரிதாம்.

**1166**. **The pleasure of lust is (as great as) the sea; but the pain of lust is far greater.**

---

௭. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

[காமக்கடல் நிறை புணையாக நீந்தப்படு மென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—காமமாகிய கடலை நீந்தாதே னல்லேன், நீந்தியும் அதற்குக் கரைகாண்கின்றிலேன், அக்காணுமைக் காலந்தான் எல்லாருந் துயிலும் அரையிருளாயிற்று, அவ்வரை யிருட்கண்ணும் அதற்கொரு துணையின்றி யானே யாயினேன், ஆயும் இறந்துபட்டுய்ந்து போகா துளேனுகாகின்றேன், ஈதொரு தீவினைப் பயனிருந்தவாறென், எ-று.

கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது. உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. யானே யாயினே னென்பது நீதுணையாயிற்றிலை யென்னுங் குறிப்பிற்று.

(தெ-ப-ரை.)—காமம் கடும் புனல்-காமமாகியகடலை, நீந்தி(யும்)—, கரை காணேன் - (அதற்கு) கரைகாண்கின்றிலேன்; (அக்காணுமைக் காலந்தான் எல்லாரும் நித்திரைசெய்யும் பாதியிரவாயிற்று.); யாமத்தும் - அப்பாதியிரவிலும், யானே - (அதற்கு ஒருதுணையில்லாமல்) யானேயாயினேன்; (ஆகியும்), உளேன் - இறவாதிருக்கின்றேன் ; (ஈதொரு தீவினைப்பயன் இருந்தவிதம் என்).

**1167.** I have swam across the terrible flood of lust, but have not seen its shore; even at midnight I am alone; still I live.

---

அ. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
  வென்னல்ல தில்லை துணை.

[இரவின் கொடுமைசொல்லி யிரங்கியது.]

(பரி - ரை.) எ-து,—இவ்விரா அளித்தாயிருந்தது ; உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களை யெல்லாந் தானே துயிலப்பண்ணுதலான் என்னையல்லது வேறுதுணை உடைத்தாயிற்றில்லை, எ-று.

துயிற்றியெனத் திரிந்துநின்ற வினையெச்சம் அவாய் நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோ டொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடு மெல்லையேனுய என்னையே துணையாகக் கோடலின் அறிவின்றென்பதுபற்றி அளித்தென்றாள் ; இகழ்ச்சிக்குறிப்பு.

(தெ-ப-ரை.)—இரா - இவ்விரவு, அளித்து - அன்புடைத்தாயிருந்தது, மன் உயிர் எல்லாம் - (உலகத்தில்) நிலைபெற்ற உயிர்களையெல்லாம், துயிற்றி - (தானே) தூங்கச்செய்தலால், என் அல்லது - என்னையல்லது, துணை - (வேறு) துணையை, இல்லை - (உடைத்தாயிற்) றில்லை.

**1168.** The night which graciously lulls to sleep all living creatures, has me alone for her companion.

---

௯. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
  ணெடிய கழியு மிரா.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலரோடு நாமின்புற்ற முன்னாள்களிற் குறிய வாய் அவர் பிரிவாற்றே மாகின்ற இந்நாள்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள் அக்கொடியாரது கொடுமைக்குமேலே தாங்கொடுமை செய்யாநின் றன, எ-று.

தன்னாற்றாமை கருதாது பிரிதலின், கொடியாரென்றாள். கொடுமை-கடி தின் வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும் நீட்டிப்பானு முளதாய ஆற்றா மைக்குக் கண்ணோடாமை மேலும் பண்டையி னெடியவாய்க் கொடியவாகா நின்றன வென்பதாம்.

(தெ-ப - ரை.)—(காதலரோடு நாம் இன்புற்ற நாள்களிலே குறியவையாயிருந்து), இந்நாள் - (அவர்பிரிவைப் பொறுக்கமா ட்டாத) இந்நாள்களிலே, நெடிய - நெடியவையாய், கழியும் - செல்கின்ற, இரா - இரவுகள், கொடியார் - அக்கொடியவரது, கொடுமையின் - கொடுமைக்குமேலே, தாம்—, கொடிய - கொ டுமைசெய்யாநின்றன.

**1169.** The long nights of these days are far more cruel than the heartless one who is torturing me.

---

கo. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

[நின்கண்கள் பேரழ கழிக்கின்றன வாகலின் அழற்பாலை யல்லை யென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ - து,—மனம்போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற் செல்ல வல்லனவாயின், என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா, எ-று.

அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்துதலே யுள்ளதென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. மனத்திற்குச் செலவாவது நினைவே யாகலின் உள்ளம் போன்றென்றும், மெய்க்கு நடந்து செல்லவேண்டு தலிற் கண்கள் அதனொடுசென்று காதலாரைக் காண்டல் கூடாதென்னுங் கரு த்தாற் செல்கிற்பினென்றுங் கூறினாள். இதனான் வருகின்ற வதிகாரமுந் தோ ற்றுவாய் செய்யப்பட்டது.

(தெ - ப - ரை.)—உள்ளம்போன்று - மனம்போன்று, உள் வழி - (காதலர்) இருக்கிற நாட்டிற்கு, செல்கிற்பின் - (கடிதிலே) செல்லவல்லனவாயின், என்கண் - எனது கண்கள், வெள்ளநீர்- வெள்ளமாகிய (தம்) நீரை, நீந்தல - நீந்தா.

**1170.** Could mine eyes travel like my thoughts to the abode (of my absent lord), they would not swim in this flood of tears.

---

# ககஅ - ம். அதி. கண்விதுப்பழிதல்.

அஃதாவது கண்கள் தங்காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சிவிதுப் புத் தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது, படரான் மெலிந்தவழி நிகழ்வ தாகலின், படர்மெலிந் திரங்கலின்பின் வைக்கப்பட்டது.

க. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

[நின்கண்கள் கலுழ்ந்து தம்மழ கிழவாநின்றன நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இத்தணியா நோயை யாமறிந்தது தாமெமக்குக் காதலரைக் காட்டலா னன்றே ; அன்று அத்தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச்சொல்லி யழுகின்றது என்கருதி? எ-று.

காட்டவென்பதற் கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன் றுந் தாமே காட்டுதலல்லது யாங்காட்டுதல் யாண்டைய தென்பதாம்.

(தெ-ப-ரை.)—தண்டாநோய் - இத்தீராத (காம) நோயை, யாம்—, கண்டது - அறிந்தது, தாம்—, காட்ட - (காதலரை எமக்கு) காட்டலாலன்றே; கண் தாம் - (அன்று அதுசெய்த) கண்கள், கலுழ்வது - (இன்று எம்மைக்காட்டச்சொல்லி) அழு கிறது, எவன்கொல் - யாது நினைத்து ?

**1171** **As this incurable malady has been caused by my eyes which showed (him) to me, why should they now weep for (him).**

---

உ. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—மேல் விளைவதனை யாராய்ந்தறியாது அன்றுகாத லரை நோக்கிநின்ற உண்கண்கள் இன்று இது நம்மால்வந்ததாகலிற் பொறுத் தல் வேண்டுமெனக் கூறுபடுத் துணராது துன்பமுழப்பது என்கருதி? எ-று.

விளைவது—பிரிந்துபோ யவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருத்து தல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்த லன்றே யுள்ளது, அதுவுஞ்செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை யென்ப தாம்.

(தெ - ப - ரை.)—தெரிந்து உணரா - (மேல்விளைவதனை) ஆராய்ந்தறியாமல், நோக்கிய - (அன்று தலைவரைப்) பார்த்த, உண் கண் - (மை) உண்ட கண்கள், (இன்று இது நம்மால் வந்த தாதலால் பொறுத்தல் வேண்டுமென்று), பரிந்து உணரா - கூறு

படுத்தி அறியாமல், பைதல் உழப்பது - துன்பமனுபவிப்பது, எவன் - யாது நினைத்து ?

**1172.** The dyed eyes that (then) looked without foresight, why should they now endure sorrow, without feeling sharply (their own fault).

---

௩. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—இக்கண்கள் அன்று காதலனைத் தாமே விரைந்து நோக்கி இன்றுந் தாமேயிருந் தழுகின்ற விது நம்மாற் சிரிக்கத்தக்க வியல் பினையுடைத்து, எ-று.

கண்களென்பது அதிகாரத் தான் வந்தது. இதுவென்றது மேற்கூறிய கழிமடச் செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகை விளைக்குமாக லான், நகத்தக்க துடைத்தென்றாள்.

(தெ-ப-ரை.)—(இக்கண்கள்), கதுமெனத் தாம் நோக்கி - (அன்று காதலனை) தாமே விரைந்து நோக்கி, தாமேகலுழும் - (இன்றும்) தாமே யிருந்து அழுகின்ற, இது - இவ்வறியாமைச் செயல், நகத் தக்கது - (நம்மாலே) சிரிக்கத்தக்க இயல்பை, உடைத்து - உடையது.

**1173.** They themselves looked eagerly (on him) and now they weep. Is not this to be laughed at ?

---

௪. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—உண்கண்கள், அன்று யானுய்யமாட்டாமைக் கேது வாய ஒழிவில்லாத நோயை என்கண்ணே நிறுத்தி, தாமு மழுதலை மாட்டா வண்ணம் நீர் வற்றிவிட்டன, எ-று.

நிறுத்தல்—பிரிதலும் பின்கூடாமையு முடையானைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன் எனக்கின்னாதன செய்தலாற் பின் தமக்கின்னா தன தாமே வந்தன வென்பதாம்.

(தெ-ப - ரை.)—உண் கண் - (இந்த மை) உண்ட கண்கள், உயல் ஆற்றா - (நான்) பிழைக்கமாட்டாமைக்கு ஏதுவாகிய, உய்வு இல் நோய் - ஒழிவில்லாத நோயை, என் கண்—, நிறுத்து - நிறுத்தி, பெயல் ஆற்றா - (தாமும்) அழமாட்டாத வண்ணம், நீர் உலந்த - நீர்வற்றிவிட்டன.

**1174.** These painted eyes have caused me a lasting mortal disease, and now they can weep no more, the tears having dried up.

---

௫. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எனக்குக் கடலுஞ் சிறிதாம் வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என்கண்கள் அத்தீவினையாற் றாமுந் துயில்இலவாய்த் துன்பத்தையு முழவா நின்றன.

காமநோய் காட்சியான் வந்ததாகலின், அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினாள். துன்பம் அழுதலானாயது.

(தெ-ப-ரை.)—(எனக்கு), கடல் ஆற்றா - கடலுஞ் சிறிதாம் வண்ணம், (பெரிதாகிய), காம நோய் செய்த - காமநோயைச் செய்த, என் கண் - எனது கண்கள், (அத்தீவினையாலே), படல் ஆற்றா - (தாமும்) தூங்குகிலவாகி, பைதல் உழக்கும் - துன்பத்தையும் அனுபவிக்கின்றன.

**1175.** Mine eyes have caused me a lust that is greater than the sea and (they themselves) endure the torture of sleeplessness.

---

௬. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எமக்கிக்காமநோயினைச் செய்த கண்கடாமும் இத்துயிலா தழுதற்கண்ணேபட்டது மிகவுமினிதாயிற்று. எ-று.

ஓவென்பது மிகுதிப்பொருட்கண்வந்த குறிப்புச்சொல். தம்மால் வருத்த முற்றவெமக்கு அது தீர்ந்தாற்போன்ற தென்பதாம்.

(தெ-ப-ரை.)—எமக்கு—, இந்நோய் - இக்காமநோயை, செய்த கண் - செய்தகண்கள், தாம் - தாமும், இதற்பட்டது - இத்தூங்காமல் அழுதலிலே பட்டது, ஓஒ இனிது - மிகவும் இனிதாயிற்று.

**1176.** The eyes that have given me this disease have themselves been seized with this (suffering). Oh! I am much delighted.

---

௭. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக்கண்ட கண்கள் இன்று இத்துயிலாதழுங்கலாய துன்பத்தினையுழந்துழந்து தம்மகத்துள்ளநீர் அற்றேபோக. எ-று.

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மே னின்றது.

(தெ - ப - வை.)—விழைந்து - விரும்பி, இழைந்து - உட்குழைந்து, வேண்டி—, அவர் கண்டகண் - (அன்று) அத்தலைவரைப் பார்த்த கண்கள், உழந்து உழந்து - (இன்று தூங்காமல் அழுதற்றுன்பத்தை) அனுபவித்து அனுபவித்து, உள் நீர் - (தம்) முள்ளிருக்கிற நீர், அறுக - அற்றுப் போகுக.

**1177.** **The eyes that became tender and gazed intently on him, may they suffer so much as to dry up the fountain of their tears.**

---

அ. பேணது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணு தமைவில கண்.

[காதலர் பிரிந்துபோயினரல்லர் அவரீண்டுளர் அவரைக் காணுமளவும் நீயாற்றல்வேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - வை.) எ-து,—நெஞ்சால் விழையாதுவைத்துச் சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்; அவ்வுண்மையாற் பயன் யாது, அவரைக் கண்கள் காணு தமைகின்றன வில்லையாயின், எ-று.

செயலாற்பிரிந்து நின்றமையிற் பேணதென்றும், முன்னலம் பாராட்டிப் பிரிவச்சமும் வன்பொறையுங் கூறினராகலிற் பெட்டாரென்றுங் கூறினர். மன்—ஒழியிசைக்கண் வந்தது. மற்று—வினைமாற்றின்கண் வந்தது. ஓகாரம்—அசைநிலை. யானுற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன வென்பதாம். இனிக் கொண்கனையென்று பாடமாயின், என்கண்கள் தம்மைக் காணுதமைகின்ற கொண்கனைத் தாங்காணு தமைகின்றனவில்லை இவ்வாறே தம்மை யொருவர் விழையாதிருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துளரோ வென்றுரைக்க. இதற்கு மன்—அசைநிலை.

(தெ-ப-வை.)—பேணது - (மனத்தால்) விரும்பாதிருந்து, பெட்டார் - (சொன்மாத்திரத்தால்) விரும்பியவர், உளர் மன் - (இங்கே) இருக்கின்றார்; (அவ்விருத்தலாலே பயன்யாது), கண் - கண்கள், மற்று அவர் காணது - அவரைக்காணமல், அமைவு இல - பொறுக்கின்றில.

**1178.** **He is indeed here who loved me with his lips but not with his heart but mine eyes suffer from not seeing him.**

---

கூ. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

[நீயுமாற்றி நின் கண்களுந் துயில்வனவாதல் வேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - வை.) எ-து,—காதலர் வாராதஞான்று அவர் வரவு பார்த்துத் துயிலா, வந்தஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா; ஆகலான் அவ்விருவழியும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய, எ-று.

ஆயிடையெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒருஞான்று மில்லை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—வாராக்கால் - (காதலர்) வாராதநாள்களிலே, துஞ்சா - (அவர் வரவுபார்த்து) தூங்காவாம்; வரின் - வந்தநாள்களிலே, துஞ்சா - (அவர் பிரிவதொன்று அஞ்சி) தூங்காவாம்; (ஆகலால்), ஆயிடை - அவ்விருவழியும், என்கண் - எனது கண்கள், ஆர் அஞர் உற்றன - பொறுத்தற் கரிய துன்பத்தை யுடையனவாம்.

**1179.** When he is away they do not sleep; when he is present they do not sleep; in either case, mine eyes endure unbearable agony.

---

கo. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

[காதலனை இவ்வூர் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—எம்மைப்போலும் அறைபறையாகிய கண்ணினை யுடையார் தந்நெஞ்சின்க ணடக்கிய மறையை யறிதல் இவ்வூரின்க ணுள்ளார்க்கு எளிது, எ-று.

மறையென்றது ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்து நிகழ்வதனைப் புறத்துள்ளார்க் கறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமை யுண்மையின், அறைபறையாகிய கண்ணென்றாள். இஃதனைஞ் செய்யுள் விகார மாக்காது அறைபறைக் கண்ணொன்று பாட மோதுவாரு முளர். யான் மறைக்கவும் இவை வெளிப்படுத்தாநின்றன வென்பதாம்.

(தெ - ப - ரை.)—எம் போல் - எம்மைப்போலும், அறைபறை கண்ணார் - அறைபறையாகிய கண்ணையுடையவர், அகத்து - (தமது) நெஞ்சிலடக்கிய, மறை பெறல் - இரகசியத்தை அறிதல், ஊரார்க்கு - இவ்வூரிலுள்ளவர்க்கு, அரிது அன்று - எளிது.

**1180.** It is not difficult for the people of this place to understand the secret of those whose eyes, like mine, are as it were beaten drums.

---

## ககசு - ம். அதி. பசப்புறுபருவரல்.

அது பசப்புற்றபருவரலென விரியும். அஃதாவது பசப்புறுதலானுய வருத்தம். இதனைப் பசந்தெறிந்த வயர்வென்பதுபோலக் கொள்க. பசப்பாவது பிரிவாற்றாமையான் வருவதோர்நிறவேறுபாடு. இது, தலைமகனைக் காணப்பெறாத வழி நிகழ்வதாகலின், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

க. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

[முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றாது பசந்தவழித் தன்னுள்ளே சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—என்னை நயந்தவர்க்கு அதுபொழுது பிரிவையுடம்பட்ட நான் அதனையாற்றாது இதுபொழுது பசந்தவென்னியல்பினை யார்க்குச் சொல்வேன்? எ-று.

பிறவென்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த்தி னாராகலின் அவரன்புடையரென்னுங்கருத்தான் நயந்தவரென்றும், இதுவேயுட ம்பாடாக மேலும் பிரிவுநிகழுமாகலின் இனி அவரைக் கூடுதலரிதென்னுங்கரு த்தான் நல்காமையென்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றாது பசத்த லும் பிறர்செய்தனவல்லவென்பாள் பசந்தவென்பண்பென்றும், யான் செய்து கொண்டதன்பத்தினை இனியொருவர்க்குச் சொல்லலும் பழியாமென்னுங் கருத்தால் யார்க்குரைக்கோவென்றுங் கூறினாள்.

(தெ - ப - ரை.)—நயந்தவர்க்கு - (என்னை) விரும்பிய தலை வர்க்கு, நல்காமை - பிரிவை, நேர்ந்தேன் - (அப்போது) உடன் பட்ட நான், பசந்த - (அதனைப்பொறாமல் இப்பொழுது) பசப்பு நிறமடைந்த, என் பண்பு - என்னியல்பை, யார்க்கு உரைக் கோ - யார்க்குச்சொல்வேன்?

**1181.** I who (then) consented to the absence of my loving lord, to whom can I (now) relate the fact of my having turned sallow.

---

உ. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

[ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது
படச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—இப்பசப்புத்தான், என்னை யுண்டாக்கினர் அவரென் னும் பெருமிதத்தான், என்மேனியை மேல்கொண்டு செலுத்தாநின்றது, எ-று.

"குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா விவர்ந்து செல்ல" என் புழியும் இவர்தல் இப்பொருட்டாத லறிக. இஃது உரிமைபற்றி யூர்கின்றது, இதற்கு நீ கவலல் வேண்டா வென்பதாம்.

(தெ-ப-ரை.)—(நான் பொறுத்திருக்கவும்), பசப்பு - இப் பசப்பு நிறம், அவர்—, தந்தார் என்னுந் தகையால் - (என்னை) உண்டாக்கினரென்னுங் களிப்பு மிகுதியால், என் மேனிமேல்—, இவர்ந்து - ஏறி, ஊரும் - செலுத்தா நின்றது.

**1182.** Sallowness, as if proud of having been caused by him, would now ride on my person.

---

ஙு. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து.

[அழகு நாணு மழியாமல் நீ யாற்றல் வேண்டுமென்ற
தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—பிரிகின்ற ஞான்றே அவ்விரண்டற்குந் தலைமாறாக இக்காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து, என்மேனி அழகினையும் நாணினையும் அவர் கொண்டுபோயினார், எ-று.

எதிர் நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலை மாறாயிற்று. இனி அவர் தந்தாலல்லது அவை யுளவாகலும் இவை யிலவாக லுங் கூடாவென்பதாம்.

(தெ-ப-ரை.)—(பிரிகின்றபொழுதே), கைம்மாறு - (அவ்விரண்டிற்கும்) தலைமாறாக, நோயும் பசலையும் - இக்காமநோயையும் பசலையையும், தந்து - (எனக்கு) தந்து, சாயலும் நாணும்- (என்மேனி) யழகையும் நாணத்தையும், அவர்—, கொண்டார் - கொண்டுபோயினர்.

**1183.** **He has taken (away) my beauty and modesty, and given me instead disease and sallowness.**

---

௪. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

[பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையு
மறிதியாகலின் நீட்டியாது வருவளென்றவழிச்
சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அவர் சொற்களை யான் மனத்தா னினையாநிற்பேன், வாக்கானுரைப்பதும் அவர் நற்றிறங்களையே; அங்ஙனஞ் செய்யாநிற்கவும், பசப்பு வந்து நின்றது, இது வஞ்சனையா யிருந்தது, எ-று.

பிறவும் ஓவும் அசைநிலை. மெய் மற்றை மனவாக்குகளின் வழித்தாகலின் அதன் கண்ணும் வரப்பாற் றன்றாயிருக்க வந்தமையின், இதன்செயல் கள்ளமா யிருந்ததெனத் தானாற்றுகின்றமை கூறியவாறாயிற்று.

(தெ-ப-ரை.) யான்—, உள்ளுவன் - (அவர் சொற்களை மனத்தால்) நினைக்கின்றேன்; உரைப்பது - (வாயால்) சொல்லப்படுவதும், அவர் திறம் - அவர் நற்குணமே; (அப்படி செய்யாநிற்கவும்), பசப்பு - பசலை நிறம் (வந்துநின்றது), கள்ளம் - (இது) வஞ்சனையா யிருந்தது.

**1184.** **I think (of him); and what I speak about is but his excellence; still is there sallowness; and this is deceitful.**

---

௫. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

[காதலர் பிரிந்தணித்தா யிருக்கவும் ஆற்றுகின்றிலையென்ற
தோழிக்கு முன்னிகழ்ந்தது கூறியது.]

(பரி-ரை.) எ-து,—பண்டும் நங்காதலர் உங்கே செல்வாராக, என்மேனி பசப்பூர்வ திங்கே யன்றே? அப்பெற்றியது இன்று புதிதொன்றாமோ? எ-று.

உவக்காண் இவக்காணென்பன ஒட்டிநின்ற விடைச்சொற்கள். தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. அவர் செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின் செலவும் வரவும் போல்வ தறிந்துவைத்து அறியாதாய்போல நீ சொல்லுகின்ற தென்னையென்பதாம்.

(தெ-ப-ரை.)—உவக்காண் - அக்காலத்து, எம் காதலர்—, செல்வார் - (பிரிந்து) செல்வாராக, என்மேனி - எனதுவடிவம்,

பசப்பு ஊர்வது - பசலைநிறமடைவது, இவக்காண் - இங்கே யன்றோ, [அப்படிப்பட்டது இன்று வேறொன்றுமோ].

**1185**. Just as my lover departed then, did not sallowness spread here on my person?

---

சு. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரு மிருளே போல கொண்கன் முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இப்பசப்பு, எ-று.

பார்க்குமென்பன இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்கவுந் தனக் கவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என்செய்யா தென்பதாம்.

(தெ - ப - ரை.)—விளக்கு - விளக்கினது, அற்றம் பார்க்கும் - சோர்வுபார்த்து நெருங்கிவருகிற, இருளே போல்—, பசப்பு - பசலைநிறம், கொண்கன் - தலைவனது, முயக்கு - புணர்ச்சியினது, அற்றம் பார்க்கும் - சோர்வுபார்த்து நெருங்கிவரும்.

**1186**. Just as darkness waits for the failing light, so does sallowness wait for the laxity of my husband's intercourse.

---

எ. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

[இதுவுவது.]

(பரி-ரை.) எ-து,—முன்னொருஞான்று காதலனைப் புல்லிக்கிடந்த யான் அறியாது புடைபெயர்ந்தேன்; அப்புடைபெயர்ந்தவளவிலே பசப்பு அள்ளிக் கொள்வதுபோல வந்து செறிந்தது, எ-று.

கொளவென்பது குறைந்துநின்றது. அள்ளிக்கொள்வது - அள்ளிக்கொள்ளப்படும்பொருள். அப்புடைபெயர்ச்சிமாத்திரத்திற்கு அவ்வாறுயது இப்பிரிவின்கணுமாறு சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(தெ - ப - ரை.)—புல்லி கிடந்தேன் - (முன்னொரு நாளிலே காதலனை) தழுவிக்கிடந்த நான், புடை பெயர்ந்தேன் - (அறியாது) சற்றுவிலகினேன்; அவ்வளவில் - அவ்விலகிய வளவிலே, பசப்பு - பசலைநிறமானது, அள்ளிக் கொள்வற்றே - அள்ளிக்கொள்ளப்படும் பொருள்போல் வந்து நிறைந்தது.

**1187**. I who was in close embrace just turned aside and the moment I did so, sallowness came on me like something to be seized on.

---

அ. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

[நீயிங்ஙனம் பசக்கற்பாலையல்லையென்ற தோழியொடு
புலந்துசொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இவள் ஆற்றியிராது பசந்தாளென்று என்னைப் பழி கூறுவதல்லது இவளையவர்துறந்துபோயினுரொன்று அவரைக் கூறுவாரொருவருமில்லை, எ-று.

என்பாரென வேறுபடுத்துக்கூறினள், தன்னையே நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின்.

(தெ - ப - ரை.)—இவள்—, பசந்தாள் என்பது அல்லால்-(பொறுத்திராமல்) பசலைநிற மடைந்தாளென்று (என்னை) பழி சொல்வதல்லது, இவளை—, அவர்—, துறந்தார் என்பார் - துறந்துபோயினுரொன்று சொல்லுவார், இல் - இல்லை.

**1188.** Besides those who say "she has turned sallow" there are none who say "he has forsaken her".

---

கூ. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—இப்பிரிவையானே யுடம்படும் வகை சொல்லியவர் இன்று நின்கருத்தான் நல்லநிலையின ராவராயின், என்மேனி பட்டதுபடப் பசப்பதாக, எ-று.

நன்னிலையராதல்-நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல். பட்டாங்காக வென ஆக்கம் வருவித்துரைக்க. முன் இப்பிரிவின் கொடுமையறியாத வென்னை இதற்குடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவேவேண்டுவது, என்மேனியும் பசப்பும் யாதுசெய்யினென் னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

(தெ-ப-ரை.)—நயப்பித்தார் - (இப்பிரிவை யானே) உடம்படும்வகை சொல்லியவர், நல் நிலையர் ஆவர் எனின்-(இன்று உன்கருத்தால்) நல்லநிலையின ராவராயின், என் மேனி—, பட்டாங்கு (ஆக) - பட்டதுபட, பசக்க - பசலைநிற மடையக்கடவது.

**1189.** If he is clear of guilt who has conciliated me (to his departure) let my body suffer its due and turn sallow.

---

கo. பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்ரு ரெனின்.

[தலைமக ளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை யியற்
பழித்தவழி அவள் இயற்படமொழிந்தது.]

(பரி-ரை.) எ-து,—அன்று தாங்குறை நயப்பித்துக் கூடினவர்க்கு இன்று நல்காமையை நட்டோர் தூற்ருராயின், பசப்புற்ருளென வேற்றுமையானன்றிப் பசப்புத்தானுயினுளென ஒற்றுமையாற் ருஞ்சொல்ல அப்பெயராட்பெறுதல் எனக்கு நன்று, எ-று,

கட்டாரென்பது அவாய்நிலையான் வந்தது. இயற்பழித்தல்பொறாது புலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக்குறிப்பாற் கூறினாள். அவரை அருளிலரென்னாது இன்னும் பசந்தாளிவளென்கையே யானுற்றநெறியாவதென்பதாம்.

(தெ - ப - ரை.)—நயப்பித்தார் - (அன்று) குறைநயப்பித்துக் கூடினவர்க்கு, நல்காமை - (இன்று) அருளாமையை, தூற்றார் எனின் - (நட்புற்றோர்) தூற்றாராயின், பசப்பு என - பசப்புத்தாளுயினாளென்று (ஒற்றுமையால் தாம்) சொல்ல, பேர்பெறுதல்—, நன்றே - (எனக்கு) நன்றாம்.

**1190.** It would be good to be said of me that I have turned sallow, if friends do not reproach with unkindness him who pleased me (then.).

---

## கஉ0-ம். அதி. தனிப்படர்மிகுதி.

அது தனியாகிய படர்மிகுதியென விரியும். அஃதாவது படர்மிகுதி தலைவன்கணின்றித் தன்கண்ணதேயாதல் கூறுதல். அறமும் பொருளுநோக்கிப் பிரிதலின் அவன்கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட் குரியதாகலின், பசப்புறுபருவரலின்பின் வைக்கப்பட்டது.

க. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரோ
காமத்துக் காழில் கனி.

[காதலரும் நின்னினுமாற்றாராய்க் கடிதின்வருவர் நீயவரொடு
பேரின்பநுகர்தியென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—தம்மாற் காதலிக்கப்படுங் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர் பெற்றாரன்றே காமநுகர்ச்சியென்னும் பரலில்லாத கனியை, எ-று.

காமம்—ஆகுபெயர். அத்து—அல்வழிக்கண் வந்தது. முன்னைநல்வினை இல்வழிப் பெறப்படாமையிற் பெற்றாரென்றும், அவராற் றடையின்றி நுகரப்படுதலிற் காழில்கனியென்றுங் கூறினாள். நங்காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையுமுடைமையின், அக்கனி யாம் பெற்றிலேமென்பதாயிற்று.

(தெ - ப - ரை.)—தாம் வீழ்வார் - தம்மாலே விரும்பப்பட்டகணவர், தம் வீழ - தம்மைவிரும்ப, பெற்றவர் - பெற்றமகளிர், காமத்து - காமானுபவத்தினது, காழ் இல் - வித்தில்லாத, கனி - பழத்தை, பெற்றாரோ - பெற்றாரன்றே.

**1191.** The women who are beloved by those whom they love, have they not got the stone-less fruit of sexual delight?

---

உ. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—அறமும் பொருளுநோக்கிப் பிரிந்தாற் றம்மையின்றியமையா மகளிர்க்கு அவரையின்றியமையாக் கணவர் அளவறிந்து வந்து செய்

யுந்தலையளி தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அளவறிந்து பெய் தாற்போலும், எ-று.

*நங்காதலர் நம்மை விழையாமையின் அத்தலையளி யில்லையாகலான், மழை வறந்துழி அதனான் வாழ்வார்போல இறந்துபடுதலே நமக்குள்ள தென்பதாம்.*

(தெ - ப - ை.)—(அறமும் பொருளும் இன்பமும் நோக்கிப்பிரிந்தால்), வீழ்வார்க்கு - (தம்மை) விட்டிருக்க மாட்டாத மகளிர்க்கு, வீழ்வார் - (அவரை) விட்டிருக்கமாட்டாதகணவர், அளிக்கும் - அளவறிந்துவந்துசெய்கிற, அளி - தலையளி, வாழ்வார்க்கு - (தன்னையே நோக்கி) உயிர்வாழ்வார்க்கு, வானம் - மழை, பயந் தற்று - அளவறிந்துவந்து பெய்வதுபோலும்.

**1192.** **The bestowal of love by the beloved on those who love them is like the rain raining (at the proper season) on those who live by it.**

---

௩. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

[இதுவுமது.]

(பரி - ை.) எ-து,—தாம் விழையுங்கணவரான் விழையப்படு மகளிர்க்கு ஏற்புடைத்து. காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின்வருவர், வந்தால் நாமின்புற்று வாழ்துமென்றிருக்குந் தருக்கு, எ-று.

*நாம் அவரான் வீழப்படாமையின், நமக்கமைவது இறந்துபாடென்பதாம்.*

(தெ - ப - ை.)—வீழுநர் - (தம்மால்) விரும்பப்படுகிற கணவரால், வீழப்படுவார்க்கு - விரும்பப்படுகிற மகளிர்க்கு, (காதலர் பிரிந்தாலும் நம்மைநினைந்து கடிதில் வருவார்), வாழுநம் என்னும் - (வந்தால் நாம் இன்புற்று) வாழ்வோமென்றிருக்கிற, செருக்கு - தருக்கு, அமையும் - ஏற்புடைத்தாம்.

**1193.** **The pride that says "we shall live" suits only those who are loved by their beloved (husbands).**

---

௪. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

[காதலரை யியற்பழித்தலையஞ்சி அவரருளின்மை மறைத்த நீ கடவுட் கற்பினையாகலிற் கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுதி யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ை.) எ-து,—கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுவாரும் தாம் விரும்புங் கணவரான் விரும்பப்படாராயிற் தீவினையாட்டியர், எ-று.

*சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. கெழீஇயின்மை-நல்வினையின்மை. அஃது அருத்தாபத்தியாற்றீவினை யுடைமையாயிற்று. தீவினையுடையேற்கு அந் நன்குமதிப்பாற் பயனில்லை யென்பதாம்.*

(தெ - ப - ரை.)—வீழப்படுவார் - (கற்புடைமகளிராலே) நன்குமதிக்கப்படுவோரும், தாம் வீழ்வார் - தம்மால்விரும்பப்படு கிற கணவரால், வீழப்படார் எனின் - விரும்பப்படாராயின், கெழீஇ யிலர் - தீவினையுடையரேயாவர்.

**1194.** Even those who are esteemed (by other women) are devoid of excellence, if they are not loved by their beloved.

---

ரு. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
 தாங்காதல் கொள்ளாக் கடை.

[அவர்மேற்காதலுடைமையின் அவர்கருத்தறிந்தாற்றினு
யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நம்மாற் காதல்செய்யப்பட்டவர் நமக்கென்ன வின் பத்தைச் செய்வர்? அவ்வாறே தாமும் நங்கட்காதல் செய்யாவழி, எ-று.

எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அக்காதலுடைமையால் நாம் பெற் றது துன்பமே யென்பதாம்.

(தெ - ப - ரை.)—நாம் காதல் கொண்டார் - நம்மாலே கா தல் கொள்ளப்பட்டவர், நமக்கு—, எவன் - என்னவின்பத்தை, செய்ப - செய்வார்? (அப்படியே), தாம் காதல் கொள்ளாக்க டை - தாமும் (நம்மிடத்து) காதல்செய்யாத விடத்து.

**1195.** He who is beloved by me, what will he do to me, if I am not beloved by him?

---

சா. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
 விருதலை யானு மினிது.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—மகளிர் ஆடவரென்னு மிருதலையினும் வேட்கை ஒரு தலைக்கண்ணேயாயின் அஃதின்னாது. காவினது பாரம்போல இருதலைக்கண்ணு மொப்பின், அஃதினிது, எ-று.

மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. கா—ஆகுபெயர். என் மாட்டுண்டாயவேட்கை அவர்மாட்டுமுண்டாயின், யானிவ்வாறு துன்பமுழத் தல் கூடுமோ வென்பதாம்.

(தெ - ப - ரை.)— (மகளிர் ஆடவர் எனப்படுகிற இரண் டிடங்களிலும்), காமம் - ஆசையானது, ஒருதலையான் - ஓரிடத் தில் (உண்டாயின்), இன்னாது - துன்பஞ் செய்வதாம்; கா போல - காவடிப்பாரம்போல, இருதலையானும் - இரண்டிடங்க ளிலும் (ஒத்திருக்குமாயின்), (அது), இனிது - இன்பஞ்செய் வதாம்.

**1196.** Lust, like the weight of the *kavadi*, pains if it lies in one end only but pleases if it is in both.

---

எ. பருவரலும் பைதலுங் காணுன்கொல் காம
ஞெருவர்க ணின்றொழுகு வான்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காமநுகர்தற்குரிய விருவரிடத்தும் ஒப்பநிற்ற லொ ழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக்கடவுள் அவ்விடத்துப் பசப் பாளுய பருவரலும் படர்மிகுதியும் அறியான்கொலோ, எ-று.

விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணு நிகழ்ந்தனவறிதற்குரிய கட வுளும் என்கண் வேறுபட்டான், இனி யானுய்யுமாறென்னை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—(காமத்தை அநுபவித்தற்குரிய இருவ ரிடத்தும் ஒத்துநில்லாமல்), ஒருவர்கண் நின்று - ஒருவரிடத் தேநின்று, ஒழுகுவான் - போர்செய்கின்றவனுகிய, காமன்—, (அவ்விடத்துப் பசப்பாலாகிய), பருவரலும் - நோயையும், பைதலும் - துன்பமிகுதியையும், காணுன்கொல் - அறியானோ.

**1197.** **Would not Cupid who abides and contends in one party (only) witness the pain and sorrow (in that party) ?**

---

அ. வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

[தலைமகன் றூதுவரக்காணுது சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—தம்மால் விரும்பப்படுங் காதலர்திறத்துநின்றும் ஓரின்சொல்லளவும் பெறுதே பிரிவாற்றி உயிர்வாழ்கின்ற மகளிர்போல வன் கண்மையுடையார் இவ்வுலகத்தில்லை, எ-று.

காதலர் திறத்துச்சொல் யாதானும் எனக்கினிதென்னுங் கருத்தால், இன் சொலென்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. யான் வன்கண் ணேனுகலின், அதுவும்பெறாது உயிர்வாழாநின்றே னென்பதாம்.

(தெ - ப - ரை.)—வீழ்வாரின் - (தம்மால்) விரும்பப்படுங் காதலரிடத்திருந்து, இன் சொல்-ஓரின்சொலளவும், பெறாது—, வாழ்வாரின் - (பிரிவுபொறுத்து) உயிர்வாழ்கின்றமகளிர்போல், வன்கணார் - தைரியமுடையவர், உலகத்து—, இல் - இல்லை.

**1198.** **There is no one in the world so hard-hearted as those who can live without receiving (even) a kind word from their beloved.**

---

கூ. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—என்னால் நச்சப்பட்டகாதலர் என்மாட்டன்பிலரா யாயினும் அவர்திறத் தியாதானு மோர்சொல்லும் என்செவிக்கினியவாம், எ-று.

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலொன்னுஞ் சொல்லாயினும் அமையுமென் பதுபட, நின்றது. அதுவும் பெற்றிலேனென்பதாம்.

(தெ - ப - ரை.)—நசைஇயார் - (என்னால்) விரும்பப்பட்டதலைவர், நல்கார் எனினும் - (எனக்கு) அருள்செய்யா ராயினும், அவர்மாட்டு - அவரிடத்து, இசையும் - எச்சொற்களும், செவிக்கு - என்காதுகளுக்கு, இனிய - இன்பஞ்செய்வனவாம்.

**1199**. **Though my beloved bestows no love on one, still are his words sweet to my ears.**

---

க0. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

[தலைமகன்றூதுவரப்பெறாது தான் றூதுவிடக்கருதியாள் நெஞ்சொடு சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நின்னோ டுறாதார்க்கு நின்னுறுநோயை யுரைக்கலுற்ற நெஞ்சே நீயாற்றாயாயினும் அரிதாய அதனையொழிந்து, நினக்குத் துயரஞ்செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக, அஃதெளிது, எ-று.

உரைக்கலுற்றது அளவிறந்தநோயாகலானுங் கேட்பார் உறவிலராகலானும் அது முடிவதொன்றன்று, முடிந்தாலும் பயனில்லையென்பது கருதாது, முயலாநின்றாயென்னுங் குறிப்பான், வாழியவென்றாள்.

(தெ - ப - ரை.)—உறாஅர்க்கு - (உன்னோடு) உறாதவர்க்கு, உறு நோய் - (உனது) மிகுந்தநோயை, உரைப்பாய் - சொல்லலுற்ற, நெஞ்சு - நெஞ்சே! வாழிய - வாழ்வாயாக; (நீபொறாயாயினும் அரிதாகிய அதனைவிட்டு), கடலை - (உனக்குத் துயரஞ் செய்கின்ற) கடலை, செறாஅய் - தூர்க்கமுயற்சிசெய்; (அது எளிது.)

**1200**. **Live, O my soul, would you who relate your great sorrow to strangers, try rather to fill up your own sea (of sorrow).**

---

## கஉக - ம். அதி. நினைந்தவர்புலம்பல்.

அஃதாவது முன்கூடிய ஞான்றையின்பத்தினை நினைந்து தலைமகடனிமையெய்தலும், பாசறைக்கட் டலைமகன் றனிமையெய்தலுமாம். இவ்வாறு இருவர்க்கும் பொதுவாதல்பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது, படர்மிகுதி தன்கண்ணதாகநினைந்த தலைமகட்கு முரித்தாகலின், அவ்வியைபுபற்றித் தனிப்படர் மிகுதியின்பின் வைக்கப்பட்டது.

க. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

[தூதாய்ச்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—முன்கூடிய ஞான்றையின்பத்தினைப் பிரிந்துழி நினைந்தாலும் அதுபொழுது பெற்றாற்போல நீங்காத மிக்கமகிழ்ச்சியைத் தருதலால், உண்டுழியல்லது மகிழ்ச்சிசெய்யாத கள்ளினுங் காமம் இன்பம்பயத்தலுடைத்து, எ-று.

தன்றனிமையுந் தலைமகளை மறவாமையுங் கூறியவாறு.

(தெ - ப - ரை.)— (முன் அனுபவித்தநாளை யின்பத்தை), உள்ளினும் - (பிரிந்தவிடத்து) நினைத்தாலும், அப்பொழுது பெற்றதுபோல்), தீரா பெரு மகிழ் செய்தலால் - நீங்காத பெரு மகிழ்ச்சியைத் தருதலால், கள்ளினும் - (உண்டபோதல்லது ம கிழ்ச்சிசெய்யாத) கள்ளைப்பார்க்கிலும், காமம்—, இனிது - இன் பந்தருதலை யுடைத்து.

**1201.** Sexuality is sweeter than liquor, because when remembered, it creates a most rapturous delight.

---

உ. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கணினைத்தால் அந்நினைவார்க்கு அப்பிரிவான் வருவதோர் துன்பமில்லையாம். அதனாற் காமம் எத்துணையேனு மினிதொன்றே காண், எ-று.

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்பவினிதென்பான், எனைத்துமினிதென் றான். சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தானுற்றியவகை கூறியவாறு.

(தெ - ப - ரை.)—தாம் வீழ்வார் - தம்மால் விரும்பப்படு வாரை, நினைப்ப - (பிரிவினிடத்து) நினைந்தால், (அந்நினைந்த வர்க்கு), வருவது ஒன்று - (அப்பிரிவால்) வருவதோர்துன்பம், இல் - இல்லையாம்; (அதனால்), காமம்—, எனைத்து - எவ்வள வாயினும், ஒன்று இனிதே காண்-இன்பந்தருவதொன்றேகாண்.

**1201.** Even to think of one's beloved gives one no pain. Sexuality, in any degree, is always delightful.

---

௩. நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

[தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—எனக்குத் தும்மல் எழுவதுபோன்று தோன்றிக் கெடாநின்றது. அதனாற் காதலர் என்னை நினைப்பார்போன்று நினையாராகல் வேண்டும், எ-று.

சினைத்தல்—அரும்புதல். செய்மைக்கண்ணராய கேளிர் நினைந்துழி அந் நினைக்கப்பட்டார்க்குத் தும்மறோன்று மென்னு முலகியல்பற்றித் தலைமகனை யுத்துக்கொண்ட வினை முடிவதுபோன்று முடியாமை யுணர்ந்தாள் சொல்லிய தாயிற்று.

(தெ - ப - ரை.)—(எனக்கு), தும்மல்—, சினைப்பது போ ன்று - அரும்புதல்போலே தோன்றி, கெடும் - கெடுகின்றது;

(அதனல்), நினைப்பவர் போன்று - (தலைவர்) என்னைநினைப்பவர் போன்று, நினையார்கொல் - நினையாராகல் வேண்டும்.

**1203.** I feel as if I am going to sneeze but do not, and (therefore) my beloved is about to think (of me) but does not.

---

ச. யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரோ யவர்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுதுமுளரோ யா யிராநின்றார் அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமுமுளமாதுமோ, ஆகேமோ? எ-று.

ஓகாரவிடைச்சொல் ஈண்டிடைவிடாமை யுணர்த்திநின்றது. உளமாயும் வினைமுடியாமையின் வாராராயினரோ, அது முடிந்தும் இலமாகலின் வாரா ராயினரோவென்பது கருத்து.

(தெ - ப - ரை.)— எம் நெஞ்சத்து - எமது நெஞ்சத்தில், அவர்—, ஓ உளரோ - (எப்பொழுதும்) உள்ளவராயே யிருக்கின் றார்; (அப்படியே), அவர் நெஞ்சத்து - அவரது நெஞ்சிலும், யாமும்—, உளேம்கொல் - உள்ளேமாகின்றேமோ (ஆகேமோ).

**1204.** He continues to abide in my soul, do I likewise abide in his?

---

ரு. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணர்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—தம்முடைய நெஞ்சின்கண்ணே யாஞ்செல்லாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர் தாமெம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணர்கொல்லோ, எ-று.

ஒருவனைத் தங்கண் வருதற்கு ஒருகாலு முடம்படாது தாமவர்கட் பல காலுஞ் சேறல் நாணுடையார் செயலன்மையின், நாணர்கொ லென்றாள்.

(தெ - ப - ரை.)—தம் நெஞ்சத்து - தமது நெஞ்சிடத்து, (யாம் செல்லாமல்), எம்மை—, கடிகொண்டார் - காவல்கொண்ட தலைவர், எம் நெஞ்சத்து - எமது நெஞ்சினிடத்து, ஓவா வரல்- ஒழியாமல் (தாம்) வருதலுக்கு, நாணர்கொல் - நாணரோ.

**1205.** He who has imprisoned me in his soul, is he ashamed to enter incessantly into mine.

---

சு. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரோடியா
னுற்றநா ளுள்ள வுளேன்.

[அவரொடு புணர்ந்தஞான்றை யின்பத்தை நினைந்து இறந்துபாடெய் தாநின்றாய் அதுமறத்தல்வேண்டு மென்றாட்குச் சொல்லியது.]

(பரி - லை.) எ-து,—யான் அவரோடு புணர்ந்த ஞான்றை யின்பத்தை நினைதலான் இத்துன்பவெள்ளத்தும் உயிர்வாழ்கின்றேன் ; அதுவின்றாயின் வேறெத்தால் உயிர்வாழ்வேன் ? எ-று.

நாள்—ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுள, அவைபெற்றிலேனென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன்றூதுவருதல், தன்றூதுசேறன் முதலாயின. அவை யாவுமின்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடில்லையென்பது கருத்து.

(தெ - ப - ை.)—யான் அவரோடு—, உற்ற நாள்-புணர்ந்த நாளையின்பத்தை, உள்ள - நினைத்தலால், உளேன் - (இத்துன்ப வெள்ளத்தில்) உயிர்வாழ்கின்றேன்; மற்று - அது இல்லையாயின், யான் என் உளேன் - வேறே எத்தால் உயிர்வாழ்வேன்.

**1206.** I live by remembering my (former) intercourse with him; if it were not so, how could I live?

---

எ. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

[இதுவுமது.]

(பரி - லை.) எ-து,—அவ்வின்பத்தை மறத்தலறியேனாய் இன்றுள்ளாநிற்கவும், பிரிவு என்னுள்ளத்தைச் சுடாநின்றது ; அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்தால் இறந்துபடாது உளேனாவது எத்தால், எ-று.

மறக்கப்படுவது அதிகாரத்தான் வந்தது. மன் ஈண்டும் அது படநின்று ஒழியிசையாயிற்று. கொல்-அசைநிலை.

(தெ-ப-ை.)—மறப்பு அறியேன் - (அவ்வின்பத்தை) மறத்தலறியேனாகி, உள்ளினும் - (இன்று) நினையா நிற்கவும், (பிரிவானது), உள்ளம் - (என்) உள்ளத்தை, சுடும் - சுடுகின்றது; (அப்படி பிரிவுபொறாத நான்), மறப்பின்-மறந்தால், எவன் ஆவன் - எத்தால் இறவாதிருப்பேன்.

**1207.** I have never forgotten (the pleasure); even to think of it burns my soul; could I live, if I should ever forget it?

---

அ. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

[இத்துன்ப மறிந்துவந்து காதலர் நினக்கின்பஞ் செய்வ ரொன்றாட்குச் சொல்லியது.]

(பரி-லை.) எ-து,—தம்மை யானெத்துணையும் மிகநினைந்தாலும் அதற்கு வெகுளார்; காதலர் எனக்குச் செய்யுமின்பமாவது அவ்வளவன்றோ? எ-று.

வெகுளாமை-அதற்குடம்பட்டு நெஞ்சின்கணிற்றல். தனக்கு அவ்வின்பத்திற்சிறந்த தின்மையின், அதனைச் சிறப்பென்றாள். காதலர் நம்மாட்டருளென்றும், செய்யுங்குணமென்றும், பாடமோதுவாரு முளர். தோழி கூறியவதனைக் குறிப்பானிகழ்ந்து கூறியவாறு.

(தெ-ப-ை.)—காதலர், எனைத்து நினைப்பினும் - (நான் தம்மை) எவ்வளவு மிக நினைத்தாலும், காயார் - (அதற்கு) கோபியார்; செய்யும் சிறப்பு - (அவர் எனக்கு) செய்யுமின்பமாவது, அனைத்து அன்றோ - அவ்வளவன்றோ?

**1208.** He will not be angry however much I may think of him; is it not so much the delight my beloved affords me?

---

கூ. விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

[தலைமகன்றூதுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ை.) எ-து,—முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லமென்று சொல்லுவார தளியின்மையை மிகவுநினைந்து எனதினியவுயிர் கழியாநின்றது, எ-று.

அளியின்மை - பின்வருவராகவுமாய்ப்பிரிதலும், பிரிந்து வாராமையும், ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல் வேண்டுமென வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று அவரன்பின்மைக்கென எதிரழிந்து கூறியவாறு.

(தெ-ப-ை.)—வேறு அல்லம் என்பார் - (முன்னெல்லாம் நாமிருவரும்) வேறல்லமென்று சொல்லுவாரது, அளி இன்மை - அருளில்லாமையை, ஆற்ற நினைந்து - மிகவும் நினைந்து, என் இன் உயிர் - எனது இனிதாகியவுயிர், விளியும் - கழிகின்றது.

**1209.** My precious life is wasting away by thinking too much on the cruelty of him who said we were not different.

---

கம். விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

[வன்புறை யெதிரழிந்தாள் காமமிக்க கழிபடராற் சொல்லியது.]

(பரி - ை.) எ-து,—மதியே என்னெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப்போயினாரை யானென்கண் ணளவானாயினும் எதிர்ப்படும்வகை நீ படாதொழிவாயாக, எ-று.

கண்ணளவா னெதிர்ப்படுதலாவது மதி இருவரானு நோக்கப்படுதலின் இருவர்கண்ணும் அதன்கண்ணே சேர்தல். முதலொடு சினைக்கொற்றுமையுண்மையிற் சென்றாரைக்காணவென்றும், குறையுறுகின்றாளாகலின் வாழியென்றுங் கூறினாள். இனிப் படாதென்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதி படுகின்றதில்லையென அதனாற் றுயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு வாழியென்பது அசைநிலை.

(தெ - ப - ரை.) — மதி - சந்திரனே, வாழி - வாழக்கடவாய்; விடாது - (என்னெஞ்சை) விடாதிருந்தே, சென்றாரை - (விட்டுப்) போயினாரை, கண்ணினால் - கண்ணளவாலாயினும், காண - எதிர்ப்படும்வகை, படாதி - (நீ) மறையாதிருப்பாயாக.

**1210.** May you live, O Moon. Do not set, that I mine eyes may see him who has departed without quitting my soul.

---

## ௧௨௨ - ம். அதி. கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது தலைமகள் தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நனவின்கணினைவுமிகுதியாற் கண்டதாகலின், இது நினைந்தவர் புலம்பலின்பின் வைக்கப்பட்டது.

௧. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

[தலைமகன் றூது வரக்கண்டாள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—யான் வருந்துகின்றதறிந்து அதுதீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என்மாட்டுவந்த கனவினுக்கு யான் விருந்தாக யாதனைச்செய்வேன்? எ-று.

விருந்தென்றது விருந்திற்குச்செய்யு முபகாரத்தினை. அது கனவிற்கொன்று காணமையின், யாதுசெய்வே னென்றாள்.

(தெ - ப - ரை.)—(யான் வருந்துகிறதை அறிந்து அதுதீர விடுத்த), காதலர் - தலைவரது, தூதொடு - தூதைக்கொண்டு, வந்த - (என்னிடத்து) வந்த, கனவினுக்கு—, விருந்து - விருந்தாக, யாதுசெய்வேன் - என்னசெய்யமாட்டுவேன்?

**1211.** Wherewith shall I feast the dream which has brought me my dear one's messenger?

---

௨. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

[தூதுவிடக் கருதியாள் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—துஞ்சாது வருந்துகின்ற என்கயல்போலு முண்கண்கள் யானிரந்தாற் றுஞ்சுமாயின் கனவிடைக் காதலைக் காண்பேன், கண்டால் அவர்க்கியா னாற்றியுளேனாய தன்மையை யானே விரியச்சொல்வேன், எ-று.

கயலுண்கணென்றாள், கழிந்த நலத்திற்கிரங்கி. உயல் - காமநோய்க்குத் தப்புதல். தூதர்க்குச்சொல்லாது யாமடக்குவனவும் சொல்லுவனவற்றுள்ளுஞ் சுருக்குவனவற்றின் பரப்புந்தோன்றச் சொல்வேனென்னுங் கருத்தாற் சாற்றுவேனென்றாள். இனி அவையுந்துஞ்சா சாற்றலுங் கூடாதென்பதுபடநின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. மூன்றுங்கண்டாள் கூற்றாகலின், கனவுநிலை யுரைத்தலாயிற்று.

(தெ - ப - ரை.)—கயல் உண் கண்-(தூங்காதழுகின்ற) என் கயல்போலு மையுண்ட கண்கள், யான்—, இரப்ப - இரந்தால், துஞ்சின்-தூங்குமாயின், கலந்தார்க்கு-(கனவிலே காணப்பட்ட) தலைவர்க்கு, உயல் உண்மை - பொறுத்திருக்கிற தன்மையை, சாற்றுவேன் - (யானே) விரியச்சொல்லுவேன்.

**1212.** If my fish-like painted eyes should, at my begging, close in sleep, I could fully relate my sufferings to my lord.

---

ங. நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

[ஆற்றாளெனக் கவன்றாட்கு ஆற்றுவலென்பதுபடச்
சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நனவின்கண் வந்து தலையளிசெய்யாதாரை யான் கனவின்கட்கண்ட காட்சியானே என்னுயிருண்டாகாநின்றது, எ-று.

மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. அக்காட்சியானே யானாற்றியுளேனாகின்றேன் நீ கவலல்வேண்டா வென்பதாம்.

(தெ-ப-ரை.)—நனவினான் - நனவில்(வந்து), நல்காதவரை-அருள்செய்யாத தலைவரை, கனவினான் - கனவிடத்து, காண்டலின் - காணுதலால், என் உயிர்—, உண்டு - இருக்கின்றது.

**1213.** My life lasts because in my dream I behold him who does not favour me in my waking hours.

---

ச. கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நனவின்கண்வந்து தலையளி செய்யாதாரை அவர் சென்றுழி நாடிக்கொண்டுவந்து கனவு தருதலான் அக்கனவின்கண்ணே எனக் கின்பமுண்டாகாநின்றது, எ-று.

காமம் - ஆகுபெயர். நான்காவது மூன்றன்பொருண்மைக்கண் வந்தது. இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயமறிந்து சென்று கொண்டுவந்து தந்து நல்குவித்த கனவால் யானாற்றுவ லென்பதாம்.

(தெ - ப - ரை.)—நனவினான் - நனவில்(வந்து), நல்காரை-அருள்செய்யாதவரை, நாடித்தரற்கு-(அவர்போனவிடம்) தேடிக்கொண்டுவந்து தருதலால், கனவினான் - அக்கனவில், காமம் - இன்பமானது, உண்டாகும் - (எனக்கு) உண்டாகின்றது.

**1214.** There is pleasure in my dream, because in it I seek and obtain him who does not visit me in my wakefulness.

---

ரு. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்டபொழுதே யினிது.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—முன்னனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்த வின்பந் தானு மினிதாயிற்று அப்பொழுதே, இன்று கனவின்கட்கண்டு நுகர்ந்த வின்ப மூம் அக்கண்டபொழுதே யினிதாயிற்று, அதனுன் எனக்கிரண்டு மொத்தன, எ-று.

இனிதென்பது முன்னுங்கூட்டப்பட்டது. கனவு ஆகுபெயர். முன்னும் யான்பெற்றதிவ்வளவே, இன்னும் அது கொண்டாற்றுவலென்பதாம்.

(தெ-ப-ரை.)—நனவினுன் - (முன்னே) நனவினிடத்து, கண்டதும் - (தலைவரை) கண்டு அனுபவித்தவின்பமும், ஆங்கே - அக்கண்டபொழுதே, இனிது-இனிதாயிற்று; கனவுந்தான்- (இன்று) கனவினிடத்துக் (கண்டு அனுபவித்த வின்பமும்), கண்ட பொழுதே-இக்கண்டபொழுதே, இனிது-இனிதாயிற்று; (அதனுல் எனக்கு இரண்டும் ஒத்தன.)

**1215.** I saw him in my waking hours, and then it was pleasant; I see him just now in my dream, and it is (equally) pleasant.

---

சு. நனவென வொன்றில்லை யாயிற் கனவினுற்
காதலர் நீங்கலர் மன்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி இல்லையா யின், கனவின்கண்வந்து கூடிய காதலர் என்னைப் பிரியார், எ-று.

ஒன்றென்பது அதன்கொடுமைவிளக்கி நின்றது. அஃது இடையேபுகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்ததென்பது பட நின்றமையின், மன் ஒழி யிசைக்கண் வந்தது. கனவிற்பெற் றாற்றுகின்றமை கூறியவாறு.

(தெ-ப-ரை.)—நனவு என ஒன்று - நனவென்று சொல்லப் படுகின்ற ஒருபாவி, இல்லை ஆயின் - இல்லாவிடின், கனவினுன் - கனவினிடத்து (வந்துகூடிய), காதலர் - அன்பர், நீங்கலர் - (என்னை) பிரியார்.

**1216.** Were there no such thing as wakefulness, my beloved (who visited me) in my dream would not depart from me.

---

எ. நனவினு னல்காக் கொடியார் கனவினு
னென்னெம்மைப் பீழிப் பது.

[விழித்துழிக் காணளாயினள் கனவிற்கூட்ட நினைந்து
ஆற்றாளாய்ச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—ஒருஞான்றும் நனவின்கண் வந்து தலையளிசெய்யாத கொடியவர் நாடோறுங் கனவின்கண் வந்து நம்மைவருத்துவது எவ்வினைபு பற்றி, எ-று.

பிரிதலும் பின்னினைந்து வாராமையுநோக்கிக் கொடியாரென்றும், கன விற்றோன்மேலராய் விழித்துழிக் கரத்தலின் அதனுனுந் துன்பமாகாநின்ற தெ

ன்பாள் பீழிப்பதென்றுங் கூறினாள். நனவினில்லது கனவினுமில்லையென்பார், அது கண்டிலமென்பதாம்.

(தெ - ப - ரை.)—நனவினான் - (ஒருதினமாயினும்) நனவில் வந்து, நல்கா - அருள்செய்யாத, கொடியார்—, கனவினான் - (தினந்தோறும்) கனவில் வந்து, எம்மை—, பீழிப்பது - வருத்துவது, என் - யாதுபற்றி.

**1217.** **The cruel one who would not favour me in my wakefulness, what right has he to torture me in my dreams?**

---

அ. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து.

[தானாற்றுதற்பொருட்டுத் தலைமகனை யியற்பழித்தாட்கு
இயற்படமொழிந்தது.]

(பரி - ரை.) எ-து,—என்னெஞ்சு விடாதுறைகின்ற காதலர் யான் றுஞ்சும்பொழுது வந்து என்றோண்மேலராய்ப் பின் விழிக்கும்பொழுது விரைந்து பழைய நெஞ்சின்கண்ண ராவர், எ-று.

கலவிவிட்டுமறையுங் கடுமைபற்றி விரைந்தென்றாள். ஒருகாலும் என்னினீங்கி யறியாதாரை நீ நோவற்பாலையல்லை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—(என்னெஞ்சு விடாமல் உறைகின்ற காதலர்), துஞ்சுங்கால் - (யான்) தூங்கும்போது, தோள்மேலர் ஆகி—, விழிக்கும் கால் - (பின்) விழிக்கும்போது, விரைந்து—, நெஞ்சத்தர் ஆவர் - (பழைய) நெஞ்சினுள்ளவராவர்.

**1218.** **When I am asleep he rests on my shoulders, (but) when I awake he hastens into my soul.**

---

கூ. நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—தமக்கொருகாதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர் தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலனை அன்பிலரென நோவா நிற்பர், எ-று.

இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலின், நன்மைதோன்றக் கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டறிவாராயின் நங்காதலர் கனவின்கணாற்றி நல்குதலறிந்து நோவாரென்பதாம்.

(தெ - ப - ரை.)—(தமக்கு ஒருகாதலர் இல்லாமையாலே), கனவினான் - கனவிலே, காதலர்க் காணாதவர் - அக்காதலரைக்காணலறியாதமகளிர், நனவினால் - (தாம் அறிய) நனவில்வந்து, நல்காரை - அருள்செய்யாத (எனது) காதலனை, நோவர் - (அன்பிலரென்று) நோவாநிற்பர்.

**1219.** **They who have no dear ones to behold in their dreams blame him who visits me not in my waking hours.**

---

க௦. நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—இவ்வூரின்மகளிர் நனவின்கண் நம்மை நீத்தாரென்று நங்காதலரைக் கொடுமை கூறாநிற்பர், அவர் கனவின்கண் நீங்காதுவருதல் கண்டறியாரோ, எ-று.

என்னொடு தன்னிடை வேற்றுமையின்றாயின் யான்கண்டது தானுங்கண்டமையும், அதுகாணாது அவரைக்கொடுமை கூறுகின்றமையின் அயலாளேயா மென்னுங்கருத்தால், இவ்வூரவரென்றாள்.

(தெ-ப-ரை.)—இ ஊரவர் - இவ்வூரின் மகளிர், நனவினால்-நனவினிடத்து, நம் நீத்தார் என்பர்-நம்மைவிட்டு நீங்கினாரென்று (தலைவர்மேலேகொடுமை) சொல்லாநிற்பர்; கனவினான்-கனவினிடத்து, காணார்கொல் - (அவர்நீங்காது வருதலை) கண்டறியாரோ.

**1220.** **The women of this place say he has forsaken me in my wakefulness. I think they have not seen him visit me in my dreams.**

---

## கஉங-ம். அதி. பொழுதுகண்டிரங்கல்.

---

அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகளிரங்குதல். கனா முந்துறாத வினையில்லை யென்பதுபற்றிப் பகற்பொழுதாற்றி யிருந்தாட்கு உரியதாகலின், இது கனவுநிலையுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

[பொழுதொடு புலந்துசொல்லியது.]

(பரி-ரை) எ-து,—பொழுதே, நீ முன்னாள்களின் வந்த மாலையோவெனின், அல்லை; இருந்தவாற்றான் அந்நாட்காதலரை மணந்த மகளிருயிரை யுண்ணும் இறுதிக்காலமாயிருந்தாய், எ-று.

முன்னாள்-கூடியிருந்த நாள். அந்நாண்மணந்தாரெனவே, பின்பிரிந்தாராதல் பெறுதும். வாழியென்பது குறிப்புச்சொல், "வாலிழை மகளி ருயிர்ப்பொதியவிழ்க்குங் காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. வேலையென்பது ஆகுபெயர். வேலையென்பதற்கு வேலாயிருந்தா யென்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—பொழுது - பொழுதே, வாழி - வாழக்கடவாய்; நீ மாலையோ அல்லை - (முன்னாள்களின்வந்த) நீ மாலைக்கா

லமோ அல்லை; மணந்தார் - (அந்நாள்களிலே காதலனைக்கூடிய) மகளிரது, உயிர் உண்ணும் - உயிரையுண்ணுகிற, வேலை - முடிவுகாலமாயிருந்தாய்.

**1221.** **Live, O you evening; are you (the former) evening? No, you are the season that slays (married) women.**

---

உ. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

[தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—மயங்கியமாலாய், நீயுமெம்போலப் புன்கணுடையையாயிருந்தாய்; நின்றுணையும் எந்துணைபோல வன்கண்மையுடையதோ, கூறுவாயாக, எ-று.

மயங்குதல் - பகலுமிரவுந் தம்முள்ளே விரவுதல்; கலங்குதலுந் தோன்ற நின்றது. புன்கண்-ஒளியிழத்தல்; அதுபற்றித் துணையுமுண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. எமக்குத்துன்பஞ் செய்தாய், நீயுமின்பமுற்றிலை யென்னுங் குறிப்பால் வாழியென்றாள்.

(தெ-ப-ரை.)—மருள் மாலை - மயங்கிய மாலையே! வாழி - வாழக்கடவாய்; (நீயும்), புன் கண்ணை - (எம்போல்) ஒளியிழப்பை யுடையாய்; நின் துணை - உனது துணையும், எம் கேள் போல் - எமது துணைபோல, வன் கண்ணதோ - இரக்கமில்லாமை யுடையதோ, (சொல்லு.)

**1222.** **A long life to you, O dark evening! You are sightless. Is your help-mate (also) as hard-hearted as mine.**

---

௩. பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

[ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—காதலர்கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்கமெய்திப் பசந்துவந்த மாலை இந்நாள் எனக் கிறந்துபாடு வந்துதோன்றி அதற்குளதாந் துன்பம் ஒரு காலைக்கொருகால் மிகவாராநின்றது, எ-று.

குளிர்ச்சிதோன்ற மயங்கிவரு மாலையென்னுஞ் செம்பொருள் இக்குறிப் புணராநின்றது. துனி - உயிர்வாழ்தற்கண் வெறுப்பு. அதனால் யானாற்றுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.

(தெ-ப-ரை.)—(தலைவர் கூடியநாளெல்லாம்), பனி அரும்பி - (என்முன்னே) நடுக்கமடைந்து, பைதல் கொள் மாலை - பசந்துவந்த மாலையானது, துனி அரும்பி - (எனக்கு) உயிர்வாழ்தலில் வெறுப்புண்டாகி, துன்பம் - (அதற்கு உண்டாகிற) துன்பம், வளர - (ஒருகாலைக்கொருகால்) மிக, வரும் - வருகின்றது.

**1223.** **The evening that (once) came in with trembling and dimness (now) brings me an aversion for life and increasing sorrow.**

---

ச. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலருள்ள பொழுதெல்லாம் என்னுயிர் தளிர்ப்ப வந்தமாலை, அவரில்லாத இப்பொழுது அஃதொழிந்து கிற்றலேயன்றிக் கொல்லுங் களரியிற் கொலைஞர் வருமாறுபோல அவ்வுயிரைக்கோடற்கு வாராநின்றது, எ-று.

ஏதிலர் - அருள்யாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்துவந்தபொழுதும் இன்று என்மேற்பகையாய்த் துன்பஞ் செய்துவாராநின்றது, இனி யானுற்றுமா றென்னை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—மாலை - (தலைவர் உள்ளபொழுதெல்லாம் என்னுயிர் தளிர்க்கவந்த) மாலை, காதலர் இல் வழி-தலைவரில்லாத இப்பொழுது, கொலைக் களத்து-கொலைசெய்கிற இடத்திலே, ஏதிலர் போல - கொலைஞர்போல, வரும் - (அவ்வுயிரைக் கொள்ளுதற்கு) வருகின்றது.

**1224.** **In the absence of my lover, evening comes in like slayers on the field of slaughter.**

---

ரு. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காலையும், மாலையும், அவர் கூடியஞான்றுபோலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன: அவற்றுள், யான் காலைக்குச்செய்தவுபகாரம் யாது மாலைக்குச்செய்த அபகாரம் யாது? எ-று.

கூடியஞான்று பிரிவொன் றஞ்சப்பண்ணிய காலை அஃதொழிந்து இஞ்ஞான்று கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய் வாராநின்ற தென்னுங்கருத்தால் நன்றென்கொலென்றும், கூடியஞான்று இன்பஞ்செய்துவந்த மாலை அஃதொழிந்து இஞ்ஞான்று அளவிறுன்பஞ் செய்யாநின்ற தென்னுங்கருத்தாற் பகையெவன்கொலென்றுங் கூறினாள். பகை—ஆகுபெயர். தன்னோடொத்த காலைபோலாது மாலை தன்கொடுமையாற் றுன்பஞ் செய்யாநின்ற தென்பதாம்.

(தெ-ப-ரை.)—(காலையும், மாலையும், அவர் கூடியநாள்போலல்லாமல் இன்று வேறுபட்டு வருகின்றன; அவைகளுள்), காலைக்கு—, செய்த - (என்னாலே) செய்யப்பட்ட, நன்று - உபகாரம், என் - யாது? மாலைக்கு—, செய்த - செய்யப்பட்ட, பகை-அபகாரம், எவன் - யாது?

**1225.** **What good have I done to morning (and) what evil to evening?**

---

சூ. மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

[இன்று இன்னையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்குடம்பட்ட
தென்னையென்றாட்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—முன்னெல்லாம் எனக்குநட்பாய் இன்பஞ் செய்து போந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ்செய்தலைக் காதலர் பிரிதற்குமுன்னே அறியப்பெற்றிலேன், எ-று.

இங்ஙனம் வேறுபடுத லறிந்திலேன், அறிந்தேனாயின் அவர்பிரிவிற் குடம்படே னென்பதாம்.

(தெ - ப - ரை.)—மாலை - (முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்துவந்த) மாலைக்காலம், நோய் செய்தல் - (இன்றுபகையாய்) துன்பஞ் செய்தலை, மணந்தார் - தலைவர், அகலாத காலை - பிரிதற்கு முன்னே, அறிந்தது இலேன் - அறியப் பெற்றிலேன்.

**1226.** Previous to my husband's departure, I knew not the painful nature of evening.

---

எ. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

[மாலைப்பொழுதின்கண் இனையையாதற்குக் காரண
மென்னை யென்றாட்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—இக்காமநோயாகிய பூக் காலைப்பொழுதின்கணரும்பி பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து மாலைப்பொழுதின்கண் மலரா நிற்கும், எ-று.

துயிலெழுந்தபொழுதாகலிற் கனவின்கட்கூட்ட நினைந்தாற்றுதல்பற்றிக் காலையரும்பியென்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவுள்ளி யாற்றாளாதல்பற்றிப் பகலெல்லாம் போதாகியென்றும், தத்தந்துணையை யுள்ளிவந்து சேரும் விலங்குகளையும் மக்களையுங்கண்டு தான் அக்காலத்தி னுகர்ந்த வின்பநினைந்தாற்றாமை மிகுதிபற்றி மாலைமலருமென்றுங் கூறினாள். பூப்போல இந்நோய் காலவயத்த தாகாநின்றதென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. ஏகதேச வுருவகம்.

(தெ-ப-ரை.)—இந் நோய் - இக்காமநோயாகிய (பூ), காலை யரும்பி - காலைப்பொழுதில் அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி - பகற்பொழுதெல்லாம் பெரிய அரும்பாய் முதிர்ந்து, மாலை மலரும் - மாலைப்பொழுதில் மலர்கின்றது.

**1227.** This malady buds forth in the morning, expands all day long and blossoms in the evening.

---

அ. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—முன்னெல்லாம் இனிதாய்ப்போந்த ஆயன்குழல் இது பொழுது அழல்போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய் அதுவந் தென்னைக் கொல்வுழிக் கொல்லும் படையு மாயிற்று, எ-று.

பின்னின்ற போலுமென்பது உரையசை: முன்னரோ வரவுணர்த்தலிற் றூதாயிற்று ; கோறற்கருவியாகலிற் படையாயிற்று. தானே சுடவல்லமாலை இத்துணையும் பெற்றால் என்செய்யா தென்பதாம்.

(தெ - ப - ரை.)—ஆயன் குழல் - (முன்னெல்லாம் இன்பஞ் செய்த) இடையனது வேணுநாதம், அழல் போலும் - (இப்போது) நெருப்புப்போலே சுடுவதாகி, மாலைக்கு தூது ஆகி—, (அம் மாலைவந்து என்னைக் கொல்லுமிடத்து), கொல்லும் படை - கொலைசெய்யும் படையுமாயிற்று.

**1228.** **The shepherd's flute now sounds as a fiery forerunner of night, and is become a weapon that slays (me).**

---

கூ. பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழந் தேன் இனிக் கண்டாரும் மதிமருளும்வகை மாலை வரும்பொழுது இப்பதியெல்லாம் மயங்கி நோயுழக்கும், எ-று.

மதிமருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது. கூற்றமாகக் கருதிக் கூறினாளாகலின், மாலைபடர்தரும்போழ்தென்றாள். யானிறந்துபடுவ லென் பதாம். மாலை மயங்கிவரும் போழ்தென மதிநிலைகலங்கி நோயுழக்குமென் றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—(இதற்கு முன்னெல்லாம் யானே மதிமயங்கி நோயுழந்தேன்), மதிமருண்டு - (இனிக்கண்டாரும்) மதிமருளும்வகை, மாலை—, படர்தரும் போழ்து - வரும்பொழுது, பதி- இவ்வூரெல்லாம், மருண்டு - மயங்கி, பைதல் உழக்கும் - நோயை அனுபவிக்கும்.

**1229.** **When night comes on confusing (every one's) mind, the (whole) town will lose its sense and be plunged in sorrow.**

---

கo. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலர் பிரிவைப் பொறுத்து இறந்துபடாதிருந்த என்னுயிர் இன்று பொருளியல்பே தமக்கியல்பாக வுடையவரை நினைந்து, இம் மயக்குமாலைக்கண்ணே இறந்துபடாநின்றது, எ-று.

குறித்தபருவங் கழியவும் பொருண்முடிவுநோக்கி வாராமையிற் சொல் வேறு படாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல் பாயினர், காலமிதுவாயிற்று, இனி நீ சொல்கின்றவாற்றாற் பயனில்லையென்ப தாம்.

(தெ-ப-ரை.)—என் மாயா உயிர் - (பிரிவைப்பொறுத்து) இறவாதிருந்த என்னுயிரானது, பொருள் மாலை ஆளனை - பொருளியல்பே தமக்கியல்பாக வுடையவனை, உள்ளி - நினைந்து, மருள் மாலை - இம் மயங்கு மாலையிலே, மாயும் - மாய்கின்றது.

**1230.** My (hitherto) unextinguished life is now lost in this bewildering nigh t at the thought of him who has the nature of wealth.

---

## கஉச-ம். அதி. உறுப்புநலனழிதல்.

அஃதாவது தலைமகள் தன் கண்ணும், தோளும், நுதலுமுதலாய அவயவங் கள் தம்மழகழிதல். இஃது, இரக்கமிக்குழி நிகழ்வதாகலின், பொழுதுகண்டி ரங்கலின்பின் வைக்கப்பட்டது.

க. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

[ஆற்றாமைமிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத்
தோழி சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—இவ்வாற்றாமை நங்கண்ணே நிற்பத் தாஞ் சேணி டைச்சென்ற காதலரை நீநினைந்தழுதலால் நின்கண்கள் ஒளியிழந்து முன்றம க்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன, எ-று.

நமக்கென்பது வேற்றுமை மயக்கம். உள்ளவென்பது உள்ளியெனத் திரிந்து நின்றது. உள்ளுதலென்பது காரணப் பெயர் காரியத்திற்காய வாகு பெயர். இவை கண்டார் அவரைக் கொடுமை கூறுவர் நீயாற்றல் வேண்டு மென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—சிறுமை - இப்பொறுமை, நமக்கு ஒழிய - நம்மிடத்துநிற்க, சேண் சென்றார் - நெடுந்தூரத்திலே சென்ற தலைவரை, உள்ளி - நினைத்து (அழுதலால்), கண் - (உன்) கண் கள், (ஒளியிழந்து), நறுமலர் - (முன்னே தமக்குநாணின) நல்ல மலர்களுக்கு, நாணின - (இன்று) நாணிவிட்டன.

**1231.** While we endure the unbearable sorrow, your eyes weep for him who is gone afar, and shun (the sight of) fragrant flowers.

---

உ. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—பசப்பெய்தன்மே னீர்வார்கின்ற நின் கண்கள் நம்மா னயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலா நின்றன, இனி நீயாற்றல் வேண்டும், எ-று.

சொல்லுவபோறல் அதனை யவருணர்தற் கனுமானமாதல். நயந்தவர்க் கென்று பாட மோதுவாரு முளர்.

(தெ-ப-ரை.)—பசந்து - நிறம் வேறுபட்டு, பனிவாரும் கண் - நீர் ஒழுகுகின்ற கண்கள், நயந்தவர் - (நம்மால்) விரும்பப் பட்டவரது, நல்காமை - அருள்செய்யாமையை, சொல்லுவ போலும் - (பிறர்க்குச்சொல்லுவ) போல்கின்றன, (இனி நீ பொறுத்தல்வேண்டும்.)

**1232.** The discoloured eyes that shed tears profusely seem to betray the unkindness of our beloved.

---

௩. தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காதலர் மணந்த ஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின் றோள்கள் இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவதுபோல மெலியாநின்றன, இது தகாது, எ-று.

அன்று மவ்வாறு பூரித்து இன்று மிவ்வாறு மெலிந்தால் இரண்டுங் கண்டவர் கடிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவ ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—மணந்த நாள் - (தலைவர்) கூடிய நாளில், வீங்கிய - (இன்பமிகுதியால்) பூரித்த, தோள் - (நினது) தோள்கள், தணந்தமை - (இன்று அவர்) பிரிந்தமையை, சால அறிவிப்ப போலும் - விளங்க அறிவிப்பவைபோல் வாடுகின்றன, (இது தகாது.)

**1233.** The shoulders that swelled on the day of our union (now) seem to announce our separation clearly (to the public).

---

௪. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—அன்றுந் தந் துணைவர் நீங்குதலான் அவராற்பெற்ற செயற்கை யழகே யன்றிப் பழைய வியற்கை யழகுமிழந்த இத்தோள்கள் இன்றதற்குமேலே தம்பெருமை யிழந்து வளை கழலாநின்றன, இவை யின்னஞ் செயற்பாலவல்ல, எ-று.

பெருமையிழத்தல்—மெலிதல். பைந்தொடி—பசிய பொன்னாற் செய்த தொடி. சோருமென்னும் வினைத்தொழில் தோண்மேனின்றது. அன்றும் பிரிந்தாரென்று அவரன்பின்மை யுணர்த்தி இன்றுங் குறித்த பருவத்து வந்திலரென்று அவர் பொய்ம்மை யுணர்த்தாநின்றன, இனி அவற்றைக் கூறுகின்றார் மேற் குறையுண்டோ வென்பதாம்.

(தெ-ப-ரை.)—துணை நீங்கி - (அன்றும்) துணைவர் நீங்குதலால், (அவராலே பெற்ற செயற்கை யழகுமாத்திர மல்லாமல்),

தொல் கவின் - பழைய இயற்கையழகும், வாடிய தோள் - இழந்த இத்தோள்கள், (இன்று அதற்குமேலே), பணை நீங்கி - (தம்) பெருமையிழந்து, பைந்தொடி - பசும்பொன்வளைகள், சோரும்- கழலுகின்றன; (இவை இப்படிசெய்யுந் தன்மையனவல்ல.)

**1234.** In the absence of your consort, your shoulders having lost their former beauty and fulness, your bracelets of pure gold have become loose.

---

௫. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—கவவுக்கை நெகிழினும் ஆற்றாதாட்கு இக்கால நீட்டத்து என்னுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன, வளைகளுங் கழன்று பழையவியற்கை யழகு மிழந்த இத்தோள்கள், இனியதனை யா மறைக்குமா றென்னை, எ-று.

உரைக்கு மென்பது அப்பொருண்மை தோன்ற நின்ற குறிப்புச்சொல். ஒடு வேறுவினைக்கண் வந்தது. அவரொடு கலந்த தோள்களே சொல்லுவன வானால் அயலார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(தெ - ப - ரை.)—கொடியார் - (தழுவுங்கை விலகினும் பொறாதவளுக்கு இப்படி காலநீட்டிப்பில் என்னுமென்று நினையாத) கொடியவரது, கொடுமை - பொல்லாங்கை, உரைக்கும்- சொல்லுகின்றன, தொடியொடு - வளைகளுங்கழன்று, தொல் கவின் வாடிய தோள் - பழைய இயற்கையழகு மிழந்த இத்தோள்கள், (இனி அதனை மறைக்கும் வழி யாது).

**1235.** The (loosened) bracelets, and the shoulders from which the old beauty has faded, relate the cruelty of the pitiless one.

---

௬. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து.

[தானாற்றுதற்பொருட் டியற்பழித்த தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—யானாற்றவும் என்வயத்த வன்றித் தொடிகள் கழலுமாறு தோள்கண் மெலிய, அவற்றைக் கண்டு, நீ யவரைக் கொடியரெனக் கூறுதலைப் பொறாது யானென்னுள்ளே நோவாநின்றேன், எ-று.

ஒடு மேல்வந்த பொருண்மைத்து. யானாற்றே னாகின்றது அவர் வாராததற் கன்று நீ கூறுகின்றதற் கென்பதாம்.

(தெ-ப-ரை.)—(யான் பொறுக்கவும் என்வசப் படாமல்), தொடியொடு - வளைகள் கழலும்படி, தோள் நெகிழ - தோள்கள் வாட, (அவற்றைக்கண்டு), அவரை—, கொடியார் எனகூ

றல் - (நீ) கொடியவனென்று சொல்லலே, நொந்து - பொறுமல், நோவல் - (என்னுள்ளே) நோகின்றேன்.

**1236.** I am greatly pained to hear you call him a cruel man, just because your shoulders are reduced and your bracelets loosened.

---

எ. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

[அவ்வியற் பழிப்புப் பொறாது தன்னெஞ்சிற்குச்
சொல்லியது.]

(பரி -ரை.) எ-து,—நெஞ்சே, இவள் கொடியா ரென்கின்றவர்க்கு நீ சென்று என் மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி ஒரு மேம்பாடெய்த வல்லேயோ, வல்லையாயின் அதனை யொப்பதில்லை, எ-று.

கொடியார்க் கென்பது கொடியரல்ல ரென்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல். வாடுதோ ளென்பதும் அவை தாமே வாடாநின்றன வென்பது தோன்றநின்றது. பூசல்—ஆகுபெயர். அஃது அவள் தோளுெக்கி யியற்பழித்தன் மேலும் அதனாற் றனக் காற்றாமை மிகன்மேலும் நின்றது. நின்னுரை கேட்டலும் அவர் வருவர், வந்தால் இவையெல்லா நீங்கும், நீங்க அஃதெனக்குக் காலத்தினாற் செய்த நன்றி யாமாகலின், அதன்பய னெல்லா மெய்துதி யென்னுங் கருத்தாற் பாடு பெறுதியோ வென்றாள்.

(தெ - ப - ரை.)—நெஞ்சே - நெஞ்சமே! கொடியார்க்கு - (இவளாலே) கொடியாரென்று சொல்லப்பட்டவர்க்கு, என்வாடு தோள் - என்வாடுகின்ற தோளினால் விளைகிற, பூசல் - ஆரவாரத்தை, உரைத்து - சொல்லி, பாடு - ஒரு மேம்பாட்டை, பெறுதியோ - அடையவல்லேயோ, (வல்லையாயின் அதனை யொப்பது இல்லை.)

**1237.** Can you O my soul! gain glory by relating to the (so-called) cruel one the clamour of my fading shoulders?

---

அ. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

[வினைமுடித்து மீடலுற்ற தலைமகன் முன்னிகழ்ந்தது
நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—தன்னையிறுக முயங்கிய கைகளை இவட்குநோமென்று கருதி ஒருஞான் றியானெகிழ்ந்தேனாக அத்துணையும் பொறாது பைந்தொடிகளை யணிந்த பேதையது நுதல் பசந்தது, அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கியாது செய்யுமோ, எ-று.

இனிக் கடிதிற் செல்லவேண்டுமென்பது கருத்து.

(தெ - ப - ரை.)—முயங்கிய கைகளை - (தன்னை இறுக) தழுவிய கைகளை, (இவளுக்கு நோமென்று நினைத்து), ஊக்க -

(ஒருதினம்) தளர்த்தினேனாக; (அம்மாத்திரமும் பொறாமல்), பைங்தொடி - பசியவளைகளை அணிந்த, பேதை நுதல்-பேதையது நெற்றியானது, பசந்தது - நிறம்வேறுபட்டது; (அப்படிப் பட்ட நெற்றி இப்பிரிவிற்கு யாதுசெய்யுமோ?)

**1238.** When I once loosened the arms that were in embrace, the forehead of the gold-braceleted woman turned sallow.

---

௯. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

[இதுவுமது.]

(பரி-கா.) எ-து,—அங்ஙனங் கைகளை யூக்குதலான் அம்முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக அத்துணையிடையீடும் பொறாது, பேதையுடைய பெரியமழைக்கண்கள் பசப்புற்றன; அத்தன்மையவான கண்கள், மலைகளும் காடும் நாடுமாய இவ்விடையீடுகளையெல்லாம், யாங்ஙனம் பொறுத்தன, எ-று.

தண்மை—ஈண்டு மென்மைமேனின்றது. போழவென்றது உடம்பிரண்டும் ஒன்றானதுதோன்ற நின்றது. மழை – குளிர்ச்சி.

(தெ-ப-கா.)—(அப்படி தழுவிய கைகளைத் தளர்த்தலால்), முயக்கு இடை - அப்புணர்ச்சிக்கு நடுவே, தண் வளி போழ - சிறுகாற்று நுழைந்ததாக, (அவ்வளவிடையீடும் பொறாமல்), பேதை பெரு மழைக்கண் - பேதையினது பெரிய குளிர்ந்தகண்கள், பசப்புற்ற - பசலைநிற மடைந்தன; (அப்படிப்பட்ட கண்கள் மலைகளும் காடுகளும் நாடுகளும் ஆகிய இவ்விடையீடுகளையெல்லாம் எப்படி பொறுத்தன?)

**1239.** When but a breath of breeze penetrated our embrace, her large cool eyes became sallow.

---

௧0. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு.

[இதுவுமது.]

(பரி - கா.) எ-து,—தண்வளி போழவந்த கண்ணின் பசப்புத் துன்பமுற்றது, தனக்கயலாய ஒண்ணுதல் விளைத்த பசப்பைக் கண்டு, எ-று.

அது கைகளையூக்க அவ்வளவிற் பசந்தது, யான் கைகளையுமூக்கி மெய்களு நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்குந்துணையும் பசந்திலனெனத் தன்வன்மையும் அதன் மென்மையுங் கருதி வெள்கிற்றென்பதாம்: ஆகவே அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும், யாங்கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று.

(தெ - ப - கா.)—கண்ணின் பசப்போ-(சிறுகாற்று நுழையவந்த) கண்களின்பசப்போ, பருவரல் எய்தின்று - துன்பமடைந்தது; ஒள் நுதல் - (தனக்கு அயலாகிய) ஒளிபொருந்

திய நெற்றியால், செய்தது - விளைக்கப்பட்ட பசப்பை, கண்டு-பார்த்து.

**1240**. Was it at the sight of what the bright forehead had done that the sallowness of her eyes became sad?

## ௧௨௬ - ம். அதி. நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது ஆற்றாமை மீதூரத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திறனறியாது சொல்லுதல். இஃது, உறுப்புக்கள் தந்நலனழிந்தவழி நிகழ்வதாகலின், உறுப்பு நலனழிதலின்பின் வைக்கப்பட்டது.

௧. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்
றெவ்வநோய் தீர்க்கு மருந்து.

[தன்னாற்றாமை தீருந்திறனுடையது.]

(பரி-ரை.) எ-து,—நெஞ்சே இவ்வெவ்வ நோயினைத் தீர்க்கு மருந்தாவ தொன்றனை, யானறியு மாற்றலிலன், எத்தன்மைய தியாதொன்றாயினும் நீ யறிந் தெனக்குச் சொல், எ-று.

எவ்வம் - ஒன்றானுந் தீராமை. உயிரினுஞ் சிறந்த நாணினை விட்டுச் செய்வதியாதொன்றாயினு மென்பாள், எனைத்தொன்று மென்றாள்.

(தெ - ப - ரை.)—நெஞ்சே—, எவ்வம் நோய் - ஒன்றாலுந் தீராதநோயை, தீர்க்கும் மருந்து—, ஒன்று - ஒன்றை, (நான் அறியும்படியாக), எனைத்து ஒன்றும் - எப்படிப்பட்ட தொன்றாயினும், நினைத்து - அறிந்து, சொல்லாயோ - (எனக்கு) சொல்லாயோ.

**1241**. O my soul, will you not think and tell me some medicine, be it what it may, that can cure this incurable malady?

௨. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

[தலைமகனைக் காண்டற்கண் வேட்கை மிகுதியாற் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—என்னெஞ்சே, வாழ்வாயாக, அவர் நங்கட் காதலிலராகவும் நீயவர் வரவுநோக்கி வருந்துதற்கேது நின்பேதைமையே, பிறிதில்லை, எ-று.

நம்மை நினையாமையின் நங்கட்காதலிலரென்ப தறியலாம், அஃதறியாமை மேலும் அவர்பாற்செல்லக் கருதாது அவர்வரவு பார்த்து வருந்தா நின்றாய், இது நீ செய்துகொள்கின்ற தென்னுங் கருத்தாற் பேதைமை யென்றாள். வாழி இகழ்ச்சிக்குறிப்பு. யாமவர்பாற்சேறலே அறிவாவதென்பதாம்.

(தெ - ப - ரை.)—என்னெஞ்சு - எனது நெஞ்சே, வாழி - வாழ்வாயாக; அவர்—, காதல் இலராக - (நம்மேல்) ஆசையிலராகவும், நீ நோவது - நீ (அவர் வரவுபார்த்து) வருந்துதற்குக் காரணம், பேதைமை - (உன்) அறியாமையேயாம், (வேறொன்று இல்லை.)

**1242.** May you live, O my soul! While he is without love, for you to suffer is (simple) folly.

---

௩. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நெஞ்சே, அவர்பாற் செல்வதுஞ் செய்யாது ஈண்டிறந்துபடுவதுஞ் செய்யாதிருந்து அவர்வரவு நினைந்து நீவருந்துகின்றதென்னை? இப்பையு ணோய் செய்தார்மாட்டு நமக்கிரங்கிவரக் கருதுதல் உண்டாகாது, எ-று.

நம்மாட்டருளுடைய ரன்மையிற் றாமாக வாரார், நாஞ்சேறலே இனித் தகுவ தென்பதாம்.

(தெ - ப - ரை.)—நெஞ்சே - மனமே, இருந்து - (அவரிடத்துக்கும் போகாமல் இங்கேயும் இறந்திடாமல்) இருந்து, உள்ளி - (அவர்வரவை) நினைந்து, பரிதல் - (நீ) வருந்துகின்றது, என் - என்னை? பைதல் நோய் செய்தார்கண் - இத்துன்பநோய் செய்தவரிடத்து, பரிந்து - (நமக்கு) இரங்கி, உள்ளல் - (வர) நினைத்தல், இல் - உண்டாகாது.

**1243.** O my soul, why remain (here) and suffer thinking (of him)? There are no lewd thoughts (of you) in him who has caused you this disease of sorrow.

---

௪. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நெஞ்சே நீயவர்பாற் சேறலுற்றாயாயின் இக்கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக; அன்றி நீயே சேறியாயின், இவைதாங் காட்சி விருப்பினால் அவரைக் காண்டல்வேண்டி நீகாட்டென்று என்னைத் தின்பனபோன்று நலியா நிற்கும், எ-று.

கொண்டென்பது கொளவெனத் திரிந்து நின்றது. தின்னுமென்பது இலக்கணைக்குறிப்பு. அந்நலிவு தீர்க்கவேண்டு மென்பதாம்: என்றது தான்சேறல் குறித்து.

(தெ - ப - ரை.)—நெஞ்சே—, (நீ அவரிடத்துச் செல்லலுற்றாயாயின்), கண்ணும் கொள சேறி - இக்கண்களையும் உடன்

கொண்டு செல்லு; (அல்லாமல் நீமாத்திரம் செல்வாயாகுல்), இவை - இக்கண்கள், அவர் காணல் உற்று - அவரைக் காணல் வேண்டி, என்னை—, தின்னும் - (நீகாட்டென்று) தின்பனவைபோல் வருத்தும்.

**1244.** O my soul, take my eyes also with you. (If not), these would eat me up (in their desire) to see him.

---

௫. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நெஞ்சே யாம் தம்மையுறத் தாமுறாத நங்காதலரை வெறுத்தாரென்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ இல்லை, எ-று.

உறுதல்—அன்பு படுதல். அவ்வலியின்மையின் அவர்பாற் செல்வதே நமக்குத் தகுவ தென்பதாம்.

(தெ - ப - ரை.)—நெஞ்சே - மனமே, யாம்—, உற்றால் - (தம்மை) விரும்ப, உறாதவர் - (நம்மை) விரும்பாத தலைவரை, செற்றார் என - வெறுத்தாரென்று நினைந்து, கை விடல் - (பிணங்கி) கைவிட்டிருக்கும்வழி, உண்டோ - (நமக்கு) உண்டோ, [இல்லை.]

**1245.** O my soul, can he who loves not though he is beloved, be forsaken saying he hates me (now)?

---

௬. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திியென் னெஞ்சு.

[தலைமகன் கொடுமை நினைந்து செலவுடன்படாத
நெஞ்சினைக் கழறியது.]

(பரி - ரை.) எ-து,—என்னெஞ்சே, யான்றம்மொடு புலந்தால் அப்புலவியைக் கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் கண்டாற் பொய்யேயாயினும் ஒருகாற் புலந்து பின்னதனை நீங்கமாட்டாய்; அதுவுமாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியரெனப் பொய்க்காய்வு காயாநின்றாய்; இனி யிதனையொழிந்து அவர்பாற் செல்லத் துணிவாயாக, எ-று.

கலத்தலா னென்னும் பொருட்டாய கலக்கவென்பது திரிந்து நின்றது. அதனா னுணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக்கிப் புலவிக் குறிப்பினை யொழித்தல். பொய்க்காய்வு - நிலையில் வெறுப்பு. கண்டான் மாட்டாத நீ காணாதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—என் நெஞ்சு - எனது நெஞ்சே! (யான் தம்மோடு பிணங்கினால்), கலந்து - புணர்தலால், உணர்த்தும்

காதலர் - (அப்பிணக்கை) நீக்கவல்ல தலைவரை, கண்டால்—, புலந்து - (பொய்யாகவாயினும் ஒருதரம்) பிணங்கி, உணராய் - (பின்) அதனை நீங்கமாட்டாய்; (அதுவுமாட்டாத நீ இப்போது), பொய் காய்வு காய்தி - (அவரைக் கொடியரென்று) பொய்க் காய்வாகக் காய்கின்றாய், (இனி அதனையொழிந்து அவரிடத்துச் செல்லத்துணி.)

**1246.** O my soul, when you see the dear one who removes dislike by intercourse, you are displeased and continue to be so. Nay, your displeasure is (simply) false.

---

எ. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

[நாண்டடுத்தலின் அச்செலவொழிவாள் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நல்லநெஞ்சே ஒன்றினன் விடமாட்டாயாயிற் காம வேட்கையை விடு, ஒன்றினது விடமாட்டாயாயின் நாணினை விடு, அன்றியே இரண்டும் விடாமை நின் கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய் இவ் விரண்டனையும் உடன்றாங்குமதுகை யானிலன், எ-று.

யானோவென்னும் பிரிநிலை நீபொறுப்பினு மென்பதுபட நின்றது. நன்னெஞ்சே யென்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின், நல்லை யென்னுங் குறிப்பிற்று. அது நன்றே யெனினும் என்னுயிருண்டாதல் சாலாமையின், அதற்காகின்றிலே னென்பதாம். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

(தெ-ப-ரை.)—நல் நெஞ்சே-நல்லமனமே! ஒன்று காமம் விடு - ஒன்று (நாணம்விடமாட்டாயாகில்) காமவிருப்பத்தை விட்டுவிடு; (ஒன்று) நாண் விடு - ஒன்று (காமவிருப்பத்தை விடமாட்டாயாகில்) நாணத்தை விட்டுவிடு; (இரண்டும் விடாமை உன்கருத்தாகில்), இவ்விரண்டு - (ஒன்றற்கொன்று பகையாகிய) இவ்விரண்டையும், யானோ - நானோ, பொறேன் - (ஒருசேர) தாங்கவல்லேனல்லேன்.

**1247.** O my good soul, give up either lust or honour, as for me I can endure neither.

---

அ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—என்னெஞ்சே, அவர் இவ்வாற்றாமையை யறியாமையின் நொந்துவந்து தலையளி செய்யாராயினரென்று கருதி அஃதறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்துபோயவர்பின் ஏங்கிச் செல்லுற்ற நீ யாதுமறியாய். எ-று.

ஆற்றாமை கண்டுவைத்தும் நல்காது போயினாரைக் காணுதவழிச் சென்றறிவித்த துணையானே நல்கவருவரென்று கருதினமையிற் பேதையென்றாள்.

(தெ-ப-ரை.)—என் நெஞ்சு - எனது நெஞ்சே! அவர்—, (இப் பொறுமை அறியாமையால்), பரிந்து - நொந்துவந்து, நல்கார் என்று - அருள்செய்யா ராயினரென்று நினைந்து, (அதை அறிவித்தற்பொருட்டு) பிரிந்தவர் பின் - (நம்மை) பிரிந்துபோகிய தலைவர்பின்னே, ஏங்கி—, செல்வாய் - போகலுற்ற நீ, பேதை - ஒன்றுமறியாய்.

**1248**. You are a fool, O my soul, to go after my departed one, while you mourn that he is not kind enough to favour you.

---

கூ. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—என்னெஞ்சே, காதலர் நின்னகத்தாராக, முன்பெல்லாங் கண்டு வைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச் செல்கின்றது யாரிடத்து, எ-று.

உள்ளமென்புழி அம்முப் பகுதிப்பொருள் விகுதி. நின்னகத்திருக்கின்றவரை அஃதறியாது புறத்துத்தேடிச் சேறல் நகையுடைத்து, அதனையொழியென்பதாம்.

(தெ - ப - ரை.)—என் நெஞ்சு - எனது நெஞ்சே! காதலவர் - அன்பர், உள்ளத்தார் ஆக - (உன்) உள்ளிருப்பவராக, (முன்னெல்லாங் கண்டிருந்தும்), நீ—, உள்ளி - (இப்பொழுது புறத்தே) தேடி, யார் உழை - யாரிடத்து, சேறி - செல்லுகிறாய்.

**1249**. O my soul, to whom would you repair, while the dear one is within yourself.

---

கo. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.

[அவரை மறந்தாற்றல் வேண்டுமென்பதுபடச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—நம்மைக் கூடாவண்ணந் துறந்துபோயினாரை நாம் நம்மகத்துடையேமாக, முன்னிழந்த புறக்கவினே யன்றி நின்ற அகக்கவினு மிழப்பேம், எ-று.

"குன்றி—னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்" என்புழிப்போல நெஞ்சென்பது ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது. அவர் நம்மைத் துன்னமற் றுறந்தாராகவும், நாமவரை மறத்தன் மாட்டேமாகவும், போன மெய்க்கவினேயன்றி நின்றநிறையு மிழப்பே மென்பதாம்.

(தெ - ப - ரை.) — துன்னா - (நம்மை) கூடாதவண்ணம், துறந்தாரை - துறந்துபோயினாரை, நெஞ்சத்து உடையேம் ஆ -

(நாம்) உள்ளுடையேமாக, (முன்னிழந்த புறத்தழகேயன்றி), இன்னும்—, கவின் - (அகத்) தழகையும், இழத்தும் - இழப்போம்.

1250. If I retain in my heart him who has left me without befriending me, I shall lose even the (inward) beauty that remains.

---

## கஉசூ - ம். அதி. நிறையழிதல்.

அஃதாவது தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கை மிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்: "நிறையெனப் படுவது மறைபிற றறியாமை" என்றார் பிறரும். அஃதழிதற் காரணம் நெஞ்சொடு கிளர்தலமையின், இது நெஞ்சொடு கிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

[நாணுநிறையுமழியாமை நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நாணாகிய தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவினைக் காமவேட்கை யாகிய கணிச்சி முறியா நின்றது, இனி அவைநிற்றலு மில்லை, யானாற்றலு மில்லை, எ-று.

கணிச்சி-குந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியா தாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்துக்கிடந்தன பிறர் கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலிற் றன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள்.

(தெ - ப - ரை.)—நாணுத்தாழ் வீழ்த்த - நாணாகிய தாழினைக்கோத்த, நிறை என்னும் கதவு - நிறையென்று சொல்லபடுகிற கதவை, காமக்கணிச்சி - காமவேட்கையாகிய குந்தாலி, உடைக்கும் - முறிக்கின்றது; (இனி அவை நிற்றலும் இல்லை. யான் பொறுத்தலும் இல்லை.)

1251. The axe of lust can break the door of chastity which is bolted with the bolt of modesty.

---

உ. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

[நெஞ்சின்கட்டோன்றிய காமம் நெஞ்சாலடக்கப்படு
மென்றாட்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—எல்லாருந் தொழிலொழியு மிடையாமத்தும் என்னெஞ்சத்தை யொறுத்துத் தொழில் கொள்ளா நின்றது, ஆகலாற் காமமென்று சொல்லப்பட்ட வொன்று கண்ணோட்ட மின்றா யிருந்தது, எ-று.

ஓவென்பது இரக்கக்குறிப்பு. தொழிலின் கண்ணே யாடல் - தலைமகன் பாற் செலவிடுத்தல். தாயைப்பணிகோடல் உலகியலன்மையிற் காமமென வொன்றென்றும், அது தன்னைக் கொள்கின்றது அளவறியாது கோடலிற் கண் ணின்றென்றுங் கூறினள். அடக்கப் படாமை கூறியவாறு.

(தெ - ப - ை.)—யாமத்தும் - (எல்லாருந் தொழிலொழி கிற) நடுராத்திரியிலும், என் நெஞ்சத்தை—, தொழில் - தொழிலிலே, ஆளும் - (தண்டித்து) ஆளுகின்றது; (ஆதலால்), காமம் என ஒன்று - காமமென்று சொல்லப்பட்ட ஒன்று, ஓ - ஐயோ! கண் இன்று - கண்ணோட்டமில்லதாயிருந்தது.

**1252**. **Even at midnight is my mind worried by lust, and this one thing, alas! is without mercy.**

---

௩. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

[மகளிர்காமம் மறைக்கப்படுமென்றாட்குச் சொல்லியது.]

(பரி-ை.) எ-து,—இக்காமத்தை யானென்னுள்ளே மறைக்கக் கருதுவேன்: அதனான் இஃதென் கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டே' விடா நின்றது, எ-று.

மன்—ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம்—பிரிநிலைக்கண் வந்தது. தும்மலடங்காதாற்போல அடங்குகின்ற தில்லை யென்பதாம்.

(தெ - ப - ை.)—காமத்தை - இக்காமத்தை, யான்—, ஓ ஐயோ! மறைப்பேன் - (என்னுள்ளே) மறைக்க நினைப்பேன்; (அதனால்) குறிப்பு இன்றி - (இது) என்கருத்தின்வழி வாராமல், தும்மல்போல்—, தோன்றிவிடும் - வெளிப்பட்டே விடுகின்றது.

**1253**. **I would conceal my lust, but alas, it yields not to my will, but breaks out like a sneeze.**

---

௪. நிறையுடையே னென்பேன்மன் யானோவென்காம
மறையிறந்து மன்று படும்.

[இதுவுமது.]

(பரி-ை.) எ-து,—இன்றினாங்கெல்லாம் யானென்னை நிறையுடையே னென்று கருதி யிருந்தேன்; அதனான் இன்றென் காமம் மறைத்தலைக் கடந்து மன்றின்கண் வெளிப்படா நின்றது, எ-று.

மன்னும் ஓவும்-மேலவற்றின்கண் வந்தன. மன்று படுதல்-பலருமறிதல். இனி என்வரைத்தன் றென்பதாம்.

(தெ - ப - ை.)—ஓ - ஐயோ! நிறை உடையேன் என்பேன் - (இதுவரையும் என்னை) நிறையுடையேனென்று நினைத்திருப்பேன்; (அதனால்), என் காமம் - எனதுகாமம், மறை இற

ந்து – மறைத்தலைக்கடந்து, மன்று படும் – பலருமறியப் படுகின்றது.

1254. I say I would be firm, but alas, my malady breaks out from its concealment and appears in publio.

---

ரு. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று.

[நம்மை மறந்தாரை நாமுமறக்கற்பால மென்றாட்குச்
சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—தம்மையகன்று சென்றார் பின் செல்லாது தாமும் அகன்றுநிற்கு நிறையுடைமை காமநோயினையுறுதார் அறிவதொன்றன்றி உற்றார் அறிவதொன்றன்று, எ-று.

இன்பத்தொடுகழியுங் காலத்தைத் துன்பத்தொடுகழியுமாறு செய்தலிற் செற்றாரென்றாள். பின்சேறல்-மனத்தால் இடைவிடாதுநினைத்தல். பெருந்தகைமை-ஈண்டாகுபெயர். காமநோயுறுதார்-மானமுடையார். நன்றெனவுணரார் மாட்டுஞ் சென்றேநிற்கும் யானறிவதொன்றன் றென்பதாம்.

(தெ-ப-ரை.)—செற்றார் பின் - (தம்மை) நீங்கிப் போனவர்பின், செல்லா - செல்லாது (தாமும் நீங்கி நிற்கிற), பெருந்தகைமை - நிறையுடைமையானது, காமநோய் உற்றார் - காமநோயடைந்தவரால், அறிவது ஒன்று அன்று - அறியப்படுவதொன்றன்று.

1255. The dignity that would not go after an absent lover is not known to those who are stricken by love.

---

௬. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—என்னையகன்று சென்றார்பின்னே யான் சேறலை வேண்டுதலான் என்னை யுற்றதுயர் எத்தன்மையது ? சாலநன்று, எ-று.

செற்றவரென்றது - ஈண்டும் அப்பொருட்டு. வேண்டவென்பது வேண்டியெனத் திரிந்துநின்றது. அளித்தென்பது இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோய் யான்சொல்லவுங் கேட்கவுமாவ தொன்றன்று, சாலக்கொடி தென்பதாம்.

(தெ - ப - ரை.)—செற்றவர் பின் - (என்னைநீங்கி) சென்றவர்பின்னே, சேறல் வேண்டி - (யான்)செல்லல்வேண்டுதலால், என்னை உற்ற துயர் - என்னையடைந்த துன்பமானது, எற்று - எத்தன்மையது ; அளித்து – மிகநன்று.

1256. The sorrow I have endured by desiring to go after my absent lover, in what way is it excellent?

---

எ. நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

[பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற்கூடிய தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுமளவின் நாணென் றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம், எ-று.

பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. விரும்பியன - வேட்கைமிகவினாற் கருதியிருந்த கலவிகள். நாண் - பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்றென்பது - ஈண்டுச் சிறிதென்னும்பொருட்டு. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நிறையழிவான் அறியாது கூடிய தன்குற்றநோக்கி, அவளையுமுளப்படுத்தாள்.

(தெ - ப - ரை.)—பேணியார் - (நம்மால்) விரும்பப்பட்ட தலைவர், (வந்து), காமத்தால்—, பெட்ப - (நாம்) விரும்பியவைகளை, செயின் - செய்யுமளவில், நாண் என ஒன்று - நாணென்று சொல்லப்பட்ட ஒன்றையும், அறியலம் - அறியமாட்டேமாயிருந்தோம்.

**1257.** I know nothing like shame when my beloved does from love (just) what is desired (by me).

---

அ. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நந்நிறையாகிய வரணையழிக்குந் தானை பலபொய்களை வல்ல கள்வனுடைய தாழ்ந்தசொற்க ளன்றோ? ஆனபின் அது நிற்குமாறென்னை? எ-று.

பெண்மை ஈண்டுத் தலைமைபற்றி நிறைமேனின்றது. வந்தாற் புலக்கக்கடவேமென்றும் புலந்தால் அவன் சொற்களானுஞ் செயல்களானும் நீங்கேமென்றும் இவைமுதலாகவெண்ணிக்கொண்டிருந்தன யாவுங் காணாது கலவிக்கட் டன்னினு முற்படும்வகை வந்துதோன்றினா னென்பாள், பன்மாயக்கள்வனென்றாள். பணிமொழி - நம்மினுந்தானன்பு மிகுதியுடையனாகச் சொல்லுஞ் சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நந்நிறை யழியாதொழியுமோ வென்பதாம்.

(தெ-ப-ரை.)—நம் பெண்மை - நமதுநிறையாகிய (அரணத்தை), உடைக்கும் - அழிக்கிற, படை - ஆயுதம், பல் மாயம் கள்வன் - பலபொய்கள் பேசவல்ல கள்வனுடைய, பணிமொழி அன்றோ - தாழ்ந்த சொற்களன்றோ, (ஆனபின் அது நிற்கும் விதம் யாது?)

**1258.** Are not the enticing words of my trick-abounding roguish lover the weapon that breaks away my feminine firmness.

---

கூ. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—அவர் வந்தபொழுது புலக்கக்கடவேனென்று கருதி முன்னில்லாது பிறிதோரிடத்துப் போயினேன்; போயும், என்னெஞ்சம் நிறையினில்லாது அறைபோய் அவரோடு கலத்தறொடங்குதலை யறிந்து, இனி அது வாயாதென்று புல்லினேன், எ-று.

வாயாமை - புலத்தற் கருவியாய் நெஞ்சுதானே கலத்தற் கருவியாய் நிற்றலின் அது முடியாமை.

(தெ - ப - ரை.)—(அவர்வந்தபொழுது), புலப்பல் என - பிணங்கக்கடவேனென்று நினைத்து, சென்றேன் - (அவரெதிர் நில்லாமல் வேறோரிடத்திலே) போயினேன்; (போகியும்), நெஞ்சம் - (என்) னெஞ்சமானது, (நிறையினில்லாமல் கீழறுத்துக்கொண்டுபோய்), கலத்தல் உறுவது - (அவரோடு) கலத்தலைத்தொடங்குவதை, கண்டு - அறிந்து, புல்லினேன் - (இனி அதுவாயாதென்று) தழுவினேன்.

**1259.** I said I would feign dislike and so went (away); (but) I embraced him the moment I saw my mind begin to unite with him.

---

க௦. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நிணத்தைத் தீயின்கண்ணே யிட்டால் அஃதுருகுமாறுபோலத் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துருகு நெஞ்சினையுடைய மகளிர்க்கு, அவர் புணர யாமூடிப் பின்பு உணராது அந்நிலையே நிற்கக்கடவேமென்று கருதுதலுண்டாகுமோ, ஆகாது, எ-று.

புணர்தல் - ஈண்டு மிகநணுகுதல்; எதிர்ப்படலுமாம். புணரவென்பது புணர்ந்தெனத் திரிந்து நின்றது. யானத்தன்மையே னாகலின் எனக்கஃதில்லையாயிற்றென்பதாம்.

(தெ-ப-ரை.)—நிணம் தீயில் இட்டன்ன - நிணத்தைத் தீயிலிட்டால் அது உருகுமாறுபோல் (தந்தலைவரைக்கண்டால் நிறையழிந்து உருகுகின்ற), நெஞ்சினார்க்கு - நெஞ்சினையுடையமகளிர்க்கு, ஊடி - (யாம்) பிணங்கி, புணர்ந்து - (பின்) புணர்ந்து, நிற்பேம் எனல் - (அந்நிலையிலே) நிற்கக்கடவேமென்று நினைத்தல், உண்டோ - ஆகாது.

**1260.** Is it possible for those whose hearts melt like fat in the fire to say that they can feign a strong dislike and remain so?

---

## கஉஎ-ம். அதி. அவர்வயின்விதும்பல்.

அஃதாவது சேயிடைப்பிரிவின்கட் டலைமகனுந் தலைமகளும் வேட்கைமிகவினான் ஒருவரை யொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையுஞ் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினார். பிறரெல்லாம் இதனைத் தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புறலென்றார் : சுட்டுப்பெயர் சொல்லுவார் குறிப்பொடு கூடிய பொருளுணர்த்துவதல்லது தானென்றற்குப் பெயராகாமையானும், கவிகூற்றாய் அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற் பன்மையாற் கூறப்படாமையானும், அஃதன்மை யறிக. இதனுட்டலைமகள் கூற்று நிறையழிவானிகழ்ந்ததாகலின், அவ்வியைபு பற்றி நிறையழிதலின்பின் வைக்கப்பட்டது.

க. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

[தலைமகள் காண்டல் விதுப்பினாற் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்கள் சுவரின்கணிழைத்தவற்றைத்தொட்டு எண்ணுதலான் என் விரல்கடேய்ந்தன ; அதுவேயன்றி அவர் வரும் வழிபார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின ; இவ்வாறாயும் அவர் வரவுண்டாயிற்றில்லை, எ-று.

நாள்—ஆகுபெயர். புல்லியவாதல் - நுண்ணிய காணமாட்டாமை. ஒற்றவென்பது ஒற்றியெனத் திரிந்து நின்றது. இனி யான் காணுமாறென்னையென்பதாம். நாளெண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது இடையின்றிச் செய்தலான், விதுப்பாயிற்று.

(தெ - ப - ரை.)—விரல் - (என்) விரல்கள், அவர் சென்ற நாள் - அவர் (நம்மைப்பிரிந்து) போகிய நாள்களை, ஒற்றி - (சுவரிலே குறிவைத்து) தொட்டெண்ணுதலால், தேய்ந்த - தேய்ந்தன ; (அதுவேயன்றி), கண்ணும் - (என்) கண்களும், வாள்அற்று - (அவர்வரும்வழிபார்த்து) ஒளியிழந்து, புற்கென்ற - புல்லியவாயின ; (இவ்வாறாகியும் அவர் வரவு உண்டாயிற்றில்லை.

**1261.** **My finger has worn away by marking (on the wall) the days he has been absent while my eyes have lost their lustre and begin to fail.**

---

உ. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து.

[ஆற்றாமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை
சிறிது மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குச்
சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—விளங்கா நின்ற விழையினையுடையாய், காதலரை இன்று யான் மறப்பேனாயின், மேலுங் காரிகை யென்னை நீப்ப என்றோள்கள் வளை கழல்வனவாம், எ-று

இலங்கிழா யென்பது இதற்கு நீயாதும் பரியலை யென்னுங் குறிப்பிற்று. இன்று-யானிறந்து படுகின்ற வின்று. மேலும்-மறுபிறப்பினும். எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. நீப்ப வென்பது நீத்தெனத் திரிந்து நின்றது. கழியு மென்னும் இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே னின்றது. இவ் வெல்லைக்கணினைந்தால் மறுமைக்கண் அவரை யெய்தி யின்புறலாம், அதனான் மறக்கற்பாலே னல்லே னென்பதாம்.

(தெ-ப-ரை.)—இலங்கு இழாய் - விளங்காநின்ற ஆபரண முடையாய்! இன்று - (இறந்துபடுகின்ற) இந்நாளில், மறப்பின்- (தலைவரை) மறப்பேனாயின், மேல் - மறுபிறப்பிலும், காரிகை - அழகானது, நீத்து - (என்னைவிட்டு) நீங்க, என்றோள் - எனது தோள்கள், கலம் கழியும் - வளையல்கள் கழலப்பெறுவனவாம்.

**1262.** O you bright-jewelled maid, if I forget (him) today, my shoulders will lose their beauty even in the other life and make my bracelets loose.

---

௩. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—இன்பநுகர்தலை நச்சாது வேறலை நச்சி நாந்துணை யாதலை யிகழ்ந்து தம்முள்ளக் துணையாகப் போயினார் அவற்றை யிகழ்ந்து ஈண்டு வருதலை நச்சுதலான், யானிவ்வெல்லையினு முளேனாயினேன், எ-று.

உரனென்பது ஆகுபெயர். அந்நசையா னுயிர்வாழா நின்றேன், அஃதில்லை யாயின் இறந்துபடுவ லென்பதாம்.

(தெ-ப-ரை.)—உரன் நசைஇ - (இன்பத்தை விரும்பாமல்) வெற்றியைவிரும்பி, உள்ளம் துணை ஆக - (நாம் துணையாதலையி கழ்ந்து) தம்மனவெழுச்சிதுணையாக, சென்றார் - போயினவர், வரல் நசைஇ - (அவைகளை இழந்து இங்கு) வருதலைவிரும்புதலால், இன்னும் - இவ்வெல்லையிலும், உளேன் - உயிர்வாழ்கின்றேன்.

**1263.** I still live by longing for the arrival of him who has gone out of love for victory and with valour as his guide.

---

௪. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நீங்கிய காமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற் கூடிய காமத்துடனே நங்கண் வருதலை நினைத்து, என்னெஞ்சு வருத்தமொழி ந்து மேன்மேற் பணைத்தெழா நின்றது, எ-று.

வினைவயிற் பிரிவுழிக் காமவின்ப நோக்காமையும் அதுமுடிந்துழி அதுவே நோக்கலுந் தலைமகற்கியல்பாகலின், கூடிய காமமோ டென்றாள். ஓடுவுருபு விகாரத்தாற் றொக்கது. கோடுகொண்டேறலாகிய மரத்ததுதொழில் நெஞ்

சின்மே லேற்றப்பட்டது. கொன்டென்பது குறைந்து நின்றது. அஃதுள்ளிற் றிலேனாயின் இறந்துபடுவே லென்பதாம்.

(தெ - ப-ரை.)—பிரிந்தார் - (நீங்கியகாமத்தாராகி நம்மை) பிரிந்துபோனவர், கூடிய காமம் - கூடியகாமத்துடனே, வரவு உள்ளி - (நம்மிடத்து) வருதலை நினைத்தலால், என் நெஞ்சு—, வருத்தம் ஒழிந்து - துயர்நீங்கி, கோடு கொண்டு ஏறும் - மேன் மேலும் பருத்தெழுகின்றது.

**1264**. My heart is rid of its sorrow and swells with rapture to think of my absent lover returning with his love.

---

ரு. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு.

[தலைமகன் வரவுகூறி ஆற்றுயாய்ப் பசக்கற்பாலை
யல்லை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—என்கண்களாரும்வகை என் கொண்கனை யான் காண் பேனாக; அங்ஙனங் கண்டபின், என் மெல்லியதோளின்கட் பசப்புத் தானே நீங்கும், எ-று.

காண்கவென்பது ஈண்டு வேண்டிக்கோடற் பொருட்டு. அது வேண்டு மென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கேட்ட துணையா னீங்கா தென்பதாம்.

(தெ-ப-ரை.)—கண் ஆர - (என்) கண்களாரும்வகை, கொண்கனை - (என்) கணவனை, காண்க - (நான்) காண்பேனாக; கண்டபின் - (அப்படி) கண்டபின்பு, என் மெல் தோள் - என்மெல் லியதோளிலுள்ள, பசப்பு—, நீங்கும் - (தானே) நீங்கும்.

**1265**. May I look on my lover till I am satisfied and thereafter will vanish the sallowness of my slender shoulders.

---

சு. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—இத்துணை நாளும் வாராக்கொண்கன் ஒருநாள் என் கண் வருவானாக; வந்தாற் பையுளைச் செய்கின்ற இந்நோயெல்லாங் கெட அவ் வமிழ்தத்தை வாயிலக ளோந்தானும் பருகக்கடவேன், எ-று.

வருக வென்பதற்கும் மன்னென்பதற்கும் மேலுரைத்தவாறே கொள்க. அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனி வரக்கடவநோய்களுங் கெடுப்ப லென்பதாம்.

(தெ - ப - ரை.)—கொண்கன் - (இத்தனைநாளாக வாராதி ருந்த) தலைவன், ஒருநாள்—, வருக - (என்னிடத்து) வருவா னாக; (வந்தால்), பைதல் நோய் எல்லாம் - துன்பஞ்செய்கின்ற

இந்நோயெல்லாம், கெட - நீங்க, (அவ்வமிர்தத்தை), பருகுவன்- (ஐம்பொறிகளாலும்) உண்பேன்.

**1266.** May my husband return some day; and then will I enjoy (him) so as to destroy all this agonizing sorrow.

---

எ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—கண்போற் சிறந்த கேளிர் வருவராயின், அவர்வரவு நீட்டித்தமைநோக்கி யான் புலக்கக்கடவேனோ, அன்றி என்னாற்றாமை நோக்கிப் புல்லக்கடவேனோ, அவ்விரண்டும் வேண்டுதலான் அவ்விருசெயல்களையும் விரவக்கடவேனோ, யாது செய்யக்கடவேன்? எ-று.

புலவியும் புல்லலும் ஓர் பொழுதின்கண் விரவாமையிற் கலப்பேன்கொலென்றாள். மூன்றனையுஞ் செய்தல் கருத்தாகலின், விதுப்பாயிற்று. இனிக் கலப்பேன்கொ லென்பதற்கு ஒரு புதுமை செய்யாது பிரியாத நாட்போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாருமுளர்.

(தெ-ப-ரை.)—கண் அன்ன கேளிர்-கண்போற் சிறந்தநண்பர், வரின்—, புலப்பேன்கொல் - (அவர்வரவு நீட்டித்ததைக் குறித்து) பிணங்குவேனோ? புல்லுவேன்கொல் - (என்பொறுக்கமாட்டாமையைக்குறித்து) தழுவுவேனோ? கலப்பேன்கொல் - (இவ்விரண்டும் வேண்டுதலால் இவ்விருசெயல்களையும்) கலப்பேனோ? (யாதுசெய்யக்கடவேன்.)

**1267.** On the return of him who is as dear as my eyes, am I displeased or am I to embrace (him); or am I to do both?

---

அ. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.

[வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடிவுநீட்டித்துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—வேந்தன் வினைசெய்தலைப் புரிந்து வெல்வானாக; யாமும் மனைவியைச் சென்றுகூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்தயர்வேமாக, எ-று.

மனையென்பது ஈண்டாகு பெயர், "மங்கல மென்ப மனைமாட்சி" என்புழிப்போல. வினைசெய்தற்கண்வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தன் முதலியவின்மையின், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்க மென்றான். நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது. இது வினைமுடியாமுன் கூறலான் விதுப்பாயிற்று. பிறரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைத்தார்: தலைமகனைக் கூறாது வேந்தன் வெல்க வென்றும், மனைகலந்தென்றும், மாலைப்பொழு

தின்கண் விருந்தயர்க மென்றும் வந்த அவ்வுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று.

(தெ-ப-ரை.) — வேந்தன்—, வினை கலந்து - போர்செய் தல்புரிந்து, வென்றீக - வெல்வானாக, (யாமும்), மனை கலந்து - மனைவியைச்சென்று, மாலை - (அவ்விடத்து) மாலைக்கு, விருந்து—, அயர்கம் - செய்யக்கடவேம்.

**1268.** Let the king fight and gain (victories); (but) let me be united to my wife and feast the evening.

---

கூ. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—சேணிடைச்சென்ற தங்காதலர் மீண்டுவரக் குறித்த நாளை யுட்கொண்டு அதுவருந் துணையும் உயிர்தாங்கி வருந்து மகளிர்க்கு ஒரு நாள் பலநாள்போல நெடிதாகக் காட்டும், எ-று.

ஏழென்பது அதற்குமேலாய மிக்க பன்மை குறித்து நின்றது, "ஒருவர் கூறை யெழுவருடுத்து" என்றாற்போல. தலைமகள் வருத்தம் பிறர்மேலிட்டுக் கூறியவாறு. இதனான் இதுவுந் தலைமகள் கூற்றாகாமை யறிக. இருநாளென்று பாடமோதுவாரு முளர்.

(தெ-ப - ரை.)—சேண் சென்றார் - தூரதேசத்திற் சென்ற தங்காதலர், வருநாள் வைத்து - (திரும்பி) வரக்குறித்தநாளை உட்கொண்டு, ஏங்குபவர்க்கு - (அது வருமளவும் உயிரைத்தாங்கி) வருந்துமகளிர்க்கு, ஒருநாள்—, எழு நாள் போல் - பல நாள் போல, செல்லும் - நெடிதாகக்காட்டும்.

**1269.** To those who suffer waiting for the day of return of their distant lovers one day is as long as seven days.

---

கo. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னு
முள்ள முடைந்துக்கக் கால்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலி நம்பிரிவினை யாற்றாது உள்ளமுடைந்திறந்து பட்டவழி, நம்மைப் பெறக்கடவளானாலென், அதுவன்றியே பெற்றாலென், அதுவன்றியே மெய்யுறக்கலந்தாற்றானென், இவை யொன்றானும் பயனில்லை. எ-று.

இம்மூன்றும் உடம்பொடு புணர்த்திக் கூறப்பட்டன, அதன்மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்கு முன்னே யான் செல்லவேண்டுமென்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகள் கூற்றாயவழி இரங்கலாவதல்லது விதுப்பாகாமை யறிக.

(தெ-ப-ரை.)—காதலி—, உள்ளம் உடைந்து - (நம்பிரிவு பொருமல்) உள்ளமுடைந்து, உக்கக்கால் - இறந்தவிடத்து, பெறின் என் - (நம்மை) பெறக்கடவளானால் என்னபயன், பெற்றக்கால் என் - (அன்றி) பெற்றால் என்னபயன், உறின் என் - (அன்றி) மெய்யுறக்கலந்தால் என்னபயன், (இவையொன்றாலும் பயன் இல்லை.)

**1270.** After (my wife) has died of a broken heart, what good will there be if she is to receive me, has received me, or has even embraced me.

---

## கஉஅ - ம். அதி. குறிப்பறிவுறுத்தல்.

---

*அஃதாவது தலைமகன், தலைமகள், தோழியென்றிவர் ஒருவர் குறிப்பினை யொருவர்க் கறிவுறுத்தல். இது பிரிந்துபோய தலைமகன்வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின் விதும்பலின்பின் வைக்கப்பட்டது.*

க. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

[*பிரிந்துகூடிய தலைமகன் வேட்கை மிகவினாற் புதுவது பன்னாளும்பாராட்டத் தலைமகள் இதுவொன்றுடைத்தென வஞ்சியவழி அதனை யவள் குறிப்பானறிந்து அவனவட்குச் சொல்லியது.*]

(பரி - ரை.) எ-து,—*நீ சொல்லாது மறைத்தா யாயினும், அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து நின்னுண் கண்களே எனக்குச் சொல்லலுறுவதொரு காரிய முண்டாயிராநின்றது, இனியதனை நீயே தெளியச்சொல்வாயாக, எ-று.*

*கரத்தல்—நாணனடக்குதல். தன்கட்பிரிதற் குறிப்புளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன்பிரியாமைக் குறிப்டறிவுறுத்தவாறு.*

(தெ - ப - ரை.)—கரப்பினும் - (சொல்லாது) மறைத்தாயாயினும், ஒல்லா - அதற்கு உடம்படாமல், கையிகந்து - (உன்னை) கைகடந்து, நின் உண் கண் - உன் (மை) உண்டகண்களே, உரைக்கல் உறுவது - (எனக்கு) சொல்வது, ஒன்று - ஒருகாரியம், உண்டு - உளது, (இனிஅதனை நீயே தெளியச்சொல்லு.)

**1271.** Though you would conceal (your feelings), your painted eyes would not, for, transgressing (their bounds), they tell (me) something.

---

உ. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

[நாணால் அவள் அது சொல்லாளாயவழி
அவன் றோழிக்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—என் கண்ணிறைந்த வழகினையும் வேயையொத்த தோளினையு முடைய நின்பேதைக்கு பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது, எ-று.

இலதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், இவ்வாறு கூறினான்.

(தெ-ப-ரை.)—கண் நிறைந்த காரிகை - (என்) கண்ணிறைந்த அழகையும், காம்பு ஏர் தோள் - மூங்கில்போன்ற தோள்களையும் உடைய, பேதைக்கு - (உன்னுடைய) மாதுக்கு, பெண் நிறைந்த நீர்மை - பெண்பாலாரிடத்து நிறைந்த அறியாமை, பெரிது - (அவ்வளவினதன்றி) மிகுந்தது.

**1272. Unusually great is the female simplicity of your maid whose beauty fills my eyes and whose shoulders resemble the bamboo.**

---

ங. மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாநூல்போல இம்மடந்தைய தணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்றதொரு குறிப்புண்டு, எ-று.

அணி—புணர்ச்சியானாய வழகு. அதனகத்துக் கிடத்தலாவது அதனோடு உடனிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனை யானறிகின்றிலேன், நீ யறிந்து கூறல்வேண்டு மென்பது கருத்து.

(தெ-ப-ரை.)—மணியில் - (கோக்கப்பட்ட) படிக மணிக்குளிருந்து, திகழ் தரும் - (புறத்தே) காணப்படுகிற, நூல்போல் - சரடுபோல, மடந்தை - இம்மடந்தையினது, அணியில் - அழகுக்குளிருந்து, திகழ்வது - (புறத்தே) காணப்படுவதாகிய, ஒன்று - ஒருகுறிப்பு, உண்டு - இருக்கின்றது.

**1273. There is something that is implied in the beauty of this woman, like the thread that is visibile in a garland of gems.**

---

ச. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—முகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல நின்பேதை என்னொடு நகக்கருது நகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு, எ-று.

முகிழ்ப்பு - முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை - புணர்ச்சி யின்பத்தா னிகழ்வது.

(தெ - ப - ரை.)—முகை மொக்குள் - அரும்பினது முகிழ்ப்பினுள், உள்ளது - உளதாய்ப் (புறந்தோன்றாத), நாற்றம் போல் - வாசனைபோல், பேதை - (உன்) மாதினது, நகை மொக்குள் - (என்னோடுநகைக்க எண்ணுகிற) நகையது முகிழ்ப்பினுள், உள்ளது - உளதாய்ப் (புறந்தோன்றாத), ஒன்று - ஒருகுறிப்பு, உண்டு - உளது.

**1274**. There is something in the unmatured smile of this maid like the fragrance that is contained in an unblossomed bud.

---

ரு. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—நெருங்கிய வளைகளை யுடையாள் என்கணில்லாத தொன்றனை யுட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு என் மிக்க துயரைத் தீர்க்கு மருந்தாவதொன்றனை யுடைத்து, எ-று.

உட்கொண்டது பிரிவு. கள்ளம்—ஆகுபெயர். மறைத்தற் குறிப்புத் தானு முடன்போக் குட்கொண்டது. உறுதுயர் நன்று செய்யத் தீர்குவிளைதலானும் அதுதான் தீர்திறம் பெருமையானும் உளதாயது. மருந்து—அப்பிரிவின்மை தோழியாற்றெளிவித்தல். நீ யதுசெய்தல் வேண்டுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—செறிதொடி - நெருங்கிய வளைகளை யுடையவள், செய்து - (என்னிடத்து இல்லாதபிரிவை) நினைந்து, இறந்த கள்ளம் - (அதுகாரணமாக என்னைமறைத்து) போன குறிப்பு, உறுதுயர் - (என்) மிகுந்ததுயரை, தீர்க்கும் மருந்து—, ஒன்று—, உடைத்து - உடையது.

**1275**. The well-meant departure of her whose bangles are tight-fitting contains a remedy that can cure my great sorrow.

---

சு. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

[தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச்சென்ற தோழிக் கறிவுறுத்தது.]

(பரி - ரை.) எ-து,—காதலர் வந்து தம்பிரிவினுறைய துன்பத்தினை மிகவு மாற்றி நாமகிழும் வண்ணங் கலக்கின்ற கலவி இருந்த வாற்றான் மேலுமத்துன்பத்தினை அரிதாக வாற்றியிருந்து அவரன்பின்மையை நினையுந்தன்மை யுடைத்து, எ-று.

பிரிதற் குறிப்பினாற் செய்கின்ற தாகலான், முடிவில் இன்னாதாகா நின்ற தென்பதாம்.

(தெ-ப-ரை.)—பெரிது ஆற்றி - (தலைவர்வந்து தம்பிரிவினலாகிய துன்பத்தை) மிகவுமாற்றி, பெட்ப கலத்தல் - (நாம்) மகிழும்வண்ணம் கூடுகின்ற புணர்ச்சியானது, அரிது ஆற்றி - (பின்னும் அத்துன்பத்தை) அரிதாகப் பொறுத்திருந்து, அன்பு இன்மை - (அவரது) அன்பில்லாமையை, சூழ்வது - நினையுந் தன்மையை, உடைத்து - உடையது.

**1276.** The embrace that fills me with comfort and gladness is capable of enduring (my former) sorrow and meditating on his want of love.

---

எ. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை அவன் குறிப்பானறிதற்குரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே யறிந்தன, எ-று.

கருத்து நிகழ்ந்ததாகலிற் றணந்தமை யென்றும், யான் றெளிய வுணர்தற்கு முன்னே தோள்கண் மெலிந்தன வென்பாள் அதனை வளைமேலேற்றி அது தன்னை யுணர்வுடைத்தாக்கியுங் கூறினள்.

(தெ-ப-ரை.)—தண்ணம் துறைவன் - குளிர்ந்த துறையையுடையவன், தணந்தமை - (நம்மைமெய்யினலே கூடியிருந்தே மனத்தினலே) பிரிந்தமையை, நம்மினும் (அவன்குறிப்பால் அறிதற்குரிய) நம்மினும், வளை - இவ்வளையல்கள், முன்னம்—, உணர்ந்த - அறிந்தன.

**1277.** My bracelets have understood before me the (mental) separation of him who rules the cool seashore.

---

அ. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எங்காதலர் பிரிந்துபோயினர் நெருநற்றே; அப்பிரிவிற்கு யாமும் மேனிபசந்து ஏழுநாளுடைய மாயினேம், எ-று.

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் நெருநற்றுச் சென்றாரென்றும், அதனை யையுற்றுச் செல்கின்றது ஏழுநாளுண்டாகலின் அன்றே மேனி பசந்ததென்பாள் மேனிபசந்தெழுநாளே மென்றுங் கூறினள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினை யுணர்த்தி நின்றது.

(தெ-ப-ரை.)—எங்காதலர்—, நெருநற்று - நேற்றே, சென்றார் - பிரிந்துபோயினர்; யாமும்—, மேனி பசந்து - (அப்

பிரிவுக்கு) உடம்பு வேற்றுநிறமடைந்து, எழு நாளேம் - எழுநா ளுடையே மாயினேம்.

**1278.** It was but yesterday my lover departed (from me); and it is seven days since my complexion turned sallow.

---

௯. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.

[தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது.]

(பரி - ரை.) எ-து,—யா னதுதெளிவித்தவழித் தெளியாது அவர் பிரிய யானீண்டிருப்பின் இவை நில்லாவெனத் தன்றொடியை நோக்கி, அதற்கேது வாக இவை மெலியுமெனத் தன்மென்றோள்களையு நோக்கி, பின்னிவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல் வேண்டுமெனத் தன்னடியையு நோக்கி, அங் ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்கா யிருந்தது, எ-று.

செய்த குறிப்புச் செய்தற் கேதுவாய குறிப்பு. அஃதென்றாள், செறி தொடி செய்திறந்த கள்ளமென்ற ளுகலின். பிரிதற் குறிப்புண்டாயின் அஃ தழுங்குதல் பயன்.

(தெ-ப-ரை.)—(யான் அது தெளிவித்தவிடத்தே தெளியா தவர் பிரிய நான் இங்கேயிருந்தால்), தொடி நோக்கி - (இவை நி ல்லாவென்று தன்) வளையல்களைப்பார்த்து, மெல் தோளும் நோ க்கி-(அதற்கு ஏதுவாக இவை மெலியுமென்று) மெல்லிய தோள் களையும் பார்த்து, அடி நோக்கி-(பின் இவ்விரண்டும் உண்டாகா மல் நீர் நடந்துகாத்தல் வேண்டு மென்று தன்) அடிகளையும் பார் த்து, ஆண்டு - அவ்விடத்து, அவள் செய்தது - அவள்செய்த கு றிப்பு, அஃது - உடன் போக்காயிருந்தது.

**1279.** She looked at her bracelets, her tender shoulders, and her feet; this was what she did there (significantly).

---

௧0. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

[தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது.]

(பரி - ரை.) எ-று—மகளிர் தங்காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணினாற் சொல்லி அது தீர்க்கவேண்டுமென்று அவரையிரவாது உடன்போதல் குறித்துத் தம்மடியினை யிரத்தல் தமக்கியல்பாகிய பெண்மை மேலும் ஓர் பெண்மை யுடைத்தென்று சொல்லுவர் அறிந்தோர், எ-று.

தலைமகளுடன் போதற்றுணிபு தோழியாற் றெளிந்தானுகலின், தன்பிரி வின்மைக் குறிப்பினை யறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு.

(தெ - ப - ரை.)—(மகளிர்), காமநோய் - (தம்) காமநோ யை, கண்ணினால் சொல்லி - (தோழியர்க்கும் வாயாற் சொல்

லாது) கண்ணினாற் சொல்லி, இரவு - (அது தீர்த்தல் வேண்டு மென்று அவனை யிரவாமல் உடன்போதல் குறித்துத் தம்மடி யினை) இரத்தல், பெண்ணினுள் - (தமக்கு இயல்பாகிய) பெண் மைமேலும், பெண்மை உடைத்து என்ப - ஒரு பெண்மையை யுடைத்தென்று (அறிந்தோர்) சொல்லுவர்.

**1280**. To express their love-sickness by their eyes and resort to begging bespeaks more than ordinary female excellence.

---

## கஉ௩௯ - ம். அதி. புணர்ச்சிவிதும்பல்.

---

அஃதாவது தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப்பறிவுறுத்த தலைமகள் அவன் மாட்டே நிகழாது வேட்கை மிகவினாற் பின்னுந் தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பறி வுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

க. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

[பிரிதற் குறிப்பினனுமியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாதென நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நினைந்த துணையானே களிப்பெய்தலும் கண்ட துணையானே மகிழ்வெய்தலும் கள்ளுண்டார்க்கில்லை, காமமுடையார்க் குண்டு, எ-று.

களித்தல் - உணர்வழியாதது. மகிழ்தல் - அஃதழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியதல்ல தின்மையிற் கள்ளுக்கில்லென்றாள். உண்டென்பது இறுதி விளக்கு. அப்பெற்றித்தாய காமமுடைய யான் புலத்தல் யாண்டையதென் பதாம்.

(தெ - ப - ரை.)—உள்ள களித்தலும் - நினைத்தவளவிலே களிப்படைதலும், காண மகிழ்தலும் - கண்டவளவிலே மகிழ்ச்சி யடைதலும், கள்ளுக்கு - கள்ளுண்டார்க்கு, இல் - இல்லை; காமத்திற்கு - காமமுடையார்க்கு, உண்டு - உளது.

**1281**. To please by thought and cheer by sight is peculiar, not to liquor but lust.

---

உ. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—மகளிர்க்கு காமம் பனையளவினும் மிகவுண்டா மாயின், அவரால், தங்காதலரோடு தினையளவு மூடுதல் செய்யாமை வேண்டப் படும், எ-று.

பனைத்துணையு மென்புழி ஐந்தனுருபு விகாரத்தாற் றொக்கது. ஊடின் வருத்த மிகுமெனப் பிறர்க்குறுதி கூறுவாள் போன்று, தன்விதுப்புக் கூறிய வாறு.

(தெ-ப-ளா.)—காமம்—, பனை துணையும் நிறைய-பனையள வினுமிக, வரின் - (மகளிர்க்கு) உண்டாமாயின், தினை துணையும்-தினையளவும், ஊடாமை - (தந்தலைவரோடு) பிணங்காமை, வேண்டும் - (அவரால்) விரும்பப்படும்.

**1282.** If women have a lust that exceeds even the measure of the palmyra fruit, they will not desire (to feign) dislike even as much as the millet.

---

ங. பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண்.

[இதுவுமது.]

(பரி-ளா.) எ-து,—நம்மை யவமதித்துத் தான் வேண்டியனவே செய்யு மாயினும், கொண்கனை என் கண்கள் காணாதமைகின்றன வில்லை, எ-று.

தன் விதுப்புக் கண்கண்மே லேற்றப்பட்டது. அத்தன்மையாரொடு புல க்குமா றென்னை யென்பதாம்.

(தெ-ப-ளா.)—பேணாது - (நம்மை) அவமதித்து, பெட்பவே - (தான்) வேண்டுமவைகளையே, செய்யினும் - செய்தாலும், கொண்கனை - கணவனை, கண் - (என்) கண்கள், காணாது-பாராமல், அமையல - அமைகின்றன வில்லை.

**1283.** Though my eyes disregard me and do what is pleasing to my husband, still will they not be satisfied unless they see him.

---

ச. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி-ளா.) எ-து,—தோழீ! காதலைக் காணுமுன் அவர்செய்த தவற்றைத் தன்னொடுநினைந்து யானவரோ டூடுதற்கண்ணே சென்றேன்; கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது, எ-று.

சேறனிகழ்தல் நினைத்தநெஞ்சிற்குமொத்தலின், அது மறந்தென்றாள். அச்செலவாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடிந்ததில்லையென் பதாம்.

(தெ-ப-ளா.)—தோழி - தோழியே! (அன்பரைக்காணுதற்குமுன் அவர்செய்த குற்றத்தைத் தன்னோடு எண்ணி), ஊடற்கண் சென்றேன் - (அவரோடு) பிணங்குதலிலே சென்

றேன் ; என்னெஞ்சு - என்மனம், (கண்டபின்), அது மறந்து - அதைமறந்து, கூடற்கண் சென்றது - புணர்தலிலே சென்றது.

**1284.** O my friend I was prepared to feign displeasure, but my mind forgetting it was ready to embrace him.

---

ரு. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதுங்காலத்து அஞ்சனக்கோலி னியல்புகாணமாட்டாத கண்ணேபோல, கொண்கனது தவறு காணாதவிடத் தெல்லாங் கண்டிருந்து அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன், எ-று.

கோல்—ஆகுபெயர். இயல்பு—கருமை. என்னியல் பிதுவாகலின் மேலும் அது முடியாதென்பதாம்.

(தெ - ப - ரை.) — (முன்னெல்லாம் கண்டிருந்தும்), எழுதும் கால்-எழுதும்போது, கோல் - அஞ்சனக் கோலினியல்பை, காணா - காணமாட்டாத, கண்ணே போல்—, கொண்கன் பழி - கணவனது குற்றத்தை, (அவனைக் காணாதவிடத்தெல்லாம் கண்டிருந்தும்), கண்டவிடத்து - (அவனை) கண்டவிடத்து, காணேன் - காணமாட்டேன்.

**1285.** Like the eyes which see not the pencil that paints it, I cannot see my husband's fault (just) when I meet him.

---

சு. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—கொண்கனை யான் காணும்பொழுது அவன் றவறாயவற்றைக் காண்கின்றிலேன், காணாதபொழுது அவையேயல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன், எ-று.

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நானின்னெடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையிற் புலந்திலேனென்பதாம்.

(தெ-ப-ரை.)—(நான்), காணும் கால் - (கணவனை) காணும்பொழுது, தவறு ஆய - (அவன்) குற்றங்களானவைகளை, காணேன் - காண்கின்றிலேன்; காணாக்கால் - (அவனை) காணாதபொழுது, தவறு அல்லவை - குற்றங்களல்லாதவைகளை, காணேன் - காண்கின்றிலேன்.

**1286.** When I see my husband, I do not see any faults; but when I do not see him, I do not see anything but faults.

---

எ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—தம்மை யீர்த்துக்கொண்டு போதலறிந்து வைத்து ஒழுகுகின்ற புனலுட்பாய்வார் செயல்போல, புலவி முடிவுபோகாமை யறிந்துவைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென், எ-று.

பாய்பவரென்பது ஆகுபெயர். பொய்த்தல் - புரைபடுதல். புலந்தாலும் பயனில்லை யென்பதாம். பொய்த்த லறிந்தேனென்பது பாடமாயின், உய்த்த லறிய ஓடுநீருட் பாய்வார்போல முடிவறியப் பண்டொருகாற் புலந்து முடியாமையறிந்தேன் இனி அதுசெயற்பாற் றன்றென வுரைக்க.

(தெ-ப-ரை.)—உய்த்தல் அறிந்து - (தம்மை) ஈர்த்துக்கொண்டுபோதலறிந்திருந்து, புனல் பாய்பவரே போல் - (ஓடுகின்ற) நீரிலே பாய்வோர் செயல்போல், பொய்த்தல் அறிந்து - (பிணக்கு) முடிவுபோகாமை யறிந்திருந்து, புலந்து - (கணவனோடு) பிணங்கி, என் - (பெறுவது) யாது?

**1287.** Like those who leap into a stream which they know will carry them off, why should a wife feign dislike which she knows cannot hold out long?

---

அ. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

[தலைமகள் புணர்ச்சிவிதுப் பறிந்த தோழி
தலைமகற்குச் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—வஞ்சகா, தன்னையுண்டுகளித்தார்க்கு இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய கள்ளுப்போலும் எங்கட்கு நின்மார்பு, எ-று.

அவ்வின்னாதன—நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மையென்றிவைமுதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன்மேல் விரும்பப்படாநின்ற தென்பதாம். கள்வ வென்றதும் அதுநோக்கி.

(தெ-ப-ரை.)—கள்வ - கள்வனே! நின் மார்பு - (எங்களுக்கு) உனதுமார்பு, களித்தார்க்கு - (தன்னையுண்டு) களித்தவர்க்கு, இளி தக்க - அவமான மடையத்தக்க, இன்னா செயினும் - இனிமை யில்லவைகளைச்செய்தாலும், கள் அற்று-(அவராலே மேலு மேலும் விரும்பப்படுவதாகிய) கள்ளுப்போலும்.

**1288.** O you rogue! your breast is to me what liquor is to those who rejoice in it, though it only gives them an unpleasant disgrace.

---

௯. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

[உணர்ப்புவயின் வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—காமவின்பம் மலரினு மெல்லிதாயிருக்கும், அங்ஙனம் மெல்லிதாதலையறிந்து அதன்செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர், எ-று.

தொட்டதுணையானே மணச்செவ்வியழிவதாய மலர் எல்லாவற்றினும் மெல்லிதென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண் வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும், ஒருகாலத்தின்கண்ணே யொத்து நுகர்தற்குரியாரிருவர் அதற்கேற்ற இடனுங் காலமும் உபகரணங்களும் பெற்றுக் கூடி நுகரவேண்டுதலின் அதன்செவ்வி தலைப்படுவார் சிலரென்றும், அவற்றுள் யாதானுமொன்றனுஞ் சிறிது வேறுபடினும் வாடுதலின் மலரினுமெல்லிதென்றுங் கூறினான். குறிப்பொவ்வாமையின் யானதுபெறுகின்றிலே னென்பதாம். தலைமகளூடறீர்வது பயன்.

(தெ-ப-ரை.)—காமம் - காமவின்பம், மலரினும் - பூவினும், மெல்லிது - மெல்லியதாயிருக்கும்; (அப்படி மெல்லியதாயிருக்கையை அறிந்து), அதன் செவ்வி - அதன் பக்குவத்தை, தலைப்படுவார் - பெறுவோர், சிலர் - (உலகத்திலே) சிலர்.

**1289.** **Sexual delight is more delicate than a flower, and few are those who understand its real nature.**

---

௧௦. கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதலி முன்னொருஞான்று புல்லல் விதுப்பினாற் சென்ற என்னொடு தன்கண்மாத்திரத்தா னூடி, புல்லுதலை என்னினுந் தான் விதும்பலால் அது தன்னையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள் ; அதனால் யானித்தன்மையே னாகவும் விதுப்பின்றியூடி நிற்கின்ற விவள் அவளல்லள், எ-று.

கண்மாத்திரத்தானூடல் - சொன்னிகழ்ச்சியின்றி அது சிவந்த துணையேயாதல். அவளாயின் இங்ஙன மூடற்கணீடா ளென்பது பயன்.

(தெ - ப - ரை.)—(என்காதலி முன்னொருநாள் புணரச் சென்ற என்னோடு), கண்ணில் துனித்து - (தன்) கண்மாத்திரத்தாலே பிணங்கி, புல்லுதல் - புணர்தலிலே, என்னினும்—, தான் விதுப்புற்று - தான்விரைவுற்று, கலங்கினாள் - (அதனையும் அப்பொழுதே) மறந்து கூடிவிட்டாள், (அதனால் நான் இப்படிவருந்தவும் விரையாமல் பிணங்கி நிற்கின்ற இவள் அவளல்லள்.)

**1290.** **She once feigned dislike in her eyes, but the warmth of her embrace exceeded my own.**

---

## கஉ0-ம். அதி. நெஞ்சொடுபுலத்தல்.

அஃதாவது காரணமுண்டாய வழியும் புலக்கக் கருதாது புணர்ச்சிவிதும் புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

[தலைமகன்கட் டவறுண்டாயவழியும் புலவிகருதாத
நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—நெஞ்சே, அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய் நிற்றல்கண்டு வைத்தும், நீயெமக்காய் நில்லாது அவரை நினைத்தற் காரணம் யாது, எ-று.

அவர்க்காதல் - அவர் கருதியதற் குடம்படுதல். எமக்காகாதென்றது புலவிக் குடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக வறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர், நீயதுவுஞ் செய்கின்றிலை யென்பதாம்.

(தெ-ப-ரை.)—நெஞ்சே - (எனது) மனமே! அவர் நெஞ்சு- அவரதுமனம், அவர்க்கு ஆதல் கண்டும் - (நம்மை நினையாமல்) அவர்க்காய் நிற்றல் கண்டிருந்தும், நீ எமக்கு ஆகாதது - நீ (அவரையே நினைத்து) எமக்காய் நில்லாமைக்குக் காரணம், எவன்- யாது?

**1291.** O my soul, although you have seen how *his* soul stands by him, how is it you do not stand by me.

---

உ. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—என்னெஞ்சே, மேலும் நம்மாட் டன்புடையராகாதவரை உள்ளவாறறிந்த விடத்தும், நாஞ்சென்றால் வெகுளா ரென்பது பற்றி நீயவர்மாட்டுச் செல்லாநின்றாய், இப்பெற்றியது மேலுமோ ரறியாமையுண்டோ, எ-று.

அவரையென்பது வேற்றுமைமயக்கம். பழங்கண்ணோட்டம் பற்றி வெகுளாரென்பது கந்தாகச் சென்றாய், நீகருதியது முடியுமோ வென்பதாம்.

(தெ - ப - ரை.)—என் நெஞ்சு - எனதுமனமே, உறாதவர்- (நம்மிடத்து) அன்பில்லாத தலைவனை, கண்ட கண்ணும் - (உள்ளபடி) அறிந்தவிடத்தும், செறார் என - (நாம்போனால்) கோபியாரென்பதுபற்றி, அவரை - அவரிடத்து, சேறி - செல்கின்றாய், (உனக்கு இப்படிப்பட்ட ஓரறியாமை உண்டோ?)

**1292.** O my soul, although you have known him who does not love me, still do you go to him, saying " he will not be displeased."

---

௩. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நெஞ்சே, என்மாட்டு நில்லாது நீவிரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம் கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லை யென்னு நினைவோ, நின்னியல்போ, கூறுவாயாக, எ-று.

என்னைவிட்டு அவர்மாட்டுச்சேறல் நீபண்டேபயின்ற தென்பாள் பெட்டாங் கென்றும், தானிது பொழுது மானமிலளாகலிற் கெட்டார்க்கென்றுங் கூறினாள். பின்னென்பது ஈண்டிடப் பொருட்டு. செலலென்பது ஆகுபெயர். ஒல்கிடத் துலப்பிலா வுணர்வில்லார் தொடர்பாயிற்று நின்றொடர் பென்பதாம்.

(தெ-ப-ரை.)—நெஞ்சே நீ - ஓமனமே! (என்னிடத்து நில்லாமல்), பெட்டாங்கு - விரும்பியபடியே, அவர்பின் செலல்- அவரிடத்தே செல்லுதற்குக் (காரணம்), கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ - கெட்டவர்க்கு நட்புற்றவர் (உலகத்திலே) இல்லையென்கிற நினைவோ, (உன்னியல்போ சொல்லு.)

**1293.** O my soul, do you follow him at pleasure under the belief that the ruined have no friends?

---

௪. இனியன்ன நின்னொடு சூழ்வாரியார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நெஞ்சே, நீயவரைக்கண்ட பொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர் தவறுநோக்கி முன்புலவியை யுண்டாக்கி அதனை யளவறிந்து பின்னுகரக்கருதாய், ஆகலான், இனியப்பெற்றிப்பட்ட வற்றை நின்னோடெண்ணுவார் யார்? யானது செய்யேன், எ-று.

அப்பெற்றிப்பட்டன - புலக்குந்திறங்கள். காணென்பது உரையசை. மற்று—வினைமாற்றின்கண் வந்தது. முன்னெல்லாம் புலப்பதாக வெண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின், இவ்வாறு கூறினாள்.

(தெ - ப - ரை.) — நெஞ்சே - நெஞ்சமே! (நீ அவரைக் கண்டபொழுதே இன்பமனுபவிக்க நினைப்பதல்லது), துனி செய்து - (அவர்தவறுநோக்கி) பிணக்கை உண்டாக்கி, மற்று துவ்வாய் - (அதனை அளவறிந்து) பின் அனுபவிக்க நினையாய், (ஆதலால்), இனி—, அன்ன - அப்படிப்பட்டவைகளை, நின்னொடு - உன்னுடன், சூழ்வார் - எண்ணுவோர், யார் - யாவர்? (நான் அதுசெய்யேன்.)

**1294.** O my soul, you would not first seem sulky and then enjoy (him): who then would in future consult you about such things?

---

ரு. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

[வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—காதலரைப் பெறாதஞான்று அப்பெறாமைக் கஞ்சா நின்றது, பெற்றக்கால் வரக்கடவ பிரிவினையுட்கொண்டு அதற் கஞ்சாநின்றது, ஆகலான், என்னெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காத விடும்பையை யுடைத்தாயிற்று, எ-று.

காதலரைப் பெற்றுவைத்துக் கலவியிழத்தல் உறுதியன்றென்னுங் கருத்தான் வாயினேர்கின்றுளாகலிற் பெறாமையஞ்சு மென்றும், கலவியாராமையின் இன்னுமிவர் பிரிவராயின் யாது செய்துமென்பது நிகழ்தலிற் பெறிற்பிரி வஞ்சுமென்றும், இவ்விரண்டு மல்லது பிறிதின்மையின் எஞ்ஞான்று மறாவிடும் பைத்தென்றுங் கூறினள்.

(தெ-ப-ரை.)—(தலைவரைப் பெறாதநாளிலும்), பெறாமை அஞ்சும் - அப்பெறாமைக்கு அஞ்சாநிற்கும், பெறின் - பெற்ற நாளிலும், பிரிவஞ்சும் - (அவரது) பிரிவை நினைத்து அஞ்சாநிற்கும்; (ஆதலால்), என்னெஞ்சு—, அறா இடும்பைத்து - (எந்நாளும்) நீங்காத துன்பமுடையது.

**1295. My soul fears when it is without him; it also fears when it is with him : it is subject to incessant sorrow.**

---

சு. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—என்னெஞ்சு ஈண்டிருந்தது, காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான்றன்னொடு நினைத்தக்கால், அவ்வளவறிந்து என்னைத் தின்பது போன்று துன்பஞ் செய்தற்கே, எ-று.

என் மாட்டிருந்தது அன்று அவர் கொடுமைகளை யுட்கொண்டு எனக்காற்றாமை செய்தற்கே, இன்று அவைநோக்கி அவரொடு புலத்தற்கன் றென்பதாம்.

(தெ-ப-ரை.)—என் நெஞ்சு—, இருந்தது - (இங்கே) இருந்தது, தனியே இருந்து - அன்பரைப்பிரிந்திருந்து, நினைத்தக்கால் - (அவர்கொடுமைகளை நான் தன்னோடு) நினைத்தக்கால், (அச்சமயமறிந்து), என்னை—, தினிய - தின்பதுபோல் துன்பஞ் செய்தற்பொருட்டே.

**1296. My mind has been (here) in order to eat me up (as it were) whenever I think of him in my solitude.**

---

௭. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—தன்னைமறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என் மாட்சிமையில்லாத மடநெஞ்சுடனேகூடி, என்னுயிரினுஞ் சிறந்த நாண்டன்னையும் மறந்து விட்டேன், எ-று.

மாணாமை - ஒருநிலையி னில்லாமை. மடமை - கண்டவழி நினைந்து காணா வழி மறக்குந்தவற்றைக் காணாவழி நினைந்து கண்டவழி மறத்தல். நாண் - எஞ் ஞான்றுங்கூடி யொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போல் ஒடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனை மறந்தேனென்றாள்.

(தெ-ப-ரை.)—அவர் மறக்கல்லா - (தன்னைமறந்த) அவரை மறக்கமாட்டாத, மாணா - மாட்சியில்லாத, என் மடம் நெஞ்சில் பட்டு - எனது அறிவில்லாத மனத்தோடுகூடி, நாணும் - (என் னுயிரினுஞ் சிறந்த) நாணத்தையும், மறந்தேன் - மறந்துவிட் டேன்.

**1297.** I have even forgotten my modesty, having been caught in my foolish mind which is not dignified enough to forget him.

---

௮. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—உயிர்மேற் காதலையுடைய என்னெஞ்சு, நம்மை யெள்ளிச் சென்றாரொன்று நாமு மெள்ளுவேமாயிற் பின்னமக் கிளிவாமென்று கருதி, அவர் திறத்தினையே நினையா நின்றது, எ-று.

எள்ளுதல் - வாயின் மறுத்தல். இளிவு—வழிபடாமையானும், பிரிவாற் றாமையானும், நாணும் நிறையு முதலிய விழத்தலானும் உளதாவது. திறம்— வாயினேர்தலும் வருதலும் கூடலுமுதலாயின. இளிவிற்கஞ்சுதலானும் இறந்து படமாட்டாமை யானுங் கூடக்கருதாநின்ற தென்பதாம்.

(தெ - ப - ரை.)—உயிர் காதல் நெஞ்சு - உயிர்மேல் ஆசை யுடைய (என்) நெஞ்சு, (நம்மை இகழ்ந்து சென்றாரொன்று), என் னின் - (நாமும்) இகழ்வோமாயின், இளிவாம் என்று எண்ணி - (பின்பு நமக்கு) அவமானமா மென்று நினைத்து, அவர் திறம் - அவர் திறத்தையே, உள்ளும் - நினைக்கின்றது.

**1298.** My soul which clings to life thinks only of his (own) gain in the belief that it would be disgraceful for it to despise him.

---

௯. துன்பத்திற் கியாரோ துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

[உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—ஒருவர்க்குத் துன்பம் வந்துழி, அது நீக்குதற்கு, தாமுரித்தாகப்பெற்ற தம்முடைய நெஞ்சந் துணையாகாவழி, வேறுதுணை யாவார் ஒருவருமில்லை, எ-று.

ஈண்டுத் துன்பமாவது வூடலுணர்ப்புவயின் வாராமை. அதற்கு நெஞ்சந் துணையாகாமையாவது அவளை யன்பில ளென்றொழியாது கூடற்கண்ணே விதும்பல். ஒரு துணையு மின்மையின், இஃதுற்றுவிடுதலே யுள்ளதென்பதாம்.

(தெ - ப - ரை.)—துன்பத்திற்கு - (ஒருவர்க்கு) துன்பம் வந்தவிடத்து, (அதை நீக்குதற்கு), தாம் உடைய - தாம் உரித்தாகப்பெற்ற, நெஞ்சம் - (தமது) மனமானது, துணை அல்வழி- துணையாகாத விடத்து, துணை ஆவார்—, யாரோ - யாவர், (ஒருவரும் இல்லை.)

**1299.** Who would help me out of one's distress, when one's own soul refuses help to one ?

---

க0. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—தாமுரித்தாகவுடைய நெஞ்சம் ஒருவர்க்குத் தமரல்லாவழி, அயலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ, எ-று.

பிறளொருத்தியைக் காதலியென்று கருதி என்னெஞ்சே என்னை வருத்தா நின்றபின் அப்பிறள் புலக்கின்ற தெளி தென்பதாம்.

(தெ-ப-ரை.)—தாம் உடைய-தாம் உரித்தாக வுடைய, நெஞ்சம்—, தமர் அல் வழி - (ஒருவர்க்கு) தம்மவராகாத விடத்து, ஏதிலார் - அயலார், தமர் அல்லர் - தம்மவரல்லராகுதல், தஞ்சம் - எளிதன்றே.

**1300.** It is hardly possible for strangers to behave like relations, when one's own soul acts like a stranger.

---

## கஙக-ம். அதி. புலவி.

அஃதாவது இருவர்நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக்கருதியவழி ஒருவரோ டொருவர் புலத்தல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

க. புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.

[வாயிலாகச்சென்ற தோழி தலைமகள் வாயினேர்தற்பொருட்டு அவளொடு நகையாடிச் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—அங்ஙனம் புலந்தாற் காதலரெய்து மல்லனோயினை யாஞ் சிறிது காணக்கடவேம்; நீ யவரை விரைந்துசென்று புல்லாதே இத்தொழிலை மேலிட்டுக்கொண்டிருந்து புலப்பாயாக, எ-று.

அல்லனோய்-துன்பத்தைச்செய்யுங் காமநோய். சிறிதென்றாள், புலவியை நீளவிடலாகாதென்பது பற்றி. புலத்தை யென்புழி ஐகாரம் "கடம்பூண்டொரு காணிவக்தை" என்புழிப்போல முன்னிலைவினை விகுதி. புலத்தி யென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக்கண்டு அவள் வழியளாய் நின்று நாமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டுமென நகையாடி நேர்வித்தவாறு.

(தெ-ப-ரை.)—அவர் உறும் - அக்காதலரடையும், அல்லல் நோய் - துன்பநோயினை, சிறிது—, காண்கம் - காணக்கடவோம்; புல்லாது - (நீ அவரை விரைந்துபோய்) தழுவாமல், இரா - (இத்தொழிலைமேலிட்டுக்கொண்டு) இருந்து, புலத்தை-பிணங்கு.

**1301.** Let us witness awhile his keen suffering; just feign dislike and embrace him not.

---

௨. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

[புலவியொழிந்து வாயினேரும்வகை அவள் சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—புலவி கலவி இன்பஞ்செயற்கு வேண்டுமளவிற்றாதல் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையாக்கற்கு வேண்டு மளவிற்றாதல்போலும்; இனி அதனை யவ்வளவிற் சிறிது மிகவிடுதல் அவ்வுப்பு அளவின் மிக்காற்போலும், எ-று.

நீளவிடல் - அளவறிந் துணராது கலவிமேலெழுந்த குறிப்பழுங்கு மளவுஞ் செய்தல். சிறிது நீளவிடலாகா தென்றாள், நேர்விக்கின்றா ளாகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின் றாதற்போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்ப மன்றா மென்றமையின், இது பண்புவமை.

(தெ - ப - ரை.)—புலவி - பிணக்கு, (புணர்ச்சி யின்பஞ் செய்தற்கு வேண்டுமளவினதாகுதல்), உப்பு அமைந்தற்று-உப்பானது (உணவுகளை இன்சுவையாக்குதற்கு) வேண்டுமளவின தாகுதல் போலும்; நீளவிடல் - (இனி அதனை அவ்வளவிற் சிறிது) மிகவிடுதல், அது சிறிது மிக்கற்று - அவ் வுப்பளவு சிறிது மிகுந்ததுபோலும்.

**1302.** A little dislike is like salt in proportion; to prolong it a little is like salt a little too much.

---

௩. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

[பரத்தையரிடத்து நின்றும் வந்த தலைமகனொடு
தலைமகள் புலந்து சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—தம்மைப்பெறாது புலந்த மகளிரைப் புலவி நீக்கிக் கலவாது ஆடவர்சேறல் பண்டே துன்பமுற் றழிந்தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற் போலும், எ-று.

பிறர்பாற் சேறலின் றம்மைப்பெறாது புலந்துடி யிருக்கின்ற பரத்தையரைப்போய்ப் புலவி நீக்கிப் புல்லீராயின், அவராற்றா ரென்பதாம்.

(தெ-ப-ரை.)—(ஆடவர்), தம்மை புலந்தாரை - தம்மைப் பெறாது பிணங்கிய மகளிரை, (அப்பிணக்கு நீக்கி), புல்லாவிடல் - புணராமல்விடுதல், அலந்தாரை - (முன்னமே துன்பமுற்று) அழிந்தவர்க்கு, அல்லல் நோய் செய்தற்று-(அதன்மேலும்) மிகுந்த துன்பநோய் செய்ததுபோலுமாம்.

**1303**. For men not to embrace those who have feigned dislike is like torturing those already in agony.

---

௪. ஊடி யவரை யுணர்த்தாமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

[இதுவுமது]

(பரி - ரை.) எ-து,—நும்மோ டூடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல் பண்டே நீர் பெறாது வாடிய கொடியை அடியிலே யறுத்தாற்போலும், எ-று.

நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வனைக் கண்டாற்றி யிருக்கற்பாலமாய யாம் நும்மோ டூடுதற்குரியமல்லம் அன்மையின் எம்மையுணர்த்தல் வேண்டா, உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது, அதனால் ஆண்டுச் சென்மினென்பதாம்.

(தெ - ப - ரை.)—ஊடியவரை - (உம்மோடு) பிணங்கிய பரத்தையரை, உணர்த்தாமை - பிணக்குத்தீர்த்துக் கூடாமை, வாடிய - (முன்னமே நீர் பெறாமல்) வாடிய, வள்ளி - கொடியை, முதல் அரிந்தற்று - அடியிலே அறுத்தல்போலும்.

**1304**. Not to reconcile those who have feigned dislike is like cutting a faded creeper at its root.

---

௫. நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

[தலைமகளைப் புலவி நீக்கிக்கூடிய தன் தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.]

(பரி-மை.) எ-து,—நற்குணங்களாற் றகுதியுடையராய தலைவர்க்கும் அழகாவது தம்பூவன்னகண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவிமிகுதியன்றே, எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான், நலத்தகை நல்லவர்க்கு மென்றான். அழகு - இன்பப்பயனைத்தலைப்படுதல். தானுகர்ந்த வின்பத்திற்கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு.

(தெ-ப-மை.) — நலம் தகை - நற்குணங்களாலே தகுதியுடைய, நல்லவர்க்கு - தலைவர்க்கும், ஏர் - அழகாவது, பூ அன்ன கண்ணார் அகத்து - மலர்போலுங் கண்ணியர் நெஞ்சிலுண்டாகின்ற, புலத்தகை - பிணக்கின் மிகுதியன்றோ?

**1305.** An increased shyness in those whose eyes are like flowers is beautiful even to good and virtuous husbands.

---

சு. துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

[இதுவுமது.]

(பரி-மை.) எ-து,—முதிர்ந்தகலாமாகிய துனியும் இளையகலாமாகிய புலவியும் இல்லையாயின், காமம் செவ்விமுதிர்ந்த பழமும் இளங்காயும்போலும், எ-று.

மிகமுதிர்ந்திறு மெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவு மினிமை செய்தலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றும், கட்டிளைமைத்தாய காய் நுகருஞ் செவ்வித் தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றுங் கூறினான். இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு.

(தெ-ப-மை.)—துனியும் - பெரும்பிணக்கும், புலவியும் - சிறுபிணக்கும், இல் ஆயின் - இல்லையாயின், காமம்—, கனியும் - (பக்குவமுதிர்ந்த) பழமும், கருக்காயும் அற்று - இளங்காயும் போலும்.

**1306.** Sexual pleasure, without prolonged and short-lived dislike, is like too ripe, and unripe fruit.

---

எ. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

[இதுவுமது.]

(பரி-மை.) எ-து,—இனிப்புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோவென்று கருதலான், இன்பத்திற் கின்றியமையாத ஊடலின்கண்ணேயும் ஒரு துன்பநிகழும், எ-று.

என்றென்று மெச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கொல்லென்பதனை நீடுவதென்பதனுடனுங் கூட்டுக. ஆங்கென்பது அசைநிலை. ஊடல் - கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு.

(தெ - ப - ை.)—புணர்வது - புணர்ச்சியானது, நீடுவது கொல் - நீடிக்குமோ, அன்றுகொல் - நீட்டியாதோ, என்று - என்றுநினைத்தால், ஊடலின் - (இன்பத்திற்கு அவசியம் வேண்டும்) பிணக்கிலேயும், ஓர் துன்பம்—, உண்டு - உண்டாம்.

**1307.** The doubt as to whether intercourse would take place soon or not, creates a sorrow (even) in feigned dislike.

---

அ. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

[உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் தலைமகளோடு
புலந்து சொல்லியது.]

(பரி - ை.) எ-து,—இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந்நோவினை யறியுமன்புடையாரைப் பெறுவழி ஒருவர் நோகின்றதனும் பயனென்? எ-று.

அறிதல்—ஈண் டேடலை யினிதுணர்தல். மற்று—வினைமாற்றின்கண் வந்தது. இவள் நங்காதலியல்லள், அன்மையின் இந்நோவறியாள், அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லையெனத் தன்னாற்றாமை யுணர்த்தியவாறு.

(தெ-ப-ை.) — நொந்தார் என்று - (இவர் நம்பொருட்டு) நொந்தாரென்று, அஃது அறியும்-அந்நோயை அறிகிற, காதலர்-அன்புடையவரை, இல்லாவழி - பெறாதவிடத்து, நோதல் - (ஒருவர்) நோகின்றவதனால், எவன் - (பயன்) யாது?

**1308.** What avails sorrow when I am without a wife who can understand the cause of my sorrow.

---

௯. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

[இதுவுமது.]

(பரி - ை.) எ-து,—உயிர்க் கின்றியமையாத நீரும் நிழலின்கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது; அதுபோலக் கலவிக் கின்றியமையாத புலவியும் அன்புடையார்கண்ணே இனிதாவது, ஏனை யன்பிலார்கண் ஆகாது, எ-று.

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந்தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் - ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையு முடையராவார். இவள் நம்மாட்டு அவ்விரண்டு மின்மையின் இப்புலவிதானு மின்னா தாகாநின்றதென்பதாம்.

(தெ - ப - ரை.)—நீரும் - (உயிர்க்கு அவசியம் வேண்டும்) நீரும், நிழலதே - நிழலிலுள்ளதே, இனிது - இனிதாகும்; (அது போல்), புலவியும் - (புணர்ச்சிக்கு அவசியம் வேண்டும்) பிணக்கும், வீழுநர்கண்ணே இனிது - அன்புடையவரிடத்தே இனிதாகும், (மற்றை யன்பிலாரிடத்து ஆகாது.)

**1309.** Like water in the shade, dislike is delicious only in those who love.

---

கO. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—தானூடற்கண்ணே மெலியாநிற்கவும், விட்டிருக்க வல்லாரோடு கூடக்கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை, எ-று.

அன்பு மருளுமில்லாதாரை உடையமொன்றும் அவரோ டியாங் கூடுவமென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார் செயலாகலின், கூடுவேமென்ப தவாவென்றான். காரியங் காரணமாக வுபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாதென்பதாம்.

(தெ - ப - ரை.)—ஊடல் உணங்க - (தான்) பிணங்கலிலே வருந்தா நிற்கவும், விடுவாரோடு - (தன்னை) விட்டிருக்கவல்லாரோடு, என் நெஞ்சம்—, கூடுவேம் என்பது - கூடக்கடவேமென்று முயற்சிசெய்தற்குக்காரணம், அவா - (தன்) ஆசையே (வேறில்லை.)

**1310.** It is nothing but strong desire that makes her mind unite with me who can leave her to her own dislike.

---

## கஙஉ - ம். அதி. புலவிநுணுக்கம்.

அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்தவழி அவன் மாட்டுப் புலத்தற் காரணமில்லை யாகவுங் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுளதாக வுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தினுணுக்கம் காரியத்தின் மேனின்றது. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

[உலாப்போய்வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத்
தலைமகள் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—பரத்தமையுடையாய், நின்னைப் பெண்ணியல்பினையுடையார் யாவருந் தங்கண்ணாற் பொதுவாக வுண்பர், அதனால் அவர்மிச்சிலாய நின்மார்பினைப் பொருந்தேன், எ-று.

கற்புநாண்முதலிய நற்குணங்களின்மையிற் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே யென்னுங் கருத்தாற் பெண்ணியலாரென்றாள். பொதுவாக வுண்டல்-தஞ்சேரிச்செலவின் முறையானன்றி ஒருகாலத் தொருங்கு நோக்குதல்: அதுவுமோர் குற்றம். தாநோக்கி யின்புற்றவாறே அவரு நோக்கி யின்புறுவரென வாசங்கித்து அவர்பாற் பொறாமை யெய்துதலின், நுணுக்கமாயிற்று.

(தெ - ப - ரை.)—பரத்த - பரத்தையரிடத்துச் செல்லுதலுடையாய், பெண் இயலார் எல்லாரும் - பெண்ணியல்பினையுடையாரெல்லாரும், கண்ணின் - (தமது) கண்களால், பொது உண்பர் - பொதுவாக (உன்னை) அநுபவிப்பர்; (அதனால்), உன் மார்பு - (அவரெச்சிலாகிய) நின்மார்பை, நண்ணேன் - பொருந்தேன்.

**1311.** You are given to prostitution; all those who are born as womankind enjoy you with their eyes in an ordinary way. I will not embrace you.

---

௨. ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

[தலைமகனீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.]

(பரி-ரை.) எ-து,—யாந்தம்மோடூடி யுரையாடாதிருந்தேமாகக் காதலர் தும்மினார், அது நீங்கித் தம்மை நீடுவாழ்கென் றுரையாடுவேமாகக் கருதி, எ-று.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற்றென்பதாம். இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பானிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று.

(தெ - ப - ரை.)—ஊடி - (யாம்தம்மோடு) பிணங்கி, இருந்தேம் ஆ - (பேசா) திருந்தேமாக, தும்மினார் - (காதலர்) தும்மினார்; (அப்பிணக்கு நீங்கி), யாம்—, தம்மை—, நீடு வாழ்க என்பாக்கு அறிந்து - நெடுங்காலம் வாழ்கவென்று சொல்லுவேமாக நினைத்து.

**1312.** When I continued to be sulky he sneezed and thought I would (then) wish him a long life.

---

௩. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

[தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர் கூடியொழுகாநிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—யான் கோடுதலைச்செய்யு மாலையைச் சூடினேனாயினும், நும்மாற் காதலிக்கப்பட்டா ளொருத்திக்கு இப்பூவணி காட்டல்வேண்

டிச் சூடினீரென்று வெகுளாநிற்கும்; இத்தன்மையாட்கு ஒருகாரணம் வேண்டுமோ? எ-று.

கோடென்பது முதனிலைத் தொழிற்பெயர். பூ—ஆகுபெயர். வளையமாகச் சூடினு மென்பதாம். "கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்" என்றார் பிறரும். இனி யம்மருத நிலத்துப் பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப் பூவைச் சூடினேனாயினும் ஈண்டையாள் பிறளொருத்திக்கு அவ்வேற்றுப் பூவணிகாட்டல் வேண்டிச் சூடினீரென்று வெகுளுமெனினு மமையும்.

(தெ - ப - ரை.)—கோட்டுப் பூ - வளைவாகிய பூமாலையை, சூடினும் - அணிந்தாலும், ஒருத்தியை - (உம்மால் இச்சிக்கப்பட்ட) ஒருத்திக்கு, காட்டிய - (இப்பூவலங்கரிப்பை) காட்டுதல்வேண்டி, சூடினீர் என்று - தரித்துக்கொண்டீரென்று, காயும் - கோபியாநிற்பள், (இப்படிப்பட்டவளுக்கு ஒருகாரணம் வேண்டுமோ.)

**1313.** Even if I were adorned with a garland of branch-flowers, she would say I did so to show it to another woman.

---

௪. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காமநுகர்தற்குரிய விருவராயினார் யாவரினும் யாம் மிக்ககாதலையுடையே மென்பது கருதி யாரினுங் காதலமென்றேனாக, நின்றோழி அது கருதாது, என்னாற்காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கட் காதலுடையேனென்றேனாகக் கருதி, அம்மகளிர் யாரினும் என்கட் காதலுடையராயினீரென்று சொல்லிப் புலந்தாள், எ-று.

தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யானன்பு மிகுதியாற் சொல்லி யதனைக் கருத்துவேறுபடக் கொண்டதல்லது பிறிதுகாரண மில்லை யென்பதாம்.

(தெ - ப - ரை.)—காமம் அனுபவித்ததற்கு உரிய இருவராயுள்ளவர் எவரினும் நாம் மிகுந்த காதலையுடையே மென்பது நினைத்து, யாரினும் காதலம் என்றேன் ஆ - யாரினும் மிகுந்த காதலுடையே மென்று சொன்னேனாக, (உனதுதோழி அது நினையாமல் உன்னால் விரும்பப்பட்ட மகளிர் பலருள்ளும் உன்னிடத்து மிகுந்த காதலையுடையே மென்றேனாக நினைத்து), யாரினும் யாரினும் என்று - யாரினும் யாரினும் (என்னிடத்துக் காதலையுடையீர்) என்று சொல்லி, ஊடினாள் - பிணங்கினாள்.

**1814.** When I said I loved her more than any other woman, she said "more than others, yes, more than others," and remained sulky.

௫. இம்மைப் பிறப்பிற் பிரியல னென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

---

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—காதன் மிகுதியான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேமென்று சொன்னேனாக, அதனான் ஏனை மறுமையாகிய பிறப்பின் கட் பிரிவலென்னுங் குறிப்பினேனாகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீரினைக்கொண்டாள், எ-று.

வெளிப்படுசொல்லைக் குறிப்புச்சொல்லாகக் கொள்கின்ற தல்லது என் பாற் றவறில்லை யென்பதாம்.

(தெ-ப-ரை.)—(காதன்மிகுதியால்), இம்மைப் பிறப்பில் - இப்பிறப்பிலே, பிரியலன் என்றேன் ஆ - பிரியேனென்று சொன்னேனாக, (அதனால் என்னை மறுபிறப்பிலே பிரிவேன் என்கிற கருத்துடையேனாக நினைத்து), கண் நிறை நீர் கொண்டனள் - (அவள்) கண்ணிறைந்த நீரைக்கொண்டாள்.

**1315.** When I said I would never part from her in this life, her eyes were filled with tears.

---

௬. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தேனெ ன்னுங் கருத்தால் யானுள்ளினேனென்றேன் ; என, அதனை ஒருகான் மறந்து பின்னினைந்தே னென்றதாகக் கருதி, என்னை யிடையே மறந்தீரென்று சொ ல்லி முன் புல்லுதற் கமைந்தவள் அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள், எ-று.

மற்று—வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்தி வகையான் மறத்த லையுட்கொண்டு புலந்தாளென்பதாம்.

(தெ-ப-ரை.)—உள்ளினேன் என்றேன் - (பிரிவில் இடை விடாமல் உன்னை நினைந்தேன் என்கிற கருத்தால்) நினைந்தே னென்றேன் ; (அவள் அதனை ஒருகால் மறந்து பின் நினைந்தே னென்று சொல்லியதாக எண்ணி), மற்று-அதற்கு விரோதமாக, என் மறந்தீர் என்று - என்னை மறந்தீரென்று சொல்லி, (முன்னே தழுவுதற்கு அமைந்தவள்), என்னை—, புல்லாள் - தழுவாளாகி, புலத்தக்கனள் - பிணங்கற்கு அமைந்தாள்.

**1316.** When I said I had remembered her, she said I had forgotten her and relaxing her embrace, began to feign dislike.

---

௭. வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—கூடியிருக்கின்றவள் யான்றும்மினேனாகத் தன்னி யற்கை பற்றி வாழ்த்தினாள் ; அங்ஙனம் வாழ்த்திய தானே மறித்து, நும்மை

நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரொன்று சொல லிப் புலந்தழுதாள், எ-று.

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின், அழித்தென்றான். அன்புடை யார் நினைத்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மலுண்டாமென்பது மகளிர் வழக்கு. இவ்வழக்கை உள்வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம்.

(தெ-ப-ரை.)—(கூடியிருக்கின்றவள்), தும்மினேன் ஆக-(யான்) தும்மினேனாக, வழுத்தினாள் - (தன்னியற்கை பற்றி) வாழ்த்தினாள்; (அப்படி வாழ்த்தியதானே), அழித்து - (அக்கருத்தை) மறித்து, (உம்மை நினைந்து வருந்துகின்ற மகளிருள்), யார் உள்ளி - யார் நினைத்தலால், தும்மினீர் என்று—, அழுதாள்-(பிணங்கி) அழுதாள்.

**1317.** When I sneezed, she blessed me, but at once changed (her mind) and wept, asking, "At the thought of whom did you sneeze?"

---

அ. தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—எனக்குத் தும்மலுண்டாயவழி யாருள்ளித் தும் மினீரொன்று புலத்தலையஞ்சி, அதனை யானடக்கினேன்; அங்ஙனமடக்கவும், நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்கலுற்றீரோ வென்று சொல்லிப் புல ந்தழுதாள், எ-று.

தும்முவென்பது முதனிலைத்தொழிற்பெயர். செறுப்பவு மென்புழி இறந்த ததழீஇய வெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எம்மை யென்பது நும்மோ டியாது மியைபில்லாத வெம்மையென்பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகுவென்ப. தும்மினுங்குற்றம் ஒழியினுங்குற்ற மாயக்காற் செய ற்பால தியாதென்பதாம்.

(தெ-ப-ரை.)—(எனக்குத் தும்மல் தோன்றிய விடத்தே யார் நினைத்தல்லால் தும்மினீரொன்று பிணங்குதற்கு அஞ்சி), தும்மு செறுப்ப-அத்தும்மலை அடக்கவும், நுமர் உள்ளல் - உம்மவர் (உம்மை) நினைத்தலை, எம்மை மறைத்திரோ என்று - (உம்மோடு ஒரு சம்பந்தமும் இல்லாத) எமக்கு மறைக்கலுற்றீரோ வென்று சொல்லி, அழுதாள் - (பிணங்கி) அழுதாள்.

**1318.** When I suppressed my sneezing, she wept saying, "I suppose you (did so) to hide from me your own people's remembrance of you".

---

சு. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—இவ்வாற்றானூடிய தன்னை யான் பணிந்துணர்த்துங் காலும் வெகுளா நிற்கும், பிறமகளிர்க்கும் அவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையை யுடையீராகுதிரென்று சொல்லி, எ-று.

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பதுபற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன், பணிய அதுதானும் புலத்தற்கேதுவாய் முடிந்தது, இனி யிவண்மாட்டுச் செய்யத்தகுவ தியாதென்பதாம்.

(தெ - ப - ரை.)—தன்னை - (இவ்விதத்தாலே பிணங்கிய) தன்னை, உணர்த்தினும் - (நான் வணங்கி) பிணக்குத் தீர்க்கும் போதும், காயும் - கோபியாநிற்பள்; பிறர்க்கும் - பிறமகளிர்க்கும், நீர்—, இந்நீரர் ஆகுதி என்று - (அவர் பிணங்கியபோது) இப்படியே வணங்கிப் பிணக்குத் தீர்க்குந் தன்மையீ ராகின்றீரென்று சொல்லி.

**1319.** Even when I try to remove her dislike, she is displeased and says, "This is the way you behave towards (other women)".

---

கo. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—என்சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றை யொழிந்திருந்து தன்னவயவங்கள தொப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளா நிற்கும்; என்னவயவமனைத்தும் நோக்கினீர் அவற்றதொப்புமையான் எம்மகளிரை நினைந்தென்று சொல்லி, எ-று.

யான் எல்லா வவயவங்களானும் ஒருத்தியோடொத்தல் கூடாமையின் ஒன்றொன்றொருவராகப் பலரையு நினைக்கவேண்டும் அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமினென்னுங் கருத்தால், அனைத்து நோக்கினீர் யாருள்ளியென்றாள். வாளாவிருத்தலுங் குற்றமாயிற் றென்பதாம்.

(தெ - ப - ரை.)—(என்சொற்களும் செயல்களும் பற்றித் தான் கோபித்தலால்), இருந்து - (அவைகளை யொழிந்து) இருந்து, நினைத்து - தன்னவயவங்களின் ஒப்பில்லாமையை) நினைத்து, நோக்கினும் - (அவைகளையே) பார்த்துக்கொண்டிருந்தாலும், காயும் - (என்னை) கோபியா நிற்பள், அனைத்தும் - என்னவயவம்) எல்லாம், நீர்—, யார் உள்ளி நோக்கினீர் என்று - (அவைகளி னொப்புமையால்) யாவரை நினைத்துப் பார்த்தீரென்று சொல்லி.

**1320.** Even when I look on her contemplating (her beauty), she is displeased and says, "With whose thought have you (thus) looked on my person."

---

## கஙஙு - ம். அதி. ஊடலுவகை.

அஃதாவது அப்பெற்றித்தாய ஊடலாற் றமக்குக் கூடலின்பஞ் சிறக்துழி அச்சிறப்பிற்கேதுவாய அவ்வூடலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

[தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்டதோழி அங்ஙனம் நீ புலக்கின்றதென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—அவர்மாட்டுத் தவறில்லையாயினும், நமக்கவர் தலையளி செய்கின்றவாறு அவரோடூடுதலை விளைக்க வற்றாகின்றது, எ-று.

அவர்க்கென்பது வேற்றுமை மயக்கம். அளவிறந்த வின்பத்தராகலின் யானெய்தற்பாலதாய இத்தலையளி ஒழிந்தாரு மெய்துவரெனக் கருதி அது பொறாமையான் ஊடனிகழாநின்ற தென்பதாம்.

(தெ-ப-ரை.)—அவர்க்கு - அவரிடத்து, தவறு - பிழைகள், இல்லை ஆயினும் - இல்லையானாலும், அவர் அளிக்கும் ஆறு - (நமக்கு) அவர் அருள் செய்கின்ற விதம், ஊடுதல் வல்லது - பிணங்கலை (விளைக்க) வல்லதாகின்றது.

**1321.** Although my husband is free from defects, the way in which he embraces me is such as to make me feign dislike.

---

உ. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

[புலவாக்காலும் அத்தலையளி பெறலா யிருக்க அஃதிழந்து புலவியான் வருந்துவதென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—ஊடலேதுவாக நங்கட்டோன்றுகின்ற சிறிய துனி தன்னால் காதலர் செய்யு நல்ல தலையளி வாடுமாயினும் பெருமை யெய்தும், எ-று.

தவறின்றி நிகழ்கின்றவூடல் கடிதினீங்கலின் அத்துன்பமு நில்லாதென்பாள் சிறுதுனியென்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி வாடாதென்பாள் வாடினுமென்றும், பின்னே பேரின்பம் பயக்குமென்பாள் பாடு பெறுமென்றுங் கூறினாள். அது வருத்தமெனப்படா தென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஊடலில் தோன்றும் - (பிணங்குதலாலே நம்மிடத்து) தோன்றுகின்ற, சிறு துனி - சிறிய துன்பத்தால், நல் அளி - (தலைவர்செய்கிற) நல்லருள், வாடினும் - குறையினும், பாடு - பெருமையை, பெறும் - அடையும்.

1322. His love will increase though it may (at first seem to) fade through the short-lived distress caused by (my) dislike.

---

௩. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—நிலத்தொடு நீர்கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர் மாட்டுப் புலத்தல்போல நமக்கின்பந் தருவதொரு புத்தேளுலகமுண்டோ, இல்லை, எ-று.

நீர் தானின்ற நிலத்தியல்பிற் றுமாறுபோலக் காதலருந் தாங்கூடியமகளி ரியல்பினராகலான் அதுபற்றி அவரோடு புலவி நிகழுமென்பாள் நிலத்தொடு நீரியைந்தன்னாரகத்தென்றும், அவர் நமக்கு மன்னராகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றதென்பாள் புலத்தலிற் புத்தேணாடுண்டோ வென்றுங் கூறினாள். உவமம் பயன்பற்றி வந்தது.

(தெ - ப - ரை.)—நிலத்தொடு—, நீர் - நீரானது, இயைந் தன்னார் அகத்து - கலந்ததுபோல் ஒற்றுமை யுடைய காதலரிடத்து, புலத்தலின் - பிணங்குதல்போல் (நமக்கு இன்பஞ் செய் வது), புத்தேள் நாடு-ஒரு தெய்வலோகம், உண்டோ - உளதோ?

1323. Is there a celestial land that can please like the feigned dis-like of those whose union resembles that of earth and water.

---

௪. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

[அப்புலவி இனி யாதானீங்குமென்றாட்குச்
சொல்லியது.]

(பரி-ரை.) எ-து,—காதலனைப் புல்லிக்கொண்டு பின்விடாமைக் கேது வாகிய அப்புலவிக்கண்ணே யுளதாம் அதன்மேற்சென்ற என்னுள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம், எ-று.

புலவியுளென்னு மேழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ள முடைக்கும் படைக்கலமென்றது வணக்கத்தையும் பணிமொழியையும். படைக்கலமென்றாள், அவற்றான் அப்புலவியுள்ள மழிதலின். புலவி நீங்குந்திறங் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—புல்லி - (அன்பனை) தழுவிக்கொண்டு, விடா-(பின்) விடாமைக்கு ஏதுவாகிய, புலவியுள் - அப்பிணக்கி னுள்ளே, என் உள்ளம் உடைக்கும் - (தன்மேற்சென்ற) என் னுள்ளத்தைச் சிதைக்கிற, படை - ஆயுதம், தோன்றும்-காணப் படும்.

1324. In prolonged dislike after an embrace there is a weapon that can break my heart.

---

ரு. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

[தலைமகளை யூடனீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த்
தன்னுள்ளே சொல்லியது.]

(பரி - ரை.) எ-து,—ஆடவர் தங்கட் டவறிலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பு மகளிருடைய மெல்லியதோள்களைக் கூடப்பெறாத வெல்லைக்கண் அவர்க்கு அப்பெற்றியதோ ரின்பம் பயத்தலுடைத்து, எ-று.

உடையராயக்கால் இறந்த வின்பத்தோடு வருமின்பமு மெய்துவ ராக லின் அது மிகாதன்று, மற்றையிலராயக்காலும் வருமின்பத்தை யிகழ்ந்ததில்லை யென்னுங் கருத்தால், தவறிலராயினு மாங் கொன்றுடைத்தென்றான். ஊடலி னாகிய வின்பம் அளவிறத்தலிற் கூறற்கரிதென்பான், அப்பெற்றிய தொன் றென்றான். தவறின்றி யூடியதூஉம் எனக்கின்பமாயிற் றென்பதாம்.

(தெ - ப - ரை.)—தவறு இலர் ஆயினும் - (ஆடவர் தம்மி டத்து) பிழையில்லாதவரா யிருந்தாலும், (உடையார் போல் பிணங்கப்பட்டு), தாம் வீழ்வார் - தம்மால் விரும்பப்படு மகளி ரது, மெல் தோள் - மெல்லிய தோள்களை, அகறலின் - கூடப் பெறாத சமயத்தில், ஆங்கு ஒன்று - (அவர்க்கு) அப்படிப்பட்ட தோ ரின்பம், உடைத்து - (பயத்தல்) உடைத்து.

**1325.** Though free from defects, men feel pleased when they cannot embrace the delicate shoulders of those whom they love.

---

சா. உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—உயிர்க்கு மேலுண்பதனினும் முன்னுண்டதறுதல் இன்பந்தரும்; அதுபோலக் காமத்திற்கு மேற்புணர்தலினும் முன்னைத்தவறு பற்றி யூடுதல் இன்பந் தரும், எ-று.

காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் இன்சுவைத்துமாம் அதுபோல அகன்று கூடும்வழி ஆராதுமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம் பற்றிக் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—(உயிர்களுக்கு), உணலினும் - (மேலே) உண்ணுதலினும், உண்டது அறல் - முன்னுணப்பட்டது சீரணி த்தல், இனிது - இன்பந்தரும்; (அதுபோல), காமம் - காமத் துக்கு, புணர்தலின் - (மேலே) புணர்தலினும், ஊடல் - (முன் னைத்தவறு பற்றி) பிணங்கல், இனிது - இன்பந் தரும்.

**1326.** To digest what has been eaten is more delightful than to eat more; likewise love is more delightful in dislike than intercourse.

---

எ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காமநுகர்தற்குரிய இருவருள் ஊடலின்கட்டோற்ற வர் வென்றாராவர், அஃதப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப் புணர்ச்சி யின்கண் அவராலறியப்படும், எ-று.

தோற்றவர்-எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்ப மெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. யானதுபொழுது சாய்தலின் இதுபொழுது பேரின்பம் பெற்றேனென்பதாம்.

(தெ - ப - ரை.)—(காமம் அநுபவித்தற்குரிய இருவருள்), ஊடலில் தோற்றவர் - பிணக்கிலே தோற்றவர், வென்றார் - வென்றோராவார்; அது - (அப்பொழுது அறியப்படா தாயினும்), கூடலில் காணப்படும் - (பின்னே) புணர்ச்சியிலே (அவரால்) அறியப்படும்.

**1327.** Those are conquerors whose dislike has been defeated and that is proved by the love (which follows).

---

அ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வியர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—இது பொழுது இவணுதல் வெயர்க்கும்வகை கலவி யின்கணுளதாய இனிமையை இன்னுமொருகால் இவளூடி யாம்பெறவல்லே மோ? எ-று.

கலவியது விசேடம்பற்றி நுதல் வெயர்ப்பவென்றான். இனிமை-கண்டு கேட்டுண் டுயிர்த்துற் றறிதலாகுய வின்பம். இனி அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு.

(தெ - ப - ரை.)—நுதல் வியர்ப்ப - (இப்போது இவளது) நெற்றிவெயர் வரும்படிவகை, கூடலில் தோன்றிய - புணர்ச்சி யிடத்து உளதாகிய, உப்பு - இனிமையை, (இன்னு மொரு கால்), ஊடி - (இவள்) பிணங்கி, பெறுகுவம் கொல்-(யாம்) பெறவல்லமோ?

**1328.** Will I enjoy once more through her dislike, the pleasure of that love that makes her forehead perspire?

---

௯. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

[இதுவுமது.]

(பரி - ரை.) எ-து,—ஒளியிழையினை யுடையாள் இன்னுமெம்மோ டூடுவாளாக; அங்ஙனம் அவளூடி நிற்றற்கும் அதனை யுணர்த்துதற் பொருட்டியாமிரந்து நிற்றற்குங் காலம் பெறும்வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டுக, எ-று.

ஊடுக நீடுகவென்பன வேண்டிக்கோடற் பொருள். மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலே யமையுமென்பதாம்.

(தெ-ப-ரை.)—ஒளி இழை - விளங்குகின்ற ஆபரணத்தையுடையவள், ஊடுகமன்-(இன்னும் எம்மோடு) பிணங்குவாளாக; (அப்படி பிணங்கி நிற்றற்கும் அதனைத் தீர்த்தற்பொருட்டும்), யாம்—, இரப்ப - இரந்து நிற்றற்குக் (காலம் பெறும்வகை), இரா - இவ்விரவு, நீடுகமன் - (விடியாது) நீட்டித்தல் வேண்டுக.

**1329.** May the bright-jewelled one feign dislike, and may the night be prolonged for me to implore her!

---

கய. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

[இதுவுமது.]

(பரி-ரை.) எ-து,—காமநுகர்ச்சிக் கின்பமாவது அதனை நுகர்தற்குரியராவார் ஆராமைபற்றித் தம்முளூடுதல்; அவ்வூடுதற் கின்பமாவது, அதனையளவறிந்து நீங்கித் தம்முட்கூடி முயங்குதல் கூடுமாயின், அம்முயக்கம், எ-று.

கூடுதல்-ஒத்தவளவினராதல். முதிர்ந்ததனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராதபுலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்கு மிடையாகிய வளவறிந்து நீங்குதலரிதென்பது பற்றிக் கூடிமுயங்கப் பெறினென்றான். அவ்விரண்டினபமும் யான் பெற்றேனென்பதாம்.

ஈண்டுப் பிரிவினை வடநூல்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவியென நால்வகைத்தாக்கிக் கூறினர். அவற்றுட் செலவு பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல் நிறையழிதலீறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின் விதும்பன்முதற் புணர்ச்சிவிதும்ப லீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடு புலத்தல் முதல் ஊடலுவகை யீறாயவற்றுள்ளுங் கண்டுகொள்க. அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாபத்தினையை நீக்கத் தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத் தென்றாராலெனின், அஃது, அறம்பொருளின்பமென்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன்மையானும், முனிவரானையான் ஒருகாலத்தோர் குற்றத்துளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும், ஈண்டொழிக்கப்பட்டதென்க.

(தெ - ப - ரை.)—காமத்திற்கு - காமவனுபவத்திற்கு, இன்பம் - இன்பமாவது, ஊடுதல் - (அதனை அனுபவித்தற்குரியோர் ஆராமைபற்றித் தம்முள்) ஊடுதலாம்; அதற்கு - அவ்வூடுத

ற்கு, இன்பம் - இன்பமாவது, கூடி - (அதனை அளவறிந்து நீங்கித் தம்முள்) கூடி, முயங்கப்பெறின் - புணர்தல் கூடுமாயின், (அப்புணர்ச்சியாம்.)

**1330.** Dislike adds delight to love; and a hearty embrace (thereafter) will add delight to dislike.

---

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

---

## திருவள்ளுவர் மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

---

### உரைச்சிறப்புப்பாயிரம்.

திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தம்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனென்னு
மன்னு முயர்நாமன் வந்து.

பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
றெரித்தவுரை யாமோ தெளி.

உரைச்சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



உ

## திருக்குறளின்

## சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை.

(அசரீரி.)

க. திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க - விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர்சொல்

(இ-ள்.) திருத்தகு தெய்வம் - அருட்செல்வத்தையும் (அதற்குத்) தக்க தெய்வத்தன்மையையும் உடைய, திரு வள்ளுவரோடு—, உருத்தகு நல் பலகை - (அவரிருத்தற்குத் தனது) உருவத்தினாலே தக்க நல்ல சங்கப்பலகையிடத்து, உருத்திரசன்மர்—, ஒக்க இருக்க என உரைத்து - சமானராயிருக்கக் கடவரென்றுசொல்லி, வானில் - ஆகாசத்திலிருந்து, ஒருக்க - (அவ்விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம்) ஒற்றுமைசெய்யும்படி, ஓர்சொல் - ஒரு வாக்கியம், ஓவென்றது - ஓவென்று இரைந்தெழுந்தது, எ-று.

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்பவாகலின், திருவென்றதற்கு அப்பொருளுரைக்கப்பட்டது. தெய்வத்தன்மை - தெய்வத்தினவதாரமாய் விளங்குகை ; தெய்வத்தன்மை யில்லார்க்கு அருளுளதாயினும் அதனாலே பெரும்பயன் விளையாமையின், தகுதிசொல்லப்பட்டது. திருவள்ளுவரென்னும் பெயருள் திருவென்பது உயர்வையும், வள்ளுவரென்பது வண்மையையுடையரென்பதையும் விளக்கிநின்றனவாகலின், அது வேதத்தில் இலைமறைகாய்கள்போற் பலவிடங்களினு மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களையெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்தருள் செய்தவரென்னுங் காரணம்பற்றிவந்த பெயராயிற்று. வள்—முதனிலை, அர் - இறுதிநிலை, உ - சாரியை. அம்முதனிலைக்குப் பொருள் - ஈகை. உருத்திரசன்மர் - உருத்திரனால் அடைந்த சன்மத்தை யுடையவரென விரியும். அவர் முருகக்கடவுளது திருவவதாரமாய் வணிகர் மரபிற்றோன்றிய மூங்கைப் பிள்ளையார். அசரீரி - அருவமாயெங்கு நிறைந்துள்ள முதற்றெய்வம். அரங்கேற்றத் தொடங்கிய காலத்துத் தெய்வப்புலவரோடு ஒப்பவிருந்து கேட்டற்குத் தகுதியுடையோர் யாரென யாவரும் எண்ணமுற்று நின்றவழி இவ்வசரீரிவாக்கியம் பிறந்தது. என்றதெனப் படர்க்கை வினையாகக் கூறலின் ஆண்டு நின்றுகேட்ட புலவர்களுள் ஒருவர் அதனை இங்ஙனம் பாடலாகச் செய்தனரென்றறிக.

(நாமகள்.)

உ. நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைபார தம்பகர்ந்தேன் - கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(இ-ள்.) கூடாரை எள்ளிய வென்றி இலங்கு இலை வேல் மாற - பகைவ ரைப் (புறங்கொடுக்கச்செய்து) இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்கா நின்ற தகட்டுவடிவாயுள்ள வேற்படையையுடைய பாண்டியராசனே, நாடா - (உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும்வழியை) நாடி, முதல் - படைப் புக்காலத்திலே, நான்முகன் நாவில் - பிரமனது நாவிலிருந்து, நான்மறை பாடா - (இருக்குமுதலாகிய நான்குவேதங்களையும்) பாடி, இடை - (இதற் கும் அதற்கும்) நடுவானகாலத்திலே, பாரதம் பகர்ந்தேன் - பாரதமாகிய வேதத்தைச்சொல்லினேன்; பின் - (அதற்குப்) பிற்பட்ட இக்காலத்திலே, என் வாக்கு—, வள்ளுவன்வாயது - (திருக்குறளாகிய வேதத்தைச்சொல்லி) வள்ளுவன்வாயின் கண்ணதாயிற்று, எ-று.

வேதமும் சந்தோருபமாகையால் பாடாவென்றாள். தன்கணவனாக லின், நான்முகனாவி லிருந்தென்றும், அவனவதாரமாகலின், வள்ளுவன் வா யதென் வாக்கென்றும், கூறினாள். பாரதம் வியாசனைக்கொண்டு சொல்லப் பட்டது. இதனால் நான்மறை - பூர்வவேதமும், பாரதம் - மத்தியவேதமும், திருக்குறள் - உத்தரவேதமும் என்றதாயிற்று. பூர்வவேதம், பின் வியாசரா லே நான்காக வகுக்கப்பட்டமைபற்றி நான்மறையெனப்பட்டது. அன்றி நா னெனப்பிரித்து எழுவாயாக்கினுமாம். வேதம் மூவகைத்தென்பதூஉம், இவ ற்றதுதோற்றமுறையால் இஃது வாக்கியபிரமாணத்தாற் சிறப்புடைத்தென் பதூஉம் சொல்லியபடி.

(இறையனார்.)

௩. என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க் - குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

(இ-ள்.) மன் புலவன் வள்ளுவன் வாய்ச்சொல் - புலவர்க்கரசனாகிய வள் ளுவன்வாயிற் பிறந்த திருக்குறளானது, என்றும் யாணர் புலராது - எக்கா லத்துந் தன்னழகுகெடாமல், நாள்செல்லுகினும் நின்று அலர்ந்து - நெடுங்கா லங்கழியினும் நிலைபெற்று மலர்ந்து, தேன் பிலிற்று நீர்மையதாய் - தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் (விளங்குமாதலால்), குன்றாச் செந்தளிர்க் கற் பகத்தின் - குறைவுபடாத செய்யதளிர்களையுடைய கற்பகத்தினது, தெய்வத் திருமலர்போல் - தெய்வத்தன்மைபொருந்திய உயர்வாகிய மலர்போலும், எ-று.

திருக்குறளுக்கு அழகு - சொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும், அலர்தல் - எங்கும் பரவுதலும், தேன்பிலிற்றல் - இருமையின்பங்களும் விளை த்தலும் ஆம். சொல்—ஆகுபெயர். இறையனார் கடவுளாகலின், இனி இதிற் சிறப்பதொன் றுளதாவதின்றென்னுந் துணிவுதோன்ற என்றுமென்றும், பின் னும் அதனை வலியுறுத்தற்கு நாட்செல்லுகினு நின்றென்றும் வாழ்த்துப் பொ

ருள்பட இவ்வாறு கூறினர். இது அழியாதுநின்று பெருகிப் பயன்படுமாறு சொல்லியபடி.

(உக்கிரப்பெருவழுதியார்.)

௪. நான்மறையின்மெய்ப்பொருளைமுப்பொருளாநான்முகத்
தோன், றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன்
முறையை, வந்திக்க சென்னிவாய் வாழ்த்துகநன்னெஞ்
சஞ், சிந்திக்க கேட்க செவி.

(இ - ள்) வள்ளுவனாய்—, தான்மறைந்து - தனது திருமேனியை மறைத்து, நான்மறையின் மெய்ப்பொருளை - நான்கு வேதங்களி னுண்மைப்பொருளை, தந்து - (இவ்வுலகத்திலே) கொணர்ந்து, மூப்பொருளா - (அறம்பொருளின்பமென்னு) முப்பாற்பொருளதாக, நான்முகத்தோன் - பிரமனால், உரைத்த - திருவாய் மலர்ந்தருளப்பட்ட, நூல் - நூலினது, முறையை - புத்தகத்தை, சென்னிவந்திக்க - (எனது) தலையானது தொழக்கடவது; வாய் வாழ்த்துக - வாயானது வாழ்த்தக்கடவது; நல் நெஞ்சம் சிந்திக்க - நல்ல மனமானது நினைக்கக்கடவது; செவிகேட்க - காதுகளானவை கேட்கக்கடவன, எ-று.

முப்பொருள்—ஆகுபெயர். இவ்வேதப்பொருள் ஆதியிலே வேதஞ்சொல்லியோனாலேயே சொல்லப்பட்டமையால் உலகத்துச் சமயாசாரியர்களாலும் பிறராலும் ஒன்றற்கொன்று மாறாகக்கொள்ளப்பட்ட பொருள்கள்போல்வ தன்றென்பது தோன்ற மெய்ப்பொருளென்றார். கலையுணர் புலமையிற் றலைமையோனாகி, விதிமுறைவழாது முதுநிலம்புரக்கும், பெருந்தகையுக்கிரப்பெருவழுதியென்னுந், தன்னிகரில்லா மன்னவர்பெருமான், தான்மேற்கொண்ட சிறப்பைப் பலரும், அறிந்துமேற்கொள்ள இவ்வாறு வழிபாடு கூறினன். "மன்னனெப்படி மன்னுயிரப்படி" ஆகலின், இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய் மொழி மனங்களால் வணக்கஞ்செய்து பின் கேட்கவேண்டுமென்று சொல்லியபடி.

(கபிலர்.)

௫. தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான் - மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(இ - ள்.) மனை அளகு வள்ளைக்கு உறங்கும் வளநாட - மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம்பொருந்திய நாட்டையுடைய அரசனே! வள்ளுவனார் வெள்ளை குறட்பா விரி - திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட குறள்வெண்பா (மிகப்பெரிய பொருளை) தன்னுட்கொண்டு காட்டுதல், தினை அளவு போதாச் சிறுபுல் நீர் - தினையரிசியினளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின்கணுள்ள பனி நீரானது, நீண்ட பனை அளவுகாட்டும் படித்து - உயர்ந்த பனையினளவான அதன் சாயையைத் தன்னுட்கொண்டுகாட்டுங் குணம்போலுள்ள குணத்தையுடைத்து, எ-று.

பனை—ஆகுபெயர். ஆல்—அசை. பறவை - கிளிமுதலியவை. உலக்கைப் பாட்டு - மகளிர்பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும்பாட்டு. விரி-;விரித்தல். எப்படி மிகச்சிறிய பனித்துளியிலே மிகப்பெரிய பனைமரத்தின்சாயை அடங்கிவிளங்குகின்றதோ அப்படியே மிகச்சிறிய இக்குறள்வெண்பாவில் மிகப் பெரியபொருள் அடங்கி விளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவானபொருளை விளக்குமாறு சொல்லியபடி. இதுமுதலியன சங்கத்துப் புலவராலே பாடப்பட்டன.

(பரணர்.)

௬. மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான் - வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

(இ - ள்.) மாலும் - திருமாலும், குறளாய் - குறளாய்ப்பிறந்து, வளர்ந்து—, இரண்டு மாண் அடியால் - இரண்டுபெரிய அடிகளால், ஞாலம் முழுதும் - உலகமனைத்தையும், நயந்து அளந்தான் - விரும்பி அளந்தான், வாலறிவின் வள்ளுவரும்-மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும், தன் குறள்வெண்பா அடியால் - தம்மினின்றுந்தோன்றி (அந்நிலைநிற்கின்ற) வெண்பாக்குறளின்(இரண்டுசிறிய) அடிகளால், வைத்தார் உள்ளுவது எல்லாம் - அவ்வுலகமனைத்தினும் முன்னோரால் நினைக்கப்பட்டவற்றை யெல்லாம், ஓர்ந்து அளந்தார் - ஆராய்ந்து அளந்தார், எ-று.

உம்மையிரண்டும் முறையேதேவரிற் பெரியோனாகியவென்றும், மனிதரிற்சிறியராய்க் காணப்பட்டவென்றும் பொருள்படநின்றன. உபமானத்திலே வளர்தலும் பெருமையும் சொல்லுதலால் உபமேயத்திலே அவற்றுக்கு மாறாகிய நிலைநிற்றலும் சிறுமையும் வருவிக்கப்பட்டன. மாலுக்குத் தானேகுறளாதலும் பின்பு அந்நிலைநில்லாதுவளர்தலும், பேரடிகளால் அளவுபட்ட உலகத்தையளத்தலும்,திருவள்ளுவருக்குத் தம்மினின்றுங் குறளை உண்டாக்குதலும், அது தன்னிலைநிற்றலும், அதன் சிற்றடிகளால் அளவுபடாத நினைப்பின் விடயங்களை அளத்தலும் சொல்லப்படுதலாலும், வேற்றுமையறிக. நினைக்கப்பட்டனவெல்லாம் இதனகத்து அளவுசெய்யப்பட்டமை சொல்லியபடி.

(நக்கீரர்.)

௭. தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானா வறமுதலா மந்நான்கு - மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

(இ-ள்.) தானே முழுதுணர்ந்து - தாமே (வேதப்பொருள்) அனைத்தையும் அறிந்து, தண் தமிழின் - தண்ணிய தமிழின்கண், வெண்குறளால் - குறள் வெண்பாக்களால், ஆனா அறம் முதல் ஆம் அந்நான்கும்-விட்டுநீங்குதல் கூடாத அறமுதலாகிய அந்நான்கு பொருள்களையும், ஏனோருக்கு - அவற்றையறியாதவர்களுக்கு, (அவர் எளிதினறிய), ஊழின் - முறையால், உரைத்தாற்கும் - சொல்லியருளிய திருவள்ளுவருக்கும், ஒள்நீர் முகிலுக்கும் - ஒள்ளிய நீரைத் தந்த மேகத்துக்கும், உலகு - இவ்வுலகமானது, மற்று என் ஆற்றும் - எதிர்

னன்றியாதுசெய்யும் (செயக்கிடந்தது ஒன்றும் இல்லை;) வாழி - (அவரும் அதுவும்) வாழ்க, எ-று.

ஆனாமை - நீங்காமை. தானே முழுதுணர்ந்தெனவே ஆசாரியராயிருந்து பிறரறிவிக்க அறிந்திலரென்றதாயிற்று. முழுதுமென்னு மும்மைதொக்கது. ஒண்மை இனிமைமேல் நின்றது. முறை—நூலின் முப்பொருள்களின் கிடக்கையொழுங்கு. நாயனார் கொடைச்சிறப்புச் செல்லியபடி.

(மாமூலனார்.)

அ. அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை - மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ-ள்.) அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கும் - அறமுதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப்பொருள்களாகிய நான்கனது, திறம் தெரிந்து - கூறுபாட்டையும் அறிந்து, செப்பிய - (உலகத்தார்க்குச்) சொல்லிய, தேவை - தேவனை, மறந்தேயும் - மறந்தாயினும், வள்ளுவன் என்பான் - (ஒருமனிதனாக உட்கொண்டு) வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின் அவன், ஓர் பேதை-அறிவில்லாதவனாவன்; அவன் வாய்ச் சொல் - அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை, அறிவுடையார்—, கொள்ளார் - கொள்ள மாட்டார், எ-று.

அறமுதலியவற்றின் கூறுபாடு - அவற்றினது தொகைவகைவிரிகள். மறந்தேயு மென்றதனால் நினைப்புடன் சொல்லுவோன் பேதையிற் பேதையாமென்றதாயிற்று. முன்னும் பின்னுமுள்ள பாட்டுகளில் இப்பெயர் தெய்வத்தன்மையைக் குறிப்பிக்கும்படி நன்கு மதித்து உயர்த்திச்சொல்லப்படுதலால், ஒருமனிதனாக வுட்கொண்டென்பது வருவிக்கப்பட்டது. அன்றி ஒலிக்குறிப்பினாலே, சாதியிழிவுதோன்ற வள்ளுவனென்பா னெனினு மமையும். இக்குறிப்பொலியை வடநூலார் காகுசுரமென்பர். தெய்வப்புலவரை அவமதிப்பினிழிவுசொல்லியபடி.

(கல்லாடர்.)

கூ. ஒன்றே பொருளென்னின் வேறென்ப வேறென்னி
னன்றென்ப வாறு சமயத்தார் - நன்றென்ன
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

(இ-ள்.) ஆறு சமயத்தார் - அறுவகைமதத்தோரும், ஒன்றே பொருள் என்னின் - (ஒருமதத்தார் தமதுநூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய) பொருள்கள் ஒன்றேயென்று நாட்டுவராயின், வேறு என்ப - (மற்றொருமதத்தோர் தமது நூலிலே அதனை மறுத்து அவை) வேறுமென்று நாட்டுவர், வேறு என்னின் - (அப்படி) வேறென்றுநாட்டின், அன்று என்ப - (பின்னொருமதத்தோர் அதனை) அன்றென்றுமறுப்பர்; (ஆதலால் சமய நூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படுகின்றன): வள்ளுவனார் முப்பால் மொழிந்த மொழி - திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்டநூலை, நன்று என்ன - நன்

